உ

திருச்சிற்றம்பலம்

# சேக்கிழார் பிள்ளைத் தமிழ்

## மூலமும் விளக்க உரையும்

விளக்க உரை ஆசிரியர் :
செந்தமிழ்ச் செல்வர்,
சைவ சமய சிரோமணி, பேராசிரியர்
வித்துவான்
பாலூர் கண்ணப்ப முதலியார், எம்.ஏ., பி.ஓ.எல்.
தமிழ்த் துறைத் தலைவர், புதுக்கல்லூரி, சென்னை.

வெளியீடு :
ஸ்ரீ கந்தப்பெருமான் தேவஸ்தானம்
திருப்போரூர்

# உரிமை உரை

அநபாயச் சோழப் பேரரசனது அருமந்த அரச
ஆட்சியில் முதல் அமைச்சராய்த் திகழ்ந்த
சேக்கிழார் பெருமானாரது திருமரபில் வந்த
வரும் தமிழ்நாட்டின் தந்நேரில்லா முதல்
அமைச்சருமான பெருமதிப்புக்குரிய
கனம் எம். பக்தவச்சலம் அவர்கட்கு
இவ்விளக்க உரையை உள்ளன்புடன்
உரிமைப் படுத்துகின்றேன்.

---

# பொருள் அடக்கம்

# முன்னுரை

தெய்வப்புலவர் சேக்கிழார் பெருமானார் யாத்த நூல் திருத்தொண்டர் புராணமாகும். இந்நூலைப் பெரிய புராணம் என்று வழங்குவதே வழக்கத்தில் வந்துவிட்டது. இந்நூல் பல்லோரால் பலவகையில் அச்சாகி வெளிவந்துள்ளது.

சேக்கிழார் மாண்பையும், பெரிய புராணத்தின் திட்ப நுட்பப் பொருட் சிறப்பையும் திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள், தம் சேக்கிழார் பிள்ளைத் தமிழ்நூலில் திறம்படப் பாடி அமைத்துள்ளனர் இத்தகைய அரிய நூலுக்கு, சைவத்திருவாளர் சுயப்பாக்கம் சதாசிவ செட்டியார்அவர்கள், ஒரு குறிப்புரை எழுதியுள்ளனர். அதற்குப் பிறகு அண்மையில் விவேகானந்தர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் வித்துவான் C. ஜகந்நாதாச்சாரியார் M.A.L.T. அவர்களும் ஷை பிள்ளைத்தமிழ்க்குக் குறிப்புரை எழுதியுள்ளனர். இக் குறிப்புரை முன்னைய குறிப்புரையினும் சிறிது விரிவுடையது.

பெரிய புராணத்தின் பெருமையினையும் சேக்கிழாரின் சிறப்பையும் பற்றிப் பல அறிஞர்கள் உரைநடை வாயிலாகவும் உரைத்து உள்ளனர்.

இங்ஙனம் பற்பல பேரறிஞர்கள் பெரிய புராணத்திற்கும், சேக்கிழார் பெருமானார்க்கும் அரிய பெரிய தொண்டினைச் செய்துள்ளனர். இந்நிலையில் அடியேனுக்கும் நெடு நாளாகப் பெரிய புராணத்திற்கும் சேக்கிழார் பெருமானார்க்கும் என்னாலான தொண்டினைப் செய்ய வேண்டும் என்ற அவா இருந்து வந்தது. அவ்வவாவினைச் சிறிது தணித்துக்கொள்ளப் பெரிய புராணத்தைத் தழுவி **''வையம் போற்றும் வனிதையர்''** என்ற பெயரில் ஒரு நூலை உரை நடையில் எழுதி வெளியிட்டுள்ளனன். இதன்கண் வெறும் வனிதையர்களின் வரலாறுகளை மட்டும் எழுதப்பெறுமல், சேக்கிழார் பெருமானரது கவிச்சிறப்பு, நயம், அவரது

பன்முகஞானம் முதலியனவும் பொதுளுமாறு எழுதியுள்ளனன். இக்காலத்துச் சீர்திருத்தக்காரர்கள் கூறும் சில தடைகட்கும், அவர்கள் உளம் கொண்டு ஏற்கும் வகையில் தக்க காரணங்களுடன் விடைகளும் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த அளவில் பெரிய புராணத்திற்கும் சேக்கிழார்க்கும் யான் செய்த தொண்டினை நிறுத்திக்கொள்ள என் உள்ளம் ஒருப்பட்டிலது. என் அவா அடங்கும் அளவுக்குப் பெரிய புராணத்திற்கும், சேக்கிழார்க்கும் இதனைவிட ஓர் அரிய பெரிய தொண்டினைச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தினை முற்றுப் பெற வைக்கச் **சேக்கிழார் பிள்ளைத்தமிழ்** நூலினைத் துணையாகக் கொண்டனன்.

யான் கொண்ட எண்ணத்திற்கு ஒரு தூண்டுகோலாய் அமைந்தவர், திருவாவடுதுறை ஆதீனத்து வித்துவான் திரு த. ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் ஆவார். அவர்கள் என்னைக் காணும்போதெல்லாம் "ஐயா! நீங்கள் சேக்கிழார் பிள்ளைத்தமிழ்க்கு உரை எழுதுங்கள்" என்று அடிக்கடி தூண்டிவந்தனர். அவரது அன்புக்கட்டளையினையும் உளங்கொண்டு இவ்விளக்க உரையினை எழுதலானேன்.

சேக்கிழார் பிள்ளைத் தமிழ் விளக்க உரையாகிய இந்நூலில் அரும்பத உரையையும் விளக்க உரையையும் எழுதியுள்ளனன். இவ்விளக்க உரை சாதாரண உரையாக அமையாமல், பெருவிளக்க உரையாக அமைந்துவிட்டது. இப்பெருவிளக்க உரைக்கண் திரு. திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களின் கற்பனைத்திறன், நுண்ணறிவுத்திறன், கவிவளம், சைவ சமயப்பற்று, சித்தாந்தப் பேரறிவு, தாம் திருமுறைகளிடத்தில் கொண்ட ஈடுபாடு, சைவ சமயாசிரியரிடத்துக் கொண்ட அன்பு, தொடர்பு கொண்டிருந்த திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்த பற்று, குருமகாசந்நிதானங்களிடத்தில் வைத்திருந்த அன்பு, சந்தானசாரியர்களிடத்தில் கொண்ட அன்பு முதலியவை நன்கு எடுத்து எழுதப்பட்டுள்ளன.

திரு. பிள்ளை அவர்களின் பண்பு, கவித்திறன், அறிவின் திறன் மட்டும் இதன்கண் எழுதப்படவில்லை. நந்தம் அரும்

பெரும் தெய்வப்புலவராம் சேக்கிழார் பெருமானாரின் மாபெரும் புலமையும், அரும்பெரும் மாட்சியும் இதன்கண் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. சேக்கிழாரது கவிகளின் பொருட்செறிவு, நயம், அழகு, மாண்பு, சிறப்பு ஏனைய கவிகளில் காண இயலாது என்ற அளவுக்கு அவரது நூலிலிருந்தே சான்றுகள் காட்டப்பட்டுள்ளன. சேக்கிழார் பெருமானார் தொல்காப்பியம், சங்க நூற்கள், சித்தாந்த சாத்திரங்கள், சைவத் திருமுறைகள் ஆகியவற்றில் நன்கு பயின்றிருந்த பயிற்சிகளை அவரது பாடல்களைக் கொண்டே நன்கு நிறுவியுள்ளேன். இவைகளை அன்றி, இப்பெருவிளக்க உரையில் சைவ சித்தாந்த பதி பசு பாச விளக்கம், தீட்சாவிதிகள், தமிழின் மாண்பு, கூத்தப் பெருமானார் கூத்தின் ஒப்புயர்வில்லாச் சிறப்பு, வரலாற்று உண்மைகள், திருமுறைச் சிறப்பு, சைவ சமயச் சிறப்பு, அமைச்சர் இயல்பு, தமிழர் நாகரிகம், தமிழ் வேந்தர்களின் இமயப் படை எடுப்பு, அகப்பொருள், புறப் பொருள் விளக்கம், சீர்திருத்தக் கருத்துக்கள் முதலான மற்றும் பல அரிய குறிப்புக்களும் வரையப்பட்டுள்ளன. இன்னோரன்ன காரணங்களால்தான் இவ்வுரைநூல் பல பக்கங்களுடன் பெருநூலாகத் திகழ்கிறது.

இவ்வுரை விளக்கத்தில் பிள்ளைத் தமிழ்பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்று திகழ்கிறது. இதன் மூலம் தொல்காப்பியர் காலத்துக்கு முன்னும், அவர் காலத்தும், சங்ககாலத்தும், அதற்குப் பிற்பட்ட காலத்தும் பிள்ளைத் தமிழ் நூலுக்குரிய கரு உண்டு என்பதையும், பின்னால் எங்ஙனம் பிள்ளைத் தமிழ் நூல்கள் பெருகலாயின என்பதையும், பிள்ளைத் தமிழ் பாடுதற்குரிய இலக்கணங் களையும் அறிந்து கொள்ளலாம். இக்காலத்தில் தமிழ் ஆராய்ச்சித்துறையில் பட்டம் பெற அவாவும் மாணவர் கட்கு இதுபெருந்துணை செய்யும் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. இதன்பின் சேக்கிழார் பிள்ளைத் தமிழைப் பற்றிய அமைப்பு முறையும், பாடல்களைப்பற்றிய கருத்துச் சுருக்கமும், சேக்கிழார் வரலாறும் காலமும் பற்றிய

விளக்கமும், சேக்கிழார் பிள்ளைத் தமிழ் ஆசிரியரான திரு. பிள்ளை அவர்களின் வாழ்க்கை வரலாறும் இணைக்கப்பட்டுள்ளன. ஈற்றில், இந்நூலில் கூறப்பட்டுள்ள விசேடச் செய்திகளைப்பற்றிய அகராதியும், எடுத்தாண்டுள்ள நூல்களின் பட்டியலும், மற்றும் பலவும் எழுதிச் சேர்த்திருப்பது, இவ்விளக்க உரையினை அவாவிப் படிப்போர்க்குப் பொன் மலர் நாற்றம் உற்றால் போன்ற சிறப்பை அளிக்கும் என்பது எனது நம்பிக்கையான உள்ளக் கிடக்கையாகும்.

இத்தகைய அரிய பெரிய தொண்டினைச் செய்தற்குரிய அறிவையும் ஆற்றலையும் அளித்த நமது தெய்வப் புலவர் சேக்கிழார் பெருமானாரின் திருவடித் தாமரைகளை உள்ளத்தில் கொண்டு வணங்கிப் போற்றுகின்றேன்.

இவ் உரைவிளக்கம், ''உரைப்போன் உள்ளக் கருத்தின் அளவே பெருக்கம்'' என்பது போலப் பெரிதும் வளர்ந்து விட்டது. இவ்வளவு பெரிய உரையினை அச்சிட்டு வெளியிடுவோர் யார்? என்ற ஏக்கம் என் உள்ளத்தில் எழுந்தது. இதனைச் சென்னை அறநிலைய ஆட்சித் துறைத் துணை ஆணையாளர் உயர்திருவாளர் D. ராமலிங்க ரெட்டியார் M.A.B.L. அவர்களிடம் அறிவித்துக் கொண்டனன். அவர்கள் கருணை கூர்ந்து, தாம் ஒரு தேவத்தானம் மூலம் வெளியிட ஏற்பாடு செய்வதாகக் கூறித் திருப்போரூர்க் கந்தப்பெருமான் தேவத்தானப் பரம்பரைத் தர்மகர்த்தத்துவம் சிவத்திரு. சிவப்பிரகாச அடிகளார் அவர்களிடம் எனது உரைநூலைப்பற்றிக் கூறினார்கள். அவர்களும் உடனே உளம் உவந்து திருப்போரூர்த் தேவத்தான வெளியீடாக வெளியிட முன் வந்தனர். இவ்விருவர்கட்கு யான் யாது கைம்மாறு செய்யவல்லேன்? எனது உளம் கலந்த நன்றி அறிதலான வணக்கத்தை அறிவித்துக் கொள்வதே அன்றி வேறு அறியேன்.

இவ்வாறு இவ்வுரைநூலை எழுதியுள்ளேன் என்றும், இதனைத் திருப்போரூர்த் தேவத்தானம் வெளியிடமுன்வந்துளது என்றும் அறநிலைய ஆட்சித் துறை ஆணையாளர் உயர் திருவாளர் எம். எஸ். சாரங்கபாணி முதலியார் B.A.B.L.

அவர்களிடம் அறிவித்தபோது, அவர்களும் உளம் மகிழ்ந்து விரைவில் வெளியிட அன்புடன் கூறி எனக்கு ஊக்கம் ஊட்டினார்கள். அவர்கட்கும் எனது வணக்கம் உரித்தாகும். இந்த விளக்க உரையினை அன்பு கூர்ந்து வாசித்து, இதற்கு ஆசி உரை வழங்கி, வாழ்த்தியருளிய திருக் கயிலாய பரம்பரைப் பொம்மைய பாளையம் பெரிய மடம் திருமயிலம் தேவத்தான ஆதீன பரம்பரைத் தர்மகர்ததத்துவம் பதினெட்டாம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகளின் பொன்னார் திருவடிகளைப் போற்றி வணங்குகின்றேன். இவ்வாறே வாழ்த்துரை தந்தருளிய எனது இயற்றமிழ் ஆசிரியர் மகாவித்துவான் மே. வீ. வேணு கோபாலப் பிள்ளை அவர்களின் திருவடிகளையும் வந்தித்து வணங்குகின்றேன்.

தமிழ் நாட்டின் தனிப் பெரும் முதல் அமைச்சராய்த் திகழ்பவரும், சேக்கிழார் திருமரபில் தோன்றியவரும் ஆகிய பெரும் மதிப்புக்குரிய, திரு. எம். பக்தவச்சலம் அவர்கட்கு இவ்வுரை நூலை உரிமையாக்க இசைவு நல்கும்படி அப்பெரியார் அவர்களை வேண்டினன். அவர்களும் அருள் உளம் கொண்டு இசைவு தந்தனர். அவர்கட்கும் எனது உளம் கலந்த நன்றியும் வணக்கமும் உரியன.

எனது திருமகள் திருவளர் செல்வி பா. க. தமிழ் அரசி இவ்வுரையின் பிற்பகுதியில் அமைந்த அகரவரிசைகளை ஒழுங்கு படுத்தி ஒத்திட்டுப் பார்த்தனள். அவளுக்கு எல்லா நலனும் வளனும் தந்து பல்லாண்டு வாழுமாறு திருவருள் சுரக்க அம்மை அப்பனது பொன்னார் திருவடிகளைப் போற்றிப் பணிகின்றேன்.

இந்நூலை அழகுற அச்சிட்டு உதவிய சென்னை இராயப்பேட்டை, மாருதி அச்சக உரிமையாளர்க்கும், அங்குப் பணிபுரியும் நிர்வாகிக்கும், பணியாளர்கட்கும் எனது நன்றியை அறிவித்துக்கொள்கின்றேன்.

"அம்மை அப்பர் அகம்"
53, விஜய விக்னேஸ்வரர் கோவில்
தெரு, சூளை, சென்னை—7.
12—6—'64

இங்ஙனம்
பா. ரா. கண்ணப்ப முதலியார்

# வளர்புகழ் வாழ்த்துரைகள்

திருக்கயிலாய பரம்பரைப் பொம்மைய பாளையம் பெரியமடம்,
திருமயிலம் தேவத்தான ஆதீன பரம்பரைத் தர்மகர்த்தத்துவம்
பதினெட்டாம் பட்டம்

## ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருவடி வாழ்க.

"எங்கும் நிறைந்த சிவபெருமான் குரு வடிவிலும் இலிங்க வடிவிலும் அடியார் வடிவிலும் வெளிப்படுவார்; அம்மூன்று வடிவங்களையும் கடவுளாகவே கொண்டு வழி பட்டால் முத்திப்பேறு அடையலாம்" என்பது சாத்திரம், அம்மூன்று வடிவங்களையும் தனித் தனிப் பற்றுக்கோடாகக் கொண்டு வழிபட்டு முத்தியடைந்தவர்கள் சைவ நாயன் மார்களாவர். அந்நாயன்மார்களை வழிபட்டு அவர்களின் வரலாறுகளைப் 'பெரிய புராணம்' என்ற நூல் வாயிலாக உலகுக்கறிவித்து முத்தியடைந்தவர் ஸ்ரீ சேக்கிழார் பெருமானுவார். இன்று சைவம் நிலைத்திருக்கிறது என்ருல் அஃது அப்பெருமானுராலேயாம். எங்கள் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகளைப்பற்றி ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள், சொல்லும்போது, "அருந்தமிழ் நாடு ஒரு கோடி தவம் செய வந்து அதிர் வெள்ளருவி தூங்கு உயர் மயிலை வரையின் அமர் விளக்கு" என்ருர். அப்படியே நாம், "மேன்மை கொள் சைவம் செய்த தவப்பயனுகச் சேக்கிழார் அவதரித் தார்" என்னலாம்.

ஸ்ரீ சேக்கிழாரைப்பற்றி முழுதும் உணர்ந்தவர் திருவா வடுதுறை யாதீன மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள். அப்பெருமானின் பெருமைகளெல்லாம் உல குக்குத் தெரியும்படி 'சேக்கிழார் சுவாமிகள் பிள்ளைத்தமிழ்' எனும் நூலைப் பாடினுர்கள். பிள்ளையவர்கள் தம் புலமை நலம் முழுமையும் காட்டிப் பாடிய அந்நூலின் பொருளைப் புலமையுடையோரே அறிய முடியும். அதனுல் அந்நூலுக்கு உரை வருவது வேண்டுவதே. அப்பணியினைச் செந்தமிழ்ச் செல்வரும், சைவ சமய சிரோமணியும் பேராசிரியருமான வித்துவான், பாலூர்-கண்ணப்ப முதலியார் எம்.ஏ.,

பி.ஓ.எல். அவர்கள் நிறைவுறுத்தினார்கள். திரு. முதலியார் அவர்கள் சென்னைப் புதுக்கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராக இருப்பவர். தமிழ் ஆராய்ச்சி மிக்கவர்; சைவ சமய சாத்திரப் புலமையாளர். அவர்கள் உரை விளக்கத்தில் அவற்றைக் காணலாம்.

ஸ்ரீ சேக்கிழார் வேளாண் மரபினர். அம்மரபினர்க்குரிய சில வழக்காறுகளும் உரிமைகளும் உணர்ந்தவர்களே அவற்றை அறிய முடியும். அரசர்க்கு முடிசூட்டுங் காலத்தில் அம்முடியை ஓர் வேளாளர் தம் கையால் தொட்டுக் கொடுக்கும் வழக்கம் இருந்திருக்கிறது. அவ்வழக்கம் அறியாதவர், இப்பிள்ளைத் தமிழில் சப்பாணிப் பருவ முதல் பாடலில் வரும்,

"இறைபுனைய மணிகள் தழையும் முடிதொட்டுக்
கொடுத்தருள் மலர்க்கைகொடு
சப்பாணி கொட்டியருளே"

என்ற வரிகட்குப் பொருள் அறிய முடியாதன்றோ? இவ்விடத்து உரையாசிரியர் அவர்கள், இராமபிரானுக்கு முடிசூட்டியபோது,

"வெண்ணெயூர்ச் சடையன் தங்கள் மரபுளோர் கொடுக்க
வாங்கி வசிட்டனே புனைந்தான் மவுலி"

என்ற கம்பர் கூறிய வாக்கை மேற்கோள் காட்டியது மகிழ்தற்குரியதாம். இப்படிப் பலவிடங்கள் உள இவ்வுரையில்.

உரையில் ஆங்காங்குச் சொல் நயங்களை விளக்கியுள்ளார்கள். செங்கீரைப் பருவம் இரண்டாம் பாடலில் வரும், "ஒருவரியதாம் செப்பலுற்ற பொருள்" என்ற தொடரில், 'ஒருவரிய' என்பதற்குக் கூறிய நயம் சிறப்புடையதாகும். சேக்கிழார் பாடிய பெரியபுராணத்தில், "செப்பலுற்ற பொருள்" எனத் தொடங்கும் பாடலும் ஒன்று. அதைப் பிள்ளையவர்கள் ஒருவரிய என்று அடை கொடுத்துச் சொன்னார்கள். அதுபற்றி உரை வகுத்தவர், "சில நூல்களில் உள்ள பாடல்களை இவை இடைச்செருகல் என நீக்க முயல்வர்; அங்ஙனம் செப்பலுற்ற என்ற செய்யுளை நீக்க இயலாது; ஆகவே, அதனை ஒருவரிய என்று அடை கொடுத்துப் பாடினார்" என்று விளக்கியது இன்பம் பயப்பதாகும்.

இவ்வுரை பேருரையாக இருக்கிறது. ஒவ்வொரு பாடலுக்கும் தந்துள்ள உரை, ஒவ்வொரு பாடலுக்கும் சொற்

பொழிவுரை அமைத்தது போல் இருக்கிறது. இப்பேருரை திருப்போரூர்க் கந்தப் பெருமான் தேவத்தான வெளியீடாக வெளிவருகின்றது. இவ்வுரை நூலை உலகம் பயன் படுத்திப் பல நலமும் பெறுவதாக. உரையாசிரியராகிய முதலியார் அவர்கள் இதுபோல் பல நூல்களுக்கு உரை எழுதி உலகுக்கு உதவிப் பெருவாழ்வு பெறுவாராக என எங்கள் ஆதி சிவஞான பாலய சுவாமிகளையும், அவர்க்கருள் செய்த முருகப் பெருமானையும் நினைக்கின்றோம்.

தமிழக அரசு அறநிலையத்துறையினர் இதுபோன்ற உரை நூல்களைத் தேவத்தானங்களின் வாயிலாக வெளியிடச் செய்து உலகுக்கு உதவி செய்வது நல்லது. முதல் அமைச்சரும் அறநிலையப் பாதுகாப்புத்துறை அமைச்சருமாகிய கனம் M. பக்தவத்சலம் B A.B.L. அவர்கள் இது போன்ற பணிகளைச் செய்து நிறைவேற்றிப் பேரும் புகழும் பெற்றுப் பெரும் பயன் அடைவார்களாக.

மயிலம்
5—5—64

—ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்.

---

மகா வித்துவான்

## மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்கள்

அன்புசா லென்ற னருமை மாணவன்
பொன்புரை குணத்தன் புலமை மிக்கவன்
சொற்பொழி வாற்றல் தோன்றப் பேசும்
பொற்புடை நாவலன் புகழ்பெறு நூலாம்
சேக்கிழார் பிள்ளைத் தமிழ்க்கொரு தெளிவுரை
மீக்கொளு மறிவான் மிளிர வியற்றிப்
போரூர்க் கந்தன் புகழ்பெயர் கொண்டே
பாரோர் மகிழப் பயிலுநன் னிலையம்
வெளியிடச் செய்த வியத்தகு குரிசில்
கண்ணப்ப னென்னும் புண்ணியப் பெயரினன்
எண்ணிய வெண்ணியாங் கினிதுறப் பெற்றே
ஒளியார் புகழ்மிக் கோங்கிடப் பல்லாண்
டின்னஞ் சீரிய வெழினூ லியற்றி
நன்னலம் பெருக வாழிவா ழியவே.

சென்னை,
12-6-64.

—மே. வீ. வே.

# அணிந்துரைகள்

**திரு. மா. சே. சாரங்கபாணி முதலியார்** பி.ஏ.,பி.எல். அவர்கள்
ஆணையர், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை.

தமிழிலுள்ள பலவகைச் சிற்றிலக்கிய நூல்களுள் **பிள்ளைத்தமிழ்** என்பதும் ஒன்று. பிள்ளைத் தமிழ் நூல்கள் தமிழில் மிகப் பல இருப்பினும், அவற்றுளெல்லாம் சேக்கிழார் பிள்ளைத் தமிழ் மிகவும் சிறப்புற்றுத் திகழ்கின்றது.

ஏனைய பிள்ளைத் தமிழ் நூல்களெல்லாம் கடவுளர்மீதோ அரசர்கள்மீதோ, வள்ளல்கள்மீதோ கவிஞர்களால் பாடப் பெற்றனவாக இருக்கும். ஆனால், **சேக்கிழார் பிள்ளைத் தமிழோ**, ஒரு பெருங் கவிஞர். மற்றொரு மாபெருங் கவிஞரைப்பற்றிப் பாடிய மாட்சிமை வாய்ந்தது.

திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களைத் தமிழுலகம் நன்கறியும். அண்மைக் காலத்திலே காப்பியம் பாடவல்ல மாபெருங் கவிஞராக விளங்கிய சிறப்பு, அவர் ஒருவர்க்கேயுரியது. **கோவை, உலா, அந்தாதி, தூது, கலம்பகம், பிள்ளைத் தமிழ், புராணம்** என்னும் பல வகைகளிலும், அப்பெருந்தகையார் பற்பல நூல்களைப் பாடியருளியிருக்கின்றார். எனினும், அவற்றுளெல்லாம் தலை சிறந்து, அனைவரும் விரும்பிப் பயிலும் வண்ணம் திகழ்வது, சேக்கிழார் பிள்ளைத் தமிழ் ஆகும்.

**மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை** அவர்கள், திருவாவடுதுறை ஆதீனப் புலவராய்த் திகழ்ந்து, சேக்கிழார் இயற்றிய பெரிய புராணத்தினைப் பலகாற் கற்றும், பலருக்குக் கற்பித்தும், தம் வாழ்நாள் முழுவதும் சேக்கிழார்பாற் பேரன்பும், பேரீடுபாடும்கொண்டு விளங்கியவர்.

சேக்கிழாரின் பலதிற நலங்களையும், சிறப்புக்களையும் நன்கினிது தெளிந்துணர்ந்தவர். "கற்றாரைக் கற்றாரே காமுறுவர் அல்லரோ?" "பாம்பின் கால் பாம்பன்றோ அறியும்?"

சேக்கிழாரின் பலதிறச் சிறப்புக்களையும் ஆராய்ந்து தெளிந்து, வியந்து புகழ்ந்து விளக்கிப் பாடுதற்கு மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களைக் காட்டிலும் தகுதி வாய்ந்தவர் ஒருவரும் இரார் என்பது திண்ணம்.

அத்தகைய பெருங்கவிஞர் பாடிய இச் சிறந்த சேக்கிழார் பிள்ளைத் தமிழுக்குச் செந்தமிழ்ப் புலவர், சைவ சமய சிரோமணி, பேராசிரியர், வித்துவான், திரு. **பாலூர் கண்ணப்ப முதலியார்** எம்.ஏ., பி.ஓ.எல்., அவர்கள் மிகவும் விரிவாகப் பெரு விளக்கவுரை வரைந்து உதவியிருக்கின்றார்கள்.

இந்நூலின் முதற்கண் அமைந்துள்ள "பிள்ளைத் தமிழ் நூல் ஆராய்ச்சி" என்னும் பகுதி, நன்முறையில் சிறப்புற அமைந்துள்ளது. அங்ஙனமே ஏனைய பகுதிகளும் விரிவாகவும் விளக்கமாகவும், தெளிவுடனும் சுவை மிகவும் எழுதப்பெற்றிருக்கின்றன. ஏராளமான மேற்கோட்பாடல்கள் இந் நூலில் இடம் பெற்றுள்ளன. படிப்பவர்களின் இலக்கிய அறிவு வளர்ச்சிக்கு அவைகள் பெரிதும் துணை செய்யும்.

இந்நூலை எழுதியளித்த ஆசிரியர் அவர்களுக்கும், இதனை வெளியிட அன்புடன் முன் வந்து உதவிய **திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள்** திருமடத்தின் தலைவர் சீலப் பெருந்திரு **சிவப்பிரகாச அடிகளார்** அவர்களுக்கும், சைவத் தமிழ் மக்களின் அன்பும் நன்றியும் என்றும் உரியன ஆகும்.

சென்னை,
25—2—'64

**மா. சே. சாரங்கபாணி.**

**திரு டி. இராமலிங்க ரெட்டியார், எம். ஏ., பி.எல்., அவர்கள்**

துணை ஆணையாளர், அறநிலைய ஆட்சித் துறை,

சென்னை.

உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

**பெரிய புராணம்** புராணங்களுள் தலைசிறந்தது என்பது அறிஞர் முடிவு. அஃது ஏனைய புராணங்களைப்போல் இல்லாமல் வரலாற்றை உணர்த்தும் நூல் என்று வரலாற்றுப் புலவர்கள் ஒப்புக்கொண்டுள்ளனர். இஃது உலகப் பெரும் நூல் என்று கூறுதற்குரிய பெருமையையும் உடையது. இந்த உண்மை முதலில் 'உலகெலாம்' என்று தொடங்கி 'உலகெலாம்' என்று முடிந்திருப்பது கொண்டே நிறுவலாம். இத்தகைய அரிய நூலில் நுண் பொருள்களை உணர்தற்குப் பெருந் துணையாக இருப்பது திரசிரபுரம் மகா வித்துவான் **ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளை** அவர்களின் சேக்கிழார் பிள்ளைத் தமிழாகும். இதற்கு ஒரு சான்றையே எடுத்துக்காட்ட விரும்புகிறேன். பெரிய புராணத்தின் முதற் செய்யுளின் ஈற்றடியில் வரும், "மலர் சிலம்படி" என்பதற்குச் சிலர் மலர் போன்ற திருவடி என்று உவமைத் தொகையாகப் பொருள் கொள்ளக்கூடும் என்று யூகித்து 'உலகெலாம் மலர்ந்த சிலம்படி, மலரும் சிலம்படி, மலருகின்ற சிலம்படி' என்று வினைத் தொகையாகப் பொருள் கொள்ளுமாறு அவர் அப்பிள்ளைத் தமிழில் பாடியிருப்பதைக் காண்க. இப்பிள்ளைத் தமிழ் நூல் சிவஞான போதத்திற்கு விளக்கம் தரும் சிவஞான சித்தியார் போலப் பெரிய புராணத்திற்கு விளக்கம் தரும் நூல் எனின் அது மிகை ஆகாது.

இத்தகைய பிள்ளைத் தமிழ் நூலுக்குச் செந்தமிழ்ச் செல்வர், சைவ சமய சிரோமணி, பேராசிரியர் வித்துவான் **திரு. பாலூர் கண்ணப்ப முதலியார்** M.A., B.O.L., அவர்கள் பெருவிளக்க உரை எழுதியிருப்பது, சிறப்பாகச் சைவ சமயப்

பெருமக்களுக்கும், பொதுவாகத் தமிழ் அறிஞர்கள் அனை வருக்கும், பெரு விருந்தாகும் என்பது வெறும் புகழ்ச்சி அன்று; உண்மையே ஆகும்! இதன்மூலம் அவ்வுரை ஆசிரியரின் பரந்த இலக்கண இலக்கிய புலமையையும், சைவ சித்தாந்த அறிவையும், திருமுறைகளின் ஞானத்தையும் நன்கு உணரலாம். பெரிய புராண ஆராய்ச்சி செய் வார்க்கும், பிள்ளைத் தமிழ் என்னும் பொருள்பற்றி ஆராய்ச்சிக் கட்டுரை எழுதிப் பட்டம் பெற விழைவார்க்கும் இவ்விளக்க உரை பெரிதும் துணைசெய்யும் என்பது எனது துணிபு. இத்தகைய அரிய பெரிய ஆராய்ச்சி விளக்க உரை யினை எழுதிய திரு. கண்ணப்ப முதலியார் அவர்கட்கு இறைவன் எல்லா நலங்களும் அருளுமாறு அவனது திருவடிகளை வணங்குகிறேன்.

இப்புத்தகத்தை வெளியிட முழுப்பொறுப்பு எடுத்துக் கொண்ட **திருப்போரூர் ஸ்ரீ கந்தசுவாமி கோவில் தர்மகர்த்தர் திரு. சிவப்பிரகாசம்** அவர்களுக்குச் சைவ சமயத் தொண் டர்கள் மிகவும் கடமைப்பட்டுள்ளனர். அவர் தம் சீரிய முயற்சிக்குச் சைவப் பெருமக்களின் நன்றி உரித்தாகுக.

**சேக்கிழார் பிள்ளைத் தமிழ்** விளக்க விரிவுரை நூல் ஆகிய இதனை, அச்சேக்கிழார் பெருமான் திருமரபில் தோன்றிய வரும், அவரைப் போலவே முதலமைச்சராக விளங்கிப் பக்தியும், பண்பும் நிறைந்தவரும், அறிவு ஆற்றல் மிக்க நல்ல அறிவாளர்களை ஆராய்ந்தெடுத்து நியமித்து அவர் களின் மூலம் சமய நிலையங்களையும் கோயில்களையும் நன் கினிது போற்றிக் காத்து வளர்த்து வருபவரும் ஆகிய நம் **தமிழக முதலமைச்சர் திரு. எம். பக்தவத்சலம்** அவர்களுக்கு, இவ்வுரை நூலாசிரியர் உரிமையாக்கியிருப்பது மிகவும் பொருத்தமும் சிறப்பும் உடைய செயலாகும்.

தில்லைவாழ் அந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாம் திருத்தொண்டத் தொகையடியார்
பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழார் அடிபோற்றி.

**டி. இராமலிங்க ரெட்டியார்.**



திருப்போரூர்

ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள்

# பிள்ளைத் தமிழ் நூல் ஆராய்ச்சி

ஈடும் எடுப்பும் அற்ற இன்தமிழ் மொழியில் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்கள் என்று கூறப்படும் மரபு ஒன்று காணப்படுகின்றது. இப்பிரபந்தங்களுக்குள் அடங்குவன பிள்ளைத்தமிழ், உலா, அந்தாதி, கலம்பகம், மாலை, கோவை, பரணி, குறவஞ்சி, பள்ளு, தூது முதலியன. அவற்றைச் சிற்றிலக்கியங்கள் என்றும் பிற்கால இலக்கியங்கள் என்றும் ஒருசிலர் கருதுவர். இந்நூல்களுள் கோவை, பரணி போன்ற, பிரபந்தங்கள், நானூறு, நானூற்றுக்கு மேல் ஆயிரத்திற்குள் அமைந்த பாடல்களைக் கொண்டும், ஏனையவை மேலே கூறிய பாடல் தொகைக்குள் அடங்குவனவாகவும் இருத்தலின், இவற்றைச் சிற்றிலக்கியம் என ஒருவாறு கூறலாம். ஆனால், இப்பிரபந்தங்கள் பிற்கால இலக்கியங்கள் என்று கூறமுடியாது. தொல்காப்பியர் காலத்துக்கு முன்பும் இத்தகைய இலக்கியங்கள் இருந்திருக்கவேண்டும் என்று கருதவேண்டி இருக்கிறது, தொல்காப்பியம், இலக்கியங் கண்டவற்றிற்கே இலக்கணம் வகுத்துக் கூறும் நூல்.

தொல்காப்பியம் இப்பிரபந்தங்கட்கு இலக்கண விதியாக மூன்று நூற்பாக்களைக் கூறியுள்ளார். அவையே,

"குழவி மருங்கினும் கிழவ தாகும்"
"ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப
"விருந்தே தானும்
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே." என்பன.

இந்நூற்பாக்களுக்குரிய உரைகளையும் விளக்கங்களையும் காணும்போது, சிற்றிலக்கியங்கள் இருந்தன என்பது, தெள்ளத் தெளியவரும். முதல் சூத்திரத்திற்கு உரைகண்ட உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர்,

"பக்குநின்ற காமம், ஊரில் பொது மகளிரொடு கூடி வந்த விளக்கமும், பாடாண்திணைக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர்" என்று உரை எழுதி, விளக்கம் கூறவந்த இடத்து, "தோற்றமும் என்றது, அக்காமம் தேவரிடத்தும் மக்களிடத்தும் விளங்கும் விளக்கத்தை, அது பின்னுள்ளோர் ஏழு பருவமாகப் பகுத்துக் கலிவெண்பாட்டாகச் செய்கின்ற உலாச் செய்யுளாம்" என்று விளக்கியுள்ளனர்.

இச்சூத்திரத்திற்கே உரைகண்ட உளம்கூர் கேள்வி இளம்பூரணர், "ஊரின்கண் தோற்றமாகக் காமப் பகுதி நிகழ்தலும் உரித்து என்று சொல்லுவர் புலவர்" என்று கூறி, விளக்கம் எழுது மிடத்து, "ஊரொடு தோற்றம் என்பது, பேதை முதலாகப் பேரிளம்பெண் ஈறாக வருவது. வழக்கு என்பது அவரவர் பருவத்திற்கு ஏற்பக் கூறும் வகைச் செய்யுள்" என்று விளக்கினர். இச்சூத்திரத்தின் மூலமும், உரை விளக்கங்களின் மூலமும் உலா என்னும் பிரபந்தம் பண்டே உண்டு என்பதையும் பாடுதற்குரிய முறைகளையும் அறிகிறோம்.

அடுத்து வரும் நூற்பா, எல்லா வகைப் பிரபந்தங் கட்கும் பொது விதியாக அமைந்த நூற்பா ஆகும். இச் சூத்திரத்திற்கு உரை கண்ட நச்சினார்க்கினியர், "விருந்து தானும் புதிதாகத் தொடுக்கப்படும் தொடர் நிலை மேற்று" என்று எழுதியுள்ளனர். விளக்கம் தரும்போது, "புதுவது கிளந்த யாப்பின் மேற்று என்றது என்னை எனில், புதிதாகத் தாம் வேண்டியவாற்றால் பல செய்யுளும் தொடர்ந்து வரச் செய்வது. இது முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளும் எனவுணர்க. கலம்பகம் முதலாயினவும் சொல்லுப" என்று விளக்கம் தந்தனர்.

மூன்றாவதாக உள்ள நூற்பா, பிள்ளைத் தமிழ்க்குரிய இலக்கணம் கூறும் நூற்பா ஆகும். இதற்கு உரைகண்ட இளம்பூரணர் குழவிப் பருவத்தும் காமப்பகுதி கூறப்பெறும்

அவர் விளையாட்டு மகளிரொடு பொருந்தியக்கண்'' என்று எழுதியுள்ளனர்.

நச்சினார்க்கினியர் உரைகண்டபோது, ''குழவிப் பருவத்தும் காமப்பகுதி உரியதாகும்'' என்று கூறியுள்ளனர். விளக்கம் தரும் இடத்து, குழவியைப்பற்றிக் கூறுங்கால் காக்க என்றுகூறுதலானும், பாராட்டும் இடத்துச் செங்கீரையும், தாலும், சப்பாணியும், முத்தமும், வரவுரைத்தலும், அம்புலியும், சிற்றிலும், சிறுதேரும், சிறுபறையும் எனப் பெயரிட்டு வழங்குதலானும் என்பது.'' என்று எழுதியுள்ளனர். இவ்வுரைகளையும் விளக்கங்களையும் காணும்போது, பிள்ளைத் தமிழ்பாடும் வழக்கம் தொல்காப்பியர் காலத்தும் அவர்க்கு முன்பும் இருந்தது என்பது வெள்ளிடைமலை என விளக்கமாகின்றதன்றோ? பிள்ளைத்தமிழ், பிள்ளைப் பாட்டெனவும் வழங்கப் பெறும்.

இச்சூத்திரத்தையும் இச்சூத்திரத்தின் கருத்தையும் ஒட்டியே பின்னால்வந்த பாட்டியல் இலக்கணக்கருத்தாக்கள், மேலும் பல விளக்கங்களுடன் பிள்ளைத்தமிழ்பாடுதற்குரிய இலக்கணங்களை வகுத்து உரைப்பாராயினர்.

கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் திகழ்ந்த குணவீர பண்டிதர் தாம் எழுதிய வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியலில், பிள்ளைத்தமிழ் பாடும் முறையினை.

''கண்டுரைக்கில் பிள்ளைக் கவிதெய்வம் காக்கஎனக்
கொண்டுரைக்கும் தேவர் கொலைஅகற்றி—ஒண்தொடி
யாய்
சுற்றத் தளவா வகுப்பொடு தொல்விருத்தம்
முற்றுவித்தல் நூலின் முறை'' என்றும்,

''சாற்றரிய காப்புத்தால் செங்கீரை சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை—போற்றரிய
அம்புலியே ஆய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்புசிறு தேரோடும் பத்து

"முறை தரும்மூன் றாதிமு ஏழ்ஈறும் திங்கள்
அறைகநிலம் பத்தும்ஆண் டைந்தேழ்—இறைவளையார்க்
கந்தம் சிறுபறையே ஆதியா மூன்றொழித்துத்
தந்தநிலம் ஓர்ஏழும் சாற்று"

என்று குறிப்பிட்டுள்ளனர். இக் கருத்துக்களையே பன்னிரு பாட்டியல்,

"பிள்ளைப் பாட்டே தெள்ளிதில் கிளப்பின்
மூன்று முதலா மூஏழ் அளவும்
ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே"
"ஒன்றுமுதல் ஐயாண்டோதிரும் வரையார்"
"காப்பொடு செங்கீரை தால்சப் பாணி
யாப்புறு முத்தம் வருகஎன் றல்முதல்
அம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்
நம்பிய மற்றவை சுற்றத் தளவென
விளம்பினர் தெய்வ நலம்பெறு புலவர்"

"திருமால் அரனே திசைமுகன் கரிமுகன்
பொருவேல் முருகன் பருதி வடுகன்
எழுவகை மங்கையர் இந்திரர் சாத்தன்
நிதியவன் நீலி பதினொரு மூவர்
திருமகள் நாமகள் திகழ்மதி என்ப
மருவிய காப்பினுள் வருங்கட வுளரே" என்கிறது.

கி. பி. பதினாறும் நூற்றாண்டினரான பரஞ்சோதியார் தாம் பாடிய சிதம்பரப்பாட்டியலில்,

துறுகொலை நீக்கித் தெய்வக் காப்பாய்ச் சுற்றம்
தொகைஅளவு வகுப்பகவல் விருத்தம் தன்னால்
முறைகாப்புச் செங்கீரை தால்சப் பாணி
முத்தம்வா ரானைஅம் புலியி னோடு
சிறுபறைசிற் றில்சிறுதேர் இவைபின் மூன்றும்
தெரிவையர்க்குப் பெருகழங்கம் மானை ஊசல்
பெறுமூன்று முதல்இருபத் தொன்றுள் ஒன்றைப்
பெறுதிங்கள் தனில்பிள்ளைக் கவியைக் கொள்ளே

என்று எடுத்து மொழிந்துள்ளனர்.

கி. பி. பதினேழாம் நூற்றாண்டினரான வைத்திய நாத தேசிகர், தாம் இயற்றிய இலக்கண விளக்கப் பாட்டியலின்,

"கடுங்கொலை நீக்கிக் கடவுள் காப்புச்
செங்கிரை தால்சப் பாணி முத்தம்
வாரானை முதல வகுத்திடும் அம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதேர் என்னப்
பெருமுறை ஆண்பால் பிள்ளைப் பாட்டே

அவற்றுள்,

பின்னைய மூன்றும் பேதையர்க் காகா
ஆடும் கழங்கம் மானை ஊசல்
பாடும் கவியால் பகுத்து வகுப்புடன்
அகவல் விருத்தத் தால்கிளை அளவாம்"

"மூன்று முதல்மூ ஏழு திங்களில்
ஒற்றை பெற்ற மூற்றுறு மதியின்
கொள்ளுக பிள்ளைக் கவியைக் கூர்ந்தே"

"மூன்றைந் தேழாம் ஆண்டினும் ஆகும்"

என்று விளக்கியுள்ளனர்.

இங்கு எடுத்துக் காட்டப்பட்ட பிள்ளைத்தமிழ் இலக்கண விதிப்படி, நாம் ஆண்பாற் பிள்ளைத்தமிழ்க் குரிய பருவங்கள் காப்புப் பருவம், செங்கீரைப் பருவம், தாலப் பருவம், சப்பாணிப் பருவம், முத்தப் பருவம் வருகைப் பருவம், அம்புலிப் பருவம் சிறுபறைப்பருவம், சிற்றில் பருவம், சிறுதேர்ப்பருவம், ஆகப்பத்து என்பதையும், பெண்பால் பிள்ளைத்தமிழ்க் குரிய பருவங்கள், காப்புப் பருவம்; செங்கீரைப் பருவம், தாலப்பருவம், சப்பாணிப் பருவம், முத்தம்பருவம், வருகைப்பருவம், அம்புலிப்பருவம், கழங்குப்பருவம், அம்மானைப்பருவம், ஊசல் பருவம் ஆகப் பத்து என்பதையும் அறிகின்றோம். ஒவ்வொரு பருவமும் குழந்தை பிறந்த மூன்று மாதங்களில் இருந்து ஐந்து, ஏழு ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று, பதினைந்து, பதினேழு, பத்தொன்பது இருபத்து ஒன்று ஆகிய ஒற்றைப் பட்ட மாதங்களில் முறையே அமையப் பாடப் படுவது என்பதையும், வகுப்புப் பாவிலேனும், விருத்தப் பாவிலேனும் பாடப்படுவது என்பதையும் அறிகிறோம்.

ஆண்பாற் பிள்ளைத் தமிழ்க்குரிய சிறுபறை, சிற்றில், சிறு தேர்ப் பருவங்கட்கு முறையே குழந்தையின் ஐந்தாண்டு, ஆறு ஆண்டு, ஏழாண்டு பருவங்களில் பிள்ளைத்தமிழ் பாடுக என்னும் குறிப்பு, இலக்கண விளக்கப்பாட்டியலில் வரும் 'மூன்றைந் தேழாம் ஆண்டினும் ஆகும்'' என்னும் நூல்பாவால் தெரியவருகின்றது. இதே குறிப்பு வெண்பாப் பாட்டியலில் வரும்,

முறைதரும்மூன் றுதிமூ ஏழ்ஈறும் திங்கள்
அறைகநிலம் பத்தும்ஆண் டைந்தேழ்''

என்ற அடிகளாலும் அறிய வருகிறது.

காப்பும் பருவம் பாடும் முறையையும் இலக்கண விளக்கப் பாட்டியலில்,

மங்கலம் பொலியும் செங்கண் மாலே
சங்கு சக்கரம் தரித்த லானும்
காவல் கடவுள் ஆத லானும்
பூவினுள் புணர்த லானும்முன் கூறிக்
கங்கையும் பிறையும் கடுக்கையும் புனைஉமை
பங்கன்என் றிறைவனைப் பகர்ந்து முறையே
முழுதுல கீன்ற பழுதறும் இமயப்
பருப்பதச் செல்வியை விருப்புற உரைத்து
நாமகள் கொழுநன் மாமுகில் ஊர்தி
ஒற்றைக் கொம்பன் வெற்றி வேலன்
எழுவர் மங்கையர் இந்திரை வாணி
உருத்திரர் அருக்கர் மருத்துவர் வசுக்கள்
பூப்புனை ஊர்தியில் பொலிவோர் அனைவரும்
காப்ப தாகக் காப்புக் கூறும்.

என்று கூறப்பட்டுள்ளது.

காப்புப்பருவத்தில் ஒன்பது, அல்லது பதினொருபாடல்கள் அமையவேண்டும் என்னும்விதியையும் ''ஒன்பது பதினொன்று என்பது காப்பே'' என்னும் நூல்பாவால் விளங்குகிறது. காப்புப் பருவத்தில் முதல் வணக்கம், திருமால் வணக்கமாக இருத்தல் வேண்டும் என்பதையும், அதற்குரிய காரணங்கள்

இன்ன என்பதையும் அவ்விலக்கண விளக்கப் பாட்டியல் எடுத்து இயம்பியுள்ளதைக் காப்புப்பருவம் பாடுமுறையை விளக்கிக் கூறும் சூத்திரத்தின் முதல் நான்கு அடிகளில் சுட்டி இருப்பதையும் காணவும். இக்கருத்தையே,

"அவன் தான்

காவல் கிழவன் ஆக லானும்
பூவின் கிழத்தியைப் புணர்த லானும்
முடியும் கடகமும் மொய்பூந் தாரும்
குழையும் நூலும் குருமணைப் பூணும்
அணியும் செம்மல் ஆக லானும்
முன்னுற மொழிதற் குரியன் என்ப"

என்று பாட்டியல் இலக்கண ஆசிரியரும் கூறுவர்.

காப்புப்பருவம் என்பது, ஒன்பது பாடல்களைக் கொண்டதாகவேனும், பதினொரு பாடல்களைக் கொண்டதாகவேனும் அமையவேண்டும் என்பதனால், ஏனைய பருவங்கள் பப்பத்துப் பாடல்களைக் கொண்டு திகழும் என்பதை அறியவும். ஆனால், ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவர் தாம் பாடிய செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் நூலில், காப்புப் பருவம் முதல் சிறுதேர் பருவம் ஈறுகத் தனித்தனி ஐந்தைந்து பாடல்களையே பாடியுள்ளனர். காப்புப் பருவம் அமைய வேண்டிய இலக்கண முறை பலபடி மாறிவருகின்றது என்பது இதுவரை வெளிவந்துள்ள பிள்ளைத்தமிழ் நூல்களால் அறிய வருகின்றது. இவ்வுண்மையைச் சில பிள்ளைத்தமிழ் நூல்களின் காப்புப்பருவ அமைப்பினை ஈண்டு எடுத்துக் காட்டுவதன் மூலம் நன்கு அறியலாம்.

சிவஞான பாலைய சுவாமிகள் மீது சிவப்பிரகாச சுவாமிகள் பாடியுள்ள பிள்ளைத்தமிழ் நூலில் திருமால், மல்லிகார்ச்சுனேசுரர், உமாதேவியார், விநாயகர், சுப்பிரமணியர், அல்லமதேவர், வசவதேவர், தேவாரம் அருளிய மூவர், மாணிக்கவாசகர், சென்னவசவர் ஆகிய இப்பதின்மர் காக்க எனப் பத்துப்பாடல்கள் காப்புப் பருவமாக உள்ளன. பாட்டுடைத்தலைவரும், நூலாசிரியரும் வீர

சைவர்கள் ஆதலின் வீர சைவப் பெரியார்களையும் காப்புப் பருவத்தில் இயைத்துப் பாடியுள்ளனர்.

திருவாவடுதுறை ஸ்ரீ மாசிலாமணி தேசிக சுவாமிகள் பாடிய திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழில் பிரமீசர், திருநிலைநாயகி, திருநீறு, கான்மாறி ஆடிய கடவுள், சிற்சக்தி, விநாயகக் கடவுள், முருகக் கடவுள், திருப்பொய்கை (சீர்காழிப் பிரம்ம தீர்த்தம்) பன்னிருதிருப் பெயர்ப் பழம்பதி (சீர் காழித்தலம்) திருப்பதிகம், சட்டைநாதர் மற்றைத் தெய்வங்கள் ஆகிய இவர்கள் காக்க எனப் பதினொரு பாடல்களுடன் காப்புப்பருவம் திகழ்கின்றது.

ஈண்டு ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் திருமால் முதலிய தேவர்கள் திருஞானசம்பந்தரைக் காக்க எனக் கூறுமல்,

> ''திருமுத்தின் சிவிகைமிசை அசையவரு மணியைச்
> சேவித்தங் குடன்வருவர்''

என்று பாடி இருப்பதை நன்கு சிந்திக்கவும். இதன் குறிப்பு, திருமால், பிரமன் முதலானவர் திருஞான சம்பந்தரைப் போற்றும் தகுதியினரே அன்றிக் காக்கும் தன்மையர் அல்லர் என்பதாகும்.

திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் பாடியுள்ள திருப்போரூர்ச் சந்நிதி முறையில் அடங்கியுள்ள திருப்போரூர் முருகன் பிள்ளைத்தமிழ் நூலில் திருமால், சதாசிவன், பராசக்தி, விநாயகர், திருநீறு, உருத்திராட்சம், பஞ்சாட்சரம், திருமகள், சரஸ்வதி, பல தேவர் ஆகியோர் காக்க எனப் பத்துப் பாடல்களைக் கொண்டு காப்புப் பருவம் இலங்குகின்றது.

காஞ்சிபுரம் ஸ்ரீ சிதம்பர முனிவர் பாடியுள்ள ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுள் க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழ் நூலில், விஷ்ணு, பரமசிவம், உமையம்மை, விநாயகர் வயிரவர், வீரபத்திரா, பிரமன், காளி, முப்பத்து முக்கோடி தேவர்கள் ஆகிய பத்துத் தெய்வங்கள் காக்க எனப் பத்துப் பாடல்களைக் கொண்டு காப்புப் பருவம் திகழ்கின்றது.

அந்தகக் கவி வீரராகவ முதலியார் இயற்றிய சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் நூலில் திருமால், வன்மீகநாதர், முத்துவாளி அம்மையார், கங்காதேவி, சித்தி விநாயகர், சரவணப் பொய்கை, வேலாயுதம், வைரவக்கடவுள், கார்த்திகைத்தாயர், பிரணவப் பொருள் ஆகிய இவர்கள் காக்க எனப் பத்துப் பாடல்களுடன் காப்புப் பருவம் அமைந்துளது.

திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் தாம்பாடியுள்ள சேக்கிழார் பிள்ளைத் தமிழ் நூலின் காப்புப் பருவத்தில் தெய்வங்கள் எதனையும் காப்புத் தெய்வமாக வைத்துப் பாடாமல், சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியுள்ள திருத்தொண்டத் தொகையில் அமைந்த நாயன்மார்கள் அனைவரும் காக்க என்ற முறையில், அத்திருத்தொண்டத் தொகையில் உள்ள பதினொரு பாடல்களின் முதல் குறிப்புக்களையே தலைப்பாகக் கொண்டு பதினொரு பாடல்களைப் பாடி அமைத்துள்ளனர். திரு பிள்ளை அவர்களே திருவாவடுதுறை ஸ்ரீ அம்பலவாண தேசிகர்மீது பாடியுள்ள பிள்ளைத் தமிழிலும் காப்புப்பருவ அமைப்பினைப் பாட்டியல் இலக்கணிகள் கூறும் அமைப்பில் கூறாது, திருநந்திதேவர், சனற்குமார முனிவர், சத்தியஞான தரிசினிகள் பரஞ்சோதி முனிவர், அருள்நந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்த சிவாசாரியார், உமாபதி சிவாசாரியார், அருணமச்சிவாயர், சித்தர் சிவப்பிரகாசர். நமச்சிவாய மூர்த்திகள் முதலிய பதினால்வர் ஆகிய சுத்தாத்துவித சைவ சித்தாந்த ஆசாரிய பெருமக்களையே காப்புக் கடவுளராக அமைத்துப் பதினொரு பாடல்களை அமைத்துள்ளனர்.

பகழிக்கூத்தர் தமது திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ் நூலின் காப்புப் பருவத்தில் திருமால், சிவபெருமான், உமையவள், கணபதி கலைமகள், அரிகரபுத்திரன், பகவதி, ஆதித்தர், முப்பத்து முக்கோடி தேவர்கள் ஆகியோர் முருகனைக் காக்க எனக் கூறியுள்ளனர்.

கவிராச பண்டாரத்தையா அவர்கள் இலஞ்சி வேலவன் மீது திருமலை முருகன் பிள்ளைத் தமிழ் பாடியுள்ளனர். அப் பிள்ளைத் தமிழ்க் காப்புப் பருவத்தில் திருமால், சிவபெருமான், உமையம்மை, உச்சிப் பிள்ளையார், திருமகள், நாமகள், பிரமன், காளி, வள்ளி, தெய்வயானை, கன்னிமார், சத்தமாதர், வீரபத்திரர், வைரவர் தேவதைகள், அட்ட வசுக்கள், ஏகாதசருத்திரர் அசுவனி தேவதைகள், சந்திரன் ஆதித்தர் பதினெண்கணம், சத்த ரிஷிகள் ஆகியோர்க்கு வணக்கம் கூறிப் பத்துப் பாக்களைப் பாடியுள்ளனர்.

திரு சொக்கலிங்க ஐயா அவர்கள் பாடியுள்ள திருநாவுக்கரசர் பிள்ளைத் தமிழின் காப்புப் பருவத்தில் சிவபெருமான், உமாதேவியார், விநாயகர், சுப்பிரமணியர், திலகவதியார், சம்பந்தர், வாகீசர், சுந்தரர், மணிவாசகர், சண்டேசர் அப்பரைக் காக்க எனக் காப்புப் பருவத்தைப் பத்துப் பாடல்களில் பாடியுள்ளனர். (ஈண்டு வாகீசர் என்பவர் திருநாவுக்கரசர் முன் பிறவியில் வாகீச முனிவராக இருந்த திருவுருவத்தினர் ஆவார்.)

திரு சொக்கலிங்க ஐயா அவர்கள் தாம் பாடிய சுந்தரமூர்த்தி பிள்ளைத் தமிழின் காப்புப் பருவத்தில், சேக்கிழார் பிள்ளைத் தமிழ்க்குக் காப்புக் கடவுளராகச் சுந்தரர் குறிப்பிட்டுள்ள நாயன்மார் அமைந்திருப்பது போலச் சைவ நாயன்மார்களையே காப்புக் கடவுளராக அமைத்துக் காப்புப் பருவத்தை முடித்துள்ளனர்.

சாமி கவிகாளருத்திரர் பாடிய அழகர் பிள்ளைத் தமிழில் பழிச்சினர் பரவல் என்னும் தலைப்பின் கீழ் ஆழ்வார்களையும் எம்பெருமானார் வேதாந்ததேசிகர், மணவாளமா முனிவர் ஞானாசிரியர், அடியார்கள் மீது பாடல்களைப் பாடிப் பின் காப்புப் பருவத்தில் பதினொரு பாடல்களையும் பாடியுள்ளனர்.

இன்னோரன்ன முறைகளைக் காணும்போது காப்புப் பருவ அமைப்பு, அவ்வவ் ஆசிரியர்களின் மனப்போக்கிற்கு அமையப் பாடப்படும் என்பது புலனாதல் காண்க.

ஈண்டுச் சில இன்றியமையாக் குறிப்புக்களையும் உணர்த்துதல் நன்று. பிள்ளைத் தமிழ் நூல்கள் பெரும்பாலும் அகவல் விருத்தத்தால் அமைந்துள்ளன. பாட்டியல்காரர்கள் வகுப்பாலும் அமையலாம் என்கின்றனர். வகுப்பு என்பதும் விருத்தமே. ஆனல் இஃது ஓர் அடியில் பற்பல சீர்கள் அமையப் பாடப்படும். ஒரு வகுப்பின் கால் அடியே ஒரு தனிப் பாட்டுப் போலக் காணப்படும். அவ்வகுப்புப் பாடல்களைக் காண விழைவார் அருணகிரியார் வாக்காக உள்ள வகுப்பில் காணலாம்.

திரைக்கடலை உடைத்துநிறை புனல்கடிது
குடித்துடையும் உடைப்படைய அடைத்துதிர
நிறைத்துவிளை யாடும்
திசைக்கிரியை முதல்குலிசன் அறுத்தசிறை
முளைத்ததென முகட்டினிடை பறக்கஅற
விசைத்ததிர ஓடும்
சினத்தவுணர் எதிர்த்தாண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும்
திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை
விருத்தன்என துளத்தில்உறை கருத்தன்மயில்
நடத்துகுகன் வேலே.

இது வேல் வகுப்பு. மேலே காட்டிய செய்யுள் ஒரு முழுச் செய்யுள் அன்று. ஒரு செய்யுளின் நான்கடிகளுள் ஓர் அடியாகும். இது முழுச் செய்யுளின் ஈற்றடி.

வகுப்புப் பாவால் பாடப்பட்ட பிள்ளைத் தமிழ் நூல்கள் எதுவும் கண்ணுக்குத் தென்பட்டிலது என்றாலும், சிற்சில பிள்ளைத் தமிழ் நூல்களில் வகுப்புப்போன்ற பாடல்கள் காப்புப் பருவத்தில் அமைந்திருப்பதைக் காணலாம்.

எடுத்துக்காட்டிற்குக் கூறவேண்டுமானல் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழில் உள்ள சிதம்பரேசர் பற்றிய பாடலையும், சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்க் காப்புப் பருவத்தில் கங்காதேவிமீது பாடப்பட்ட பாட்டையும்

திருஞானசம்பந்தர்பிள்ளைத் தமிழ்க் காப்புப் பருவத்தில் திருநீறு, சிவன் சத்தி பற்றிய பாடல்களையும், அமுதாம்பிகை பிள்ளைத் தமிழின் காப்புப் பருவத்தில் சிவபெருமான், முப்பத்து முக்கோடி தேவர்கள் பற்றிய பாடல்களையும், மங்களாம்பிகை பிள்ளைத் தமிழில் காப்புப் பருவத்தில் வரும் அமுதகும்பேசர் பற்றிய பாடலையும், பெருந்திருப் பிராட்டியார் பிள்ளைத் தமிழில் வரும் காப்புப் பருவத்தில், அழைத்து வாழ்வித்த பெருமான் பற்றிய பாடலையும் காட்டலாம்.

பெண்ணிற்குரிய சிறப்புப் பருவங்களாகிய கழங்கு அம்மானை, ஊசல் பருவங்கள் மூன்றனுள் அம்மானை, ஊசல் அமைந்த பருவங்களே அமையப் பிள்ளைத் தமிழ் நூல்கள் பாடப்பட்டுள்ளன. கழங்கு பருவத்திற்கு ஈடாகப் பெண்பால் பிள்ளைத் தமிழ் நீராடல் பருவம் அமையப் பாடப்பட்டுள்ளது.

நச்சினார்க்கினியர், ''குழவிமருங்கின் கிழவதாகும்'' என்னும் தொல்காப்பிய நூற்பாவின் விளக்க உரையின் ஆண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய பருவங்களையே சுட்டிக் காட்டினர். பெண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய ஈற்று மூன்று பருவங்களைக் குறித்திலர். இதனால் அவர் காலத்தில் பெண்பால் பிள்ளைத் தமிழ் நூல் பத்துப் பருவங்கள் உள்படப் பாடப்படவில்லை என்று ஒருவாறு ஊகிக்கலாம்.

பெண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய கரு நமது பழைய இலக்கியங்களில் உண்டு என்பதை மறக்கக்கூடாது. சிலப்பதிகாரம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு நூல். அந்நூலில் அம்மானை, ஊசல் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

அம்மானை தம்கையில் கொண்டங் கணிஇழையார்
தம்மனையில் பாடும் தகையேல்ஓர் அம்மானை
தம்மனையில் பாடும் தகைமைஎலாம் தார்வேந்தன்
கொம்மை வரிமுலைமேல் கூடவே அம்மானை
கொம்மை வரிமுலைமேல் கூடில் குலவேந்தன்
அம்மென் புகார்நகரம் பாடேலோர் எம்பாவாய்

என்பது அம்மானைப் பருவத்துற்குரிய பாடல்.

வன்சொல் யவனர் வளநாடு வன்பெருங்கல்
தென்குமரி ஆண்ட தெருவில் கயல்புலியான்
மன்பதைகாக் கும்கோமான் மன்னன் திறம்பாடி
மின்செய் இடைநுடங்க ஆடாமோ ஊசல்
விறல்வில் பொறிபாடி ஆடாமோ ஊசல்

என்பது ஊஞ்சல் பருவக் குறிப்பை உணர்த்தும் பாடல்.

கி. பி. நான்காம் நூற்றுண்டினரான மாணிக்கவாசகர் திருவாசகத்திலும் அம்மானைப் பருவம், ஊசல் பருவக் குறிப்புக்கள் உள்ளன.

கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டா தனஎல்லாம் காட்டிச்சிவம் காட்டித்
தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாமேலை வீடெய்த
ஆட்டான் கொண்டாண்டவா பாடுதுங்காண் அம்மானாய்

என்றும்,

சீரார் பவளங்கால் முத்தம் கயிறாக
ஏராரும் பொற்பலகை ஏறி இனிதமர்ந்து
நாரா யணன்அறியா நாள்மலர்த்தாள் நாயடியேற்
கூராகத் தந்தருளும் உத்தர கோசமங்கை
ஆரா அமுதின் அருள்தாள் இணைபாடிப்
போரார் வேல்கண் மடவீர் பொன்னூசல் ஆடாமோ

என்றும் வருதல் காண்க.

கி. பி. ஏழாம் நூற்றுண்டினரான திருஞானசம்பந்தரும் பெண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய பருவக் குறிப்புக்களைத் தமது திருப்பதிகங்களில் குறிப்பிட்டுள்ளனர்.

பெருந்தடங்கண் செந்துவர்வாய்ப் பீடுடைய
மலைச்செல்வி பிரியா மேனி
அருந்தகைய சுண்ணவெண்நீ றலங்கரித்தான்,
அமரர்தொழ அமரும் கோயில்

தருந்தடக்கை முத்தழலோர் மனைகள்தொறும்
இறைவனது தன்மை பாடிக்
கருந்தடங்கண் ணார்கழல்பந் தம்மானை
பாட்டய ரும்கழு மலமே.

என்ற திருப்பாடலைக் காண்க.

பெண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய பத்துப் பருவங்களும் அமைந்த நூலாகப் பாட்டியல் இலக்கணத்துக்குட்பட்டு வந்த நூல்கள் பலவாகும். அந்நூல்கள் பின்னர்க் குறிக்கப் படும்.

இனி ஆண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய குறிப்புக்கள் சங்க காலத்தில் உண்டா என்பதையும் ஆய்தல் வேண்டும். அங்ஙனம் ஆய்ந்தபோது பட்டினப்பாலையில் வரும்,

''பொன்கால் புதல்வர் புரவியின் றுருட்டும்
முக்கால் சிறுதேர்''

என்னும் அடிகள், சிறுதேர்ப் பருவக் குறிப்பை அறிவிக் கின்றன.

சிறுதேர்ப் பருவக் குறிப்புப் பட்டினப் பாலையில் அறிய வருவதுபோல், கலித்தொகையில் சிற்றில் சிதைத்தல் ஆகிய பருவ நிகழ்ச்சி காணப்படுகிறது.

''சுடர்த்தொடீஇ கேளாய் தெருவில்நாம் ஆடும்
மணல்சிற்றில் காலில் சிதையா அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யும் சிறுபட்டி''

என்னும் குறிஞ்சிக் கலி அடிகளைக் காணவும்.

சங்ககாலத்திற்குப் பிறகு இடைப்பட்ட காலமாகிய தேவாரக் காலத்தில் கி.பி. ஒன்பதாவது நூற்றாண்டினராகக் கருதப்படுகின்ற அதிரா அடிகள் என்பார், மூத்தப் பிள்ளை யார் மும்மணிக்கோவை என்னும் நூலைப் பாடியுள்ளனர். அது சைவத் திருமுறையில் ஒன்றான பதினோராம் திருமுறைத் தொகுப்பில் அமைந்துள்ளது. அம் மும்மணிக்கோவையில்,

நிலம்துளங்க மேருத் துளங்க நெடுவான்
தலம்துளங்கச் சப்பாணி கொட்டும்—கலந்துளம்
கொள்
காமாரி ஈன்ற கருங்கைக் கடதடத்து
மாமாரி ஈன்ற மணி

இக்கயம்கொள் மூவலயம் சூழ்ஏழ் தடவரைகள்
திக்கயங்கள் பேர்ந்தாடச் செங்கீரை—புக்கியங்கு
தேனுடை வண்டாடச் செங்கீரை ஆடின்றே
வானுடன் பெற்ற வரை

என்ற இரு செய்யுட்கள்வழி சப்பாணிப் பருவம், செங்கீரைப் பருவக் குறிப்புக்கள் பொருந்தியிருப்பதை உணரவும்.

அதிரா அடிகளின் காலத்தவரான பெரியாழ்வார் பாடியுள்ள திருமொழியிலும் பிள்ளைத் தமிழ்ப் பருவங்களுக்குரிய குறிப்புக்கள் உண்டு. அவை பின்வரும் பாடல்களால் நன்கு தெரிந்து கொள்ளலாம்.

"மாணிக்கம் கட்டி வயிரம் இடைகட்டி
ஆணிப்பொன் னுல்செய்த வண்ணச் சிறுதொட்டில்
பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்
மாணிக் குறளனே தாலேலோ"
வையம் அளந்தானே தாலேலோ

என்சிறுக் குட்டன் எனக்கோர்
இன்னமு தெம்பிரான்
தன்சிறுக் கைகளால் காட்டிக்
காட்டி அழைக்கின்றான்
அஞ்சன வண்ணனோ டாடல்
ஆட உறுதியேல்
மஞ்சில் மறையாதே மாமதீ
மகிழ்ந் தோடிவா"

செங்கம லக்கழலில் சிற்றிதழ் போல்விரலில்
சேர்திகழ் ஆழிகளும் கிண்கிணி யும்அரையில்
தங்கிய பொன்வடமும் தாளநன் மாதுளையின்
பூவொடு பொன்மணியும் மோதிர முஞ்சிறியும்

மங்கல ஐம்படையும் தோள்வளை யும்குழையும்
மகரமும் வாளிகளும் சுட்டியும் ஒத்திலக
எங்கள் குடிக்கரசே ஆடுக செங்கீரை
ஏழுல கும்உடையாய் ஆடுக செங்கீரை

புட்டியில் சேறும் பொழுதியும் கொண்டுவந்து
அட்டி அமுக்கி அகம்புக் கறியாமே
சட்டித் தயிறும் தடாவினில் வெண்ணெயும்உண்
பட்டிக்கன் றேகொட்டாய் சப்பாணி
பற்பநா பாகொட்டாய் சப்பாணி

தொடர்சங் கிலிகை சலார்பிலார் என்னத்
தூங்குபொன் மணிஒலிப்ப
படுமும் மதப்புனல் சோர வாரணம்
பையநின் றூர்வதுபோல்
உடன்கூடிக் கிண்கிணி ஆரவா ரிப்ப
உடைமணி பறைகறங்க
தடந்தாள் இணைகொண்டு சார்ங்க பாணி
தளர்நடை நடவானே

கன்னிநன் மாமதில் சூழ் பூம்பொழில்
காவிரி தென்ன ரங்கம்
மன்னிய சீர்மது சூதனு கேசவா
பாவியேன் வாழ்வு கந்து
உன்னை இளங்கன்று மேய்க்கச் சிறுகாலே
ஊட்டி ஒருப் படுத்தேன்
என்னின் மனம்வலி யாள்ஒரு பெண்இல்லை
என்குட்ட னேமுத் தந்தா

தீயபுந்திக் கஞ்சன்உன்மேல்
சினமுடையன் சோர்வுபார்த்து
மாயம்தன்னால் வலைப்படுக்கில்
வாழகில்லேன் வாசுதேவா
தாயர்வாய்ச்சொல் கருமம்கண்டாய்
சாற்றிச்சொன்னேன் போகவேண்டா
ஆயர்பாடிக் கணிவிளக்கே
அமர்ந்துவந்தென் முலையுணாயே

எண்ணெய்க் குடத்தை உருட்டி
இளம்பிள்ளை கிள்ளி எழுப்பிக்
கண்ணைப் புரட்டி விழித்துக்
கழகண்டு செய்யும் பிரானே
உண்ணக் கனிகள் தருவன்
ஒலிகடல் ஓதநீர் போலே
வண்ணம் அழகிய நம்பீ
மஞ்சனம் ஆடநீ வாராய்

கருஉடை மேகங்கள் கண்டால்
உன்னைக்கண் டால்ஒக்கும் கண்கள்
உருஉடை யாய்உல கேழும்
உண்டாக வந்து பிறந்தாய்
திருவுடை யாள்மண வாளா
திருவரங் கத்தே கிடந்தாய்
மருவி மணம்கமழ் கின்ற
மல்லிகைப் பூச்சூட்ட வாராய்

பல்லாயி ரவர்இவ் ஊரில்
பிள்ளைகள் தீமைகள் செய்வார்
எல்லாமுன் மேல்அன் றிப் போகா
தெம்பிரான் நீஇங்கே வாராய்
நல்லார்கள் வெள்ளறை நின்றாய்
ஞானச் சுடரேஉன் மேனி
சொல்லார வாழ்த்திநின் றேத்திச்
சொப்படக் காப்பிட வாராய்

வருக வருக வருக இங்கே
வாமன நம்பீ வருக இங்கே
கரிய குழல்செய் யவாய்மு கத்துக்
காகுத்த நம்பீ வருக இங்கே
அரியன் இவன்எனக் கின்று நங்காய்
அஞ்சன வண்ணு அசல கத்தார்
பரிபவம் பேசத் தரிக்க கில்லேன்
பாவியேனுக் கிங்கே போத ராயே

முற்றிலும் தூதையும் முன்கைம்மேல் பூவையும்
சிற்றில் இழைத்துத் திரிதரு வோர்களை
பற்றிப் பறித்துங்கொண் டோடும் பரமன் தன்
நெற்றி இருந்த வாகா ணீரே
நேரிழையீர் வந்து காணீரே

என்னும் இப்பாடல்களின் வழி தாலப் பருவம், அம்புலிப் பருவம், செங்கீரைப் பருவம், சப்பாணிப் பருவம், வருகைப் பருவம், முத்தப் பருவம், சிற்றில் பருவம் அமைந்திருத்தலை உணர்ந்துகொள்ளலாம்.

கி. பி. 8-ஆம் நூற்றாண்டினரான குலசேகராழ்வாரது பெருமாள் திருமொழியில் தாலப் பருவக் குறிப்புக் காணப் படுகிறது.

பாராளும் படர்செல்வம் பரதநம்பிக் கேஅருளி
ஆராஅன் பிளையவனோ டருங்கானம் அடைந்தவனே
சீராளும் வரைமார்பா திருக்கண்ண புரத்தரசே
தாராளும் நீள்முடிஎன் தாசரதீ தாலேலோ

என்ற பாடலைப் பார்க்கவும்.

கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியின ரான சேக்கிழார் பெருமானார், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பிறப்பின் வளர்ச்சியைக் கூறும்போது பிள்ளைப் பிரபந்தங்களுக்குரிய பருவங்கள் பத்தனுள் ஏழு பருவங்களைக் குறிப்பிட்டுள்ளனர்.

ஆறுலவும் செய்யசடை ஐயர்அரு ளாலே
பேறுலகி னுக்கென வரும்பெரி யவர்க்கு
வேறுபல காப்புமிகை என்றவை விரும்பார்
நீறுதிரு நெற்றியில் நிறுத்திநி றைவித்தார்

தாயர்திரு மடித்தலத்தும் தயங்குமணித்த விசினிலும்
தூயசுடர்த் தொட்டிலினும் தூங்குமலர்ச் சயனத்தும்
சேயபொருள் திருமறையும் தீந்தமிழும் சிறக்கவரு
நாயகனைத் தாலாட்டு நலம்பல்பா ராட்டினர்

வரும்முறைமைப் பருவத்தில் வளர்ப்புகலி பிள்ளையார்
அருமறைகள் தலைஎடுப்ப ஆண்டதிரு முடிஎடுத்துப்
பெரும்மூவர் தொண்டல்லால் பிறிதிசையோம் என்பார்
திருமுகமண் டலம்அசையச் செங்கீரை ஆடினர் [போல்

நாமறியோம் பரசமயம் உலகிர்எதிர் நடவாது
போமகல என்றங்கை தட்டுவதும் புனிதன்பால்
காமறுதா ளம்பெறுதற் கொத்துவதும் காட்டுவபோல்
தாமரைச்செங் கைகளினல் சப்பாணி கொட்டினர்

சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையரும் தாதியரும்
காழியர்தம் சீராட்டே கவுணியர்கற் பகமேஎன்
றேழிசையும் பலகலையும் எவ்வுலகும் தனித்தனியே
வாழவரும் அவர்தம்மை வருகவரு கெனஅழைப்ப

சிறுமணித்தேர் தொடர்ந்துருட்டிச் செழுமணல்சிற் றில்களிழை
நறுநுதல்பே தையர்மருங்கு நடந்தோடி அடர்ந்தழித்தும்
குறுவியர்ப்புந் துளிஅரும்பக் கொழும்பொடிஆ டியகோலம்
மறுகிடைப்பேர் ஒளிபரப்ப வந்துவளர்ந் தருளினர்

என்னும் இப்பாடல்களில், காப்புப் பருவம், தாலாட்டுப் பருவம், செங்கீரைப் பருவம், சப்பாணிப் பருவம், வருகைப் பருவம், சிறுதேர்ப்பருவம், சிற்றில் பருவங்கள் பொருந்தி இருத்தலை நோக்குக. முத்தப்பருவக் குறிப்பினைக் கண்ணப்ப நாயனர் புராணத்தில் அமைத்துள்ளனர்.

பொருபுலிப் பார்வைப் பேழ்வாய்
முழைஎனப் பொற்கை நீட்டப்
பரிவுடைத் தந்தை கண்டு
பைந்தழைக் கைக்கொண் டோச்ச
இருசுடர்க் குறுகண் தீர்க்கும்
எழில்வளர் கண்ணீர் மல்கி
வருதுளி முத்தம் அத்தாய்
வாய்முத்தம் கொள்ள மாற்றி

என்பது அந்தப் பருவக் குறிப்புள்ள பாடல்.

இதுவரையில் கூறப்பட்டுவந்த கருத்துக்களால், பிள்ளைத் தமிழ் பாடும் வழக்கம் சங்ககாலம் முதல் இடைப்பட்ட காலமாகிய பெரிய புராணம் காலம் வரையில் இருந்து வந்தது என்பது பெறப்படுகிறது. ஆனல், பிள்ளைத் தமிழ்ப் பருவங்கள் பத்தும் அமையத் தனி நூலாகப் பாடப்பட்ட காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டு முதல் என்பது ஒட்டக்கூத்தர் குலோத்துங்கள் மீது பாடிய பிள்ளைத்தமிழ் மூலம் தெரியவருகிறது. இதற்குப் பின்பே பாட்டியல்காரர்கள் இந்த வகையான நூலுக்கு இலக்கணம் வகுக்கப்புகுந்தனர் போலும்! இல்விலக்கணங்களால் பிள்ளைத் தமிழ் நூல்கள் பல தோன்றலாயின.

கி, பி. பன்னிரண்டாம் நூற்றுண்டில் 'ஒட்டக்கூத்தர் இயற்றிய **குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழே** பிள்ளைத் தமிழ்க்குரிய எல்லாப் பருவங்களும் அமைந்த முதல் பிள்ளை தமிழ்நூல் என்னலாம். அதற்கு அடுத்தாற்போல் கொடிக் கொண்டான் பெரியான் அதிச்சதேவன் பாடிய காங்கேயன் பிள்ளைத் தமிழைக் கூறலாம். இதற்கு அடுத்தாற்போல் பழைமையானதாக அந்தகக் கவி வீரராகவ முதலியார் பாடிய சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ் நூலைக் காட்டலாம், இது கி. பி. 1654 ஆம் ஆண்டு பிள்ளைத்தமிழ் நூல். ஏனைய ஆணபால் பிள்ளைத் தமிழ் நூல்களும் பெண்பால் பிள்ளைத் தமிழ் நூல்களும் மேலே காட்டிய பிள்ளைத் தமிழ் நூல்களுக்குப் பிற்பட்டவையே.

இனி இதுவரைத் தெரிய வந்துள்ளபிள்ளைத் தமிழ் நூல்களையும் பார்ப்போமாக.

| **நூலின் பெயர்** | **ஆசிரியர்** |
|---|---|
| கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் | —சிவஞான முனிவர் |
| சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ் | —கச்சியப்பமுனிவர் |
| தேசிய விநாயகர் பிள்ளைத்தமிழ் | —கணபதி ஆச்சாரி |

(இம்முன்றும் விநாயகப் பெருமான் மீது பாடப் பட்டவை.)

| | |
|---|---|
| சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ் | —அந்தகக்கவி வீரராகவ முதலியார் |
| செப்பறைப் பிள்ளைத் தமிழ் | —சுப்பிரமணியக் கவிராயர் |
| க்ஷேத்திரக் கோவைப்பிள்ளைத் தமிழ் | —காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் |
| திருப்போரூர் முருகன் பிள்ளைத் தமிழ் | —திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் |
| திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ் | —பகழிக் கூத்தர் (இவர் வைஷ்ணவ மதத்தினர்) |
| திருமலை முருகன் பிள்ளைத் தமிழ் | —கவிராசபண்டாரம் |
| திருவிடைக்கழி முருகன் பிள்ளைத் தமிழ் | —மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை |
| திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ் | —மார்க்கசகாயர் |
| நல்லூர் சுப்பிரமணியர் பிள்ளைத் தமிழ் | —அப்புகுட்டி ஐயர் |
| முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ் | —குமரகுருபரர் |
| தணிகைப் பிள்ளைத் தமிழ் | —கந்தப்பய்யர் |
| பழனிப் பிள்ளைத் தமிழ் | —தண்டாயுத சுவாமி |
| திருத்தணிகைப் சிங்காரவேலர் பிள்ளைத் தமிழ் | —வ. சு. செங்கல்வராயப் பிள்ளை |
| திருமயிலைப் பிள்ளைத் தமிழ் | —தாண்டவராயர் |

(இப்பதினான்கும் முருகப் பெருமான்மீது பாடப் பட்டவை.)

| | |
|---|---|
| அழகர் பிள்ளைத் தமிழ் | —சாமி கவிகாளருத்திரர் |
| நவநீத கிருட்டினன் பிள்ளைத் தமிழ் | —அண்ணாமலை ரெட்டியார் |
| வேங்கடேசர் பிள்ளைத் தமிழ் | —தெய்வநாயகர் |
| வைகுந்தநாதன் பிள்ளைத் தமிழ் | —வரதராசப் பிள்ளை |

(இந்நான்கும் திருமால்மீது பாடப்பட்டவை)

திருஞானசம்பந்தர் பிள்ளைத் தமிழ் —மாசிலாமணி தேசிகர்
திரு சம்பந்தர் பிள்ளைத் தமிழ் — காரைக்குடி சொக்கலிங்க ஐயா
திரு ஞானசம்பந்தர் பிள்ளைத் தமிழ் —தணிகைமணி செங்கல்வ ராயப் பிள்ளை
அப்பர் பிள்ளைத் தமிழ் —மு. கோ. இராமன்
அப்பர் பிள்ளைத் தமிழ் காரைக்குடி சொக்கலிங்க ஐயா
சுந்தரர் பிள்ளைத் தமிழ் — ,,
மாணிக்கவாசகர் பிள்ளைத் தமிழ்— ,,
(இவ்வேழும் சைவ சமயாசாரியர்கள்மீது பாடப்பட்டவை)
மாறன் பிள்ளைத் தமிழ் —இரத்தினக் கவிராயர்
(வைணவ ஆசிரியராம் நம்மாழ்வார்மீது பாடப்பட்டது)
சேக்கிழார் பிள்ளைத் தமிழ் —மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை
(சைவப் புலவர்மீது பாடப்பட்டது)
சிவஞான பாலய்ய சுவாமிகள் பிள்ளைத் தமிழ் —சிவப்பிரகாச சுவாமிகள்
(வீர சைவர்மீது பாடப்பட்டது)
திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் பிள்ளைத் தமிழ் —மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை
(ஆதீனகர்த்தர்மீது பாடப்பட்டது)
அநுமார் பிள்ளைத் தமிழ் —அருணாசலக் கவிராயர்
(இராம பக்தன்மீது பாடப்பட்டது)
குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ் —ஒட்டக்கூத்தர்
(அரசன்மீது பாடப்பட்டது)
சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத் தமிழ்
(உபகாரிமீது பாடப்பட்டது)

இவைகளே அன்றி அதிச்சதேவன் பாடிய காங்கேயன் பிள்ளைத் தமிழ், ஞானப்பிரகாசர் பாடிய செங்குந்தர்பிள்ளைத் தமிழ், குற்றாலக் குழந்தை முதலியார் பாடிய இராகவர் பிள்ளைத் தமிழ் நூல்களும் உண்டு. அண்மையில் தவத்திரு மறைமலை அடிகளார்மீது பாடப்பட்ட பிள்ளைத் தமிழும் உண்டு. இதன் ஆசிரியர் புதுமைக் கவிஞர் அரங்கசாமி என்பவர்.

இனிப் பெண்பால் பிள்ளைத் தமிழ் நூல்கள் இன்ன எனப் பார்ப்போமாக.

| நூலின் பெயர் | ஆசிரியர் |
|---|---|
| மீனாட்சி அம்மன் பிள்ளைத் தமிழ் | —குமரகுருபரர் |
| அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் | —சிவஞான முனிவர் |
| காஞ்சி காமாட்சி அம்மன் பிள்ளைத் தமிழ் | —காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் |
| அகிலாண்ட நாயகி பிள்ளைத் தமிழ் | —மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை |
| சிவயோக நாயகி பிள்ளைத் தமிழ் | — ? |
| சிவகாமி அம்மை பிள்ளைத் தமிழ் | —கிருஷ்ணய்யர் |
| திரிபுரசுந்தரி பிள்ளைத் தமிழ் | —முத்துக்குமரன் |
| மங்களாம்பிகை பிள்ளைத் தமிழ் | —மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை |
| திருத்தவத்துறைப் பெருந் திருப்பிராட்டியார் பிள்ளைத் தமிழ் | —மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை |
| திருப்பெருமணநல்லூர் திருநீற்று | ,, |
| அம்மை பிள்ளைத் தமிழ் | — ,, |
| அகிலாண்ட நாயகி பிள்ளைத் தமிழ் | — ,, |
| திருஉறந்தை காந்திமதி அம்மை பிள்ளைத் தமிழ் | ,, |
| திருவதிகை வீரட்டானப் பெரிய நாயகி பிள்ளைத் தமிழ் | —சுப்பிரமணியச் செட்டியார் |
| திருவருணை உண்ணாமுலை அம்மை பிள்ளைத் தமிழ் | —சோணாசல பாரதி |
| நீலாயதாட்சி அம்மை பிள்ளைத் தமிழ் | —கிருஷ்ணசாமி உபாத்தியாயர் |
| பாகம்பிரியா அம்மை பிள்ளைத் தமிழ் | —மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை |
| மங்கையர்க்கரசியார் பிள்ளைத் தமிழ் | —நடேச கவுண்டர் |
| மங்களேஸ்வரி பிள்ளைத் தமிழ் | — ? |

| | |
|---|---|
| அளகாபுரி உமை அம்மை பிள்ளைத் தமிழ் | —தியாகராயர் |
| அறம் வளர்த்த நாயகி பிள்ளைத் தமிழ் | —தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் |
| கோமதி அம்மை பிள்ளைத் தமிழ் | —புளியங்குடிப் பிள்ளை |
| வடிவுடை அம்மன்பிள்ளைத் தமிழ் | —வீர வேலாயுத சுவாமி |
| அபயாம்பிகைப் பிள்ளைத் தமிழ் | — ? |
| கமலாலய அம்மன் பிள்ளைத் தமிழ் | — ? |
| மயிலம்மை பிள்ளைத் தமிழ் | —வைத்தியநாத தேசிகர் |
| சௌந்தர்ய நாயகி பிள்ளைத்தமிழ் | —வீர சுப்பைய சுவாமிகள் |

(இவ்விருபத்தாறும் பெண்பால் பிள்ளைத் தமிழ் நூல்கள்)

கிறித்தவச் சமயத்தைச் சார்ந்த சாமிநாதப் பிள்ளை அவர்கள், சாமிநாதன் பிள்ளைத் தமிழ் என்ற பெயரால் ஒரு நூலைப் பாடியுள்ளனர்.

முஸ்லீம் புலவர்கள் தம் மதச் சார்பில் பதினான்கு பிள்ளைத் தமிழ் நூல்களைப் பாடியுள்ளனர்.

| நூலின் பெயர் | ஆசிரியர் |
|---|---|
| நபிநாயகம் பிள்ளைத் தமிழ் | —செய்யது அனபியாசாகிப் |
| றசூல் நாயகம் பிள்ளைத் தமிழ் | —மீரான் சாகிப் புலவர் |
| நத்ஹறொலி ஆண்டவர்கள் பிள்ளைத் தமிழ் | —பிச்சை இபுராகிம் புலவர் |
| நபிநாயகம் பிள்ளைத் தமிழ் | —பீர்முகமதுப் புலவர் |
| முகய்யித்தீன் ஆண்டவர் பிள்ளைத் தமிழ் | —ஜவாது புலவர் |
| முகய்யித்தீன் பிள்ளைத் தமிழ் | —செய்யிது முகய்தீன் கவிராஜர் |
| நாகூர்ப் பிள்ளைத் தமிழ் | —ஷாஹுல் ஹமீதுப் புலவர் |
| நாகூர்ப் பிள்ளைத் தமிழ் | —ஆரிபு நாவலர் |
| நாகூர்ப் பிள்ளைத் தமிழ் | —பிச்சை இபுராகீம் புலவர் |

முகய்யித்தீன் ஆண்டவர் காரணப் பிள்ளைத் தமிழ் —அப்துல் காதிறுப் புலவர்

செய்குதாவூது வலியுல்லா பிள்ளைத் தமிழ் —சொர்ண கவி நயினு முகம்மது பாவா புலவர்

நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழ் —செய்குமீரான் புலவர்

கோட்டாற்றுப் பிள்ளைத் தமிழ் —செய்குதம்பிப் பாவலர்

பாத்திமா நாயகி பிள்ளைத் தமிழ்—செய்குமீரான் புலவர்

இவ்வாறு பற்பல பிள்ளைத் தமிழ் நூல்கள் தமிழ் மொழியில் பல்கியுள்ளன. சைன பௌத்த புலவர்கள் பிள்ளைத் தமிழ் நூல்களைப் பாடி இருப்பதாக அறிதற்கு இல்லை.

இதுவரை கூறப்பட்டு வந்த பிள்ளைத் தமிழ்க்குரிய இலக்கணங்களாலும், நூற்களாலும் புலவர்கள் தாம் தாம் விரும்பிய தெய்வங்கள், சமயா சாரியர்கள், புலவர் பெருமக்கள், ஆதீனகர்த்தர், அரசர், உபகாரிகள், அவர் அவர்கட்கு உகந்தவர்கள் ஆகியோர்மீது பிள்ளைக் கவிபாடுவர் என்பது புலனாகிறது. மேலே, சுட்டப்பட்டவர்களைக் குழந்தையாக உளம் கொண்டு கற்பனை பல அமையப்படுவது இப்பிள்ளைத் தமிழ்க் கவி ஆகும். பாட்டுடைத் தலைவர்கள் பிள்ளைகளாகப் பாவிக்கப்பட்டவர்கள் அல்லரோ? அவர்களது அரும்பெருஞ் செயல்களைத் தம் குழந்தைப் பருவத்தில் எப்படிச் செய்திருக்க முடியும் என்ற ஐயம் ஏற்படல் கூடாது. அப்பாட்டுடைத் தலைவர்கள் செயற்கரும் செயல்களைக் குறித்துப் பிள்ளைக் கவியில் பாடவில்லையாயின், நூல் என்னும் அமைப்புக்குள் அமையாமல், வெறும் பருவங்கள் மட்டும் அமைந்திருக்கும். ஆகவே, இதனை உளம் கொள்ளுதல் வேண்டும். குழந்தையாகக் கொண்டது பாவனையே அன்றி வேறன்று.

ஈண்டு ஓர் இன்றியமையாத குறிப்பினை உளம் கொள்ளுதல் வேண்டும். இதுவரையில் பாடப்பட்ட பிள்ளைத் தமிழ் நூல்களை ஒருவாறு அறிந்தனம். இத்தனைப் பிள்ளைத் தமிழ்

களுள் ஒன்றிலாவது முழுமுதற் பரம் பொருளாம் முக்கண் மூர்த்தியின்மீது பாடப்பட்டதாகத் தெரிந்திலது. காரணம், இறைவன் யாண்டேனும் பிறந்து வளர்ந்து செயல் புரிந்த தாகக் காணக்கிடைக்காமையே ஆகும். அவன் பிறவாயாக் கைப் பெரியோன். ஆனால், திருவிளையாடற்புராணத்துள் விருத்தகுமாரபாலரான படலத்தில் குழந்தையாகக் காட்சி அளித்தனனே எனில், அந்த நேரத்திற்கு அவ்வாறு காட்சி அருளினனே அன்றித் தொடர்ந்து வளர்ந்து பெற்றோர் கட்கோ, மற்றோர்கட்கோ அவன் இன்பம் ஊட்டியதை ஆண்டுக் காண்கின்றோம் இல்லை. ஆகவே, பரமன்மீது அன்றும், இன்றும் பிள்ளைத் தமிழ் நூல் பாடப்படவில்லை என்பதை உளத்தில் கொள்ளவும். இனியும் எவரும் பாடார்.

இனி அடுத்தாற்போல் பிள்ளைத் தமிழ் நூலில் அமைந் துள்ள பத்துப் பருவங்களைப்பற்றிய விளக்கத்தினைக் காண் போமாக. பத்துப் பருவங்கள் இன்னின்ன என்பதும் அவற்றுள் ஆண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய பருவங்கள் இவை, பெண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய பருவங்கள் இவை என்பனவும் முன்பே குறிக்கப்பட்டன.

**காப்புப் பருவம்:** இது பிள்ளைத் தமிழ் ஆசிரியர் தாம் பாட அமைத்துக்கொண்ட பாட்டுடைத் தலைவனையோ, தலைவியையோ தெய்வங்கள் காக்க எனப் பாடும் பருவ மாகும். இது பிள்ளை பிறந்த மூன்றும் திங்களிலே கூறப் பெறும் என்பர். இரண்டாம் மாதத்தில் கூறப்பெறும் என் பாரும் உளர்.

"கலையார் செஞ்சொல் தமிழ்ப்பெருமான்
காழிப் பெருமாள் தனைக்காக்க"

—**திருஞான சம்மந்தர் பிள்ளைத் தமிழ்.**

**செங்கீரைப் பருவம்:** இது குழந்தை ங்குவா, ங்குவா என ஒலி எழுப்புவதை வேண்டும் பருவம் என்பர். கீர் எனும் மொழி, சொல் என்னும் பொருளது. நக்கீரர் என்ற பெயர்

காரணத்தையும் அறிக. குழந்தையின் மொழியாதலின், இது செங்கீரை எனப்பட்டது. ஐகாரம் சாரியை. ஆனால் பல பிள்ளைத் தமிழ் நூல்களில் குழந்தை இரு கைகளைத் தரையில் ஊன்றிக் கால்களில் ஒன்றை முட்டிக் கால் இட்டு, தரையில் ஊன்றி ஒன்றைப் பின்னோக்கி நீட்டித் தலை அசைத்து ஆடலைக் குறிப்பது செங்கீரை என்ற குறிப்புக் காணப்படுகிறது. இதனை,

மங்கல ஐம்படையும் தோள்வளை யும்குழையும்
　　மகரமும் வாளிகளும் சுட்டியும் ஒத்திலக
எங்கள் குடிக்கரசே ஆடுக செங்கீரை
　　ஏழுல கும்உடையாய் ஆடுக செங்கீரை

என்று பெரியாழ்வாரும்,

வருமுறைமைப் பருவத்தில் வளர்புகலிப் பிள்ளையார்
அருமறைகள் தலைஎடுப்ப ஆண்டதிரு முடிஎடுத்துப்
பெருமழுவர் தொண்டல்லால் பிறிதிசையோம் என்பார்போல்
திருமுகமண் டலம்அசையச் செங்கீரை ஆடினார்

எனச் சேக்கிழாரும்,

ஒருதாள் உந்தி எழுந்திரு கையும்
　　ஒருங்கு பதித்துநிமிர்ந்
தருள்பொழி திருமுகம் அசைய அசைந்தினி
　　தாடுக செங்கீரை

—முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்

என்று குமரகுருபர சுவாமிகளும்,

ஈனமக லனையதா மரைபதித் தொருதாள்
　　இருத்திஒரு தாள் எடுத்தே
ஏழ்கனி கனிந்தமுக தாமரை மலர்ந்தசைய
　　இருமணிக் குழைவில் வீசத்
தேனமர் நறுங்குதலை சீர்ப்பமங் களவல்லி
　　செங்கீரை யாடிஅருளே

—மங்களாம்பிகை பிள்ளைத் தமிழ்

எனத் திரிசிரபுரம் மகாவித்துவான், மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களும், மற்றுமுள்ளவர்களும் பாடியுள்ள பாடல்களால் தெளியலாம். இஃது ஐந்தாம் மாதத்தில் வேண்டப்படும் என்பர். இதனால் குழந்தை அசைந்தாடுவது செங்கீரை எனப்பட்டது. கீர் என்பது வட சொல். அதன் பொருள் கிளி என்பது. செம்மை என்பது அழகு என்றும் பொருள் தரும். ஆகவே, கிளி அசைந்தாடுவதுபோல ஆடுக என்று கூறினும் அமையும்.

**தாலப் பருவம்:** இது குழந்தையைத் தூங்கச் செய்யும் பொருட்டு அன்னையர், தாதியர் தம் நாக்கை அசைத்துப் பாடல் பாடும் பருவம். தால் என்பது நாக்கு. தாலாட்டுதல் நாக்கை அசைத்தல். இஃது எட்டாம் மாதச் செயல் என்பர். 'எட்டாம் திங்களில் இயல் தாலாட்டலும்'' என்று பிங்கலந்தை கூறுதல் காண்க.

சமர மயூரா குமர செயூரா
தாலோ தாலேலே

**—சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்.**

ஒரு சிலர் குழந்தையை நோக்கி, அதன் நாக்கை அசைக்குமாறு, நீட்டுமாறு வேண்டும் பருவம் என்றும் கருதுவர். அக்குறிப்பு எந்நூலிலும் காணக்கிடைத்திலது. குழந்தையை உறங்க வைக்கத் தாயர் தம் நாக்கை அசைத்தலே தாலாட்டு என்ற குறிப்பே எல்லாப் பிள்ளைத் தமிழ் நூல்களிலும் காணப்படுகிறது.

தாயர்திரு மடித்தலத்தும் தயங்குமணித் தவிசினிலும்
தூயசுடர்த் தொட்டிலிலும் தூங்குமலர்ச் சயனத்தும்
சேயபொருள் திருமரையும் தீந்தமிழும் சிறக்கவரு
நாயகனைத் தாலாட்டு நலம்பலபா ராட்டினார்

என்னும் பெரிய புராணப் பாடலைக் காண்க.

முன்னர்த் தாலாட்டுப் பருவமும் அதன்பின் செங்கீரைப் பருவமும் அமையப்படுதலும் உண்டு என்பது பெரியாழ்வார் வாக்கினாலும், சேக்கிழார் பெருமானார் மொழியினாலும்

உணர்ந்துகொள்க. இதற்கு இலக்கணமும் துணைபுரிகிறது. "செப்பரிய காப்புத்தால் செங்கீரை" என்னும் வெண்பாப் பாட்டியலைக் காண்க.

**சப்பாணிப்பருவம் :** இது குழந்தையை இருகைகளையும் சேர்த்துத் தட்டி ஓசை எழுப்புமாறு வேண்டுதல் ஆகும். இஃது ஒன்பதாம் மாத நிகழ்ச்சி. "ஒன்பதாம் திங்களில் உயர் சப்பாணியும்" என்பது பிங்கலந்தை.

"குலைகெழு தடநிறை கலைசை நகர்க்கிறை
கொட்டுக சப்பாணி"—

—**செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்**

**முத்தப் பருவம் :** இது குழந்தையை முத்தம் தருமாறு வேண்டும் பருவமாகும். இது பதினோராவது மாத நிகழ்ச்சி, "பத்தினோடு ஒன்றில் முத்தம் கூறலும்"என்பது பிங்கலந்தை. இந்தப் பருவத்தைப்பாடுவதில் புலவர்கட்டுப் பெருவிருப்பம் ஏற்படும். முத்தம் என்னும் சொல், முத்துக்களையும் வாய் முத்தையும் குறிக்கும். ஆகவே, குழந்தையை முத்தம் கேட்கும்போது, "பல்வேறு இடங்களில் தோன்றும் முத்தும், வேண்டா. உன்முத்தமே வேண்டும்" என்று கூறும்போது எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படும் என்பதை அப்பாட்டைப் படிக்கும்போதுதான் தெரியவரும்.

முத்தம்தனக்கு விலைஇல்லை முருகா முத்தம் தருகவே
முத்தம் சொரியும் கடல்அலைவாய் முருகா முத்தம்
தருகவே

—**திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்**

**வாரானைப் பருவம் :** இது குழக்தையை வருக வருக என அழைக்கும் பருவம் ஆகும். இது பன்னிரண்டாம் மாத நிகழ்ச்சி. அதாவது ஓராம் ஆண்டு நிகழ்ச்சி. இதனைப் பிங்கலத்தை நிகண்டு "ஆண்டுவரையின் ஈண்டு வருக என்றலும்" என்று கூறுகிறது. வா+ரு+ஆனை என்று இச்சொல் பிரியும். ஆனை தொழிற் பெயர் விகுதி. இது வருகைப் பருவம் என்றும் கூறப்பெறும். அதுபோது,

வா+ரு+கை என அச்சொல் பிரிக்கப்படும். ஈண்டு "கை" தொழிற்பெயர் விருதி.

மயிலின் முதுகின் உதயகுமாரன்
வருக வருக வருகவே
மகிமை தழுவு சமரபுரியன்
வருக வருக வருகவே

—திருப்போரூர் முருகப் பிள்ளைத் தமிழ்

**அம்புலிப் பருவம் :** இதுவரை குழந்தையை நோக்கி வேண்டிய பருவங்களைப் பார்த்தோம் இது குழந்தையை நோக்கி வேண்டும் பருவம் அன்று. இது சந்திரனை வேண்டும் பருவம் ஆகும் அம்புலி என்பதும், சந்திரன். இப்பருவத்தைப் பாடுவதில் புலவர்கள் தம்வல்லமையினை மிகுதியும் காட்டுதல் வேண்டும். இது குறித்தே ஔவைப் பிராட்டியார் "காசினியில் பிள்ளைக் கவிக்கம் புலிபுலியாம்" என்று குறிப்பிட்டுள்ளனர். இதற்குக் காரணம், சந்திரனைக் குழந்தையுடன் ஆடவா என்று அழைக்கும்போது சாம, பேத, தான, தண்டம் ஆகிய நால்வகை உபாயங்கள் வழி அழைத்தல் வேண்டும். இவ்வாறு அழைக்கும்போது, சந்திரனுக்கும் பாட்டுடைத்தலைவனுக்கும் தலைவிக்கும் ஒப்புமை காட்டியும் அழைக்கவேண்டும். அதாவது சிலேடை அணி அமையப் பாடுதல் வேண்டும். இவ்வாறு அமையப் பாடுதலோடு இன்றிப் பாட்டுடைத்தலைவனும், தலைவியும் பல்லாற்றாலும் சந்திரனைக் காட்டிலும் சிறந்தவர் என்பதையும் கூறிப் பாடி அமைத்தல் வேண்டும். இத்துடன் "சந்திரா பாட்டுடையாரைச் சாரின் உனக்கு இன்னின்ன நன்மைகள் உண்டாகும்" என்றும் பாடுதல் வேண்டும். இது பதினெட்டாம் மாத நிகழ்ச்சி. "மதி ஈர்ஒன்பதில் மதியை அழைத்தலும்" என்பது பிங்கலந்தை.

அலகில்புவ னத்தும்இவள் போலும்ஓர் துணையில்லை
அம்புலீ ஆடவாவே
அமரா வதிக்குநிகர் அளகா புரிப்பெணுடன்
அம்புலீ ஆடவாவே

—பெருந்திருப் பிராட்டியார் பிள்ளைத்தமிழ்

**சிற்றில் பருவம்:** இளம் பெண்கள் தெருவில் மணலால் சிறு கற்களால் வீடுகட்டி விளையாடுவர்! அவ் வீடுகளைக் குழந்தை சென்று தன் காலால் கலைத்துவிடும். அதனைக் கண்ட சிறுமியர்கள், குழந்தையை அவ்வாறு செய்ய வேண்டா என்று வேண்டிக்கொள்ளும் பருவம் சிற்றில் பருவம் ஆகும் அவ்வாறு தம் பொருட்டு வேண்டுவதோடின்றிப் பாட்டுடைத்தலைவன் இடத்தில் இரக்கங் கொண்டு, "உனது காலுக்கு ஊறுவருமே, காலில் புழுதி படியுமே" என்று வேண்டிக்கொள்வதுமாகும். ஏனைய பருவங்கள் தாய்மார், தாதியர் வேண்டுதலாக அமையும். இப் பருவம் இளம்பருவப் பெண்கள் வேண்டுவதாக அமையும். இஃது இரண்டாம் ஆண்டு நிகழும் நிகழ்ச்சி என்பர். இப்பருவம் சிறுபறைப் பருவத்திற்குப் பின்னும் பாடப்பட்டதாகத் தெரிகிறது. பிங்கலந்தை நிகண்டு, "இரண்டாம் ஆண்டில் சிறுபறை கொட்டலும், மூன்றும் ஆண்டில் சிற்றில் சிதைத்தலும்" என்று கூறுதல் காண்க. அதுபோது, சிற்றில் பருவ நிகழ்ச்சி மூன்றும் ஆண்டிலும், சிறுபறைப்பருவ நிகழ்ச்சி இரண்டாம் ஆண்டிலும் அமையும்.

திருவார் துறைசை வளர்ஞானக் செல்வா
சிற்றில் சிதையேலே
சிந்தா மணிஅம் பலவாண தேவா
சிற்றில் சிதையேலே

—அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ்

**சிறுபறைப் பருவம்:** இது குழந்தை தன் கையில் சிறிய பறை என்னும் தோல்கருவியாம் இசைக் கருவியை முழக்குமாறுவேண்டும் பருவமாகும். இது மூன்றும் ஆண்டில் நிகழும் என மேலே கூறப்பட்டது. காரணத்தை ஆண்டுக் காண்க.

திரைமுழங் கும்சித்திர சபைநடனம் அருள்புதல்வ
சிறுபறை முழக்கி அருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கி அருளே

—திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்

**சிறுதேர்ப்பருவம் :** குழந்தை குதிரை பூட்டப் பெறுத விளையாட்டுத் தேரினை உருட்டுமாறு வேண்டும் பருவம் ஆகும். "நான்காம் ஆண்டில் சிறுதேர் உருட்டலும்" என்பது பிங்கலந்தை.

தெய்வகுஞ் சிதபதம் புகுந்துவாழ் கின்றபர
சிறுதேர் உருட்டி அருளே
சீதவள நிறைதில்லை மாதர்மிக உறைசெல்வ
சிறுதேர் உருட்டியருளே

**—மாணிக்கவாசகர் பிள்ளைத் தமிழ்**

இதுவரை ஆண்பால்பிள்ளைத்தமிழ்ப் பருவங்களைப் பற்றிய விளக்கம் தரப்பட்டது. இனிப் பெண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய விளக்கங்களைக் காண்போமாக. பெண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய பத்துப் பருவங்களைப் பற்றிய தனி விளக்கம் தேவை இல்லை. ஆண்பால் பிள்ளைத்தமிழில் வரும் முதல் ஏழு பருவங்களும் பெண்பால் பிள்ளைத்தமிழ்க் குரியனவாகும். பெண்பாலுக்கு எட்டாம் பருவம் முதல் பத்தாம் பருவம் வரையில் அமைந்தவை சிறப்புப் பருவங்கள். அவை அம்மானை, நீராடல், ஊசல் எனபன். இனி இப்பருவங்கள் பற்றிய விளக்கங்களை ஈண்டுக் காண்போமாக.

**அம்மானைப் பருவம் :** அம்மானை, என்பது பெண்கள் மேலே எறிந்து தம் கையில் பிடிக்கும் ஒரு காய் ஆகும். இதனை அம்மானைக் காய் என்பர். இதனைக் குமரகுருபார். பொன் அம்மானை. மாணிக்க அம்மானை நீல அம்மானை காய்களை வைத்தும் ஆடுவதாகக் கூறியுள்ளனர். "நல்தரள அம்மனை" என்பதால், முத்தால் செய்யப்பட்ட அம்மனைக் காய் உண்டு என்பதும் தெறிகிறது. இக்காய் செல்வச் சிறப்புக்கு ஏற்ப அமையும்.

தூண்டா விளக்கே நல்லூராய்
தொட்டா டுகபொன் அம்மனையே
தோன்றாத் துணைக்கோர் துணைஆனாய்
தொட்டா டுகபொன் அம்மனையே

**—திருவெண்ணீற்றுமை பிள்ளைத் தமிழ்**

**நீராடல் பருவம் :** இதுபெண் குழந்தையை நீரில் குளிக்குமாறு வேண்டும் பருவம் இங்கு ஒரு குறிப்பை அறிதல் நன்று. நீராடற்குப் பதிலாகக் கழங்காடுமாறு வேண்டுதலை ஒரு பருவமாகக் குறிப்பதும் உண்டு. இவ்வாறு கழங்காடற் பருவம் அமையப் பாடப்பட்ட பிள்ளைத்தமிழ் **சிவயோக நாயகி பிள்ளைத்** தமிழ் ஆகும்.

மெய்வளர் பெரும்புகழ்க் கொள்ளிடத் திருநதியின்
வெள்ளநீர் ஆடியருளே
மெய்த்தவத் துறைமேவும் உத்தமக் கௌமாரி
வெள்ளநீர் ஆடியருளே

—**பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ்**

**ஊசல் பருவம் :** இது பெண் குழந்தையை ஊஞ்சலில் ஆடுமாறு வேண்டும் பருவம் ஆகும்.

புரிசச்சி தானந்த சகளநிட்
களவல்லி பொன்ஊசல் ஆடி அருளே
புகழ்மூங்கில் வனநன்மை திகழ்காந்தி
மதிஅம்மை பொன்ஊசல் ஆடிஅருளே

—**திருநெல்வேலிக் காந்திமதி அம்மை பிள்ளைத்தமிழ்**

இங்குக் கூறப்பட்ட பருவங்களில் காப்பும் பருவத்திற்குப் பதினொரு பாடல்களும், பன்னிரண்டு பாடல்களும் ஏனைய பருவங்கட்குப் பப்பத்தும் பாடும் மரபு பெரிதும் தழுவப் பட்டுவந்துள்ளதை மேலே கூறி இருப்பதை நினைவில் கொள்க. ஆனால், இம்மரபு சிறிது மாறுபட்டு வருதலையும் சில பிள்ளைத்தமிழ் நூல்களைப் பார்க்கும்போது அறிய வருகிறது.

இதனைக் கீழ்க் குறிக்கப்பெறும் பிள்ளைத்தமிழ் நூல்களின் வழி நன்கு உணரலாம். கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழில் ஒவ்வொரு பருவத்திற்கும் ஐந்தைந்து பாடல்களே உள்ளன. சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத் தமிழில் ஒவ்வொரு பருவத்திற்கும் ஏழு ஏழு பாடல்களே

உள. பழனிப் பிள்ளைத்தமிழ் ஒவ்வொரு பருவத்திற்கும் மும்மூன்று பாடல்களைக் கொண்டு திகழ்கிறது. மாசிலா மணித் தேசிகர் இயற்றிய திருஞான சம்பந்தர் பிள்ளைத் தமிழில் காப்புப் பருவத்திலும், வாரானைப் பருவத்திலும் தனித்தனிப் பதினொரு பாடல்கள் உள. முத்தப் பருவத்தி திலும் சிறு பறைப் பருவத்திலும் தனித்தனி ஒன்பது பாடல்கள் உள. ஏனைய பருவங்களில் பப்பத்துப் பாடல்கள் உள. சிவபிரகாச சுவாமிகள் இயற்றிய சிவஞான பாலைய்ய சுவாமிகள் பிள்ளைத் தமிழின் வாரானைப் பருவத்தில் பதினோரு பாடல்களும், தணிகைமணி. வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் பாடிய திருஞான சம்பந்தர் பிள்ளைத் தமிழ் நூலில் காப்புச் செய்யுள் ஒன்றும், ஏனைய பருவங்கட்குத் தனித்தனி ஒரு பாடலும் ஆகப் பத்துப்பாடல்களே உள. மு. கோ. இராமன் அவர்கள் பாடிய அப்பர் பிள்ளைத் தமிழில் காப்புச் செய்யுள் மட்டும் மூன்றும், ஏனைய பருவம் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பாடல் வீதம் பத்துப்பாடல் களும் உள்ளன.

இதுவரையில் எழுதப்பட்ட விளக்கம், பொதுப்படப் பிள்ளைத்தமிழ் நூல்பற்றிய விளக்கம் ஆகும். அடுத்துச் சேக்கிழார் பிள்ளைத்தமிழ் அமைப்பினையும் சிறப்பு முறையில் ஆய்வோமாக.

# சேக்கிழார் பிள்ளைத் தமிழ் அமைப்பு

சேக்கிழார் பெருமானுர்மீது பாடப்பட்டமையின், இது சேக்கிழார் பிள்ளைத்தமிழ் எனப்பட்டது. இதன் ஆசிரியர் துறைசை ஆதீனம், திரிசிரபுரம் மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள்.

இவர் பிள்ளைத்தமிழ் வகையில் திருப்பெருமணநல்லூர்த் திருவெண்ணீற்றம்மை பிள்ளைத்தமிழ், திருவானைக்கா அகிலாண்டா நாயகி பிள்ளைத்தமிழ், உறையூர் ஸ்ரீ காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ், திருக்குடந்தை ஸ்ரீ மங்களாம்பிகை அம்மைப் பிள்ளைத்தமிழ், திருத்தவத்துறைப் பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ், திருவிடைக்கழி முருகர் பிள்ளைத்தமிழ், திருவாவடுதுறை ஸ்ரீ அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ் நூல்களையும் பாடியுள்ளனர்.

திரு பிள்ளை அவர்கள் ஸ்ரீ சேக்கிழார் பிள்ளைத் தமிழிலும் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழிலும், காப்புப் பருவத்தைப் பாடி இருக்கும் அமைப்பினை நன்கு ஊன்றிக் கவனித்தல் வேண்டும். காப்புப் பருவத்தில் எல்லாப் புலவர்களும், ஏன் திரு பிள்ளை அவர்களும் திருமால், சிவபெருமான், உமை, கணபதி, முருகர், அலைமகள், கலைமகள், துர்க்கை, நால்வர் ஆகியவர்கட்டு வணக்கம் செலுத்திப் பாட்டுடைத் தலைவனையோ தலைவியையோ காக்குமாறு வேண்டுவர். ஆனுல், திரு பிள்ளை அவர்கள் சேக்கிழார் பிள்ளைத் தமிழில் காப்புப் பருவத்தில், திருத்தொண்டத் தொகையில் கூறப்பட்ட திருத்தொண்டர்களையே காப்புக் கடவுளர் களாகப் பாடப்பட்டிருத்தலை ஊன்றிக் கவனித்தல் வேண்டும். அம்பலவாண தேசிகர் பிள்ளைத் தமிழின் காப்புப் பருவத்தில் அகச் சந்தானம் புறச் சந்தானுச்சாரியர்,

இவர்கள் வழிவந்தவர்கள் ஆகியவர்களைக் காப்புக் கடவுளாகப் பாடி இருப்பதையும் உணர்ந்துகொள்ளுதல் வேண்டும்.

சேக்கிழார் பிள்ளைத்தமிழில், முதற்கண் விநாயகக் கடவுள் வணக்கமும் அடுத்தாற்போல் பாயிரம் என்னும் தலைப்பில் குருவணக்கமும், அவை அடக்கமும் அமைந்து இருக்கின்றன. நூலுக்குள் காப்புப் பருவத்தில் பதினொரு பாடல்களும், ஏனைய ஒன்பது பருவங்களில் தனித்தனிப் பத்துப் பாடல்களுடன் நூற்றொரு பாடல்கள் பொருந்தியுள்ளன. ஈற்றுப் பாடல் வாழ்த்துக் கூறி முடிப்பதுபோல் அமைந்திருப்பது ஒரு தனிச் சிறப்பாகும்.

திரு பிள்ளை அவர்கள் ஸ்ரீ சேக்கிழார் பிள்ளைத்தமிழில் தமது கற்பனை எவ்வளவு உண்டோ அவ்வளவையும் அமைத்துப் பாடல்களைப் பாடியுள்ளனர். இதனைக் குன்றத்தூரினைச் சிறப்பிக்கும் இடத்தும், பாலாற்றின் வளம் குறித்துப் பேசுமிடத்தும், தொண்டை நாட்டுச் சிறப்பை அமைத்துப் பாடும் இடத்தும் நன்கு காணலாம்.

நூலகத்தில் சேக்கிழார் பெருமையினையும் அவர்களின் மாட்சியினையும், அவர் தம் பன்முக ஞானத்தினையும், தெய்வீக நிலையினையும், வேளாளர்களின் மாண்பினையும், நன்கு சித்தரித்து உள்ளனர். இவரது இலக்கண, இலக்கிய, சைவசமய, சித்தாந்த சாத்திர, திருமுறை, புலமையினை இந்நூலில் பரக்கக்காணலாம். இவற்றை எல்லாம் விளக்க உரைக்கண் நன்கு உணரலாம்.

சேக்கிழார் பிள்ளைத்தமிழின் சிறப்புப் பற்றி இந்நூலாசிரியரின் மாணவர் திருவாவடுதுறை திரு. ஆறுமுக சுவாமிகள் பாடியுள்ள பாடல்களின் மூலமும் அறியலாம்.

மற்றவர்மான் மியப்பெருமை அருமையுடன்
உளத்துணர்ந்து மகிழ்பேர் அன்பால்
கற்றபயன் இன்றடைந்தோம் இம்மைமறு
மைப்பயனுக் கதிர்க்கும் ஈதென்

றுற்றருமை பெருமைதொண்டர் புராணம்இரா
சியமுழுவதும் ஒருங்கே தோன்ற
சொற்றபிள்ளைத் தமிழ்எனஓர் பாமாலை
தொடுத்தனன்மெய்த் துறவோர் போற்ற

வென்றபுக ழினையார்மான் மியம்தமிழால்
விரித்தருளும் மேன்மை யாளர்
ஒன்றுபுகழ் மரபிலுளார் இதுநயத்தற்
குரியர்என உவந்து சான்றோர்
நன்றுபொலி துறைசையில்சுப் பிரமணிய
குருமணிஉள் நயந்து நன்றென்
றென்றுமுடி அடிகள்தொறும் துளக்கஅவை
வியக்கஅரங் கேற்றி னனே

என்ற பாடல்களைப் படித்துணரவும்.

# சேக்கிழார் பிள்ளைத்தமிழ்ப் பாடல்களில் அமைந்த கருத்துச் சுருக்கம்

## பாயிரம்

**விநாயகக் கடவுள் வணக்கம் :** விநாயகர் விசுவரூபம் எடுத்தது; அதுபோது சந்திரன் விளங்கிய நிலை; நடராசப் பெருமான் உலகெலாம் என்னும் தொடரைச் சேக்கிழார்க்கு உணர்த்தியது. "மலர் சிலம்படி" என்னும் தொடரின் உண்மைப் பொருள்; நால்நெறி (சரியை கிரியை, யோகம், ஞானம், சத்புத்திர தாச சக ஞான மார்க்கங்கள்.) பக்கம் 1—9

**குருவணக்கமும் அவை அடக்கமும்:** திருக்கயிலாய பரம்பரைக் குறிப்பு. சேக்கிழார், உமாபதி சிவம், சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள், சிவபெருமான், கணபதி, முருகன் இவர்கட்கு ஒப்பாதல், குருவின் பாண்பு; அவையடக்க விளக்கம். பக்கம் 10—22

## 1. காப்புப் பருவம்

**செய்யுள் 1.** திருவாரூர்த்தியாகர் சுந்தரருக்கு அடி எடுத்துக் கொடுத்தல்; தில்லைவாழ் அந்தணர் முதல் ஏழு அடியார்களின் வாழ்க்கைச் சுருக்கம். உலகெலாம் எனும் தொடரை முதல் இடை, கடையில் அமைத்திருத்தல். சைவ பரிபாஷை, சம்பிரதாயம், காப்புப்பருவ விளக்கம். பக்கம் 23—35

**செ. 2.** ஏழு முனிவர், ஏழு குதிரை. எறிபத்தர் முதலான எழுவர் வரலாற்றுச் சுருக்கம், சேக்கிழாரின்

அடக்கப்பண்பு, சேக்கிழார்க்குக் கலைமகள் செய்த தொண்டு. பக்கம் 35—42

செ. 3. மூன்று வேதம், மூன்று உலகம். மூர்த்தியார் முதல் அறுவர் வரலாற்றுச் சுருக்கம். சேக்கிழார், திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர்க்கு ஒப்பாவார். தமிழ் மறையின் உண்மைப் பொருளைச் சேக்கிழார் விளக்கல். பக்கம் 43—55

செ. 4. திருநாவுக்கரசருக்குச் சமணர் செய்த தீங்குகள். அப்பர் முதல் ஏழு அடியர் வரலாறு. புலியூர்க் கோட்டம். பக்கம் 56—68

செ. 5. சம்பந்தர் அங்கம் பூம்பாவையை எழுப்பியது. சம்பந்தர் முதல் ஐவர் வரலாறு, அகத்தியர் கடலை உண்டது, வித்தியாரண்ய முனிவர் பற்றிய குறிப்பு. அப்பர், சுந்தரர், சம்பந்தர் பாடல்களின் உண்மைப் பொருளைச் சேக்கிழார் உணர்த்தல். பக்கம் 68—85

செ 6. சாக்கியர் முதல் ஆறு அடியார் வரலாறு. சோழனைச் சீவக சிந்தாமணியைக் கோட்காவண்ணம் செய்து அடியார் வரலாற்றைப் புகன்றது. அமைச்சர் பண்புகள். பக்கம் 86—102

செ. 7. சங்கப் புலவர் வரலாறு. பொய்யடிமை இல்லாத புலவர் யார் என்பது. பொய்யடிமை இல்லாத புலவர் வரலாறு முதல் எட்டு அடியார் வரலாறு. பிரமனும் அறியாத குறிப்புக்களைச் சேக்கிழார் அறிவித்தல், சேக்கிழார் மெய் அறிஞர், வேளாள மரபின் மாண்பு, திருத்தொண்டர் திருவந்தாதி மூலம் அடியார்களைப் பற்றி அறிவன. மூவர் முதலிகள் வழி அடியார்களைப் பற்றி அறிவன. ஏனைய திருமுறைகளின் வழி அடியார்களைப்பற்றி அறிவன. பக்கம் 103—146

செ. 8. சிவபெருமானது பலவகை நிலைகள். கணம் புல்லர் முதலான ஐந்து அடியார்கள் வரலாறு, பாலாற்றின்

அலையின் சிறப்பு; தொண்டை நாட்டின் வளம். பக்கம் 146—160

**செ. 9.** கழற்சிங்க நாயனார் முதல் ஐந்து அடியார்களின் வரலாறு. சேக்கிழார் குவளை மலர் அணிந்ததன் கருத்து. நால்வகை மரபினர் அடையாள மாலைகள். பக்கம் 160-173

**செ. 10.** சுந்தரர் இருவரை மணத்தல், சுந்தரர் இரு பெண்களுக்குத் தந்தை முறை ஆதல்; பத்தராய்ப் பணிவார் முதலான ஏழு தொகை அடியார் வரலாறு, சேக்கிழார் திருநீறு, உருத்திராக்கம் அணிந்துள்ள மாண்பு, குன்றத்தூர் மாண்பு. பக்கம் 174—188

**செ. 11.** பூசலார் கோயில் கட்டிய மாண்பு. இறைவர் பூசலார் ஆலயத்திற்கு எழுந்தருளல். பூசலார் முதலான எழுவர் வரலாற்றுக் குறிப்பு, தொகை, விரி ஆகிய மூவகை நூல்களின் இலக்கணம். சேக்கிழார் விரிநூல் செய்தற்கு உரியர். பக்கம் 189—206

## 2. செங்கீரைப் பருவம்

**செய்யுள். 1.** செங்கீரை ஆடும்முறை, குன்றத்தூர்ச் சிறப்பு. சேக்கிழார் வேளாளர் குலதிலகர்; செங்கீரை என்னும் தொடர்க்குரிய பொருள். பக்கம் 207—212.

**செ. 2.** சேக்கிழாரின் பணிவு. சேக்கிழாரின் சொற்களுக்குப் பயன் உண்டு எனல். பக்கம் 212—215.

**செ. 3.** சேக்கிழார் அடியார்களைப் பற்றி அரிய சீரிய குறிப்புக்களைக் கூறுதல். வேத இரகசியங்களை அறிவித்தல். அணிகள் பலவற்றை அமைத்தல். அநபாயன் சபையில் இருந்தார் வியக்க மொழிந்தது. பக்கம் 216—234

**செ. 4.** நடராசர் பெத்தான் சாம்பானுக்கு முத்தி கொடுக்க உமாபதி சிவத்திற்கு கடிதம் எழுதியது. நிருவாண தீட்சை விளக்கம். உமாபதி சிவத்தின் மாண்பு. உமாபதி சிவம் சேக்கிழார் வரலாற்றுப் புராணம் பாடியது. பக்கம் 234-238

**செ. 5.** வேளாளர் கங்கை மரபினர், கங்கை ஆயிர முக முடையாள், வேதம் ஆயிரம், சிதம்பர ஆயிரக்கால் மண்டபத்தில் பெரிய புராணம் அரங்கேற்றம், குன்றத்தூர் நீர் வளன், இயற்கை வளன். பக்கம் 239—243

**செ. 6.** திரு பிள்ளை அவர்கள் மக்களது குற்றத்தை உபசார வழக்காக எடுத்து மொழிதல், சேக்கிழாரைப் போற்றுதல்; சேக்கிழார் ஆம்பல் மலர் அணிந்திருத்தல்; அதற்குக் காரணம். பக்கம் 243—250

**செ. 7.** சேக்கிழாரது பலவித பண்புகள் தோன்ற அவரை விளித்தல். பக்கம் 250—255

**செ. 8.** சேக்கிழாராம் குழந்தை அணிந்த அணிகலன் கள், சேக்கிழார் வாய் நீர் ஒழுக, திருநீறு பொலிய, புன் முறுவல் பூத்துத் திகழ்தல். பக்கம் 255—259

**செ. 9.** சரியை, கிரியை, யோக, ஞானக் குறிப்பு, சிவனடியார்களில் இன்னின்னார் இந்திந்த நெறியில் திகழ்ந்து பேறு பெற்றனர் எனல். சிவபெருமானே சேக்கிழாராக வந்து சிவனடியார்களைப் பற்றிய அரிய குறிப்புக்களைக் கூறினார் எனல். பக்கம் 259—270

**செ. 10.** பாலாற்று வரலாறு, வர்ணனை. பக்கம் 270—273.

## 3. தாலப் பருவம்

**செய்யுள் 1.** வேளாளர் முத்துக்களைக் குவித்தல்; அன்னங்கள் முத்துக் குவியலில் வீற்றிருத்தல்; வேளாளர் அன்னத்தின் முட்டைகளையும் முத்துக்கள் எனக் குவித்தல்;

இது குறித்து அவர்கள் வருந்துதல்; சேக்கிழார் சகலாகம பண்டிதர் எனல். தாலப்பருவ விளக்கம். பக்கம் 274—282

செ. 2. குன்றத்தூர், திருப்பாற் கடல்போல் இருந்தமைக்குக் காரணம், திருநீற்றின் மாண்பு. பக்கம் 282—286

செ. 3. குன்றத்தூர் தேவலோகத்தினும் சிறந்தது என்பதற்குரிய காரணம்; திருஞான சம்பந்தர் தம் திருமணத்தில் எவர்க்கும் முத்தி தந்த திருப்பெருமாண நல்லூர் போன்றது குன்றத்தூர் எனல். பக்கம் 286—289.

செ. 4. திருமாலுக்கு முன்னைய நிறமும், பின்னைய நிறமும் ஏற்பட்ட காரணம், குன்றத்தூர் வாசிகளின் மாண்பு. பக்கம் 289—292

செ. 5. குன்றத்தூர் மடங்களின் மாண்பு; திருப்பனந்தாள் மடம், சேக்கிழார் மடம், குன்றத்தூரின் பொருள் வள மக்கள் மாண்பு. பக்கம் 292—294

செ. 6. பெரிய புராணத்திற்குத் தொல்காப்பியம் இலக்கணம்; இதற்குரிய காரணங்கள்; பெரிய புராணம் கேட்கத் தக்க அதிகாரிகள்; பெரிய புராணம் படிப்பதன் பயன்; குன்றத்தூர் மாண்பு. பக்கம் 295—303

செ. 7. அடியார் பெருமைகளை அறிவிக்க வல்லவர் சேக்கிழாரே எனல். இறைவர் முதல் எடுத்துக் கொடுத்தது; சேக்கிழார்க்கு இறைவர் எடுத்துக் கொடுத்த காரணத்தால் தமிழ் மாண்புடையது என வியத்தல்; அன்பர்கள் பெரிய புராணத்தைப் புகழ்ந்து பேசுதல், குன்றத்தூர் சிறப்பு. பக்கம் 304—311

செ. 8. பத்திச் சுவை நனிச் சொட்டச் சொட்டக் கவி பாடியது, சேக்கிழார் அநபாயனை அடியார் வரவாற்றைக் கேட்கச் செய்தது, யாவரும் சிவம் அடையக் கவி பாடியது, குன்றத்தூர் நீர்வளன். பக்கம் 312—318

செ. 9. சொல் அணி, பொருள் அணி விளக்கம், அவ்வணிகள் பெரிய புராணத்தில் அமைந்திருத்தல், பத்துவகை அழகுகள், முதல், கரு, உரிப் பொருள்கள், ஆற்றொழுக்கு முதலான எண் வகைப் பொருள்கள் விளக்கம். இவை பெரிய புராணத்தில் அமைந்திருத்தல், குன்றத்தூர் வளன். பக்கம் 318—342

செ. 10. சேக்கிழார் திருவவதாரம் செய்த காரணத்தால்தான் மக்கள் பக்தி, ஒழுக்கம், நன்மொழி பகர்தல், எமனை வெல்லும் உபாயம், சிவனடியாரொடு கூடல், சிவனுடல் கூடல், பெறல் அரும் இன்பம் பெறல் ஆகியவற்றை உணர்ந்தனர் எனல், குன்றத்தூர்ச் சிறப்பு. பக்கம் 343-348.

## 4. சப்பாணிப் பருவம்

செய்யுள் 1. மன்னர்களின் பண்புகள், வேளாளர் மாண்பு, வேளாளர்கள் முடி எடுத்துக் கொடுக்க, அதனை மன்னர் சூடுதல். சேக்கிழாரைச் சூரியனுக்கு ஒப்பிடுதல், தமிழின் மாண்பு, சப்பாணிப் பருவ விளக்கம். பக்கம் 349—361

செ. 2. வேளாளர் மாண்பு, வேளாளரே உலகைக் காப்பவர்; மழை வளனுக்கு வேளாளரே காரணர். பக்கம் 361—367

செ. 3. சமணர் இயல்பு, சேக்கிழார்க்குச் சூரியனையும் சந்திரனையும் ஒப்பிடல். பக்கம் 367—371

செ. 4. இறைவனை ஒரு குறியில் ஆவாகனம் செய்தல், நாராயணீய உபநிடதம் கூறும் கருத்து. கன்மம் முதலான ஐவகை மலங்கள். பக்கம் 371—376

செ. 5. சேக்கிழார் பரம குருவாக அவதாரம் செய்தார். அவர் கை தட்டுதலால் அறியப்படும் அரிய கருத்துக்கள். பக்கம் 376—382

**செ. 2.** தாமரை மலரைவிடச் சேக்கிழாரின் பாத தாமரைகள் சிறப்புடையன எனல். இரண்டிற்கும் உள்ள வேற்றுமைகள்; வேளாளர் புகழ் வாய்ந்தவர்; சேக்கிழாரின் புன்முறுவல் அன்பர்கட்கு மகிழ்வையும், ஏனைய சமயத்தவர் கட்கு அச்சத்தையும் தரும். ஆறு சமயத்தவர். பக்கம் 489—494

**செ. 3.** முத்தி அடைதற்குரிய பல்வேறு வழிகளைப் பல்வேறு மதங்கள் கூறும் கருத்துக்கள், ஐந்துவகைக் கந்தம். இவற்றின் விளக்கம், மூவகைக் குணங்கள், இவற்றின் விளக்கம். இருவினை, சேக்கிழார் செந்தமிழ்ப் பெருமை அறிந்தவர். (இப்பாடல் சிவப்பிரகாசத்தில் வரும் முத்தி பேதங்களின் இயல்பு கூறப்பட்ட குறிப்புக்களைக் கொண் டது. பல மதங்களைப் பற்றிய குறிப்புக்களையும் கொண்டது) பக்கம் 494—503

**செ. 4.** முத்துக்கள் பிறக்கும் இடங்கள், முத்துக்களைக் குவித்தல், சேக்கிழார் குழந்தை அக்குவியலில் ஆடல், அன பாயன் சேக்கிழார்க்குச் செய்த சிறப்பு. பக்கம் 504—507

**செ. 5.** மலங்களின் வகை, மலபரிபாகம், சத்தினி பாதம் பற்றிய விளக்கம். புத்திர, தாச, சக சன்மார்க்க விளக்கம், ஆடையின் மென்மை, வேளாளர் மேன்மை. பக்கம் 507—518

**செ. 6.** பழையனூர் நீலி வரலாறு; வேளாளர் சொல் தவறாமை, வேளாளர் மாண்பு, வேளாளர் தீயில் பாய்தல்; திருவாலங்காட்டுக் குறிப்பு. பக்கம் 518—523

**செ. 7.** சேர நாட்டு வணிகர் வேற்று நாடு புகுதல், வணிகர் மகளை வேளாளர் காத்தல், இவ்விரு மரபினரும் உறவு கொண்டாடல், வேளாளர்கள் பாண்பு. பக்கம் 524—527

**செ. 8.** சேக்கிழாரை மேகமாக உருவகம் செய் திருத்தல்; அதற்குரிய காரணம். குன்றத்தூர் மாளிகை மாண்பு. பக்கம் 527—535

செ. 9. வேளாளர் மாண்பு, வேளாளர் தம் கையில் தாற்றுக்கோல் பிடிப்பதனால்தான் ஏனையவர்களும் தம் தமக்குரிய கோல் கொண்டுள்ளார் எனல். பக்கம் 535—538.

செ. 10. சேக்கிழாரைப் பலவாறு சிறப்பித்து வருக என அழைத்தல்; அவ்வாறு விளிப்பதன் கருத்து. பக்கம் 539—544

# 7. அம்புலிப் பருவம்

செய்யுள் 1. அம்புலிப் பருவ விளக்கம், ஏனைய பருவங்கட்கும் இப்பருவத்திற்கும் உள்ள வேறுபாடு, சேக்கிழாரோடு சந்திரனை ஒப்பிடுதல், குன்றத்தூர் மாளிகைகளின் சிறப்பு, சிலேடைப் பொருள் அமைந்திருத்தல். இதில் சாம உபாயம் அமைந்துள்ளது. பக்கம் 545 – 552

செ. 2. சேக்கிழாரோடு சந்திரனை ஒப்பிடுதல், குன்றத்தூர் மாளிகையின் மாண்பு, சந்திரன் அத்திரி முனிவர் விழியில் தோன்றியது. சிலேடை அணி அமைந்த பாடல். இதுவும் சாம உபாயப் பாடல், பக்கம் 552—554

செ. 3. சேக்கிழாருக்கும் சந்திரனுக்கும் உள்ள வேறுபாடு, இதிலும் சிலேடை அணி அமைந்துளது, இது பேத உபாயம் அமைந்த பாடல். பக்கம் 555—561

செ. 4. நடராசப் பெருமான் திருநடனச் சிறப்பு, அவனே சற்குரு ஆவான் எனல், குருபகவானிடம் சந்திரன் சாபம் பெற்றது, குன்றத்தூர் மாளிகைகளின் மாண்பு, சேக்கிழார்க்கும், சந்திரனுக்கும் உள்ள வேறுபாடு, இதில் பேத உபாயம் அமைந்துளது. பக்கம் 562—567

செ. 5. சேக்கிழார்க்கும், சந்திரனுக்கும் உள்ள வேற்றுமை, சந்திரன் பாபக்கிரகங்களுடன் மாதம்தோறும் உறவு கொள்ளுதல், பன்னிரு ராசிகள், இதில் பேத உபாயம் உளது. பக்கம் 567—571

**செ. 6.** சேக்கிழார்க்கும் சந்திரனுக்கும் உள்ள வேறுபாடு, சந்திரன் ராகு கேதுக்களால் விழுங்கப்படுதல்; இதற்குக் காரணம். ராகு கேதுக்கள் வரலாறு, சேக்கிழார் முன் பதஞ்சலி முனிவர் வருதற்கு அஞ்சுதல்; சேக்கிழார் ஒரு தூக்கில் (ஒரு பாட்டில்) ஏழு பரவைகளை (கடலையும்) பரவை எனும் சொல்லையும் எளிதில் நிறுத்தியவர் எனல் குன்றத்தூர் மாளிகைகளின் மாண்பு, இதில் பேத உபாயம் உளது. பக்கம் 571—575

**செ. 7.** இறையனர் களவியல் இலக்கண நூல் செய்தது, மாதர் வர்ணனை, கன்னியர் சந்திரனைத் தொழுதல், சேக்கிழார் கவி, கமகன், வாதி, வாக்கி ஆவார் எனல். இதில் தான உபாயம் உளது. பக்கம் 576—591

**செ. 8.** திருஞான சம்பந்தர் கூனைப் போக்கியது; சுந்தரர் கூனை நீக்கியது; சேக்கிழார் தம் பாடலில் ''கூன்'' எனும் உறுப்பையும் அமைக்காமை, சேக்கிழார் நாவலர்களால் போற்றப்படுபவர். இதில் தான உபாயம் உளது. பக்கம் 591—597

**செ. 9.** சமணர் இயல்பு, சேக்கிழார் சந்திரனது களங்கம் போக்குவார், சேக்கிழார் சந்திரன்மாட்டு வைத்த கருணை, குன்றத்தூர் நீர்வளம். இதில் தான உபாயம் உளது. பக்கம் 597—600

**செ. 10.** சேக்கிழார் சினம் கொள்ளுதற்கு முன் சந்திரனை வருக எனல், குன்றத்தூர் மாண்பு. இது தண்ட உபாயம் கூறுவது. பக்கம் 600—604

## 8. சிற்றில் பருவம்

**செய்யுள் 1.** சிறுமியர் முத்தால் சிறு வீடு கட்டி விளையாடுதல்; சேக்கிழாராம் குழந்தையைச் சிற்றிலைச் சிதைக்காதிருக்க வேண்டுதல், தெய்வலோகம் அளவு குன்றத்தூர் மரங்கள் உயர்ந்து வளர்ந்திருத்தல், தேவர்

களின் வியப்பு, தொண்டை நாட்டின் பொழில்வளம், சிற்றில் பருவ விளக்கம். பக்கம் 605—609

**செ. 2.** சிறுமியர் தாம் கட்டிய சிறு வீடுகள் பிற மதத்தர் கட்டிய இடங்கள் அல்ல எனல். பாலாற்று வளன், நெல் வளர்ச்சி, தொண்டை நாட்டு வயல்வளன், குன்றத்தூர் செல்வச் சிறப்பு. பக்கம் 610—612

**செ. 3.** சிறுமியர் தம் வீட்டைச் சிதைக்காமல், பிற சமயத்தவரைச் சிதைக்க வேண்டல், அதனுல் புகழ் புண்ணியம் உண்டு எனல். தொண்டை நாட்டின் மரங்களின் சிறப்பு. பக்கம் 612—614

**செ. 4.** சிறுமியர் சேக்கிழாராம் குழந்தையை ஏரால் உழுமாறு வேண்டல்; காலால் உழவேண்டா எனல், இவ்வாறு செய்தற்குரிய காரணங்களையும் அறிவித்தல், தொண்டை நாட்டின் இயற்கைக் காட்சி. பக்கம் 615—618

**செ. 5.** சிற்றிலைச் சிதைத்தால் அன்புடைய பலர்க்கும் துன்பம் தரும் எனல், தொண்டை நாடு சான்ருேர் உடைத்து என்பதற்கு ஏற்ற காரணங்கள். பக்கம் 619—621

**செ. 6.** சேக்கிழார்க்குரிய பட்டமும் பெருமையும்; தொண்டை நாட்டின் வாழைமரச் சிறப்பு. பக்கம் 622—634

**செ. 7.** தொண்டை நாட்டில் கரிகால் சோழன் எண்ணுயிரக் குடிகளை அமைத்தல்; சேக்கிழார் எல்லாரினும் மேம்பட்டவர் எனல்; சிவபெருமானை மும்மூர்த்திகளில் ஒருவர் என்பார் நரகம் அடைவர். பக்கம் 634—643

**செ. 8.** உப நிடதங்கள் பல. திருமண் இட்டவர் மோகம் ஒழிய வழி; வரால் மீன்களின் அட்டகாசம். பக்கம் 643—648

**செ. 9.** சேக்கிழார் சோழனைப் பணியும் பகைவர்க்கு வீடு கட்டித்தரல்; பிராம்மணர்கட்கு வீடு கட்டித்தரல்; குடி

அமைத்தல்; தொண்டை நாட்டின் கரும்பு வளம். பக்கம் 649—652

செ. 10. இறைவனது ஐந்து தொழில்கள்; இவை நிகழும் இடங்கள்; இவை நிகழ்த்தப்படும் காரணங்கள்; சிறுமியர் சேக்கிழாரைப் பலவாறு விளித்துப் பாராட்டல். பக்கம் 653—658

## 9. சிறுபறைப் பருவம்

செய்யுள் 1. சிறுபறைப் பருவவிளக்கம்; மூவகை முரசு; பாலாற்றுவளன்; சேக்கிழார் கொட்டும் பறைமுழக்கு இவ்விவ்வாறு இருக்க வேண்டும் எனல். குன்றத்தூர் மன்றங்கள். பக்கம் 655—666

செ. 2. தில்லை நடராசப் பெருமான் திருநடனச் சிறப்பு, நடனக் காட்சி, தொண்டை நாட்டின் நீர்வளம். பக்கம் 667—670

செ. 3. சேக்கிழார் கொட்டும் பறைமுழக்கு இவ்விம் முழக்காக இருக்க வேண்டும் என வேண்டல்; கோயில்களில் இசைக்கருவிகள் முழக்கப்படுதலின் குறிக்கோள்; கோயில் களில் இசை முழக்கு அமைதல் தொன்று தொட்ட மரபு எனல்; தொண்டை நாட்டின் பாலாற்றுவளன், வரால் காமதேனுவின் மடி முட்டல். காமதேனுவைக் கற்பக விருட்சம் கடிந்து கொள்ளுதல். பக்கம் 671—674

செ. 4. சேக்கிழார் கொட்டும் பறை முழக்கு இவ்விவ்வாறு இருக்க வேண்டும் என வேண்டல்; தொண்டை நாட்டின் சோலைவளம்; எங்கும் தேன் அடைகள் அடியார் பற்பலர் என்னும் குறிப்பு. பக்கம் 674—677

செ. 5. சிவசாதனங்கள் திருநீறு, கண்டிகை, ஐந்தெழுத்து இவற்றின் மாண்பு, சீவக சிந்தாமணி சிவமணம்

கொண்டு திகழ்தல். நெய்தல் பறை, இறைவன் யானைத் தோல் போர்த்திருக்கும் காரணம். மாயிலைக் கொழுந்து தீப்போல இருத்தல்; செல் என்னும் சொல்லின் நயம். பக்கம் 678—684

செ. 6. சேக்கிழாரின் பாடல்கள் சுவை மிகுந்தது எனல். "கனியினும்" என்றும் அப்பர் பாட்டின் உள் பொருள். சேக்கிழார் கவிகள் ஐம்புலன்களுக்கும் இன்பம் தரும் எனல். குன்றத்தூர் மாளிகை மாண்பு. பக்கம் 684—697

செ. 7. பலர் சேக்கிழார் கவிகளைப் பற்பலவாறு புகழ்ந்து பாராட்டுதல்; அவ்வாறு கூறியது உண்மை என் பதை விளக்கி இருத்தல். பக்கம் 698—704

செ. 8. சேக்கிழார் கவி பாட நிகழும் நிகழ்ச்சிகள்; இறைவர் திரிபுரம் எரித்தது; நடனத்தைப் பலரும் வணங்கு தல்; சேக்கிழார் பாடல்களை மூவர் முதலிகளும் வியத்தல்; தமிழ் எவராலும் வெறுக்கப்படாதிருத்தல் எனல். பக்கம் 705—710

செ. 9. சேக்கிழார் பெரிய புராணத்தைத் தில்லை ஆயிரக்கால் மண்டபத்தில் எழுதியது; புலவர்பாட, எழுது வோர் எழுதுதல்; முந்து தமிழ் என்றதன் சிறப்பு; குன்றத் தூர் மாளிகை மாண்பு. பக்கம் 710—716

செ. 10. இறைவர் பெரிய புராணத்தை, "யாவரும் கேட்க" என அசரீரியாக இருந்து மொழிந்தது. பக்கம் 716—719

## 10. சிறு தேர்ப் பருவம்

செய்யுள் 1. சிறு தேர்ப் பருவ விளக்கம்; சோழ மரபினர் மாலை; மூவேந்தர் மாலை; அநபாயன் சேக்கிழார்க் குக் கவரி வீசல்; இப்பாட்டுச் சேக்கிழாரை யானைமீது அமர்த்தி வீதிவலம் செய்தபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகள்

வேளாளர் சிறு கோலே செங்கோலை நடத்துதல். பக்கம் 720—726

செ. 2. உமை அம்மையார் காஞ்சியில் இறைவனைப் பூசித்தது; இறைவன் குழைந்து கொடுத்தது; இறைவி காஞ்சியில் அறம் வளர்த்தது; இறைவி கொடுத்த நெல்லை வாங்கிய வேளாளர் குடி தழைத்தது. பக்கம் 727—735

செ. 3. சேக்கிழார்க்கு அநபாயன் கவரி வீசுதல், சேக்கிழார் சம்பந்தர் சுந்தரர்க்கு ஒப்பாக விளங்கியது; சோழ மரபு மாலை; சேக்கிழார் சிவபெருமானை ஒத்தல். பக்கம் 736—745

செ. 4. இப்பாடலில் அநபாயனது போர்ச் சிறப்புக் கூறப்பட்டுள்ளது; சோழர் புலிக்கொடியை மேருமலையில் அமைத்தது. பக்கம் 745—751

செ. 5. பிறவி நோய்க்குப் பெரிய புராணம் மருந்தாகும் எனல்; இன்னதற்கு இது பொருத்தம் என்பது. வேளாளர் மாண்பு. பக்கம் 752—768

செ. 6. குன்றத்தூர் வேதியர்கள் செய்யும் யாகச் சிறப்பு; இதனால் தேவலோகத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சி. பக்கம் 768—773

செ. 7. குன்றத்தூரில் தேன் மழைப்பொழிவு; மாதர்கள் குளநீரை நீர் அன்று எனல்; அன்னங்கள் மேகம் தேன்மழை பொழிகிறதோ என்று ஆகாயம் நோக்கல். பக்கம் 774—777

செ. 8. ஆணவமலத்தன்மை; சேக்கிழாராம் சூரியன் தோன்ற நிகழும் நிகழ்ச்சிகள்; மாதர்களின் ஊடல் நிகழ்ச்சி பக்கம் 778—782

செ. 9. பிள்ளையார்க்குக் கொழுக்கட்டை படைத்தல்; அதனால் நாட்டுக்குத் தீமை வராது எனல்; மூவர் முதலி

களின் பாடல்களின் நுண்பொருள்களை விளக்கியவர் சேக்கிழார் எனல்; சேக்கிழாரின் சிவவேடப் பொலிவு; சேக்கிழார் பெரு நாவலர்; வேளாளர் உமை அம்மையார் கொடுத்த நெல்லைப் பெற்றது. பக்கம் 783—793

செ. 10. இப்பாடல் வாழ்த்துக்கூறும் பாடல்; உமாபதி சிவம் சேக்கிழார் வரலாற்றினைப் பாடியவர்: இன்னின்ன வாழ எனல்; திரு பிள்ளை அவர்கள் திருவாவடுதுறை மடத்தில் கொண்ட பற்று, சைவப்பற்று; வேளாளர் மாண்பு. பக்கம் 793—800

# சேக்கிழார் வரலாறும் காலமும்

**தொண்டை நாடு:** நந்தம் தமிழ்நாடு சேர, சோழ, பாண்டியநாடு என்ற முப்பெரும் பிரிவினை உடையதாயினும், தொண்டை நாடு, நடுநாடு கொங்குநாடு என்ற பிரிவினையும் கொண்டு திகழ்கிறது; தொண்டைநாடு என்பது, மேற்குப் பவழமலை, வடக்கு வேங்கட மலை, கிழக்குக் கீழ்க்கடல், தெற்குப் பெண்ணையாற்றையும் எல்லையாகக் கொண்டு திகழ்ந்தது; இதனால் செங்கற்பட்டு மாவட்டம், வட ஆர்க்காடு மாவட்டம், தென்னார்க்காடு மாவட்டத்தில் ஒரு பகுதியினையும் கொண்டு விளங்கியது. சித்தூர் சில்லாவும் இதனுடன் சேர்ந்து விளங்கியது; ஆனால், இதுபோது நாட்டு எல்லைப் பிரிவினில் வேங்கடத்தையும், சித்தூரையும் இழக்க நேர்ந்தது; காஞ்சிபுரம் தொண்டை நாட்டின் தலைநகரமாக இருந்தது.

பழங்காலத்துத் தொண்டை நாட்டு எல்லை இன்னது என்பதைத் தனிப்பாடல் ஒன்றால் அறியலாம்.

மேற்குப் பவளமலை வேங்கடம் நேர்வடக்காம்
ஆர்க்கும் உவரி அணிகிழக்கு—பார்க்குளுயர்
தெற்குப்பி னாகிதி கழ்இருப தின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு

என்ற பாடலைக் காண்க.

தொண்டை நாடு முதல் முதல் குறும்பர் நாடாகத் திகழ்ந்ததாகக் கூறுவர். இக்குறும்பர்கள் தம் ஆடுமாடுகளை மேய்த்துக்கொண்டு பொழுது போக்கி வாழ்ந்தனர். ஆகவே, இந்நாடு குறும்பர் நாடு என்ற பெயருடன் இருந்தது என்பர். இக்குறும்பர்களே இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரித்து ஆண்டதாகவும் கூறுவர். அதன் பின் ஆதொண்ட சக்ரவர்த்தி அக்குறும்பரிடமிருந்து நாட்

டைப் பறித்து ஆண்டதனால் தொண்டை நாடாயிற்று என்பர்.

கிள்ளிவளவன் நாககன்னிகை என்பாளைக் கடற் கரையில் சந்தித்துக் காதல் கொண்டு மணந்து, கருவுற்ற னள்; அதுபோது, நாகக் கன்னிகை, "நான் மகனைப் பெற் ருல் அவனை நீங்கள் எப்படி என் புதல்வன் என ஏற்பீர்?" என்று கேட்டபோது, "பிறந்த மகனைத் தொண்டைக் கொடியால் சுற்றிக் கடல்வழி அனுப்பின், அது அக்கொடி யுடன்வரின் நான் ஏற்பேன்" என்று கூறிப் போய்விட, அங் ஙனம் நாககன்னிகை தான் பெற்ற மகவைச் சோழன் கூறிய படி தொண்டைக் கொடியைச் சுற்றி அனுப்ப, அக்குழந் தையை மன்னன் ஏற்று அது வளர்ந்த பிறகு அதற்கு அர சுரிமை தந்து அரசாள செய்த நாட்டைத் தொண்டை நாடு என்றனர் என்பர். தெலுங்கர்கள், "கரிகாற் சோழனுக்கு மகிமானசோடன், என்ற பெயரில் ஒரு மகன் உண்டு. அவனுக்குத் தொண்டைமானன் என்றும்,கரிகாலன் என்றும் தாசவர்மன் என்ற மக்கள் இருந்தனர். அவர்களுள் தொண்டைமானன் ஆண்ட நாடு தொண்டை நாடாயிற்று" என்றும் கூறுவர்.

**கோட்டங்கள்:** தொண்டை நாடு இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டது. அவற்றுள் ஒன்று புலியூர்க் கோட்டம் என்பது. இப் புலியூர்க் கோட்டத் திற்குத் தலைநகரம் புலியூர் என்பது. இப்புலியூர் சென்னைக் கோடம்பாக்கம் புகைவண்டி நிலையத்திலிருந்து இரு கல் தொலைவில் உள்ளது. இக் கோட்டத்தைச் சார்ந்த ஊர்கள் குன்றத்தூர், போரூர், மாங்காடு, அமரூர், கோட்டூர், பூவிருந்தவல்லி முதலியன.

**குன்றத்தூர்:** இது சென்னையிலிருந்து பதினறு கல் தொலைவில் உள்ளது. பல்லாவரம் வழியாகச் சென்ருல் ஆறு கல் தொலைவில் இவ்வூரை அடையலாம். இவ்வூர் கி. பி பத்தாவது, பதினேருவது நூற்ருண்டில் பேரூராக விளங்கி இருந்தது; இதுபோது சிற்றூராக இருக்கிறது. இக்காலத்தில்

இவ்வூர் திருநாகேச்சரம், நத்தம் என்ற இரு பிரிவுகளுடன் காட்சி அளிக்கிறது. திருநாகேச்சுரத்திலிருந்து முக்கால் கல் தொலைவில் சென்றால் நத்தம் என்னும் இடத்தை அடைய லாம். இங்கு மிகப் பழைமையான பழுதுபட்ட சைவ வைணவ ஆலயங்கள் உள்ளன. இங்குள்ள சிவாலயப் பெருமான் கந்தழிப் பெருமான் என்றும், விஷ்ணு ஆலயப் பெருமாள் திருவூரகப் பெருமாள் என்றும் திருப்பெயர் கொண்டு திகழ்கின்றனர்.

விஷ்ணு ஆலயத்துள் தாயார் சந்நிதிக்கு எதிரே ஒரு கல் காணப்படுகிறது. அது பல வேலைப்பாடுடன் திகழ் கிறது. அது மிகமிகப் பழமைத் தோற்றத்துடன் இருப் பினும், பழுது படாமல் இன்றும் காட்சி அளிக்கின்றது. அதனை ஒவ்வொருவரும் கண்டுகளித்தல்வேண்டும்.

குன்றத்தூரின் கோடியில் ஒரு மலையும், ஒரு மண்டபமும் காணப்படுகின்றன. மண்டபம் பதினறு கால்களால் ஆயது; பதுமைகளுடன் திகழ்கிறது. குன்றின்மீது சென்றால் முருகப் பெருமானைக் கண்டு தரிசிக்கலாம். முருகப்பெருமான் வள்ளி தெய்வானையுடன் காட்சி அளிக்கின்றனர். ஒரு கிணறும் அங்கு உண்டு. அக்கோயிலின் முன் மண்டபத்தில் ஒரு சுருங்கை செல்கிறது; அஃது எங்குச் செல்கிறது என்பது அறிதற்கு இல்லை. கோயிலுக்கு முன்பு அழகிய மண்டபம் உண்டு.

திருநாகேசுரத்தில் உள்ள குடிமக்கள் வளம், குன்றத்தூரில் இல்லை என்னலாம். சேக்கிழாரது இளவலான பாலறுவாயர் உண்டாக்கிய பாலறுவாயர் குளத்தினை இன்றும் இங்குக் காணலாம்.

**சேக்கிழார் பிறப்பு:** கரிகாலன் தொண்டை நாட்டை வளப்படுத்தி நாற்பத்தெண்ணாயிரம் குடிகளைக் குடிபுகச் செய்தனன் என்பர். அக்குடிகளுள் கூடல்கிழான், புரிசை கிழான், வெண்குளப் பாக்கிழான், சேக்கிழான் குடிகள் சிறந்தவை. சேக்கிழான் என்ற பெயர் கொண்டு

தொண்டை நாட்டில் முதல் முதல் குடி ஏறிய வேளாளன் மரபில் வந்தவர்களே சேக்கிழார் குடியினர் எனப்படுவர்.

இச் சேக்கிழார் குடியினர்க்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. அக்குழந்தைக்கு அருண்மொழித் தேவர் என்ற பெயர் இட்டு வளர்த்தனர். அருண்மொழித் தேவர் என்பது இராசராச சோழன் பெயர்களுள் ஒன்று. இதனால் வேளாளர்கட்கு அரசன் மாட்டுள்ள அன்பினை நன்கு உணரலாம்.

சேக்கிழார் மரபினர்க்கு மற்றும் ஓர் ஆண் மகவு பிறந்தது. அது பாலறுவாயர் என்ற பெயருடன் வளர்ந்தது. (இவ்விருவரின் பெற்றோர்கள் வெள்ளியங்கிரி முதலியார் என்றும் அழகாம்பிகை என்றும் கூறுவர்) சேக்கிழார் பெருமானார் பிறந்த இல்லமே இதுபோது அவரது பெயரால் கோவிலாக வேளாளர் வீதியில் துலங்குகிறது. அக்கோயில் அண்மையில், வித்துவான் மறை திருநாவுக்கரசின் அரும் பெரும் முயற்சியினால் பல அன்பர்களின் துணையினால் நன் முறையில் கட்டப்பட்டு, அண்மையில் குடமுழுக்கு விழாவும் செய்யப்பட்டது. சந்நிதி வீதியில், அதாவது சேக்கிழார் கோவிலுக்கு வடவண்டைக் கோடியில் சேக்கிழார் மடமும் ஒன்று உள்ளது. இவ்விரண்டையும் திரு பாலசுப்பிர முதலியார் என்பவர் நன்கு கண்காணித்து வருகின்றனர்.

சேக்கிழார் பிறந்து அறிவு வளர்ந்து இறை அன்பு மேலிட்டிருந்த நிலையில் சோழ நாட்டுத் திருப்பதிகளில் ஒன்றான திருநாகேச்சுரம் என்ற தலத்தினிடத்தில் மிகுந்த பற்றுக்கொண்டு விளங்கினர். அதன் அறிகுறியாகத் திரு நாகேச்சுரம் என்ற திருப்பெயரால் தம் ஊருக்கு அருகே ஈசான மூலையில் ஓர் ஆலயம் கண்டு இலிங்க பிரதிஷ்டை செய்து வழிபட்டு, அத்தலத்திற்குத் திருநாகேச்சுரம் என்ற பெயரையும் சூட்டி வணங்கி வந்தனர். அவ்வாலயம் இருக்கும் இடம் அவ்வாலயத் திருப்பெயரால் திருநாகேச்சுரம் என்ற பெயரால் இன்றும் வழங்கப்பட்டு வருகிறது. அவ்வாலயம் இதுபோது செங்குந்த முதலியார் மரபினர் கைவசமாகிச்

சீரும் சிறப்புடன் பெருவிழா, சேக்கிழார் பெருமானார் விழா முதலானவை நடத்தப்பெற்று சிறப்புடன் திகழ்கிறது.

**சேக்கிழார் முதல் அமைச்சர் ஆதல்:** சேக்கிழார் பெருமானார் அருண்மொழித் தேவர் எனப் பெற்றோர்களால் பெயர் வைக்கப்பட்டவராயினும், அவர் பிறந்ததனால் சேக்கிழார் மரபு, பேரும் புகழும் சீரும் சிறப்பும் உற்றமையின், சேக்கிழார் என்றே அன்றும் இன்றும் அழைக்கப்பட்டு வருவாராயினர். சேக்கிழார் பெருமானார் இளமை முதலே நன்கு கல்வி கற்று, இலக்கண இலக்கிய திருமுறைகள், சாத்திரம் புராண இதிகாசங்களில் நல்ல பயிற்சியும், கல்வெட்டு ஆய்வும், வரலாற்றுப் புலமையும் கொண்டு திகழ்ந்தனர். இவர் காலத்துச் சோழன், "தொண்டை நாடு சான்றோர் உடைத்து என்று ஔவையார் கூறி இருப்பது உண்மை தானா?" என்று பரிசோதிக்க, 'அவுன் காலத்து மன்னனான' தொண்டைமானுக்கு, "மலையில் பெரிது எது? கடலில் பெரிது எது? உலகில் பெரிது எது? இவ்வினாக்களுக்கு ஏற்ற விடையினை தொண்டை நாட்டுச் சான்றோர் வாயிலாக விடை கண்டு அறிவிக்க வேண்டு"மென எழுதி ஆள்மூலம் போக்க, அம்மன்னன் அதுபோது கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய சேக்கிழாரிடம் கொடுக்கச் சேக்கிழார் பெருமானார் அம்மூன்று வினாக்களுக்கு நேர் விடையாகத் திருக்குறளிலிருந்தே,

நிலையில் திரியா தடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது

பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலில் பெரிது

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது

என்று எழுதி அனுப்பினர். இதனைச் சிதம்பரச் சபாநாதர் புராணம்,

ஞாலமலை கடல்தன்னில் பெரியதெது எனஎடுத்து ஞால மாள்செங்

கோலரசன் அனபாயன் வினவியமுத் திறக்குறிப்பைக் குறிப்பின் ஓர்ந்து

சாலஉயர் திருக்குறண்மூன் றிறையாக எழுதியவன் அரசு தாங்கி

வாலறிவால் திருத்தொண்டர் புகழ்விரித்தசேக்கிழார் மலர்த்தாள் போற்றி

என்று போற்றியதால் அறியலாம். கம்பரும் சேக்கிழாரின் நுண் அறிவை வியந்து வேளாளர் மாண்பைப் புகழும் ஏர் எழுபது என்னும் அவரது நூலில், "காவலவன்,

மண்ணில் கடலில் மலையில் பெரிதெதென் என
எண்ணிஎழு திக்கொடுத்த ஏற்றக்கை

என்று கூறிப் பாராட்டியதைக் காண்க.

இங்ஙனம் எழுதி அனுப்பிய விடையினைக் கண்ட சோழன் இத்தகைய அறிஞர் தம் ஆத்தானத்தில் இருப்பின், நாடு நலனுறும் என்று கருதிச் சேக்கிழார் பெருமானாரை வரவழைத்து முதல் அமைச்சராக்கி உத்தமச் சோழப் பல்லவர் என்ற பட்டத்தையும் ஈந்தனன்.

**பெரிய புராணம் இயற்றக் காரணம்:** சேக்கிழார் முதல் அமைச்சுப் பூண்டு உத்தமச் சோழ பல்லவர் என்ற பட்டத்துடன் அரசை நடத்தி வருகையில், சோழ மன்னன் திருத்தக்க தேவர் பாடிய சீவக சிந்தாமணியினைப் பொருள் விரிக்குமாறு கேட்டு இன்புற்று வந்தனன். இதனைக் கண்ட சேக்கிழார், சோழன் சைவ மரபினனாக இருந்தும், தன்னைப் போன்ற ஒரு மன்னனது சரித்திரத்தை—அதுவும் சைன சமயக் காவியத்தை—கேட்டு இம்மை இன்பத்தோடு மறுமை இன்பத்தையும் இழக்கின்றானே என்ற இரக்கத்தால், சீவகன் வரலாற்றைக் கேட்காதவாறு தடுத்துச் சுந்தரமூர்த்திகள் திருத்தொண்டத் தொகையில் குறிப்பிட்ட நாயன்மார்களின்

சரித்திரத்தைக் கேட்குமாறு செய்து, அவ்வரலாறுகளை முறையாகக் கூறினர். மன்னன் சிவனடியார்களின் சரித்திரத்தைக் கேட்டதும், ஆனந்தப் பரவசனாய், அவ்வரலாறுகள் தன் அளவில் கேட்டு இன்புற்றதோடு நிறுத்தாமல், மக்கள் யாவரும் உணர சேக்கிழார் பெருமானாரையே நூல் வடிவில் ஒரு காவியமாகப் பாடி அருளுமாறு வேண்டச் சேக்கிழார் பெருமானாரும் மன்னனிடம் விடை பெற்றுச் சிதம்பரம் வந்துற்றுக் கூத்தப் பெருமானார் திருமுன் நின்று, "கூத்தப் பெருமானே உனது அடியார் வரலாற்றை நான் எங்ஙனம் பாடுகேன்" என்று குறை இரந்து வணங்கிக் கேட்டபோது, நடராசப் பெருமானாரது திருவருளால் 'உலகெலாம்' என்ற வாக்கு அசரீரியாக எழ, அதனையே மகுடமாகக் கொண்டு,

உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்திவ ணங்குவாம்

என்ற வாழ்த்துப் பாடலைப் பாடி திருத்தொண்டத் தொகை, ஏனைய திருமுறைகள், கல்வெட்டு ஆதரவு, வரலாற்று நூல், இவற்றின் துணைகொண்டும், நேரில் சென்றும், ஆட்களைப் போக்கி அறிந்தும், நூலை இனிதின் முடித்தனர். நூலுக்குத் திருத்தொண்டர் புராணம் என்னும் பெயரைச் சூட்டினர். நூல் முடியும்வரை சேக்கிழார் பெருமானார்க்கு வேண்டிய பொருள் உதவி, வாகன உதவி, ஆள் உதவி மற்றும் பல உதவிகளை அரசன் செய்து வந்தனன்.

**சேக்கிழார்க்கு அரசன் செய்த சிறப்பு:** சேக்கிழார் நூல் செய்து முடித்ததை அரசன் கேட்டு, தில்லை வந்துற்று, அவரையும், அவர் நூலையும் யானைமீது ஏற்றிப் புலவர் பெருமானார்க்குத் தன் கரத்தால் வெண் சமரை வீசித் திருத்தொண்டு புரிந்தனன். இறைவன் மன்னன் செவியில் உறுமாறு நூற் பொருளையும் சேக்கிழாரே உரைக்கக் கேட்குமாறு அசரீரியாகக் கூற, மன்னன் மகிழ்ந்து நூற் பொருளை விளக்குமாறு சேக்கிழாரைப் பணிந்து

வேண்ட, அவரும் அதற்கு உடன்பட்டு நூற் பொருளை நன்கு விளக்கினார்.

மன்னன் பெரிதும் மகிழ்ந்தான். ஏனையவரும் சேக்கிழாரது அடியார் பக்தியையும் அளவிறந்த கல்வியின் சிறப்பையும் போற்றிப் புகழ்ந்தனர். அரசன் சேக்கிழார்க்குத் தொண்டர் சீர் பரவுவார் என்ற பட்டத்தினையும் ஈந்தனன். பெரியபுராணமாம் திருத்தொண்டர் புராணத்தைச் சைவத் திருமுறைகள் பதினொன்றுடன் பன்னிரண்டாவது திருமுறையாகச் சேர்த்துப் பெருமை கொண்டனன். சேக்கிழார் பெருமானாரும் கூத்தப் பெருமானுக்குத் திருத்தொண்டு புரிந்து அப்பெருமானாரது திருவடி நிழலில் சேர்ந்து இன்புற்றனர்,

**காலம்:** சேக்கிழார் பெருமானார் திகழ்ந்த காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டாகும். சேக்கிழார் பெருமானார் இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்து இருந்தவர். இவனது காலம் கி. பி. 1123—1148. இவனே அநபாயன் என்ற பெயருடையவன். இக்கருத்தை வரலாற்று அறிஞர்களும் கல்வெட்டு அறிஞர்களும் ஒருசேர ஒவ்வியுள்ளனர்.

**பொதுக் குறிப்பு:** தெய்வப் புலவர் என்ற சிறப்புப் பெயர் பெற்ற திருவள்ளுவர்போல, நம் சேக்கிழார் பெருமானாரும் தெய்வப் புலவர் என்ற பெருமைக்குரியவர். வேறு எவரும் இப்பெருமைக்கும் பட்டத்துக்கும் உரியவர்கள் அல்லர். சேக்கிழார், திருவள்ளுவரது பெருமை கூறும் திருவள்ளுவ மாலைபோலச் சேக்கிழார் பிள்ளைத் தமிழ் என்ற நூலைப் பெற்ற பெருந்தகையார். தம்மீது உமாபதி சிவம் பாடிய தனித் புராணத்தையும் பெற்றவர். இவ்விரு நூற்களும் நூலாசிரியரையும், நூலையும் புகழ்ந்து பேசுவன. ஆனால், திருவள்ளுவ மாலை பல புலவர்களால் பாடப்பட்ட நூற் தொகுப்பாகும். சேக்கிழார் பிள்ளைத் தமிழ் ஒருவரால் புகழப்பட்ட பெருமையுடைய நூலாகும். என்றாலும்,

சேக்கிழார் பெருமானாரைப் பற்பல அறிஞர்கள் புராணங்களைப் பாடும்போது சேக்கிழார்க்கும் வணக்கம் செய்து அவரையும் அவர்தம் நூலையும் சிறப்பித்துள்ளதை நோக்கும்போதும், அவ்வணக்கப் பாடல்களை ஒன்றாகச் சேர்த்துத் தொகுத்துப் பார்க்கும்போதும் திருவள்ளுவர் மாலையில் திருவள்ளுவர் புகழப்பட்ட நிலைபோலச் சேக்கிழார்மீது பாடப்பட்ட பாடல் தொகுப்பிலும் காணலாம். இனிச் சேக்கிழார் பெருமானாரைப் போன்று பன்முகஞானம் பெற்ற புலவர்களைக் காண்டல் அரிது.

# திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் வரலாறு

திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள், கணக்காயர் சிதம்பரம் பிள்ளை அவர்கட்கும் அன்னத்தாச்சியார் என்னும் அம்மையார்க்கும் அரும்பெரும் பிள்ளையாக 1815-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6-ஆம் நாள் திரிசிரபுரம் சில்லாவைச் சார்ந்த அதவத்தூரில் பிறந்தனர் இவர் சைவ வேளாள மரபினர்.

திரு பிள்ளை அவர்கள் திருவாவடுதுறையைச் சார்ந்த ஸ்ரீ வேலாயுத முனிவரிடம் சமயநூல்களையும், இலக்கிய நூல்களையும் கற்றறிந்தார். இவர் தமது பதினறுவது ஆண்டில் காவேரி ஆச்சியாரை மணந்து இல்லறம் ஏற்றனர்; இவருக்குக் கல்வியில் இருந்த ஆர்வத்தால் பல அறிவு சான்ற பேரறிஞர்களையும் அடுத்துப் பல நூல்களைப் பயின்றனர். இவர் தெருத்தெருவாகப் பிச்சை வாங்கி உண்டு வந்த ஒரு பரதேசியிடம் தண்டி அலங்காரம் என்னும் அணி இலக்கண நூலைப் பயின்ருர் என்ருல், இவருக்கு இருந்த கல்வி பயிலும் ஆர்வத்தை என் என்பது!

திரு. பிள்ளை அவர்கள் திருவாவடுதுறை ஆதீனத்தை அடைந்தனர். அங்கிருந்தபோது, திருமடத்தைச் சார்ந்த ஸ்ரீ அம்பலவாண முனிவரிடம் பல சமயசாத்திர நூல்களைப் பயின்றனர். "தாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக" என்ற நல்லெண்ணத்துடன் ஆவ்வாதினத்தில் பல மாணவர் கட்குப் பாடம் சொல்லி வந்தனர். திரு. பிள்ளை அவர்கள் துறைசை ஆதீனத்தில் இருந்தபோது, திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ், சீகாழிக் கோவை, திருத்தில்லை யமக

அந்தாதி முதலான நூல்களைப் பாடினார். இவற்றின் மூலம் திரு. பிள்ளை அவர்களின் நுண்மாண் புலமையை அறிந்து இவருக்கு 1854-ஆம் ஆண்டு பல புலவர்கள் கூடிய சபையில் மகாவித்துவான் என்னும் சிறப்புப்பட்டத்தை அளித்தனர். இந் நிகழ்ச்சி, அதுபோது ஆதின கர்த்தராக விளங்கிய குரு மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் திருவாவடு துறையில் அருள் செங்கோல் நடாத்திய காலத்தில் நிகழ்ந்தது.

திரு. பிள்ளை அவர்கள் பெரிய புராணப் பிரசங்கம் செய்வதில் வல்லவர். இவரது பிரசங்கத்தைக் கேட்டு வந்த சைவத் திருவாளர் செட்டிநாட்டு வன்றொண்டச் செட்டியார் என்பவர், சேக்கிழார் பெருமானார்மீது ஒரு பிள்ளைத் தமிழ் பாடும்படி வேண்டினார். திரு. பிள்ளை அவர்கள் பிள்ளைத் தமிழ் பாடுவதில் மிக்க பேராற்றல் படைத்தவர்கள். பத்துப் பிள்ளைத்தமிழ் நூல்களைப் பாடியவர் இது கொண்டே திரு. பிள்ளை அவர்களைப் பிள்ளைத் தமிழ் மீனாட்சி சுந்தரம் பிள்ளை என்று அறிஞர்கள் கூறி வந்தனர். ஆகவே, திரு. செட்டியார் வேண்டுகோளை மறுக்காமல், சேக்கிழார் பிள்ளைத் தமிழ் நூலைப் பாடினார். திரு பிள்ளை அவர்கள் பெரிய புராணத்தினிடத்தும் சேக்கிழார் பெருமானிடத்தும் தமக்கு இருந்த பற்றும், ஈடுபாடும் கொண்ட காரணத்தினால்தான் திரு. செட்டியார் வேண்டியதும் சேக்கிழார் பிள்ளைத் தமிழைப் பாடியருளினர். திரு. பிள்ளை அவர்கள் பாடிய பிள்ளைத் தமிழ் நூல்களுள் சேக்கிழார் பிள்ளைத் தமிழே இறுதியானது. இந்நூலின் சிறப்பை இவ்விளக்க நூலில் பல இடங்களில் பரக்கக் காணலாம்.

திரு. பிள்ளை அவர்கள் இரு லட்சக் கவிகளுக்குமேல் பாடியிருப்பதாகக் கூறுவர். இவர் எழுபது புராணங்கள், பதினொரு அந்ததிகள், பத்துப் பிள்ளைத் தமிழ் நூல்கள், இரண்டு கலம்பகங்கள், ஏழு மாலைகள், மூன்று கோவைகள், உலா, லீலை ஆகிய பிரபந்தங்களில் ஒவ்வொன்று, தூது நூல் ஆகியவற்றை இவர் பாடியிருப்பனவாகக் கணக்கிட்டும் கூறுவர். இவரது நூல்கள் பலவற்றை இவரது

மாணவர்களுள் ஒருவரான மகா மகோ பாத்தியாய டாக்டர் உ. வே. சுவாமிநாத ஐயர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளை பிரபந்தத்திரட்டு, என்னும் பெயரால் வெளியிட்டுள்ளனர். திரு. பிள்ளை அவர்கள் அவ்வப்போது பாடிய தனிப் பாடல்கள், ஆனந்தக் களிப்புக்களும் உண்டு. காசி ரகசியம், சூத சங்கிதை ஆகியவற்றைத் தமிழில் மொழி பெயர்த்தனர். குசேலோபாக்கியனமும் இவரால் பாடப்பட்டதே. என்றாலும், இவரது மாணவரான வல்லூர் தேவராசப் பிள்ளை அவர்களின் பெயரால் இது வெளிவந்துளது. குமர குருபரர் சிவஞான முனிவர் வரலாறுகளையும் செய்யுட்களில் பாடியவர்.

திரு. பிள்ளை அவர்களின் மாணவர்கள் பூவாளூர் தியாக ராய செட்டியார், டாக்டர் உ. வே. சுவாமிநாதய்யர், மாயூரம் வேதநாயகம் பிள்ளை, சவரிராயலு பிள்ளை, வல்லூர் தேவராசப் பிள்ளை முதலியோர்கள்.

திரு. பிள்ளை அவர்களிடம் நல்ல நினைவாற்றல் உண்டு. இவரிடம் செருக்குக் கிடையாது. தம்மைப் புகழ்ந்து பேசார். எவ்ரிடமும் பணிவே காட்டுவர். பிறர்க்கு உதவி புரிவதில் முன் நிற்பவர். பொறுமைக் குணம் படைத்தவர். பிறரைப் பற்றிக் குற்றம் கூறுதவர். மாணவர்களிடம் அன்பு காட்டியவ்ர். போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து என்னும் பண்பினர். வளமும், பொருட் செறிவும் நயமும் அமையப் பாடல்களைப் பாடியவர். ஆயாசம், இன்றிக் கவிகளைப் பாட வல்லவர். மாட்டு வண்டியில் போகும்போதே ஒரு நூலையோ, புராணத்தையோ பாடி, முடிப்பவர் என்றால், இவரது கவி பாடும் ஆற்றலை என்னென்று வியப்பது!

ஒருமுறை ஸ்ரீ ஆறுமுக நாவலரும் இவரும் மார்கழி மாதம் மதுரை வையை ஆற்றில் விடியற்காலம் நீராடும் போது, நளிர் மிகுதியால் இருந்த நிலையில் திரு. ஆறுமுக நாவலர், ''பனிக்காலம் மிகக் கொடிது.'' என்றனராம். உடனே திரு. பிள்ளை அவர்கள், ''பனிக்காலம் மிக நல்லது''

என்றாராம். திரு. நாவலர் அவர்கள், திரு பிள்ளை அவர்கள், தம் கருத்தை ஒட்டியே விடை இறுத்தார் என்று நகைத்தனராம். அங்கிருந்தவர்கட்குத் திரு. பிள்ளை அவர்கள் கூறியது புரியாது திகைத்தபோது, திரு நாவலர் அவர்கள், "பனிக்கு ஆலம்" (விஷம்) மிக நல்லது என்று கூறிய பனியின் கொடுமையின் அறிவுறுத்தனர் திரு. பிள்ளை அவர்கள் என்று விளக்கினராம். இது செவி மரபு வரலாறு என்றாலும், திரு. பிள்ளை அவர்களின் நுண்ணறிவு உரையாடலிலும் துவங்குகிறது அன்றோ?

திரு. பிள்ளை அவர்களைப் பற்றி இவரது மாணவர்களும் நண்பர்களும் பாடிய பாடல்கள் பல உள. அவற்றுள் சில பின் வருவன. அவர்களின் சிறப்பை மேலும் அறியலாம்.

தேக்குபுகழ்ச் சோணாட்டில் திரிசிரா
மலையின்மிகு திருவம் ஓங்கும்
தூக்குபுகழ் வேளாளர் குலாம்புதியில்
சிதம்பர வேள் துலங்கப் பன்னாள்
ஆக்குபுகழ் எனத்தோன்றிப் பலகலையும்
ஒருங்கேஆய்ந் தான்றோர் பல்லோர்
வீக்குபுகழ் பரந்தகயி லாயபரம்
பரையாகி விளங்கா நின்ற

எங்கள்துறை சையைஅடைந்தம் பலவாண
தேவனடி இனிது சூட்டத்
துங்கமுடி வாய்ந்துசிவ ஞானகலை
அகங்கைநெல்லித் தோற்றத் தாய்ந்து
கங்கைதரித் தருள்சடையோன் பலதலத்து
மான்மியம்தன் கருத்தின் ஓர்ந்து
சங்கையில்செந் தமிழின்மொழி பெயர்த்தியற்றும்
கடப்பாட்டில் தலைமை ஆனோன்

மின்னும்அரன் அடிஅன்றிக் கனவிலும்வே
றெண்ணாத விரதம் பூண்டோன்
இன்னும்எம்போ லியர்பலருக் கிலக்கியமும்
இலக்கணமும் எளிது தந்தோன்

அன்னவன்பேர் மீனாட்சி சுந்தரநா
வலவன்என ஆய்ந்தோர் யாரும்
பன்னுபுகழ் பூதலமும் மீதலமும்
பாதலமும் பரவ நின்றோன்
—திருவாவடுதுறை ஆறுமுக சுவாமிகள்.

பெற்றாருள் நின்னைப்பெற் றார்போல்பெற்
றார்களும் பேண்பிறப்பை
உற்றாருள் நின்தனைப் போலஉற்
றார்களும் உன்அருளை
நற்றா ரணியுள் எனைப்போல்பெற்
றார்களும் நாடுறினும்
மற்றாற்றுற் றோர்தரும் மீனாட்சி
சுந்தர மாமணியே —தியாகராய செட்டியார்

சிரபுரக்கோன் மீனாட்சி சுந்தரவேள்
தன்பெயரின் சீர்மைக் கேற்ப
வரனுறுநல் பிரபந்த விடயத்தும்
உயர்ந்தெல்லாம் வல்லோன் ஆனான்
தரைமிகுநல் காவைஅகி லாண்டவல்லி
மேல்பிள்ளைத் தமிழைச் செய்தல்
ஒருபெருமை யோஅவற்குத் தேவிபரம்
ஆதலினால் உயர்ந்த தாமே
—மழவை மகாலிங்கையர்

நலம்விளக்கும் மீனாட்சி சுந்தரமால்
ஒருகோவை நவின்றான் சண்பைத்
தலம்விளக்க அவற்குநாம் புரிகைம்மா
றெவன்அழியாத் தனமே கங்கா
குலம்விளக்கும் கற்பகமே குருமணியே
திருவணியே குணக்குன் றேஇந்
நிலம்விளக்கும் தினகரனே எனஅவனை
வாழ்த்திடுவாய் நிதமும் நெஞ்சே
—குளத்தூர். வேதநாயகம் பிள்ளை

கந்தவே ளோஅலது கலைமகளோ
இவ்வுருக்கொண் டாய்காண் நின்னை
அந்தநாட் டவரும்இருந்து புலவோருக்
கர்சுசெய்ய அன்பால் பெற்ற

தந்தையே தந்தைஉனைத் தான்படிக்க
வைத்தவனே தமிழுக் காசான்
சுந்தரமா மதிவதனு மீனாட்சி
சுந்தரனே துலங்கு மாலே

—அட்டாவதானம் வேலாயுதக் கவிராயர்

மலையமுனி தவப்பேரு கலைமகளின் தவப்பேரு
மறிநீர் வைப்பில்
தலைமைபெறும் இவன்சனனம் எனப்பலபிள்
ளைத்தமிழைச் சாற்றும் வல்லோன்
குலைவில்புகழ் மீனாட்சி சுந்தரநா வலர்ஏறு
குடந்தை மேய
மலைமகள்மேல் ஒருபிள்ளைத் தமிழ்உரைத்த
தொருவியப்போ மதிமிக் கீரே

—சின்னசாமிப் பிள்ளை

இப்புவிசெய் தவந்தானே தந்தைதாய்
செய்தவமோ இசைத்த ஆசான்
செப்பமுடன் செய்தவமோ மீனாட்சி
சுந்தரவேள் செனனம் ஆகி
ஒப்பிலுயர் கல்வியும்சற் குணமும்நிறைந்
தகிலாம்மை உபய பாத
வைப்பிலன்பால் இனியபிள்ளைத் தமிழ் உரைத்தான்
புலவரெலாம் மகிழத் தானே

—திரிசிரபுரம் வீரராகவ செட்டியார்

இத்தகைய பேரறிவுப் பெருங் கடலாக விளங்கிய திரு. பிள்ளை அவர்கள், 1876-ஆம் ஆண்டு, பிப்பிரவரித் திங்கள் தமது 61-ஆம் ஆண்டு அம்மை அப்பனது அடிமலர் இணைகளில் இணைந்து இன்புறலாயினர். திரு பிள்ளை அவர்களின் முழுவரலாற்றைக் காணவிழைவார் இவரது மாணவரான மகாமகோ பாத்தியாய டாக்டர் உ. வே. சுவாமிநாதய்யர் எழுதியுள்ள விரிவான நூலில் கண்டு தெளியலாம்.

---

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திரிசிரபுரம் மகாவித்துவான்
மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் பாடிய

# சேக்கிழார் சுவாமிகள் பிள்ளைத்தமிழ்

## பாயிரம்

### விநாயகக்கடவுள் வணக்கம்

மாமேவு வான்பிறை முடிப்பிறை இரண்டென்ன
வாய்க்கடைத் தோற்றியஇரு
மருப்பிரண் டென்னஅம் கைக்கோ டிரண்டென்ன
மார்பில்முத் தாரம்என்னப்
பாமேவு பேர்உதர பந்தம்என அரைசூழ்
படாம்எனத் தாளின்முத்தம்
பதித்தகழல் எனவிரவ மேல்ஓங்கு பேருருப்
பண்ணவனை அஞ்சலிப்பாம்
ஏமேவு ஞானசபை இறைவர்தம் மேனியின்
இணங்குற எழுப்புலகெலாம்
என்னும்மறை ஆதியாக் கொண்டவர் உயிர்க்கருளும்
இயல்பனைத் தும்தெரித்து
நாமேவும் அம்முதலோ டொன்றவினை உருபுதொக
தான்கன்அடி ஆதிசெய்து
நால்சீரில் நால்நெறி விளக்கிஒளிர் சேக்கிழார்
நற்றமிழ்க் கவிதழையவே

[அருஞ்சொல் குறிப்பு]: மா-பெருமை, மேவு-பொருந்திய, ஏம்-பொன், ஞான சபை-சிற்சபை, சிதம்பரத்தில் நட

ராசப் பெருமான் நடனம் புரியும் சபை, இறைவர்-நடராசர், மேனி-அசரீரி, இணங்கு-பொருத்தம், உற-பொருந்த, மறை-வேதவாக்கியம், ஆதியா-முதலா, அருளும் இயல்பு-திருவருள் திறம், நாம்-பெருமை, அம்முதல்-இறைவர் எடுத்துக் கொடுத்த உலகெலாம் என்னும் அம்முதல், நெறி-வழி, வான்-ஆகாயம், வாய்க்கடை-கடைவாய், மருப்பு-யானைத் தந்தம், பாமேவு-பரவி இருக்கின்ற, சிறப்பித்துக் கூறப் படுகின்ற, உதரபந்தம்-வயிற்றில் கட்டப்பட்ட பட்டை, அரை-இடை, படாம்-ஆடை, கழல்-வீரத் தண்டை, விரவ-கலந்து பொருந்த, பண்ணவனை-விநாயகனும் தேவனை, அஞ்சலிப்பாம்-கைகூப்பித் தொழுவாம்.

**[விளக்கம்]:** ஏமம் என்னும் சொல் ஏம் என கடைக் குறைந்து நின்றது. தில்லைக் கூத்தப்பெருமான் நடன சபை பொன்னோடு வேய்ந்திருக்கும் காரணத்தால், "ஏம்மேவு ஞானசபை" எனப்பட்டது.

எந்நூல் செய்யினும் அந்நூற்குப் பாயிரம் அமைய வேண்டுவது மரபு. இதனை உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க் கினியர்,

"எந்நூல் உரைப்பினும், அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்க என்பது இலக்கணம், என்னை?

ஆயிரம் முகத்தால் அகன்ற தாயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே

என்றார் ஆதலின்" என்று கூறி யுள்ளனர். இந்த அளவிலும் அவர் நிறுத்திலர். பாயிரத்தின் இன்றி அமையாமையினை,

"பாயிரம் என்றது, புறவுரையை. நூல் கேட்கின்றான் புறவுரை கேட்கில் கொழுச்சென்றவழித் துன் ஊசி இனிது செல்லுமாறு போல, அந்நூல் இனிது விளங்குதலின் புறவுரை கேட்டல் வேண்டும்: என்னை?

பருப்பொருட் டாகிய பாயிரம் கேட்டார்க்கு
நுண்பொருட் டாகிய நூல்இனிது விளங்கும்."

என்றார்.

மேலும் பாயிரத்தின் சிறப்பை விளக்க எண்ணிய நச்சினார்க்கினியர்,

"அப்பாயிரம்தான் தலைஅமைந்த யானைக்கு வினை அமைந்த பாகன் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும், நூற்கு இன்றி அமையாச் சிறப்பிற்றாய் இருத்தலின், அது கேளாக்கால், குன்றுமுட்டிய குரீஇப் போலவும், குறிச்சி புக்க மான் போலவும் மாணுக்கன் இடர்ப்படும் என்க" என்று தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் எழுதிப் போந்தார்.

இறையனார் களவியல் உரையிலும், பாயிரத்தின் இன்றியமையாமையினை, "என்போல எனின், கருவமைந்த மாநகர்க்கு உருவமைந்த வாயில் மாடம் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும், தகைமாண்ட நெடுஞ்சுவர்க்கு வகைமாண்ட ஓவியம் போலவும், என்பது ஆகலின், பாயிரம் கேட்டே நூல் கேட்கப்படும்" என்று எழுதப்பட்டது.

நன்னூலிலும் பவணந்தியார்,

மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோள் நல்லார்க் கணியும்போல்—நாடிமுன்
ஐதுரையா நின்ற அணிந்துரையை எந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது

என்று எடுத்து மொழிந்துள்ளார். அணிந்துரை என்பது ஈண்டுப் பாயிரத்தை என்க.

பாயிரம் பொது, சிறப்பென இருவகைப்படும். அவற்றுள் இப்பாயிரம் சிறப்புப் பாயிரம் ஆகும். இப்பாயிரத்தில் தெய்வவணக்கமும், சொல்லப்போகும் பொருள் இன்னது என்பதும் கூறப்பட்டிருத்தல் காண்க. என்னை?

தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்
எய்த உரைப்பது பாயிரம் ஆகும்

என்பது விதி ஆதலின் என்க. இப்பாயிரப் பாடலில் தெய்வ வணக்கமாக விநாயகர் துதி தொடங்கப்பட்டிருத்தலையும்

"சேக்கிழார் நற்றமிழ்க்கவி தழையவே," எனச் செயப்படு பொருள் அமைந்திருத்தலையும் காண்க.

தில்லைப் பொன்அம்பலம் பொன்னால் வேயப்பட்டிருப் பதை நாம் இன்றும் காண்கின்றோம். இப்பணியைச் செய்த பெருமை சோழர்கட்கே உரியது. அங்ஙனம் வேய்ந்த பொன் ஓடுகளில் நமசிவாய என்னும் மந்திரம் பொறிக்கப்பட்டிருந்த தையும் அறிகிறோம். விஜயாலயன் மகன் ஆதித்த சோழன் தில்லைச்சிற்றம்பலத்தின் முகட்டைப் பொன் வேய்ந்தான். முதல் குலோத்துங்கன் மகன் விக்ரம சோழன் தில்லைச் சிற் றம்பலம் சூழ்ந்த திருச்சுற்று மாளிகை, கோபுரவாயில் இவற் றிற்குப் பொன் வேய்ந்தான். இவனுடைய மகன் இரண்டாம் குலோத்துங்கன் பேரம்பலம் பொன் வேய்ந்தான். இதனால் அவன் பேரம்பலம் பொன் வேய்ந்த சோழன் எனப்பட்டான். இந்த உண்மையினைக் கீழ்வரும் நம்பியாண்டார் உரைகளால் உணர்ந்து கொள்ளலாம்.

" சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பலமுகடு
கொங்கில் கனகம் அணிந்த ஆதித்தன்"
" செம்பொன் அணிந்து சிற்றம்பலத்தை"

இதனைப்பல் கல்வெட்டு வாயிலாகவும் உறுதிப் படுத்தலாம். இதனையே ஈண்டு "ஏம்மேவும் ஞானசபை" என்று குறிக்கப்பட்டது.

சேக்கிழார், திருத்தொண்டர் வரலாற்றைப் பாடுதற்கு இறைவர் திருமுன் நின்று வேண்டியபோது, கூத்தப்பிரான் "உலகெலாம்" என்னும் முதலை எடுத்துத்தர, அதனையே தம் நூலின் முதல் பாட்டிற்கு முதலாக எடுத்துக்கொண்டு சேக் கிழார் பாடினார். "இறைவர்தம் மேனி" என்றது அசரீரி. இவ்வாறு இறைவர் தமக்கு முதல் எடுத்து மொழிந்ததைக் குன்றைக் கோமகனார்.

அருளின் நீர்மைத் திருத்தொண் டறிவரும்
தெருளின் நீர்இது செப்புதற் காம்எனில்
வெருளின் மெய்ம்மொழி வான்நிழல் கூறிய
பொருளின் ஆகும் எனப்புகழ் வாம்அரோ.

என்று தாமே எடுத்து மொழிதல் காண்க. இறைவன் திரு வாய் மலர்ந்ததனுல் "உலகெலாம்" எனும் தொடர் மறை ஆயிற்று. இறைவர் உயிர்களுக்கருளும் இயல்பு அனந்தம். அவர் அவர்களின் தகுதிக்கேற்ப அருள்பவர். இதனைத்தான் திருஞான சம்பந்தர் "ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணம் ஆதிமாண்பும் கேட்பான்புகில் அளவில்லை" என்று அருளிப் போந்தார்.

ஆசிரியர் திரு பிள்ளை அவர்கள் "வினை உருபு தொக" என்னும் தொடரில் அரிய பொருள் நுட்பத்தினைப் புலப் படுத்தி யுள்ளனர். அதாவது,

உலாகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்

என்னும் திருத்தொண்டர் புராணப் பாடலின் ஈற்றடியில் உள்ள "மலர்சி லம்படி" என்னும் சீர்களுக்கு உண்மைப் பொருள் இதுதான்; வேறன்று, என்னும் அரிய குறிப்பை உணர வைத்துள்ளார். மலர் சிலம்படி என்பதன் பொருள், உலகெலாம் மலரும், மலர்கின்ற மலர்ந்த சிலம் பணிந்த திருவடி என்பதாம். அவ்வாறின்றி "மலர் போன்ற சிலம்பினை அணிந்த திருவடி" என்று உவமத்தொகையாகப் பொருள் கூறுதல் தவருகும். இப்பொருள் தருவதாயின் "மலர்ச்சிலம்படி" என்று சகர ஒற்று மிகுந்திருக்கும். ஆனல், மலர் சிலம்படி என ஒற்று மிகாது, வினைத்தொகை இலக் கணப்படி இத் தொடர் அமைந்துள்ளது. இவற்றைச் சீரிய முறையில் "வினை உருபு தொக" என்று பாடியருளினர். வினை என்றது ஈண்டு வினைத் தொகையைக் குறிக்கும். உருபு தொகுதலாவது இடையே முக்காலம் மறைந்திருத்தல் ஆகும். வினைத் தொகை இலக்கணம் கூற வந்த தொல் காப்பியர், "வினையின் தொகுதி காலத் தியலும்" என்றுர். இதற்கு விளக்கம் தந்த நச்சினர்க் கினியர், "வினைச் சொல்லினது ஈருய்த் தொக்கு நிற்கும் எழுத்துக்கள், காலத்

தின்கண்ணே தொக்கு நிற்கும்'' என்று எழுதிப் போந்தார். உரை ஆசிரியராம் உளம் கூர்ப் பெருமை இளம்பூரணர் பெயரெச்சங்கள் காலம் மறைந்து வருவன'' என்று உரை வகுத்தனர்.

நன்னூலார் வினைத் தொகை இலக்கண விதி கூறும் போது, ''காலம் கரந்த பெயரெச்சம் வினைத் தொகை'' என்று நூற்பா செய்தனர். இதற்கு உரை எழுதிய சங்கர நமச் சிவாயர் ''காலம் பற்றிப் புடை பெயர வினை உருபாகியதம் இறுதிகள் தொக்கு நிற்பச் செய்வதாதி அறுபொருள் பெய ராகிய தம் எச்சங் கொண்ட பெயரெச்சங்கள் வினைத் தொகைகளாம்'' என்று எழுதினர். இவை அனைத்தையும் உட் கொண்டே ''வினை உருபு தொக'' எனப்பட்டது. மலர் சிலம்படி என்பது ''உலகெலாம்'' என்பதோடு பொருந்தப் பொருள் கொள்ள வேண்டும் என்பதைத் தெளிவு படுத்தவே ''அம்முத லொடொன்ற'' எனப்பட்டது. ''அம் முதல்'' என் பது இறைவன் தந்த ''உலகெலாம்'' எனும் முதல். ''நான்கன் அடி ஆதி செய்து'' என்பது, உலகெலாம் என்னும் பாட்டின் நான்காவது அடியின் முதலில் மலர் என்னும் சொல்லை அமைத்து என்றவாறு. நான்கன் அடி ஆதி செய்து என்னும் தொடர்க்குச் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆதியான வற்றை நான்காவது அடியில் அமைத்து உணர்த்தி என்று பொருள் கூறினும் அமையும். ''மலர் அடி'' என்பது ஞானத்தையும், ''சிலம்படி'' என்பது யோகத்தையும், ''அடி வாழ்த்தி'' என்பது கிரியையையும், ''அடி வணங்குவாம்'' என்பது 'சரியையையும் உணர்த்தி நின்றவாறு அறிக. பின்னல் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற சொற்களை அமைத்துப் பாடப்பட்ட பாடல் வருதலின் ஆண்டு அவை விளக்கப்படும்.

இறைவனை அடைதற் குரிய வழி வகைகளில் சற்புத்திர மார்க்கம், தாசமார்க்கம், சகமார்க்கம், ஞானமார்க்கம் என்பனவும் கூறப்படும். இம் முறையில் நடந்து காட்டி யவர்கள் நம் சைவ சமயகுரவர்கள் நால்வர்கள். இறைவனை

தந்தையாக் கொண்டு அன்பர்கள் புத்திர நிலையில் நின்று வழிபடல், இறைவனை எசமானனாகக் கொண்டு, தாம் பணியாளராக நின்று வழி படல், இறைவனைத் தம் நண்பனாகக் கருதிப் போற்றுதல், இறைவனை ஞானாசாரி யனாகக் கொண்டு தாம் மாணவராக இருந்து வழி பாடாற்றுதல் ஆகிய இந் நால் நெறி இறைவனை அடைவதற்கு வாயில்களாகும் என்பதை முன்கூட்டி அறிவிக்கவே, அருண்மொழித் தேவர், தமது முதற் செய்யுளில் ஒவ்வோர் அடியிலும் நாற்சீர்களை அமைத்துப் பாடலைப் பாடினார் என்பார், "நாற்சீரினால் நால் நெறி விளக்கி ஒளிர் சேக்கிழார்" என்றனர். 'உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்' என்னும் அடியில் நான்கு சீர்கள் இருத்தலைக் காண்க. இவ்வாறேஏனைய மூன்று அடிகளிலும் நான்கு சீர்கள் பொருந்தி இருத்தலை உணர்க.

சேக்கிழார் எண்ணூறு ஆண்டுகட்கு முன்பு இருந்த வரேனும், அறிஞர் உள்ளத்தில் இன்றும் நிலவி இருத்தலின், ஒளிர் சேக்கிழார் எனப்பட்டார். "தமிழ்" என்றது ஈண்டுச் சேக்கிழார் மீது பாடப் பட்ட பிள்ளைத் தமிழ் நூல் ஆகும். ஆகுபெயராக நூலை உணர்த்தியது. தமிழ் ஓதற்கு எளி தாய் உணர்தற்கு அரிதாகி வேதப் பொருளாய் மிக விளங்கித் தீதற்றோர் உள்ளுதொறும் உள்ளுதொறும் உருக்கும் தன்மையதாய்இருத்தலின் நற்றமிழ்எனப்பட்டது.

செய்யுளைத் தொடங்கும் போது, மங்கலச் சொல்லை முன் அமைத்துத் தொடங்க வேண்டும் என்பது பின் வந்த பாட்டியல் இலக்கணமரபாகும். அம்முறைப்படி மா என்னும் மங்கலமொழி பெற்றுச் செய்யுள் தொடங்கப் பெற்றது.

இப்பாட்டின் முதல் எட்டடிகளின் திரண்ட பொருள், விநாயகப் பெருமான் விராட் சொரூபம் கொண்டபோது படிப்படியே, வானத்தில் உள்ள பிறைச்சந்திரன் விநாயகருக் குள்ள முடிப்பிறையோடு தானும் ஒரு முடிப்பிறையாகவும், விநாயகர் வாயிலில் உள்ள தந்தத்தோடு தானும் ஒரு கோடாக அமைந்து வாயிற் கொம்புகள் இரண்

டாகவும், விநாயகர் கையில் கொண்ட கோடுடன் தானும் விளங்கியபோது, கைக் கோடு இரண்டாகவும், விநாயகர் மார்பில் முத்தாரம் போன்றும், வயிற்றில் கட்டப் பட்ட உதரபந்தமாகவும், அரைக்கு ஆடையாகவும், விநாயகர் அணிந்த வார்க்கழலில் பதித்த முத்தாகவும் திகழ விளங்கினான் என்பது. ஈண்டு விநாயகர் சர்வவியாபியாக இருப்பவர் என்ற குறிப்பை உணர்த்தியவாறு. விநாயகர் தமது கொம்பையே ஒடித்துக் கயமுகாசூரனைக் கொன்ற காரணத்தால் அக் கொம்பு அவர் கையதாயிற்று. அக் கொம்பே வேதவியாசர் கூறிய பாரதத்தை எழுத எழுத்தாணியும் ஆயிற்று. இதனை வில்லிபுத்தூராரும்,

நீடாழி உலகத்து மறைநாலோ டைந்தென்று நிலை
நிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபார
தம்சொன்னநாள்
ஏடாக வடமேரு வெற்பாக அம்கூர் எழுத்தாணிதன்
கோடாக எழுதும்பி ரானைப்ப ணிந்தன்பு
கூர்வாமரோ.

என்று பாடி விநாயகரைப் பரவியுள்ளார். வாய்க் கோடும் கைக் கோடும் பிறைச் சந்திரனைப் போன்றவை என்பதை "இந்து இளம் பிறை போலும் எயிற்றனை" எனத் திருமந்திரத்தில் காணப்படுதலும் காண்க. கணபதியின் நெற்றியில் சந்திரன் இருப்பதைக் காசி துண்டிவிநாயகர் உருவில் நன்கு காணலாம்.

விநாயகப் பெருமானை வணங்க வேண்டும். வணங்குவதால் பலன் உண்டு என்பது நமது நாட்டுப் பழம்பாடல்களால் அறிகிறோம்.

திருவாக்கும் செய்கருமம் கைகூடும் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை.

எனப் பதினொரும் திரு முறைப் படலாலும்.

"குள்ளக் குள்ளனைக் குண்டு வயிறனை
வெள்ளைக் கொம்பனை விநாயகனைத் தொழு"

"வெள்ளைக் கொம்பனை விநாயகனைத் தொழத்
துள்ளி ஓடும் தொடர்ந்த வினைகளே"

"கருணை வள்ளல் கணபதி யைத்தொழ
அருமைப் பொருள்கள் அனைத்தும் வருமே"

"முப்பழம் வெல்லம் மோதகம் தின்னும்
தொப்பை அப்பனைத் தொழவினை இல்லை"

"வேழ முகத்து விநாயகனைத் தொழ
வாழ்வு மிகுத்து வரும்."

என்னும் பாடல்களாலும்,

The Elephant Head of Ganesha is a symbolical representation of victory. Hense at the commencement of every undertakings the orthodox Hindu offers prayers to the god to bless him with success.

—War in Ancient India·

வரிகளாலும் நன்கு உணரலாம்.

**விநாயகனே வெவ்வினையை வேர்அறுக்க வல்லான்**
**விநாயகனே வேட்கை தணிவிப்பான்—விநாயகனே**
**விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினால்**
**கண்ணில் பணிமின் கனிந்து.**

என்று கபில நாயனாரும் அறிவித்திருத்தலைக் காண்க. கணபதி விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதன் ஆதலின் ஜாவா, ஜப்பான், சைனா, நேபாளம், போன்ற இடங்களிலும் அவர் வடிவம் இருத்தல் கொண்டு உணரலாம்.

விநாயகர் பேருருப்பண்ணவன் என்பது சேக்கிழார் வாக்காகிய "நீள் முடிக் கடக்களிறு" என்று கொண்டும் தெரியலாம்,

## குருவணக்கமும் அவை அடக்கமும்

ஓங்குகயி லாயபரம் பரைநந்தி அடிகட்
குறுமரபெட் டாவதுபின் தோன்றலாய் எங்கள்
உயர்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய குரவற்
குற்றபத்தொன்பதாவதுமுன் தோன்றலாய்ப் பொலிந்து
தேங்குசிவப் பிரகாச முதலியவாய் மலர்ந்து
திகழ்உமா பதிசிவனே குன்றைஉற மேவித்
திருந்தும்ஏர் வளம்கொண்டு பெருமையின்மேல் ஆகிச்
சிறத்தலால் செம்மேனிக் குமரவேள் ஒத்தும்
பாங்குபெறத் துதிக்கையொடோர் கோட்டத்தன் ஆய
பயிற்சியின்அக் குமரவேள் திருத்தமையன் ஒத்தும்
பரவுசேக் கிழான்எனும்பேர் பரித்தலின்அக் கணேசப்
பண்ணவனை இனிதுயிர்த்த திருத்தாதை ஒத்தும்
வீங்குபுகழ் படைத்தஅருள் மொழித்தேவன் புராணம்
விரித்துரைத்தான் அவனடிதாழ்த்தென் அறிவிற்கேற்ப
மேயபிள்ளைத் தமிழ்எனஒன் றுரைப்பல்அஃ தறிவால்
மிக்கவர்தம் குழாத்தினுக்கு மிக்கநகை தருமே

**[அ-கு]** *மரபு-பரம்பரை, உறு-பொருந்திய அடிகட்கு உறு, குரவற்கு-ஆசிரியர்க்கு, பொலிந்து-சிறந்து, வாய்மலர்ந்து-சொல்லி, திகழ்-விளங்கும், குன்றை-குன்றத்தூர், இது குன்றை என மரூஉ இலக்கணப்படி வந்தது' உற-பொருந்த, ஏர்-கலப்பை, ஏர் அழகும் ஆகும், பாங்கு-அழகு, துதிக்கை-வணங்கும் கை. கோட்டம்-புலியூர்க் கோட்டம், திரு-சிறந்த, தமையன்-அண்ணனாகிய விநாயகன், பரவும்-போற்றும், பரித்தலில்-தாங்குதலால், பண்ணவன்-தேவன், உயிர்த்த - பெற்ற, திருத்தாதை - சிறந்ததந்தையான சிவபெருமானை, வீங்கு-மிக்க, அருள் மொழித் தேவன்-அருள்மொழித் தேவன் எனும் சேக்கிழார், குழாம்-கூட்டம்.*

***[விளக்கம்] :*** *ஏனைய பிள்ளைத் தமிழ் நூல்களில் குரு வணக்கமும் அவை அடக்கமும் காணுதல் அரிது. ஆனால்,*

திரு பிள்ளை அவர்களின் பிள்ளைத் தமிழ் நூல்களில் இம் முறையினைக் காணலாம்.

நல்மாணாக்கர்கட்குக் குரு மிகமிக இன்றியமையாதவர். குரு என்னும் சொல்லுக்கு இருளாகிய அஞ்ஞானத்தை நீக்கி ஒளியாகிய மெய்ஞ்ஞானத்தை அருளவல்லவன் என்பது பொருள். இறைவனைக் காட்டுபவன் குரு ஆவான் "உள்ளத்திருந்தும் ஒளித்தான் பரன், அக்கள்ளந்தனைத் தவிர்த்துக் காட்டினான் குரவன்" என்பது ஆன்றோர் வாக்கு. மணிமொழியாரும் குருவைத் தேடினார் என்பது "சற்குரு உளனோ என்று நாடுவார்" எனக் கடவுள் மாமுனிவர் கழறுதல் காண்க. ஆகவேதான், திரு பிள்ளை அவர்கள் ஈண்டுக் குரு வணக்கம் கூறினார்.

அவை அடக்கம் கூறிக் கொள்ளுதல் தமிழ் நாட்டின் தொன்று தொட்ட வழக்கம் ஆகும். கற்றறிந்த பெருமக்கள் கூடியிருக்கும் அவையில் அடங்கிப் பேசுதல் அவை அடக்கமாகும். ஆனால், அவை அடக்கம் என்னும் தொடர், அவைக்குத் தாம் அடங்குதல் என்னும் பொருளுடன், அவையைத் தம் திறனால் அடக்குதல் என்னும் பொருள் தருதலையும் ஈண்டு உணர்தல் வேண்டும். இங்ஙனம் இரு பொருள்களும் ஒன்று சேர அவை அடக்கம் செப்பிய பெருமை நந்தம் மெய்கண்டார் திருவாக்கால் நன்கு தெளியலாம். அப்பாடல்,

தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை உடமை எமைஇகழார்—தம்மை
உணரார் உணரார் உடங்கியைந்து தம்மில்
புணராமை கேளாம் புறன்

என்பது.

இறைவன் வீற்றிருக்கும் இடம் கயிலாயம். இது நொடித்தான் மலை என்று கூறப்படும். இதன் சிறப்பை "ஊழி தோறூழி முற்றும் உயர் பொன்நொடித்தான் மலை" எனச் சுந்தரர் சொல்லியுள்ளார். இக்கருத்தை நன்கு விளக்கும் பாடலாகிய,

புரந்தராதி வானவர்பதம் போதுறை புத்தேள்
பரந்தவான் பதம்சக்கரப் படையுடைப் பகவன்
வரந்தவாது வாழ்பதம்எலாம் நிலைகெட வருநாள்
உரம்தவாது நின்றூழி தோறோங்கும் அவ்வோங்கல்

என்பதையும் ஈண்டுக் கருத வேண்டும். இக் காரணங் களைக்கொண்டே இங்கு "ஓங்கு கயிலாயம்" என்றனர்.

யாவர்க்கும் முதற்குரு இறைவனே ஆவான். அவனே உயிர்களின் பக்குவம் அறிந்து, ஞானசாரியனாக வந்து அருள் புரிகின்றவன். இதனை நமது சிவஞான போதம்,

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த"

என்றும், அங்ஙனம் குருவாய் வந்து அருளும் முறையினை,

"மெய்ஞ்ஞானம் தானே விளையும்விஞ் ஞானகலர்க்கு
அஞ்ஞான அச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்உணர்த்தும் அன்றிப் பிரளயா கல்லருக்கு
முன்உணர்த்தும் தான்குருவாய் முன்"

என்னும் வெண்பாவாலும் நன்கு உணரலாம். இக் கருத் துக்களை மேலும் செவ்வனே விளக்குவான் வேண்டி அருள் நந்தி சிவாசாரியார்,

மன்னவன்தன் மகன்வேடர் இடத்தே தங்கி
வளர்ந்தவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ என்றவரில் பிரித்துப்
பெருமையொடும் தானாக்கிப் பேணு மாப்போல்
துன்னியஐம் புலவேடர் சுழலில் பட்டுத்
துணைவனையும் அறியாது துயர்உறும்தொல் [உயிரை
மன்னும்அருட் குருவாகி வந்தவரின் நீக்கி
மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்

என்று அருளிப் போந்தார்,

இத்தகைய அருட் குருமூர்த்தம், சைவ சித்தாந்த உண்மைகள் உலகில் எங்கும் பரவத் திருக் கயிலையில் கல்லால விருட்சத்தின்கீழ் தட்சணாமூர்த்தியாக எழுந்தருளி ஸ்ரீ கண்ட பரமேஸ்வரனைகத் திரு நந்திதேவர்க்கு உபதேசிக்க, அவர் சனற்குமார முனிவர்க்கும், அவர் சத்திய ஞான தரிசினிகட்கும், அவர் பரஞ்சோதி முனிவர்க்கும் முறையே உபதேசித்தனர். இச் சித்தாந்த உண்மை உபதேசம் இம்மண்ணுலகில் அகச்சந்தான நெறியாக வந்தருளியது. இதனை மண்ணுலகில் பரப்பிய இந்நால்வர்களைத் தேவ சந்தானத்தார் என்பர். இவர்களை அகச் சந்தான குரவர்கள் என்றும் கூறுவர்

அகச்சந்தான குரவர்களுள் நாலாமவராகிய பரஞ்சோதி முனிவர், மெய்கண்டார்க்குத் திருவருள் பாலித்து உபதேசம் புரிய, அவர்பால் அருள் நந்தி சிவம் திருவருள் பெற, அவருக்கும் பிறகு மறைஞானசம்பந்தர் உபதேசம் தீட்சை முதலியன பெற, அவர்பால் உபாபதி சிவாசாரியார் நல் உபதேசம் பெற்றனர். இந்நால்வரும் புறச் சந்தான குரவர் ஆவார்.

இங்கு நான்காம் குரவராகிய உமாபதி சிவாசாரியருக்குப் பின் நியமனம் பெற்றவர் அருள் நமசிவாயர் ஆவார். இவர்பால் தீட்சை பெற்றவர் சித்தமூர்த்திகளாகிய சிவப்பிரகாசர் ஆவார். இவர் தமது திருவருள் காரணமாகப் பஞ்சாட்சர தேசிகரென நமசிவாய மூர்த்திகளைத் திருவாவடுதுறையில் குருமூர்த்தமாக நியமித்தனர்.

இங்ஙனம் மெய்கண்டார் முதல், நமசிவாய மூர்த்திகள் வரை வந்த பரம்பரை பூத பரம்பரை எனப்படும். இப் பரம்பரையினை உபதே பரம்பரை என்றும் கூறுவர். ஸ்ரீ பஞ்சாட்சர தேசிகராம் நமசிவாய மூர்த்திகட்கும் பின் வந்த வருகின்ற பரம்பரை அபிஷேக பரப்பவரை என்ற பெருமைக்குரியது. இன்னோ ரன்ன பரம்பரை முறைகளை உள்ளடக்கியே, திரு பிள்ளை அவர்கள் "ஒங்குகயிலாய பரம்பரை"

என்று அருளிப் போந்தார். ஓங்கு என்னும் சொல் முதல்நிலை தீபக அணியாகக் கயிலை மலைக்கும், பரம்பரைக்கும் அடைமொழியாக நின்று சிறப்புச் செய்கிறது,

நந்தி அடிகட்கு உறுமரபில் எட்டாவதுபின் தோன்றல் உமாபதி சிவம். உமாபதி சிவம் எட்டாவது, பின்தோன்றல் என்பதை அகச்சந்தானத்தார் நால்வர், புறச் சந்தானத்தார் நால்வர் என்று குறிப்பிட்ட இடத்து விளங்குதல் காண்க.

திருவாவடுதுறை என்பது சோழ நாட்டில் பாடல் பெற்ற சிவதலங்களில் ஒன்று. இது கும்பகோணம் செல்லும் போது இடையில் வரும் நரசிங்கப் பேட்டை ரயில் அடிக்குத் தென் கிழக்கே ஒரு கல் தொலைவில் உள்ளது. பஸ் போக்கு வரவும் உண்டு. இத்தலத்தை அப்பர், சம்பந்தர், சுந்தரர் மூவரும் பாடியுள்ளனர். உமை அம்மையார் பசு வடிவுடன் இங்கு அடைந்து பூசித்த காரணத்தால் திருவாவடுதுறை என்றபெயரை இப்பதி பெற்றது. முசுகுந்தன் வழிபட்டுப் பிள்ளைப்பெறு பெற்றனன். மணிமொழியாரும் குருதரிசனம் கண்ட பதி. சுந்தரருக்குத் திருவாரூர்த் தியாகர் வடிவினைக் காட்டிய திருப்பதி. திருஞான சம்பந்தர்க்கு இத்தலத்து இறைவர் பொன் காசு அடங்கிய உலவாக் கிழியை அருளிய தலமும் ஆகும். திருமூலர் இத்தலத்தில் இருந்துதான் திருமந்திரங்களை அருளினர். இவர்தம் திருக் கோயிலும் இங்கு உண்டு. ஒன்பதாம் திருமுறை ஆசிரியர்களில் ஒருவரான திருமாளிகைத் தேவர் பல சித்துக்கள் செய்ய எழுந்தருளியுள்ள தலமும் இதுவே. படர் அரசமரம் உளது. தேவர்கள் இவ்வடிவில் இருக்க, இறைவர் இதன்கீழ் உள்ளனர். இங்குள்ள இரிடபம் தரும தேவதையாகும். அதனை இறைவர் ஊர்தியாகக் கொண்டதோடன்றி, அரசமர நிழலில் இருக்கவும் அருள் செய்த இடம். இங்குப் போதி அம்பலம் உண்டு. இங்குத் தேவர்கள் பொருட்டு ஆடியதாண்டவம் மகாதாண்டவம் எனப்படும். இங்குச் சித்தர்கள் வசிப்பதாகக் கூறுவர். இத்தலத்து இறைவர் மாசிலாமணி ஈசர், செம்பொன் தியாகர் என்றும், தேவியார் ஒப்பிலாமுலை அம்மை

என்றும், விநாயகர் அழகிய விநாயகர் என்றும் கூறப் பெறுவர். தீர்த்தம் கோமுத்தி தீர்த்தம். தலவிருட்சம் அரசு.

இங்குச் சிவராசதானியாகிய ஸ்ரீ பஞ்சாட்சர தேசிகர் ஆதீனம் உளது. இங்கு இதுபோல் சிவஞானபீடம் ஏறி அருட் செங்கோல் நடத்துபவர்; இருபத்தோராவது குருமகா சந்நிதானமாக வீற்றிருந்து அருட்கொடை வள்ளலாக விளங்குபவர் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகபரமாசாரிய சுவாமிகள் ஆவார். இவர்கள் இத் திருமடத்தில் ஆண்டு தோறும் ஸ்ரீ நமசிவாய குருமூர்த்திகள் குருபூசை விழாவில் திரு மந்திர சொற்பொழிவுகளேயும், திருமந்திர தொடர் புடைய நூல்களையும், ஏனைய அரிய பெரிய நூல்களையும் வெளியிட்டு இலவசமாக வழங்கி வருகின்றனர். இவர் தம் ஆட்சியில் சித்தாந்த சாத்திரங்கள் அவ்வளவும் வெளி வந்துள்ளன: வந்துகொண்டும் இருக்கின்றன. திருவெண்ணெய் நல்லூரில் ஆண்டுதோறும் ஸ்ரீமெய்கண்டார் மாநாட்டை நடத்துகின்றனர். தென்காசி, நாகர் கோவில் சுசீந்திரம் போன்ற இடங்களில் திருமுறை மாநாட்டை நடத்தி வருகின்றனர். புலவர் பெருமக்களுக்குப் பொருளை அவர்கள் உளம் களிக்கும் முறையில் வழங்கி வருகின்றனர்.

இன்னோர் அன்ன சிறப்புடன் திருவாவடுதுறை விளங்குதலின், முக்காலங்கட்கு உரித்தான உயர்வு தோன்ற ''உயர் திருவாவடுதுறை'' என வினைதொகை இலக்கணப்படி சிறப்பிக்கப்பட்டது. திரு பிள்ளை அவர்கள் இருந்து பல்வகைச் சிறப்புப் பெற்றுக் கல்வித் தொண்டை செய்தமையால், எங்கள் திருவாவடுதுறை என உரிமையோடு மொழிந்தனர். ஸ்ரீ ல ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகபரமாசாரிய சுவாமிகள், திரு பிள்ளை அவர்கள் காலத்தில் 18வது குரு மகாசந்நிதானமாகத் திருவாவடுதுறையில் ஆதீன மூர்த்தி யாக விளங்கியவர். இவர் திருக்கழுக்குன்றத்தில் சைவ வேளாள மரபில் தோன்றியவர். இவர் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மும் மொழிகளிலும் நன்கு தேர்ச்சி பெற்றவர். இவரைத் திருக்கழுக்குன்றப் பண்டார சந்நிதி

என்றும் கூறுவர். இவர்கள் கொடைத் திறம்வல்ல கோமகனுராகவும் திகழ்ந்தவர். புலவர்கட்கு நல்ல முறையில் பொருளை வழங்கி அவர்களை மகிழச் செய்தவர். இதனைத் திரு பிள்ளை அவர்களே,

உன்பத கமல மலரைநாய் அடியேன்
 உளம்எனும் குளத்திடை ஊறும்
அன்புநீர் பெருகி இருந்ததால் அதனுள்
 அலர்ந்திடத் திருவருள் புரிவாய்
மன்பதை உலகில் தரித்திர நோயில்
 வருந்திடா திருநிதி அமுதம்
துன்புறு தளிக்கும் துறைசைவாழ் பரனே
 சுப்பிர மணியசற் குருவே

என்று பாடிப் பரவசமுற்றிருப்பதைக் காண்க. இப்பரமாசரியர், தமக்கே அன்றி யாவர்க்கும் அரும்பெரும் துணையாய் அமைந்தவர் என்பதையும் பிள்ளை அவர்கள்,

செல்லர்க்கும் பெருமுழக்கம் மணமுழக்கம்
 எனமேல்போய்த் திகழ்மா டத்தால்
சொல்ஆர்க்கும் கழனிகளில் தொலையாத
 வளம்காட்டும் துறைசை மேவிக்
கல்லார்க்கும் நல்லார்க்கும் வல்லார்க்கும்
 அல்லார்க்கும் கணக்கி லாமற்
றெல்லார்க்கும் எய்ப்பில்வைப்பாம் சுப்பிரமண்
 ணியகுரவன் இருதாள் போற்றி

என்றும் போற்றி யுள்ளனர்.

இத்தகைய குருமூர்த்தியின் பத்தொன்பதாவது முன் தோன்றல் உமாபதி சிவம் ஆவார்.

இடையே உள்ள பதினேழு திருவாவடுதுறை ஆதீனகுரு மகாசந்நிதானங்கள். 1. ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர். 2. ஸ்ரீ மறைஞான தேசிகர். 3. ஸ்ரீ அம்பலவாண தேசிகர். 4. ஸ்ரீ உருத்திரகோடி தேசிகர். 5 ஸ்ரீ வேலப்ப தேசிகர்

6. ஸ்ரீ குமாரசாமி தேசிகர். 7. ஸ்ரீ பிற்குமார தேசிகர். 8. ஸ்ரீ மாசிலாமணி தேசிகர். 9, ஸ்ரீ இராமலிங்க தேசிகர். 10. ஸ்ரீ வேலப்ப தேசிகர். 11. ஸ்ரீ பின் வேலப்ப தேசிகர். 12. ஸ்ரீ திருச்சிற்றம்பல தேசிகர். 13. ஸ்ரீ அம்பலவாண தேசிகர். 14. வேளூர் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர். 15. ஸ்ரீ அம்பலவாண தேசிகர். 16. மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர். 17. ஸ்ரீ அம்பலவாண தேசிகர். 18. ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் (இவரே திரு பிள்ளை அவர்களின் காலத்தவர்) 19. ஸ்ரீ வைத்திலிங்க தேசிகர். 20. ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண மூர்த்திகள். இதுபோது 21 வது குருமகா சந்நிதானமாகத் திகழ்பவர் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்.

சிவப்பிரகாசம் என்பது உபாபதி சிவசாசிரியார் எழுதியுள்ள சைவசித்தாந்த சாத்திர நூல்களுள் ஒன்று: இது சிவஞானபோதம் சிவஞான சித்தியாரைத் தழுவிச் சார்பு நூலாகச் சைவ சித்தாந்த உண்மைகளைப் பாயிரம் உட்பட நூறு விருத்தயாப்பினால் அறிவிக்கும் நூல். சிவத்தை விளக்கிக் காட்டலின் இது சிவப்பிரகாசம் எனப் பெயர் சூட்டப்பட்டது. சிவப்பிரகாசத்தில் நுதலிய பொருள்,

புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்
புகல்அளவைக் களவாகி பொன்பணிபோல் அபேதம்
பிறப்பிலதாய் இருள்வெளிபோல் பேதமும்சொல் பொருள்போல்
பேதாபே தமும்இன்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனால் விளை[illegible]நாய் உடல்உயிர்கள் அருக்கன்
அறிவொளிபோ[illegible]றிவரும்அத் துவிதம் ஆகும்
சிறப்பினதாய் வே[illegible]த் தெளிவாம் சைவ
சித்தாந்தத் தி[illegible]குத் தெரிக்கல் உற்றாம்

என்பது. இந்நூ[illegible]நும் அவை அடக்கச் செய்யுள் பன்முறையும் படித்துச் சுவைத்தற்கு உரியது.

தொன்மையவாம் எனினும்எவையும் நன்றாகா இன்று
தோன்றியநூல் எனும்எவையும் தீதாகா துணிந்த
நன்மையினார் நலம்கொள்மணி பொதியும்அதன் களங்கம்
நவை ஆகா தெனஉண்மை நயந்திடுவர் நடுவாம்

தன்மையினுர் பழமைஅழ காராய்ந்து தரிப்பர்
தவறுநலம் பொருளின்கண் சார்வாராய்ந் தறிதல்
இன்மையினுர் பலர்புகழின் ஏத்துவர்ஏ திலார்உற்
றிகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர் தமக்கென ஒன்றிலரே

என்பது அப்பாடல்.

இன்னேரன்ன பொருட் பொலிவு செறிந்திலகலின், இதனைத் "தேங்கு சிவப்பிரகாசம்" என்றனர். 'முதலிய வாய் மலர்ந்து' என்றது, உமாபதிசிவம் சிவப்பிரகாசமேயன்றிச் சித்தாந்த சாத்திரங்களான திருவருட் பயன், வினவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சு விடுதூது, கங்கற்ப நிராகரணம் ஆகிய பிற நூல்களைச் செய்ததைக் குறிப்பிட்டே என்க. உண்மைநெறி விளக்கத்தையும் இவர் செய்தனரெனக் கூறும் மரபும் உண்டு. இவ்வெட்டு நூற்களைச் சித்தாந்த அட்டகம் என்பர்.

திரு பிள்ளை அவர்கள், உமாபதி சிவத்தை இங்ஙனம் பன்னிப்பன்னிக் குறிப்பிட்டதன் கருத்துச் சேக்கிழார் பெருமானுருடைய வரலாற்றைப் புராணமாகப் பாடித் தந்த காரணத்தால் என்க. திரு பிள்ளை அவர்கள், சேக்கிழார் பிள்ளைத் தமிழ் பாடுதற்கு அது பெருந்துணையாக அமைந்தது.

உமாபதி சிவாசாரியார், சிதம்பர தீட்சிதர் மரபில் தோன்றியவர். இவர் தென் மொழி, வட மொழிகளை நன்கு பயின்றவர். தில்லைக் கூத்தப் பெருமானைப் பூசனை புரிந்து வந்தவர். இவர் சித்தாந்த சாத்திர நூல்களைப் பாடிய தோடின்றிக் கோயில் புராணம், திருமுறைகண்ட புராணம், திருத்தொண்டர் புராண வரலாறு என்னும் சேக்கிழார் புராணம், திருத்தொண்டர் புராண சாரம், திருப்பதிகக் கோவை பௌட்கராகம வியாக்கியானம் ஆகியவற்றையும் அருளிச் செய்தவர். இவர் சோழ அரசரால் முத்துப் பல்லக்கு, மேள தாளம், தீவட்டி ஆகியவற்றை அடைந்தவர். ஸ்ரீ மறை ஞானசம்பந்தரிடம் ஞான தீட்சை, உபதேசம் முதலியவற்றைப் பெற்றவர்.

இவர் தில்லையில் கொற்றவன் குடியில் ஒரு மடத்தில் தங்கியிருந்தவர். தில்லையில் விழாவின்போது, கொடி மரத்தின்மீது ஏற்றப்பட்ட கொடி, ஏருது பலமுறை விழுந்து விட, தீட்சிதர்கள் இவரிடம் முறையிட, இவர் வந்து கொடிக்கவி பாடிக் கொடியினை ஏற்றுவித்தனர்.

இறைவரது கட்டளைப்படி இழிகுலத்தவனுகக் கருதப் பட்ட பெற்றான் சாம்பானுக்குச் சிவ தீட்சை செய்து முத்தி சேரத் திருவருள் புரிந்தவர். அங்ஙனமே முள்ளிச் செடிக்கும் தீட்சை புரிந்து முத்தி கொடுத்தவர். இவரது காலத்தைக் கி. பி. 1270 முதல் 1315 வரை என்பர்.

உமாபதி சிவம் சேக்கிழார்க்குப் பிற்பட்டவர். அங் ஙனம் இருந்தும், திரு பிள்ளை அவர்கள், இவ்விரு சைவப் புல வர்களையும் ஒன்றுபடுத்திக் கூறவேண்டும் என்னும் ஆசைப் பெருக்கினுல், திகழ் உமாபதி சிவனே குன்றையுற மேவினுர் என்று கூறி இன்புறுகிருர். உமாபதி சிவம் முன்னும் பின்னும் என்றும் நிலவும் பெருமைக்குரியவர் என்னும் கருத்துத் தொனிக்கவே ''திகழ் உமாபதி சிவம்'' என்று பாடினர்.

குன்றை என்பது குன்றத்தூர் என்பதன் மரூஉ மொழி. இது சென்னைப் பல்லாவரம் இரயில் அடிக்கு நான்கு கல் தொலைவில் உள்ளது. சென்னையிலிருந்து பஸ் வழியாகவும் இதனை அடையலாம். ஏறக்குறைய 14 கல் தொலைவில் உள்ளது. இங்கு இரு சிற்றூர்கள் உள. ஒன்று திரு நாகேச்சரம் என்பது; மற்ருென்று நத்தம் என்பது. திரு நாகேச்சரம் சேக்கிழாரால் தாபனம் செய்யப்பட்ட பதி. இதுபோது நல்வளத்துடன் உள்ளது. இங்கு ஆண்டு தோறும், இறைவற்குப் பெருவிழாவும், சேக்கிழார்க்குச் சிறப்பு விழாவும் நடந்து வருகின்றன. செங்குந்தர்கள் இங்கு மிகுதியாக வாழ்கின்றனர். இவ்விடத்திலிருந்து அரை கல் நடந்தால் நத்தத்தை அடையலாம். குன்றத்தூர் என்னும் பெயர்க்குரிய காரணத்தை இங்குக் காணலாம். இங்குக் குன்றுகள் உண்டு. ஒரு குன்றில் முருகப் பெருமான் திருக் கோயில் உளது. இங்குச் சில ஆண்டுகளாகப் படிவிழா

சிறப்பாக நடந்து வருகிறது. இக்குன்றுகள் பழம்பெருங் குன்றுகள் என்ற காரணத்தால் அரசாங்கத்தாரைச் சார்ந்த புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் சில இடங்களை அகழ்ந்து பல பழம்பொருள்களைக் கண்டெடுத்துச் சென்னைப் பொருட் காட்சிச் சாலையில், "இவை குன்றத்தூரில் எடுக்கப் பட்டவை" என்ற குறிப்புடன் வைத்துள்ளனர்.

சேக்கிழார் பெருமான் பிறந்த இல்லம் இதுபோது திருக்கோயிலாகத் திகழ்கிறது. இங்கும் சேக்கிழார் திரு நட்சத்திரத்தின்போது பத்துநாள் விழா சிறப்பாக நடந்து வருகிறது. இங்குச் சேக்கிழார் மரபினரும், ஏனைய வேளாள மரபினரும் வாழ்ந்து வருகின்றனர். சைவ வைணவக் கோவில்கள் பழுதுபட்ட நிலையில் உள்ளன. இங்குக் கல் வெட்டுக்கள் காணப்படுகின்றன. இங்குச் சேக்கிழார் பெய ரால் ஒரு திருமடம் உளது. சேக்கிழார் திரு நட்சத்திரத்தில் திருப்பனந்தாள் அதிபர் ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள் மகேஸ்வர பூஜையை மிகச் சிறப்பாக நடக்க ஏற் பாடு செய்துள்ளனர். அன்று காலைமுதல் மாலைவரை சிறந்த முறையில் அன்னம் பாலிப்பினை அவர்கள் நடத்தி வருகின் றனர்.

இங்குச் செம்பரம்பாக்கம் ஏரிப் பாய்ச்சல் காரணமாகப் பயிர்கள் செழித்து வளர்கின்றன. இயற்கைக் காட்சி எழி லுடன் விளங்குகின்றது. ஒரு சிற்றோடையும் இவ்வூர் வழியே செல்கிறது.

இந்தக் குருவணக்கச் செய்யுள், சிலேடை அணியினைக் கொண்டது. சேக்கிழார் முருகப்பெருமானாகவும், விநாயகப் பெருமானாகவும், சிவ பெருமானாகவும் திகழ்கிறார் என்பதைச் சொற் சித்திரங்களில் வைத்துப் பிள்ளை அவர்கள் பாடியுள் ளார்.

சேக்கிழார் வேளாள மரபினர். ஆகவே, அவர் ஏர் வளம் உடையவர். மேலும், அவர் பெருமையில் மேல் ஆகி இருப் பவர். இவற்றைச் சிலேடையில் ஏர் வளம் என்பதை அழகு வளம் கொண்டு என்றும், பெரும் மையில்மேல் ஆகி என்னும் பொருளிலும் சேக்கிழாரை முருகனாகவும் காட்டினார்.

சேக்கிழார் எப்போதும் துதிக்கும் கையுடையவர். தொண்டை நாட்டுக் கோட்டங்கள் இருபத்து நான்கு. அவற்றுள் ஒன்று புலியூர்க் கோட்டம். இக்கோட்டத்திற்குத் தலைநகரம் புலியூர். இது கோடம்பாக்கம் பழனியாண்டவர் கோவிலுக்கு அண்மையில் உள்ளது. அதனைச் சுற்றியுள்ள ஊர்கள் கோவூர், குன்றத்தூர், பூவிருந்த வல்லி. இவை நான்கும் கொண்டதே புலியூர்க் கோட்டம். இக் கோட்டத்தைச் சார்ந்தவர் சேக்கிழார். இதனால் இவரை ஓர் கோட்டத்தானாகி என்றனர். சேக்கிழாரைக் குறிக்கும் தொடர்கள் விநாயகரைக் குறிக்கும்போது, துதிக்கை என்பது விநாயகரது தும்பிக்கையினையும், ஓர்கோட்டத்தான் என்பது தன் கையில் ஒற்றைக் கொம்பை ஏந்தியவன் என்பதனையும் குறிக்கும்படி அமைந்திருத்தலின், சேக்கிழார் விநாயகரை ஒப்பாவர் என்று குறித்துள்ளனர்.

அருள்மொழித்தேவர் என்ற பெயருடைய நம் புலவர் பெருந்தகையார், சேக்கிழார் என்றே பெரிதும் செப்பப் படுபவர். கரிகால் சோழன் தொண்டை நாட்டில் நாற்பத் தெண்ணாயிரம் குடிகளைக் குடிபுகச் செய்தான் என்பது தெரிகிறது. அக் குடிகளுள் சிறந்தவர்கள் கூடல்கிழான் புரிசைக்கிழான், வெண்குளப்பாக்கிழான், சேக்கிழான் என்பவர்கள் தலை சிறந்த குடிகள்ஆவார். இவர்களுள் சேக்கிழார் குடியில் சிறந்து விளங்கியவர், அருள்மொழித்தேவர். அக் குடி சிறக்கும்படி திகழ்ந்தமையின், இவர் சேக்கிழார் என்றே சிறப்புடன் அழைக்கப் படுவார் ஆயினர். இந்த உண்மைகளைத் திருத் தொண்டபுராண வரலாற்று நூல்,

பாலாறு வளஞ்சுரந்து நல்க மல்கும்
பாளைவிரி மணங்கமழ்பூஞ் சோலை தோறும்
காலாறு கோலிஇசை பாட நீடும்
களிமயில்நின் றாடும்இயல் தொண்டை நாட்டுள்
நாலாறு கோட்டத்துப் புலியூர்க் கோட்டம்
நன்றிபுனை குன்றைவள நாட்டு மிக்க
சேலாறு கின்றவயல் குன்றத் தூரில்
சேக்கிழார் திருமரபு சிறந்த தன்றே

நாடெங்கும் சோழன்முனம் தெரிந்தே ஏற்றும்
நற்குடிநாற் பத்தெண்ணு யிரத்து வந்த
கூடல்கிழான் புரிசைகிழான் குலவு சீர்வெண்
குளப்பாக்கி ழான்வரிசைக் குளத்து ழான்முன்
தேடுபுக ழார்இவரும் சிறந்து வாழச்
சேக்கிழார் குடியில்இந்தத் தேசம் உய்யப்
பாடல்புரி அருண்மொழித்தே வரும்பின் நந்தம்
பாலரு வாயருவந் துதித்து வாழ்ந்தார்

என்று குறிப்பிடுதல் காண்க. சேக்கிழார்என்பது, சே+கிழார் எனப் பிரிக்கப்பட்டு, ரிஷபத்துக்கு (சேவிற்கு) உரியவராகிய (கிழார்) சிவபெருமான் என்று பொருள்தருதற்கும் இடமாய் இருத்தலின், சிவப்பெருமானையும் போன்றவர் சேக்கிழார் என்று கூறிய நயத்தைக் காண்க.

அருண்மொழித்தேவர் என்பது சேக்கிழாருக்குப் பெற்றோர் இட்ட பெயர். பெற்றோர்கள் ராஜராஜ சோழனிடம் அன்புடையவர்கள் என்றும், அவனது பெயர்களுள் ஒன்றான அருண்மொழித்தேவன் என்பதை இவருக்கு இட்டனர் என்றும் கூறுவர். ஆனால், சேக்கிழார், திருத் தொண்டர் புராணத்தைத் தெய்வத்திருவருள் மொழிகளைக் கொண்டு திகழும் முறையில் பாடியவர் என்ற காரணத்தால் அறிஞர்கள் இவ்வாறு பெயர் இட்டு அழைத்தனர் என்று கூறினும் அமையும். சிவனடியார்களைப் பற்றிய சிறு சிறு குறிப்புக்களே சுந்தரர் திருத்தொண்ட தொகையிலும், நம்பி ஆண்டார் நம்பிகளின் திருத்தொண்டர் திரு அந்தாதியிலும் இருந்தமையின், அவற்றை விரித்து ஒரு பெரு நூலாகச் சேக்கிழார் செய்தமையின், ''புராணம் விரித்துரைத்தான்'' எனப்பட்டது.''

உமாபதிசிவம் சேக்கிழார் பற்றி ஒரு புராணமே பாடி இருக்க, நான் ஒரு பிள்ளைத் தமிழ் அவர் மீது பாடுவது, அறிஞர்கள் என்னைக் குறித்து நகையாடுதற்கே ஆகும் என்று அவையடக்கம் பாடியிருப்பது, திரு பிள்ளை அவர்களின் பண்பைப் புலப்படுத்துகிறது.

# 1. காப்புப் பருவம்

## தில்லை வாழ் அந்தணர்

கார்கொண்ட சோலைசூழ் ஆரூரர் ஓர்அரைக்
கால்நம்பி ஆரூரர்முக்
கால்அரைக் கால்ஆக முடிவுசெய் தருள்மாக்
கவித்திசையின் வீற்றிருக்கும்
ஏர்கொண்ட தில்லைமூ ஆயிரர்முன் வழுவரும்
எழுவரும் தழுவரும்எம
திதயம் தழால்கொண் டுறைந்திடச் செய்தவரை
எப்போதும் ஏத்தெடுப்பாம்
பார்கொண்ட தொண்டர்வர லாறுசொல் புராணம்அம்
பலவர்அருளால்அமைந்த
படிதெரித் திடஉலகெ லாம்எனும் சுருதிநாப்
பண்ணும்ஈற் றும்பொருத்திப்
பேர்கொண்ட சைவபரி பாடைஅறி வரியசம்
பிரதாயம் முதலியாவும்
பிறங்கத் தெரித்தெம்மை ஆண்டகுன் றத்தூர்ப்
பிரானைப் புரக்கஎன்றே

[அ-சொ] பார் - பூமியில், அம்பலவர்-தில்லை நடராசர், சுருதி - வேதமொழி, நாப்பண் - நடு, ஈற்றும்-இறுதியிலும். பிறங்க - விளங்க, புரக்க - காக்க, கார் - மேகம், ஆரூரர் திருவாரூர்த் தியாகர், நம்பி ஆரூரர் - சுந்தர மூர்த்தி சுவாமிகள், மா - சிறந்த, கவித்திசை - கவியில், திசை ஏழாம் வேற்றுமை உருபு. பரிபாடை - குழூஉக் குறி போன்றது. (அதாவது ஒரு கூட்டத்தார்க்குள் ஒரு பொருளைக் குறிக்க அமைத்துக்கொண்ட, சொல்) சம்பிரதாயம் - தொன்று

தொட்ட வழக்கு, வீற்றிருக்கும் சிறப்புடன் பொருந்தி இருக்கும், ஏர் - அழகு, வழு அரும் - குற்றம் இல்லாத, எழு வரும் - எழு அடியார்கள், தழுவ அரும் - தழுவ முடியாத, தழால் - தழுவி, உறைந்திட உள்ளத்தில் பொருந்திட ஏத்தெடுப்பாம் - போற்றுவாம்.

**விளக்கம்:** காப்பு என்பது காவல். ஈண்டுக் காப்புப் பருவமானது பாட்டுடைத் தலைவனும் குழந்தையைக் காக்கு மாறு தெய்வங்களை வேண்டும் பருவமாகும். குழந்தையின் பருவங்களைப் பகுத்துக் கூறும் புலவர், குழந்தையைக்காக்கப் படவேண்டிய தெய்வங்களைப் பற்றிப் பருவம் என ஒன்றை வகுத்துக் கொண்டு பிள்ளைத் தமிழைப் பாடுவார்.

பிள்ளைத் தமிழுக் குரிய பருவங்கள் இன்ன என்பதைக் கூற வந்த இலக்கண விளக்கம்,

கடுங்கொலை நீக்கிக் கடவுள் காப்பச்
செங்கீரை தால்சப் பாணி முத்தம்
வாரா னைமுதல் வகுத்திடும் அம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதேர் என்னும்
பெறுமுறை ஆண்பால் பிள்ளைப் பாட்டே

என்று குறிப்பிட்டிருத்தல் காண்க. அப்பருவ அமைப்புக்கள் இந்நூலில் அமைந்திருத்தலை அறியவும்.

காப்பு, குழந்தை பிறந்த இரண்டாம் மாதத்தில் கூறப் படும் என்பர். பொதுவாகக் காப்புப் பருவத்தில் இறைவன் இறைவி, திருமால் முருகன், கணபதி முதலான தெய்வங்களை வேண்டிக் குழந்தையைக் காக்க என்று படுதல் மரபு. இம்முறைகளை எல்லாப் பிள்ளைத் தமிழ் நூற்களில் காண லாம். ஆனல், திரு பிள்ளை அவர்கள், சேக்கிழார் பெரு மானுக்குக் காப்புத் தெய்வமாக எல்லோரும் பாடும் பொது முறையை மேற் கொள்ளாமல், ஒருதனிச் சிறப்பு முறை யைக் கைக்கொண்டனர். திரு பிள்ளைஅவர்கள் பாடும் இப் பிள்ளைத் தமிழுக்குச் சேக்கிழார் பெருமானுர் பாட்டுடைத்

தலைவர். அவர் திருத்தொண்டர்களிடத்தில் இடையறா அன்பும் பக்தியும் கொண்டவர். ஆகவே, அவர்களையே சேக்கிழாராம் குழந்தையைக் காக்க வேண்டும் என்று காப்புப் பருவத்தில் அமைத்துக் கொண்டனர். அங்ஙனம் அமைந்த முறையில் சுந்தரர் பாடியுள்ள திருத் தொண்டத் தொகையில் உள்ள ஒவ்வொரு பாடலையும் தலைப்பாக வைத்து, அப் பாடலில் குறிக்கப்பட்ட அடியார்களைச் சேக்கிழாராம் குழந்தையைக் காக்க என்று வேண்டுவாராயினர். இதனை இக் காப்புப் பருவம் முற்றிலும் காணலாம்.

திரு பிள்ளை அவர்கள், திருவாவடுதுறை ஸ்ரீ அ பல வாண தேசிகர்மீது பாடிய பிள்ளைத் தமிழ்க் காப்புப் பருவத்திலும், பொது முறைப்படி காப்புக் கூறாமல், அகச் சந்தானம் புறச் சந்தானம் முதலான சைவ சித்தாந்தக் குரவர் பெருமக்களைக் காப்பாகப் பாடியுள்ளமையினையும் ஈண்டு நினைவு கூர்க. ஆகவே, பிள்ளைத் தமிழில் ஒரு புது முறைக் காப்புப் பருவம் பாடிய பெருமையினால் போலும், திரு பிள்ளை அவர்களைப் பிள்ளைத் தமிழ் மீனாட்சி சுந்தரம்பிள்ளை என்று அழைத்தனர். இவரே பொதுமுறையினைக் கையாண்டு காப்புப் பருவம் பாடிய பிள்ளைத் தமிழ் நூல்கள் பல உள.

பெரிய புராணம் என்பது பெருவழக்காயினும், திருத் தொண்டர் புராணம் என்பதே இந்நூலுக்கு உரிய பெயராகும். இதனைச் சேக்கிழாரே,

இங்கிதன் நாமம் கூறின் இவ்வுலகத்து முன்னாள்
தங்கிருள் இரண்டில் மாக்கள் சிந்தையுள் சார்ந்துநின்ற
பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்குகின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர் புராணம்
என்பாம்

என்று குறிப்பிட்டுள்ளனர்.

திருத்தொண்டர் புராண வரலாற்றிலும் உமாபதி சிவம்,

சேண்தகைய திருத்தொண்டர்
புராணம்எனப் புராணத்
திருமுறைக்குத் திருநாமம்
சீர்மைபெற அமைத்திட்டு

எனக் கூறியுள்ளனர். இதனால்தான் "பார்கொண்ட தொண்டர் வரலாறு சொல் புராணம்" எனப்பட்டது.

பார் என்பது உலகம். உலகம் என்பது உயர்ந்தவர்களைக் குறிக்கும். "உலகம் என்பது உயர்ந்தோர் மேற்று" என்பது தொல்காப்பியம். ஆகவே, உயர்ந்தவர்களால் சிறப்பாகக்கொள்ளப்பட்ட நூல் ஆதலின், "பார்கொண்ட தொண்டர் வரலாறு சொல் புராணம்" என்றார். அல்லது பார்கொண்ட என்பதைத் தொண்டர் மீது ஏற்றிக் கூறினும் அமையும்.

சேக்கிழாரே நூல் முழுதும் பாடி இருப்பினும், அங்ஙனம் பாடுதற்குத் துணையாய் இருந்தது கூத்தப்பெருமான் திருவருள் காரணம் ஆதலின், "அம்பலவர் அருளால் அமைந்தபடி" எனப்பட்டது.

உலகெலாம் என்பது இறைவன் திருவாக்கு. ஆகவே, அது வேதம் ஆயிற்று. உலகெலாம் என்பதில் முதலில் உ வும் ஈற்றில் ம்' மும் இருத்தலை வெளிப்படையாகவும், 'அ' என்பது ல கர ஒற்றில் மறைவாகவும் அமைந்து அ, உ, ம் என்னும் பிரணவ எழுத்துக்களைக் கொண்டு, பிரணவ வடிவில் இருத்தலை உய்த்து உணர்தல் வேண்டும். இப்பிரணவம் அருமறையில் முதல் இடை கடைகளில் பொருந்தி இருக்கிறது.

அங்ஙனமே பெரிய புராணமாம் சுருதியின் முதலிலும், இடையிலும், கடையிலும் உலகெலாம் என்னும் வேத மொழி அமைந்திருத்தலைத் தொண்டர் புராணத்தில் காணலாம். நூலின் முதலில் அமைந்திருத்தலை,

உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்

என்ற பாடலிலும், திருஞானசம்பந்தர்பற்றிய புராணத்தில்,

சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
ருதி யார்அருள் ஆதலின் அஞ்செழுத்து
ஓதி ஏறினர் உய்ய உலகெலாம்

என்று புராணத்தின் இடையில் பொருத்தப் பட்டிருத்தலையும்,

என்றும் இன்பம் பெருகும் இயல்பினல்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளார்அடி யார்அவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்

என்று புராணத்தின் ஈற்றுப் பாடலிலும் பொருந்தி இருத்தலைக் காண்க. இவற்றின் குறிப்பே "உலகெலாம் எனும் சுருதி நாப்பண்ணும் ஈற்றும் பொருத்தி" என்னும் தொடரில் காணப்படுவது. சைவ பரிபாஷை என்பது சைவ சமையிகட்குள்ளேயே அறிதற்குரிய சொல்லும் பொருளும் ஆகும். சேக்கிழார் இத்தகைய சைவ பரிபாஷைகளை ஆளவல்லவர் என்பது, கோட்புலிநாயனர் புராணத்து அவர், திருவிரையாக் கலி என்று குறிப்பிட்டிருத்தல் கொண்டு தெளியலாம்.

தந்தமர்கள் ஆயினர் தமக்கெல்லாம் தனித்தனியே
எந்தையார்க் கமுதுபடிக் கேற்றியநெல் இவையழிக்கச்
சிந்தைஆற் றுநினைவார் திருவிரையாக் கலிஎன்று
வந்தனையால் உரைத்தகன்றுர்மன்னவன்மாற்று ... யில்

என்ற அப்புராணப்பாடலில் காண்க. ஈண்டுத் திரு... யாக் கலி என்பது, சிவபெருமானைக் குறித்துச் சொல். ... தார் ஆணை எனப் பொருள்படும். இது சைவப் பெருமக்க ... க்கே அன்றி, வேறு யாவரும் அறிதற்கு இயலாதது.

சேக்கிழார் சம்பிரதாய முறைகளை நன்கு உணர்ந்தவர். இதனை இவரது புராணத்துள் பல இடங்களில் காணலாம். திண்ணனர் கன்னிவேட்டைக்குப் போகுமுன், தேவராட்டித்

திண்ணனுருக்கு எந்தெந்த வகையில் அலங்கரித்து, வாழ்த்தி அனுப்பினள் என்பதைச் சேக்கிழார் குறிப்பிடும்போது,

கானல்வரித் தளிர்துதைந்த கண்ணி சூடிக்
கலை மருப்பின் அரிந்தகுழை காதில் பெய்து
மானின்வயிற் றரிதாரத் திலகம் இட்டு
மயிற்கழுத்து மனவுமணி வடமும் பூண்டு
தானிழிந்து திரங்கிமுலை சரிந்து தாழத்
தழைப்பீலி மரவுரிமேல் சார எய்திப்
பூநெருங்கு தோரைமலி சேடை நல்கிப்
போர்வேடர் கோமானைப் போற்றி நின்றாள்.

என்று பாடியுள்ளனர். ஈண்டுத் தேவராட்டி வரவழைக்கப் படுதலும், காட்டு மர இலைகளைச் சூடுதலும், மான் கொம்பி னால் செய்த குழைகளை அணிதலும், பலகரை அணிதலும், கத்தூரி பொட்டு இடுதலும், மூங்கில் அரிசி அட்சதை தூவு தலும் வேடர்களின் சம்பிரதாயமாகும்.

சம்பந்தர் திருவாரூரைச் சிறப்பிக்கும்போது

சோலையில் வண்டினங்கள் சுரும்போடு இசைமுரலச்சூழ்ந்த
ஆலையின் வெம்புகைபோய் முகில்தோயும் ஆரூர்''

என்றும் ''தெங்குஉலாவு சோலை நீடும் ஆரூர்'' என்றும் ''செருந்தி ஞாழல் புன்னைவன்னி செண்பகம் செழுங்குரா அரும்பு சோலை ஆரூர்'' என்றும் சிறப்பித்தனர். அவ்வாறே ஈண்டும் ''கார்கொண்ட சோலை சூழ் ஆரூரர்'' என்றனர்.

திருவாரூரில் திருக்கோயில் கொண்டிருப்பவர் திருவா ரூரர். இது சோழ நாட்டில் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. சோழர்களின் ராஜதானிகளில் இதுவும் ஒன்றாகும். இது மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றாலும் சிறப்புடையது. இங்குள்ள இறைவர் புற்றிடங் கொண்டார். வன்மீக நாதர் திருமூலட்டான நாதர் என்றும் பெயர் பெறுவர். தேவியார் அல்லியங்கோதை அம்மையார், கமலாம்பாள் என்ற பெய ருடன் விளங்குகின்றனர். தீர்த்தம் கமலாலயம். இங்குத்

தியாகர் சந்நிதி விசேடமானது. அவர் வீதி விடங்கர் எனப் படுவார். இவர் திருமாலால் பூசிக்கப்பட்டுப் பின், இந்திரனால் பூசிக்கப்பட்டுப் பின் முசுகுந்த சக்ரவர்த்தியினால் இந்திரனிடமிருந்து கொணரப்பட்டு, இங்குத் தாபிக்கப் பட்டவர். இவரது நடனம் அசபா நடனம் எனப்படும். அதாவது நமது மூக்கு வழிவந்து போகும் ரேசக பூரகக் காற்றை போன்ற அசைவுடைய நடனம் என்பது. இத்தலம் பஞ்சபூத தலங்களுள் பிருதிவி தலமாகத் திகழ்வது. மூலட்டான மூர்த்தி புற்றுமண்ணாக இருந்தலை, இன்றும் காண லாம். இத்தலம் பூங்கோயில் எனப்படும். உச்சிக் காலத்தில் பவனி விடங்கற்கும் பூசை நடைபெறும். இங்கு மனுநீதி கண்ட சோழன் தன் நீதியை நிலைநிறுத்தும் பொருட்டுத் தன் மகனைக் கீழே கிடத்தித் தேரைச் செலுத்திய நிகழ்ச்சி, கல் சித்திரமாக இன்றும் காட்சி அளிக்கிறது. இங்குப் பிறந்தவர் களும் பிறப்பவர்களும், சிவகணங்களாகக் தப்படுவர். இதனால்தான் சுந்தரர் "திருவாரூர் பிறந் ள் எல்லார்க் கும் அடியேன்" என்றனர். இங்குள்ள ரக் கால் மண்ட பமே தேவாசிரிய மண்டபம் எனப்படு திருவாரூர் கோயில் குளமாகிய கமலாலயத்தின் நடுவிலும் ஒரு கோவில் உண்டு. சுந்தரர் தாம்பெற்ற பொன், மாற்றில் குறையாதது என் பதை உரைத்துக் காட்டிய விநாயகர் மாற்றுரைத்த விநா யகர் என்ற பெயருடன் குளக்கரையில் இன்றும் துலங்கிக் கொண்டுள்ளார். மூவர் முதலிகளும் இத்தலத்திற்கு மிகுதி யான பாடல்களைப் பாடியுள்ளனர். இங்குக் செங்கழுநீர் ஓடை என்னும் பெயருடைய ஓடையும் ஓடுகிறது. இத் தலம் திருவாரூர் ஸ்டேஷனுக்கு வடமேற்கே கற் சாலையில் ஒருகல் தொலைவில் உள்ளது. இந்தத்தலத்தின் இரண்டாம் பிராகாரத்தின் தென் கிழக்கில் மேற்கு மூலையில் அமைந்துள்ள கோயில், திருவாரூர் அறநெறி எனப்படும். இதனை அப்பர் பெருமானார் பாடியுள்ளார். இத்தலத்து இறைவர் அகிலேசர் என்றும், இறைவியார் அகிலேசுவரி என்றும் பெயர் பெற்றவர்கள். இந்த இறைவர்க்குத் திருவாரூர் குளத்தின் நீரையே நெய்யாக ஊற்றித் திருவிளக்

கேற்றி வழிபட்டவர் நமிநந்தி அடிகள். மற்ருெரு பாடல் பெற்ற தலமும் திருவாரூரில் உண்டு. அது திருவாரூர் கீழ் வீதியில் அமைந்துள்ளது. அதன் பெயர் திருவாரூர் பரவை யுண் மண்டலி என்பது. சுவாமியின் பெயர் மண்டலேசு வரர். தேவியார் பெயர், பஞ்சின்மெல் அடியாள். இத்தலத் தைச் சுந்தரர் பாடியுள்ளனர். இத்தலத்தைத் துலா நாயஞர் கோயில் என்றும் கூறுவர். தூவாய் நாயஞர் என்பது மருவித் துலா நாயஞர் எனப்பட்டது. இறைவர் தூவாயர் என்பதை, "தூவாயா!" என்று சுந்தரர் தம் திருப்பகத்தில் குறிப்பிடுதல் காண்க.

ஆளுடைய நம்பிகள் பரவையாரை மணந்து தியாகே சரை வணங்க வந்தவர், திருக்கோயில் புகும்போதே, ஆயிரக் கால் மண்டபமாம் தேவாசிரிய மண்டபத்தில் இருந்த அடியவர்கட்கு அடியார் ஆகும்நாள் எந்நாள் என்ற எண் ணத்துடன் நுழைந்தார். இதனைச் சேக்கிழார்,

கண்ணுதல் கோயில் தேவா
சிரியனும் காவ ணத்துள்
விண்ணவர் ஒழிய ம்ண்மேல்
மிக்கசீர் அடியார் கூடி
எண்ணிலார் இருந்த போதில்
"இவர்க்கியான் அடியார் ஆகப்
பண்ணுநாள் எந்நாள்" என்று
பரமர்தாள் பரவச் சென்ருர்.

என்று கூறியுள்ளனர்,

திருவர்ரூர்த் தியாகேசப் பெருமாஞர் நம்பி ஆரூரது அடி யார் பக்தியை வியந்து, அவர்க்கு அடியார்களின் பெருமை யினை உணர்த்தியதோடின்றி, "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்ற அடியினையும் அசரீரியாக எடுத்து மொழிந்து "பாடல்பாடு" என்றும் அருள் செய்தார். உடனே பாவையார் கேள்வஞர், திருவருள் துணை கொண்டு,

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனுர்க்கும் அடியேன்
இல்லையே என்னுத இயற்பகைக்கும் அடியேன்
இளையன்தன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்பொருளுக்கும் அடியேன்
விரிபொழில் சூழ்குன்றையார் விறல்மிண்டர்க்கு அடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே

என்று பாடி அருளினர்.

இறைவர் அங்ஙனம் அடி எடுத்துத் தந்ததைக் குன்றைக் கோமகனுர்,

தொல்லைமால் வரைபயந்த தூயாள்தன் திருப்பாகன்
அல்லல்தீர்த் துலகுய்ய மறைஅளித்த திருவாக்கால்
''தில்லைவாழ்அந்தணர்தம் அடியார்க்கும்அடியேன்என்று
எல்லையில்வண் புகழாரைஎடுத்திசைப்பா மொழி,''
என்றுன்

என்று எடுத்து மொழிந்துள்ளார்.

''சுந்தரர் பாடியுள்ள திருத்தொண்டத் தொகையின் முதல் திருப்பாட்டினை நன்கு உற்று நோக்குதல் வேண்டும். இப்பாடல் எட்டடிகளில் காட்சி அளித்தாலும், அஃது உண்மையில் நான்கடிகளால் ஆன பாட்டே ஆகும். எட்டுச்சீர்கள் கொண்ட ஒவ்வோர் அடியினையும் அப்படியே வரிசைப்படுத்தி அச்சிட வேண்டினுல், ஏடு இடந்தராது. ஆகவே, ஒவ்வோர் அடியும் இரு அடிகளைப்போல அச்சிடப்பட்டுள்ளதை நன்கு மனத்தில் கொள்ளுதல் வேண்டும். இங்ஙனம் உணர்ந்த போது, இப்பாட்டின் முதல் நான்கு வரிகள், அதாவது, ''தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்'' என்பது பெறப் படுகிறது. அவ்வடி திருவாரூர்த் தியாகர் எடுத்துத் தந்த அடி. ஏனையஅடிகள் வன்றெண்டர் வாக்கு என்பது புலனுகிறது. முழுப்பாட்டை நோக்கத் தியாகர் வாக்கு, அரைக்

கால் என்பதும், சுந்தரர் வாக்கு முக்கால் அரைக்கால் என் பதும் தெரிய வருகின்றன. இந்த அழகிய கருத்தையே திரு பிள்ளைஅவர்கள், "ஆரூரர் ஓர் அரைக்கால், நம்பி ஆரூரர் முக்கால் அரைக்காலாக முடிவு செய்து அருள் மாக்கவி" என்று பாடிக் காட்டினர்.

இந்தத் திருப்பாட்டின் முதல் இரு சீராக உள்ள தில்லை வாழ் அந்தணர் என்னும் தொடரே, காப்புப் பருவ முதல் பாட்டின் தலைப்பாக உள்ளது. இப்பாட்டில் குறிப்பிடப் பட்டவர்கள், தில்லைவாழ் அந்தணர்கள். திருநீலகண்டர், இயற்பகையார், இளையான் குடிமாறர். மெய்ப்பொருளார், விறல்மிண்டர், அமர் நீதியார் ஆகிய எழுவர்.

தில்லைவாழ் அந்தணர்கள் என்பார். சிதம்பரத்தில் நடராசப் பெருமானைப் பூசிக்கும் பேறு பெற்றவர்கள். இவர்கள் மூவாயிரவர் என்று கூறப்படுவார்கள். உண்மை யில் இவர்கள் இரண்டாயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பதின்மர்களே. இவர்களுள் நடராசப் பெருமானும் ஒருவராயிருந்தனர். இதனால் தில்லை மூவா யிரவர் ஆயினர்

திருநீலகண்டர் குயவர் மரபினர். சிதம்பரத்தில் வாழ்ந் தவர். சிவனடியார்கட்கு மண் ஓடு அளிக்கும் தொண்டில் ஈடு பட்டவர். இவர் இறைவனது திருநீலகண்டத்தில் பேர் அன்பு கொண்டவர். இக்காரணம்பற்றியே இவர் திருநீலகண்டர் எனப்பட்டார். இவர் இளமை காரணமாகத் தம் மனைவியார் இருக்க, வேற்றுமாதினிடம் சிறிது ஈடுபட்டிருந்தனர். இதனை மாற்ற எண்ணிய இவரது மனைவியார், இவர்க்கு எல்லாப் பணிகளைப் புரிந்தும், உடல் புணர்ச்சி இன்றி இருந்தனர். இந் நிலையில் இவர் அவரைத் தழுவ முயன்றபோது, "நீர் எம் மைத் தீண்டுவீர் ஆயின் திருநீலகண்டம்" என்றனர். திருநீல கண்டர் திடுக்கிட்டு எம்மை எனப் பன்மையில் கூறியதால், "மற்றைய மாதரார் தம்மையும் என் தன் மனத்தினும் தீண் டேன்" என்று உறுதி பூண்டு, பல்லாண்டு வாழ்ந்தனர். இந் நிலையில் இறைவர் ஓர் ஓட்டினை இவர்பால் தந்து, தாம் வேண்

டும்போது தருக, என்று வைத்துச் செல்ல, சின்னுட் கழித்து வந்துகேட்டபோது, அஃது இல்லாமல் போக, இறைவர் இருவரையும் கைகோத்துக்கொண்டு குளத்தில் மூழ்கி, "நாங்கள் அவ் வோட்டைக் களவாடவில்லை" என்று சத்தியம் செய்யுமாறு கூற, இருவரும் ஒரு கழியின் இருமுனையினைப் பிடித்து, குளத்தில் மூழ்கி எழுந்தபோது, கழி மறைந்து இருவர் கைகளும் ஒன்று சேர்ந்து பிடித்திருக்கும் கோலத்தில் மூப்பு நீங்கி, இளம் பருவத்தோடு காட்சி அளித்தனர். இறைவர். "இக்கோலத்தோடே நம்பால் இருக்க" என்று கூறி மறைந்தனர்.

இயற்பகையார் காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர் மரபில் தோன்றி, எவர் எது கேட்பினும் ஈந்துவந்தனர். இறைவர் இவர்பால் வந்து, இவர்தம் மனைவியாரைக் கேட்டனர். இவர் சிறிதும் தடை கூருது ஈந்தனர். இறைவர் அவ்வம்மையாரை அழைத்துச் சென்று திருச்சாய்க்காட்டில் விட்டு மறைந்தனர். நாயனர், திருவருளை வியந்து போற்ற இறைவர் அவர்க்குத் திருவருள் புரிந்தார்.

இளையான்குடிமாறர் இளையான்குடி என்னும் ஊரில் வேளாளர் மரபில் பிறந்தவர். மாறர் என்னும் பெயரினர். இவர் அடியார்கட்கு அமுது படைத்து வந்தவர். இவர் வறுமை உற்ற நிலையிலும் வந்தவர்க்கு எந்தவேளையும் இல்லை என்னுது உணவு அருத்தியவர். ஒருநாள் நல்ல மழையில் இறைவர் கிழவராய் இவர் வீட்டிற்குவர, அப்போது வீட்டில் ஒன்று இல்லாத நிலையில், நிலத்தில் விதைத்த விதைகளைக் கொணர்ந்து பக்குவப்படுத்தி உணவு ஊட்டியவர்.

மெய்ப்பொருள் நாயனர் திருக்கோவலூர் மன்னர். இவரை முத்தநாதன் என்பவன் வெல்ல முயன்றும், முடியாமையின், சிவனடியார்வேடம் பூண்டு, நாயனர் இடம்சென்று ஆகமம் உபதேசம் செய்வதாகக் கூறி, அவர் வணங்கும் போது கத்தியால் குத்தினன். அந்நிலையிலும் முத்தநாத

னுக்குத் தன் பரிசனங்களால் தீங்கு வராவண்ணம் வெளியே விட்டு வருமாறு கட்டளையிட்டு இறைவன் திருவடி உற்றனர்.

விறல்மிண்டர் செங்குன்றூர் வேளாளர். முன்னர்த் திருத் தொண்டர்களை வணங்கி, பின் சிவனுரை வணங்கும் கடப் பாடுடையவர். சுந்தரர் திருவாரூர் சென்றபோது, தேவா சிரிய மண்டபத்தில் இவர் அடியார் நடுவுள் இருந்த நிலையில் அவர் வணங்காது போவதைக்கண்டு, சுந்தரரும் தமக்குப் புறம்பு, சிவபெருமானும் புறம்பு என்று கூற, சுந்தரர் அடி யார்க்கு அடியேன் என்று அமைந்த திருத்தொண்டத் தொகையினைப் பாட மகிழ்ந்தவர்.

அமர் நீதியார் பழையாறைப்பதியில் துணி வாணிபம் செய்துகொண்டு, அடியார்கட்குக் கோவணம் கொடுக்கும் தொண்டில் ஈடுபட்டவர். ஒருமுறை சிவபெருமான் இவரிடம் வந்து, தம்மிடம் இருந்த கோவணத்தைக் கொடுத்து நீராடி வந்து, பின் பெற்றுக்கொள்வோம் என்று கூறிச்சென்று மீண்டுவந்து கேட்டபோது, அக்கோவணம் காணுதுபோ கவே, சிவபெருமான் தம்மிடம் இருந்த மற்ெருரு கோவணத் தைத் தராசில் வைத்து அதற்கு ஈடாகக் கோவண ஆடை கொடுக்குமாறு கேட்கத் தம்மிடம் இருந்த எல்லாத் துணி, மணி, ஆபரணங்களையும் வைத்தும் நிறை காணு நிலையில் தாம் தம் மனைவியாருடனும், தம் குழந்தையுடனும் ஐந்தெ ழுத்து ஓதி ஏறத் தட்டு நிறை கண்டது. இறைவர் காட்சி தந்து அருள்புரிந்தார்.

இவ்வெழுவர்தம் தொண்டும் குற்றம் அற்ற தொண்டு ஆதலின் "வழுஅரும்" எனப்பட்டது. இதனை இவர்களைப் பற்றிச் சொன்ன வரலாற்றுக் குறிப்புக்களை ஆழ்ந்து சிந்தித் தால் நன்கு தெரிந்துகொள்ளலாம். ஆண்டவனிலும் அடி யார் சிறந்தவர்கள் ஆதலின், எப்போதும் ஏத்தெடுத்தல் இன்றிஅமையாததாயிற்று.

*சேக்கிழாரும் "பெரியவர்தம் தூய அடியிணை தலைமேல் கொண்டு" "பொற்றாள் சென்னிவைத்து" என்று போற்றிய தோடின்றி,*

*உலகுய்ய ஆண்டு கொள்ளப் பெற்றவர் பாதம் உன்னித்*
*தலைமிசை வைத்து வாழும் தலைமைநம் தலைமை ஆகும்*

*என்றும் அறிவித்துள்ளார்.*

## இலைமலிந்தவேல்நம்பி

இலைமலி எனும்கவியுள் எழுபுவன மும்பரசும்
எழுமுனிவர் ஏத்தஅமர்வார்
எழுபுரவி வையமிசை எழுகதிரும் வட்குமணி
எழுஉருவும் உட்கும்ஒளிசால்
மலைமலி புயத்தர்எறி பத்தர்முதல் எழுபவமும்
மாய்த்தவிறல் எழுவோரையும்
வாயார வாழ்த்தித் துதித்தவர் அடிக்கமலம்
மலர்முடிக் கணிஆக்குவாம்
கலைமலி பெரும்புலவர் கைக்குவிக் கக்கலைக்
கன்னிநின் றேவல்கேட்கக்
கனகசபை யார்முதல் அளித்தருள அளவாம
கத்துவம் அடைந்திருந்தும்
அலைமலி சுணங்கன்ஒப் பேன்என் றுரைத்தருளி
யாம்பெருக் கத்துவேண்டும்
ஆன் றபணி வெனும்மொழிப் பொருள்தேற்று குன்றை
ஆளியைக் காக்கஎன்றே [நகர்

**[அ - சொ]** *கலை-சாத்திர அறிவு, மலி–மிகுந்த, கலைக் கன்னி-சாத்திரங்கட்குத் தேவியான சரசுவதி, ஏவல்-சொல் லிய பணி, கனகசபையார்-பொன் சபையில் வீற்றிருக்கும் நடராஜப் பெருமான். கனகம்–பொன், முதல்-புராணம் பாடுதற்கு முதல் தொடரான உலகெலாம் என்னும் முதல்,*

அளித்து-கொடுத்து, அருள-அருள்செய்ய, அளவா-அளவு படாத, மகத்துவம்-பெருமை, அலைமலி-அலைகள் நிறைந்த கடல் கரையில் உள்ள, சுணங்கன்-நாய், பெருக்கத்து-கல்வி, கேள்வி, செல்வம், பட்டம் முதலானவை சிறப்புற்ற காலத்தும், ஆன்ற-அமைந்த, நிறைந்த, பணிவு-தாழ்மை, ஆளி-சிங்கமாகிய சேக்கிழாரை, இலை மலி எனும் கவி-சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையின் இரண்டாவது பாடல், எழு-ஏழு, புவனம்-உலகம், பரசும்-போற்றும். துதிக்கும், ஏத்த-துதிக்க, அமர்வார்-பொருந்தி இருப்பவர், விரும்பப் படுவார், புரவி-குதிரை, வையம் மிசை-தேரில், எழு-வருகின்ற, கதிரும்-சூரியனும், வட்கும்-தன் ஒளி கெடும், பின்னிடும், மணி-அழகிய, எழு உருவம்-எஃகினால் ஆகிய தூணும், உட்கும்-அஞ்சும், சால்-மிகுந்த, மலைமலி-மலைபோன்ற, எழு-ஏழு, பவம்-பிறவிகள், விறல்-வன்மை, மலர்-அழகிய, அணி-ஆபரணம்.

[விளக்கம்] சேக்கிழார், பெரும் புலவர்களால் கைகூப்பி வணங்கத்தக்க பெருமை சான்றவர். ''சேக்கிழான் அடி சிந்தை இருத்துவாம்'' என்பர் மாதவ சிவஞான சுவாமிகள். ''சேக்கிழார் அடிபோற்றி'' என்பர் கொற்றவன் குடி உமாபதி சிவாசாரியார். இவ்விருவர்களும் பெரும் புலவர்கள் என்பது உலகறிந்த உண்மையாகும். மற்றும் பல புலவர்கள் சேக்கிழாரைக் கைகுவித்து வணங்கியுள்ளனர். ஆகவே, ''கலைமலி பெரும் புலவர் கைகுவிக்க'' எனப்பட்டது. சேக்கிழார் இறைவர் தந்த உலகெலாம் என்னும் தொடரை அமைத்து நூலைப் பாடத் தொடங்கியபோது, கலைமகள் அவர்தம் நாவில் இருந்து கொண்டு தேர்ந்த சொற்களை எடுத்துக் கொடுத்த வண்ணம் இருந்தனள். இதனை உமாபதி சிவம்,

பூவை மறந்தனள் வெண்டா மரைமயில்
புகல்தரு சங்கப் புலவோர்சொல்
பாவை மறந்தனள் தேச சுபாடிதப்
பயனை மறந்தனள் பதுமத்தோன்

நாவை மறந்தனள் பொதிய மலைத்தலை
நண்ணிய புண்ணிய முனிவனெனும்
கோவை மறந்தனள் சேவையர் காவல
னார்திரு நாவில் குடிகொண்டாள்

என்று எடுத்து மொழிந்துள்ளனர். இதனை உட்கொண்டு ஈண்டு, "கலைக் கன்னி நின்று ஏவல் கேட்க" எனப்பட்டது. சேக்கிழார் கலைஞர்களால் வணங்கப்படுதலும், கலைமகள் அவர் நாவிலிருந்து அவர் இட்ட பணியைச் செய்தலும், இறைவர் அவர்க்கு முதல் எடுத்துக் கொடுத்தலும் ஆகிய இவையே அளவாமகுத்துவம் ஆகும். இவ்வளவு பெருமைக்கு உரியவராயினும், தம் பணிவு தோன்றத் தம்மை ஒரு நாய்க்கு ஒப்பாக அவை அடக்கச் செய்யுளில் பாடி யுள்ளனனர். அப்பாடல்,

தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ரும்சீர் புகலல்உற் றேன்முற்றப்
பெருகு தெண்கடல் ஊற்றுண் பெருநசை
ஒருசு ணங்கனை ஒக்கும் தகைமையேன்

என்பது. இவ்வாறு இவர் கூறியதை உற்று நோக்குங்கால், இவர், திருவள்ளுவர் கூறிய,

பெருக்கத்து வேண்டும் பணிதல் ; சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு

என்னும் திருக்குறட்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றார் என்பது பெறப்படுதல் காண்க. இவற்றை நன்கு விளக்கவே "அளவா மகத்துவம் அடைந்திருந்தும், அலைமலி சுணங்கன் ஒப்பேன் என்று உரைத்தருளி, யாம் பெருக்கத்து வேண்டும் ஆன்ற பணிவு எனும் மொழிப் பொருள் தேற்று குன்றை நகர் ஆளி" எனக் கூறப்பட்டது. "பொருள் தேற்று" என்பதன் கருத்து, முன்னோர் மொழிகள், வெறும் வாய் மொழிகள் இல்லை. அம் மொழிகட்கு இலக்கியமாக இருப்பவர்கள் உண்டு என்பது.

சேக்கிழார் வாழ்க்கையிலும், வாக்கிலும் தெரிய வருகின்றது என்பதற்காகும்.

அநபாய சோழன் பேர் அரசன். அவன் சீவகசிந்தாமணி என்னும் நூலில் ஈடுபட்டவன். அத்தகையவனுக்குச் சிவனடியார் வரலாற்றைச் சொல்லி, அவ்ன் மனத்தைத் திருப்பலாமோ திருப்பக்கூடாதோ என்று சிறிதும் தயங்காது தமது உளக்கருத்தை உரைத்த உரம் பெற்றவர் சேக்கிழார் ஆதலின், ''ஆளி'' என்று ஈண்டுக் குறிப்பிடப் பட்டார். இலைமலி எனும் கவி,

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க் கடியேன்
ஏனாதி நாதன்தன் அடியார்க்கும் அடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்
கடவூரில் கலயன்தன் அடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் ஞாறன்
எஞ்சாத வாள்தாயன் அடியார்க்கும் அடியேன்
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயர்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே''

என்பது.

எழுபுவனங்கள் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், சன லோகம், தபோலோகம், மகாலோகம், சத்திய லோகம். இவை மேல் ஏழு லோகங்கள். கீழ் ஏழு லோகங்கள் அதலம், விதலம், சுதலம், தராதலம், மகாதலம், இரசாதலம், பாதாலம் என்பன. ஏழு முனிவர்கள் மரீசி, அங்கிரசன், புலகன், வசிட்டன், அத்திரி, புலஸ்தியன், கிருது ஆவார். ஒரு சிலர், கசியபன், அத்திரி, பரத்துவாசன், விசுவாமித்திரன், கௌதமன், ஜமதக்கினி, வசிட்டன் என்பர். அமர்வார் என்பது விரும்புவார் என்னும் பொருள் தருதலை,

அகன்அமர்ந்து செய்யாள் உறையும் முகன்அமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்'!

என்ற குறட்பாவில் காண்க,

ஏழு புரவி என்பது சூரியனது குதிரை யாகிய "சப்தர்" என்னும் பெயருடைய குதிரை ஆகும். முன்னைய ஏழு என்பது ஏழு என்பதையும், பின்னைய ஏழு என்பது எழுகின்ற என்னும் பொருளையும் தருதல் காண்க.

எறிபத்தநாயனார் தம் கையில் மழுவேந்திச் சிவனடியார்கட்குத் தீங்கு செய்வார் எவராயினும் அவரை வெட்டும் வீர தீரமுடையவர். ஆதலின் அவரை "மலைமலிபுயத்தர்" என்றனர். திரண்டு உருண்டு பருத்த தோளுக்கு மலை உவமை. எறிபத்தர் முதல் எழுவோர் ஆவோர், எறிபத்தர், ஏனாதி நாதர், கண்ணப்பர், குங்கிலியக்கலயர், மானக்கஞ்சாறர், அரிவாள்தாயர், ஆனாயர்.

எறிபத்தர், கருவூர் ஆன்நிலையில் உள்ள சிவபெருமானை வழிபட்டவர். கையில் மழு உடையவர். சிவனடியார்கட்குத் தீங்கு இழைப்பவர்களை அதுகொண்டு வெட்டி வீழ்த்துபவர். ஒருமுறை திருக்கோயிலுக்கு மாலை கொண்டு சென்ற சிவகாமி ஆண்டார் என்பவரை அரச யானை தள்ளி, மலரையும் மிதித்தது. அது கண்ட எறிபத்தர் அதனைத் தம் மழுவால் வெட்டினார். அரசன் இவர் அருகில் வந்து விசாரித்தபோது, தாம் யானையை வெட்டியதன் காரணம் கூறச் சோழ மன்னன், ஆனையின் குற்றத்திற்குக் காரணன் நானே என்று தன்னையும் கொன்றுவிட ,வேண்ட, அவனது அன்பை அறிந்த நாயனார் தம்மையே மாய்த்துக்கொள்ள முயன்றார். அரசன் தடுத்தான்; ஆண்டவன் இருவர்க்கும் திருவருள் புரிந்தான்.

ஏனாதிநாதர் சோழ நாட்டின் எயினனூரில் ஈழகுலச் சான்றோர் ஆவர். திருநீறு இட்டாரைப் போற்றுபவர் அரசர்க்கு வாள் வித்தை பயிற்றுவது அவர் தம் தொழில். அதனால் பெரும் பொருளைப் பெற்றுச் சிவனடியார்க்கு ஈந்தவர். அதிசூரன் என்பவன் ஒரு படை வீரன். நாயனார் மீது பொறாமை கொண்டு வாட்போர் தொடுத்தான். ஆனால், தோற்றான். என்றாலும், நாயனாரை வஞ்சனையால் வெல்லத் திருநீறு அணிந்த நெற்றியை, மறைத்துப் போரிட்டான். போர்க்களத்தில் மெல்ல திருநீற்றுப் பொலிவுடன் திகழ்ந்தான். அத் தோற்றத்தைக் கண்ட நாயனார் தயங்கிய

வராய்ப் போரிடுகையில், அதிசூரன் நாயனாரைக் கொன்றான். இறைவர் நாயனார்க்குத் திருவருள் புரிந்தார்.

கண்ணப்பர் கன்னி வேட்டையாடக் காளத்தி அருகே சென்றனர். வேட்டையாடிய பின்னர், காளத்தி மலையில் உள்ள காளத்தி நாதரைக் கண்டு, அவரை விட்டுப் பிரியாது, வேளாவேளைக்கு விலங்கின் தசையை உண்பித்து வந்தார். சிவகோசரியார் என்பவரும் இறைவரைப் பூசிக்கும் பேறு பெற்றவர். அவர் ஆலயத்தில் மாமிசத் துண்டுகள், எலும்புகள் இருப்பது கண்டு, அதன் காரணம் அறியாது வருந்தி, அவை அங்கு வாராவாறு அருள்புரிய இறைவரை வேண்டினார். இறைவர் அவர் கனவில், "நமக்கு அவ்வாறு மாமிசம் ஊட்டும் அன்பரது அன்பைக் காட்டுவோம். நீ மறைந்து காண்க" என்று கூறினார். அவ்வாறே சிவகோசரி யார் மறைந்திருந்தபோது, இறைவர் தம் கண்ணில் செந்நீர் ஒழுகச் செய்தார், திண்ணனார் என்ற இயற் பெயருடைய அவர், காட்டு மூலிகை கொண்டு செந்நீர் நிற்க முயன்றும், நில்லாமை கண்டு, தம் ஒரு கண்ணைத் தோண்டி அப்பினார். இறைவர் அடுத்த கண்ணிலும் இரத்தம் ஒழுகச் செய்ய, மற்றுமொரு கண்ணையும் தோண்டி அப்ப முயன்றபோது, இறைவர் தடுத்துத் தம் பக்கலில் இருக்க அருள் செய்தார். அன்று முதல் திண்ணனார் கண்ணப்பர் எனப்பட்டார்.

குங்கிலியக் கலயர் என்பவர் திருக்கடவூர்த் தலத்தில் இறைவர்க்குக் குங்கிலியப் புகையூட்டும் தொண்டில் ஈடுபட்ட ஒரு பிராமணர். குங்கிலியத் தொண்டால் இல்லம் வறுமையுற்றது. அந்நிலையில் அவர் மனைவியார் தம் தாலியை ஈந்து அரிசி முதலியன வாங்குமாறு அளிக்க, அதனையும் குங்கிலியம் வாங்கப் பயன்படுத்தியவர். இவர்தம் உண்மை அன்பால் இறைவர் இவரது வறுமையை நீக்கிப் பெருஞ் செல்வர் ஆக்கினார். அந்நிலையிலும் தம் திருத்தொண் டினையே பெரும் பேறாக இவர் மேற்கொண்டு சிவனடியார்களை உண்பித்து இறைவன் திருவருளைப் பெற்றவர்.

திருப்பனந்தாள் சிவலிங்கம் சாய்ந்து இருந்தபோது அதனை நிமிர்த்த, யானை கட்டி முயன்றபோது அது நிமிரா நிலையில் கலயர் சென்று கயிற்றைத் தம் கழுத்தில் பூட்டி இழுத்தபோது சிவலிங்கம் நிமிர்ந்தது.

மானக்கஞ் சாறநாயனார் கஞ்சாறு ஊரினர்; வேளாளர். சிவபெருமான் மாவிரதர்தம் கோலத்தோடு வந்து நாயனார் மகள் கூந்தலைக் கேட்டனர். அப்படியே அம்மகளார் கூந்தலை அறுத்துக் கொடுத்தவர். இறைவர் அவர்க்குத் திருவருள் புரிந்து மறைந்தார். கூந்தலும் வளர்ந்து விட்டது.

அரிவாள் தாயர் என்பவர் சோழ நாட்டில் கணமங்கலம் என்னும் ஊரினர்; வேளாளர். இவரது பெயர் தாயர் என்பது. மாவடு, செங்கீரை, செந்நெல் அரிசி இவற்றைச் சிவபெருமானுக்கு அமுது செய்து வந்தவர். வறுமையுற்ற நிலையிலும் இத் தொண்டை நிறுத்தாது செய்து வந்தார். ஒரு நாள் சிவனார்க்குரிய அமுதுப் பொருள்களை எடுத்துச் சென்றபோது உணவு இன்றி இளைத்த காரணத்தால் இடறிக் கீழே விழ, அங்கிருந்த வெடிப்பில் அரிசி, கீரை, மாவடு சிந்திப் போயின. உடனே அடியார் தம் கழுத்துக் குரல்வளையை அறுத்துக்கொள்ள முயன்றார். இறைவர் அவர்தம் அமுதை ஏற்றாற்போல் மாவடுவை விடேல் விடேல் என்று கடித்து ஓசை காட்டி ஊட்டியை அறுக் கொண்ணுவாறு செய்து அருள் புரிந்தார்.

ஆனாயர் மழ நாட்டில் திருமங்கலம் என்னும் பதியில் இடையர் குடும்பத்தில் தோன்றினார். ஆடு மாடுகளைக் காட்டகம்அழைத்துச் சென்று, புல் ஆர்த்திப் புனல் ஊட்டி வந்தார். ஓய்ந்த நேரங்களில் புல்லாங் குழலில் ஐந்தெழுத்தை இசைத்து இறைவரை உருகுமாறு செய்தார். இறைவர் இவர் முன் தோன்றித் திருவருள் புரிந்தார்.

எழுபவம் தேவர், மக்கள், விலங்கு, பறவை, நீர் வாழ்வன, ஊர்வன, தாவரம் என்பன. அடியார்கட்கு எப் பிறவியும் இல்லை ஆதலின், "எழுபவம் மாய்த்த எழுவர்"

எனப்பட்டனர். இவர்களது வரலாற்றுக் குறிப்பை உற்று நோக்கினல் இவர்களது வன்மை நன்டு புலப்படுதல் காணலாம். அதனுல்தான், "விறல் எழுவர்" எனச் சிறப் பிக்கப்பட்டனர்.

சிவனடியார்களை வாயார வாழ்த்தல் சைவர் மரபு. ஈண்டு வாழ்த்தல் துதித்தல். அடியார் திருவடிக் கமலங்களை முடிமீது சூட்டலும் சைவ முறை யாகும். இதனைச் சேக்கிழாரே,

காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்
தாழிய கடலே அதனிடை அமுதே அடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானேர் தனிநாதன்
ஏழிசை மொழியான் தன்திரு அருள்பெற் றனைஎன்பார்

என்றினைய பல கூறி "இருக்கும் மொழி அந்தணரும் ஏனை யோரும் நின்று துதி செய்து அவர்தாள் நீள் முடிக்கண் மேல் ஏந்தி" என்று பாடிக் காட்டி இருத்தல் காண்க. அப்பூதி அடிகளார், அப்பர் பெருமான் திருவடிகளைத் தம் முடிமேல் சூட்டிக் கொண்டதையும் சேக்கிழார்,

அரசறிய உரைசெய்ய அப்பூதி அடிகள்தாம்
கரகமலம் மிசைகுவியக் கண்அருவி பொழிந்திழிய
உரைகுழறி உடம்பெலாம் உரோமபுள கம்பொலியத்
தரையின்மிசை வீழ்ந்த்வர்தம் சரணகம லம்பூண்டார்

என்பதை ஈண்டு நினைவு கொள்வோமாக.

இவ்வெழுவர் திருவடிகளைச் சேக்கிழார் துதித்துப் போற்றினமையினை "எரிபத்தர் அடிகள் சூடி," என்றும் "ஏனதிநாதர் கழல் இறைஞ்சி" என்றும், "தங்கணல் மாற் றப் பெற்ற தலைவர்தாள் தலைமேல் கொண்டு" என்றும், "கலயனரைப் பணிந்து" என்றும், "ஒரு மகள் கூந்தல் தன்னை வதுவைநாள் ஒருவர்க்கீந்த பெருமையார் தம்மைப் போற் றும் பெருமை" என்றும், "வடுவின் ஓசை அந்நிலை கேட்ட தொண்டர் அடியினை தொழுது வாழ்த்தி" என்றும் கூறியுள் ளமை கொண்டு அறியலாம்.

# மும்மையால் உலகாண்ட

மும்மைமறை யும்பரவும் மும்மைஉல கும்புகழும்
முமமையாப் பகரம்ஆதி
மும்மைஉயிர் குறில்நெடில் தனித்தும்மத சவ்வூர்ந்தும்
முதல்அமையும் நாமம்உற்றூர்
செம்மைபெறும் மும்மையாம் வருணத் துதித்துச்
சிறந்தோங்கும் மூர்த்தியார்முன்
செறியும்இரு மும்மையார் செம்பொன் பதாம்புயம்
சென்னிவைத்தேத்தெடுப்பாம்
நம்மைஅருள் சிவபாத இருதயர் உளத்துவகை
நண்ணஒண் பொருள்ஆதலால்
நாடும்உழ வாரவலம் இயைதலால் யாவோரும்
நாவலர் பிரான்என்னலால்
வெம்மைதவிர் புகலியார்முதல்மூவ ரும்புகலும்
வேதத் தமிழ்க்கண்உள்ள
மெய்ம்மையை விரித்துத் தெரித்தருள்செய் குன்றையூர்
வேந்தைப் புரக்கஎன்றே

[அ - சொ] சிவபாத இருதயர் என்பார், திருஞான சம்பந்தருடைய தந்தையார். உவகை = மகிழ்ச்சி, நண்ண = பொருந்த, ஒண்பொருள் = ஒளியுடைய பொருளாம், குழந்தை (திருஞான சம்பந்தர்) உழவாரம் = புல் பூண்டு களைச் செதுக்கும் ஓர் இரும்புக்கருவி. வலம் = வலப்பக்கம் இயைதலால் = பொருந்தி இருப்பதால், நாவலர் = நாவன்மை யுடையவர், பிரான் = தலைவர், நாவலர் பிரான் = திருநாவலூரில் பிறந்த சுந்தரர், வெம்மை = பிறவியாகிய வெம்மை, சுரநோயாகிய வெப்பம். புகலியர் = புகலி என்னும் ஊரில், பிறந்த திருஞான சம்பந்தர், முதல் = முதன்மையான, மூவர் = திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தர மூர்த்தி சுவாமிகள், புகலும் = சொல்லும், வேதத் தமிழ் =

தேவாரத் திருமுறை, குன்றைவேந்தை=குன்றத்தூரில் பிறந்த சேக்கிழாரை, புரக்க=காப்பாற்றுக, மும்மை= மூன்றாகிய, மறை=வேதம், பரவும்—போற்றும், மும்மை உலகு=மண், விண், கீழ் என்னும் மூன்று உலகங்களும்,

நாம்=பெயர், உற்றார்=பொருந்தியவர், செம்மை= நேர்மை, மும்மையாம் வருணம் - பிராம்மண, க்ஷத்திரிய வணிகர் என்னும் மூன்று மரபு, முன் - முதலாக, செறியும்- பொருந்தி இருக்கும், இரு மும்மையார் - ஆறு நாயன் மார்கள், பொன் - அழகிய பத+அம்புயம் - திருவடிகளாகிய தாமரை, சென்னி - தலையில், ஏத்தெடுப்பாம் - துதிப்பாம் மும்மையாப்பு=மூன்றாவது பாடலாகிய "மும்மையால் உல காண்ட" என்ற பாடல். அப்பாடல்,

மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்
செம்மையே திருநாளைப் போவர்க்கும் அடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கும்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க [அடியேன்
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினால் எறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே

என்பது,

[**விளக்கம்**] "அகரம் ஆதி மும்மை உயிர்க்குறில்' அ, இ, உ என்னும் மூன்று குற்றெழுத்துக்ள் நெடில் என்றது ஊ என்னும் எழுத்தாகும். இவை தனித்தும் ம, த, ச ஊர்ந்தும் முதல் அமையும் நாமம் உற்றார் என்பதன் பொருள், மூர்த்தியார், முருக நாயனார், உருத்திர பசுபதி யார், திருநாளைப் போவார் திருக் குறிப்புத் தொண்டர்' சண்டேசரர்என்பது.

தனித்து உகரத்தை முதலாகக் கொண்டவர் உருத்திர பசுபதியார். உகரம் ஊர்ந்த மவ்வை (மகரமெய்யை) முதலாக உடையவர் முருகநாயனார். ஊகாரத்தோடு மகரம் ஊர்ந்த எழுத்தை முதலாகக் கொண்டவர் மூர்த்தியார்,

இகர உயிருடன் தகர ஒற்று ஊர்ந்த எழுத்தாகிய தி என்பதனை முதலாகக் கொண்டவர் திருநாளைப் போவார், திருக்குறிப்புத் தொண்டர். அகரம் ஊர்ந்த சவ்வை முதலாகக் கொண்டவர் சண்டேசுவரர். இந்த அரிய குறிப்புக்களே "குறில் நெடில் தனித்தும் ம, த, சவ்வூர்ந்தும் முதல் அமையும் நாமம் உற்றார்" என்னும் அடியில் பெறப்படுதல் காண்க,

வேதம் நான்கு. அவை இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன. இவ்வாறு வடமொழி வேதத்தை நான்காகப் பகுத்து ஒழுங்கு படுத்தியவர் வேதவியாசர். இதனை வில்லிபுத்தூரார் தம்பாரதத்தில் "தோத்திரமான தெய்வச் சுருதிகள் யாவும்நான்காக் கோத்தவன்" என்று வேதவியாசரைக் குறிப்பிட்டிருத்தல் காணவும். ஆகவே, வியாசர் நான்காகச் செய்தற்குமுன்பு, வேதம் மூன்றாகவே கருதப்பட்டது. அதுபோது அதர்வணம், ஏனைய மூன்றிலும் அடங்கி இருந்தது. இக்காரணத்தால் அக்காலத்தே வேதம் த்ரயீ என்றே வழங்கப்பட்டது. அதனை உட்கொண்டே ஈண்டு மும்மைமறை எனப்பட்டது. மும்மை உலகாவன சுவர்க்கம், மத்திமம், பாதளம். சுந்தரர் அருளிய திருத்தொண்டத்தொகையின் சிறப்பை மிகுதிப்படுத்த ஆசிரியர் "மும்மை மறையும் பரவும், மும்மை உலகும் புகழும் மும்மையாப்பு" என்று உயர்வு நவிற்சி அணி தோன்றக் கூறினார்.

மும்மையாம் வருணம் வைசிய மரபு, பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய என்ற முறைவைப்பில் வைசிய மரபு மூன்றாவதாக வருதலின், 'மும்மையாம் வருணம்' என்றனர். வணிகர்கள். உ இயல்பு இன்னது என்பதைப் பட்டினப் பாலை,

> வடுவ ் அஞ்சி வாய்மொழிந்து
> தமவ பும் பிறவும் ஒப்ப நாடிக்
> கொ ள்வதூஉமிகை கொளாஅது கொடுப்பதூஉம்
> குறைகொடாஅது
> பல் )பண்டம் பகர்ந்துவீசும்"

எனப் ( போற்றுகிறது.

சிலப்பதிகாரம், "குலத்தில் குன்றுக் கொழுங்குடி" என்கிறது. விநாயக புராணம், "கொடுப்பதும் குறைவின்றிக் கொள்வது மிகையின்றி வணிகர்கள் மற்று அறியார்" என்கிறது. வள்ளுவர் வணிகர்களுக்குக் கூறும் அறவுரை.

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின்"

என்பது.

இப்பண்புகளை மேற்கொண்டவர் வணிகர் என்பார், "செம்மைபெறும் மும்மையாம் வருணம்" என்றார். "மும்மையால் உலகாண்ட மூர்த்தி" எனச் சுந்தரர் மூர்த்தியாரைப் போற்றுகின்றார். இவரைச் சேக்கிழார் பாடும்பொழுது,

நாளும்பெரும் காதல் நயப்புறும் வேட்கை யாலே
கேளும் துணையும் முதற்கேடில் பதங்கள் எல்லாம்
ஆளும் பெருமான்அடித் தாமரை அல்ல தில்லார்
மூளும்பெரு கன்பெனும் மூர்த்தியார் மூர்த்தி யார்தாம்

என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் இவர் அரசாண்ட சிறப்பைக் கூறும்போது,

பாதம்பர மன்னவர் சூழ்ந்து பணிந்து போற்ற
ஏதம்பிணி யாவகை இவ்வுல காண்டு தொண்டின்
பேதம்புரி யாஅருள் பேரர சாளப் பெற்று
நாதன்கழல் சேவடி நண்ணினர் அண்ண லாரே

என்றும் பாடிக் காட்டினர். இன்னோரன்ன காரணங் கொண்டே "சிறந்து ஓங்கும் மூர்த்தியார்" என்ற அடை கொடுத்து ஓதினர். சிறந்து ஓங்கு என்னும் தொடரை அறுவருக்கும் இயைத்துப் பொருள் கொள்ளினும் கொள்க. "இருமும்மையார்" முன் கூறப்பட்ட அறுவர்.

மூர்த்தியார் மதுரையில் வணிகர் மரபில் உதித்தவர். அன்பே வடிவானவர். சொக்கலிங்கப் பெருமானுக்குச் சந்தனம் அரைத்துச் சாத்தும் தொண்டை மேற்கொண்டவர். பாண்டியநாடு சமணமதத்தவனான மன்னன் ஆட்சிக்

குட்பட்டது. அவன் மூர்த்தியார்க்குத் தீங்கு இழைத்தனன் என்றாலும், தம் தொண்டினை விட்டிலர். சந்தனக்கட்டை எங்கும் கிடைக்கா வண்ணம் அரசன் செய்தான். மூர்த்தியார் தம் முழங்கையைச் சந்தனக் கல்லில் தேய்த்தார். அதனால் செந்நீர் பெருக்கெடுத்தது. அந்நிலையிலும் விடாது தேய்த்த போது, இறைவர் அசரீரியாக,'' "அன்ப உன் அன்பை மெச்சினோம். தேய்த்தலை நிறுத்துக. நீயே அரசனாகும் வாய்ப்பு அளிப்போம்'' என்றுகூற மூர்த்தியார் கையும் செம்மையுற்றது. மன்னன் இறந்தான். அமைச்சர்கள் நாட்டிற்கு அரசனை அமைக்க யானையைக் கண்கட்டி ஏவி, அதுகொண்டு வருபவரை அரசனாக்கத் தீர்மானித்தனர். யானை மூர்த்தியாரைக் கொணர்ந்தது. அவர் அமைச்சர்களிடம்"தமக்குத் திருநீறு அபிடேகமாகவும், உருத்திராக்கம் ஆபரணமாகவும், சடை முடியாகவும் இருந்தால்தான் அரசை ஏற்பேன்'' என அவ்வாறே அவர்கள் இசைய, இம்முப்பொருளை ஏற்று அரசு செய்து, சைவம் ஓங்கச் செய்தார். இதனால் "மும்மையால் உலகாண்ட மூர்த்தியார்'' எனச் சிறப்பிக்கப்பட்டார்.

முருக நாயனார் சோழநாட்டுத் திருப்புகலூரில் வேதியர் குலத்தில் பிறந்தவர். சிவபக்தி அடியார். பக்தியுடையவர். இவர் மலர்மாலை கட்டிச்சாத்தி இறைவனை வழிப்பட்டவர். திருஞானசம்பந்தருடன் இவரும் இறைவன் திருவடியில் கலந்தனர்.

உருத்திரபசுபதியார் சோழநாட்டுத் திருத்தலைப்பதியில் வேதியர் குலத்தில் பிறந்தவர். இவரது பெயர் பசுபதி என்பது. இவர் தாமரைக் குளத்தில் இறங்கி, ஸ்ரீ உருத்திரத்தை ஓதுவார். ஆகவே, உருத்திர பசுபதியார் எனப் பட்டார்.

திருநாளைப் போவார் சோழநாட்டில் மேற்கா நாட்டின் ஆதனூரில் ஆதித்திராவிட மரபில் தோன்றியவர். இவரது இயற்பெயர் நந்தனார் என்பது. சிவபக்தி மிக்கவர். கோயில் இசைக் கருவிகளுக்கு வார், தோல், இவற்றைத் தருவர்

தொண்டை மேற்கொண்டவர். கோரோசனையும் கொடுத்து வந்தார். கோயிலுக்குள் செல்லாமல் வெளியில் இருந்த வண்ணமே, இறைவரைக் கும்பிட்டு உருகுவார். திருப்புன்கூர் சென்று வெளியே இருந்து வணங்கும்போது இறைவர், தம் முன் உள்ள நந்தியை விலகுமாறு செய்தார். இவ்வாறு விலகி இருத்தலை இன்றும் காணலாம். அங்குக் குளம் வெட்டினார். இவருக்குச் சிதம்பரம் சென்று தரிசிக்க எண்ணம் எழுந்தது. அவ்வண்ணம் நீடித்தபோது, "நாளைப் போவேன் நாளைப்போவேன்" என்று உறுதி கொண்டதால், திருநாளைப் போவார் எனப்பட்டனர். பிறகு தில்லை அடைந்தார். என்றாலும், "உட்சென்று கூத்தப்பெருமானைக் கண்டு இன்புறவில்லையே. நம் இழிபிறப்புத் தடையாக உள்ளதே" என்று உளம் குழைந்தார். கூத்தப்பெருமான் தில்லைவாழ் அந்தணர்கட்கு அவரை அழைத்துவரக் கட்டளை இட, அவர்களும் ஓமகுண்டம் அமைத்து அவரை அழைத்தனர். நந்தனார் கனவிலும் "உன் இழிபிறவி ஒழிய ஓமகுண்டத்தில் மூழ்கித் தூய்மையுற்று வருக" என்றருளினர். நந்தனாரும் அந்தணர்கள் அமைத்த தீயில் மூழ்கி எழுந்தபோது முழுநீறு பூசிய முனிவராகத் திகழ்ந்தார். ஆலயம் சென்றனர். கூத்தப்பெருமானைக் கண்டு, அவர் திருவடியில் கலந்தனர்.

திருக்குறிப்புத் தொண்டர் காஞ்சிபுரத்தில் வண்ணார் மரபில் உதித்தவர். சிவனடியார்கள் குறிப்பறிந்து தொண்டு புரிந்தவர். அவர்கள் ஆடையை வெளுத்துக் கொடுக்கும் தொண்டில் ஈடுபட்டவர். ஒரு நாள் சிவபெருமான் அடியார் வடிவில் வந்தனர். அவர் உடுத்திய ஆடை அழுக்கேறி இருந்தது. அதனை வெளுத்துத் தருவதாக வேண்டிப் பெற்றார். வந்தவரும் நீராடி வந்து பெற்றுக் கொள்வதாகக் கூறிச்சென்றார். அவர் சென்றதும் பெருமழை பொழியத் தொடங்கியது. நாயனார் ஆடையை வெளுத்தார். ஆனால், உலரவைக்க முடியவில்லை. "அடியார்க்குச் சொன்ன சொல்லைத் தவறிய நான், வாழ்ந்து பலனில்லை" என்று கல்லில் தம் தலையை மோதி மாய்த்துக் கொள்ள

முயன்றார். அதுபோது அக்கல்லிலிருந்து ஒரு கைதோன்றி அவரை மொத்துண்ணுவாறு செய்தது. இதற்கிடையில் இறைவரும் காட்சிதந்து திருவருள் புரிந்தார்,

சண்டேசுவரர் சோழநாட்டுச் திருச்சேய்ஞ்ஞலூரில் வேதியர் மரபில் தோன்றினர். இவரது தந்தை எச்சதத்தன் என்பவன். நாயனரது இயற்பெயர் விசார சருமர் என்பது. அவ்வூரில் பசுக்களை மேய்க்கும் இடையன், பசுக்களை அடிப்பதைக் கண்டு, தாமே அவற்றை நன்முறையில் மேய்க்கலாயினர்.

விசாரசருமர் மண்ணியாற்றங்கரையில் பசுக்களை மேய்த்து நீர்பருகச் செய்து வந்தார். இவர் அவ்வாற்றங் கரையில் ஆத்திமரத்தடியில் மண்ணால் சிவலிங்கம் அமைத்துப் பசுக்கள் தாமாகச் சொரிந்த பாலை அபிஷேகம் செய்து, சிவபூசை பண்ணிவந்தனர். இதனை ஒருவன் திருச்சேய்ஞ்ஞலூரார்க்கு அறிவித்தனன். தந்தை எச்சதத்தன் நேரேவந்து கண்டபோது, வெகுண்டு பூசைக்கு அமைந்த பாற்குடத்தைக் காலால்உதைத்தான். விசாரசருமர், சிவபூசைக்குத் தீங்கிழைத்த தந்தையின்காலைப் பக்கத்தில் இருந்த கழிகொண்டு வெட்ட, அது மழுவாக மாறி இருதுண்டாக்கியது. இறைவர், விசாரசர்மர் சிவபூசையினிடத்துக் கொண்ட பற்றைக் கண்டு காட்சி அளித்து, "இனி உனக்கு யாமே தந்தை. மேலும், உனக்குச் சண்டேசுர பதமும் தந்தோம்" என்று அருளிக் கொன்றை மாலையைத் தலையில் சூட்டி மறைந்தார் அன்று முதல் சண்டேசுவரர் எனப்பட்டார். இக்காட்சியைச் சிற்ப வடிவில் கங்கைகொண்ட சோழபுரத்தில் இன்றும் காணலாம்.

"ஒண்பொருள்" என்பது ஈண்டுப் புத்திரர் என்னும் பொருளது. அப்புத்திரர் திருஞான சம்பந்தர். அவர் சிவபாத இருதயர் திருமகனர். திருஞானசம்பந்தர் நம் மனோர்க்குத் திருவருள் பாலித்தவர். சம்பந்தர் காலத்தில் சைவம் குன்றிச் சமணம் ஓங்கி இருந்தது. அதன்பொருட்டுச் சிவபாத இருதயர் துன்புற்று இறைவரை வேண்டிப்பரசமயத்தை ஒழிக்கும் புதல்வர் பேற்றை விரும்பினர். இதனைச் சேக்கிழார்.

மனைஅறத்தில் இன்பமுறும் மகப்பெறுவான் விரும்புவார்
அனையநிலை தலைநின்றே ஆடியசே வடிக்கமலம்
நினைவுறமுன் பரசமயம் நிராகரித்து நீறுக்கும் [புரிந்தார்
புனைமணிப்பூண் காதலனைப் பெறப்போற்றும் தவம்

அருக்கன்முதல் கோள்அனைத்தும் அழகியஉச் சங்களில்
பெருக்கவலி யுடன்நிற்கப் பேணியநல் ஓரைஎழத்
திருக்கிளரும் ஆதிரைநாள் திசைவிளங்கப் பரசமயத்
தருக்கொழியச் சைவமுதல் வைதிகமும் தழைத்தோங்க

திசைஅனைத்தின் பெருமைஎலாம்
 தென்திசையே வென்றேற
மிசைஉலகும் பிறஉலகும்
 மேதினியே தனிவெல்ல
அசைவில்செழும் தமிழ்வழக்கே
 அயல்வழக்கின் துறைவெல்ல
இசைமுழுதும் மெய்யறிவும்
 இடம்கொள்ளும் நிலைபெருக

அவம்பெருக்கும் புல்லறிவின்
 அமண்முதலாம் பரசமயம்
பவம்பெருக்கும் புரைநெறிகள்
 பாழ்படநல் ஊழிதொறும்
தவம்பெருக்கும் சண்பையிலே
 தாவில்சரா சரங்கள்எலாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார்
 திருவவதா ரம்செய்தார்.

என்று குறிப்பிடுதல் காண்க.

இன்னோரன்ன காரணங்களால் சிவபாத இருதயர் மகிழ்ந்தனர். ஆதலின், "சிவபாத இருதயர் உளத்துவகை நண்ண" என்றார். பொருள் என்பது பெற்றெடுக்கும் பிள்ளை களைக் குறிக்கும் என்பதை, "பொருளொடு புணர்ந்த பக்கம்" எனத் தொல்காப்பியத்தும், "தம் பொருள் என்ப தம்மக்கள்" எனத் திருக்குறளிலும், "ஒண்பொருளும் நீ" என அப்பர் பெருமானார் வாக்கிலும் அறியவருவதை அறியவும். ஆகவே, ஒண் பொருள் ஆதலால் எனப்பட்டது.

ஈண்டுச் சேக்கிழார் பெருமானார் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர்க்கும் ஒப்பாவர் என்பது கூறப்பட்டுள்ளது. "சிவபாத இருதயர் உளத்து உவகை நண்ண ஒண்பொருள்" என்பதற்குச் சிவபாத இருதயர் மனத்தில் மகிழ்வு பொருந்தப் பிறந்த சிறந்த பிள்ளை" என்னும் பொருளுடன், "சிவனார் திருவடிகளை உளத்தில் கொண்ட சிவநேசர்களின் மனத்தில் மகிழ்ச்சிபெரும்படி செய்யும் ஒள்ளிய பெருஞ் செல்வம் ஆவார் சேக்கிழார்," என்றும் பொருள் தருதலையும், "நாடும் உழவாரம்வலம் இயைதலால்" என்பதற்கு "எவரும் விரும்பும், உழவாரப் படையின் தொண்டில் பொருந்தியிருக்கும் அப்பர் போன்று, எவரும் நாடும் உழவுத் தொழிலின்மேன்மை பொருந்தியிருக்கும், சேக்கிழார் என்றும் பொருள் தருதலையும், நாவலர் பிரான் என்பதற்குத் திருநாவலூரில் பிறந்த தலைவராம் சுந்தரர் என்னும் பொருளுடன், நாவீறு படைத்த புலவர் பெருமானாராம் சேக்கிழார் என்னும் பொருள் கொள்ளுதற்கும் இடம் இருத்தலின், "முதல் மூவரும் புகலும் குன்றையூர் வேந்து" எனப்பட்டார். மேலும், சேக்கிழார் மூவர் முதலிகளும் பாடிய தேவாரத்தின் உண்மைப் பொருளை விரித்திருக்கின்றமையாலும், மூவருக்கும் ஒப்பாவர் என்பதனாலும் "மூவரும் புகலும் வேதத்தமிழ்க் கண்ணுள்ள மெய்ம்மையை விரித்துத் தெரித்தருள் குன்றையூர் வேந்து" எனப் பட்டார்.

திருஞானசம்பந்தரின் தோற்றம், நம்மனோர்க்குத் திருவருள் பெறுதற்குப் பெருந் துணையாதலில், "நம்மை அருள் ***ஒண் பொருள்" எனப்பட்டது. திருநாவுக்கரசர் எப்போதும் உழவாரப்படை கொண்டு இலங்குதலை ஆசிரியர் சேக்கிழார்,

மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும்
திருவடிவும் மதுரவாக்கில்
சேர்வாகும் திருவாயில் தீந்தமிழின்
மாலைகளும் செம்பொன் தாளே

சார்வான திருமனமும் உழவராத்
தனிப்படையும் தாமும் ஆகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து
பணிந்தேத்திப் பரவிச் செல்வார்

என்று குறித்திருத்தல் காண்க.

இடையறுப் பேர்அன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவா ரத்திண்
படையறுத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறுப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடைஅருச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்

என்று நாவுக்கரசரை வடநூற்கடலும் தென்னூற் கடலும் நிலை கண்டுணர்ந்த சிவஞான முனிவரும் உழவாரப்படையினைக் குறித்தல் காண்க.

சுந்தரர், "தேரூர் நெடுவீதி நன்மாடமலி நாவலர் கோன்" எனத் தம்மைச் சுட்டிக் கொள்வதால் அவரை "நாவலர் பிரான் என்னலால்" என்றது மிகப் பொருத்தமே ஆகும். சுந்தரருக்கு இப்பெயர் தாம் பிறந்த இடத்தின் காரணமாக அமைந்திருந்தாலும், அவரது நாவின் வன்மையினால்அமைந்த பெயர் என்று பொருள்கூறினும் அமைவுடைத்தாகும். அவரது நாவன்மையினைப் பல இடத்தும் அவர்தம் பாடல்களில் பரக்கக் காணலாம். இதற்கு ஓர் இடமாகக் கீழ்வரும் அவரது நாவன்மை காட்டும் பாடலைக் காண்க. அது,

பாதியோர் பெண்ணை வைத்தாய்
படரும்சடைக் கங்கை வைத்தாய்
மாதர் நல்லார் வருத்தமது
நீயும் அறிதி அன்றே

கோதில் பொழில்பு டைசூழ்
குண்டையூர்ச்சிலநெல்லுப் பெற்றேன்
ஆதி யேஅற்புதனே
அவைஅட் டித்தரப் பணியே

என்பது,

சேக்கிழாரும் சுந்தரரை நாவலர்பிரான் என்பதனை அவர் யாத்த புராணத்தும் யாண்டும் காணலாம். சுந்தரர் தாம் முன்பே பரவையாரை மணந்திருந்தும், திருஒற்றியூர்ப் பெருமானிடம் தமக்குச் சங்கிலியாரையும் மணமுடித்துத் தர வேண்டும் என்பதை விண்ணப்பித்த விண்ணப்பம் எவ்வாறு இருந்தது என்பதைத் தம் நாவன்மை தோன்றப் பாடிய பாடலைப் படித்த அளவில் அறிந்து கொள்ளலாம். அதாவது,

மங்கை ஒருபால் மகிழ்ந்ததும் அன்றி
மணிநீள் முடியின்கண்
கங்கை தன்னைக் கரந்தருளும் காதல்
உடையீர் அடியேனுக்
இங்கு நுமக்குத் திருமாலை தொடுத்தென்
உள்ளத்தொடை அவிழ்த்த்
திங்கள் வதனச் சங்கிலியைத் தந்தென்
வருத்தும் தீரும்என

என்பது.

புகலியார் என்பவர் திருஞானசம்பந்தர். அவரை ''வெம்மை தவிர் புகலியார்'' என்றனர். அதற்குக் காரணம் அவர், கூன் பாண்டியனது வெப்பு நோயைத் தீர்த்தமையே ஆகும். இதனைச் சேக்கிழார்,

திருமுகம் கருணை காட்டத்
திருக்கையால் நீறு காட்டிப்
பெருமுறை துதிக்கும் ஆற்றல்
பிள்ளையார் போற்றிப் பின்னும்
ஒருமுறை தடவ அங்கண்
ஒழிந்துவெப் பகன்று பாகம்
மருவுதீப் பிணியும் நீங்கி
வழுதியும் முழுதும் உய்ந்தான்

என்று குறிப்பிட்டுள்ளார் ''பூழியர் கோன் வெப்பொழித்த

புகலியர்கோன்'' என்பது உமாபதி சிவத்தின் வாக்கு. திருஞானசம்பந்தரே தமது திருவாக்கில்,

போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்னன் உடல்உற்ற தீப்பிணி ஆயின தீர

என்று அருளிச் செய்துள்ளார்.

மூவர் என்னும் தொகைக்குறிப்பு அப்பர், சுந்தரர், சம்பந்தரை உணர்த்திவரும். ''மொழிக்கு மொழி தித்திப்பாகும் மூவர் சொலும் தமிழ்'' எனத்தவராச சிங்கமாம்தாயுமானர் சாற்றி இருப்பதையும் காண்க. முதல் மூவர் என்றது ''மூவர் முதலிகள்'' என்னும் வழக்குப்பற்றி ஆகும்.

வேதம் என்றதும் வடமொழி வேதநினைவு வருதல் யாவர்க்கும் இயல்பு. வேதம் என்பது வடமொழியில் இருப்பதுதான் என்று நினைப்பது தவமுன கொள்கையாகும். வேதம் எம்மொழியிலாயினும் இருக்கலாம். ஆனுல், அவ்வேத வாக்கியங்கள் உளம் தூய பெருமக்களால் செய்தனவாக இருக்கவேண்டும். இதனை உட்கொண்டே தொல்காப்பியனார்

நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப

என்று வேத மந்திரத்திற்கு விளக்கம் தந்துள்ளனர். அவரை அடி ஒற்றியே திருவள்ளுவரும்,

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்''

என அறிவித்துள்ளனர்.

இவ்விலக்கண இலக்கிய சான்றுகளைக் கொண்டு காணும் போது, மூவர்முதலிகளும் பாடிய பாடல்கள் வேதம் என்பது புலன்ஆகும். இது குறித்துத் திருஞானசம்பந்தர் வரலாற்றில் சேக்கிழார், ''பண்ணுதமிழ் **மறையாம்** பதிகம் பாடித் திருக்கடைக்காப்புச் சாத்தி மன்னும் கவுணியர் போற்றி நிற்க'' என்றும் கூறியுள்ளார். திருக்களிற்றுப்படியாரில்,

பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனைஅன் றேவிக் கராக்கொண்ட பாலன்
மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
கரணம்போல் அல்லாமை காண்.

எனக் குறிக்கப்பட்டிருப்பதிலிருந்து மூவர் முதலிகள் பாடல்கள் பசுகரணப் பாடல்கள் அல்ல, அவை பதிகரண நிலையில் பாடப்பட்டவை என்பதை உணருகிறபோது, அப் பாடல்கள் வேதம் என்பது தானே பெறப்படுகிறது. ஆகவே, வேதத் தமிழ்க்கண் எனப்பட்டது.

சேக்கிழார் மூவர் முதலிகளின் திருவாக்கின் உண்மைப் பொருளை உணர்த்திப்போவதில் வல்லுநர். திருஞான சம்பந்தரின் முதல் திருவாக்குத் தோடுடைய செவியன் என்று தொடங்கும் பாடல். ஈண்டு ஞானசம்பந்தர், ''தோடுடைய செவியன்'' என்று சிறப்பித்ததன் உள் பொருள், இன்னது என்பதைச் சேக்கிழார் அறிவிக்கும் போதும்,

எல்லையிலா மறைமுதல்மெய்
உடன்எடுத்த எழுதுமறை
மல்லல்நெடும் தமிழால்இம்
மாநிலத்தோர்க் குரைசிறப்பப்
பல்லுயிரும் களிகூரத்
தம்பாடல் பரமர்பால்
செல்லுமுறை பெறுவதற்குத்
திருச்செவியைச் சிறப்பித்து,

என்று பாடி அறிவித்துள்ளார். இதனுல்தான் ஈண்டு ''வேதத் தமிழ்க் கண்ணுள்ள மெய்ம்மை விரித்துத் தெரித்தருள் செய்குன்றையூர் வேந்து'' எனப்பட்டது. இதற்கு இவ் எடுத்துக்காட்டே போதுமானது. (3)

## திருநின்ற செம்மையே

4\. திருநின்ற செய்யுள்புகல் நீற்றறையுள் அருகந்தர்
சிந்தைவெந் திட்அமர்ந்தும்
செறிதுயர்க் கடல்மறக் கல்லொட்வர் ஆழஓர்
திரைக்கடல் கல்மிதந்தும்
கருநின்ற கண்டர்அருள் வெளிசெய்நா அரசர்முன்
கருதுபுகழ் எழுவோரையும்
கருத்திடை அருத்தியின் இருத்திமற் றவர்பதம்
காதலித் துத்துதிப்பாம்
தருநின்ற செங்கைத் தலம்குவித் திடுமுனம்
தையல்ஒரு பாகர்தொண்டர்
சரித்திரம் அனைத்தும்ஒரு வாதுற நிரம்பத்
தவாமன அறைக்குவிக்க
உருநின்ற சீர்கொள்புலி யூர்க்கோட்டம் மேயதற்
கொப்பஉல கேத்தநாளும்
ஓங்குபுலி யூர்க்கோட்டம் மேயகுன் றத்தூர்
ஒருத்தரைக் காக்கஎன்றே.

[அ-கு.] திருநின்ற-கற்பக விருட்சம் போன்ற, முனம்-முன்னே. தையல் ஒரு பாகர்-உமாதேவியாரைத் தமது இடப்பக்கம் கொண்ட சிவபெருமானுர். ஒருவாது-ஒன்று கூடக் குறையாது, உற-உள்ளத்தில் நன்ருகப் பொருந்த தவா-குறையாத உரு-அழகு ஏத்த-போற்ற, ஒருத்தர்-ஒப்பற்ற சேக்கிழார், திருநின்ற செய்யுள் என்பது சுந்தரரது திருத்தொண்டத் தொகையின் நான்காவது பாடல், புகல் சொல்லும், நீற்றறை-சுண்ணும்பு காளவாய், அருகந்தர்-சமணர். செறி-மிகுந்த மறக்கல்-பாவக்கால் திரை-அலை கரு-விஷம் நின்ற-பொருந்திய. கண்டர்-கழுத்தையுடைய சிவபெருமான், நாவரசர்-திருநாவுக்கரசர், எழுவோர்-ஏழு அடியார்கள், அருத்தியின்-அன்போடு, பதம்-பாதம்

[வி - ம்] வேளாளர்கள் கொடுக்கும் இயல்பினர், "வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணுதான்" என்று திரிகடுகமும், "எந்நாளும் காப்பர் வேளாளர் காண்" எனக் கம்பரும், 'வேளாளர்கள் என்றவர்கள் வள்ளன்மையால் மிக்கிருக்கும் தாளாளர்' என்று திருஞானசம்பந்தரும் இவர்களின் கொடைக் குணத்தைப் போற்றுதல் காண்க. ஆகவே, "தருநின்ற செங்கைத்தலம்" என அவர்களின் திருக்கரம் சிறப்பிக்கப்பட்டது.

புலியூர்க் கோட்டம் என முன்னர்க் குறிப்பிடப்பட்டது சிதம்பரத்தலத்தை என்க. இது புலிக்கால் முனிவரால் பூசிக்கப்பட்ட தலம் ஆதலின், இப்பெயர்பெற்றது. பின்னைய புலியூர்க்கோட்டம் தொண்டை நாட்டைச்சார்ந்த இருபத்து நான்கனுள் ஒன்று. புழல் கோட்டம், ஈக்காட்டுக் கோட்டம், மணவில் கோட்டம், செங்காட்டுக் கோட்டம், பையூர்க் கோட்டம், எயில் கோட்டம், தாமல் கோட்டம், ஊற்றுக் காட்டுக் கோட்டம், களத்தூர்க் கோட்டம், செம்பூர்க் கோட்டம், ஆம்பூர்க் கோட்டம், வெண்குன்றக் கோட்டம், பல்குன்றக் கோட்டம், இலங்காட்டுக் கோட்டம், கலியூர்க் கோட்டம், செங்கரைக் கோட்டம், படுவூர்க் கோட்டம், கடிகூர்க் கோட்டம், செந்திருக்கைக் கோட்டம், குன்றவட்டான கோட்டம், வேங்கடக் கோட்டம், வேலூர்க் கோட்டம், சேத்தூர்க் கோட்டம், புலியூர்க்கோட்டம் என்பன இருபத்து நான்கு கோட்டங்கள். இவற்றுள் ஒன்றுகப் புலியூர்க் கோட்டம், இருத்தலைக் காண்க. சேக்கிழார் இக்கோட்டத்தைச் சார்ந்த வேளாளர்.

சிதம்பரமாம் புலியூர்க் கோட்டம், உலகு புகழும்திருத் தலம். இது யாவராலும் அறியப்பட்ட உண்மை. அது போலவே தொண்டைநாட்டுப் புலியூர்க் கோட்டம் சேக்கிழார் பிறந்தருளிய தலம் ஆதலின், அது உலகு ஏத்த நாளும் ஓங்கு புலியூர்க் கோட்டம், எனப்பட்டது. உலகு என்பது உயர்ந்தோர் மேற்று ஆதலின், அத்தகைய உயர்ந்தோருள் ஒருவரான உமாபதி சிவனர் புலியூர்க் கோட்டத்தைப் புகழும்போது.

பாலாறு வளம்சுரந்து நல்க மல்கும்
பாளைவிரி மணம்கமழ்பூஞ் சோலைதோறும்
காலாறு கோலிஇசைபாட நீடும்
களிமயில்நின் ருடும்இயல் தொண்டை நாட்டுப்
நாலாறு கோட்டத்துப் புலியூர்க் கோட்டம்

என்று ஏத்தியுள்ளார். எனவே, உலகேத்த என்பது மிகவும் பொருத்தமே. சிதம்பரப் புலியூர்க்கோட்டம் அளவிலாச் சீர் சிறப்புக்களையுடையது. கற்ருங்கெரி ஓம்பிக் கலியை வாராமே செற்ருர் வாழ் தில்லை, செல்வ நெடுமாடம் சென்று சேண் ஓங்கிச்செல்வ மதிதோய் செல்வம் உயர்கின்ற செல்வர் வாழ் தில்லை; சிட்டர் வாழ் தில்லை, சீலத்தார் தொழுதேத்தும் சிற் றம்பலம், செம்மை மயாய்த்திகழ்கின்ற சிற்றம்பலம், கற்றவர் தொழுதேத்தும் சிற்றம்பலம், என்று திருஞான சம்பந்தரும், உலகுக் கெல்லாம் திருவுடை அந்தணர் வாழ்கின்ற தில்லை, தேத்தென என்று இசை வண்டுகள் பாடும் சிற்றம்பலம், என்று அப்பர் பெருமானும், ‘அருமறை முதலில் நடுவினில் கடையில் அன்பர்தம் சிந்தையில் அலர்ந்த திருவளர் ஒளி சூழ் திருச்சிற்றம்பலம் என்று சேக்கிழாரும், பகர்வரிய தில்லை மன்றுள் பார்த்தபோது அங்கு என் மார்க்கம் இருக்குதெல்லாம் வெளியே என்ன, எச்சமயவத்தவர்களும் வந்து இறைஞ்சா நிற்பர்! எனத் தாயுமானவரும் போற்று தல் காண்க. ஆகவே, தில்லைத் புலியூர்க் கோட்டம், ஓங்கு புலியூர்க் கோட்டமே.

குன்றத்தூரில் எத்தனையோ பேர்கள் பிறந்தனர்; இறந்தனர். ஆனல், சேக்கிழார் போன்ற பெருமைக்கு உரிய வர் எவரும் இலர். ஆகவே, சேக்கிழார் குன்றத்தூரில் ஒப்பிலாதவராய்த் திகழ்ந்தவர். எனவே, அவரை ஒருத்தரை என்றனர். திருநின்ற செய்யுள் என்பது,

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்தன் அடியார்க்கும் அடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்

ஒருநம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன்
அருநம்பி நமிநந்தி அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே

என்பது.

திருநாவுக்கரசரே ஈண்டு நாவரசர் எனப்பட்டார். திருநாவுக்கரசர் சமயம் சைவமாக இருந்தும், பின்னர்ச் சைன சமயத்தவராக மாறினர். அதன் பின்னர் மீண்டும் சைவ சமயம் சார்ந்தார். இதனால் மனம் கொதித்த சமணர்கள், தம்மை ஆதரிக்கும் மகேந்திரவர்மன் துணைபெற்றுஅப்பருக்கு இடையூறுகள் பல செய்து, அவரைக் கொல்ல முயன்றனர். அவற்றுள் அவரைச் சுண்ணும்புக் காளவாய் அறையில் அடைத்து வைத்ததும், கல்லோடு கட்டிக் கடலில் இட்டதும் ஈண்டுக் குறிப்பிடப்பட்டுள்ளன. நீற்றறையில் இருந்தபோது நாவரசர் இறைவர் திருவருளால் இடையூறு இன்றி இன்ப மாக இருந்ததை அவரே,

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே

என்று பாடிப் பரவசம் உற்றனர். சோக்கிழாரும் இதனை, "ஆசையில் ஆரா அமுதை அடி வணங்கி இனிது இருந்தார்" என்று மொழிந்துள்ளார்.

தாண்டக வேந்தரைத் தகவிலாச் சமணர் கல்லொடு கட்டிக் கடலில் இட்டபோது, அவர் நமச்சிவாயப்பதிகம் பாடிக் கடலில் ஆழாது கரையினைச் சார்ந்தார். இதனையும் அவரே.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே

என்று பாடியதோடு இன்றி, அவர் தாம் உய்ந்த நிலையினைத் திருநீலக் குடிப் பதிகத்தில்,

கல்லி னோடெனைப் பூட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்களன் வாக்கினால்
நெல்லு நீர்வயல் நீலக் குடிஅரன்
நல்ல நாமம் நவிற்றிஉய்ந் தேன்அன்றே

என்றும் குறிப்பிட்டுள்ளார். சேக்கிழார் அப்பரைக் கட்டி இருந்த கல் மிதந்து வந்து கரையில் சேர்த்ததைச் செவ்வையாக,

பெருகிய அன்பினர் பிடித்த பெற்றியால்
அருமல ரோன்முதல் அமரர் வாழ்த்துதற்
கரியஅஞ் செழுத்தையும் அரசு போற்றிடக்
கருநெடும் கடலினுள் கல்மி தந்ததே

என்றும்,

வாய்ந்தசீர் வருணனே வாக்கின் மன்னரைச்
சேர்ந்தடை கருங்கலே சிவிகை ஆயிட
ஏந்தியே கொண்டெழுந் தருளு வித்தனன்
பூந்திருப் பாதிரிப் புலியூர்ப் பாங்கரில்

என்றும் பாடியுள்ளனர். இன்னோர் அன்ன குறிப்புக்களே "நீற்றறையுள் *** நாவரசர்" என்னும் அடிகளில்பொருந்தி யிருத்தல் காண்க.

திருநாவுக்கரசரது அற்புத நிகழ்ச்சிகளைக் கண்ட அருகந்தர் அவலக் கடலில் ஆழ்ந்தனர் ஆதலின், "அருகந்தர் சிந்தை வெந்திட" எனப்பட்டது. கடல் அலைகளாலும் துன்பம் தருதலின் "செறிதுயர்க் கடல்" எனப்பட்டது. கல் ஒன்றும் அறியாப் பொருளே ஆயினும் அப்பரைப் பிணித்தற்குத் துணையாய் இருந்தமையின், பாபம் உற்றது. ஆகவே, இது "மறக்கல்" எனப்பட்டது. சேக்கிழார் தம் திரு வாக்கில் ஆணவத்தை "மலக்கல்" எனச்சுட்டினார். கல் கடலில் மிதத்தல் என்றும் நிகழா நிகழ்ச்சி. இவ்வரிய

நிகழ்ச்சியும் நிகழ்ந்த காரணத்தினுல் தான் "கல் மிதந்தும்' என்று சிறப்பு உம்மை கொடுக்கப்பட்டது.

இறைவர் திருக் கண்டம் திருநீல கண்டம். அது கருநிமுடையது. அது கருணைக்கு அறிகுறி. இதனை அப்பர்,

பருவரை ஒன்று சுற்றி அரவங்கை விட்ட
இமையோர் இரிந்து பயமாய்த்
திருநெடுமால் நிறத்தை அடுவான் விசும்பு
சுடுவான் எழுந்த விசைபோய்ப்
பெருகிடம் மற்றிதற்கோர் பிதிகாரம் ஒன்றை
அருளாய் பிரானே எனலும்
அருள்கொடு மாவிடத்தை எரியாமல் உண்ட
அண்டர் அண்டர் அரசே

என்று அறிவித்துள்ளது கொண்டு தெளியலாம்.

புவனங்கள் உய்ய ஐயர் பொங்குநஞ்
சுண்ண யாம்செய்
தவம்நின்று தடுத்த தென்னத் தகைந்துதான்
தரித்த தென்று
சிவனெந்தை கண்டம் தன்னைத்
திருநீல கண்டம் என்பார்

என்றும்,

"அடியாராம் இமையவர்தம் கூட்டம் உய்ய
அலைகடல்வாய் நஞ்சுண்ட அமுதே"

என்றும் சேக்கிழாரும்,

மாயிரு ஞாலத்து மன்னுயிர்கள்
கண்களிப்ப மன்றுள் ஆடும்
நாயகன் கண்டம் கறுத்தன்றே
பொன்உலகை நல்கிற் றம்மா
நாயகன் கண்டம் கருதேல்
அந்நாட் டமரர்
சேயிழை மாதருக்குச் செங்கைகளும் கொங்கைகளும்
சிவக்கும் அன்றே

என்றும்,

நம்பா நினக்கோலம் முறையோ எனக்கால
நஞ்சுண்டு பித்துண்டு நம்தேவர் என்பார்
தம்பாவை யர்க்கன்று காதோலை பாலித்த
தயவாளர்''

என்றும் குமரகுருபர சுவாமிகளும், கருநின்ற கண்டத்தின் அறிகுறியைப் போற்றிப் பரவியுள்ளனர். புறநானூறாகிய சங்க இலக்கியமும் திருநீல கண்டத்தின் மாண்மை,

''கறைமிட றணியலும் அணிந்தன்று அக்கறை
மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே''

என்று போற்றுகிறது. இன்னோரன்ன குறிப்புக்களைக் கொண்டு திகழ்வது ''கரு நின்ற கண்டர் அருள்'' என்னும் தொடர். இறைவர் அப்பர் பெருமானுர்க்கு நஞ்சு அமுதாக் குவித்தும், கொல்லவந்த யானையைக் குனியச் செய்தும் புரிந்த அருள்கள் பலவாதலின், ''அருள் வெளி செய்'' என அப்பருக்கு அடை கொடுக்கப்பட்டது.

அல்லது, அப்பூதி அடிகளாரின் மூத்த திருநாவுக்கரசு பாம்பு கடித்து இறந்தபோது, பதிகம் பாடி உயிர்ப்பித்த அருளை நினைந்து இவ்வாறு சிறப்பிக்கப்பட்டது எனினும் ஆம். அப்பூதியார் திருமகனை எழுப்பிய அருள் நிலையினைச் சேக்கிழார்,

நாவினுக்கரசர் கேளா நன்றுநீர்
புரிந்த வண்ணம்
யாவர்இத் தன்மை செய்வார் என்றுமுன்
எழுந்து சென்றே
ஆவிதீர் சவத்தை நோக்கி அண்ணலார்
அருளும் வண்ணம்
பாவிசைப் பதிகம் பாடிப் பணிவிடம்
பாற்று வித்தார்''

என்று பாடியுள்ளார். அல்லது,

நமச்சி வாயவே ஞானமும் கல்வியும்
நமச்சி வாயவே நான்அறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே

என்றும்,

விறகில் தீயினன் பாலில்படு நெய்போல்
மறைய நின்றுளான் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினல்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே

என்றும்,

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக் கோநம னல்முனி வுண்பதே

என்றும்,

மனித்தர்காள் இங்கேவம் ஒன்று சொல்லுகேன்
கனிதந் தால்கனி யுண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசன் எனும்கனி
இனிது சாலவும் ஏசற் றவர்கட்கே

என்று மக்கட்கு அருள் உபதேசம் செய்திருப்பதனல், திரு நின்ற கண்டரது திருவருள் பெற்றுத் திருவருள் புரிந்ததால் இங்ஙனம் அடை கொடுத்துச் சிறப்பிக்கப்பட்டார், எனினும் ஆம்.

கருது புகழ் எழுவரும் புகழுக்குரியவர்கள் என்பதைக் கீழ் வரும் அவர்களது வாழ்க்கைக் குறிப்பால் உணர்ந்து கொள்ளலாம்.

**திருநாவுக்கரசர்** திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில், வேளாளர் மரபில் குறுக்கையர் குடியில் புகழனர் மாதினியார் இருவர்க்கும் திருமகனராகப் பிறந்தார். இவருக்குத் திலகவதியார் என்னும் தமக்கையார் உண்டு.

இவர் சைவ சமயம் துறந்து சமண சமயம் புகுந்தார். இவரை மீண்டும் சைவ சமயம் புகுமாறு செய்யத் திலகவதி யார் இறைவரை வேண்ட, இறைவர் அவருக்குச் சூலநோய் தர அதனைச் சமணர் போக்க முயன்றும் போகா நிலையில் தம் தமக்கையாரை அடைந்து திருநீறும் ஐந்தெழுத்து உபதேசமும் பெற்று, நோய் நீங்கிச் சைவர் ஆயினர். இதனால் சமணர்கள் இவரைக் கொல்ல யானையை ஏவினர். சுண்ணாம்பு காளவாயில் அடைத்து வைத்தனர். நஞ்சு உணவு கொடுத்தனர். கல்லோடு கட்டிக் கடலில் எறிந்தனர். இவற்றினின்று இறைவர் திருவருள் கொண்டு உய்ந்தார். பிறகு இறைவரிடம் தாம் சமண சமயம் புகுந்ததனால் உண் டான மாசு நீங்கச் சூலப் பொறி, இடபப் பொறி பொறித் தருள வேண்டினர். இறைவரும், அவ்வாறே செய்தனர். இடையிடையே பல தலங்கட்குச் சென்று, பதிகங்கள் பாடினார். திருஞான சம்பந்தரைக் கண்டு இன்புற்றார். திருநல்லூரில் இறைவர் தம் திருவடி சூட்டும் பேறு பெற்றார் அப்பூதியார் அருமை மகனார் பாம்பு கடித்து இறந்ததை அறிந்து பதிகம்பாடி அவனை எழுப்பினார். திரு வீழிமிழலையில் இறைவர் தினமும் தந்த படிக்காசு பெற்று மகேஸ்வரபூசை நடத்திவந்தனர். திருமறைக்காட்டில் வேதங்களால் பூசித்துச் சாத்தப்பட்ட கதவைப் பதிகம் பாடித் திறந்தார். திருப்பழையாறு வடதளியில் சமணர் களால் மறைப்புண்ட சிவலிங்கத்தைப் பாடு கிடந்து வெளிப் படுத்தினர். திருப் பைஞ்ஞீலிக்குப் போகும் வழியில், இவரது களைப்பை நீக்க இறைவர் பொதி சோறு ஈந்தார். கயிலை காணவேண்டும் என்ற அவாவினால் உடல் தேய வடக்கு நோக்கிப் புறப்பட்டுச் சென்றார். இறைவர் இடையே தோன்றி அவரது உடல் குறை நீக்கித் திருவையாற்றில் கயிலைக் காட்சி காண ஆணையிட, அவ்வாறே அங்குக் கண்டு இன்புற்றார். திருப்புகலூரில் திருத்தொண்டு புரிந்து, இறைவன் திருவடியுற்று இன்புற்றார். இவர் இறைவனோடு இரண்டறக் கலந்த நாள் சித்திரை மாதம் சதய நட்சத்திரம் ஆகும்.

**குலச்சிறையார்** பாண்டிய நாட்டில் மாணமேற்குடியில் பிறந்தவர். சிவனடியாரிடம் பேர் அன்பு கொண்டவர். திருநீறு இட்டவரெவராயினும் அவர்கள் திருவடியில் பணிபவர். நெடுமாறரின் மந்திரியார். சமணம் ஒழியச் சைவம் ஓங்க மங்கையர்க்கரசியார்க்குப் பெருந்துணையாய் இருந்தவர்.

**பெருமிழலைக்குறும்பர்** மிழலையில் பிறந்தவர். அடியார்களின் குறிப்பறிந்து தொண்டு புரிபவர். சுந்தரரிடம் பேரன்பு கொண்டு அவரை வழிபட்டு அஷ்டமாசித்திகள் கைவரப் பெற்றவர். ஐந்தெழுத்து ஓதி யோக நிலையையும் உற்றவர்.

**காரைக்கால் அம்மையார்** காரைக்காலில் தனதத்தருக்கு வணிகர் மரபில் பிறந்தவர். இவரது இயற்பெயர் புனிதவதி அம்மையார் என்பது. இவருக்குப் பரமதத்தன் கணவனாக அமைந்தான். அவனுக்கு இருமாங்கனிகள் நண்பர்களால் கொடுக்கப்பட்டன. அவற்றுள் ஒன்று அம்மையாரால் சிவனடியார்க்குப் படைக்கப்பட்டது. பரமதத்தன் ஒரு கனியை உண்டான். சுவையுடையதாய் இருக்கவே, மற்றொரு கனியையும் படைக்கக் கேட்டான். அம்மையார் உண்மை கூறாது இறைவனை வேண்டி, ஒரு கனி பெற்றுப் படைத்தார். அது முன்னையதினும் சுவை மிக்கிருந்தமையின், 'இஃது ஏது?' என்று கேட்க, அம்மையார் உண்மை கூறினார். 'அற்றேல், மீண்டும் ஒரு கனியை அழைக்க' என அம்மையார் இறைவரை வேண்ட ஒரு கனி வந்துற்றது. அதனைக் கணவன் கையில் இட்டதும் மறைந்தது. பரமதத்தன் அம்மையாரை ஒரு தெய்வம் என்று அறிந்து, பிரிந்து மதுரை அடைந்து மறுமணம் புரிந்து மகவும் பெற்றான். இதனை அறிந்த அம்மையார் மதுரைக்கு வரப் பரமதத்தன் தன் மனைவி மகளுடன் வந்து காலில் வீழ்ந்து பணிந்தான். அம்மையார் உலக இன்பத்தை வெறுத்துப் பேய்வடிவுபெற்று, கயிலைக்குத் தலையால் நடந்து சென்று பின் இறைவன் ஆணைப்படி திருஆலங்காடு உற்று ஆலங்காட்டப்பர் நடனம் கண்டு இன்புற்றார்.

**அப்பூதி அடிகளார்** திங்களூரில் பிறந்த பிராமணர். திருநாவுக்கரசரைக்காணுதிருந்தும், அவரையே தெய்வமாகக் கொண்டவர். அவர் எல்லாப் பொருள்களுக்கும் திருநாவுக் கரசர் திருப் பெயரை இணைத்தே பேசுபவர். அவர் வீட்டிற் குத் திருநாவுக்கரசர் வந்தார். வந்தவரை நல்வரவு கூறி உபசரித்தார். ஆனால், வந்தவர் திருநாவுக்கரசர் என்பது தெரியாது. அந்நிலையில் அப்பர், அப்பூதியாரை ''நீங்கள் நடத்தும் தண்ணீர்ப் பந்தலுக்கு வேறு ஒருவர் பெயரிட் டிருப்பதேன்?'' என்று வினவினார். அப்பூதியார் சினந்து, நீங்கள் சிவ வேடம் பூண்டிருந்தும் திருநாவுக்கரசரை அறிந்து கொள்ளாது, அவர் பெயரை வாயினாலும் கூறாது, 'வேறு ஒரு பேர் எனலாமோ'''? என்றார். அப்பர் அவர் பெருமை அறிந்து தாம்தாம் திருநாவுக்கரசு என்று தெரி வித்துக்கொள்ள, அப்பூதியார் பெரிதும் மகிழ்ந்து, அப்பரை மனைவி மக்கள் சுற்றம் யாவரும் வணங்கச் செய்து, திருவடி களுக்கு அபிடேகம் செய்து, அந்நீரைக் குடித்து, வீட்டில் தெளித்து, இன்புற்று உணவு அருந்த வேண்டினார். தமது மூத்த மகன் மூத்த திருநாவுக்கரசு வாழை இலை கொய்யச் சென்றபோது பாம்பு கடித்து இறந்தான். அது பற்றிப் பெற்றோர் வருந்திலர். அப்பர் உணர்ந்து பதிகம்பாடி, திரு நீறு பூசி எழுப்பினார். அப்பர், அப்பூதியார் தொண்டினைத் தம் பதிகத்திலும் பாடினார்.

**திருநீலநக்கர்** சோழ நாட்டில் சாத்தமங்கை என்னும் ஊரில் பிராம்மண மரபில் பிறந்து சிவனடியார்கட்குத் தொண்டு செய்தவர். இவர் அயந்தி இறைவனைத் திருவா திரையில் வழிபடச் சென்றபோது மனைவியாரையும் உடன் அழைத்துச் சென்றார். சிவலிங்கத்தின்மீது சிலந்தி இருந்தது. அதனை அம்மையார் தம் வாயால் ஊதிப் போக்கினார். வாயால் ஊதியது தவறு என்று கொண்டு அம்மையாரைத் தம்மோடு வாழாதிருக்க வெளியேற்றினர். அம்மையார் செய்வது இன்னதென அறியாது வீடு செல்லாது கோவிலில் தங்கினார். பூசை முடித்து நாயனார் வீடு திரும்பினார். இறைவர் அவர் கனவில் ''உன் மனைவியார் ஊதிய இடம் கொப்புளம்

இன்றி இருக்கிறது. ஏனைய இடம் கொப்புளங் கொண்டுளது'' என்று கூற நாயனார் தம் மனைவியின் செயலைப் பாராட்டியது கண்டு வியந்து அம்மையாரை அழைத்துக் கொண்டனர். இவர் இல்லத்திற்குத் திருஞான சம்பந்தர் வந்துற்றார். இவருடன் பாணர் குல திருநீலகண்ட யாழ்ப்பாணரும் வந்துற்றனர். சம்பந்தர் பாணர் இருக்க இடம் அளிக்க நாயனார்க்குக் கூற, நாயனார் மிகப் பரிசுத்தமான இடமாகிய யாக குண்டத்தின் அருகு அழைத்துச் சென்றார். யாக குண்டத்தினின்றும் தீ எழுந்து வலம் சுழித்து நாயனார் செயலைப் பாராட்டியது போலச் செயல் புரிந்தது. திருஞான சம்பந்தர் இவரைப் பதிகத்தில் பாடினார். சம்பந்தர் திருமணத்தில் இவரும் சோதியுள் கலந்தனர்.

**நமிநந்தி அடிகள்** சோழ நாட்டு ஏமப் பேரூரில் அந்தணர் மரபில் பிறந்தார். திருவாரூர் தியாகரிடம் பேரன்பு கொண்டவர். திருநீற்றினிடம் அன்புடையவர். இவர் திருவாரூர் அரநெறி அப்பருக்குத் திருவிளக்கு இடும் தொண்டில் ஈடுபட்டுச் சமணர் இல்லம் சென்று நெய்கேட்க, அவர்கள் ''நீரைக் கொண்டு விளக்கேற்றும்'' என்றனர். இறைவரிடம் முறையிட, இறைவர், ''இதற்கு அஞ்சாதே; நீரைக் கொண்டே விளக்கேற்றுக'' என்று அசரீரியாகக் கூற, நாயனார் வியந்து திருவாரூர்க் குளத்து நீரைக் கொண்டே விளக்குத் தொண்டு புரிந்தார். இவரது தொண்டை வியந்த சோழ மன்னன் அமுது படி முதலான நிபந்தங்கள் (கட்டளைகள்) ஏற்படுத்தினன். நாயனார் பெருமுயற்சியால் பங்குனி உத்தர விழாச் சிறப்பாக நடந்தது. இவர் திருவிழாவில் கலந்து கொண்டதால், அவ்விழாவில் பலருடன் இணைந்து இருந்ததால், தீட்டுப்பட்டதாக நினைத்து வீட்டிற்குச் செல்லாது வெளியே தங்க, அவர் மனைவியார் உள்ளே அழைத்த போது, ''எல்லாச் சாதியாருடனும் கலந்திருந்தமையின் பரிகாரம் செய்ய நீர் கொணர்க'' என்றார். அம்மையார் வருவதற்குள் அயர்ச்சியால் உறங்கிவிட்டார். இறைவர் கனவில் ''திருவாரூரில் பிறந்தவர்கள் யாவரும் சிவகணங்கள்'' என்று கூற விழித்தெழுந்த நாயனார் தம் குற்றம் உணர்ந்து

நீராடாது சிவபூசை முடித்து யாவரும் சிவ கணமாக இருத்தலை உணர்ந்து இறைவன் திருவருளைப் போற்றினர். இவரை அப்பர் ''தொண்டருக்கு ஆணி'' எனப்போற்றி யுள்ளார். இவையே எழுவர் வரலாறு. இவர்களின் தொண்டு சிறப்புடைமையின், ''அருத்தியின் கருத்திடை இருத்தி அவர் பதம் காதலித்துத் துதிப்பாம்,'' எனப்பட்டது.

''அப்பர முனிவன் கடிமலர் மென் சேவடிகள் கை தொழுது'' ''மிழலைக் குறும்பர் கழல் வணங்கி'' ''அம்மை கிளர் ஒளி மலர்த்தாள் போற்றி'' ''அப்பூதியாராம் வேதியர் பாதம் போற்றி'' ''திரு நீலநக்கர் தாள் வணங்கி'' என்று சேக்கிழாரும் இவர்களை வணங்கியதைக் காண்க. (4)

## வம்பரு வரிவண்டு

5. வம்பரு யாப்புநவில் வம்பரு முலையொரு
மடக்கொடியை வேட்டல்இன்றி
வண்பிரம சரியநிலை வைகுநாளேஒரு
மட்பாவை யைப்பிறப்பித்
தும்பல்தா வும்திறல் அரிக்குருளை போல்எழுந்
துவகையார்க் கும்பிறப்பித்
துலாயவர்முன் ஐவரைவெல் அறுவர்பொன் பாதமலர்
உச்சிவைத் தேத்தெடுப்பாம்
அம்பரு ஆழிமுழு துண்டதிரு முனிவிரித்
தருளிய தமிழ்க்காக்கமா
அருள்மூவர் அருள்மறைப் பொருள்தெரிய முன்ஒருவர்
அருள்மறைப் பொருள்விளக்கும்
நம்பரு வித்தியா ரணியமுனி வரன்உளம்
நயப்பயாப் புறவிரித்த
நாவலர் பிரானைத் திருக்குன்றை அருள்மொழி
நலத்தனைக் காக்கஎன்றே.

[அ. சொ.] வம்பருயாப்பு என்பது, திரு தொண்டத் தொகையில் வம்பறுவரிவண்டு என்று தொடங்கபெறும் ஐந்தாவது பாடல். பாடல் - பாட்டு நவில் - கூறும், வம்பு - பாதர் தம் முலையினை அணைத்துக்கட்டும் கச்சு, அரு - நீங்கா, ஒரு - ஒப்பற்ற, மடக்கொடியை-இளைய பூங் கொடி போன்ற மாதினை, வேட்டல்-மணத்தல், வண்பிரம சாரியநிலை-வளமான பிரம்மச்சரிய நிலையில், வைகும் நாளே-வாழும் நாட்களிலேயே, பாவை-பதுமைபோன்றஒரு பெண் குழந்தையை, உம்பல்-யானைமீது, அரிக்குருளை சிங்கக்குட்டி, உவகை-மகிழ்ச்சி, உலாயவர் - இறைவன் உறைவிடங்கள் தோறும் சென்றுலாவியவராம் திருஞான சம்பந்தர், ஐவர்-ஐந்து இந்திரிய சேட்டைகளை, அறுவர்-திருஞான சம்பந்தர், கலிக்காமர், திருமூலர், தண்டி அடிகள், மூர்க்கர், சோமாசி மாறர் ஆகிய ஆறுஅடியார்கள், பொன்-அழகிய, ஏத்தெடுப் பாம்-போற்றித் துதிப்போம் அம்பு-நீர், ஆழி-கடல், திரு முனி-அழகிய அகத்திய முனிவர், ஆக்கம்-உயர்வு, அருள் மூவர்-அருளே வடிவாகக்கொண்ட அப்பர்,சம்பந்தர்,சுந்தரர் அருள் என்பதற்குத் திருவாய் மலர்ந்தருளிய என்று கூறினும் ஆம். மறை-வேதத்தின், நம்பு-அன்பு, வித்தியாரண்யமுனி வரன்-வேதங்கட்கு விரிவுரை எழுதிய முனிவர், நம்பு - விருப்பம், நயப்ப-விரும்ப, யாப்பு-செய்யுள், அமைப்பு உற-பொருந்த, நாவலர் பிரான்-நாவன்மையுடைய தலைவராம் சேக்கிழார், அருண்மொழி நலத்தன்-அருண்மொழித் தேவன் என்னும் பெயரிய நன்மையுடைய சேக்கிழார்.

[விளக்கம்] கடல் வற்றாத நீரையும் ஆழத்தையும் உடைமையின் வம்புஅரு எனப்பட்டது. இந்திரன்விருத்திரா சூரனைக் கொல்ல முனைந்தபோது, அவன் கடலில் ஒளிந்து கொள்ள, அந்நிலையில் இந்திரன் அகத்தியரை வேண்ட, அவனது வேண்டுகோட்கிணங்கி,அகத்தியர் கடலைஉண்டனர். இக்குறிப்பே ஆழிமுழுதுண்ட திருமுனி எனப்பட்டது. அகத்தி யர்க்குப் பல சிறப்புக்கள் இருத்தலின், அவர் திருமுனி எனப்பட்டார். தமிழ்மொழி என்றும் உளமொழி, இதனைக் "கம்பர்,என்றுமுள இன்தமிழ்" என்றனர். இத்தகையதமிழ்ப்

பெரியார் இலக்கணத்தை இறைவனிடம் உபதேசம் பெற்றுப் பின் பயின்று தம்பெயரால் இலக்கணமும் செய்தனர். அதுவே அகத்தியம் எனப்படும். இதனையே கம்பர், ''என்றுமுள தென்தமிழ் இயம்பி இசைகொண்டான்'' என்றும் ''தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்'' என்றும் பாடினர். இறைவர் அகத்தியர்க்குத் தமிழ் அறிவுறுத்தியதைச் சேறைவரையரும் 'ஆதியில் தமிழ் நூல் அகத்தியர்க்கு உணர்த்திய மாதொருபாகனை வழுத்துதும் போதம் மெய்ஞ்ஞானம் நலம் பெறல் பொருட்டே' என்றும், சிவஞான முனிவர்,

வடமொழியைப் பாணினிக்கு
 வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை
 உலகமெலாம் தொழுதேத்தும்
குடமுனிக்கு வலியுறுத்தால்
 கொல்லேற்றுப் பாகர்

என்றும் பாடிக் காட்டியுள்ளார். ஆகவே, அகத்தியர் தமிழ் இலக்கணம் செய்து, தமிழை விரித்துரைத்தவர் ஆயினர். இதுவே திரு முனிவிரித்தருளிய தமிழ் எனப்பட்டது.

மூவர் ஆவார் ஈண்டு அப்பர், சுந்தரர், சம்பந்தர். இவர்களே மூவர் முதலிகள். தாயுமானாரும் இவர்களை 'மொழிக்கு மொழி தித்திப் பாகும் மூவர் சொலும் தமிழ்' என்று போற்றியுள்ளனர். இம்மூவர்களும் அருளேவடிவானவர்கள் இம் மூவர்கள் அருள் வடிவினர் என்பதை இவர்களின் வாழ்க்கை வரலாற்றில் நன்கு தெரியலாம். அப்பரது அருள் வெளிப்பாட்டை அப்பூதிநாயனாரின் திருமகனார் பாம்பு கடித்து இறந்தபோது,

ஒன்று கொலாம்அவர் சிந்தை உயர்வரை
ஒன்று கொலாம் உயரும்மதி சூடுவர்
ஒன்று கொலாம் இடுவெண்டலை கையது
ஒன்று கொலாம்அவர் ஊர்வது தானே

என்ற பாடல் கொண்ட பதிகம்பாடி எழுப்பியது கொண்டு தெளியலாம். இஃது அருளின் அறிகுறி என்பதைச் சேக்கிழார்

அன்றவர்கள் மறைத்ததனுக்
　　களவிறந்த கருணையராய்க்
கொன்றைநறும் சடையார்தம்
　　கோயிலின்முன் கொணர்வித்தே
ஒன்றுகொலாம் எனப்பதிகம்
　　எடுத்துடையான் சீர்பாடப்
பின்றைவிடம் போய்நீங்கிப்
　　பிள்ளைஉணர்ந் தெழுந்திருந்தான்

என்று எடுத்து மொழிந்துள்ளார்.

திருஞான சம்பந்தரது அருள் பண்பை அவர் கொல்லி மழவன் மகள் நோயால் வருந்துவதை அறிந்து இறைவனை நோக்கி,

துணிவளர் திங்கள் துளங்கி விளங்கச்
　　சுடர்ச்சடை சுற்றி முடித்துப்
பணிவளர் கொள்கையர் பாரிடம் சூழ
　　வாரிட மும்பலி தேர்வர்
அணிவளர் கோலம் எலாம் செய்து
　　பாச்சிலாச் சிராமத் துறைகின்ற
மணிவளர் கண்டரோ மங்கையை வாட
　　மயல்செய் வதோஇவர் மாண்பே

என்று பாடி வேண்டி இந்நோயை நீக்கியது கொண்டு தெளியலாம். இதனைச் சேக்கிழார்.

அணிகிளர் தாரவன் சொன்ன மாற்றம்
　　அருளொடு கேட்டந் நிலையில் நின்றே
பணிவளர் செஞ்சடைப் பாச்சின் மேய
　　பரம்பொருள் ஆயி னுரைப் பணிந்து
மணிவளர் கண்டரோ மங்கையை வாட
　　மயல்செய்வ தோஇவர் மாண்ப தென்று
தணிவில் பிணித விர்க்கும் பதிகத்
　　தண்டமிழ் பாடினர் சண்பை நாதர்

என்று மொழிந்துள்ளார்.

ஒரு செட்டிப் பெண் தன் காதலன் பாம்பு கடித்து இறந்ததால் வாய்விட்டு அரற்றியதைக் கேட்ட திருஞான சம்பந்தர் இறைவனிடம்,

சடையாய் எனுமால் சரண்நீ எனுமால்
விடையாய் எனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவள்உள் மெலிவே

என்று முறையிட்டு, இறந்தவனை எழுப்பித் தந்தார். இதனைக் குன்றைக் கோமகனார்,

மற்றிவனும் வாளரவு தீண்ட மாண்டான்
மறிகடலில் கலம்கவிழ்த்தார் போல நின்றேன்
சுற்றத்தார் எனவந்து தோன்றி என்பால்
துயரம்எலாம் நீங்கஅருள் செய்தீர் என்னக்
கற்றவர்கள் தொழுதேத்தும் காழி வேந்தர்
கருணையினால் காரிகையாள் தனக்கு நல்கப்
பற்றியவாள் அரவுவிடம் தீரு மாறு
பணைமருகல் பெருமானைப் பாடல் உற்றார்.

என்று பாடிக் காட்டினார்.

சுந்தரரது அருள் குணத்திற்கும் சான்று உண்டு. மடுவில் குளித்த சிறுவனை முதலை விழுங்கியதால் துன்புற்ற பெற்றோரைக் கண்டு அவர்கள் இன்புறும் வண்ணம்,

உரைப்பார் உரைஉகந் துள்கவல்
லார்தங்கள் உச்சியாய்
அரைக்கா டரவா ஆதியும்
அந்தமும் ஆயினாய்
புரைக்கா டுசோலைப் புக்கொளி
யூர்அவி நாசியே
கரைக்கால் முதலையைப் பிள்ளைதரச்
சொல்லுகா லனையே

என்று பரமனை வேண்டி எழுப்பித்தந்தனர். இதற்கு அடிப் படைக் காரணம் அருளே என்பதை உட்கொண்ட சேக் கிழார் பெருமானார்,

இவ்வா றருளிச் செய்தருளி இவர்கள்
புதல்வன் தனைக்கொடிய
வெவ்வாய் முதலை விழுங்குமடு எங்கே
என்று வினவிக்கேட்
டவ்வாழ் பொய்கைக் கரையில்எழுந் தருளி
அவனை அன்றுகவர்
வைவாள் எயிற்று முதலைகொடு வருதற்
கெடுத்தார் திருப்பதிகம் ;

என்று எடுத்து மொழிந்தனர்.

இதனால்தான் அருள்மூவர் எனப்பட்டது. மூவர் பாடிய பாடல்கள் மறையே. நிறைமொழி மாந்தர் உள்ளத்தெழுந்த உரைகள் அத்தனையும் மறைகளே, மந்திரங்களே. இதனை ஆசிரியார் தொல்காப்பியர்,

" நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்றும், ஆசிரியர் திருவள்ளுவர்,

" நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்"

என்றும்,

அறிவுறுத்திச் சென்றுள்ளனர். இம்மூவர் மொழிந்த மொழிகள் மறைகளாக மந்திரங்களாகத் திகழ்ந்தமையினை அவர்கள் செய்துகாட்டிய அற்புத நிகழ்ச்சிகளைக் கொண்டு நாம் அறிகிறோம். இறைவர் வேதங்களை அருளிச் செய்தார். அவ்வாறே மூவர் முதலிகளும் வேதங்களை அருளிச் செய்தார். இதனைச் சேக்கிழார் நன்கு தெரிவிப்பான் வேண்டி,

திருமறை நம்பர்தாம்முன் பருள்செய்த
அதனைச் செப்பும்
ஒருமையில் நின்ற தொண்டர்
தம்பிரா னார்பால் ஒக்க

வரும்அருள் செய்கைதாமே
வகுத்திட வல்லோர் என்றால்
பெருமறை யுடன்மெய்த் தொண்டர்க்
கிடையீடு பெரிதாம் அன்றே.

என்று அறிவித்திருப்பதைக் காண்க. ஆகவே, மூவர் அருள் மறை என்றது முற்றிலும் உண்மை. மேலும், சேக்கிழார் திருஞான சம்பந்தரைக் குறிக்கும்போது "தமிழ் வேதம் பாடினார் தாளம் பெற்றார்" என்று கூறுதலையும் ஈண்டு நினைவு கொள்ளுதல் வேண்டும்.

மூவர் முதலிகள் அருளிய தமிழ் வேதங்களின் உண்மைப் பொருள் இன்னது எனத் தெரிவிப்பதில் சேக்கிழார்க்கு இணை எவரும் இலர்.

திருக்கொடி மாடச்செங்குன்றூரில் திருஞான சம்பந்தருடன் இருந்த சிவனடியார்கள் நளிர் சுரத்தால் வாடிய போது ஆளுடைய பிள்ளையார்,

அவ்வினைக் கிவ்வினை யாம்என்று சொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பதும் உந்தமக் கூனம்அன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும்
நாம்அடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறுதிரு நீலகண்டம்

என்று பாடி அந்நளிரால் அடியார் வருந்தாவண்ணம் செய்தார். இப்பாடலில் திருநீலகண்டம் எனச் சிரபுரக்கோனார் ஏன் செப்பினார் என்பதற்கு விளக்கம் தரவந்த சேக்கிழார் பெருமானார்,

அவ்வினைக் கிவ்வினை என்றெடுத் தையர்அமுதுசெய்த
வெவ்விடம் முன்தடுத் தெம்மிடர் நீக்கிய வெற்றியினால்,
எவ்விடத் தும்அடி யார்இடர் காப்பது கண்டம் என்றே
செய்வினைதீண்டா திருநீல கண்டம்எனச் செப்பினார்

என அறிவித்துப் போந்தார். இவ்வாறு பற்பல இடங்களிலே தேவாரத் திருமறைக்கு விளக்கம் தந்த காரணம் கருதியே ஈண்டுப் பிள்ளை அவர்கள் "மூவர் மறைப் பொருள்தெரியமுன் ஒருவர் அருள்மறைப் பொருள் விளக்கும் நம்பு அரு வித்தியா ரணிய முனிவரன் உளம்நயப்ப' என்றனர். ஒருவன் என்பது சிவபெருமானார். அவரே வேதங்களை அருளிச் செய்தவர். இதனை "வேதம் ஓதி வெண்ணூல் பூண்டு" என்று சம்பந்தரும் "பாடினார் சாமவேதம் பைம்பொழில் பழனம்மேயார், சாந்தோக சாமவேதம் ஓதும் வாயானை" என்று அப்பரும் அறிவித்திருப்பதைக் காண்க. நம்பு என்பது விருப்பம் என்னும் பொருளது. இதனைத் தொல்காப்பியத்துள் "நம்பும் மேவும் நசையா கும்மே" என்னும் நூற்பாவால் அறிக. வித்தியாரண்ய முனிவர் வேதத்திற்கு விரிவுரை எழுதியவர். சேக்கிழார் பெருமனுர். பேச்சாற்றலில் பெரிதும் சிறந்தவர்.

கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து.

என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கு இலக்கியமாய்த் திகழ்ந்தவர். இன்றேல், அநபாயச் சோழன் சீவக சிந்தாமணியில் ஈடுபட்டிருந்த நிலையினை மாற்றிச் சிவனடியார்களின் வரலாற்றில் ஈடுபடும்படி செய்திருக்க முடியுமோ? இதற்குக் காரணம் நாவன்மையே ஆகும். இதனை உமாபதி சிவம்,

வளவனும்குண் டமண்புரட்டுத் திருட்டுச் சிந்தா
மணிக்கதையை மெய்என்று வரிசை கூற
உளம்மகிழ்ந்து பலபடப்பா ராட்டிக் கேட்க
உபயகுல மணிவிளக்காம் சேக்கி ழார்கண்
டிளஅரசன் தனைநோக்கிச் சமணர் பொய்நூல்
இதுமறுமைக் காகாதிம் மைக்கும் அற்றே
வளமருவு கின்றசிவ கதைஇம் மைக்கும்
மறுமைக்கும் உறுதிஎன வளவன் கேட்டு

எனக்கூறியது காண்க.

சோழன் சேக்கிழாரை அக்கதையைச் சாற்றும் என்று கேட்கும் நிலையுற்றான் என்றால், அதுவே அவரது நாவன்மையினைக் காட்டுதற்குப் போதிய சான்று அன்றோ? சேக்கிழார் பாடிய பெரியபுராணம் முற்றிலும் அவரது நாவன்மையினைக் காட்டும். ஆகவே, ''நாவலர் பிரான்'' எனப்பட்டார். வம்பறு யாப்பு என்பது,

வம்பறு வரிவண்டு மணம்நாற மலரும்
மதுமலர்க் கொன்றையான் அடியலால் பேணா
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும்
அடியேன்
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கர்க்கும் அடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே

என்பது,

பிரமசரிய நிலை என்பது வேதம் ஓதுதல், விரதம் காத்தல் முதலான நியமங்களோடு ஒழுகும் பருவம். இந்த நிலை, பின்வரும் கிருகஸ்தம், வானப் பிரஸ்த்தம், சந்நியாசம் ஆகிய நிலைகட்கு அடிப்படை ஆதலின், ''வண்பிரமச்சரியம்'' எனப் பட்டது. மடப்பாவை என்பவள் பூம்பாவை.

திருமயிலையில் சிவநேசர் என்னும் வணிகர் வாழ்ந்து வந்தார். அவர் பெற்ற மகளே பூம்பாவை என்பவள். அம்மகளைத் திருஞான சம்பந்தருக்குத் திருமணம் செய்து கொடுக்கத் தீர்மானித்தார். பெண் வ்ளர்ந்து வந்தது. இறைவனுக்கு மலர் கொய்து மாலை கட்டிச் சாத்தும் தொண்டில் ஈடுபட்டாள். ஒருநாள் பூநாகம் தீண்டிவிட இறத்தாள். சிவநேசர் வருந்தினர். அம்மகளின் இறந்த உடலைக் கொளுத்தி அச்சாம்பரைக் குடத்தில் வைத்திருந்து சம்பந்தர் வந்தபோது அதனை முன் வைத்து நடந்தவற்றை நவின்றார். சம்பந்தர் அருள் கூர்ந்து இறைவனை நினைந்து,

மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சரம் அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணுதே போதியோ பூம்பாவாய்

என்று பாடி, எலும்பும் சாம்பருமாக இருந்ததைப் பெண்ணுருவுடன் வெளிவரத் திருவருள் புரிந்தார். இதனைச் சேக்கிழாரும்,

மன்னு வார்சடை யாரைமுன் தொழுது மட்டிட்ட
என்னும் நற்பதி கத்தினில் போதியோ என்னும்
அன்ன மெய்த்திரு வாக்கெனும் அமுதம்அவ் அங்கம்
துன்ன வந்துவந் துருவமாய்த் தொக்கதக் குடத்துள்

எனப் பாடியுள்ளனர்.

சிவனேசர் மிகமகிழ்ந்து புகலிவேந்தரைத் தம் மகளைத் திருமணம் புரிந்து கொள்ள வேண்டினுர். அதுபோது சண்பையர் கோன்,

மற்றவர் தமக்குவண் புகலி வாணர்நீர்
பெற்றபெண் விடத்திஞல் வீந்த பின்னையான்
கற்றைவார் சடையவர் கருணை காண்வர
உற்பவித் தீதலால் உரைத காதென

அருளினர். அதாவது இம்மாது என்னுல் எழுப்பப்பட்ட காரணத்தால் எனக்குப் பெண் முறையாயிருத்தலின், மணத்தல் தக்கது அன்று என்பதாம். இவ்வாறு ஒரு பெண்ணைப் பெறும் பாக்கியம் பெற்றது திருஞானசம்பந்தர் திருமணம் முடித்துக் கொள்ளுதற்கு முன்பு நிகழ்ந்த நிகழ்ச்சி. இதனை உட்கொண்டே ''மடக்கொடியை***மடப்பாவையை பிறப்பித்து'' எனப்பட்டது. இவ்வடியில் திருமணம் இன்றியே பிள்ளையைப் பெற்றனர் என்னும் நயம் தோன்றுதல் காண்க. அங்கம் பூம்பாவை உயிர்பெற்று உருவுடன் தோன்றிய நிலையினைச் சேக்கிழார் பாடும்பொழுது,

கன்னிதன் வனப்புத் தன்னைக்
கண்களால் முடியக் காணர்
முன்னுறக் கண்டார்க் கெல்லாம்
மொய்கருங் குழலின் பாரம்
மன்னிய வதன செந்தா
மரையினில் கரிய வண்டு
துன்னிய ஒழுங்கு துற்ற
சூழல்போல் இருண்டு தோன்ற

பாங்கணி சுரும்பு மொய்த்த
பனிமலர் அளகப் பந்தி
தேங்கமழ் ஆரம் சேரும்
திருநுதல் விளக்கம் நோக்கில்
பூங்கொடிக் கழகின் மாரி
பொழிந்திடப் புயற்கீழ் இட்ட
வாங்கிய வான வில்லின்
வளர்ஒளி வனப்பு வாய்ப்ப

புருவமென் கொடிகள் பண்டு
புரம்எரித் தவர்தம் நெற்றி
ஒருவிழி எரியின் நீருய்
அருள்பெற உளனும் காமன்
செருஎழுந் தனுவ தொன்றும்
சேமவில் ஒன்றும் ஆக
இருபெருஞ் சிலைகள் முன்கொண்
டெழுந்தன போல ஏற்ப

மண்ணிய மணியின் செய்ய
வளர்ஒளி மேனி யாள்தன்
கண்ணிணை வனப்புக் காணில்
காமரு வதனத் திங்கள்
தண்ணளி விரிந்த சோதி
வெள்ளத்தில் தகைவின் நீள
ஒண்ணிறக் கரிய செய்ய
கயல்இரண் டொத்து லாவ

பணிவளர் அல்குல் பாவை
நாசியும் பவள வாயும்
நணியபேர் ஒளியில் தோன்றும்
நலத்தினை நாடு வார்க்கு
மணிநிறக் கோபம் கண்டு
மற்றது வவ்வத் தாழும்
அணிநிறக் காம ரூபி
அணைவதாம் அழகு காட்ட

இளமையில் அனைய சாயல்
ஏந்திழை குழைகொள் காது
வளமிகு வனப்பி னாலும்
வடிந்ததாள் உடைமை யானும்
கிளர்ஒளி மகர ஏறு
கெழுமிய தன்மை யாலும்
அளவில்சீர் அனங்கன் வென்றிக்
கொடிஇரண் டனைய ஆக

விற்பொலி தரளக் கோவை
விளங்கிய கழுத்து மீது
பொற்பமை வதனம் ஆகும்
பதுமநல் நீதியம் பூத்த
நற்பெரும் பணிலம் என்னும்
நன்நிதி போன்று தோன்றி
அற்பொலி கண்டர் தந்த
அருட்கடை யாளம் காட்ட

எரிஅவிழ் காந்தாள் மென்பூத்
தலைதொடுத் திசைய வைத்துத்
திரள்பெறச் சுருக்கும் செச்சை
மாலையோ தெரியின் வேறு
கருநெடும் கயல்கண் மங்கை
கைகளால் காந்தி வெள்ளம்
அருகிழிந் தனவோ என்னும்
அதிசயம் வடிவில் தோன்ற

ஏர்கெழும் மார்பில் பொங்கும்
ஏந்திளம் கொங்கை நாகக்
கார்கெழு விடத்தை நீக்கும்
கவுணியர் தலைவர் நோக்கால்
ஆர்திரு வருளில் பூரித்
தடங்கிய அமுத கும்பச்
சீர்கெழு முகிழைக் காட்டும்
செவ்வியில் திகழ்ந்து தோன்ற

காமவேள் என்னும் வேடன்
உந்தியில் கரந்து கொங்கை
நேமியம் புட்கள் தம்மை
அகப்பட நேரி தாய
தாமநீள் கண்ணி சேர்த்த
சலாகைதூக் கியதே போலும்
வாமமே கலைசூழ் வல்லி
மருங்கின்மேல் உரோம வல்லி

பிணிஅவிழ் மலர்மென் கூந்தல்
பெண்அமு தனையாள் செம்பொன்
அணிவளர் அல்குல் தங்கள்
அரவுசெய் பிழையால் அஞ்சி
மணிகிளர் காஞ்சி சூழ்ந்து
வனப்புடை அல்குல் ஆகிப்
பணிஉல காளும் சேடன்
பணம்விரித் தடைதல் காட்ட

வரிமயில் அனைய சாயல்
மங்கைபொன் குறங்கின் மானம்
கரிஇளம் பிடிக்கை வென்று
கதலிமென் தண்டு காட்டத்
தெரிவுறும் அவர்க்கு மென்மைச்
செழுமுழந் தாளின் செவ்வி
புரிவுறு பொற்பந் தென்னப்
பொலிந்தொளி விளங்கிப் பொங்க

பூவலர் நறுமென் கூந்தல்
　　பொற்கொடி கணைக்கால் காமன்
ஆவநா ழிகையே போலும்
　　அழகினில் மேன்மை எய்த

மேவிய செம்பொன் தட்டின்
　　வனப்பினை மீதிட் டென்றும்
ஓவியர்க் கெழுத ஒண்ணுப்
　　பரட்டொளி ஒளிவுற் றேங்க

கற்பகம் ஈன்ற செவ்விக்
　　காமரு பவளச் சோதிப்
பொற்றிரள் வயிரப் பத்திப்
　　பூந்துணர் மலர்ந்த போலும்

நற்பதம் பொலிவு காட்ட
　　ஞாலமும் விசும்பும் எல்லாம்
அற்புதம் எய்தத் தோன்றி
　　அழகினுக் கணியாய் நின்றுள்

என்று பாடிக் காட்டினர்.

இதனுல்தான் இவ்வம்மையார் ஒரு (ஒப்பற்ற) மடப பாவை என்று சிறப்பித்துக் கூறப்பட்டனர்.

திருஞான சம்பந்தர் அன்பர்க்கு எளியராகவும் வன்பர்க்கு வலியராகவும் விளங்கியவர். பரசமயகரிகட்கு இவர் அரியாக இருந்தவர். இவர் சிங்கமாக எங்கும் திரிந்ததைச் சேக்கிழார்,

சீர்நிலவு திருத்தெளிச் சேரியினைச் சேர்ந்து
　　சிவபெருமான் தனைப்பரவிச் செல்லும் போது
சார்வறியாச் சாக்கியர்தம் போதி மங்கை..
　　சார்தலும்மற் றதுஅறிந்த சைவர் எல்லாம்
ஆர்கலியின் கிளர்ச்சிஎனச் சங்கு தாரை
　　அளவிறந்த பல்லியங்கள் முழங்கி ஆர்த்துப்
பார்குலவு தனிக்காளம் சின்னம் எல்லாப்
　　பரசமய கோளரிவந் தான்என் றூத

என்று பாடியுள்ளார்.

இதனுல்தான் ஈண்டு ''உம்பல் தாவும் திறல் அரிக் குருளைபோல் எழுந்து'' எனப்பட்டது.

திருஞான சம்பத்தர் எல்லாரையும் இன்பக் கடலில் அழுத்தியதை இவரது வரலாற்றில் பரக்கக் காணலாம்.

''ஐவரை வெல் அறுவர்'' என்ற தொடரில் முரண் தொடையும், எண் அலங்காரமும் அமைந்திருத்தலைக் கண்டு இன்புறுக. ஐவர் எனப் பஞ்ச இந்திரியங்களாகிய மெய் வாய், கண், மூக்கு, செவி என்றவற்றை அர் விகுதி கொடுத்துச் செப்பியது திணை வழு அமைதி பற்றி ஆகும். அறுவர் திருஞானசம்பந்தர், கலிக்காமர், திருமூலர், தண்டி அடிகள், மூர்க்க நாயனுர், சோமாசி மாறர் என்பவர்கள்.

சேக்கிழார், ''திருஞானசம்பந்தர் வரலாறு கூறத் தொடங்கும்போது, ''பாதமலர் தலைக் கொண்டு திருத் தொண்டு பரவுவாம்'' என்றும், ஏயர்கோன் கலிக்காமரைக் குறிப்பிடும்போது, ''ஏயர் கோனுர் மலரடி வணங்கி'' என்றும், ''திருமூலதேவர் மலர்க் கழல் வணங்கி'' என்றும், 'கண்ணின் மணிகள், அவை இன்றிக் கயிறு தடவிக் குளம் தொட்ட எண்ணில்பெருமைத் திருத்தொண்டர் பாதம் இறைஞ்சி'' என்றும், ''மூர்க்கர் கழல் வணங்கி'' என்றும், திருவடிகளைப் போற்றியதுபோல ஈண்டும் பிள்ளை அவர்கள் ''பொற்பாத மலர்உச்சி வைத்து ஏத்தெடுப்பாம்'' என்றனர். அறுவர் வரலாறுகள் பின்வருவன.

**திருஞானசம்பந்தர் :** இவர் சீர்காழியில் கௌணிய மரபில் சிவபாத இருதயர்க்கும் பகவதியார் எனும் அம்மை யார்க்கும் திருமகனுராகத் தோன்றி, இறைவி தந்த ஞானப் பால் உண்டு, திருஞான சம்பந்தர் எனத் திருப்பெயர் பெற்ருர். திருக்கோலக்காவில் தாளம் பெற்ருர். திருநெல் வாயில் அறத்துறை இறைவர் தந்த பல்லக்கில் ஏறிச் சென்று தலங்கள்தோறும் பதிகம் பாடி வந்தார். கொல்லி மழவன் மகளின் முயலகன் என்னும் நோயைப் போக்கினுர். திருக் கொடிமாடச் செங்குன்றூரில் உடன் இருந்த அடியார்கள் பட்ட குளிர் நோயைப் போக்கினர். திருப்பட்டிச் சுரத்தில்

முத்துப் பந்தர் பெற்றார். திருவாவடுதுறை மாசிலாமணி ஈஸ்வரரிடம் பொற்கிழி பெற்றுத் தந்தையார்க்கு ஈந்தார் திருமருகலில் பாம்பு கடித் திறந்த செட்டி மகனை எழுப்பினார். திருவீழி மிழலையில் படிக்காசு பெற்றுப் பஞ்சாத்தால் வாடிய அடியார்கள் உணவுண்டு உவக்கச் செய்தார். திருமறைக் காட்டில் அடைபட்ட கதவை அப்பரைக் கொண்டு திறக்க வும், தாம் சாத்தவும் பாடி அருள் செய்தார். பாண்டிய நாட்டிற்குச் சென்று பாண்டியன் வெப்பு நோயை நீக்கிச் சமணர்களோடு அனல்வாதம், புனல் வாதம் செய்து வென்றார். திருக் கொள்ளம் பூதரைத் தொழ வேண்டிப் பதிகம் பாடி ஓடத்தைக் கடத்திச் சென்று ஆலயம் அடைந்து தொழுதார்.

அஞ்செழுத்தாகிய அத்திரத்தால் புத்த குருவினை இடி விழுந்து இறக்கச் செய்தார். திருவோத்தூரில் ஆண் பனையைப் பெண் பனை யாக்கினார். திருமயிலையில் பாம்பு கடித்து இறந்த பெண்ணின் எலும்பையும் சாம்பலையும் கண்டு பதிகம் பாடி உயிர் பெற்று எழச் செய்தார். இங்ஙனம் பல அற்புதங்களைச் செய்து பின் சீர்காழியை அடைந்து திருமணம் முடித்துக் கொண்டு தம் மனைவியாருட னும் உடன் இருந்தாருடனும் திருநல்லூர் பெருமணம் என்னும் தலத்தில் எழுந்த சோதியில் கலந்து இன்புற்றார் இவரது பாடல்கள் மூன்று திருமுறைகளாகும்.

**ஏயர்கோன்கலிக்காமர்:** இவர் சோழ நாட்டில் திருமங்கலம் என்னும் ஊரில் வேளாளர் மரபில் ஏயர் குடியில் தோன்றினார். இவர் சோழ மன்னன் படைத் தலைவராக இருந்தார். திருப்புன்கூர் தலத்தில் பல திருப் பணிகள் புரிந்தவர். மானக்கஞ்சாறர் திருமகளை மணந்தவர். சுந்தரர் தம் மனைவியார் பரவையாரது பிணக்கைத் தீர்க்க இறைவரைத் தூது போக்கினர் என அவர்மீது சினங்கொண்டு அவர் முகத்திலும் விழிக்கக் கூடாது என்ற அளவுக்கு வாழ்ந்தவர். இந் நிலையில் இறைவர் கலிக்காமருக்குச் சூலநோய் தோற்றுவித்து, அந்

நோயைத் தீர்க்கச் சுந்தரரையே ஏவினர். இங்ஙனம் செய்தது இருவரையும் ஒன்று படுத்தற்கே ஆகும். சுந்தரர் தம் நோயைத் தீர்க்க வருகின்முர் என்று அறிந்த கலிக்காமர் சுந்தரர் முகத்தில் விழிக்கக்கூடாது என்ற காரணத்தால் கத்தி கொண்டு வயிற்றைக் கிழித்துக் கொண்டார். சுந்தரர் இந்த நிலையினை அறிந்து தாமும் தம்மை மாய்த்துக்கொள்ள முயன்றபோது, இறைவர் திருவருளால் கலிக்காமர் எழுந்து சுந்தரர் இறக்கத் துணிந்த நிலை அறிந்து வாளைப் பற்றினர். சுந்தரர், நாயனர் காலில் விழுந்தார். இருவரும் நண்பர் ஆயினர். இருவரும் திருப்புன்கூர் சென்று இறைவரைப் பணிந்து போற்றினர்.

**திருமூலர்:** இவர் ஒரு சிவயோகியார். கயிலையிலிருந்து புறப்பட்டுத் தென்னகம் வந்தனர். வரும் வழியில் திருவாவடுதுறை அருகே வந்தபோது, பசுக் கூட்டங்கள் வருந்தும் நிலையினைக் கண்டு அருகில் சென்று பார்த்தபோது, இடையன் இறந்து கிடப்பதை உணர்ந்து, அவன் உடலில் தம் உயிரைப் புகுத்தித் தம் சரீரத்தை ஓரிடத்தில் வைத்தார். தம் உயிர் இடையன் உடலில் புகுந்ததும் ஆடுமாடுகள் ஆனந்தம் உற்றன. அவற்றை நன் முறையில் மேய்த்து மாலையில் அவற்றைச் சாத்தனூருக்கு அனுப்பி விட்டனர். பின் தம் உடலைத் தேடினர். அது கிடைக்கவில்லை. இஃது ஆண்டவன் திருவருள் போலும் என்று எண்ணித் திருவாவடு துறையில் அரசமரத்தடியில் யோகம் இருந்து சைவ ஆகமப் பொருள்களை ஆண்டுக்கு ஒவ்வொரு பாடலாக மூவாயிரம் பாடல்களைப் பாடினர். அதுவே, திருமந்திரம் என்பது. இடையன் பெயர் மூலன். ஆகவே, இவர் மூலன் உடலில் புகுந்தமையில் மூலர் என்ற பெயர் பெற்றார். இவரது சிறப்பு நோக்கித் திருமூலர் எனப்பட்டார். இவரது நூல் சைவத் திருமுறையில் பத்தாவதாகத் திகழ்கிறது.

**தண்டி அடிகள்:** இவர் சோழ நாட்டில் திருவாரூரில் பிறந்தவர். பிறவிக் குருடர். என்றாலும் தியாகரை அகக் கண்ணால் அஞ்செழுத்து ஓதி வழிபட்டவர். சமணர் வாழ்ந்த

இடத்தருகே ஒரு குளம் சுருங்கி இருந்தது. அதனை விரிவாக்கக் குளத்தில் ஒரு கம்பையும் கரையில் ஒரு கம்பையும் நட்டு இடையில் கயிற்றைக் கட்டி அதனைப் பிடித்துக்கொண்டே சென்று குளத்தின் மண்ணை வெட்டிக் கூடையில் கொண்டு கொட்டிப் பெருக்கினர். சமணர்கள் மண்ணை எடுக்க வேண்டா என்றுகூற, இது சிவத்தொண்டு என்று மொழிந்தார். அவர்கள் இவரை உங்கள் இறைவன் வன்மையுடையார் எனில், கண் பார்வையை ஏன் பெற்றுக்கொள்ளக் கூடாது என்றதோடு கயற்றை அறுத்து எறிந்தனர். நாயனர் இறைவரிடம் முறையிட, இறைவர் இவரது கண் பார்வை துலங்கவும் சமணர் குருடராகவும் செய்தார். சமணர்கள் அவ்விடம் விட்டுச் சென்றனர். நாயனர் தம் தொண்டினைச் செவ்வனே புரிந்தனர். இது குறித்தே இவரை நாட்டமிகு தண்டி என்று சுந்தரர் சிறப்பித்தனர்.

**மூர்க்க நாயனர்:** இவர் தொண்டை நாட்டில் திருவேற்காட்டில் வேளாளர் மரபில் தோன்றினர். இவர் அடியவர்கள் விரும்பும் பொருளை ஈந்தும், அவர்கட்கு அன்னம் இட்டுப் பின் உண்ணும் இயல்பும் பெற்றிருந்தார். இதனல் பொருள் வளம் குறைந்தது. இந் நிலையிலும் இத் தொண்டைப் புரிந்து வந்தார். இந் நிலையில் சூதாடி ஆகிலும் தொண்டை நிறுத்தாது செய்ய அதில் ஈடுபட்டார். சூதாட்டத்தில் ஈடுபட்டபோது மூர்க்கமாக நடந்துகொண்ட காரணத்தால்தான் இவர் மூர்க்கர் எனப்பட்டார். சூதாட்டத்தில் வெற்றிகண்டு பொருள் கொண்டு முட்டாது தம் தொண்டைப் புரிந்து இறைவன் திருவடி உற்றனர்.

**சோமாசி மாறர்:** இவர் சோழ நாட்டில் திருவம்பர் என்னும் ஊரில் வேதியர் மரபில் பிறந்தவர். இவர் யாகாதி காரியங்களைச் செய்து அடியார்கட்கு அன்னமிட்டு வந்தார். ஐந்தெழுத்தோதி வழி படுவார். அடியார் எவராயினும் அவர்களைச் சிவமெனக் கருதியவர். சுந்தர மூர்த்தி சுவாமிகளிடம் பேரன்பு கொண்டவா. ஐம்புலன்களை அடக்கி இறைவன் திருவடி உற்றவர். (5)

## வார்கொண்ட வனமுலையாள்

6. வார்கொண்ட வனமுலை எனும்கவியுள் உயர்சைவ
மாண்பினர்கள் தலைவணக்கி
வாயார வாழ்த்தித் தியானித் திடச்சங்க
மங்கைவரு சாக்கியர்முதல்
ஏர்கொண்ட புகழ்கொடைவை வேல்அடையும் அடையுற்றும்
எய்தாதும் ஆகி நின்ற
இனியநகர் அடையும்ஏற் றொளிர்கின்ற அறுவரையும்
இறுவரையும் ஏத்தெடுப்பாம்
கார்கொண்ட அமணசிந் தாமணியை வளவர்கோன்
கங்குல்பகல் ஆராய்தரக்
கண்டொழித் தாவதுஇது வேஎன்று தொண்டர்தம
கத்துவம் கருதஉய்த்துப்
பார்கொண்ட மன்னர்அல் லவைநீக்கி நல்லவை
பரித்திடச் செயல்அமைச்சர்
பண்பெனல் தெரித்தகுன் றத்தூர் உதித்தஎம்
பரமனைக் காக்கஎன்றே

*[அ. சொ.] கார்கொண்ட - கருமையைத் தன்னிடம் கொண்ட, அறிவு மயக்கங் கொண்ட எனினும் ஆம். அமண சிந்தாமணி - சமணர்களின் காவியமான சீவக சிந்தாமணி. வளவர்கோன் - சோழர் மரபின் மன்னனான அநபாய சோழ மன்னன். கங்குல் - இரவு, ஆவது - இப் பிறவியிலும், மறு பிறவியிலும் நன்மை ஆவது (தருவது), இதுவே-சிவனடியார் களின் வரலாறுகளே, மகத்துவம் - பெருமை, உய்த்து - சிவனடியார் பற்றில்; வரலாற்றில் மனத்தைச் செலுத்துமாறு செய்து, பார் - பூமி, மன்னர் - அநபாயர், அல்லவை - தீய எண்ணத்தை, பரித்திட - மேற்கொள்ள, தாங்க, வார் கொண்ட வனமுலை என்பது, திருத் தொண்டத் தொகையில் வரும் ஆறுவது செய்யுளின் முதல் குறிப்பாகும், கவி - பாடல்*

மாண்பினர்கள் - பெருமைக்கு உரியவர்கள், சாந்த மங்கை - என்பது சாக்கிய நாயனர் வாழ்ந்த ஊர், ஏர் - அழகு, வை - கூரிய, எய்தாதும் - அடைமொழி பொருந்தப் பெறுதும், அறுவர் - சாக்கிய நாயனர், சிறுத் தொண்ட நாயனர், சிறப்புலி நாயனர், கழறிற்றறிவார் நாயனர், கூற்றுவ நாயனர், கண நாத நாயனரை. இறுவரை - சாகும் வரை.

[விளக்கம்] சமணர்கள் பெரிதும் கருநிறம் உடையவர்கள். இதனைத் தேவாரத் திருமறை கொண்டும், பெரிய புராணம் கொண்டும், திருவிளையாடற் புராணம் கொண்டும் மற்றும் பல நூல்களைக் கொண்டும் நன்கு தெளியலாம். "கரியமனச் சமண்" "கருகும் உடலார்" "கரிபோல் திரிந்து" என்று திருமுறைகளில் வருதல் காண்க "காரிருண்ட குழாம் போலும் உருவுடைய கார் அமணர்" என்று பெரிய புராணத்தும், "இடி கெழுகார் போல் குன்றின் இழிந்து" என்று திருவிளையாடற் புராணத்தும் வருதல் காண்க. ஆகவே, "கார் கொண்ட அமணர்" என்று கூறப்பட்டது. அன்றி, கார் கொண்ட என்பதருக்கு இருண்ட அறிவு பொருந்திய என்று கூறினும் அமையும். கார் என்பதற்கு இருண்ட அறிவு என்னும் பொருள் இருத்தலை, "களவு என்னும் கார் அறிவு" என்னும் குறட்கு உரை ஆசிரியர்கள் உரைத்த உரையால் தெரியலாம். "களவு என்று சொல்லப்படுகின்ற இருண்ட அறிவு" என்று பரிமேலழகரும், "பொல்லா அறிவுடைமை" என மணக்குடவரும் எழுதி இருத்தல் காண்க.

சிந்தாமணி என்பது ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றுன சீவக சிந்தாமணி ஆகும். இதனை இயற்றியவர் திருத்தக்கதேவர். ஐம்பெருங் காப்பியங்கள் என்பன சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி குண்டலகேசி என்பன. சீவகசிந்தாமணியில் அநபாய சோழன் பெரிதும் ஈடுபட்டு, அதனைத் தன்சபையில் பிரசங்கம் செய்யுமாறு ஏற்பாடு செய்திருந்தான். இதனைத்

திருத்தொண்டர் புராண வரலாறு என்னும் நூலில் ''வளவனும் குண்டமண் புரட்டுத் திருட்டுச் சிந்தாமணிக் கதையை மெய்யென்று வரிசை கூற, உளம்மகிழ்ந்து பலபடப் பாராட்டிக் கேட்க'' என்று அறிவிக்கப்பட்டதைக் காண்க. இது கொண்டே, ''சிந்தாமணியை வளவர்கோன் கங்குல் பகல் ஆராய்தர, 'எனப்பட்டது. சோழ நாடு பெருவளம் வாய்ந்தது.' ''சோழநாடு சோறுடைத்து'' என்பது ஔவையார் வாக்கு. பட்டினப்பாலையில் சோழநாட்டின் சிறப்பைக் கூறுகையில்,

''வான்பொய்ப்பினும் தான்பொய்யா
மலைத்தலைய கடல்காவிரி
புனல்பரந்து பொன்கொழிக்கும்
விளைவறா வியன்கழனி''

என்று பொருநர் ஆற்றுப் படையிலும்,

''சாலிநெல்லின் சிறைவேலி
ஆயிரம் விளையுட் டாக
காவிரி புரக்கும் நாடு''

என்று சிலப்பதிகாரத்து இந்திர விழா ஊர் எடுத்த காதையிலும், மற்றும் பல சங்க நூற்களாலும், சேக்கிழார் பெருமானுர் சோழநாட்டு வளத்தைக் கூறும்போது,

காடெல்லாம் கழைக்கரும்பு
காவெலாம் குழைக்கரும்பு
மாடெல்லாம் கருங்குவளை
வயல்எல்லாம் நெருங்குவளை
கோடெல்லாம் மடஅன்னம்
குளம்எல்லாம் கடல்அன்னம
நாடெல்லாம் நீர்நாடு
தனைஒவ்வா நலம்எவ்லாம்

என்று பாடிக் காட்டுதலாலும் அறியலாம்.

பெரியபுராணத்துள் பெரிதும் சோழநாட்டு வளத்தை நன்கு காணலாம். இத்தகைய வளமுடைய நாட்டை ஆண்ட

வர்கள் சோழர்கள். அவர்கள் வளமுடைய நாட்டிற்கு உரியவராய் விளங்கினமையினுல்தான் வளவர் எனப்பட்டார். ஈண்டு வளவர் கோன் என்பான் அநபாய சோழன் ஆவான். அனபாயன் சிந்தாமணியில் ஈடுபட்டிருந்தமையின் சேக்கிழார் கண்டு, அவனை அதில் ஈடுபடாதவாறு செய்து சிவனடியார்களின் வரலாற்றை எடுத்து மொழிந்து தம்பக்கம் திருப்பி அவ்வரலாற்றின் அடிப்படைகளை எடுத்துப் புகன்ருர். இதனைக் கீழ்வரும் திருத்தொண்டர் புராண வரலாற்று நூலில் தெளிவுறக் காணலாம்.

இளவரசன் தனைநோக்கிச் சமணர் பொய்ந்நூல்
 இதுமறுமைக் காகாதிம் மைக்கும் அற்றே
வளமருவு கின்றசிவ கதைஇம் மைக்கும்
 மறுமைக்கும் உறுதிஎன வளவன் கேட்டு

அவகதையாய்ப் பயன்அற்ற கதையீ தாகில்
 அம்மையும்இம் மையும்உறுதி பயக்கத் தக்க
சிவகதைஏ ததுகற்ற திறமைப் பேரார்
 சீவகசிந் தாமணிபோல் இடையில் வந்த
நவகதையோ புராதனமோ முன்னூல் உண்டோ
 நானிலத்தில் சொன்னவர்ஆர் கேட்ட பேரார்
தவகதையோ தவம்பண்ணிப் பேறு பெற்ற
 தனிக்கதையோ அடைவுறச் சாற்றும் என்றுன்

செம்பியர்பூ பதிமகிழ்ந்து வினவி கேட்கச்
 சேக்கிழார் குரிசில்உரை செய்வார் ஞாலத்
தம்பலவர் திருத்தொண்டர் பெருமை ஆரூர்
 அடிகள்முதல் அடிஎடுத்துக் கொடுக்க நாவல்
நம்பிபதி னொருதிருப்பாட் டாகச் செய்த
 நலமலிதொண் டத்தொகைக்கு நாரை யூரில்
தும்பிமுகன் பொருள்உரைக்க நம்பி ஆண்டார்
 சுருதிமொழிக் கலித்துறைஅந் தாதி செய்தார்

என்ற பாடல்களில் காண்க.

இதனையே ஈண்டுக் ''கண்டு ஒழித்து ஆவது இதுவே என்று தொண்டர்தம் மகத்துவம் கருத உய்த்து'' என்னும் தொடரில் அமைந்த கருத்தாகும்,

சேக்கிழார் அனபாயனது ஆட்சியில் முதல் அமைச்சராக அமைந்தவர். இதனை உமாபதி சிவம் தாம் பாடிய சேக்கிழார் புராணத்துள்,

அத்தகைய புகழ்வேளாண் மரபில் சேக்கி
 ழார்குடியில் வந்தஅருள் மொழித்தே வர்க்குத்
தத்துபரி வளவனும்தன் செங்கோல் ஓச்சும்
 தலைமைஅளித் தவர்தமக்குத் தனது பேரும்
உத்தமச்சோ ழப்பல்ல வன்தான் என்னும்
 உயர்பட்டம் கொடுத்திடஆங் கவர்நீர் நாட்டு
நித்தன்உறை திருநாகேச் சுரத்தில் அன்பு
 நிறைதலினுல் மறவாத நிலைமை மிக்கார்

என்று சுட்டிக் காட்டியுள்ளார்.

இப்பாடலில் சோழ மன்னன், தன் ஆட்சியில் முதன்மை அளித்ததோடு இன்றி, அவர்க்கு உத்தமச் சோழ பல்லவர் என்ற பட்டமும் அளித்துச் சிறப்பித்துள்ளமையினையும் காண்க. முதல் அமைச்சர் அரசர்க்கு ஒப்பானவர். இதனைப் பரிமேலழகர் ''காவல் சாகாடு உகைத்தற்கண் அவ்வரசர்க்கு இணையாய அமைச்சன்'' என்று விளக்கியிருத்தலை அறியவும். இதனுல்தான் உமாபதி சிவம் ''தன் செங்கோல் ஓச்சும் தலைமை அளித்து'' என்றனர். இங்ஙனம் முதல் அமைச்சராக அமைந்த சேக்கிழார், அமைச்சர் பண்புகள் அனைத்தையும் பெற்றிருந்தார்.

திருவள்ளுவர் அமைச்சர்களின் இயல்புகளை அமைச்சு என்ற தலைப்பின் கீழ்ப் பத்துக் குறட்பாக்களால் விளக்கியுள்ளார். அவற்றுள்,

''தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
 சொல்லலும் வல்ல தமைச்சு

என்றும்,

''அறிகொன் றறியான் எனினும் உறுதி
 உழைஇருந்தான் கூறல் கடன்''

என்றும் கூறியுள்ளவற்றை நன்கு சிந்திக்கவும்.

விநாயகர் புராணம் "ஊறுகள் நீக்கித் துனிவற முடிவு போக்கிடுமாறு சூழ்தர வல்லவன் அமைச்சன்" என்றும், "இறைவனுக்கு சுகிதம் எண்ணும் மந்திரியும்" என்றும்,

அறிவதும் செயலும் ஒழிவதும் அரசர்க்
காக்கமே குறித்தன ஆகும்
திறனும்நன் றறியா அரசருக் குறுதி
செப்பலும் செய்வன வேனும்
அறும்உல கியற்கைக் கொத்திடின் செயலும்
ஒருவினைக் கியைந்தபல் செயலும்
நிறுவவ தொன்றால் வாய்ப்பளஞ் ஞான்றும்
நிகழ்த்தலும் அமைச்சருக்கு இயல்பாம்

என்றும் கூறுதல் காண்க.

தோலாமொழித்தேவர் செய்த சூளாமணியில்,

தெறிந்தவர் தெளிந்த நூலாம்
சிறந்தன தெரிந்து கூறி
அறிந்தவை ஆற்ற நிற்கும்
அமைதியான் அமைச்சன் ஆவான்

என்றும்,

மற்றவர்க் குறுதி நோக்கி
வருபழி வழிகள் தூரச்
செற்றவர்ச் செகுக்கும் சூழ்ச்சி
தெருண்டவர் கண்ட தன்றே

என்றும் அறிவித்தல் காண்க:

பழமொழிகள் நானூறு,

"உலப்பில் உலகத்து உறுதியே நோக்கிக்
குலைத்தடக்கி நல்லறம் கொள்ளார்க் குறுத்தல்
மலைத்தழுது உண்ணாக் குழவியைத் தாயர்
அலைத்தும்பால் பெய்து விடல்" என்றும்,

மூரித்தேன் தாரி னாய்நீ முனியினும் உறுதி நோக்கிய
பாரித்தேன் தரும நுண்நூல் வழக்கது வாதல்
கண்டே

என்று சீவக சிந்தாமணியும்,

தம்முயிர்க் குறுதி எண்ணார்
தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி
விடாதுநின்று உரைக்கும் நீரர்

என்று கம்பராமாயணமும்,

''நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவர் அமைச்சர்கள்'' என்றும்,
முற்றுற வருவதும் முதலும் அன்னதால்
பெற்றிடு பயன்களும் பிறவும் தூக்கியே
தெற்றன உணர்ந்துபின் பலவும் செய்வரால்
குற்றம்ஒன் றவர்வயின் குறுக வல்லதோ

என்றும் கந்த புராணமும்,

அரசர் சீறுவ ரேனும் அடியவர்
உரைசெ யாதொழி யார்கள் உறுதியே

என்று கலிங்கத்துப் பரணியும்,

மறத்தாம வேலான் மனக்கொள்கைதம் நெஞ்சுள் வான
நிறத்தாடி நீழல் எனத்தோற்ற நிறுத்து மற்றது
அறத்தாறு எனில்ஆற் றுவர்அன் றெனில்ஆக்கம் ஆவி
இறத்தான் வரினும் மனத்தானும் இழைக்க எண்ணார்

என்று திருவிளையாடற் புராணமும்,

செவிசுடச் சென்றாங்கு இடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா கவுண்மதத்த
கைம்மா வயத்ததோ பாகுமற் றெத்திறத்தும்
அம்மாண் பினவே அமைச்சு

என்று நீதிநெறி விளக்கமும் அமைச்சர் இயல்புகளைக் கூறுதல் காண்க. இப்பண்புகள் அனைத்தையும் பெற்றவர் அமைச்சர் சேக்கிழார். இவர் தாம் அமைச்சர் என்ற உண்மையினை முருகேசர் முதுநெறிவெண்பா என்னும் நூல்,

சேக்கிழார் சென்னிக்குத் தொண்டர் சிறப்புணர்த்தி
மோக்கநெறி தந்தார் முருகேசா

என்று எடுத்து மொழிகிறது.

இவை அனைத்தையும் கருத்துள் கொண்டே ஈண்டு ஆசிரியர். "பார்கொண்ட மன்னர் அல்லவை நீக்கி நல்லவை பரித்திடச் செயல் அமைச்சர் பண்பு எனல் தெரித்த குன்றத்தூர் உதித்த எம்பரமன்" என்றனர். ஆசிரியர் சேக்கிழாரை "எம்பரன்" என்றதனால் இவர்க்கு அவர்பால் இருந்த ஈடுபாட்டின் இயல்பை நன்கு தெரிந்து கொள்ளலாம்.

"வார்கொண்ட வனமுலை எனும் கவி" என்பது,

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கள் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டங் குடிமேயல சிறுத்தொண்டர்க் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கும் அடியேன்
கடற்காழி கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேல்கூற்றன் களந்தைக்கோன் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே

என்னும் திருத்தொண்டத் தொகையின் ஆறுவது பாடல் ஆகும்.

தவராச சிங்கமாகிய தாயுமானவர் சைவ சமயத்தின் ஏற்றத்தைப் பலவாறு எடுத்து இயம்பியுள்ளார்.

சைவ சமய மேசமயம் சமயா
தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளி
காட்டும் இந்தக் கருத்தைவிட்டு
பொய்வந் துழலும் சமயநெறி
புகுத வேண்டா முத்திதரும்
தெய்வச் சபையைக் காண்பதற்குச்
சேர வாரும் செகத்தீரே

என்று எடுத்து மொழிந்ததோடு இன்றி, இவ்வுண்மையினை மேலும் விளக்கக் கருதி,

விண்ணவரிந் திரன்முதலோர் நாரத ராதி
விளங்குசத்த ரிடிகள்கன வீணை வல்லோர்
எண்ணிய சித்தர்மனு வாதி வேந்தர்
இருக்காதி மறைமுனிவர் எல்லாம் இந்தக்
கண்ணகல்ஞா லம்மதிக்கத் தானே உள்ளம்
கையின்நெல்லிக் கனிபோலக் காட்சி ஆகத்
திண்ணியநல் அறிவால்இச் சமயத் தன்றோ
செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தார் என்றும்

செப்பரிய சமயநெறி எல்லாம் தந்தம்
தெய்வமே தெய்வமெனும் செயற்கை யான
அப்பரிசா ளரும்அஃதே பிடித்தா லிப்பால்
அடுத்தஅந் நூல் களும்விரித்தே அனுமா னாதி
ஒப்பவிரித் துரைப்பர்இங்ஙன் பொய்மெய் என்ன
ஒன்றில்ஒன் றெனப்பார்ப்ப தொவ்வா தார்க்கும்
இப்பரிசாம் சமயமுமாய் அல்ல ஆகி
யாதுசமய மும்வணங்கும் இயப்ப தாகி

இயல்பென்றும் திரியாமல் இமயம் ஆதி
எண்குணமும் காட்டிஅன்பால் இன்பம் ஆகிப்
பயன்அருளப் பொருள்கள்பரி வாரம் ஆகிப்
பண்புறவும் சௌபான பட்சம் காட்டி
மயலறும்மந் திரம்சிட்சை சோதி டாதி
மற்றங்க நூல்வணங்க மௌன மோலி
அயர்வறச்சென் னியில்வைத்து ராசாங் கத்தில்
அமர்ந்ததுவை திகசைவம் அழகிது அந்தோ

அந்தோஈ ததிசயம் இச்சமயம் போலின்
றறிஞர்எல்லாம் நடுவறிய அணிமா ஆதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கும் மற்றும் மற்றும்
இந்திராதி போகநலம் பெற்ற பேர்க்கும்
இதுவன்றித் தாயகம்வே றில்லை இல்லை
சந்தான கற்பகம்போல் அருளைக் காட்டத்
தக்கநெறி இந்நெறியே தான்சன் மார்க்கம்

சன்மார்க்க ஞானமதில் பொருளும் வீறு
சமயசங்கே தப்பொருளும் தான்ஒன் ருகப்
பன்மார்க்க நெறியினும் கண்ட தில்லை
பகவர்வரிய தில்லைமன்றுள் பார்த்த போதங்
என்மார்க்கம் இருக்குதெல்லாம் வெளியே என்று
எச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்
கன்மார்க்க நெஞ்சமுள எனக்கும் தானே
கண்டவுடன் ஆனந்தம் காண்ட லாகும்

என்றும் பாடியுள்ளனர். சைவ எல்லப்ப நாவலரும், ''சைவத்தின் மேற்சமயம் வேறில்அதில் சார்சிவமாம் தெய்வத்தின் மேல்தெய்வம் இல்'' என்று தெரிந்து செப்பினர், இதனால்தான் ஈண்டு ''உயர் சைவம்'' எனப்பட்டது. இத்தகைய சமயத்தினிடம் ஈடுபட்டவர்களே சிறந்தவர்கள் ஆதலின் மாண்பினர்கள் என்றனர். சாக்கியர் சைவப் பெருமக்களால் பெரிதும் போற்றப் பட்டவர். நக்கீரர் கோபப் பிரசாதம் என்னும் நூலில்,

கற்கொண் டெறிந்த சாக்கியன் அன்பு
தற்கொண் டின்னருள் தான்மிக அளித்தும்

என்றும்,

அப்பர் தம் தேவாரத்தில் ''கல்லினல் எறிந்தே கஞ்சிதாம் உண்ணும் சாக்கியனர்'' என்றும், சுந்தரர் ''வார்கொண்ட' வனமுலையாள் உமைபங்கள் கழலே மறவாது கல் தெறிந்தசாக்கியர்'' என்றும் ''நற்சாக்கியன்'' என்றும்,

கல்லால் எறிந்த பொல்லாப் புத்தன்
நின்றினைந் தெறிந்த அதனல்
அன்னவன் தனக்கும் அருள்பிழைத் தின்றே

என்று பதினேராம் திருமுறைப் பட்டினத்துப் பிள்ளையாரும் போற்றியுள்ளனர். இதனால்தான் ''உயர் சைவ மாண்பினக்கள் தலை வணங்கி வாயார வாழ்த்தி'' எனப்பட்டது. சாக்

கியர் திருச்சங்க மங்கை என்னும் ஊரில் பிறந்தவர். இதனைச் சேக்கிழார்,

> தாளாளர் திருச்சங்க மங்கையினில் தகவுடைய
> வேளாளர் குலத்துதித்தார்''

என்று பாடிக் காட்டினார். சங்கை மங்கை காஞ்சியம்பதிக்கு அருகில் உளது. இதனால் ஈண்டுச் சங்கை மங்கை வருசாக்கியர் என்றனர்.

சாக்கிய நாயனார் வேளாளர். காஞ்சிபுரத்தைச் சார்ந்த சங்கை மங்கையில் பிறந்தார். பிறப்பைச் ஒழிக்கச் சாக்கியர் நூற்களை ஓதி உணர்ந்தார். அதனால் பயன் இல்லை என்று அறிந்தார். பின், ஈறில் சிவ நன்னெறியே பொருளாவது என்று உணர்ந்தார். அதனோடு சைவ சமயத்தின் சிறந்த கொள்கைகளையும் உணர்ந்தார். இதனைச் சேக்கிழார்,

> செய்வினையும் செய்வானும்
> அதன்பயனும் கொடுப்பானும்
> மெய்வகையான் நான்காகும்
> விதித்தபொருள் எனக்கொண்டே
> இவ்வியல்பு சைவநெறி
> அல்லவற்றுக் கில்லைஎன
> உய்வகையால் பொருள்சிவன்என்
> றருளாலே உணர்ந்திருந்தார்

என்று மொழிந்துள்ளார்.

சாக்கியர் உயிர்களிடத்தில் இரக்கம் உடையவர். சைவ நெறியில் புகுந்த இவர் பௌத்த கோலத்தை விட்டிலர். இவரிடம், சிவலிங்கம் கண்ட பின்பே உண்ணும் நியதி இருந்தது. ஒரு நாள் சிவலிங்கத்திற்குப் பூசை செய்ய நேர்ந்தபோது, மலர் இல்லாமையினால் அருகிருந்த கல்லை எடுத்து, இறைவன் மீது இட்டுப் பூசித்தார். இதனைச் சேக்கிழார் மிக்க அன்புடன் "அல்லாதார் கல் என்பர் அரனார்க்கு அலராமால்" என விளக்கிப் போந்தார். இவ்வாறே தினமும் பூசித்து இறைவர் அன்புக்கு உரியர் ஆனார்.

புகழ் என்னும் அடை உற்றவர் சிறம்புலி நாயனார். இவர் புகழ் என்னும் அடையுற்றதைச் "சீர்கொண்ட புகழ் வள்ளல் சிறப்புலி" எனச் சுந்தரர் தம் பாட்டில் சொல்லி இருப்பதைக் காண்க. இவர் சோழ நாட்டில் திருவாக் கூரில் வேதியர் குலத்தில் பிறந்தவர். அடியவர்கட்கு அமுது ஈந்து வந்தவர். பொருளையும் கொடுத்து வந்தவர். இறை வனது ஐந்து எழுத்தை ஓதியும் யாகம் செய்தும் இறைவன் திருவருளைப் பெற்றவர்.

இவர் புகழ் என்னும் அடையினைப் பொருந்தப் பெற் றவர் என்பதை நன்முறையில் எடுத்துச் சேக்கிழாரும்,

ஆலைசூழ் பூகவேலி அத்திரு
 ஆக்கூர் தன்னில்
ஞாலமார் புகழின் மிக்கார்
 நான்மறைக் குலத்தின் உள்ளார்
நீலமார் கண்டத் தெண்தோள்
 நிருத்தர்தம் திருத்தொண் டேற்ற
சீலராய்ச் சாலும் ஈகைத்
 திறத்தனில் சிறந்த நீரார்

என்று மொழிந்திருப்பதைக் காண்க.

கொடை என்னும் அடையினைப் பெற்றவர், கழறிற்று அறிவார் நாயனார். இதனைத் திருத் தொண்டத் தொகையில் "கார்கொண்ட கொடைக் கழறிற்றறிவார்" எனச் சிறப்பிக் கப்பட்டிருதலைக் கொண்டு அறியலாம்.

இவர் சேர நாட்டில் கொடுங்கோளூரில் சேரர் மரபில் பிறந்தவர். இவரது பெயர் பெருமாக்கோதை என்பது. இவர் திருவஞ்சைக் களத்தலத்தில் தொண்டு புரிந்து வந்தார். அந்நாளில் செங்கோற்பொறையன் அரச பதவி துறந்து வனம் ஏகினன். அப் பதவியை ஏற்க அமைச்சர்கள் பெருமாக் கோதையாரை வேண்டினர்கள். இதுவும் சிவ பெருமான் திருவருள் என்று கொண்டு, இறைவரிடம் "யாரும்

எவையும் கழறுவனவற்றை அறிந்து (கூறுவனவற்றைத் தெரிந்து) அக் குறைகளை நீக்கும் முறையில் அரசு புரியும் வன்மைதந்தால் அரசை ஏற்பேன்'' என்று வேண்ட, ''அவ்வாறே ஆகுக'' என்ற திருவருள் பிறக்க அரசை ஏற்றார். இதனால் இவர் கழறிற்று அறிவார் நாயனார் எனப்பட்டார். இவர் திருநீற்றின்பால் பெருமதிப்பு வைத்தவர். ஒரு நாள் வண்ணான் உழமண் சுமையுடன் வரும்போது, அம்மண் அவன்மீது வெளுத்துக்காண அத் தோற்றத்தினைச் சிவ்வேடப் பொலிவாகக் கொண்டு யானைமீது வந்த சேரர் கீழ் இறங்கி வண்ணானை வணங்கி, ''திருநீற்றின் வாரவேடம் நினைப்பித்தீர் வருந்தா தேகும்'' என்று மொழிந்தவர். தில்லை நடராசனைப் பூசித்து, அப் பூசை முடிவில் திருச் சிலம்பொலியினைக் கேட்டு மகிழ்ந்தவர். சிவபெருமான் பாணபத்திரர் என்பார்க்குப் பொருளைத் தரும்படி திருமுகப் பாசுரம் எழுதி அனுப்ப, அதன்படி அவர்க்கும் பெரும் பொருள் தந்தவர். சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் பேர் அன்பு கொண்டவர். சுந்தரருடன் தல யாத்திரை செய்தவர்.

கழறிற்றறிவாரும் சுந்தரரும் திருக்கைலைக்கு ஒருங்கே எய்தினர். இவர் சிதம்பரத்தைத் தரிசித்தபோது பொன் வண்ணத் தந்தாதியையும், திருவாரூரை அடைந்து தரிசித்தபோது திருவாரூர் மும்மணிக் கோவையையும் பாடினார். திருமறைக் காட்டை அடைந்து தரிசித்தபோது அத்தலத்தின் மீது ஒரு திருவந்தாதி பாடினார். திருவந்தாதி பாடினார் என்பது,

நிறைந்த மறைகள் அர்ச்சித்த
நீடு மறைக்காட் டருமணியை
இறைஞ்சி வீழ்ந்து பணிந்தெழுந்து
போற்றி யாழைப் பழித்தென்னும்
அறைந்த் பதிகத் தமிழ்மாலை
நம்பி சாத்த அருட்சேரர்
சிறந்த அந்தா தியில்திறப்பித்
தனவே ஓதித் தினைத்தெழுந்தார்

என்று பாடி யிருப்பதால் அறிய வருகிறது.

ஆனால், பதினோராம் திருமுறையில் இந்நூல் காணப்படவில்லை. 'அது செல்லுக்கிரையாயது போலும்' திருக்கையிலையில் "திருக்கயிலாய ஞான உலா" என்னும் நூலைப் பாடினார். இவர்க்குச் சேரமான் பெருமாள் நாயனார் என்ற பெயரும் உண்டு.

இவர்க்குக் கொடை என்னும் அடை உண்டு என்பது, சேரர்க்கு இறைவர் எழுதிய திருமுகப் பாசுரத்திலும் "பருவக் கொண்மூப் படிஎனப் பாவலர்க்கு உரிமையின் உதவி" என்று குறித்திருப்பதாலும், சேக்கிழாரும் "பருவ மழைச் செங்கை" என்றும்,

> நம்பர் தாளின் வழிபாட்டால்
> நாளும் இன்புற் றமர்கின்றார்
> இம்பர் உலகில் இரவலர்க்கும்
> வறியோர் எவர்க்கும் ஈகையினால்
> செம்பொன் மழையாம் எனப்பொழிந்து
> திருந்து வென்றி உடன்பொருந்தி
> உம்பர் போற்றத் தம்பெருமாற்
> குரிய வேள்வி பலசெய்தார்

என்றும் குறிப்பிடுதல் காண்க.

வைவேல் அடைபொருந்தப் பெற்றவர் கூற்றுவ நாயனார். இதனை மேலே காட்டப்பட்ட திருத்தொண்டத் தொகைப் பாட்டில் "வேல் கூற்றன்" என்று கூறப்பட்டிருத்தல் கொண்டு தெளிக. கூற்றுவ நாயனார் களந்தைப் பதியின் தலைவர். குறுநில மன்னர். அடியார் பக்தியில் சிறந்தவர். ஐந்தெழுத்தை இடையறாது ஓதுபவர். இவர் வேற்றரசர்களை வென்று நாற்படை கொண்டு விளங்கினும் முடிசூடா மன்னராய்த் திகழ்ந்தார். இக்குறையை நீக்கத் தில்லை வாழ் அந்தணர்களிடம் சென்று, தமக்கு முடி சூட்ட வேண்டினார். "அவர்கள் சேர சோழ பாண்டியர்கட்கு மட்டுமே முடி சூடுவோம்" என்று கூறி மறுத்தனர். நாயனார் வருந்தித் துயின்றபோது இறைவர் அவர்க்குத் தம் திருவடிகளையே முடியாகச் சூட்டினார். அத்திருவடிகளையே முடியாகக்

சிவனடியார்முன் சிறியராய் நடந்துகொண்டமையின், சிறுத்தொண்டர் எனப்பட்டார். திருஞான சம்பந்தரைத் தம்இல்லம் கொண்டு உபசரித்தவர். திருஞானசம்பந்தர் இவரையும் இவர் தம் திருமகனாரையும் தம் பதிகத்தில் சிறப்பித்துப் பாடியுள்ளனர். ஒரு நாள் சிவனடியார் யாரையும் காணப்பெறாது சிறுத்தொண்டர் வருந்தும் நிலையில் சிவபெருமானே சிவனடியாராக வந்து "ஒரு தாய்க்கு ஒரு பிள்ளையாக இருக்க வேண்டும். அவனைப் பெற்றோர் மனம் உவந்து அறுத்துச் சமைத்து உண்பிக்க வேண்டும்" என்று கூற அவ்வாறே தம் மகனை அறுத்து உணவளிக்க, இறைவர் இவர் அன்பை அறிந்து குழந்தையை எழுப்பித் தந்து காட்சி தந்தார். பின் இறைவர் திருவடியுற்று இன்புற்றார். இவர் நகர் எனும் அடைமொழி கொடுக்கப்பட்டுத் திருஞான சம்பந்தராலும் புகழப்பட்டவர். "செங்காட்டங்குடிமேய சிறுத்தொண்டன்" என்னும் தொடரைக் காண்க.

கணநாதர் சோழ நாட்டில் காழிப்பதியில் (சீர்காழி) வேதியர் மரபில் பிறந்தவர். காழிப் பெருமானார்க்குத் தொண்டு புரிந்தவர். அடியார்க்கு வரும் இடையூறுகளைத் தீர்ப்பவர். மக்களைத் திருத்தொண்டில் ஈடுபடும்படி செய்தவர். திருஞான சம்பந்தரை வழிபட்டு முத்தி பெற்றவர்.

சேக்கிழார் இவ்வறுவரையும் ஏத்தெடுத்தவர். இதனை "அவர்தாள்சூடித் தீதினை நீக்கல் உற்றேன்" என்று சாக்கியரையும் "சிறப்புலித்தாள் வாழ்த்தி" என்று சிறப்புலியாரையும் "கறி அமுதா ஊறிலாத் தனிப்புதல்வன் தன்னை அறிந்தங் கமுதூட்டப் பேறு பெற்றார் சேவடிகள் தலைமேல் கொண்டு" என்று சிறுத்தொண்டரையும் "சேரலனார் கழல் போற்றி" என்று சேரமான்பெருமாள் நாயனாரையும் "கணநாதனார் கழல் வாழ்த்தி" என்று கணநாதரையும், "கூற்றுவனார் கழல் வணங்கி" என்று கூற்றுவநாயனாரையும் சேக்கிழார் வணங்கி இருத்தலைக் காண்க. (6)

# பொய்யடிமை இல்லாத

7. பொய்அடிமை இல்லாத செய்யுளின் இலக்கியம்
புகல்இலக் கணம்மெய்ஞ் ஞானம்
போதநூல் ஆதியா யாவும்அரீல் தபஉணர்பு
புரகரனை யேதுதித்து
மெய்அடிமை வாய்ந்தசங் கப்புலவர் முதலாய
வித்தக ஒழுக்கம்மிக்கார்
விண்மருவு வார்பரவும் எண்மரும்எம் இருதயம்
விடாதமர ஏத்தெடுப்பாம்
செய்யமலர் ஆதனம் இருந்துபல சாதியும்
சேரப் படைத்ததேவும்
செப்பரிய ஆயஅவ் அச்சாதி குறிகுணம்
செய்கைகுடி கொள்ளும்இயல்பு
வெய்யமொழி உணவுமுன் விரித்தெலாம் அறியவலர்
மெய்அறிஞர் எனல்விளக்கி
மேம்பட்ட வேளாண் குலக்கதிர் எனும்குன்றை
விமலனைக் காக்கஎன்றே

*[அ. சொ.] செய்யமலர்-செந்தாமரை மலர், ஆதனம்-ஆசனம், இருப்பிடம், தேவு-பிரம்மதேவன், வெய்ய-விரும்பத்தக்க, செப்ப அரிய-சொல்ல முடியாத, குறி-சமயம், வலர்-வல்லவர், கதிர்-சூரியன், விமலனை-தூய்மையுடையவரான சேக்கிழாரை "பொய் யடிமை இல்லாத செய்யுள்" திருத்தொண்டையில் காணப்படும் ஏழாவது பாடல், புகல்-கூறும், மெய்-உண்மை, போத நூல்-ஞான நூல், அரில்-குற்றம், தப-நீங்க, உணர்பு-உணர்ந்து, புரகரன்-முப்புரத்தை அழித்த முக்கண் மூர்த்தி, வித்தகம்-ஞானம், ஒழுக்கம்-நெறி, விண்மருவுவார்-ஆகாயத்தில் பொருந்தி வ்ாழும் தேவர்கள், பரவும்-போற்றும், எண்மர்-பொய்யடிமை இல்லாத புலவர், புகழ்ச்சோழர், நரசிங்க*

முனை அரையர், அதிபத்தர், கலிக்கம்பர்-கலியர், சத்தியார், ஐயடிகள் காடவர் கோன் ஆகிய எட்டு அடியார்கள்.

**விளக்கம்:** பிரமன் உயிர்களைப் படைக்கும் தெய்வம். அவன் குறிப்பிட்ட ஒரு சாதியினைமட்டும் படைப்பவன் அல்லன். உலகில் உள்ள எல்லாச் சாதிகளையும் படைப்பவன். இவ்வாறு கருதுபவர் இந்திய நாட்டு மக்கள். புராணங்களின் கருத்தும் இதுவே. இதுவே பலசாதியும் சேரப் படைத்ததேவு எனப்பட்டது. சேக்கிழார் பெருமானாரும், தம்முடைய படைப்பாகிய பெரிய புராணத்தில் பல சாதியில் தோன்றிய பெரியார்களின் வரலாற்றையும் பாடியுள்ளனர். ஈண்டுப் பிரமனினும் சேக்கிழார் பேர்அறிவு படைத்தவர். பிரமன் பல சாதியினரை மட்டும் படைத்தவன். ஆனால் சேக்கிழார் பெருமானாரோ பல சாதியினைப் பற்றிக் கூறுவதோடு இன்றி, அவ்வச் சாதியின் குறி, குணம், செய்கை, குடி, கொள்ளும் இயல்பு, மொழி, உணவு ஆகிய இவற்றை எல்லாம் அறிந்து இயம்பியவர். இதனால்தான் எல்லாம் அறியவலர் எனப்பட்டார். பிரமனே படைத்த பல சாதியினர் மறைகின்றனர். ஆனால் சேக்கிழார் படைப்பாகிய பெரிய புராணம் மாயாமல் என்று நிலவி வருகின்றது. இதனால்தான், குமர குருபர சுவாமிகளும்

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்தமிழோர்க்கொவ்வான்-மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு.

என்று தெரிந்து கூறினர்.

சிவனடியார்களைப்பற்றி அறிவிக்கும் நூல்கள் சுந்தரருடைய திருத்தொண்டத் தொகையும், நம்பியாண்டார் நம்பிகளின் திருத்தொண்டர் திருவந்தாதியும் ஆகும். திருத்தொண்டத் தொகையின் மூலம் நாம் அறியக் கிடப்பன கீழ்வருவன: திருநீலகண்டர் குயவர் என்பதையும், இயற்பகையார் இல்லையே என்னாத இயல்பினர் என்பதையும்,

மாறநாயனார் இளையான் குடியினர் என்பதையும், மெய்ப் பொருள் நாயனார் வெல்லுமா மிகவல்ல பண்பினர், என் பதையும், விறல்மிண்டர் குன்றாரைச் சார்ந்தவர், என்பதை யும், எறிபத்தர் வேல் ஏந்திய நம்பி என அவரது படையின் சிறப்பையும், [ஏனாதிநாதர்க்கு எந்த அடைமொழியும் காணப்பட்டிலது.] கண்ணப்பர் கலைமலிந்த என்ற கலை அறிவையும், கலய நாயனார் கடவூரினர் என்பதையும், மானக்கஞ்சாறர் தோள்மலிந்த வள்ளல் எனத்தோள் சிறப்பும் கொடைச்சிறப்பும் உடையவர் என்ற குறிப்பையும், தாயனார் எஞ்சாதவாள் என அவர் தம் வாள்சிறப்பையும், ஆனாயர் அலைமலிந்தபுனல் மங்கை என அவர்தம் ஊர்ச் சிறப்பையும், மூர்த்திநாயனார் மும்மையால் உலகாண்ட என்ற அவர்தம் வரலாற்றுக்குறிப்பையும், (முருகநாயனார் உருத்திர பசுபதியார் எந்தவித அடைமொழியின்றியும் குறிப்பிடப்பட்டவர்கள்) திருநாளைப் போவார் செம்மையே என்ற அவர் தம் பண்பின் மேன்மையினையும் (திருக்குறிப்புத் தொண்ட நாயனார்க்கு எந்த விதமான அடைமொழியும் இலது.) சண்டேசுரர் தம் தாதையார் தாளை வெட்டிய வரலாற்றுக் குறிப்பையும் திருநாவுக்கரசர் திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட என அவர்தம் பண்பின் மேம்பாட்டையும், குலச்சிறையார் பெருநம்பி என்ற அடையின் மூலம் ஆடவரில் சிறந்தவர் என்ற குறிப்பையும், (நம்பி என்பது விகுதி பெறாத ஆண்பால் சிறப்புப் பெயர். இப்பெயர் கண்ணப்பர்க்கும் அப்பூதி அடிகளார்க்கும், நமி நந்தி அடிகளார்க்கும், கணம்புல்லர்க்கும், முனையடுவார்க் கும், இடங்கழியார்க்கும், கோட்புலியார்க்கும் கொடுக்கப் பட்டுள்ளதையும் அறிக) பெருமிழலைக் குறும்பர் எனஅவர்தம் ஊரினைச் சார்த்தியும், (பேயார்-காரைக்கால் அம்மையார். எந்த அடைமொழியும் இன்றிக் குறிப்பிடப்பட்டவர்) அப்பூதியார் ஒருநம்பி என்பதையும், திருநீலநக்கர் சாத்த மங்கையைச் சார்ந்தவர் என்பதையும், நமிநந்தி அடிகளார் அருநம்பி என்பதையும், திருஞானசம்பந்தர் இறைவன் திருவடியன்றி வேறு எதையும் போற்றாதவர் என்பதையும்,

கூறி அவர் சிவனார் இடம் கொண்ட அன்பின் திறத்தையும், கலிக்காமர், அவர்தம் குடிப்பெயராகிய **ஏயர்கோன்** என்ற அடைமொழியையும், திருமூலர் **நம்பிரான்** என்ற அடையால் அவர் தலைவர் என்ற குறிப்பினையும், தண்டியடிகள் **நாட்டமிகு** என்ற தொடரால் அவர் வரலாற்றில் நிகழ்ந்த நிகழ்ச்சினையும் சோமாசிமாறர் தாம் பிறந்த பதியாகிய 'அம்பரான்' என்ற அடையினையும் சாக்கியரைக் குறிக்கும் போது **உமைபங்கள் கழலே மறவாது கல்லெறிந்த** என்ற அடைகொடுத்து அவரது வரலாற்று நிகழ்ச்சியினையும் சிறப் புலியார்க்குப் **புகழ்வள்ளல்** என்றும் கூறி, அவர்தம் புகழை யும் வள்ளன்மையினையும், சிறுத்தொண்டர் **திருச்செங் கட்டங் குடியினர்** என ஊரினையும், கழறிற்றறிவார்தம் கொடைச்சிறப்பை, **கார்கொண்டர்கொடை** என்னும் அடை யினையும், கணநாதர், ஊர்ப்பெயரைச் சார்த்திக் **கடல் காழிக்** கணநாதர் என்பதையும் கூற்றுவ நாயனார் **களந்தை கோன்** வேல் கூற்றன் என்று அவர்தம் ஊர், படை இவற்றின் சிறப்பையும் புகழ்ச்சோழர், **கருவூர்துஞ்சிய** அடையால் அவர் இறந்த ஊரையும், நரசிங்க முனை அரையர் என்றதாலும், மெய்யடியார் என்றதாலும் உண்மையடியார் அரசமரபினர் என்பதையும். அதிபத்தர் **நாகை** என்று சிறப்பித்ததனால் நாகபட்டினத்தார் என்பதையும், கலிக்கம்பர் **கைதடிந்த** என்ற அடை கொடுத்துப் பேசப்படுதலின், அவர்தம் வரலாற்றுக் குறிப் பையும் (கலிய நாயனார் எந்த விதமான அடையொழியும் இன்றிக் குறிப்பிடப்பட்டவர்) சத்தி நாயனார் **கழல்** என்னும் அடைமொழியும் **விரிஞ்சிகோன்** என்னும் அடைமொழியும் கொடுக்கப்பட்டு அவர் தலைவர் என்ற குறிப்பையும், விரிஞ் சைப் பதியினர் என்ற குறிப்பையும், ஐயடிகள் **காடவர்கோன்** என்ற பெயரால் பல்லவர் என்பதையும், கணம்புல்லர், **நம்பி** என்றும் கழல் அடியே காப்புக் கொண்டிருந்த என்ற அடைகளால், சிறந்தவர் என்பதையும் இறைவன் திருவடியே தமக்குக் காவலாகக்கொண்டவர் என்பதையும் கணம் புற்களை விற்றுவந்தவர் என்ற குறிப்பினையும், நெடுமாறர்

**நெல்வேலி வென்ற** என்ற அடையினால் அவர் பொருது வென்ற மன்னர் என்பதையும், வாயிலார் **தொன் மயிலை** என்ற அடியினால் சிறப்பிக்கப்பட்டு அவர் ஊர் இன்னது என்பதையும், மொழிவார். **அறைக்கொண்ட வேல் நம்பி** என்று கூறப்பட்டு, அவர் பகைவரை அறைதலையும் வேல் கொண்டிருந்ததையும், **நம்பி** என்ற சிறப்புப் பெயர்பெற்ற தையும், கழற்சிங்கார் என்பார், **உலகெலாம் காக்கின்ற பெருமான் காடவர்கோன்** என்ற சிறப்பால் பல்லவ மன்னர் என்பதையும், இடங்கழியார்க்கு **மடல் சூழ்ந்த தார் நம்பி**என அவர்தம் மாலைச்சிறப்பையும், செருத்துணையார் **தஞ்சை மன்னர்** என்ற சிறப்பால் அரசர் என்பதையும், புகழ்த் துணையார் **இறைவர் பொன்னடியில் மனம் வைத்தவர்** என்ற சிறப்பால் அவர் சிவபெருமானிடம் கொண்ட பற்றையும், கோட்புலியார் **அடல்சூழ்ந்த வேல் நம்பி** எனப்பட்டு, அவர்தம் வீரத்தையும், பூசலார் **மறைநாவன் நின்றவூர்** என்ற அடைகளால் பிராம்மணர், திருநின்ற வூரினர் என்பதையும், மானி (மங்கையர்க்கரசியார்) மாதராள் என்பது **வரிவளைக்கைமடமானி** என்ற அடையி னால் அறியப்படுதலையும் (நேச நாயனார் எந்த அடைமொழி யும் இன்றிக் குறிப்பிடப்பட்டவர்) கோச்செங்கட் சோழர் **தென்னவனாய் உலகாண்ட** என்ற அடையினால் செங்கோல் செலுத்திய மன்னர் என்பதையும், திருநீலகண்டத்துப் **பாணனார்** என்பதனால் இவர் பாணர்மரபினர் என்பதையும் சடையனார் இசைஞானியார் திருநாவலர் கோன் என்ற தால் சுந்தரர் இவ்விருவர் தம் பிள்ளை என்பதையும், அரனடியே அடைந்திட்ட என்னும் அடை இறைவன் திருவடியில் கொண்ட அன்பையும் அறிகின்றோம். தில்லை வாழ் அந்தணர், பத்தராய்ப் பணிவார், பரமனையே பாடு வார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தவர், திருவாரூர் பிறந்தவர், முப்போதும் திருமேனிதீண்டுவார், முழுநீறுபூசிய முனிவர், அப்பாலும் அடிசார்ந்தார் ஆகிய இவர்கள் தொகையடியாராகக் கருதப்பட்டவர்கள். இவர்கள் பெயர்களாலேயே இன்னார் என அறியப்படுதலின், அடை

ஒன்றும் கொடுக்கப்பட்டிலர் (பொய்யடிமை இல்லாத புலவரைப்பற்றிய கருத்துக்களைத் தனியே அறிவோமாக)

இனி நம்பியாண்டார் பாடிய திருத்தொண்டைத் தொகையின் மூலம் நாம் அறிவன:

**தில்லைவாழ் அந்தணர்,** நடராசப் பெருமானுக்குத் தொண்டு புரிந்தவர்கள்.

**திருநீலகண்டர்:** சூள் காரணமாக இளமை துறந்து, கூத்தப்பெருமான் திருவருளால் பின்னர்இளமை பெற்றனர். இன்பம் உற்றனர்.

**இயற்பகையார்** தம் காதலியாரைத் தலவேடத்துடன் வந்த சிவனுர் கேட்டபோது ஈந்தவர். வேண்டியது எதையும் கொடுக்க வல்லவர்.

**இளையான் குடிமாறர்** நெல்முளையின் வாரிக்கொண்டு வந்து வீட்டு அலக்கால் தீ மூட்டி வறுத்துச் சோருக்கிக் கீரைகறி செய்து மாதவர்க்கு உணவு அளித்தவர்.

**மெய்ப்பொருள் நாயனுர்** ஒரு பொய்த்தவன் இவரை வெட்டியபோது, தத்தன் என்பவன் அவனை வெட்டத் துணிய, அந்நிலையில் தத்தாநமர் என்று கூறியவர்.

**விறல் மிண்டர்** செங்குன்றம் என்னும் ஊரினர். ஈசனுக்கு அன்பர். சுந்தரரையும், ஈசன்தனையும் **புறகு** என்றவர்.

**அமர் நீதியார்** பழையாறையில் பிறந்தவர். திருநெல்லூர் பெருமான் திருமுன்னர்க் கோவணத்திற்கு நேர் தம்மையும், செல்வத்தையும் மனைவியாரையும் ஈந்தவர்.

**எறிபத்தர்** கருவூரினர்; மலர் கொய்துவருபவர் தண்டில் மாட்டிய பூக்குடல் மலர்களைப் பறித்த யானையை பாகர்களையும் வெட்டியவர்:

**ஏனுதிநாதர்** ஈழ மரபினர். இவர் படைவீரர். தம்மோடு போரிட்டவன் நெற்றியில் திருநீறு கண்டு தம்

படைகளைக் கீழே விட்டவர். அவன் தம்மைக் கண்டிப்ப நின்றவர்.

**கண்ணப்பர்** வேடர், திருக்காளத்தியார் கண்ணில் இரத்தம் கண்டு, நடுங்கித் தம் கண்களை இடந்து அப்பினவர்.

**குங்கிலியக்கலயர்** திருக்கடவூரினர். தம் துணைவியார் தாலியைக் கொண்டு குங்கிலியம் கொண்டு இறைவர்க்கு அப்புகை ஊட்டும் தொண்டினர். திருப்பனந்தாளில் சாய்ந் திருந்த சிவலிங்கத்தைத் தம் கழுத்துடன் கயிற்றை இணைத்து இழுத்து நேரே நிலைக்கச் செய்தவர்.

**மானக்கஞ்சாறர்** கஞ்சாறூரினர். இவரது திருமக ளார் கூந்தலைப் பஞ்சவடிக்குத் தேவை என்று தவசி கேட்ட போது அரிந்து கொடுத்தவர்.

**அரிவாட்டாயர்** கணமங்கலம் என்னும் ஊரினர். சிவபெருமானுக்கு எனக் கொணர்ந்த 'அமுது' சிந்திவிட, அதனை அமுதாகக் கொள்ளாவிடில், என் தலையை வெட்டிக் கொள்வேன் என்று தம் வாளைத் தம் தலையோடு பூட்டியவர்.

**ஆனாயர்** குழல் மூலம் இசை பாடி இறைவனை இன் புறச் செய்தவர். மேல் ஈழநாட்டு மங்கலம் என்னும் ஊரின் ஆயர்.

**மூர்த்தியார்** மதுரையில் தோன்றியவர். மதுரைச் சொக்கலிங்கப் பெருமானார்க்குத் தம் முழங்கையைத் தேய்த் துச் சந்தனம் கொண்டு வழிபட்டு உலகாண்டவர். சமணன் ஆவதைவிடச் சாவது மேல் எனக் கருதியவர்.

**முருகனார்** அந்தணர். திரும்புகலூரினர். ஐந்தெழுத்து ஓதுபவர். மலர்த் தொண்டு புரிபவர். திருஞான சம்பந்தர் தோழர்.

**உருத்திர பசுபதியார்** நீரில் நின்று இரவும் பகலும் உருத்திர மந்திரம் சொல்பவர். திருத்தலை என்னும் ஊரினர்.

**திருநாளைப்போவார்** ஆதனூரினர். திருத்தில்லை நாதன் அருளால் நாளைப் போவேன் என்று கூறி வந்தவர். புலைய மரபினர். ஆலயத்துப் புறத்தே நின்று தொண்டு செய்தவர். தில்லை மூவாயிரவர் கைகூப்ப முனிவராய்த் திகழ்ந்தவர்.

**திருக்குறிப்புத் தொண்டர்** காஞ்சிப்பதியினர்; வண்ணார மரபினர். அடியார் ஆடையை வெளுத்துத் தருபவர். மழை பெய்து கொண்டிருந்தால் நான் இறப்பேன் என்று கூறிப் பாறையில் முட்டும் அன்பர்.

**சண்டேசுரர்** திருச்சேய்ஞ்ஞலூரினர். தந்தையின் தாள்களை வெட்டியவர். ஈசன் திருமுடியில் பால் சொரிந்து மலர் இட்டு வழிபட்டவர்.

**திருநாவுக்கரசர்** திருவாமூரினர். திருவீரட்டர் திருவடி உற்றவர். திருநல்லூர் சிவனார் திருவடி முடிமேல் சூடப் பெற்றவர். விடத்தினை அமுதாக உண்டவர். திருமறைக் காட்டின் கதவைத் திறந்தவர். கல்லைக் கடலில் மிதக்கச் செய்தவர்.

**குலச்சிறையார்** சமணர்களைக் கழுவில் ஏற்றுவித்தவர். தமிழ் மொழி அறிந்தவர். மணமேற்குடி என்னும் ஊரினர். பாண்டியன் அதிகாரி.

**பெருமிழலைக் குறும்பர்** சுந்தரர் கயிலைக்கு ஏகும் போது, அவர்க்கு முன் கயிலை செல்வேன் எனக் கயிலை சென்றவர்.

**காரைக்கால் அம்மையார்** இவர்கயிலையைக் காலால் மிதித்து ஏறேன் எனத் தலையால் நடந்து செல்கையில் உமை அம்மையார் நகைத்தபோது, 'இவர் என் அம்மை' என்று இறைவனால் அழைக்கப்பட்டவர்.

**அப்பூதியார்** திங்களூர் வேதியர். திருநாவுக் கரசர் திருவடிகளே செல்வம் எனப் போற்றியவர். தண்ணீர்ப் பந்தர்க்குத் திருநாவுக்கரசர் எனப் பெயரிட்டவர்.

திருநாவுக்கரசர் தம் வாக்கில் தம் பெயர் அமையும் பேறு பெற்றவர்.

**திருநீலநக்கர்** சாத்தமங்கை வேதியர். சிவலிங்கத்தின் மீது இருந்த சிலந்தியைத் தம் வாயால் ஊதிப்போக்கிய காரணத்தால் மனைவியாரை நீக்கியவர். இறைவர் "வாயால் ஊதிய இடம் தவிர்த்து ஏனைய இடங்கள் கொப்புளம் இருத்தலைக் காண்" எனக் கூறும் வாய்ப்புப் பெற்றவர்.

**நமிநந்தி அடிகள்** ஏமப்பேறூரார். நீரால் திருவாரூரர்க்கு விளக்கு எரித்தவர்.

**திருஞானசம்பந்தர்** அமணர் வலி தொலைய இளைய வயதில் சீர்காழிப் பெருமானைப் பாடியவர். தேவியின் திருவருள் பெற்றவர். செங்கட் சோழர், முருகநாயனர், திருநீலநக்கர் இவர்கள் பெயரைத் தம் பதிகத்தில் மொழிந்தவர். சீர்காழிப் பதியினர்.

**ஏயர்கோன் கலிக்காமர்** ஏயர் குடியினர். வன்தொண்டர் சூலை நோய் தீர்ப்பார் என்றபோது, தம் உடைவாளால் குத்திக்கொண்டு அந்நோயைத் தீர்த்துக் கொண்டவர்.

**திருமூலர்** சாத்தனூர் இடையன் உடம்பில் புகுந்து, இறைவன் வேதத்தைத் தமிழில் பாடிப் பரவவிட்டவர்.

**தண்டி அடிகள்** கண் பார்வை இன்றியே கயிறு பிடித்துக்கொண்டே குளத்தில் இறங்கித் தரை வெட்டி அகலமாக்கியவர். சமணர்கள் கண் இழக்க இவர் இறைவன் அருளால் கண் பார்வை பெற்றவர்.

**மூர்க்கர்** திருவேற்காட்டின் மன்னர். சூதாடிப் பொருள் அடைந்து சிவனடியார்க்கு ஈந்தவர். கும்பகோணம் சென்றும் இவ்வாறு பணி புரிந்தவர்.

**சோமாசிமாறர்:** திருவம்பர் வேதியர். ஐந்தெழுத்து ஓதுபவர். சுந்தரரைத் தம் துணையாகப் பெற்றவர். நித்ய நியமனம் பூண்டவர்.

**சாக்கியர்:** சங்கை மங்கையினர். ஏகாம்பரநாதர் திரு மேனியில் செங்கல் எறிந்தவர். இறை திருவருள் பெற்றவர்.

**சிறப்புலியார்:** திருவாக்கூரினர்; அந்தணர். சிவனடி யார்க்குச் சிறப்புச் செய்தவர்.

**சிறுத்தொண்டர்:** இவர் திருச்செங்காட்டங் குடியவர் மன்னவர். தம் ஒரு மகனை அரிந்து இறைவர்க்குப் படைத் தவர்.

**கழறிற்று அறிவார்:** உழ மண் உலறிய மேனிய னாய் வந்த வண்ணானைச் சிவனடியான் என வணங்கியவர். சேர மரபினர். சிவனார் அளித்த வெள்ளை யானையில் சுந்தரர் சென்றபோது, அவர்க்கு முன்னாக இவர் குதிரைமீது சென்றவர்.

**கணநாதர்** காழி நகரினர். சிவனடியார்களாகப் பலரை ஆக்கியவர். அடியார்கட்குத் தொண்டு செய்யும்படி உபதேசித்தவர். சிவகணங்கட்குத் தலைமை வகித்தவர்.

**கூற்றுவ நாயனார்** களந்தைப் பதியினர். இறைவன் திருவடிகளையே முடியாகக் கொண்டு உலகை ஆண்டவர்.

**பொய்யடிமை இல்லாத புலவர்:** தமிழ்ச் சங்கத்தில் இருந்த கபில பரணர், நக்கீரர் முதலான நாற்பத்தொன் பதின்மர்கள். சிவபெருமான் திருவடியே பாடும் புலவர்கள்.

**புகழ்ச் சோழர்** சிங்கள நாட்டைப் பொடிபடுத்தியவர். சூரிய குலத்தவர். எறிபத்தர்க்குத் தம் வாளை ஈந்தவர்.

**நரசிங்க முனையரையர்** தவர்க்குப் பொன் அளித்தவர். புலவர்களும் காமுகர் வடிவில் வந்தவர்க்கும் இரட்டிப்பான பொன் ஈந்தவர். மன்னர் மரபினர்.

**அதிபத்தர்:** நாகபட்டினத்தினர். மீன் பிடிக்கும் போது அகப்பட்டவற்றுள் ஒன்றைச் சிவனார்க்கு என்று கடலில் விட்டு வந்தனர். ஒரு நாள் ஒரே மீன் அகப்பட்டது. அது பொன் மயமான மீன். அதனையும் கடலில் இட்டவர்.

**கலிக்கம்பர்:** திருப்பெண்ணாகடத்தினர். தம்மிடம் வேலை பார்த்தவன், பின்னர்ச் சிவனடியாராக மாறி, இவர் வீட்டிற்கு வந்தபோது, அவனைத் தன் அடிமையாள் என எண்ணாது சிவனடியார் என்று உட்கொண்டு, அவன் பாதம் கழுவி வழிபட எண்ணி, மனைவியாரை நீர்வார்க்கச் செய்ய, அவ்வம்மையார் செய்யத் தயங்கியபோது அவர்தம் கையைத் தடிந்தவர்.

**கலியனார்:** இவர் திருவொற்றியூர் எண்ணெய் வணிகர். எண்ணெய் விற்றும் செக்காடியும் கூலி கொண்டும் திரு விளக்கி ஏற்றி வந்தவர்.

**சத்தியார்:** சிவனடியார்க்குத் தீ மொழி பகர்வோரின் நாக்கை அறுப்பவர். திருவிரிஞ்சைப் பதியினர். பகைவரை வெல்பவர்.

**ஐயடிகள் காடவர் கோன்:** இறைவர் உறைவிடங்கள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் வெண்பா பாடியவர். சிவ வழிபாடு தழைக்க உலகம் ஆண்டவர். பல்லவர் மரபினர்.

**கணம்புல்லர்:** வேளூரினர். சிதம்பரம் திருப்புலீச் சுரத்து ஈசற்குக் கணம்புல்லால் விளக்கெரித்தவர்.

**காரிநாயனார்:** திருக்கடவூரினர். இறைவனை வாழ்த் தியவர்.

**நின்றசீர் நெடுமாறர்:** திருநெல்வேலிப் போரில் வெற்றி கண்டவர். சம்பந்தர்க்குத் தோற்ற அமணரைக் கழு முனையில் ஏற்றியவர்.

**வாயிலார்:** திருமயிலையினர். இறைவரை மன ஆலயத்தில் அமர்த்தி, அறிவாகிய விளக்கு ஏற்றி, உள்ளமாகிய மலரால் அர்ச்சித்து அன்பாகிய நெய் அமிர்தம் கொடுத்தவர்.

**முனையடுவார்:** திருநீடூர்த் தலைவர். போர் முனையில் நின்று போரிடுபவர். தோற்றவர்களோடு தாம் சேர்ந்து வெற்றி கண்டு அவர் தரும் கூலி கொண்டு அப்பொருளைச் சிவனடியார்கட்கு ஈந்தவர்.

**கழற்சிங்கர்:** திருவாரூர்த் தியாகர்க்கு வைத்த மலரைத் தம் மனைவி கையால் எடுத்து மோந்ததனுல் அவர் கையை அரிந்தவர்.

**இடங்கழியார்:** சிதம்பரச் சிற்றம்பல முகட்டினுக்குப் பொன் வேய்ந்த ஆதித்த சோழன் மரபினர். இருக்கு வேளூரினர். தம் செல்வம் சிவனடியார்கட்கு உரியது எனப் பறை அறைந்து அறிவித்தவர்.

**செருத்துணையார்:** கழற்சிங்கர் தேவியார் தியாகர்க்கு என வைத்த மலரை மோந்த காரணத்தால் மூக்கை அரிந்தவர். தஞ்சை ஊரினர்.

**புகழ்த்துணையார்:** திருப்பத்தூரினர். வறுமையால் வாட்டம் உற்றவர். ஒருநாள் இறைவர் திருவடிமேல் முழுக்குநீரைக் கொட்டும்போது தளர்ச்சியினுல் கலசத்தை முடியில் போட்டு நடுங்க, இறைவர் திருவருளால் நிதி பெற்றவர்.

**கோட்புலியார்:** திருநாட்டியத்தான் குடியினர் தலைவர். திருநாவலூரரர் அருள் பெற்றவர். தம் சுற்றத்தாரை வெட்டி வீழ்த்தியவர்.

**பத்தராய்ப்பணிவார்:** திருவாரூர்பிரான் திருவடி பணிந்தவர். மயிர்சிலிர்க்க ஆனந்த நீர்பொழிய உடல் நடுங்க, வாய்குழறப் பக்திபூண்டு வணங்குபவர்.

**பரமனையே பாடுவார்:** வடமொழி தென்மொழிகளால் தில்லைப்பரமனைப்பாடுபவர்.

**சித்தத்தைச் சிவன்பாலே வைத்தவர்:** இறைவன் திருவடிகளில சித்தம் வைத்தவர். இவர்கள் வீடு பேறு எய்தியவர்.

**திருவாரூர்: பிறந்தார்;** சிவகணத்துள்ளவர். இவர் சேவடிகளே செல்வநெறி அடையச் செழுநெறி ஆகும்.

**முப்போதும் திருமேனி தீண்டுவார்:** இவர்கள் ஆகம நெறியில் வணங்கி அர்ச்சிப்பார் சிவனார் உலகில் அழியாச் செல்வத்தில் அமர்ந்தவர்.

**முழுநீறு பூசிய முனிவர்:** உலகு கலங்கினும் ஊழி திரியினும், உள்ளம் ஒருகாலும் விலகுதல் இல்லாதவர். திருவாரூர் அமர்ந்த அரனடிக்கீழ் விளங்கும் வெண்ணீற் றைத் தம் திருமேனியில் அணிபவர்.

**அப்பாலும் அடிச்சார்ந்தார்:** இறைவன் திருவடிகளில் சுந்தரர்க்குப்பின் அன்பு பூண்டு சார்பவர்கள். சிவனார் கணத்தைச் சார்ந்தவர் நம் செழுந்தவர்.

**பூசலார்:** திருநின்றவூரினர். இறைவனுக்கு ஒரு கோயில் எப்போது கட்டிமுடிப்பது என எண்ணியவர்; அவ்வெண் ணத்தை உறக்கம் இன்றி, இரவும் பகலும் எண்ணி இறை அருள் பெற்றவர்.

**மங்கையர்க்கரசியார்:** பாண்டிமாதேவியார். மானி யார். தம் கணவனரது வெப்புநோய் கண்டு, அது பொருது சம்பந்தர்க்கு அறிவித்து அவரால் அருகர்க்கு அழிவு தேடியவர்.

**நேசனார்:** சிவனடியைத் தம் உள்ளத்தில் கொண்டவர். சிவனடியார்க்கு ஆடை கோவணம் நெய்து கொடுத்தவர். காம்பீலி நகரத்தவர். சாலிய மரபினர்.

**கோச்செங்கட் சோழர்:** முன் பிறப்பில் சிலந்தியாய் இருந்தவர். அந்நிலையில் இறைவர்க்குப் பந்தர் வேய்ந் தவர். பின் சோழர் மரபில் பிறந்து அரசை மேற்கொண்டு ஆலயங்கள் கட்டுவித்தவர். திருச்சிற்றம்பலத்திற்குச் செம்பொன் அணிந்தவர். சிவலோகம் அடைந்தவர். தில்லை யினைச் சூழ வேதம் வளர்த்தவர்.

**திருநீலகண்ட யாழ்ப்பாணர்:** திருஎருக்கத்தம் புலியூரின் பாணர். சம்பந்தர் பாடலுடன் தம் யாழ் இசை கூட்டியவர்.

**சடையனுர்:** திருநாவலூரினர்; சுந்தரரைப் பெற்றவர்.

**இசைஞானியார்:** சுந்தரரைப் பெற்றவர்.

**சுந்தரர்:** நம்பி ஆரூரர் என்னும் பெயரினர். இறைவர் ஆவணம் காட்டி அடிமை என நிறுவப்பெற்றவர். திருநாவலூர்க்குத் தலைவர். திருவருட் துறை இறைவர்க்கு நான் ஆள் எனப்பாடியவர். திருத்துருத்தி, வேள்விக்குடி இறைவா, உன்னை மறந்த குற்றம் நீங்க அருள்க என்று வேண்டியவர். வன்தொண்டர் என்னும் பெயரினர். திருவாரூரன் என்னும் பெயரினர். சங்கிலியாருடன் இன்பம் துய்த்தவர். தமக்கு அடைகாய் தரும் கூனன் குருடனுக்கு அருள் புரிந்தவர். திருப்புகலூர் இறைவன்பால் செங்கல்லைப் பொன்னுகப் பெற்றவர். முதலையுண்ட பாலனை அழைத்தவர். திருமுருகன் பூண்டியில் வேடரைப் படுத்தவர். நூல்போன சங்கிலியை மணந்தவர். திருமுது குன்றூரில் பெற்ற பொன்னைத் திருவாரூரில் பெற்றவர்.

மேலே கூறப் பட்டவை நம்பியாண்டார் வாக்கால் அறியக் கிடைப்பன.

சைவத் திருமுறைகளின் மூலம் நாயன்மார்கள் அனைவர்களைப்பற்றிய குறிப்புக்களை அறிய முடியவில்லை. ஒருசிலரைப் பற்றிய குறிப்புக்களே காணக் கிடைக்கின்றன. முதல் மூன்று திருமுறைகளில் பன்னிருவர் பற்றிய குறிப்புக்கள் அறியவருகின்றன. அவர்கள் சண்டேசுவரர், கண்ணப்பர், நமிநந்தி அடிகள், கோச்செங்கட் சோழர், முருகர், சிறுத்தொண்டர், திருநீலநக்கர், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், திருநீல்கண்ட யாழ்ப்பாணர், தண்டியடிகள், புகழ்த்துணையார் ஆவர்.

சண்டேசுவரரைப்பற்றி அறியும்போது அவரது வரலாற்றைப் பெரிதும் அறிகிறோம். அவர் தம் தாதைதாளை வெட்டி

யதையும், மண்ணியாற்றங்கரையில் மணலால் இலிங்கம் அமைத்துப் பால் முழுக்கு ஆட்டியதையும், சண்டீசன் என்னும் பதவி பெற்றதையும், இறைவர் அவர்க்கு மாலை சூட்டியதையும் சம்பந்தரது மூன்று திருமுறைகளின் மூலம் உணர்கிறோம்.

பீரடைந்த பாலதாட்டப் பேணுதவன் தாதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்த்தடிந்தான் தனக்கு
தாரடைந்த மாலைசூட்டித் தலைமை வகுத்ததென்னே

என்றும்,

தோத்திரமா மணலிலிங்கம் தொடங்கியஆன் நிரையின்பால்
பாத்திரமா ஆட்டுதலும் பரஞ்சோதி பரிந்தருளி

என்றும்,

எண்திசையார் மகிழஎழில் மாலையும்போ னகமும் பண்டு
சண்டி தொழ அளித்தான்

என்றும்,

வந்தமண லாலிலிங்கம்
மண்ணியின்கண் பாலாட்டும்
சிந்தைசெய்வோன் தன்கருமம்
தேர்ந்துசிதைப் பான்வருமத்
தந்தைதனைச் சாடுதலும்
சண்டீசன் என்றருளிக்
கொந்தணவும் மலர்கொடுத்தான்
கோளிலிஎம் பெருமானே.

என்றும் வருதல் காண்க.

கண்ணப்பரைப்பற்றிக் கழறுகையில்,

கானலைக்கும் அவன்கண் இடந்தப்பநீள்
வானலைக்குந் தேவு வைத்தான்

என்றும்,

வாய்கலச மாகவழி பாடுசெய்யும்
வேடன்மல ராகும்நயனம்
காய்கணை யினுல்இடந் தீசன்அடி
கூடு காளத்தி மலையே

என்றும் பாடி, அவர் இறைவர்க்குத் தம் கண்ணை இடந்து அப்பியதையும், வாயில் நீர் கொணர்ந்து இறைவனை முழுக் காட்டியவேடர் என்பதையும் அறிவித்துள்ளனர்.

நமிநந்தி அடிகளைக் குறிப்பிடும்போது,

ஆவிதனில் அஞ்சொடுக்கி யங்கணன்என் ருதரிக்கும்
நாவியல்சீர் நமிநந்தி அடிகள்

என்றருளியுள்ளனர்.

கோச்செங்கட் சோழரைப் பாடும்போது, "சிலந்தி செங்கட் சோழன்" என்றும், "செம்பியர் செய்ய கண் இறை செய்த கோயில்" என்றும், பாடி, அவர் சோழர் மரபினர்; முன் பிறவியில் சிலந்தியாக இருந்தவர், கோயில் பல கட்டியவர் என்பனவற்றை அறிவித்துள்ளனர். மூவேந்தர் தலைவன் என்ற குறிப்பினை,

"தென்னன் கோழிவஞ்சியும் ஓங்கும் செங்கோவி
ஞன் மன்னன்" "சீரினுல் அங்கொளிர்
தென்னவன் செம்பியன் வில்லவன்"

என்றும் பாடியிருத்தலால் அறிக.

முருகநாயனுரைப்பற்றிக் குறிப்பிடுகையில்,

தொண்டர் தண்கயம் மூழ்கித்
துணையலும் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக்
குறிப்பறியும் முருகன்

என்றும் பாடி அவர்காலையில் மூழ்கி மலர், சந்தனம், நறும் புகை இவற்றை இறைவர்க்கு நல்குவர் என்பதையும் குறிப்பறிந்து ஏவல் செய்வதையும் குறித்துள்ளனர்.

சிறுத்தொண்டரைப்பற்றிப் பாடுகையில் அவர் தம் திருமகனார் பெயரையும் அவர் வாழ்ந்த ஊரையும் இணைத்து,

''சீராளன் சிறுத்தொண்டன் செங்காட்டங்குடிமேய'' என்று பாடிக்காட்டினர்.

திருநீலநக்கரைக் குறித்துக் கூறும்போது அவர் இன்ன ஊரினர் என்பதை,

நிறையினார் நீலநக்கர் நெடுமாநகர்
என்றுதொண்டர்
அறையும்ஊர் சாத்த மங்கை
அயவந்தி

என்று அருளிப்போந்தார்.

மங்கையர்க்கரசியாரைப் பற்றிப் பாடும்போது, அவ்வம்மையார். சோழன் மகளார், மானி என்னும் பெயரார், பாண்டிமாதேவியார், திருநீற்றை வளர்ப்பவர் என்று குறிப்பிட்டிருப்பதை,

''மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக்கை மானி'' என்றும்,

''சிவன் திரு நீற்றினை வளர்க்கும் பந்தணைவிரலாள்
பாண்டிமா தேவி'' என்றும்,

பாடிய பாடல்களால் தெளிக.

குலச்சிறையாரைக் குறிப்பிடும்போது,

''கொற்றவன் தனக்கு மந்திரியாய குலச்சிறை''
''வெற்றவே அடியார்மிசை வீழும் விருப்பினன்''

''அடியவர் தங்களைக் கண்டால் குணங்கொடுபணியும்
குலச்சிறை''
''கோவணம் பூதிசாதனம் கண்டால் தொழுதெழு
குலச்சிறை''
''நாவணங்கு இயல்பாம் அஞ்செழுத்தோதி''

என்று பாடி, அவர் பாண்டியன் மந்திரி என்பதையும், அடியார் அடியிசை வணங்கும் இயல்பினர் என்பதையும் ஐந்தெழுத்து ஓதுபவர் என்பதையும் அறிவித்துள்ளனர்.

திருநீலகண்டயாழ்ப்பாணரைக் குறிக்கையில் "தக்க பூமனை சுற்றக்கருளொடே, தாரம் உய்த்தது பாணற்கு அருளொடே" என்று அவர் தம்மை அழைத்ததையும், அவர்க்கு இறைவர் பொற்பலகை ஈந்ததையும் அறிவித்துள்ளனர்.

தண்டி அடிகளைப்பற்றிச் சம்பந்தர் தேவாரத்தால் நாம் பெரிதும் அறிதற்கில்லை. "அண்டர் தொழும் தண்டி" என்ற அளவில் மட்டும் அறிகிறோம்.

புகழ்த்துணை நாயனாுக்கு இறைவர் தினம் பொற்காசு அளித்த குறிப்பினைச் சம்பந்தர்,

> அலந்த அடியான் அற்றைக் கன்றோர்காசு எய்திய
> புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே

என்று பாடியுள்ளார்.

அப்பர் தேவாரத்தின் மூலம் ஒருசில அடியார்களைப் பற்றிக் கீழ்வரும் குறிப்புக்களை அறிகிறோம். அவரால் குறிப்பிடப்பட்டவர்கள் ஒன்பது பேர்கள். அவர்கள் ஆவார் கீழ் குறிப்பிடப்படுபவர்கள்.

**திருஞானசம்பந்தர்க்கு** இறைவர் ஆயிரம்பொன் கொடுத்ததையும், இவர் திருமறைக் காட்டுக்கதவினை அடைக்கப்பாடியதையும், முறையே "கழுமல ஊரர்க்கு அம் பொன் ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடுதுறையனாரே" என்றும், "திறக்கப்பாடிய என்னினும் செந்தமிழ் உறைப்பப் பாடி அடைப்பித்தார்" என்றும் பாடி அறிவித்துள்ளார்.

**அமர்நீதியாரை** இறைவர் திருநல்லூரில் கோவணம் காரணமாக அவர்தம் மனைவியாருடன் ஆட்கொண்டார் என்பதை,

நாட்கொண்ட தாமரைப்பூந்
தடஞ்சூழ்ந்த நல்லூர் அகத்தே
கீட்கொண்ட கோவணம் காஎன்று
சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட வார்த்தை உரைக்கும்
அன்றோ இவ்வகல் இடமே

என்று பாடியுள்ளனர்.

**கண்ணப்பர்** வேடர் என்பதையும், வாயில் நீர் கொணர்ந்து இறைவன் தலையில் கொட்டித் தமது செருப்புக் காலால் முடிமாலைகளை நீக்கி இறைச்சி படைத்து, இறைவர் கண்களில் குருதிவருதல் கண்டு தம் கண்களை அப்பினர் என்பதையும்,

குவப்பெருந் தடக்கை வேடன்
கொடுஞ்சிலை இறைச்சி பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித்
தூயவாய் கலசம் ஆட்ட
உவப்பெரும் குருதி சோர
ஒருகணை இடந்தங் கப்பத்
தவப்பெருந் தேவு செய்தார்
சாய்க்காடு மேவி னாரே

என்று பாடிக்காட்டி யுள்ளனர்.

**சண்டேசுரர்** வரலாற்றுக் குறிப்பைப் பாடும்போது,

ஆமலி பாலும் நெய்யும்
ஆட்டியர்ச் சனைகள் செய்து
பூமலி கொன்றை சூட்டப்
பொறுததன் தாதை தாளைக்
கூர்மழு ஒன்றால் ஓச்சக்
குளிர்சடைக் கொன்றை மாலைத்
தாமநற் சண்டிக் கீந்தார்
சாய்க்காடு மேவி னாரே

என்றும்

தழைத்ததோர் ஆத்தி யின்கீழ்த்
தாபரம் மணலால் கூப்பி
அழைத்தங்கே ஆவின் பாலேக்
கறந்துகொண் டாட்டக் கண்டு
பிழைத்ததன் தாதை தாளேப்
பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோர் அமுதம் ஈந்தார்
குறுக்கைவீ ரட்ட னூரே

என்றும்,

நிறைந்தமா மணலேக் கூப்பி
நேசமோ டாவின் பாலேக்
கறந்துகொண் டாட்டக் கண்டு
கறுத்ததன் தாதை தாளே
எறிந்தமா ணிக்கப் போதே
எழில்கொள்சண் டீசன் என்னச்
சிறந்தபேர் அளித்தார் சேறைச்
செந்நெறிச் செல்வ னூரே

என்றும்பாடி, அவர் ஆத்திமர நிழலில் மணலால் இலிங்கம் அமைத்து, ஆவின்பால் முழுக்குச் செய்து, மலர் இட்டு, வழி பட்ட நிலேயில் தம் பூசைக்கு இடையூறு செய்த தம் தந்தை யார் தாளே மழுவால் வெட்ட இறைவர் அவர்க்குக் கொன்றை மாலே சூட்டிச் சண்டீசர் என்னும் சிறப்பையும் தந்தார் என்ற வரலாற்றை அறிவித்தனர்.

அப்பூதி அடிகளார் நாட்டில் வறுமை ஒழிய யாகம் செய்தவர், இறைவர் திருவடியில் தம் தலேபொருந்த வணங்குபவர் என்பனவற்றை,

''அஞ்சிப்போய்க் கலிமெலிய அழல்ஓம்பும் அப்பூதி
குஞ்சிப் பூவாய்நின்ற சேவடியாய்''

என்றுபாடி யுள்ளார்.

நம்பிநந்தி அடிகளேப் பற்றிக் குறிப்பிடும்போது,

ஆரூர் நறுமலர் நாதன்அடித் தொண்டன்
நமிநந்தி
நீரால் விளக்கிட்டமை நீள்நா டறியும் அன்றே

என்றுபாடி, அவர் திருவாரூர் மூர்த்திக்கு நீரால் விளக்கெரித்தார் என்பதை அறிவித்தனர்,

**சாக்கியனர்** இறைவனைக் கல்லெறிந்து வழிபட்டுப் பின் கஞ்சி உண்பார் என்றும், அக்கல்லை மலராக இறைவன் ஏற்ருன் என்றும் கூற வந்த இடந்து,

''கல்லினுல் எறிந்து கஞ்சிதாம் உண்ணும்
சாக்கியனர்''

என்றும்,

புத்தன் மறவா தோடி எறிசல்லி புதுமலர்கள் ஆக்கி
ஞன் காண்

என்றும் பாடிக் காட்டினர்.

**கணம்புல்லரை** வெறும் பெயரால் மட்டும் குறிப்பிட்டுப் போந்தார். ''கணம் புல்லன் கருத்துகந்தார்'' ''கணம்புல்லர்க் கருள் செய்து'' என்ற அடிகளைக் காண்க.

**கோச்செங்கட் சோழர்** சிலந்தியாக இருந்தபோது திருவானைக்கா இறைவர்க்குத் தம் வாய் நூலால் பந்தர் இட்டார் என்றும், அதனுல் சோழர் மரபில் பிறக்கச் செய்து அரசாள வைத்தார் என்றும் குறிப்பிடும் முறையில்,

சிலந்தியும் ஆனைக் காவில் திருநிழல் பந்தர் செய்து
உலந்தவண் இறந்தபோதே கோச்செங் கணுனும் ஆகக்
கலந்தநீர்க் காவிரிசூழ் சோணுட்டுச் சோழர் தங்கள்
குலந்தனில் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்ட ஞரே

என்று பாடிக் காட்டினர்.

சுந்தரர் தம் திருவாக்கில் நாயன்மார்களைப் பற்றிய குறிப்புக்களைத் திருத்தொண்டத் தொகைவழி காண்கின்ருேம். அத்துடன் இன்றி, அவர் தம் ஏனைய பதிகங்களில் சில நாயன்

மார்களைப் பற்றிய குறிப்புக்களையும் காண்கிறோம். அங்ஙனம் குறிப்பிடப்பட்டவர் பின் வருபவர்கள்.

**திருஞானசம்பந்தரைக்** குறிப்பிடுகையில் இவர் தமிழ் வல்லவர், நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பியவர், சீர்காழியில் சிறந்து விளங்கியவர், இறைவர் தாளம் ஈயப் பெற்றவர் என்ற குறிப்புக்களை ''நற்றமிழ் வல்ல ஞான சம்பந்தன்'' என்றும் 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தனுக்கு உலகவர் முன் தாளம் ஈந்து' என்றும் பாடி அறிவித்துள்ளனர்.

**திருநாவுக்கரசர்** பாடிய பதிகத்தொகை இவ்வளவு என்பதை ''இணைகொள் ஏழ் எழுநூறு இரும்பனுவல் ஈன்றவன் திருநாவுக்கரையன்'' என்று பாடிப் பரவி யுள்ளனர்.

**சண்டேசுவரர்** ''அணிகொள் ஆடை அம்பூண் அணி மாலை அமுது செய்து அமுதம் பெறும் சண்டி'' என்ற அளவில் இவரைப்பற்றி அறிவித்துள்ளார். எறிந்த சண்டி என்ற தொடரில் தாதைதாளை வெட்டிய குறிப்புளது.

**தண்டிஅடிகள்** ''தண்டுடைத் தண்டி'' என்று மட்டும் இவரைக் குறித்துள்ளார். இவர் குருடராய் இருந்தமையின் கோலையும் உடன் கூறினர்போலும்.

**புகழ்த்துணையாரது** வரலாறு பெரிதும் அறியும் முறையில்,

அகத்தடிமை செய்யும்அந் தணன்தான்அரிசில்
புனல்கொண் டுவந்துஆட் டுகின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தை யும்நும் முடிமேல்
விழுத்திட் டுநடுங் குதலும்
வகுத்தவனுக்கு நித்தல் படியும்வரும் என்றொரு
காசினை நின்ற நன்றிப்
புகழ்த்துணைகை புகச்செய் துகந்தீர் பொழிலார்
திருப்புத்தூர்ப் புனிதன் நீரே

என்று பாடியுள்ளார்.

**கண்ணப்பர்** "கணைகொள் கண்ணப்பன்" "இடந்த கண்ணப்பன்" எனப்பட்டார். இவற்றால் கண்ணை இடந்து கடவுளுக்கு அப்பியவர் என்பது தெரிகிறது.

**கோச்செங்கட்சோழரை**

தெருண்ட வாயிடைநூல் கொண்டு சிலந்தி
சித்திரப்பந்தர் சிக்கென இயற்றச்
சுருண்ட செஞ்சடையாய்அது தன்னைச்
சோழனுக்கிய தொடர்ச்சி கண்டடியேன்

என்றும், "கோச்செங்கணான் செய்கோயில்" என்றும்

திருவும் வண்மையும் திண்திறல் அரசும் சிலந்தியார்
செய்த செய்பணி கண்டு

என்றும் பாடி அவர் முன் பிறவியில் சிலந்தியாக இருந்து இறைவர்க்குத் தம் வாய் நூலால் பந்தர் இட்ட தொண்டின் சிறப்பால் சோழர் குலத்தில் பிறந்து அரசேற்றதையும், கோயில் கட்டியதையும் குறிப்பிட்டனர்.

**ஏயர்கோனார்** உற்ற நோயைப் போக்கியதையும், அவர் பன்னிருவேலி பெற்றிருந்தமையினையும் பாராட்டி "ஏதநன்னிலம் ஈரறுவேலி ஏயர் கோன் உற்ற இரும்பிணி தவிர்த்து" என்று பாடி அறிவித்துள்ளனர்.

**நரசிங்கமுனை** அரையரைப்பற்றி நாவலூர் ஈசனுக்குத் தொண்டு செய்பவர், திருநாவலூர் மன்னர் என்ற குறிப்புக்களை "நரசிங்கமுனையரையர் ஆதரித்து ஈசனுக்காட் செயும் ஊர் அணி நாவலூர்" என்று பாடியுள்ளனர்.

கணம்புல்லர், திருநாளைப் போவார், மூர்க்கர், சாக்கியர் ஆகிய இவர்களைப் பெயர் அளவில் குறிப்பிட்டுச் சென்றுளார். ஆகவே, சுந்தரரால் பதின் மூன்று நாயன்மார்கள் தனித்த முறையில் குறிக்கப் பெற்றனர் என்பதையும் அறிகிறோம்.

இவ்வளவே நாயன்மாரைப் பற்றி நாம் அறிவன. நாயன்மார்களைப் பற்றிய குறிப்புக்களை மூவர் பாடிய

பதிகங்களின் மூலமும், எட்டாம் திருமுறை, ஒன்பதாம் திருமுறை, பதினோராம்திரு முறைகள் மூலம் சேக்கிழார் அறிந்துள்ளவையும் இவ்வளவே.

ஆனால், சேக்கிழார் திருமுறைகளின் மூலம் நாயன்மார்களைப் பற்றி மேலும் அறியமுடியா நிலையில் உள்ள பல குறிப்புக்களை நன்கு எடுத்து மொழிந்துள்ளார். இதுகுறித்தே இவர், "முன் விரித்து எலாம் அறியவலர்" என்று ஈண்டு எடுத்து மொழியப்பட்டனர். இனி, எலாம் அறியவலர் என்பதற்குச் சான்றுகள் தருவோமாக:

இயற்பகையாரது சாதியைப் பற்றிச் சுந்தரர், நம்பியாண்டார் பாடல்களில் காணக்கிடைக்கவில்லை. ஆனால், சேக்கிழார், அவர் வணிகர் என்பதை "அக்குலப்பதியில் குடி முதல் வணிகர் அளவில் செல்வத்து அமைந்தார்" என்று அறிவிக்கிறார். அப்பர்பெருமான் கயிலை காணவேண்டு என்னும் குறியில் அழுந்தி நின்றார் என்பதை "ஆளும் நாயகர் கயிலையில் இருக்கை கண்டலால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்" என கூறி வழியில் தடுத்தவர் வாக்கினை மறுத்தார் சேக்கிழார் என்று பாடியுள்ளார். இக்குறிப்பு இவர் தரும் குறிப்பே ஆகும். சிறுத்தொண்டர் குணம் எத்தன்மைத்து என்ற குறிப்பு முன்னூற்களில் அறிதற்கு இல்லை. ஆனால் சேக்கிழார்,

சீதமதி அரவினுடன்
செஞ்சடைமேல் செறிவித்த
நாதனடி யார்தம்மை
நயப்பாட்டு வழிபாட்டால்
மேதகையார் அவர்முன்பு
மிகச்சிறியவ ராய்அடைந்தார்
ஆதலினால் சிறுத்தொண்டர்
எனநிகழ்ந்தார் அவனியின்மேல்

என்று அறிவித்துள்ளார்.

திருக்குறிப்புத் தொண்டர் வண்ணார மரபினர் என்பது தெரியவருகின்றது. ஆனால், அம்மரபினர் செய்கை இன்னது

என்பதை அறிந்து செப்பிய பெருமை சேக்கிழார்க்கே சிறப்புடையதாகும். இதனை "வெறித்தட நீர்த்துறையின் கண்மா செறிந்து மிகப் புழுக்கி" என்று அறிவித்திருப்பதிலிருந்து அறியவும்.

திருநாவுக்கரசர் குடி குறுக்கையர் குடி என்பதைச் சுந்தரரோ, நம்பியாண்டாரோ நவின்றிலர். ஆனல் சேக்கிழார்,

> விலக்கின்மனை ஒழுக்கத்தின் மேதக்க நிலைவேளாண்
> குலத்தின்கண் வரும்பெருமைக் குறுக்கையர்தம்
> குடிவிளங்கும்

என்று அறியச் செய்துள்ளார்.

நாயன்மார்கள் எப்படி வாழ்க்கை நடத்தினர் என்பதை நன்கு அறிவித்துச் சென்றுளார் சேக்கிழார். காரி நாயனர் எங்ஙனம் வாழ்க்கை நடத்தினர் என்பதை,

> குறையாத தமிழ்க்கோவை
> தம்பெயரால் குலவும்வகை
> முறையாலே தொகுத்தமைத்து
> மூவேந்தர் பால்பயில்வார்

என்று குறித்துப் போந்தார். ஈண்டுப் பயில்வார் என்பது, செல்வார் என்னும் பொருளது. பொருள் விரித்துப் பொருள் பெறுவாராம்.

> ஆங்கவர்தாம் மகிழும்வகை
> அடுத்தஉரை நயமாக்கிக்
> கொங்கலர்தார் மன்னவர்பால்
> பெற்றநிதிக் குவைகொண்டு

என்று பாடிக் காட்டினர். இதுவே "கொள்ளும் இயல்பு" ஆகும்.

சிறுத்தொண்டர் வடமொழி அறிந்தவர் என்பதை நம் சேக்கிழார் சொல்லால்தான் நாம் அறியவேண்டியவராய் உள்ளோம். இதனை அவர் "ஆயுள் வேதக் கலையும் அலகில்

வடநூல் கலையும் தூய படைக்கலத் தொழிலும் துறை நிரம்பப் பயின்று'' என்று அறிவித்திருத்தலைக் காண்க.

வேடர்கள் எவ்வெவ் உணவு உண்பர் என்பதை மறவாது,

செந்தினை இடியும் தேனும்
அருந்துவர் தேனில் தோய்த்து
வெந்தஊன் அயில்வார் வேரி
விளங்கனி கவளம் கொள்வார்
நந்திய ஈயல் உண்டி
நசையொடு மிசைவார் வெவ்வே
றந்தமில் உணவின் மேலோர்
ஆயின அளவி லார்கள்

என்று அழகுறப் பாடியுள்ளமை காண்க.

இங்ஙனம் எல்லாம் அரிய குறிப்புக்களைப் பாடியுள்ள காரணம் பற்றியே இவர் ''செப்பரிய ஆய*** அறியவலர்'' என்று ஈண்டுக் கூறப்பட்டனர். 'வெய்ய' என்பது விரும்பத் தக்கது என்ற பொருள் தருதலை ''வெய்யமுலை'' என்று இலக்கியங்களில் வருதல் கொண்டு தெளிக.

இன்னோரன்ன காரணங்களினால்தான் உமாபதி சிவாசாரியார் இவரைப்பற்றிப் பாடிய புராணத்துள்,

ஓருலகோ ஒருதிசையோ ஒருபதியோ தம்மில்
ஒருமரபோ ஒருபெயரோ ஒருகாலம் தானே
பேருலகில் ஒருமைநெறி தரும்கதையோ பன்மைப்
பெருங்கதையோ பேர்ஒன்றோ அல்லவே இதனை
ஏருலகெ லாம்உணர்ந்தோ தற்கரிய வன்என்
றிறைவன்முதல் அடிஎடுத்துக் கொடுத்தருளக் [கொண்டு
பாருலகில் நாமகள்நின் றெடுத்துக்கை நீட்டப்
பாடிமுடித் தனர்தொண்டர் சீர்பரவ வல்லார்

கருங்கடலைக் கைநீந்துக் கொளஎளிது மூந்நீர்க்
கடற்கரையின் நொய்மணலை எண்ணிஅள விடலாம்
பெருங்கடல்மேல் வருந்திரையைஒன்றிரண்டென்றெண்ணிப்
பிரித்தெழுதிக் கடைஇலக்கம் பிரித்துவிடல் ஆகும்
கருங்கடலின் மீனைஅள விடல்ஆகும் வானத்
தாரகையை அளவிடலாம் சங்கரன்தாள் தமது
சிரங்கொள்திருத் தொண்டர்புரா ணத்தைஅள விடநம்
சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் அரிதே

என்று சிறப்பித்துப் பாடியுள்ளார்.

சேக்கிழார் வாக்கில் உண்மை மொழி மிளிர்தல் காண லாம். எல்லாம் தாம் அறிந்து மொழிவதாகக் கூறிற்றிலர். தமக்கு எது தெரிந்ததோ அதை மட்டும் அவர் தெரிந்து கூறியவர். இதற்கு அவரது மொழிகளே சான்ருக இருக் கின்றன. கண்ணப்பர் வரலாற்றைக் கூறத் தொடங்கும் போது,

உம்பர்பிரான் காளத்தி
உத்தமர்க்குக் கண்ணப்பு
நம்பெருமான் செய்தபணி
நாம்தெரிந்த வாறுரைப்பாம்

என்றனர்.

இவ்வாறே ஆனுயநாயனுர் வரலாற்றைக் கூறும்போது "மன்னும் ஆனுயர் செய்கை அறிந்தவா வழுத்தல் உற்றேன்" என்று பாடியுள்ளார். இதனுல் இவர் உண்மை யினை ஒளிக்காமல் கூறியவர் என்பது தெளிவு. இதனுல் இவரை 'மெய் அறிஞர்' எனல் மெய்ம்மைதானே!

கதிர் என்பது சினையாகு பெயராய்ச் சூரியனை உணர்த் தும். சூரியன் எல்லாராலும் அறியப்பட்டவன். அவனைப் போலச் சேக்கிழார் குடியில் பலர் தோன்றினும் இவரே அக் குடியின் விளக்கமாய் இருந்தமையின் இவரைக் "குலக் கதிர்" என்றனர். சேக்கிழார் குடியில் பலர் சேக்கிழார் என்ற

பெயருடன் இருந்தனர். இது கீழ்வரும் தொடர்களால் நன்கு விளங்கப்பெறும்.

1. மணவில்கோட்டத்து மேலப்பழுவூர்ச் சோழ முத்தரையன் எனப்பட்ட சேக்கிழான் அரையன் சங்கர நாராயணன்.

2. புலியூர்க்கோட்டத்துக் குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூர்ச் சேக்கிழான் ஆடவல்லான்.

3. மேலூர்க்கோட்டத்துக் காவனூர்ச் சோழன் முத்தரையன் எனப்பட்ட சேக்கிழான் சத்திமலையன்.

4. புலியூர்க்கோட்டத்துக் குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் ராமதேவன் என்ற உத்தமச் சோழப் பல்லவன். இவரே சேக்கிழார்.

5. குன்றத்தூர்ச் சேக்கிழான் பாலராவாயன் களப்பாளராயன்.

6. குன்றத்தூர்ச் சேக்கிழான் அம்மை அப்பன் பராந்தக தேவன் என்ற கரிகாலச் சோழப் பல்லவராயன்.

7. குன்றத்தூர்ச் சேக்கிழான் புவனப் பெருமான் என்ற துண்டக நாடு உடையான்.

8. குன்றத்தூர்ச் சேக்கிழான் பட்டியதேவன் ஆட்கொண்டான்.

9. குன்றத்தூர்ச் சேக்கிழான் அரையன் ஆட்கொண்ட தேவன் என்ற முனையதரையன்.

10. குன்றத்தூர்ச் சேக்கிழான் வரந்தரு பெருமாள் என்ற திருவூரகப் பெருமாள். இவ்வாறுன சேக்கிழார் குடியினருள் நந்தம் சேக்கிழாரே குலக் கதிராய் விளங்குதலைக் காண்க. இக்குறிப்புக்கள் கல்வெட்டுக்களால் அறிய வந்தவை.

வேளாண்குடி மேம்பட்டகுடி என்பதை எவரும் அறிவர். அந்தண மரபினராம் திருஞான சம்பந்தர் இம் மரபினர் மாண்பைக் கூறும்போது, "வேளாளர் என்றவர்கள் வள்ளன்

மையால் மிக்கிருக்கும் தாளாளர்'' என்று தமது தெய்வத் திருமறையாம் திருமுறையில் பாடிச் சிறப்பித்த மேன்மை மிக்கவர். இஃது ஒன்றே இவர்களின் சிறப்புக்குப் போதுமான சான்றாகும். சேக்கிழார் இவர்களின் புகழைப் பாடும்போது, ''மேதக்க நிலை வேளாண் குலம்'' என்றும் ''தாளாண்மை உழவு தொழில் தன்மைவளம் தலைசிறந்த வேளாளர்'' என்றும், ''தகவுடைய வேளாளர் குலம்'' என்றும், ''விளங்கும் வண்மை மிக்குள்ள வேளாண் தலைமைக் குடி'' என்றும் பாடிக் காட்டியுள்ளார். உமாபதி சிவம்,

இமயமலை அரையன்மகள் தழுவக் கச்சி
ஏகம்பர் திருமேனி குழைந்த ஞான்று
சமயம்அவை ஆறினுக்கும் தலைவிக் கீசர்
தந்தபடி எட்டுழக்கீர் ஆழி நெல்லும்
உமைதிருச்சூ டகக்கையால் கொடுக்க வாங்கி
உழவுதொழி லால்பெருக்கி உலகம் எல்லாம்
தமதுகொழு மிகுதிகொடு வளர்க்கும் வேளாண்
தலைவர்பெரும் புகழ்உலகில் தழைத்த தன்றே

என்றும்,

மாறுபடு பழையனூர் நீலி செய்த
வஞ்சனையால் வணிகன்உயிர் இழப்பத் தங்கள்
கூறியசொல் பிழையாது துணிந்த செந்தீக்
குழியில்எழு பதுபேரும் முழுகிக் கங்கை
ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்பர்
அண்டமுற நிமிர்ந்தாடும் அடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை எம்மால்
பிறித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ

என்றும்,

காராளர் அணிவயலில் உழுது தங்கள்
கையார நட்டமுடி திருந்தில் இந்தப்
பாராளும் திறல்அரசர் கவித்த வெற்றிப்
பசும்பொன்மணி முடிதிருந்தும் கலப்பை பூண்ட

ஏரால்எண் திசைவளர்க்கும் புகழ்வே ளாளர்
ஏரடிக்கும் சிறுகோலால் தரணி ஆளச்
சீராரும் முடிஅரசர் இருந்து செங்கோல்
செலுத்துவர்வே ளர்புகழ் செப்ப லாமோ

என்றும் பாடிச் சிறப்பித்தல் காண்க.

கம்பரது நூலாகிய, ஏர் எழுபதிலும் வேளாளர் மேம் பாட்டை நன்கு காணலாம். அவற்றைப் பின்வரும் பருவங் களில் எடுத்துக் காட்டுவோமாக. இன்னோன்ன காரணங் களால் "மேம்பட்ட வேளாண் குலம்" எனப்பட்டது. இத் தகைய குடியில் தோன்றியவர் சேக்கிழார் ஆதலின் 'வேளாண் குலக் கதிர்' எனப்பட்டார்.

ஒரு சிலர் சேக்கிழார்மீது குற்றம் சாற்ற முற்படு கின்றனர். அவர் காட்டும் குற்றம் பெரிய புராணத்துள் இறைவர் பிராமணராகவே வருகின்றார், வேறு மரபினராக வந்திலரே என்பது. அவர்கள் பெரிய புராணத்தை முற் றிலும் ஐயம் திரிபர அறியாத குற்றமே ஆகும். திருநீல கண்டர் இல்லத்திற்கு "அருட்சிவ யோகியாகி" வந்தார் என்றும், இளையான்குடி மாறர் இல்லத்திற்கு "நற்றவத்தர் வேடமே கொடு" வந்தார் என்றும், திருக்குறிப்புத் தொண்ட ரிடம் வந்தபோது "மாதவ வேடம் தாங்கி" வந்தார் என்றும், சிறுத்தொண்டர் இல்லத்திற்குச் "சித்தம் மகிழ் வயிரவராய்" வந்தார் என்றும் இவ்வாறு பாடியுள்ளதையும் அவர்தம் நூலில் காண்பாராக. ஆகவே, அவர் "விமலர்" என்பதில் ஐயம் உண்டோ? மேலும், இயற்பகையார் இல்லம் போந்தவர் உளத்தின் நிலை இன்னது என அறியாத நிலையில், வந்தவர் வேதியராயினும் தூர்த்த வேதியராய், (காமுகராகிய வேதியராய்) வந்தார் என்பதை எவ்வளவு தெளிவாகக் கூறியுள்ளார்!

ஆய நுண்பொருள் ஆகியும் வெளியே
அம்ப லத்துள்நின் ஆடுவார் உம்பர்
நாய கிக்கும்அது தெரியவோ பிரியா
நங்கை தான்அறி யாமையோ அறியோம்

தூய நீறுபொன் மேனியில் விளங்கத்
தூர்த்த வேடமும் தோன்றவே தியராய்
மாய வண்ணமே கொண்டுதம் தொண்டர்
மருத வண்ணமும் காட்டுவான் வந்தார்

என்று பாடுதல் காண்க.

இதுவும் அவர் "விமலர்" என்பதைக் காட்டுகிறது.

இது நிற்க. "பொய்யடிமை இல்லாத" செய்யுள்,

பொய்யடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்
பொழில்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்க்கு அடியேன்
மெய்யடியான் நரசிங்க முனைஅரையர்க் கடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி விரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே

என்பது.

"பொய்யடிமை இல்லாத செய்யுள்" என்று தொடங்கும் இப் பாட்டில் ஆசிரியர் திரு. பிள்ளை அவர்கள், நம்பி ஆண்டார் நம்பிகளின் பாடலாகிய

தரணியில் பொய்ம்மை இலாத்தமிழ்ச்
சங்கம் அதில்கபிலர்
பரணர்நக் கீரர் முதல்நாற்பத்
தொன்பது பல்புலவோர்
அருள்நமக் கீயும் திருவால
வாய்அரன் சேவடிக்கே
பொருள்அமைத் தின்பக் கவிபல
பாடும் புலவர்களே

என்பதை மனத்தில் கொண்டு, பொய்யடிமை இல்லாத புலவர்கள் மதுரைக் கடைச்சங்கப் புலவர்களாகிய கபிலர் பரணர், நக்கீரர் முதலான நாற்பத்தொன்பதின்மர் புலவர்களைக் கருதியுள்ளனர்.

நம்பி ஆண்டார் நம்பிகள் சேக்கிழார்க்குக் காலத்தால் முற்பட்டவர், திரு பிள்ளை அவர்கள் திருத்தொண்டர் புராணசாரம் என்னும் நூலைத் தழுவியும் மேலே கூறிய கருத்துக்கு இசைந்துள்ளார். அப்பாடல்,

மெய்அறிவாம் கபிலரொடு பரணர் ஆதிப்
புலவோர்பொற் பார்கலைகள் பொருந்த ஓதிச்
செய்யுளிடை வளர்ஆசு மதுரம் நல்ல
சித்திரம்வித் தாரமெனத் தெரிக்கும் செம்மை
மெய்யுடைய தொடைகள் எல்லாம் மன்றுள் ஆடல்
மேவியகோன் இருதாளில் விரவச் சாத்திக்
கையடைஅஞ் சலியினராய் அருளால் மேலைக்
கருதரிய அமருலகம் கைக்கொண் டாரே

என்பது.

புராண சார ஆசிரியர் சேக்கிழாருக்குப் பிற்பட்டவர். இவ்விரு பெருமக்கள் கருத்தை ஒட்டியே, "இலக்கியம் புகல் இலக்கண மெய்ஞ்ஞான போத நூல் ஆதியா யாவும் அரில்தப உணர்பு புரகரனையே துதித்து மெய்யடிமை வாய்ந்த சங்கப் புலவர்" என்றனர். இனிச் சேக்கிழார் பெருமானார் பொய் யடிமைஇல்லாதபுலவர் யாவர் என்பதை அறிவித்திருப்பதை ஈண்டு இன்றியமையாது கண்டல் வேண்டும். பெரிய புராணத்தில் பொய்யடிமை இல்லாத புலவர் புராணத்தைக் கூறவந்தபோது, சேக்கிழார் மூன்று செய்யுட்களில் பாடி யுள்ளனர். அவற்றுள் இரண்டு பாடல்கள் "அவர் யாவர்" என்பதை அறிவிப்பன. அவை,

செய்யுள்நிகர் சொல்தெளிவும்
செவ்வியநூல் பலநோக்கும்
மெய்யுணர்வின் பயன்இதுவே
எனத்துணிந்து விளங்குஒளிர்
மையணியும் கண்டத்தார்
மலர்அடிக்கே ஆளானார்
பொய்யடிமை இல்லாத
புலவர்எனப் புகழ்மிக்கார்

பொற்பமைந்த அரவாரும்
புரிசடையார் தமைஅல்லாச்
சொற்பதங்கள் வாய்திறவாத்
தொண்டுநெறித் தலைநின்ற
பெற்றியினில் மெய்அடிமை
யுடையாராம் பெரும்புலவர்
மற்றவர்தம் பெருமையார்
அறிந்துரைக்க வல்லார்கள்

என்பன.

மூன்றாவது பாடலில் ''ஆங்கவர்தம் அடிஇணைகள் தலைமேற்கொண்டு'' என்ற அளவில் கூறி, ஏனைய மூன்று அடிகளில் அடுத்துச் சொல்லப் போகும் புகழ்ச் சோழரைப் பற்றி அறிவித்தனர். பொய்யடிமை இல்லாத புலவர் புராணத்திற்கு முன் உள்ள கூற்றுவ நாயனார் புராணத்தின் ஈற்றுப் பாடலுக்கு முன் உள்ள பாடலின் ஈற்று இரண்டடிகளில், பொய்யடிமை இல்லாத புலவர் பற்றிய குறிப்பினையும் சேக்கிழார் தருகிறார். அவ்வடிகள்,

நாத மறைதந் தளித்தாரை
நடைநூல் பாவில் நவின்றேத்துப்
போதம் மருவிப் பொய்அடிமை
இல்லாப் புலவர் செயல்புகல்வாம்

என்பன.

இங்கு எடுத்துக் காட்டப்பட்ட நான்கு பாடல்களின் போக்கை நன்கு சிந்தித்தல் வேண்டும். முதலாவதாகச் சேக்கிழார் வாக்கில் மதுரையைப்பற்றிய குறிப்புக் காணப்படவில்லை. இரண்டாவதாகச் சங்கப் புலவர்கள் என்ற குறிப்பும் காணப்படவில்லை. மூன்றாவதாக, கபிலர், பாணர், நக்கீரர் என்னும் புலவர்களின் பெயர்களும் அறிவிக்கப்படவில்லை. நான்காவதாகச் சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மர் என்னும் தொகைக் குறிப்பும் காணப்படவில்லை. ஆனால், நான்கு பாடல்களில் சிவபெருமானையே பாடிய புலவர் என்னும் குறிப்பு வெளிப்படையாகக் காணக்கிடைக்கிறது. நம்பி

ஆண்டார் வாக்கில் தமிழ்ச் சங்கம் அதில் கபிலர், பரணர், நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல்புலவோர் என்பது காணப்படுகிறது. சுந்தரர் வாக்கில் புலவர்கள் என்பது இல்லை நம்பியார் வாக்கில் புலவர்களே என்னும் சொல் உளது. சேக்கிழார் தம் பாடல்களில் "புலவர்" என்ற சொல்லே காணப்படுகிறது. சுந்தரரும் புலவர் என்றுதான் பாடியுள்ளார். இச் சொல் ஆட்சியினுல் பொய்அடிமை இல்லாத புலவர் என்னும் தொடர்தனி அடியார் ஒருவரையேதான் குறிக்கும் என்பதும், தொகை அடியார்கள் என்று கருதப் படும் சங்கப் புலவர்களைக் குறிக்காது என்பதும் உய்த்து உணரக் கிடைத்தல் காண்க. சுந்தரர் கருத்துப் "பொய் யடிமை இல்லாத புலவர் என்பார், தனி அடியாரே அன்றித் தொகை அடியார்கள் அல்லர் என்பதுதான் என்பதை அறுதி யிட்டு உறுதியாகக் கூறிவிடலாம். இதனை அவர் பாடியுள்ள திருத்தொண்டத் தொகையில் அமைந்த பாடல் போக்கைக் கொண்டே நிலைநாட்டிவிடலாம்.

சுந்தரர் பொய்யடிமை இல்லாத புலவரைத் தனி யடியாரைப்பற்றிக் கூறிக்கொண்டு வரும் பாடலில்தான் வைத்துப் பாடியுள்ளார். தொகையடியார்களைக் குறிக்கும் அனைவரையும் தனித்த ஒரு பாட்டில் அமைத்துப் பாடியுள்ளார். சுந்தரர் பொய்யடிமை இல்லாத புலவரைத் தொகை அடியாராகக் கருதி இருப்பாரேல், எவ்வாறேனும் தொகையடியாரைக் குறிப்பிட்டுள்ள பாடலில் புகுத்தி இருப்பார். ஆகவே, பொய்யடிமை இல்லாத புலவர் ஒரு தனி அடியாரே என்பது, தெளிவுற அறியவரும் குறிப் பாகும்.

ஈண்டு ஓர் ஆசங்கை எழக்கூடும். அதாவது தில்லைவாழ் அந்தணர்களும் தொகையடியார்கள் ஆதலின், அவர்களைத் தனி அடியார்களைப்பற்றிக் குறிப்பிடப்பட்ட பாடலில் குறித்திருப்பதுபோல் பொய்யடிமை இல்லாத புலவராம் தொகை அடியார்களையும் தனியடியார்களைக் குறிப் பிடும்பாடலில் இணைத்துப் பாடினர் என்பது. "தில்லைவாழ்

அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்'' என்பது திருவாரூர் தியாகேசன் வாக்காதலின், அதனை முதலில் வைத்துப் பாடவேண்டிய முறையில் அங்ஙனம் பாடினர் என்று உணர்தல் வேண்டும்.

மேலும், பொய்யடிமை இல்லாத புலவர் தொகை அடியார் அல்லர். தனிஅடியாரே என்ற விளக்கத்தினை ஐயம்திரிபு அற அறியவேண்டின், யான் எழுதியுள்ள ''பொய்யடிமை இல்லாத புலவர் யார்'' என்னும் நூலினைப் படித்து அறிய வேண்டுகின்றேன்.

நம்பி ஆண்டார் நம்பிகள் சங்கப் புலவர்களைக் குறிக்கும்போது, கபிலர், பரணர் நக்கீரர்களை மட்டும் எடுத்துக் காட்டி அவர்கள் திருவாலவாய் அரன் அடிக்கே பொருள் அமைத்து இன்பக் கவி பல பாடும் புலவர்கள் என்றருளியுள்ளனர். இம்மூவரும் சிவபெருமான்மேல் பாடல்களைப் பாடியவர் என்பது உண்மை.

நக்கீரர், திருஎழுக் கூற்றிருக்கை என்னும் நூலின் வெண்பாவில் தமக்கு மதுரைச்சொக்கர் உண்டாக்கிய குட்டநோய் தீர ''என்மேல் மெய் எரிவு தீர்ப்பணித்தருள் வேதியனே'' என்று வேண்டுவதாலும், ''நட்டம் ஆடிய நம்ப'' என்ற திருஏழுக் கூற்றிருக்கையின் தொடரால் மதுரை வெள்ளி அம்பலக் கூத்தனைப் பாடிய குறிப்பாகும் என்பதாலும், பெருந்தேவபாணி என்னும் நூலில் ''கூடல் ஆலவாய்க்குழகன் ஆவது அறியாது அருந்தமிழ் பழித்தனன்'' என்றும், வெண்பாவில் ''விரைந்து என்மேல் சீற்றத்தைத் தீர்த்தருளு தேவாதி தேவனே'' என்று பாடியிருப்பதாலும் இவ்விரு நூற்கள் திருவாலவாய் அரன்மீது பாடப்பட்டன என்று கூறலாம். கோபப்பிரசாதம் என்னும் நூல் ஆலவாய்சொக்கனது சீற்றம் தணியப் பாடப்பட்டது என்று கொண்டால், அது மதுரைப் பெருமான்மீது பாடப்பட்டது என்று வேண்டுமானால் சொல்லலாம். ஆனால், கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி திருவீங்கோய்மலை எழுபது,

திருவலஞ்சுழி மும்மணிக் கோவை ஆகிய நூல்களின் பெயர்களைக் காணும்போது, அவை மதுரைச் சுந்தரேசப் பெருமான்மீது பாடப்பட்டவை அல்ல என்பது தெரிய வருதல் காண்க. போற்றித் திருக்கலிவெண்பா என்னும் நூலின் இறுதியில், காளத்திபோற்றி கயிலைமலை போற்றி'' என்னும் அடிவருதலில் இதுவும் மதுரையில் பாடப்பட வில்லை என்பது புலனாகின்றது.

திருமுருகாற்றுப்படை என்னும் நூல் சிவபெருமானைப் பற்றியது அன்று. முருகனைப் பற்றியது. திருக்கண்ணப்ப தேவர் திருமறம் அடியாரைப் பற்றியதன்றி, ஆண்டவனைப் பற்றியதன்று. கார் என்னும் நூல் மேகத்தைப் பற்றியது. அதில் சிவபெருமான் பற்றிய குறிப்பு ஒவ்வொரு பாட்டிலும் இருந்தாலும், அதில் மதுரைச் சொக்கனைப் பற்றிய ஒரு சொல்லும் இலது. மேலும் நக்கீரர் மானிடர்களையும் பாடி இருப்பதைச் சங்க நூல்களில் காணலாம். நக்கீரர் இறைவன் எழுதித் தந்த பாட்டைக் குற்றம் என்று கூற, அதுபோது மதுரைச் சொக்கலிங்கப் பெருமான் புலவர் வடிவில் வந்து, தாம் இறைவர் என்று தோற்றுவித்தபோதும், ''சடைகொடு வெருட்டவேண்டா சாற்றிய செய்யுள் குற்றம் குற்றமே' என்று எதிர்மொழி பகர்ந்த நக்கீரர் பொய்யடிமை இல்லாத புலவர் தொகுப்பில் எங்ஙனம் சேரற்கு உரியவர்?

கபிலரும் திருவாலவாய் அரனடிக்கே இன்பக்கவி புனைந் தார் எனல் ஒவ்வாது. இவர் பாடிய மூத்த நாயனார் இரட்டை மணிமாலை விநாயகரைப்பற்றிய நூலாகும். சிவபெருமான் இரட்டைமணிமாலை என்னும் நூலில் பிற தலங்களின் குறிப்புக்கள் உள்ளனவே அன்றி, மதுரையைப் பற்றி ஒரு சொல்லும் இலது. சிவபெருமான் திருவந்தாதி என்னும் நூலில் ''கூடற்கா வாலிகுரை கழற்கா நல்நெஞ்சே. கூடற்காவவிதாக் கூர்'' என்ற அடிகளில் கூடல் (மதுரை) பற்றிய குறிப்புளது. ஆனால், இந்நூலில் பல தலங்களின் பெயர்கள் காணப்படுகின்றன். இந்த அமைப்புக்களைக் காணும்போது, இந்நூல் மதுரைச் சொக்கநாதர்மீது

பாடப்பட்டது என்பதை ஏற்றல் அரிதாகிறது. கபிலர் மக்களையும் பாடியுள்ள பாடல்கள் சங்க நூற்களில் உள்ளன.

பரணர் சிவபெருமான்மீது பாடிய நூல் ஒன்றே ஆகும், அது சிவபெருமான் திருவந்தாதி என்பது. அதில் ஒரு பாட்டில் 'திருவாலவாய் சென்று சேராது' என்னும் தொடர் வருகிறது. ஆனால், அந்நூலில் பல சிவ தலங்கள் குறிக்கப் பட்டுள்ளன. இதுகொண்டு நோக்கும்போது, இந்நூலும் மதுரைப்பெருமான்மீது பாடப்பட்டது என்பதை ஏற்க இயலா நிலையில் உள்ளோம். இவரும் மக்களையும் பாடி யுள்ளனர். அப்பாடல்களைச் சங்க நூற்களில் காணலாம்.

சங்கப் புலவர்கள் சிவபெருமானையே பாடும் புலவர்கள் அல்லர். திருமாலையும், முருகனையும் பாடும் புலவர்கள். இக்குறிப்பையும் சங்க நூல்கள்களால் அறியலாம். ஆகவே, சங்கப் புலவர்களைப் பொய்யடிமை இல்லாப் புலவர் என அறிதற்கில்லை.

திருத்தொண்டர் புராண சார நூலாசிரியர் சேக்கிழார்க் குப் பிற்பட்டவர். அவர் கருத்தோடு சேக்கிழார் கருத்தை யும் ஒப்புநோக்குதல் வேண்டா எனினும், இரண்டொரு குறிப்புக்களைக் குறித்தல் தவருகாது. புராணசாரத்தில் கபிலர், பரணர் பெயர்கள் காணப்படுகின்றனவே அன்றி, நக்கீரர் பெயர் காணப்பட்டிலது. மதுரைச் சங்கத்தைப் பற்றிய குறிப்பும் இல்லை. கபிலர், பரணர் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் ஆகிய நாற்கவிகளைப் பாடினர் என்ற குறிப்புளது. முதல் இரண்டு கவிகளைப் பாடினுர்கள் என்று கூறினும் கூறலாமே அன்றிப் பின் இரண்டுவகை யான கவிகளைப் புனைந்தனர் என்பதற்குச் சான்றுகள் இல்லை. இவ்விருவர்கள் சிவபெருமான்மீது பாடிய பாடல்கள் உளவே அன்றி, மன்றுளை ஆடல்மேவிய கோன் இருதாளில் பாடினுர் என்று கொள்ளுதற்கும் இல்லை. அவரது பாட லாலும், பொய்யடிமை இல்லாத புலவர் சங்கப் புலவர் என்று ஏற்றற்கு இடம் இல்லை என்று உணரவேண்டிய வராய் உள்ளோம்.

திரு பிள்ளை அவர்கள் பொய்யடிமை இல்லாத புலவர்கள் சங்கப் புலவர்கள் என்று உளம் கொண்டு அவர்கள் இலக்கியம், இலக்கணம், மெய்ஞ்ஞான போதநூல் யாவற்றையும் உணர்ந்தவர்கள் என்பது உண்மையே. நக்கீரர், திருமுருகாற்றுப் படை பாடியுள்ளனர். அங்ஙனம் பாடுதற்குக் காரணம்,

ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிடப்
பெற்ற பெருவளம் பெறுஅர்க் கறிவுறீஇச்
சென்று பயன்எதிர்ச் சொன்ன பக்கமும்

என்னும் தொல்காப்பிய நூற்பாவைப் படித்ததன் பயனாகும். நக்கீரரது கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி என்னும் நூலில்,

நின்னில்,
வெளிப்படுவது ஏழ்உலகும் மீண்டே ஒருகால்
ஒளிப்பதுவும் ஆனால் உரை

என்னும் கருத்து மெய்ஞ்ஞான போத நூல் அறிவினால் ஏற்படுவது. இது சைவசித்தாந்த நூல் அறிவுக் கருத்தாகும்.

கபிலதேவ நாயனாரது நூலாகிய சிவபெருமான் திருஇரட்டை மணிமாலை என்னும் நூலில் வரும்,

இல்லை பிறவிக் கடல்ஏறல் இன்புறவில்
முல்லை கமழும் முதுகுன்றில்—கொல்லை
விடையானை வேதியனை வெண்மதிசேர் செம்பொன்
சடையானைச் சாராதார் தாம்''

என்னும் வெண்பாவின் கருத்துத் திருக்குறளாம் இலக்கித்தில் வரும்,

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்

என்ற பாடலைப் படித்ததன் பயனே ஆகும். இதனால் இலக்கியங்களைப் பயின்றவர் என்பது புலனாகிறது. திரு பிள்ளை

அவர்கள் புரகரனையே பாடியவர்கள் சங்கப் புலவர்கள் என்பது பதினோராம் திருமுறையில் நக்கீரர், கபிலர், பரணர் பாடியுள்ள பாடல்களைக் கண்டு ஆகும். சங்கப் புலவர்களுள் ஒருவரான பரணர்,

பேச்சுப் பெருகுவதென் பெண்ஆண் அலிஎன்று
பேச்சுக் கடந்த பெருவெளியைப்—பேச்சுக்
குரையானை ஊனுக் குயிரானை ஒன்றற்
குரியானை நன்னெஞ்சே உற்று

என்று சிவபெருமான் திருவந்தாதியில் பாடியிருப்பதால், மெய்யடிமை வாய்ந்த சங்கப் புலவர் என்றனர் போலும்! எண்மர் ஆவார்:

**பொய்யடிமை இல்லாத புலவர்:** இவர்களைப் பற்றிப் பல தடைவிடைகளுடன் மேலே கூறப்பட்டது.

**புகழ்ச்சோழர்:** இவர் உறையூரில் அரசு புரிந்தவர். சைவம் தழைக்க ஆலயங்களில் பூசனை நடத்துவித்தவர். சிவனடியார் குறிப்பு அறிந்து ஒழுகியவர். இவர்க்குக் கீழ்ப்படியாதவன் அதிகன் என்னும் பெயரினன். அவன் மலையரணில் வாழ்ந்தவன். அவனை வென்று வருக என்று கட்டளை பிறப்பிக்க, அதிகன் ஓடி ஒளிந்தான். ஆனல், வீரர்கள் அவனது பொருள்களையும் அவனது வீரர்களின் தலைகளையும் கொணர்ந்தனர். அத்தலைகளில் சடைத்தலை ஒன்றிருக்கக் கண்டு, இவரையுமா கொல்லுதற்குக் காரணனேன் என்று, அத் தலையுடன் தீயில் ஐந்தெழுத்து ஓதி இறங்கி, இறைவன் திருவடி உற்றவர்.

இவரது ஆட்சியில் சிவகாமி ஆண்டார் என்பவர் மலர்த் தொண்டு செய்து வந்தனர். அவருக்குத் தீங்கிழைத்த புகழ்ச் சோழரது யானையை எறிபத்தர் வெட்டினர். அதனை அறிந்த சோழர் எறிபத்தரைக் கண்டு செய்திகளை நேரே அறிந்ததும், அத்தகைய யானையை உடைய நான்தான் தவறுடையன் என்று கூறித் தம்மையும் வெட்டுமாறு எறிபத்தரிடம் வாளை நீட்டியவர்.

**நரசிங்கமுனை அரையர்:** இவர் திருமுனைப் பாடி நாட்டரசர். இவர்திருநீற்றிடத்தும், சிவனடியாரிடத்தும் கோயில் பூசையிலும் பற்றுடையவர். திருவாதிரையில் அடியார்க்கு அமுது படைத்துப் பொன் கொடுத்தவர், அவர்களுள் ஒருதூர்த்தர் (காமுகர்) இருந்தார். அவரைக் கண்டு ஏனைய அடியார்கள் ஒதுங்கினர். ஆனால், நாயனார் அவர் திருநீறு அணிந்து இருந்தமையின், தாம் அவரை வெறுது அவரை வணங்கி அவர்க்கு இரட்டிப்பான பொன் கொடுத்து அனுப்பினார். இவர் சுந்தரரைத் தம் மகவாகக் கொண்டும் வளர்த்தவர்.

**அதிபத்தர்:** இவர் நாகபட்டினத்தில் வலைஞர் குடியில் பிறந்தவர். தாம்பிடிக்கும் மீன்களில் ஒன்றைச் சிவபெரு மானுக்கு என்று கடலில் விடுவர். ஒருமீன் கிடைப்பினும் அதனையும் விட்டுவர, நாளும் நாளும் ஒரு மீனே பட்ட போதும் தொடர்ந்து விட்டு, வறுமையால் வருந்தியவர். ஒரு நாள் பொன்மீன் ஒன்றே கிடைத்தது. அதனையும் கடலில் விட்டுச் சிவபக்தியில் சிறந்து விளங்கியவர்.

**கலிக்கம்பநாயனார்:** இவர் திருப் பெண்ணாகடத்தில் வணிகர் மரபில் பிறந்தவர். திருத்தூங்கானை மாடத்து இறைவரை வழிபடுபவர். சிவனடியார்கட்கு அமுது படைப் பவர். ஒருநாள் ஓர் அடியார்க்கு அமுது படைப்பதற்கு முன்பு அவரது திருவடியை அலம்பும்போது அவரது மனைவி யார் நீர்வார்க்கத் தயங்கினார். அதற்குக் காரணம் அவ் வடியார் முன்பு தம்வீட்டில் பணிபுரிந்த வேலை ஆள். நாயனார், தம் மனைவியார் மனக்கோள் உணர்ந்து அவ்வம் மையார் கையை வெட்டித் தாமே நீர் சொரிந்து விளக்கி அமுது படைத்துத் தம் தொண்டை நிலை நிறுத்தியவர்.

**கலிய நாயனார்:** இவர் திருவொற்றியூர் செக்கர் குடி யினர். கோயிலுக்குத் திருவிளக்கு ஏற்றும் தொண்டு புரிந்தவர். தம் வறுமை நிலையிலும் கூலிக்கு எண்ணெய் வாங்கி விற்றும் திருவிளக்கு இட்டுவந்தார். கூலிக்கு

எண்ணெய் விற்பதும் நின்றது. மனைவியாரை விற்க எண்ணி விலை கூறினார். வாங்குவார் இல்லை. மனம் தளர்ந்தார். கோவிலுக்குள் சென்றார். அகல்களைப் பரப்பித் தம் செந்நீரையாகிலும் எண்ணெயாக ஊற்றி விளக்கெரிக்கலாம் எனத் தம் கழுத்தை அரிய முயன்றார். சிவபெருமான் அந்நிலையில் கையைப் பிடித்துக் காட்சி தந்தார்.

**சத்தி நாயனார்:** இவர் சோழ நாட்டில், வரிஞ்சையூரில் வேளாளர் மரபில் பிறந்தவர். சிவனடியாரை இகழ்வோர் நாவை அறுத்து வந்தவர்.

**ஐயடிகள் காடவர் கோன்நாயனார்:** இவர் பல்லவ மரபினர். காஞ்சியில் பிறந்தவர். எல்லா உயிர்களும் இன்புற வேண்டும் என்னும் எண்ணமிக்கவர். பல நாடுகளை வென்று வாழ்க்கையினை வெறுத்துத் தம் மகனுக்கு முடிசூட்டித் தலை யாத்திரை செய்து, அதன் பயனாக க்ஷேத்திர வெண்பா என்னும் நூலைப் பாடியவர்.

பொய்யடிமை இல்லாத புலவர், ''செய்யுள் நிகழ் சொல் தெளிவும் செவ்விய நூல்பல நோக்கும் மெய்யுணர்வின் பயன் இதுவே எனத் துணிந்து விளங்கி ஒளிர் மணியும் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார்'' ஆதலாலும், புகழ்ச் சோழர் அமைச்சர் கொணர்ந்த தலையில் சடைத் தலை இருக்கக் கண்டு நடுங்கி மனம் கலங்கிக் கை தொழுது கொண்டு பெரும் பயத்துடன்,

கண்டசடைச் சிரத்தினையோர்
கனகமணிக் கலத்தேந்திக்
கொண்டுதிரு முடித்தாங்கிக்
குலவுஎரி வலங்கொள்வார்
அண்டர்பிரான் திருநாமத்
தஞ்செழுத்தும் எடுத்தோதி
மண்டுதழல் பிழம்பினிடை
மகிழ்ந்தருளி உள்புக்கார்

ஆதலாலும், நரசிங்கமுனை அரையர் திருநீறு பூசியவர்கள்,

சீலமில ரேனும் திருநீறு சேர்ந்தாரை
ஞாலம்இகழ்ந் தருநரகம் நண்ணுமல் எண்ணுவார்
பாலணைந்தார் தமக்களித்த படிஇரட்டிப் பொன்
[கொடுத்து
மேலவரைத் தொழுதினிய மொழிவிளம்பி விடை
[கொடுத்தார்

என்றதாலும், அதிபத்தர் தம் வறுமை நிலையிலும்,

"பொன் திரள்சுடர் நவமணி பொலிந்தமீன் உறுப்பால்
ஒன்றும் மற்றிது என்னைஆ ளுடையவர்க் காகும்
சென்று பொற்கழல் சேர்கெனத் திரையொடும் திரித்தார்

ஆதலாலும், கலிக்கம்பர் தம் நியமம்தவருதபடி,

வெறித்த கொன்றை முடியார்தம்
அடியார் இவர்முன் மேவுநிலை
குறித்து வெள்கி நீர்வாரா
தொழிந்தாள் என்று மனம்கொண்டு
மறித்து நோக்கார் வடிவாளை
வாங்கிக் கரகம் வாங்கிக்கை
தறித்துக் கரக நீர்எடுத்துத்
தாமே அவர்தாள் விளக்கினர்

என்பதாலும், கலியநாயனர்

செக்குநிறை எள்ஆட்டிப்
பதம்அறிந்து திலதைலம்
பக்கம்எழ மிகஉழந்தும்
பாண்டில்வரும் எருதுய்த்தும்
தக்கதொழில் பெறுங்கூலி
தாம்கொண்டு தாழாமை
மிக்கதிரு விளக்கிட்டார்
விழுத்தொண்டு விளக்கிட்டார்

என்பதாலும், சத்திநாயனர்,

தீங்கு சொற்ற திருவிலர் நாவினை
வாங்க வாங்கு தண் டாயத்தி னல்வலித்து
ஆங்க யிற்கத்தி யால்அரிந் தன்புடன்
ஓங்கு சீர்த்திருத் தொண்டின் உயர்ந்தனர்

என்பதாலும், ஐயடிகள் காடவர்கோன்,

திருமலியும் புகழ்விளங்கச்
சேணிலத்தில் எவ்வுயிரும்
பெருமையுடன் இனிதமரப்
பிறபுலங்கள் அடிப்படுத்துத்
தருமநெறி தழைத்தோங்கத்
தாரணிமேல் சைவமுடன்
அருமறையின் துறைவிளங்க
அரசளிக்கும் அந்நாளில்

என்பதாலும், இங்குக் கூறப்பட்ட அடியார்கள் "வித்தக ஒழுக்கம் மிக்கார்" என்றது மிக மிகப் பொருத்தமே ஆகும்.

புகழ்ச்சோழர் வெட்டுண்ட சடைத்தலையுடன் தீயில் இறங்கினார். அதுபோது தேவர்கள்,

புக்கபொழுது அலர்மாரி
புவிநிறையப் பொழிந்திழிய
மிக்கபெரு மங்கலதூ
ரியம்விசும்பின் முழக்கெடுப்பச்
செக்கர்நெடும் சடைமுடியார்
சிலம்பலம்பு சேவடியின்
அக்கருணைத் திருநிழற்கீழ்
ஆராமை அமர்ந்திருந்தார்

என்பதாலும், அதிபத்தர் அருந்தொண்டு காரணமாக "பொழிந்தனர் முகைப்பூ" "பஞ்சநாதமும் எழுந்தன" என்று சேக்கிழாரால் கூறப்பட்டதாலும், "விண் மருவுவார் பரவும்" என்னும் அடை மொழி அடியார்கட்கு மிகப் பொருத்தமானதே.

சேக்கிழார், பொய்யடிமை இல்லாத புலவர்களின் "அடி இணைகள் தலைமேல் கொண்டு" என்றும், புகழ்ச்

10

சோழரின் "பதம் பணிந்து ஏத்தி" என்றும், "நரசிங்க முனையர் பிரான் கழல் ஏத்தி" என்றும், "அதிபத்தர் விளங்கு தாள் வணங்கி" என்றும், "கலிக்கம்பர் மலர்ச் சேவடி வணங்கி" என்றும், கலியநாயனார், "கழல்வணங்கி" என்றும், "சத்தியார் தாள் பணிந்து" என்றும், "ஐயடிகள் காடவனார் அடிஇணைத்தாமரை வணங்கி" என்றும், அடியார்களை வணங்கியுள்ளார். ஆதலின் ஈண்டுத் திருபிள்ளை அவர்களும், "இருதயம் விடாதமர ஏத்தெடுப்பாம் என்று பாடிப் பரவினர். (7)

## கறைக்கண்டன் கழலடியே

8. கறைக்கண்டன் யாப்பின்ஐந் ததிகாரி மேல்ஓர்அதி
காரிமலை மங்கைஒருபால்
கலந்திருக் கவும்நிருவி காரிநிர்அ கங்காரி
காரியா காரிநாளும்
மறைக்கண் டருஞ்சோதி ஓங்காரி அருள்ஏய
ஆங்காரி முதல்அமர்ந்த
வன்கணம் புல்லர்முன் சைவராம் ஐவரும்
மகிழ்ச்சிஉற ஏத்தெடுப்பாம்
பிறைக்கண்டம் இதுபகலில் முகில்நுழைவ ததிசயப்
பெற்றிஎன் றுடுவார்கண்
பெட்பப் பெருக்கெடுத் துவருபால் ஆற்றலை
பிறங்குவளை வீசஅஃதத்
துறைக்கண்ட நிமிர்கந்தி அம்சோலை தவழ்தரும்
தொண்டைவள நாட்டுநாட்டும்
தொல்புகழ்க் குன்றைவரு பாலறு வாயர்முன்
தோன்றலைமுன் காக்கஎன்றே.

(அ. சொ.) கண்டம்-துண்டு, முகில்-மேகம், பெற்றி-தன்மை, பெட்ப-விரும்ப, பெருக்கு-வெள்ளம், பிறங்கு-

விளங்கும், துறைக்கு-கரைக்கு, அண்ட-நெருங்க, கந்தி-பாக்குமரம், அம்-அழகிய, பாலருவாயர் என்பார் சேக்கிழாரது தம்பியார், முன் தோன்றலை-முன்பிறந்த தமையனாரான சேக்கிழாரை, கறைக்கண்டன்யாப்பு-திருத்தொண்டத் தொகையில் கறைக் கண்டன் என்று தொடங்கும் எட்டாவது பாடல், ஐந்து அதிகாரி-படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, அருள் என்னும் ஐந்து தொழில்களை முறையே செய்கின்ற நான்முகன், திருமால், உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன் ஆகிய ஐந்து தலைவர்கள், மேல் ஓர் அதிகாரி-இவ்வைந்து அதிகாரிகளுக்கும் மேலோனை ஒப்பற்ற சிவபெருமான், மலைமங்கை-இமயமலையரசன் மகளான உமாதேவி, ஒருபால்-ஒரு பக்கம், (இடப் பக்கம்) நிருவிகாரி-காம விகாரம் ஒன்றும் இல்லாதவன். நிர் அகங்காரி-செருக்கு இல்லாதவன், (அகங்காரம் முதலான தத்துவம் கடந்தவன்.) காரி ஆகாரி-விஷத்தை உண்டவன், காரி-விஷம், மறை-வேதமும் அண்டஅரும்-அணுகுதற்கு அரிய, சோதி-ஞானதீப ஒளியாய் இருப்பவன, ஓங்காரி-பிரணவ வடிவாய், பொருளாய் இருப்பவன், அருள்-திருவருள் சத்தி, அவாம்-விரும்பி ஆம்காரி-எல்லாச் செயல்களையும் செய்பவன், ஐவர் - கணம் புல்லர், காரியார், நெடுமாறர், வாயிலார், முனைஅடுவார்.

**விளக்கம்:** பிறைச் சந்திரன் மாலையில் தோன்றுவான், அதுபோது வானில் படர்ந்திருக்கும் மேகம் போகும்போது, சந்திரன் அதில் நுழைந்து போவது போல் காணப்படும். இஃது இயற்கை. ஆனால், பகலில் சந்திரன் காணப்படுதல் இல்லை. அங்ஙனம் இருந்தும் அவன் பகலில் மேகத்தில் நுழைந்து போவது அதிசயப்படத்தக்கது. இங்குப் பாலாற்றின் அலை, சங்குகளை வீசி எறிய, அவை பாக்கு மரங்களில் தவழ்ந்து செல்வது மேகத்தின் இடையே பிறைச்சந்திரன் செல்வதுபோல இருக்கிறது என்று கூற வந்ததால் ''பிறைக் கண்டம் இது பகலில் முகில் நுழைவது அதிசயம்'' என்று பாடப்பட்டது. சேக்

கிழார் பெருமானூர் சந்திரன் மேகத்தில் நுழைவதை உவமை காட்டியுள்ள இடத்தையும் அறிந்து இன்புறுவோமாக. அது,

"முகில்நுழை மதியம்போலக் கைவலான் முன்கை சூழ்ந்த
துகில்கொடு குஞ்சிஈரம் புலர்த்தி"

என்பது.

பணியாளன் வெள்ளாடை கொண்டு சுந்தரரது தலை மயிரின் ஈரத்தை அப்பி அப்பி எடுத்தது, சந்திரன் மேகத் திடையே புகுந்து வருவது போன்றதாகும் என்பது இவ்வடி களின் பொருள். ஆற்றில் ஆடவரும் பெண்டிரும் நீராடல் நம் நாட்டு வழக்கம். இதனைச் சுந்தரர்,

"உடைஅவிழக் குழல்அவிழக் கோதைகுடைந் தாடக்
குங்குமங்கள் உந்திவரும் கொள்ளிடம்"

என்று பாடிக் காட்டுதலைக் காண்க.

பாலாறு பெருக்கெடுத்து வருவதைச் சேக்கிழார்,

துங்க மாதவன் சுரபியின்
திருமுலை சொரிபால்
பொங்கு தீர்த்தமாய் நந்திமால்
வரைமிசைப் போந்தே
அங்கண் நித்திலம் சந்தனம்
அகிலொடு மணிகள்
பங்க யத்தடம் நிறைப்பவந்
திழிவது பாலி

பிள்ளை தைவரப் பெருகுபால்
சொரிமுலைத் தாய்போல்
மள்ளர் வேனிலின் மணல்திடர்
பிசைந்து கைவருட
வெள்ள நீர்இரு மருங்குகால்
வழிமிதந் தேறிப்
பள்ள நீள்வயல் பருமடை
உடைப்பது பாலி

என்று பாடி இருப்பதைக் காணும்போது, அவ்வாற்றின் வெள்ளப் போக்குக் கண்கள் விரும்பிக் காணும் நிலையில் உள்ளது என்பது உண்மை என உறுதிப்படுத்தப்படும். இது குறித்தே ஈண்டு, "ஆடுவார் கண் பெட்பப் பெருக்கெடுத்து வரு பாலாற்று அலை பிறங்குவளை வீச" எனப்பட்டது. கரைகளில் அலைகள் சங்குகளை வீசும் என்பதைச் சம்பந்தர், "சங்கம் தரளம் அவைதாம் கரைக்கெற்றும்" என்று பாடுதல் காண்க.

நாட்டின் நீர் வளத்திற்கு அறிகுறியாக வளைகள் மிகுதியாக இருத்தல் இயல்பு. இதனை வில்லிப்புத்தூரார், "நந்து ஊரும் புனல் நாடு" என்று கூறியுள்ளனர். வளைகளே அன்றி ஆறுகளும் கரை ஓரத்தில் உள்ள மரங்களின் உச்சியைத் தொட்டு ஓடும் எனப் புலவர்கள் உயர்வு நவிற்சி அணி தோன்றப் பாடுதல் உண்டு. புகழேந்தியார், "பைங்கமுகின் கூந்தல்மேல் கங்கைக் கொழுந்தோடும்" என்று கூறுதல் காண்க. இம்முறையினைக் கருதித்தான், "துறைக்கு அண்ட நிமிர் கந்தி அஞ்சோலை தவழ்தரும்" எனப்பட்டது.

தொண்டை நாட்டின் வளம் நூல்களில் பலவாறு கூறப்பட்டுள்ளது. இந்நாட்டின் வளத்தைக் கூறவல்லவர் சேக்கிழார் ஒருவரே அன்றி, வேறு ஆகார் என வடநூற் கடலும் தென்னூற் கடலும் நிலை கண்டுணர்ந்த சிவஞான முனிவர்,

திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்தைந்
    திணைவளமும் தெரித்துக் காட்ட
மருத்தொண்டை வாய்ச்சியர்சூழ் குன்றைநகர்
    குலக்கவியே வல்லான் அல்லால்
கருத்தொண்டர் எம்போல்வார் எவ்வாறு
    தெரிந்துரைப்பார் கலந்தார்க் கின்பம்
மருத்தொண்டர் அணியில்அவை ஒன்றேடொன்
    றியந்தனவும் ஆங்காங் குண்டால்

என்று குறிப்பிட்டுள்ளனர்,

சேக்கிழார் தொண்டை நாட்டின் வளத்தைத் திருக்குறிப்புத் தொண்டர் புராணத்து மிகமிகச் சிறப்புடன் பாடியுள்ளனர். அவர் அந்நாட்டின் சிறப்பைத் தொடங்கும் போதே,

ஏயு மாறுபல் உயிர்களுக் கெல்லை யில் கருணைத்
தாய ஞள்தனி ஆயின் தலைவரைத் தழுவ
ஆயு நான்மறை போற்றநின் றருந்தவம் புரியத்
தூய மாதவம் செய்தது தொண்டை நன்னுடு

நன்மை நீடிய நடுநிலை
ஒழுக்கத்து நயந்த
தன்மை மேவிய தலைமைசால்
பெருங்குடி தழைப்ப
வன்மை ஓங்கெயில் வளம்பதி
பயின்றது வரம்பின்
தொன்மை மேன்மையில்
நிகழ்பெரும் தொண்டை நன்னுடு

கறைவி ளங்கிய கண்டர்பால்
காதல்செய் முறைமை
நிறைபு ரிந்திட நேரிழை
அறம்புரிந் ததனுல்
பிறைஉ ரிஞ்செயில் பதிபயில்
பெருந்தொண்டை நாட்டு
முறைமை யாம்என உலகினில்
மிகுமொழி உடைத்தால்

என்றும், மேலும் குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம், பாலை நிலவளங்களையும் சிறப்புற வர்ணித்துள்ளதைக் காணலாம். காஞ்சி புராணத்தும், கந்த புராணத்தும் தொண்டை நாட்டின் வளத்தை நன்கு தெரியலாம்.

தொண்டை மண்டல சதகத்துள்,

"கொண்டலை நிகர்க்கும் வேளாண்குடி
யொடுதழீஇய தொண்டமண்டலம்"

என்றும்,

பூதலம் சூதம் முதலாக நின்ற
பொதுப்பிற் சந்த
பாதவம் போல்மிக்க வேளாளர்
தங்கிய பான்மையினால்
ஆதவம் சூழ்தரு பல்கோடி
தேசம் அனைத்தினும்
மாதவம் செய்ததன் றோதமிழ்
சேர்தொண்ட மண்டலமே

என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது.

தொண்டை நாட்டின் சிறப்பைச் சங்க நூலாம் பத்துப் பாட்டில் ஒரு பாடலாகிய பெரும்பாணாற்றும் படையில்,

" அத்தம் செல்வோர் அலறத் தாக்கிக்
கைப்பொருள் வெளவும் களவேர் வாழ்க்கைக்
கொடியோர் இன்று" என்றும்

" உருமும் உரறுது அரவும் தப்பா
காட்டு மாவும் உறுகண் செய்யா"

என்றும் கூறியதோடு இன்றி, அந்நாட்டின் ஐந்திணைகளில் வாழும் மக்கள், வழியே வருவார்க்குத் தக்க முறையில் உணவளித்து உவக்கும் நிலையினையும் கூறப்பட்டுள்ளது.

தொண்டை நாடு குறும்பர் நாடு என்றும் கூறப்பட்டது. குறும்பர் ஆடு மாடுகளை மேய்த்து வாழ்ந்தவர். அவர்களே தொண்டை நாட்டை 24 கோட்டங்களாகப் பிரித்தவர்கள். இவர்களை ஆதொண்ட சக்கரவர்த்தி கைப்பற்றித் தன் பெயர் துலங்கத் தொண்டை நாடு எனப் பெயர் இட்டான். என்பாரும் உளர்.

கரிகால் சோழன் செய்த ஆக்க வேலைகள் பல. அவற்றுள் சில,

காடுகொன்று நாடாக்கிக்
குளம்தொட்டு வளம்பெருக்கிப்
கோயிலோடு குடி நிறீஇ

என்பன.

பொதுவாகக் கூறப்பட்டாலும் தொண்டை நாடு அவன் காலத்தில் சோழ நாட்டு ஆட்சியில் கலந்திருந்தமையின், தொண்டை நாட்டையும் இங்ஙனம் செம்மைப்படுத்தினான் என்பது தெரிகிறது. பெரியபுராணமும்,

என்றும் உள்ளஇந் நகர்கலி யுகத்தில்
இலங்கு வேல்கரி கால்பெரு வளத்தோன்
வன்தி றல்புலி இமயமால் வரைமேல்
வைக்க ஏகுவோன் தனக்கிதன் வளமை
சென்று வேடன்முன் கண்டுரை செய்யத்
திருத்து காதம்நான் குட்பட வகுத்துக்
குன்று போலும்மா மதில்புடை போக்கிக்
குடிஇருத்தின கொள்கையில் விளங்கும்

என்கிறது.

சங்ககால இளந்திரையன், இளங்கிள்ளி ஆகியவர்கள் வளமுற ஆண்டனர். பல்லவர்களும் ஏரி, கால்வாய்களை வெட்டி ஆண்டனர். அங்குச் சைவ, வைணவ, பௌத்த மதங்கள் வளர்ச்சியுற்றிருந்தன. இன்னோரன்ன சிறப்புக்களும், வளங்களும் பெற்றது தொண்டை நாடு. தொண்டை நாட்டின் எல்லை இன்னது என்பதைக் கம்பர்,

மேற்குப் பவளமலை வேங்கடம் நேர்வடக்காம்
ஆர்க்கும் உவரி அணிகிழக்கு—பார்க்குள்உயர்
தெற்குப் பிணாகி திகழ்இருப தின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு

என்றனர்.

குன்றத்தூர் தொன்மையது என்பதாலும், குறும்பர்கள் இருபத்து நான்கு கோட்டங்களாகத் தொண்டை நாட்டைப் பிரித்தனர் என்பதாலும், கரிகாலன் காடுகொன்று நாடாக்கினான் என்பதாலும், அந்நாடுகளில் ஒன்றான புலியூர்க் கோட்டத்தைச் சார்ந்த குன்றத்தூரும் பழமையானது என்பது தெரிகிறது. இன்றும் குன்றத்தூரின்

காட்சியினை — அங்குள்ள பாழ்பட்ட இடங்களை—நேரில் கண்டவர் அது பழமையானது என்பதை நன்கு உணர்வர். இன்றும் சேக்கிழாரின் இளவலான பாலறுவாயர் வெட்டிய குளம், பாலறுவாயர்குளம் எனத் திகழ்கிறது. சேக்கிழார் பிறந்த இல்லம் இதுபோது அவர் கோயிலாகத் திகழ்கிறது. இங்கும் பல கல்வெட்டுக்கள் உள்ளன. ஆகவே, இது தொல்புகழ்குன்றை ஆயிற்று.

தொண்டை நாட்டின் தலைநகர் காஞ்சியம்பதி. அதன் மாண்பைக் கூறவந்த புலவர் ஒருவர்,

மலைதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்
ஒலியும் பெருமையும் ஒக்கும்—மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ எல்லாம் படும்

என்று கூறியுள்ளார்.

இதுவும் தொண்டை நாட்டின் வளத்தைக் காட்டுவ தாகும்.

"முத்திதரும் நகர் ஏழில் முக்கியமாம் காஞ்சி" என்பது தொன்றுதொட்ட உண்மையாகும். ஹுவான்சங் என்னும் சீன தேசத்து யாத்திரிகர் இக் காஞ்சியம்பதிக்கு வந்து சுற்றிப்பார்த்துப் பிறகு இதுபற்றிப் பல குறிப்புக்களை எழுதி, அதில் கி. மு. 5-ஆம் நூற்றாண்டில் புத்தர் தம் சமய போதனை செய்தார் என்கிறார். அசோகர் கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் பௌத்த மதக் கொள்கைகளைத் தூண்களில் பொறித்து வைத்தனர். கி. மு. 2-ஆம் நூற்றாண்டில் இருந்த பதஞ்சலி முனிவர் காஞ்சியைப்பற்றித் தமது விரித் துரையில் குறிப்பிட்டுள்ளனர். ஊர் சங்க காலத்தில் கச்சி எனப்பட்டது. "கல்வியில் கரையிலாதார் காஞ்சிமா நகரம்" என்பது அப்பர் வாக்கு. காஞ்சியின் மாண்பைக் காண விழைவார் பெரும்பாணாற்றுப் படையாகிய சங்க் நூலில் பரக்கக் காணலாம். இவ்வாறு தொண்டை நாடும், காஞ்சியும், குன்றத்தூரும் வளமும் புகழும் கொண்

டிருந்தமையின், குன்றத்தூர்,"தொண்டைவள நாட்டுத் தொல்புகழ் குன்றை" எனப்பட்டது.

சேக்கிழாரின் இளவலே பாவலருவாயர். இவர் சோழ அரசியலில் உயர்ந்த உத்தியோகம் பெற்றவர். அதாவது இவர் சேக்கிழாருக்குப் பிறகு அமைச்சராக்கப்பட்டுத் தொண்டைமான் என்னும் பட்டப் பெயரும் அநபாயனுல் கொடுக்கப்பட்டுச் சிறப்பிக்கப் பட்டவர். "தொண்டை மண்டலம் நின்று காத்த பெருமான்" என்னும் சிறப்பையும் இவர் பெற்றவர். குன்றத்தூரில் தம் பெயரால் குளம் வெட்டியவர். இவை அனைத்தையும் தொண்டர் புராண வரலாற்று நூல்,

ஆயவேலை அனபாயன் இந்நிலைமை
ஆதலால் அனுசர் பாலறு
வாயர் எங்குளர் எனப்ப ணிந்திரு
மருங்கு நின்றவர் விளம்புவார்
தூய குன்றைநகர் மீது தம்பெயர்
துலங்க ஓர்குளம் அமைத்தபின்
ஏய நாகைஅர ஞர்திருப்பணி
இயற்றி அவ்விடை இருந்தனர்

என்று சொல்லஅவர் தமைஅழைத் தரசன்
இவர்அமைச் சர்இவர் பட்டமும்
மன்ற மாலைபுனை தொண்டை மான்என
வகுத்தபின் தமது மண்டலம்
அன்று வற்பம்வர வந்தடைந் தவரை
ஆற்றல் செய்துதொண்டை மண்டலம்
நின்று காத்தபெரு மான்எனத் தமது
பையரை எங்கும் நிறுத்தினர்

எனக் கூறியுள்ளது.

இக்குறிப்புக் கல்வெட்டுக்களாலும் அறிய வருகின்றன. இவர் பாலறுவாயர் சேக்கிழார், பாலறுவாயன் களப்பாளராயர் எனவும் கூறப்பட்டனர். இவர் திரு அரத்துறை, கோட்டூர் முதலான சிவ தலங்களுக்குத் தானம் பல செய்

தவர். அத்தானங்கள் திருஞான சம்பந்தர் வீதி உலா விழா விற்கு நிலம் விட்டதும், விளக்கெரிக்கப் பணம் உதவியதும் ஆகும். கறைக் கண்டன என்னும் யாப்பாவது,

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்கும் காரிக்கும் அடியேன்
நிறைக்கொண்ட சிந்தையால் நெய்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்
துறைக்கொண்ட செம்பவளம் இருள்அகற்றும் சோதி
தொல்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனியடுவார்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே

என்பது.

இத்திருப்பாட்டில் கூறப்பட்ட அடியார்கள் ஐவர். அவர்கள், கீழே குறிப்பிடப் பட்டவர்கள்.

**கணம் புல்லர்** வெள்ளாங்கரை இருக்கு வேளூரினர். பெருஞ்செல்வர். கோயிலுள் திருவிளக்கேற்றும் தொண் டினர். இவர்க்கு வறுமை வந்துற்றது. இவர் சிதம்பரம் வந் தனர். கணம் புல்லை அறுத்து விற்று அதனுல் வரும் பொருள் கொண்டு தம் தொண்டைச் செய்து வந்தனர். ஒரு நாள் கணம் புல் விலைப் படவில்லை. அதனுல் அப்புற்களையே விளக் கெரிக்கப் பயன்படுத்தினர். புற்கள் போதுமானவைகளாக இல்லை. பின்னர்த் தம் திருமுடியையே விளக்காக எரித்தனர். இறைவர் இவருக்குத் திருவருள் புரிந்தனர்.

**காரிநாயனர்** திருக்கடவூரினர். தமிழில் கோவை பாடு பவர். மூவேந்தரிடம் சென்று பொருள் விரித்துப் பணம் பெற்றுக் கோயில் கட்டுவர்: அடியார்கட்கு அளிப்பர்.

**நின்றசீர்நெடுமாறர்** பாண்டிய மன்னர். மங்கையர்க் கரசியாரை மணந்தவர். சமணராக இருந்து திருஞான

சம்பந்தரால் சைவரானவர். வடபுல மன்னரைத் திருநெல் வேலியில் வென்றவர்.

வாயிலார் திருமயிலேயினர். வேளாளர் மரபினர். உள்ளக் கோயில் அமைத்து அறிவு விளக்கேற்றி ஆனந்த நீராட்டி அன்பை நிவேதனம் செய்தவர்.

முனையடுவார் சோழ நாட்டுத் திருநீடூரின் வேளாளர். போர் வீரர். பகைவர்க்குப் பயந்தவர்கள் இவரின் துணை பெறுவர். இவ்வாறு உதவிபுரிந்து அதனால் வரும் பொருளால் அடியார்கட்கு அமுது படைப்பர். அவர்கள் விரும்புவனவற்றைச் செய்வர்.

இவ் ஐவரையும் இறைவர், மிகுதியும் விரும்பினர் என்பதை திரு பிள்ளை அவர்கள் ''முதல் அமர்ந்த'' என்ற தொடரில் கூறியுள்ளனர். முதல் என்பவர் முன்னைப்பழம் பொருட்கும், முன்னைப் பழம் பொருளான இறைவர். எல்லார்க்கும் முன்னே தோன்றியவர்களுள் முதன்மையான முழு முதற் பொருள். அமர்ந்த என்பது விரும்பி என்னும் பொருட்டு.

இறைவன், ஆன்மாக்களை ஆக்கி, அளித்து, அழித்து, மறைத்து, அருளிவருதலின் ஐந்ததிகாரி எனப்பட்டான். இறைவன் இவ்வைந்து தொழிற்கும் அதிகாரி என்பதை மணிமொழியார்,

போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்
    போற்றி அருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்
போற்றி எல்லாஉயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
    போற்றி எல்லாஉயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றி எல்லாஉயிர்க்கும் ஈறும் இணைஅடிகள்
    போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்யஆட் கொண்டருளும் பொன்மலர்கள்
    போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய்

என்று கூறுதல் காண்க.

இறைவன் இவ்வைந்தொழிற்களைத் தானே செய்வ தோடின்றி, இத்தொழிற்களைச் செய்யும் அதிதேவர்களையும் அமைத்து, அவ்வத்தொழிலைச் செய்யுமாறு ஏவித் தான் மேல் ஓர் அதிகாரியாகவும் நிற்கின்றான் என்பதைப் பிரபுலிங்க லீலை,

ஆக்குறும் செயல தொன்றே அயன்தனக் காக்க லோடு
காக்குறும் செயல் இரண்டும் கண்ணனுக் காக்கல் காத்தல்
போக்குதல் என்றிம் மூன்றும் புராந்தகற் களித்த வர்க்கு
நீக்கரும் இறைமை நல்கி நிறுவினன் குருகு கேசன்

என்று கூறுகிறது.

மகேஸ்வரன் சதாசிவன் ஆகிய இருவர் பற்றி இப் பாடலில் குறிப்பு இல்லை ஆயினும் இனப் பற்றி அவர்களையும் இணைத்து உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

இறைவன் மலைமங்கையைத் தன்பால் கொண்டிருந் தாலும், அவன் காமவிகாரி அல்லன். இதனை ரதி நன்கு வெளிப்படுத்தித் தன் கணவனை மன்மதம் இறந்தபோது புலம்பிய புலப்பலுள் விளக்கியுள்ளனள்.

நேயமொடு மறைபயிலிலும் திசைமுகனைப்
புரந்தரனை நின்னைத் தந்த
மாயவனை முனிவர்களை யாவரையும்
நின்கணையால் மருட்டி வென்றாய்
ஆயதுபோல் மதிமுடித்த பரமனையும்
நினைந்திவ்வா றழிவுற் றாயே
தீயழலின் விளக்கத்தின் படுகின்ற
பதங்கத்தின் செயலி தன்றோ

என்ற பாடலைக் காண்க.

மன்மதனும் தான் இறப்பதற்கு முன் தேவர்களிடம் இறைவன் மையலுக்கு உள்படாதவன் என்பதை,

மேனாள் அகிலம் தரமெல் லியலா
ஆனா அருள்தன் னையளித் தொருபால்
தானா கஇருத் தியதற் பரனை
நானா மயல்செய் வதுநன் றிதுவே

என்று கூறியுள்ளான்.

இறைவன் அகங்காரம் அற்றவன். அவனுக்கு இத் தத்துவம் இருந்தால் பிட்டுக்கு மண் சுமந்திரான்; பரவை யாரிடம் தூதுபோய் இரான். ஆகவே, அவன் நீர் அகங்காரி. இறைவன் தேவர்கள் பொருட்டு நஞ்சை ஆகாரமாகக் கொண்டவன். "அருள்கொடு மாவிடத்தை எரியாமல் உண்டவன்." என்று அப்பரும், "உலகுய்யகாரின் மல்கு கடல் நஞ்மது உண்ட கடவுள்" வானவர்கள் தானவர்கள் வாதைபட வந்ததொரு மால்விடம் தான்அமுது செய்து அருள் புரிந்த 'சிவன்" எனச் சம்பந்தரும், "விடம் சுட வந்தமரர் தொழ அங்கு அலக்கண் தீர்த்து அவ்விடம் உண்டு, உகந்த அம்மான்" எனச் சுந்தரரும் இறைவன் விடத்தை உண்டதைக் குறித்துள்ளனர். ஆகவே, அவன்காரி ஆகாரி. சிவபெருமான் வேதங்கள் காண்டற் கரியன். "எதிர் மறை எட்டும்தோறும் வஞ்சனாய் அகல்வான்." "வேதங் கிடந்து தடுமாறும் வஞ்சவெளி" எனப் பரஞ்சோதியாரும், "ஆர் அறிவார் என்று அனந்த மறை ஓலமிடும் பேர் அறிவே இன்பப் பெருக்கே பராபரமே" எனத் தாயுமானவரு' கூறுதலை அறியவும். இறைவன் பிரணவ வடிவினன். இதனைத் திருமுறைகளில் வரும் தொடர்களால் நன்கு உணரலாம். "ஓங்காரத்துள் பொருளாய் உள்ளான், ஓங்காரத் துருவாகி நின்றானை" "உய்ய என் உள்ளத்து ஓங்காரமாய் நின்ற மெய்யா" என வருதல் காண்க. திருமந்திரத்தில்,

ஓங்காரத் துள்ளே உதித்தஐம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே உதித்த சராசரம்
ஓங்கார தீதத் துயிர்மூன்றும் உற்றன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே

எனக் கூறப்பட்டு உள்ளதையும் அறியவும். ஆகவே, அவன் ஓங்காரி.

இறைவன் சோதி வடிவினன் என்பதைச் சைவ நூல் களில் எங்கும் காணலாம். "ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ்சோதி" என்பர் மணிமொழியார் "சீர் ஒளிய தழற் பிழம்பாய் நின்ற திகழ் ஒளியை" என்பர் அப்பர், எனவே, அவர் அருஞ்சோதி இறைவர் சிவசத்தியுடன் சேர்ந்து காரியம் புரிதலையும். அருளே சத்தி என்பதையும் சிவஞான சித்தியார் அழகுற,

அருளது சத்தி யாகும் அரன் தனக் கருளை இன்றித்
தெருள்சிவம் இல்லை அந்தச் சிவம்இன்றிச் சத்தி இல்லை
மருளினை அருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்கு
இருளினை ஒளியால் ஒட்டும் இரவியைப் போல ஈசன்

என்கிறது. இதனால் அவன் அருளே அவாம் காரி எனப் பட்டான்.

இன்னோரன்ன பொருட்செறிவினை அடக்கியே "ஐந்ததி காரி *** அருளே அவாம் ஆங்கரி" எனச் சிவபெருமானைத் திரு பிள்ளை அவர்கள் குறித்தனர்.

கணம்புல்லர் "தங்கள் பிரான் திருவுள்ளம் செய்து தலைத் திருவிளக்குப் பொங்கிய அன்புடன் எரித்த பொருவில் திருத்தொண்டர் ஆதலினாலும். காரி நாயனார் மன்னர்பால் பெற்ற; நிதிக் குவைகொண்டு சங்கரனார் இனிதமரும் தானங்கள் பல சமைத்துச் சீர் அடியார் எல்லார்க்கும் மேவுற்ற இருநிதியம் மிக அளித்தும் வந்தமையாலும், நெடு மாறர் திருநீற்றின் நெறி விளங்க அரசு புரிந்தமையாலும், வாயிலார், "மறவாமையால் அமைத்த மனக்கோவில் உள் இருத்தி, உறவாதிதனை உணரும் ஒளிவிளக்குச் சுடர் ஏற்றி, இறவாத ஆனந்தம் எனும் திருமஞ்சனம்ஆட்டி, அறவாணர்க் கன்பென்னும், அமுதமைத்து அர்ச்சனை செய்தமையாலும், முனியடுவார் தாம் பெற்ற நிதியெல்லாம் ஈசன் அடியார்கள், சொன்ன சொன்னபடி நிரம்பக் கொடுத்துத் தூய போனகமும் கன்னல் நறுநெய் கறி தயிர் பால் கனியுள் உறுத்த கலந்தளித்துமன்னும் அன்பின் நெறி பிறழா வழித் தொண்டாற்றி வந்தமையாலும் இறைவர் விரும்பும்

நிலையில் இந்நாயன்மார்கள் திகழ்ந்தனர். ஆகவே இவர்கள் "முதல் அமர்ந்த" என்ற அடைகொடுத்துச் சிறப்பிக்கப்பட்டனர்.

சேக்கிழார் இவர்களை "முடியிட்டதிருவிளக்கு எரித்தார் தம் கழல்பேணி," "கரியார் கழல் வணங்கி" "மாறனார் செங்கமலக் கழல் வணங்கி, பெருந்தகையார் தமைப் போற்றி" "முனை அடுவார் விரை பூங்கமலக் கழல் வணங்கி" எனவும் முறையே போற்றி இருத்தலில், திரு பிள்ளை அவர்களும் "ஐவரும் மகிழ்ச்சியுற ஏத்தெடுப்பாம்" என்றனர். (8)

## கடல்சூழ்ந்த உலகெலாம்

9. கடல்சூழ்ந்த யாப்புஅமர் அறம்சூழ்ந்த நெஞ்சக்
கழல்சிங்க மன்னன்மன்னிக்
கழியா மடம்கழி இடங்கழி அருட்கே
கருத்துனை செருத்துணைஅரில்
விடல்சூழ்ந்த சிந்தையொர் இகழ்த்துணை பெருதுற
விளங்கும் புகழ்த்துணையவ
வேட்புலி எனும்திருக் கோட்புலிஇவ் ஐவரையும்
மேல்மேலும் ஏத்தெடுப்பாம்
அடல்சூழ்ந்த தொண்டர்வர லாற்றுவிரி உலகெலாம்
அறியத் தெருட்டுகுரவிற்
கமையப் புனைந்ததுகொல் சாதிஅடை யாளம்கொல்
அமையும்எது சொலினும்என்ன
மடல்சூழ்ந்த செங்குவளை மாலைஅணி திண்தோள்
வலத்தனை நிலத்தனைவரும்
வாயார வாழ்த்துகுன் றத்தூர் உதித்தபெரு
வள்ளலைக் காக்கஎன்றே

(அ. சொ.) அடல் - வலிமை, சூழ்ந்த - நிறைந்த, தெருட்டு-மனம் தெளியச் செய்து, குரவிற்கு-ஆசிரியத் தன்மைக்கு, புனைந்தது-சூடியது, சாதி-வேளாளர் இனம்,

அமையும் - பொருந்தும், மடல்-இதழ், வலத்தனை-வன்மை யுடையவனை, பெருவள்ளல் - சேக்கிழார், கடல் சூழ்ந்த யாப்பு என்பது திருத்தொண்டத் தொகையில் உள்ள ஒன்ப தாவது பாடலின் முதல் குறிப்பு, யாப்பு-பாடல், மன்னி-நிலைத்து, மடம்-அறியாமை, ஆணவம், கருத்துள் நை-உள் ளத்துள் நெக்குருகுதல், அரில்-குற்றம், விடல்-நீங்கல், வய-வெற்றி பொருந்திய, வேள் - வேளாளர்கட்குள்ளே. வேளாண்மை, ஐவர்-கழற்சிங்கர், இடங்கழியார், செருத் துணையார் புகழ்த்துணையார், கோட்புலியார்.

**விளக்கம்:** சிவனடியார்கள் எதற்கும் மெலிந்தவர்கள் அல்லர். அவர்கள் வன்மை மிக்கவர்கள். இதனைப் பெரிய புராணத்தில் பல இடங்களில் காணலாம். இதற்கு எடுத்துக் காட்டாக ஓர் அடியாரைக் காண்போமாக. அவரே கூற்றுவ நாயனர். அவரது வன்மையினை,

வென்றி வினையின் மீக்கூர
வேந்தர் முனைகள் பலமுருக்கிச்
சென்று தும்பைத் துறைமு டித்துஞ்
செருவில் வாகைத் திறம்கெழுமி
மன்றல் மாலை மிலைந்தவர்தம்
வளநா டெல்லாம் கவர்ந்துமுடி
ஒன்றும் ஒழிய அரசர்திரு
எல்லாம் உடையர் ஆயினர்

என்று பெரிய புராணம் கூறுதல் காண்க.

இந்தக் காரணங்கொண்டே தொண்டர்களை, "அடல் சூழ்ந்த தொண்டர்" என்றனர்.

நூல்கள் இரண்டு வகைப்படும் என்று தொல்காப்பியர் கூறுவர். அவை முதல் நூல், வழி நூல் என்பன. முதல் நூல், வழி நூல் இன்ன எனக் கூற வந்த தொல்காப்பியர் முறையே,

" வினையில் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும் "

என்றும்,

" வழிஎனப் படுவது அதன்வழித் தாகும் "

என்றும் கூறினர்.

இந்த அளவிலும் தொல்காப்பியர் நின்றிலர். வழி நூல் நான்கு வகையில் அமைக்கப்படும் என்பதை, "வழியின் நெறியே நால்வகைத் தாகும்" என்று கூறி அந்நால் வகைகள்,

தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து
அதர்ப்பட யாத்தலோ டனைமர பினவே

என்றும் எடுத்துக் காட்டினர்.

இந்நூற்பாவின் இலக்கணப்படி அமைந்தனவே, சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையும், நம்பியாண்டார் நம்பிகள் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியும், சேக்கிழார் பாடிய பெரிய புராணமும் ஆகும். சேக்கிழாரே தமது நூலுக்குத் தொகை நூல், வகை நூல் எவை என்பதை,

மற்றி தற்குப் பதிகம்வன் தொண்டர்தாம்
புற்றி டத்தெம் புராணர் அருளினல்
சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகைஎனப்
பெற்ற நற்பதி கம்தொழப் பெற்றதால்

என்றும்,

அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை
நந்தம் நாதனும் நம்பியாண் டார்நம்பி
புந்தி ஆரப் புகன்ற வகையினல்
வந்த வாறு வழாமல் இயம்புவாம்

என்றும் பாடியுள்ளார்.

இதனல் சுந்தரர் நூல் தொகை என்பதும், நம்பியாண்டார் நம்பிகள் நூல் வகை என்பதும், சேக்கிழார் நூல் விரிநூல் என்பதும் நன்கு புலப்படுதல் காண்க. இது கொண்டே, "தொண்டர் வரலாற்று விரி" என்றனர்.

இவ்விரி நூலை "உலகெலாம் அறியத் தெருட்டினுர்" என்பது. "மன்றுளார் அடியார் வான்புகழ் நின்றது எங்கும் நிலவி உலகெலாம்" என்றும் "மூவேந்தர் தமிழ் வழங்கும் நாட்டுக்கப்பால் முதல்வனார் அடிச்சார்ந்த முறைமை யோரும், நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையில் கூறும், நல்தொண்டர் காலத்து முன்னும் பின்னும்" என்றும் சேக்கிழார் அறிவித்திருப்பதால் எல்லா உலகங்கட்கும் இது பொருத்தமான நூல் என்பதும், உலகறியும் பெருமைக் குரியதும் இதுவே என்பதும் பெறப்படுகின்றன.

சேக்கிழார் பெருமானுர் பேராசிரியர். பேராசிரியர் என்பதால்தான் பெரிய புராணமாம் அப்பெரு நூலை இயற்ற முடிந்தது. அநபாய சோழனுக்கும் உணர்த்த முடிந்தது. ஆகவே, அவரை, "குரவிற்கு அமைய" என்றனர். ஆசிரி யர்கள், "செங்குவளை மலர் அணிவர்" என்பது மரபு. ஈண்டுச் சேக்கிழார் அநபாயனுக்குக் குருவாக அமைந்த மையின், "குவளை மலர் புனைந்தது பொருத்தமே. "சமணர் பொய்ந்நூல் இது மறுமைக்கு ஆகாது. இம்மைக்கும் அற்றே. வளம் மருவுகின்ற சிவ கதை இம்மைக்கும் மறு மைக்கும் உறுதி" என்று மன்னர்மன்னனுக்கு மதி அமைச் சராம் சேக்கிழார் கூறினுர் எனில், இஃது அமைச்சர் பண்பில் நின்று பேசியது அன்று; ஆசிரியர் நிலையில் நின்று அறிவித்த தாகும். இது குறித்தே திரு பிள்ளை அவர்கள், "தெருட்டு குரவில்" என்றனர். அநபாயனும் இவரைக் குருவாகக் கொண்டிலன் எனில், இவர்க்கு வெண்சாமரை வீசியிருன். அநபாயன் கவரி வீசியதைச் சேக்கிழார் புராணம், "சேவையர் காவலரை முறைமை பெற ஏற்றி அரசனும் கூட ஏறி முறைமையினுல் இணைக் கவரி துணைக்கரத்தால் வீச" என்று மொழிகிறது. இங்ஙனம் வீசியது குறித்து மன்னன் மகிழ்ந்ததை, "இதுவன்றோ நான் செய்த தவப் பயன்" என்றும் கூறுகிறது.

குருவாக அமைகிறவர்கள் குவளை மலர் அணிதல் மரபாகும். வேளாளர்கட்கும் இம் மலர்மாலையே உரியது.

இதனைச் சேக்கிழாரே விளக்கியுள்ளார். வேளாள மரபின ரான இளையான் குடிமாறர் குவளை மலர் அணிந்திருந் ததை "வேரித்தாரான்" என்ற தொடரால் விளக்கினார், வேரித்தார் ஈண்டுக் குவளை மாலை. சேக்கிழார் குருவும். வேளாளரும் ஆகையால், "குரவிற் கமையப் புனைந்தது கொல் சாதி அடையாளம்கொல் அமையும் எது சொலினும் என்ன மடல் சூழ்ந்த செங்குவளை மாலை அணிதிண் தோள் வலத்தன்" என்று புகழ்ந்து பாராட்டப்பட்டனர். சேக்கிழார் உள்ளத் திட்பம் உடையார்போல் உடல் திட்பமும் அமைந்தவர் என்பதை அறிவிக்கவே, "திண்தோள் வலத்தன்" எனப்பட்டார்.

சேக்கிழாரைப் போற்றுதவர் இவர். மேலும், இவரைப் போற்றுபவர் அறிவு சான்ற பெருமக்கள் மட்டும் அல்லர்; பண்புடைய மக்கள் அனைவருமே போற்றுவர். இதனைச் சேக்கிழார் வரலாற்றுப் புராணத்துள்,

காவல ஞர்இவர் தவர்இவர் காவலர்
கவரி இடத்தகு மோஎன்பார்
சேவையர் காவல ஞர்சிவ மான
சிறப்பிது நல்ல சிறப்பென்பார்
தேவரும் எழுதவோ ணுமறை
யைத்தமிழ் செய்து திருபதி கம்பாடும்
மூவரும் ஒருமுதல் ஆய்உல கத்து
முளைத்த முதல்பொருள் தான்என்பார்

என்றும்,

மின்மழை பெய்தது மேக ஒழுங்குகள்
விண்ணவர் கற்பக விரைசெய்பூ
நன்மழை பெய்தனர் சேவையர் காவலர்
நாவலர் இன்புற நாவாரச்
சொன்மழை பெய்தனர் இரவலர் மிடிகெட
அள்ளி முகந்தெதிர் சோழேசன்
பொன்மழை பெய்தனன் உருகிய நெஞ்சொடு
கண்மழை அன்பர் பொழிந்தார்கள்

என்றும் வருதல் கொண்டு நன்கு உணரலாம்.

சிவஞான சுவாமிகள், உமாபதி சிவம் இவரைப் போற்றியுள்ளதை முன்பே அறிந்துள்ளோம். தலபுராணம் பாடிய புலவர்கள் இவரை வாயார வாழ்த்திப் போற்றியுள்ளனர். இன்னோரன்ன காரணம் குறித்தே, "நிலத்து அனைவரும் வாயார வாழ்த்து குன்றத்தூர் உதித்த பெரு வள்ளல்" என்று சிறப்பித்துக் கூறப்பட்டனர். உள்ளி உள்ள எல்லாம் உவந்தீயும் வள்ளல்கள் இம்மையில் இன்பம் அடைதற்குரிய பொருள்களையே ஈய வல்லவர்கள். சேக்கிழாராகிய வள்ளல், இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் பயக்கவல்ல பெரிய புராணமாம் பெரும் செல்வத்தை உலகவர்க்கு ஈந்தமையின் பெருவள்ளல் எனப்பட்டார்.

"கடல் சூழ்ந்த யாப்பு" என்பது, திருத்தொண்டத் தொகையில் உள்ள ஒன்பதாவது பாடல் ஆகும். அது,

கடல்சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான்
  காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்கும் தஞ்சை
  மன்னவனாம் செருத்துணைதன் அடியார்க்கும் அடியேன்
புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடிப் [அடியேன்
  பொன்அடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கும்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கும் அடியேன்
  ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

என்பது.

இப்பாட்டில் அமர்ந்த ஐவர் கழற் சிங்கர், இடங்கழியார், செருத்துணையர், புகழ்த்துணையார், கோட்புலியார் என்பவர்கள்.

**கழற்சிங்கர்:** இவர் பல்லவ மரபினர். வடபுல மன்னர்களை வென்றவர். இவர் ஆட்சியில் சைவம் தழைத்தது. செங்கோல் ஆட்சி நிலவியது. இவர் சிவ பக்தர். இறைவன் உறைவிடங்கட்குச் சென்று இறைவனை

வழிபடுவர். ஒரு முறை இவர் தம் மனைவியார் திருவாரூர் கோவிலை வலம் வருகையில், இறைவர்க்குரிய மலரை எடுத்து மோந்துவிட்டனர். இதை அறிந்த கழற்சிங்கர் தம் மனைவியார் கையைத் துண்டித்து விட்டனர். இச்செயலைக் கண்ட இறைவர் இவர்க்கு நல்லருள் புரிந்தார்.

இவரது வரலாற்றில் அறச் செயல்கள் காணப்படுகின்றன. இவர் சிவபெருமானை அன்றி வேறு எவரையும் தம் அறிவில் கொண்டிலர். இதனைச் சேக்கிழார், "கங்கை வார் சடையார் செய்ய அடிமலர் அன்றி வேறொன் றறிவினில் குறியா நீர்மை" என்று குறிப்பிட்டுள்ளார். இவரது ஆட்சியில் நாடு அறநெறியில் சென்றது. இதனையும் சேக்கிழார், "நாடற நெறியில் வைக நன்னெறி வளர்க்கும் நாளில்" என்று வகுத்து மொழிந்துள்ளனர். இவர் தவ யாத்திரை மேற்கொண்டவர். இச்செய்தியைப் பெரிய புராணம், "குவலயத்து அரனார்மேவும் கோயில்கள் பலவும் சென்று தவலரும் அன்பில் தாழ்ந்து தக்கமெய்த் தொண்டு செய்வார்" என்கிறது. இந்நாயனார் தம் மனைவியார் இறைவர்க்குரிய மலரை எடுத்து மோந்தது பற்றித் தம் உடைவாளால் மலரை எடுத்த கையை வெட்டி எறிந்தனர். இதனையும் திருத்தொண்டார் புராணம் குறிப்பிடும்போது,

கட்டிய உடைவாள் தன்னை
    உருவிக் கமழ்வா சப்பூத்
தொட்டுமுன் எடுத்த கையாம்
    முற்படத் துணிப்ப தென்று
பட்டமும் அணிந்து காதல்
    பயில்பெருந் தேவி ஆன
மட்டவிழ் குழலாள் செங்கை
    வளையொடும் துணித்தார் அன்றே

என்று பாடிக் காட்டியுள்ளது.

இவ்வாறு நாயனார் எல்லாப்படியாலும் அறநெறி மனத்துடன் வாழ்ந்தவர் ஆதலின், "அறம் சூழ்ந்த நெஞ்சச்

கழற்சிங்க மன்னன்'' எனப்பட்டார். கழற்சிங்கர் மன்னர் என்பது திருத்தொண்டத் தொகையில், ''கடல் சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான் காடவர் கோன் கழற் சிங்கன்'' என்று வருதலாலும், பெரிய புராணத்துள்,

படிமிசை நிகழ்ந்த தொல்லைப்
பல்லவர் குலத்து வந்தார்
கொடிநெடுந் தானை மன்னர்
கோக்கழற் சிங்கர் என்பார்

என்பதாலும் அறியலாம்.

**இடங்கழியார்:** இவர் கோனாட்டில் கொடும்பாளூரில் வேளிர் குலத்தில் ஆதித்தன் குடியில் பிறந்தனர். அரச மரபினர். இவர்தம் ஆட்சியில் கோயில் பூசைகளும் சைவமும் குறைவின்றித் தழைத்து ஓங்கின. இவர் ஆட்சியில் ஒரு சிவனடியார் அடியார்கட்கு உணவூட்ட நெல் இல்லாமை யால், இவர் அரண்மனையில் திருடியபோது அகப்பட்டுக் கொண்டார். இடங்கழியார் சிவனடியாரை ''ஏன் நெல்லைத் திருடினீர்கள்?'' என, அவர், ''சிவனடியார்கட்கு அன்னம் இட'' என்று கூற, இடங்கழியார் உடனே தம் நெற் கூட்டை யும், நிதிச் சாலையையும், பொருட் சாலையையும் திறந்து சிவனடியார்கள் முகந்து செல்லலாம் எனப் பறை அறையச் செய்து, தம் பொருள்கள் சிவனடியார்கட்காக எடுத்துச் செல்லப்படுதலைக் கண்டு மகிழ்ந்தவர். இந்நிலையில் பன்னெடுங்காலம் அரசு செய்து இறையடியுற்றார்.

இவரை, ''மன்னிக்கழியா மடங்கழி இடங்கழி'' என்று கூறி இருத்தலைச் சிறிது சிந்தித்தல் சிறப்பாகும். ஈண்டு ''மன்னிக்கழியா மடம்'' என்பது, ஆணவ மலத்தை ஆகும். இஃது ஆன்மாவோடு பொருந்திப் பிரியா நிலையுடையது என்பது சித்தாந்த நூற்களின் கருத்து. இதனைச் சிவஞான சித்தியார்,

ஒன்றதாய் அநேகசக்தி
உடையதாய் உடனாய் ஆதி
அன்றதாய் ஆன்மா வின்தன்
அறிவொடு தொழிலை ஆர்த்து
நின்றுபோத் திருத்து வத்தை
நிகழ்த்திச்செம் பினில்க ளிம்பேய்ந்து
என்றும்அஞ் ஞானம் காட்டும்
ஆணவம் இயைந்து நின்றே

என்று கூறுதல் காண்க. சிவஞான போத வெண்பா,

நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னில்களிம்பும்
சொல்லில் புதிதன்று தொன்மையே

என்று கூறுகிறது.

ஆகவே, இது மூலமலம் எனப்படும். ஆணவமலம் உயிருடன் கலந்து இருப்பினும் தன்னையும் பொருளையும் காட்டாது. இதனைத் திருவருட்பயன்,

ஒருபொருளும் காட்டா திருள்;உருவம் காட்டும்;
இருபொருளும் காட்ட திதி

என்று அறிவிக்கிறது.

இவ்வாணவ மலம் உயிருடன் மன்னில் இருத்தலைத் தாயுமானவரும்,

ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ் ஞானத்
தாணுவினோ டத்துவிதம் சாரும்நாள் எந்நாளோ

என்றும்,

ஆணவத்தை நீக்கி அறிவூடே ஐவகையாகிக்
காணவத்தைக் கப்பாலைக் காணுநாள் எந்நாளோ

என்றும்,

காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண் டிருந்த எமை

என்றும் கூறிப்போந்தார்.

உமாபதி சிவம், ''மோகமிக உயிர்கள் தொறும் உடனாய் நிற்கும் மூல ஆணவம்'' என்றும், ''செம்பினுள் களிம்பேய்ந்து நித்த மூல மலமாய் அறிவு முழுதினையும் மறைக்கும்'' என்றும் கூறுதல் காண்க. தத்துவராய சுவாமிகள், ''செம்பினில் காளிதம் போலப் பிணைத்துளவே'' என்று குறிப்பிடலையும் நோக்குக. இறுதல்தான், ''ஈண்டு மன்னிக்கழியா மடம்'' எனப்பட்டது. இதனையும், கழித்தவர் இடங்கழியார் என்பதை இவர் வரலாற்றால் உணரலாம். தம் அரண்மனையிலிருந்து நெற்களைத் திருடிய சிவனடியாரைக் காவலர் முன் கொண்டு சென்றபோது, இவர், ''இவர் அன்றோ பண்டாரம் எனக்கு'' என்று கூறினர். இவருக்கு ஆணவ மலம் மேலிட்டிருப்பின், இவர் இங்ஙனம் கூறுவரோ? மேலும், மதம் முதலியன ஆணவக் குறிகள் என்று சிவஞான முனிவரும், விகற்பம், குரோதம், மோகம், கொலை, மதம் முதலியன ஆணவ மலக் குறிப்புகள் என்று உமாபதி சிவமும் கூறி இருத்தலின், இவை நாயனார்க்கு இருந்தனவோ? இல்லை. பின் நாயனார் என் செய்தார்?

நிறைஅறிந்த உள்ளத்தால்
நெற்பண்டா ரமும்அன்றிக்
குறைவில்நிதிப் பண்டார
மானஎலாம் கொள்ளைமுகந்
திறைவனடி யார்கவர்ந்து
கொள்கஎன எம்மருங்கும்
பறையறையப் பண்ணுவித்தார்
படைத்தநிதிப் பயன்கொள்வார்

ஆகவே, இவரை, ''மடங்கழி இடங்கழி'' என்றது சாலப் பொருத்தமே.

**செருத்துணையார்:** இவர் சோழ நாட்டில் தஞ்சாவூரில் வேளாள மரபில் பிறந்தவர். சிவபக்தி, சிவன் அடியார் பத்தி நிறைந்தவர். திருவாரூர் திருக்கோயிலில் மலர்த் தொண்டு செய்து வந்தவர். ஒரு சமயம் கழற்சிங்க மன்னர் (நாயனாரும் ஆவார்) மனைவியார் இறைவர்க்குரிய பூவை எடுத்து மோந்ததால் அவ்வம்மையார் மூக்கை அரிந்தவர். பூத்தொண்டு செய்தே முத்தி பெற்றவர். "அருட்கே கருத்துள் நை செருத்துணை" என்று சிறப்பிக்கப்பட்டதன் குறிப்பு, இவர் இறைவர் திருவருட்கே உள்நைந்தவர் என்பதை அறிவித்தற்காகும். இதனைச் சேக்கிழாரும்,

மெய்தருவார் நெறிஅன்றி வேறொன்றும் மேல்அறியாச்
செய்தவராம் செருத்துணையார்

என்று கூறியுள்ளனர்.

மேலும், இவர் இறைவர் திருவருளிலேயே தோய்ந்திருந்தமையால்தான், இறைவர்க்கென இருந்த மலரை மன்னன் மனைவியார் மோந்ததுகண்டு பொறாராய்,

கடிது முற்றி மற்றவள்தன் கருமென்
 கூந்தல் பிடித்தார்த்துப்
படியில் வீழ்த்தி மணிமூக்கைப் பற்றி
 "பரமர் செய்யசடை
முடியில் ஏறும் திருப்பூமண் டபத்து
 மலர்மோந் திடும்மூக்கைத்
தடிவன்;' என்று கருவியினால் அரிந்தார்
 தலைமைத் தனித்தொண்டர்

**புகழ்த்துணையார்:** இவர் செருவிலிபுத்தூரில் ஆதி சைவ பிராமணர் மரபில் தோன்றியவர். சிவபெருமானை ஆகமப்படி பூசித்தவர். பஞ்ச காலத்திலும் பரமனைப் பூசித்து வந்தவர். உணவு இன்மையால் உடலும் தளர்ந்தது. அந்நிலையிலும் இறைவர்க்கு நீர் முழுக்கு ஆட்டும்போது, உடலில் வன்மை இன்மையால் குடம் இறைவர் முடிமீது விழுந்து விட்டது. அது கண்டு நடுநடுங்கிக் கீழே விழுந்துவிட்டார். உறக்கமும் கொண்டார். இறைவர் அவர் கனவில் "தினமும்

ஒரு பொற் காசை இங்கு வைப்போம். அதுகொண்டு நலனுற வாழ்க" என்று அருளினர். அவ்வாறே தினமும் பொற்காசு பெற்றுத் தம் வழிபாட்டை இடையறாது செய்து இறுதியில் ஈடில் வீட்டின்பம் எய்தினர். இவர் வரலாற்றைச் சுந்தரர்,

அகத்தடிமை செய்யும் அந்தணன்தான் அரிசில்
  புனல்கொண் டுவந்தாட் டுகின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தை யும்நும்முடி
  மேல்விழுத் திட்டுநடுங் குதலும்
வகுத்தவ னுக்கு நித்தம் படியும்வரும்
  என்றொரு காசினை நின்றநன்றிப்
புகழ்த்துணை கைபுகச் செய்துகந் தீர்பொழில்
  ஆர்திருப் புத்தூர்ப் புனிதன்நீரே

என்று பாடியிருத்தலை அறியலாம்.

இந்நாயனர் ஈண்டு, "அரில்விடல் சூழ்ந்த சிந்தை ஓர் இகழ்த்துணை பெறாதுற விளங்கும் புகழ்த்துணை" எனப் புகழப்பட்டுள்ளனர். "அரில்விடல் சூழ்ந்த சிந்தை" என்பதன் பொருள், குற்றம் நீங்கப்பட்ட மனம் வாய்ந்தவர் என்பது. குற்றம் இல்லாத மனம் வாய்ந்தவர் ஆதலினால்தான் இறைவரைப் பஞ்ச காலத்திலும் வழிபட்டு வந்தனர். இதனைச் சேக்கிழார்,

தங்கோனைத் தவத்தாலே
  தத்துவத்தின் வழிபடுநாள்
பொங்கோத ஞாலத்து
  வற்கடமாய்ப் பசிபுரிந்து
எங்கோமான் தனைவிடுவேன்
  அல்லேன்என் றிராப்பகலும்
கொங்கார்பன் மலர்கொண்டு
  குளிர்புனல்கொண் டருச்சிப்பார்

என்று பாடினர்.

இவர் இறைவர் முடிமேல் குடத்தை போட்டது இழுக்காகும் என்று சிலர் கூறக்கூடும் என்று நினைந்தே ஆசிரியர்

"ஓர் இகழ்த்துணை பெருதுற விளங்கும்" என்று பாடிக் காட்டினர். இவர் இகழ்தற்குரியர் ஆயின், சுந்தரர் இவரது சிறப்பைப் பாடி இரார். இறைவரும் கனவில், "அருந்துணவு மங்கியநாள் கழிஅளவும் வைப்பது நித்தமும் ஒரு காசு இங்கு உனக்கு நாம்" என்று அருள் செய்திரார்.

இந்நாயனர், "அரில்விடல் சூழ்ந்த சிந்தையும், ஓர் இகழ்த்துணை பெருது உறவிளங்கும்" தன்மையும் பெற்றதனுல்தான்,

மாயனுக் கரியானை மஞ்சனம்ஆட் டும்பொழுது
சாலவுறு பசிப்பிணியால் வருந்திநிலை தளர்வெய்திக்
கோலநிறை புனல்தாங்கு குடந்தாங்க மாட்டாமை
ஆயமணி கண்டத்தார் முடிமீது வீழ்த்தயர்வார்

ஆயினர்.

இவரை மேலும், "உறவிளங்கும்" என்று புகழ்ந்ததன் காரணம், சேக்கிழார், "எங்கும் நிகழ்ந்த புகழ்துணை" என்றும், "ஒருவர் தமை நிகர்இல்லார் உலகத்துப் பரந் தோங்கிப் பொருவரிய புகழ்நீடு புகழ்த்துணையார்" என்றும் கூறியிருத்தலால் என்க.

**கோட்புலியார்:** இவர் சோழ நாட்டில் நாட்டியத்தான் குடியில் வேளாள மரபில் பிறந்தனர். சோழனிடம் சேனுதிபதி தொழிலை மேற்கொண்டவர். மாற்ருரை வென்றவர். தம் தொழிலால் வரும் ஊதியத்தை இறைவர்க்குத் திருவமுது படைத்து வழிபட நெற்களை வாங்கிக் குவித்தவர். ஒருமுறை இவர் வேற்று நாடு சென்று போர்புரிய நேர்ந்தது. அது போது அவர்தம் சுற்றத்தாரிடம் "இந் நெற் குவியல்கள் இறைவர்க்குத் திருஅமுதுக்கெனச் சேர்க்கப்பட்டமையின், எக்காரணம் கொண்டும் நீங்கள் பயன் படுத்தக் கூடா"தென ஆணை இட்டுச் சென்றனர். ஆனுல், நாட்டில் பஞ்சம் வரச் சுற்றத்தார் தமக்குப் பயன்படுத்திக் கொண்டனர். கோட்புலியார் வெற்றியுடன் திரும்பினர். சுற்றத்தார் செயலை அறிந்தார். வீட்டில் புகுந்தார். தம் சேவகனை வாயில் காவலில் காவல் புரியக் கட்டளை இட்டார். அடாது செய்த

தம் பெற்றோர்களேயும், உற்றார்களேயும் வெட்டி வீழ்த்தினார். ஒரு சிறு குழந்தையையும் வெட்டத் துணிந்தபோது, வாயில் காவலன் தடுத்தான்." "இது நெல்லேயுண்டவள் பாலேக் குடித்தமையின் இதனேயும் வெட்டுதல் தக்கது" என அதனேயும் வெட்டினார். இத்தகைய வீரச் செயல் புரிந்த இவர் சிவன் அருளுக்குப் பாத்திரம் ஆனார்.

இந்நாயனார் தம் மன்னனது பகைவருடன் பொருது வெற்றி கொண்டதால், வயம் என்ற அடைமொழி கொடுக்கப்பட்டார். இவரைச் சேக்கிழார் "தனி வீரராம் தலேவர்" என்றும் "வேற்றுப்புலம் பெருகத்துயர் விளேப்பப் போர் விளேத்துப் புகழ் விளேப்பார்" என்றும் கூறியுள்ளனர். மேலும், இந்நாயனார் வேளாளர் மரபில் புலிபோலத் துலங்கினமையின், "வேட்புலி எனும் கோட்புலி" எனப்பட்டார். இவர் அக்குடியில் சிறந்து விளங்கியதால், சேக்கிழார், "நாட்டியத்தான் குடி வேளாண் குலம் பெருக வந்துதித்தார்" என்கிறார். மற்றும் இவர் தம் உறவினர்களே வெட்டி வீழ்த்தியும் கூட இறைவன் இவரை விரும்பி, அன்பர் எதிர் வெளியே நின்று, "உன்னுடைய கைவாளால் உறுபாசம் அறுத்த கிளே பொன்னுலகின் மேலுலகம் புக்கணேயப் புகழோய் நீ இந்நிலே நம் உடன் அணேக" என்று கூறி இருப்பதால், இவர் வேட்புலி என்று சிறப்பித்தற்கும் உரியர் ஆயினார். திரு என்னும் சொல், "கண்டரால் விரும்பப் படும் தன்மை" என்று பொருள் படுதலின், இவர் உறவினர்களேத் தடிந்த நிலேயிலும், எவராலும் விரும்பப்படுபவரே என்ற கருத்தில் திருக்கோட்புலி எனப்பட்டார்.

சேக்கிழார், "சிங்கர் கழலிணே தொழுது போற்றி, என்றும், இடங்கழியார் கழல் வணங்கி என்றும்," செருத்துணேயார் தூயகழல் இறைஞ்சி" என்றும், புகழ்த்துணேயார் கழல் வாழ்த்தி என்றும், கோட்புலியார்அடி வணங்கி" என்றும் வணங்கி இருத்தலின், அம்மரபுபடி திரு பிள்ளே அவர்களும் "இவரையும் மேல்மேலும் ஏத்தெடுப்பாம்" என்றனர்.

(9)

## பத்தராய்ப் பணிவார்கள்

10\. பத்தராய் என்றெடுத் தருள்திருக் கவியில்இரு
பைங்கோதை யாரைவேட்ட
பான்மைக் கிணங்கஓர் இருபுதல்வி யார்தமைப்
பயவாம லேபயந்த
சுத்தராய் வன்தொண்டர் இன்தொண்டர் தழுவித்
துதிக்கவைத் தவர்களாய
தொகையுளார் என்னும்எழு வகையுளார் பொற்பதம்
தொழுதேத் தெடுத்தல்செய்வாம்
நித்தராய் மன்றுள்நடம் நவில்வார் உவக்கும்வெண்
நீற்றெளி நிலாஒளிஎன
நினைந்தணைந் தாங்குக்கு வளைபொலிய இன்தேன்
நிரம்பஉண அளிஅடைந்தாங்
கத்தராய் கண்மணித் தொடைபொலி தரப்பொலியும்
அம்புயத் தவனைநம்பும்
அளவா வளம்துன்று குன்றைநகர் மேயஅருள்
ஆளியைக் காக்கஎன்றே.

*(அ. சொ.) நித்தராய் - அழியாது என்றும் இருப்பவராய், மன்றுள் - தில்லைப் பொற்சபையில், நடம் - நடனம், நவில்வார் - பயில்வார், அதாவது மேற்கொண்டவர், குவளை-குவளைமலர், பொலிய-விளங்க, உண-குடிக்க, அளி-வண்டுகள், அத்தர் தந்தையாராகிய சிவபெருமான், ஆய-உரிமையுடைய, கண்மணி-உருத்திராக்கம், தொடை-மாலை பொலிதர-விளங்க, அம்புயத்தவன்-தாமரையில் இருக்கும் பிரம்மதேவனை அழகியதோளை உடையவன், நம்பு-விரும்பு, "நம்பும் மேவும் நசையாகும்மே" என்பது தொல்காப்பியம், அளவா-அளவில்லாத, துன்றும்-சேர்ந்திருக்கும்,ஆளி-சிங்கத்தை, பத்தராய் என்பது திருத்தொண்டத் தொகையின் பத்தாவது பாட்டின் முதல் குறிப்பு: கவி-பாடல்,*

இரு-இரண்டு, பைங்கோதையர்-பசிய மாலையை அணிந்த பரவை நாச்சியார், சங்கிலி நாச்சியார் என்னும் இரண்டு மாதர்களை, வேட்ட-திருமணம் செய்துகொண்ட, பான்மை-முறைமை, இணங்க-பொருந்த, ஓர்-ஒப்பபற்ற சிங்கடிவனப் பகை எனும் இரு பெண்கள், பயலாமல்-பெற்றெடுக்காமல், பயந்த-பெற்றெடுத்த, தொண்டர் - சுந்தரர், எழுவகையுளார்-பத்தராய்ப் பணிவார், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே சேர்த்தார், திருவாரூர்ப் பிறந்தார், முப்போதும் திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலும் அடிச்சார்ந்தார், பொன்-அழகிய, ஏத்தெடுத்தல்-போற்றுதல்.

**விளக்கம்** இறைவர் பிறப்பு இறப்பு அற்றவர். பிறவா யாக்கைப் பெரியோன் எனச் சிலம்பில் குறிக்கப்பட்டவர். "பிறப்பிலார், இறப்பிலார் பிணை ஒன்று இல்லார்," "ஈறிலாத ஈசன்" "இறப்பொடு பிறப்பிலானை, என்று திருமுறைகளும் கூறுகின்றன. விநாயகர் திருவரங்கத்தில் கோயில் கொண்டிருப்பதற்குரிய காரணம் இன்னது என்பதைக் காளமேகம் குறிப்பிடும்போது

"தந்தை பிறந்திறவாத் தன்மையான் தன்மாமன்
வந்துபிறக்கும் வன்மையினால் முந்தொருநாள்
வினுக்கு வேளை எரித்தான் மகன்மாமன்
சாணிக்கு வந்திருந்தான் காண்"

என்று பாடிய பாட்டும் சிவபெருமான் இறவாதவன் என்பதைக் காட்டும்.

இதனால்தான் ஈண்டு "நித்தராய்" எனப்பட்டார். இறைவர் என்றும் தில்லையில் நடனம் புரிபவர். இவர் நடனம் புரிந்திலரேல், உலகில் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்கள் நடைபெறா: மக்களை ஆனந்த வரநிதியில் திளைக்கச் செய்யவே இறைவர் நடனம் புரிகின்றனர். இதனை முறையே.

தோற்றம் துடிஅதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் — ஊற்றமர்
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு

என்றும்,

மாயை தனைஉதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கி அருள்தான் எடுத்து — நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான்அழுத்தல்
தானெந்தை யார்பரதம் தான்

என்றும் உண்மை விளக்கம் உரைத்தல் காண்க.

சேக்கிழாரும், "மாதொரு பாகம் நோக்கி மன்னு சிற்றம் பலத்தே ஆதியும் நடுவும் இல்லா அற்புதத் தனிக்கூத்தாடும் நாதனர்" என்றும் குறிப்பிட்டுள்ளனர். இதுகுறித்தே ஈண்டு, "நித்தராய் மன்றுள் நடம் நவில்வார்" என்றனர். இறைவர் திருநீற்றினைப் பெரிதும் விரும்புபவர் திருமுறைகள் "செய்ய மேனி வெளிய பொடிப்பூசுவர்" சுண்ணவெண்ணீ துதைந்திலங்கு நூலுடையான். "பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறு" "கங்காளன் பூசும் கவசத் திருநீறு" என்று கூறுதலால், இறைவர் திருநீற்று விருப்பன் என்பது புலனுதல் காண்க. அதனுல்தான், "உவக்கும் வெண்ணீற்றொளி" என்றனர். நீறு ஒளிதருவது என்பதைச் சேக்கிழார் பல இடத்தும் பேசியுள்ளனர். "மேனி மேல் நிரந்த நீற்றொளி" என்றனர். பெரும் நீற்றொளி நில ஒளி போன்றது என்பதை "அண்ணல் வெண்ணீற்றின் பேர் ஒளி போன்றது நீள் நிலா" என்றும் கூறினர். இதனை உட்கொண்டே ஈண்டு "வெண்நீற்றொளி நிலா ஒளி" என என்னப்பட்டது.

இப்பாட்டின் பின் அடிகள் சேக்கிழார் பெருமான் நிரம்பத் திருநீறு அணிந்து, குவளை மலர் மாலை புனைந்து, உருத்திராக்கம் அணிந்து பொலிந்தார் என்பதை உணர்த்து கின்றன. இந்நிலையினை அணிகள் பல பொதுளத் திரு பிள்ளை அவர்கள் தம்கற்பனைகள் அழகுறப் பொருந்தப் பாடியுள்ள னர். குவளைமலர் மாலையைக் கண்ட வண்டுகள் அம்மலரின்

தேனைப் பருக வந்தடைந்தனபோல, உருத்திராக்க மாலை சேக்கிழார் கழுத்தில் பொலிந்தன என்பார், "குவளை பொலிய இன்தேன் நிரம்ப உண அளி அடைந்தாங்கு அத்தராய்க் கண் மணித் தொடைபொலிதர" என்றனர். ஆகவே, இவ்வடிகளில் மயக்க அணியும், தற்குறிப்பு ஏற்ற அணியும் அமைந்திருத்தலைக் காணவும். அளி, (வண்டு) உருத்திராக்கம் போன்றது என்பது உவமை அணி. ஐம்பெருங் குரவர்களுள், ஞானாசாரியரும் ஒருவர். சேக்கிழார் ஆசிரிய முறையில் இருத்தலின் அத்தராய் என்றனர். அத்தர் என்பது தந்தையைக் குறிக்கும் சொல்லேயாயினும், ஈண்டு ஆசாரியர் என்ற பொருளையே பொருத்தலாம். தலைவர் என்ற பொருளையும் கொள்ளலாம். சேக்கிழாரின் உடல் அழகைக் கருதி "அம்புயத்தவன்" என்றனர். அதாவது, "அழகிய தோள்களை உடையவர்" என்பதாகும். அல்லது தாமரை மலரில் விளங்கும் பிரம்மனைப் போன்றவர் எனினும் ஆகும். இதனால் பிரம்மன் திருநீறும் உருத்திராக்கமும் அணிந்திருந்தான் என்பதும் புலனாகிறது. "வானவர்மேலது நீறு" என்பது தமிழ் மறை அன்றோ? குன்றத்தூர் அளவிலாத வளங்களைப் பெற்றது என்பார், "அளவா வளம் துன்று குன்றை நகர்" என்றனர். மேலும் இந்நகர், நகர்க்கு வேண்டும் வளத்தை யுடையது என்னும் பொருளில், "அளவாம் வளம் துன்னு" என்று கூறினும் அமையும். இத்துடன் இன்றி, இக்குன்றத்தூர் விரும்பும் தகையது என்பார் போல், "நம்பு குன்றை" என்றனர். "நம்பும் மேவும் நசையா கும்மே" என்பது தொல்காப்பியம். ஆதலின், நம்பு என்பதற்கு விரும்புதல் என்று பொருள் கூறப்பட்டது. இந்நகரில் வாழ்பவர்கள் எவராலும் நம்புதற்குரியவர்கள் என்ற பொருளில், "நம்பு" எனும் சொல் அமைக்கப்பட்டது என்று கூறினாலும் பொருத்தமே. "குன்றை" என்பது குன்றத்தூர் என்பதன் மரூஉ வழக்காகும். சேக்கிழார் பெருமானார் ஆளியே-சிங்கமே ஆனாலும், அன்பும் இரக்கமும் உடையார் ஆதலின், அருள் ஆளியார்" எனப்பட்டார்.

"பத்தராய என்றெடுத்தருள் திருக்கவி" என்றது திருத் தொண்டத் தொகையில் உள்ள பத்தாவது பாட்டாகும்.

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கும் அடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே

என்பது.

சுந்தரர் தனித்தனி அடியார்கட்குத் தாம் அடிமை என்று கூறியிருப்பினும், முற்ற முடிய எல்லா அடியார்களையும் கூடி முடித்ததாக அமையாது. ஆகவே அவர், பத்தராய்ப் பரமனைப் பணிவார், பாடுவார், சித்தத்தைச் சிவன்பால் வைத்தார். திருவாரூரில் பிறந்தார், முப்போதும் இறைவன் திருமேனியைத் தீண்டிப் பூசிப்பார். திருநீறு பூசியோர், தமக்குப் பின்னால் இறைவன் திருவடித் தொண்டர் ஆயினார் எவர்களாயினும் அவர்கட்கெல்லாம் தம் பரந்த மனப் பான்மையால் அடியேன், அடியேன் என்று பாடிக் காட்டி இருக்கின்றார் எனக் கொண்டு அப்பாடல் அருள்பாடலாகவும் திருப்பாடலாகவும் இருத்தலின் திரு பிள்ளை அவர்கள், "அருள் திருக்கவி" என்றனர்.

திருநாவலூரர் தாம் விரும்பிய வண்ணம் இறைவர் துணையால் பரவையார், சங்கிலியார் ஆகிய இரு மாதர்களை மணந்தனர். மணந்தும் அவ்விருவர் வாயிலாகப் பிள்ளைப் பேற்றை உற்றிலர். என்றாலும், இரு பிள்ளைகட்குத் தந்தை யார் ஆயினர். அப்பிள்ளைகள் கோட்புலியார் தம் மக்களாகிய சிங்கடி, வனம்பகை எனும் இருவர்கள். இவர்களைக் கோட்புலி யார் நம்பி ஆரூரர் முன் நிறுத்தி, அவர்களை அடிமைகளாக ஏற்றருள வேண்டியபோது, அவ்வேண்டுகோளை மறுத்து மக்களாக ஏற்று அருளினர். இதனைச் சேக்கிழார்,

அடியேன் பெற்ற மக்கள்இவர்
அடிமை யாகக் கொண்டருளிக்
கடிசேர் மலர்த்தாள் தொழுதுய்யக்
கருணை அளிக்க வேண்டும்எனத்
தொடிசேர் தளிர்க்கை இவர்எனக்குத்
தூய மக்கள் எனக்கொண்டப்
படியே மகண்மை யாக்கொண்டார்
பரவை யார்தம் கொழுநனார்

என்று பாடி அறிவித்துள்ளனர்.

மேலும், சுந்தரர் அவர்களை மகவாய் ஏற்றுக்கொண்டு இன்புற்றதையும் அருண்மொழித் தேவர்,

கோதை சூழ்ந்த குழலாரைக்
குறங்கின் வைத்துக் கொண்டிருந்து
காதல் நிறைந்த புதல்வியராம்
கருத்துள் கசிவாம் அணைத்துச்சி
மீது கண்ணீர் விழமோந்து
வேண்டு வனவும் கொடுத்தருளி
நாதர் கோயில் சென்றடைந்தார்
நம்பி தம்பி ரான்தோழர்

என்று பாடி யருளினர்.

இவை சேக்கிழார் கூற்றுக்களே ஆயினும், சுந்தரரே தம் திருவாக்கால் தம்மை, "சிங்கடி அப்பன்" "வனப்பகை அப்பன்" என்று பாடியும் அறிவித்துக் கொண்டனர். இதனை முறையே திருநாட்டியத்தான்குடிப் பதிகத்தில், "சேடார் பூங்குழல் சிங்கடி அப்பன்" என்றும், திருநாட்டுத் தொகைப் பதிகத்தில், "வனப்பகை அப்பன் வன்றொண்டன்" என்றும் பாடியிருத்தலைக் காணவும்.

இன்னோரன்ன காரணங்களால் தாம் இருவரை மணந்ததற்கு ஏற்ப இரு பெண் பிள்ளைகளைப் பெற்றெடுத்த தந்தையர் ஆயினும், இவ்விரு பெண்களும் பரவையார்க்கும், சங்கிலியார்க்கும் பிறவாதவர்கள் ஆதலால், திரு பிள்ளை

அவர்கள் சுந்தரரை வியக்கும் முறையில், ''இருபைங் கோதையாரை வேட்டபான்மைக் கிணங்க ஓர் இரு புதல்வி யார்தமைப் பயவாமலே பயந்த'' என்றனர். இப் பெண் மணிகள் பேரன்பராம் கோட்புலியார் பெற்ற பெண்கள் ஆதலாலும், பேரறிவுப் பெருமானுராகிய சுந்தரரின் அன்புப் பெண்கள் ஆதலாலும் ஒப்பற்ற நிலையினை உற்ற மையின், ''ஓர் இரு புதல்வியார்'' எனப்பட்டார்.

சுந்தரர் பரவையாரையும், சங்கிலியாரையும் வேட்ட னர் (மணந்தனர்) ஆயினும், வேட்டே (விரும்பியே) பெற்றனர் ஆதலின், ''பைங்கோதையாரை வேட்ட, என்ற னர். அருள்மொழித்தேவர் அருள் வாக்காலும் இக்கருத்துப் புலனாகிறது.

விரவுபெருங் காதலினுல்
மெல்லியலார் தமைவேண்டி
அரவின்ஆ ரம்புனைந்தார்
அடிபணிந்தார் ஆரூரர்

என்றும்,

இங்கு நுமக்குத் திருமாலை
தொடுத்தென் உள்ளத் தொடைஅவித்த
திங்கள் வதனச் சங்கிலியைத்
தந்தென் வருத்தம் தீரும்என

என்று சேக்கிழார் பாடிக் காட்டலைக் காண்க.

சுந்தரரைக் கோட்புலியார் தம் மக்களை அடிமையாக ஏற்றருள வேண்டினர். அந்நிலையில் சுந்தரர் அவர்களைத் தம் மக்களாகவே ஏற்றார். இதனைச் சேக்கிழார் பாடல் கொண்டு தெள்ளத் தெளியக் கண்டோம். இவர் பரவை யாரைக் கண்டு மோகம் கொண்டும், ''கண்ணுதலைத் தொழும் அன்பே கைக்கொண்டு செல உய்ப்ப'' என்று சேக்கிழார் கூறுதலாலும், பரவையாரைக் கண்டபோது, ''சிவன் அருளோ'' என்று நினைத்தலாலும், ''ஈசன் அருள்

எந்நெறிச் சென்றதோ! எம்பிரான் அருள் எந்நெறிச் சென்றதோ! எந்தையார் அருள் எந்நெறிச் சென்றதோ'' என்று இறைவர் அருளையே சிந்தித்தனர் ஆதலாலும், இவர் தூயர் என்பார் சுத்தராய் என்றனர். இவரது தூய தன்மையைச் சிவப்பிரகாச சுவாமிகள்,

செல்வநல் ஒற்றி ஊரன்
    செய்யசங் கிலியால் ஆர்த்து
மல்லலம் பரவை தன்கண்
    மாழ்குற அமிழ்த்து மேனும்
அல்லுநண் பகலும் நீங்கா
    தவன்மகிழ் அடியில் எய்தி
நல்லஇன் படைந்தி ருப்பன்
    நம்பிஆ ரூரன் தானே

என்று பாடிப் பரவியுள்ளனர்.

இவர் பெருமிழலைக் குறும்பரால் வணங்கப்பட்ட பெருமைக்குரியவர். இதனைச் சேக்கிழார்,

மையார் தடங்கண் பரவையார்
    மணவாளன்தன் மலர்க்கழல்கள்
கையால் தொழுது வாய்வாழ்த்தி
    மனத்தால் நினைக்கும் கடப்பாட்டில்

என்றும், ''பரவை கேள்வன் பாதமுறக் கயிலைப் பொருப்பர் அடிமிடைந்த மிழலைக் குறும்பர்'' என்றும் அறிவித்துள்ளனர். சிவப்பிரகாசர், ''துறந்த முனிவர் தொழும் பரவைத் துணைவா'' என்றும், 'பெருமிழலைக் குறும்பர் எனும் பரமயோகி பெரிது உவந்து உன் திருவடித் தாமரையைப் போற்றி விரை மலர் தூய் வந்தனை செய்கின்றான்'' என்றும் அறிவித்துள்ளனர். ஆகவே, சுந்தரர் தூயராக இலர் எனில் இந்நிலையினை அடைய ஒண்ணுமோ!

சுந்தரருக்குரிய பெயர்களுள் வன்தொண்டர் என்ற பெயரும் ஒன்று. இறைவருடன் வன்மையாகப் பேசிப் பின் தொண்டர் ஆயினமையின் வன்தொண்டர் எனப்பட்டார்.

சுந்தரர் தம் திருமணத்தில் வேதியராக வந்த இறைவரிடம் 'பித்தனோ மறையோய்' "ஆளாய் அந்தணர் அடிமை செய்தல் என்ன முறை? பழைய மன்றுடி போலும் வெண்ணெய் நல்லூரராயேல் உன்பிழை நெறிவழக்கை ஆங்கே பேச நீ போதாய்" என்றெல்லாம் வன்மொழி கூறியதைக் காண்க. இவற்றை இறைவர் அன்பு மொழிகளாக ஏற்றுக் கொண்டு "மற்றுநீ வன்மை பேசி வன்தொண்டன் என்னும் நாமம் பெற்றனை" என்று அருளிச் செய்து வன்தொண்டர் என்னும் தீட்சா நாமமும் ஈந்தருளினர். தமக்கு வன் தொண்டன் என்னும் திருப்பெயர் அமைந்திருப்பதைச் சுந்தரரே 'வனம் பகை அப்பன் வன்தொண்டன், வன்தொண்டன் ஊரன்" என்று தம்பதிகங்களில் பாடியுள்ளனர். ஆகவே, ஈண்டு வன்தொண்டர் எனக் குறிக்கப்பட்டார்.

சுந்தரர் வன்தொண்டரே ஆயினும் இறைவர்க்கு இன் தொண்டரே. இவர் இன்தொண்டர் என்றதனால்தான், இறைவர் இவரைத் தோழராக ஏற்றனர். இதனைச் சேக்கிழார்,

வாழிய மாமறைப் புற்றிடங்கொள் மன்னவர்
    ஆர்அரு ளால்ஓர் வாக்குத்
தோழமை ஆகஉனக்கு நம்மைத் தந்தனம்
    நாம்முன்பு தொண்டு கொண்ட
வேள்வியில் அன்றுநீ கொண்ட கோலம்
    என்றும் புனைந்துநின் வேட்கைதீர
வாழிமண் மேல்விளை யாடுவாய் என்றுரூார்
    கேட்க எழுந்த தன்றே

என்று கூறியுள்ளனர். மேலும், இவரைச் சங்கிலியாருக்கு அறிமுகப் படுத்தும் போது,

சாரும் தவத்துச் சங்கிலிகேள்
    சால என்பால் அன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட
    தவத்தான் வெண்ணெய் நல்லூரில்

பாரும் அறிய யான்ஆள
உரியான் உன்னை எனைஇரந்தான்
வார்கொள் முலையாய்! நீஅவனை
மணத்தால் அணைவாய் மகிழ்ந்தென்றூர்

இப்பாடலாலும் இவர் இன்தொண்டர் என்பது பெறப் படுகிறது.

''பத்தராய்'' என்ற பாடலில் உள்ள ஆத்தனை பேரும் துதிக்கப்பட வேண்டியவர்கள். ஆதலின், ''தழுவித் துதிக்க வைத்தவர்கள்'' என்ப்பட்டனர். இவர்கள் தொகையடி யார்கள். ஒவ்வொரு தனி அடியார்கள் அல்லர். இப்பாடலில் குறிப்பிடப்பட்ட ஏழுதொகை யடியார்கள் பத்தராய்ப்பணி வார், பரமனையே பாடுவார்கள், சித்தத்தைச் சிவன்பால் வைத்தவர்கள், திருவாரூர்ப் பிறந்தவர்கள், முப்போதும் திருமேனி தீண்டுபவர்கள், முழுநீறு பூசியவர்கள். அப்பாலும் அடிச் சார்ந்தவர்கள். எழுவர் என்னுது எழுவகையுள்ளார், என்று கூறி இவர்கள் தொகையடியார்கள். என்பதை நன்கு உணர வைத்தார். இவர் திருவடிகள் எல்லாப் பேறுகளையும் பெறு நற்கும் வழியாக இருத்தலின் ''பொன்பதம்'' என் றனர். இதனுல்தான் சேக்கிழார், அடியார் திருவடிகளைத் தலைமேல் வைப்பாம் என்று கூறிக்கொண்டே செல்வர்.

இத்தொகையடியார்கள் தனியடியார்களைப் போல் வரலாற்றுக் குறிப்புடையவர்கள் அல்லர். இவர்களைப் பொது வகையில் பற்றிக் கூறவேண்டுமானுல் கீழ் வருமாறு கூறலாம்.

**பத்தராய்ப் பணிவார்** என்பவர்கள் அடியார்களைக் கண்டு ஆனந்தம் அடைவர். அவர்பின் சென்று தொண்டு செய்ய விரும்புவர். அவர்களிடம் இன் மொழி பேசுவர். சிவபூசை செய்பவர்களைப் பார்த்துப் பார்த்து இன்புறுவர். தாம் செய்யும் எச்செயல்களையும் சிவார்ப்பணமாகவே செய்வர். சிவபெருமான் சரித்திரங் களைக் கேட்பர். ஈசனை எண்ணி எண்ணி உருகுவர். கண்ணீர் வடிப்பர். உடல் சிலிர்ப்பர். எந்நிலையிலும் இறைவனை

மறவர். போலிவேடம் புனையாதவர். இவை இப்பெருமக்கள் நிலை. இன்ன ஊரினர், மரபினர் என்று அறுதியிட்டு உறுதியாகக் கூறப்படா நிலையினர். என்றாலும், நம்பி ஆண்டார் நம்பிகளும் சேக்கிழாரும் இவ்வடியார்களைத் திருவாரூர் இறைவன் திருவடிகளைப் போற்றும் மெய் அன்பர்களே எனக் கூறியுள்ளனர். சேக்கிழார் இவர்களைத் திருவடி போற்றும் தொண்டர்கள் என கூறியுள்ளனர்.

**பரமனையே பாடுவார்** என்பர்கள் தென்மொழி வடமொழிகளைப் பயின்றவர்கள். அப்பயிற்சியால் அரனையே பாடுவது என்பது உணர்ந்து அவனையே பாடுவார்கள். இவர் நடராசரைப் பாடுபவர்கள் என்று நம்பியாண்டார் நம்பிகள் குறித்துள்ளனர். "வகுத்த மதில் தில்லை அப்பலத்தான் மலர்ப்பாதம் மேல் உகுத்த மனத்தொடும் பாடவல்லோர்" என்பது நம்பியாண்டார் வாக்கு. ஆனால், சேக்கிழார் பொதுப்பட, "பன்றியுடன்புட் காணாப் பரமனையே பாடுவார்" என்றனர்.

**சித்தத்தைச் சிவன்பாலே வைத்தவர்** என்பவர்கள், சிவத்தை அடைந்த உள்ளத்தவர்கள். நம்பியாண்டார் நம்பிகள் இவர்களைப் பொதுவாகச் சிவபெருமானிடம் உள்ளத்தைப் பதியவைத்தவர்கள் என்பதை "மத்தும் வைத்தான் திருப்பாதக் கமல மலரடிக் கீழ்ச் சித்தம் வைத்தார" என்று குறிப்பிட்டுள்ளனர். ஆனால், சேக்கிழார் பெருமானார், "தனிமன்றுள் ஆரண காரணக் கூத்தர் அடித்தொண்டின் வழி அடைந்தார்" எனக் கூத்தப் பெருமானிடத்தில் உள்ளம் வைத்த உறுதியினை உரைத்துள்ளனர்.

**திருவாரூர்ப் பிறந்தவர்கள்** என்பவர்கள் திருவாரூரில் பிறந்தவர்கள் அனைவருமே ஆவார். இவர்கள் யாவரும் சிவ கணங்கள் என்பது சைவ மரபினர் கருத்து. இவர்களை வெறுஞ்சிவ கணத்தார் என்பர் நம்பி ஆண்டார் நம்பிகள். "செல்வன் சிவகணத்துள்ளவர்" என்பது அவர் வாக்கு. ஆனால் சேக்கிழார், அவர்கள் கயிலைச் சிவனார் கணங்கள்

என்று குறிப்பிட்டுள்ளனர். "திருக்கயிலை வீற்றிருந்த சிவ பெருமான் திருக்கணத்தார்' என்று கூறியுள்ளதைக் காண்க.

**முப்போதும் திருமேனிதீண்டுவார்** ஆவார் சிவவேதி கர்கள். இவர்கள் இறைவனைக் காலை மாலை நண்பகல், ஆகிய மூன்று காலங்களிலும் தொட்டுப் பூசை செய்யும் புனிதர்கள். முப்போதும் என்பது சென்ற காலத்தினும், நிகழ் காலத்திலும், வருங்காலத்திலும் பூசித்து, பூசிக்கின்ற பூசிக்கும் பேறு பெற்றவர்கள் என்றும் சேக்கிழார் இவர் களைப் புகழ்கின்றனர். நம்பியாண்டார் காலை, பகல், மாலை என்ற மூன்று வேலைகளில் பூசிப்பவர் என்று குறித்துச் சென்றனர்.

**முழுநீறு பூசிய முனிவர்கள்** என்பவர்கள் திருநீற்றையே சிவபெருமானுகக் கொண்டு அதனை உடல் முழுதும் பூசிப் பூரிப்பவர்கள். பூசும் நீறுபோல் உள்ளமும் தூய்மையர். இங்ஙனம் நீற்றைப் பூசியதனுல் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களை அறுத்தவர்கள். இத்தொகை அடியார் களைத் திருவாரூர் அடியார்களாக நம்பியாண்டார் நம்பிகள் கூறியுள்ளனர். "ஆரூர் அமர்ந்த அரனடிக் கீழ் இலகு வெண் ணீறும் தம் மேனிக் கணியும் இறைவர்களே" என்பது அவரது வாக்கு. சேக்கிழார் பொதுப்பட, "புவியதனின் உடையானைப் போற்றி நீற்றை ஆதிவருமும்மலமும் அறுத்த வாய்ம்மை அருமுனிவர் முழுவதும்மெய் அணிவர் அன்றே" என்றருளியுள்ளார். நம்பியாண்டார் கருத்துக்கு இயைந்த அடியும் சேக்கிழார் வாக்கில் உண்டு. அஃது, "அம்பலத்தே உலகுய்ய ஆடும் அண்ணல் உவந்தாடும் அஞ்சினையும் அளித்த ஆக்கள்" என்பது.

**அப்பாலும் அடிச்சார்ந்தார்** என்பவர்கள் சுந்தரர் காலத்துக்கு முன்பு இருந்தவர்களும், அவர் காலத்தில் இருந் தவர்களும் ஆகிய அடியார்களே அன்றி, அவர் காலத் திற்குப் பிறகு இறைவனடி உற்ற எல்லா அடியார்களும் ஆவார். சேக்கிழார் இவர்கள் யார் என்பதைக் கூறும்போது,

மூவேந்தர் தமிழ்வழங்கும் நாட்டுக் கப்பால்
முதல்வனார் அடிச்சார்ந்த முறைமை யோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையில் கூறும்
நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும்
பூவேய்ந்த நெடுஞ்சடைமேல் அடம்பு தும்பை
புதியமதி நதிஇதழி பொருந்த வைத்த
சேவேந்து வெல்கொடியான் அடிச்சார்ந் தாரும்
செப்பியஅப் பாலும்அடிச் சார்ந்தார் தாமே

என்று கூறினார். ஆனால், நம்பி ஆண்டார் நம்பிகள், அவர்களைச் சிவகணத்தார் என்றும், சுந்தரர் குறிப்பிட்ட அடியார்கட்குப்பின் சந்திர சேகரப் பெருமான் திருவடியுற்றாரும் என்று கூறியுள்ளனர். இதனை "நாவலூரர் மன்னவன் தொகையில் பிறைசூடி பெய் கழற்கே ஒருக்கும் மனத்தொடு அப்பால் அடிச்சார்ந்தார்" என்றும், "தெரிக்கும் அவன் சிவன் பல் கணத்தோர்" என்றும் கூறியிருத்தலைக் காணவும்.

சேக்கிழார் தமிழ் நாட்டில், சைவ சமயத்தைச் சார்ந்தவர்களையும், சுந்தரருக்குப்பின் இறை அன்பில் ஈடுபட்டு அவன் திருவடியில் புகுந்தவர்களையும் மட்டும் குறிப்பிட்டிலர். தமிழ் நாட்டுக்குப் புறம்பே எந்நாட்டில் பிறந்தவர்களாயினும், எம்மதத்தினராயினும் இறைவனடியில் அன்பு கொண்டு இணைந்தவர்கள் யாவரையும் அப்பால் அடிச்சார்ந்தார் என்றே குறிப்பிட்டுச் சென்றார். இது கருதியே இறைவரைப் பொதுச் சொல்லால் முதல்வனார் என்றும், மூவேந்தர் தமிழ் வழங்கும் நாட்டுக்கப்பால் முதல்வனார் அடிச்சார்ந்த முறைமையோர் என்றும் கூறிய அடிகளை ஊன்றிப் பார்க்கவும். பிறமதத்தவர்கட்கும் சிவபெருமானே முதல்வன் என்பது எவரும் ஒப்பமுடிந்த முடிபாகும். தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி என்றனர் மணிமொழியார்.

விரிவிலா அறிவி னோர்கள் வேறொரு சமயம் செய்து
எரிவினால் சொன்னா ரேனும் எம்பிராற்கு ஏற்ற தாகும்

என்றனர் அப்பர் பெருமானார். மேலும் அவரே, "ஆர் ஒருவர் உள்குவார் உள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்" என்றும் கூறியுள்ளனர்.

உரைசேரும் எண்பத்து நான்குநா றாயிரமாம் யோனி பேதம்
நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் நின்றான்

என்றனர் திருஞானசம்பந்தர். அருண் நந்தி சிவாசாரியார்,

யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே
மாதொரு பாகனார் தாம்வருவர்

என்றனர்,

இன்னோரன்ன எடுத்துக் காட்டுக்களால் சிவபெருமானே அவ்வச் சமயக் கடவுளராக இருந்து அருள் புரிதலின், அவ்வச் சமயத்தவர்களும் இறையடியில் அன்புடையராய் அவனைச் சார்ந்தவர்கட்கும் தாம் அடிமையாள் என்ற குறிக்கோளுடன் தான் நம்பி ஆரூரர் குறித்தனர் என்ற குறிக்கோளை நன்கு உணர்ந்து கூறிய சேக்கிழார் பெருமான் தம் நுண்ணறிவுத் திறனை என்னென்று வியப்பது! இதனால் சைவ சமயத்தின் ஏற்றத்தை உணர்த்திய அறிவுத் திறனையும் நாம் வியக்காமல் இருக்க முடியாது. இறைவனும் சைவ சமயத்திற்கும் குறுகிய ஒரு நாட்டிற்கும் மட்டும் உரியவர் அல்லர். சிவபெருமான் உலக முழுமைக்கும் உரியவர் என்ற கருத்தினால்தான் சேக்கிழார் தம் நூலின் ஈற்றில்,

மன்று ளார்அடி யார்அவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்

என்று முடித்துக் காட்டினார்.

ஈண்டு, திரு பிள்ளை அவர்களின் கவிச் சிறப்பையும் அறிதல் வேண்டும். இதுவரையில் தனி அடியார்களைச் சுட்டிப் பாடிய பாடல்களில் ஒரு சொல்லால் மட்டும் அவர்களின் திருவடிகளை வணங்குவாம் என்று பாடியுள்ளனர். ஈண்டுத் தொகை அடியார்களைக் கூறுகிறார். ஆதலின், அவர்கள் பற்பலர் என்றதனால், ஒரு சொல்லால் வணக்கத்தை அறிவிக்

காமல், தொழுது ஏத்தெடுத்தல் செய்வாம் என்று பாடி இருப்பதைக் காணவும்.

சேக்கிழார் ஒவ்வோர் அடியார்களின் திருவடிகளையும் வணங்கிக் கூறும் இயல்பினர். ஆனால், தொகையடியார்களில் திருவடிகளை வணங்கிப் பாடும் முறையினைக் கைக்கொண்டிலர். ''பத்தராய்ப் பணிவார்தம் பரிசினைப் பகருவாம்'' என்றும், ''பரமனையே பாடுவார் தம்பெருமை பாடுவாம்'' என்றும், (சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் புராணத்தில் இக்குறிப்பும் இல்லை.) திருவாரூர்ப் பிறந்தார்களைப் பற்றிச் செப்புகையில் ''சிறியேனால் உரைக்கலாம் தகைமையதோ'' என்றும், முப்போதும் திருமேனி தீண்டுவார்களைப் பற்றிக் கூறுகையில் ''அப்பெருந்தகையார் குலப்பெருமையாம் புகழும் பெற்றியதோ'' என்றும், (முழுநீறு பூசிய முனிவர் பற்றி இத்தகைய குறிப்புக் காணப்பட்டிலது.) ஆனால், அப்பாலும் அடிச்சார்ந்தார்களைப் பற்றிக் கூறும்போது மட்டும், ''முடியாப் பேறு பெற்றவர்தம் கழல்பரவ அடியேன் முன்னைப் பிறவியினில் செய்த தவம் பெரியவாமே'' என்று பாடிப் பரவியுள்ளார்.

சேக்கிழார் இவ்வாறு அப்பாலும் அடிச்சார்ந்தார் திருவடிகட்கு மட்டும் வணக்கம் கூறி, ஏனையவர்கட்கு இவ்வாறு கூறிற்றிலரே எனில், இதற்குரிய காரணத்தையும் ஈண்டே பகருவாம். ''அப்பாலும் அடிச்சார்ந்தார் சைவ உலக அடியார்கள் மட்டும் அல்லர். எல்லா உலக அடியார்களும் ஆவார். ஆகவே, அவர்கள் சைவ மக்களுக்குப் புறம்பானவர்கள். அதனால்தான் சேக்கிழார் வணங்கிற்றிலர்,'' என்று உலகம் கூறவும் கூடும் என்று நினைந்து தம் பெருந்தகைமை தோன்றவே ''பெற்றார்தம் கழல்பரவ அடியேன் முன்னைப் பிறவியினில் செய்ததவம் பெரியவாமே'' என்று பாடிக் காட்டினர். ஏனைய தொகையடியார்களின் திருவடியைப் போற்றுதலைக் கூறாமல் போனதற்குக் காரணம், தொகையடியார்கள் பலர் ஆதலின், அவர்களின் பெருமையில் திளைத்து நின்றமையின் தம்மை மறந்த நிலையில் சென்று விட்டனர் என்க. (10)

## மன்னிய சீர்மறை நாவன்

11. மன்னிய திருப்பாட்டில் ஆகாரம் முதலிய
மறந்திராப் பகல்முயன்று
வையத்து வாழ்வார்கள் நோக்காத வண்ணம்நவ
மணிஆ லயம்புரிந்து
மின்னிய சடைப்பரமர் பிறதளி மறுத்தடை
விதம்கண் டுவந்தபூசல்
வித்தகர்முன் மேயஎழு வோரும்எம் இதயத்து
மேவவைத் தேத்தெடுப்பாம்
பன்னியதொ கையும்வகையும் முதல்ஆத லால்முதல்
பகர்சைவ ரேஅருளினர்
பரவுவிரி இறுதிஆ தலின்இறுதி யார்எனப்
படுசைவ ரேஅருளினர்
துன்னிய பொருத்தம்இது என்றுலகம் மகிழ்தரத்
தொண்டர்வர லாறனைத்தும்
தூவாய் மலர்ந்தஅருள் மொழிவான வனைஆன்ற
தோன்றலைக் காக்கஎன்றே

*(அ. சொ.) பன்னிய-சிறப்பித்துச் சொல்லிய, தொகை-என்பது சுந்தரரது திருத்தொண்டத் தொகை, வகை-நம்பி ஆண்டார் திருத்தொண்டர் திருவந்தாதி, பகர்-கூறு, பரவு-போற்றப்படும், விரி-விரிநூல், இறுதி என்பது தொகை வகை விரி என்னும் முறைவைப்பில் இறுதியாக இருப்பது, துன்னிய-நெருங்கிய, தூ-சுத்தமான, வானவன்-உயர்ந்தவன், தேவன், ஆன்ற-அறிவு, பண்பு முதலானவை நிறைந்த, தோன்றலை-மக்களுள் சிறந்த சேக்கிழாரை, மன்னிய திருப்பாட்டு என்பது திருத்தொண்டத் தொகையின் பதினோராவது பாட்டின் முதற் குறிப்பு, வையத்து-உலகில், வண்ணம்-முறையில், நவ-புதிதான, மணி-அழகிய, பரமர்-சிவபெருமான், தளி-கோவில், அடை-அடைந்த, உவந்த-*

மகிழ்ந்த, பூசல் வித்தகர்-பூசலாராகிய அறிஞர், எழுவோர்-பூசலார். மானியார், நேசர், கோச்செங்கண்ணர், திருநீல கண்ட யாழ்ப்பாணர், சடையர், இசை ஞானியார்.

**விளக்கம்:** சுந்தரர் அடியார்களைப்பற்றிப் பாடிய பாடல்கள் பதினொன்று. இப்பாடல்கள் அடங்கிய பதிகம் திருத்தொண்டத் தொகை என்றே கூறப்படும். ஆகவே, இது தொகை நூல் பகுப்பைச் சார்ந்தது இத்தொகைப் பதிகத்தில் பதினொரு பாடல்கள் இருக்க, நம்பியாண்டார் நம்பி பாடியுள்ள திருத்தொண்டர் திருவந்தாதியில் எண்பத்தைந்து பாடல்கள் உள. ஆகவே, தொகை நூலை வகைப் படுத்திய முறையில் அமைந்துள்ளது திருத்தொண்டர் திருவந்தாதி என்பது பெறப்படுகிறது. ஆனால், சேக்கிழார் பெருமானார் பாடியுள்ள பெரிய புராணம் 4276 பாடல்களைக் கொண்டுள்ளது. ஆகவே, இது விரிநூல் என்பது நன்கு தெளிவாகிறது. இவ்வாறு நூல்கள் தொகை, வகை, விரியாக அமைதல் உண்டு என்பதைத் தொல்காப்பியம்,

தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்
ததர்பட யாத்தலோ டனைமர பினவே

என்று சுட்டிக்காட்டுகிறது.

வகைநூல் என்ற குறிப்பு இந்நூற்பாவில் இல்லையே எனில், அதனைக் குறிப்பாக ஆசிரியர் தொல்காப்பியர் குறித்தார் என்று கோடல் வேண்டும்.

தொகை நூல் செய்தவர் சுந்தரர். அவர் ஆதி சைவ அந்தண மரபினர். இதனைச் சேக்கிழார், "மாதொரு பாகனார்க்கு வழி வழி அடிமை செய்யும் வேதியர் குலத்துள் தோன்றி" என்று சுந்தரர் பிறந்த மரபைச் செப்பியுள்ளனர். சுந்தரரும் தம் மரபு ஆதி சைவ மரபினர் என்ற குறிப்பைத் தம் வாக்கால், "அல்லியம் தாமரைத்தார் ஆரூரன்" என்று பாடிக் காட்டியுள்ளார் தாமரை மாலை அந்தணர்கட்குரியது. மேலும், அவரே "மறையவர் தம்

குரிசில்வயல் நாவலூர் ஊரன்'' என்றும் கூறியுள்ளதையும் காணவும்.

வகைநூலைச் செய்த நம்பியாண்டார் நம்பிகளும் ஆதி சைவ மரபினர். இதனைத் திருமுறை கண்ட புராணம் ''நாரையூரினில் ஆதி சைவ மறையோன்பால், வையம் எலாம் ஈடேறச் சைவம்வாழ மாமணிபோல் ஒரு சிறுவன் வந்து தோன்றி'' என்று கூறுகிறது. அச்சிறுவரே நம்பி யாண்டார் நம்பிகள்.

விரிநூல் செய்த சேக்கிழார் பெருமானார் வேளாள மரபினர். இதனைத் திருத்தொண்டர் புராண வரலாற்று நூலில் வரும் ''அத்தகைய புகழ் வேளாண் மரபில் சேக்கிழார் குடியில் வந்த அருண்மொழித் தேவர்'' எனும் அடிகளைக் கொண்டு உணரலாம். அருண்மொழித் தேவர் என்பது சேக்கிழார்க்குப் பெற்றோர்கள் இட்ட பெயர் ஆகும்.

மக்கள் மரபை அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்று பிரித்துப் பேசும் வழக்கம் நம் நாட்டில் உண்டு. இதனைத் தொல்காப்பியர், ''அந்தணர், அரசர், வணிகர் வேளாளர்'' என்று குறிப்பிட்டுள்ளனர். இந்த முறைவைப் பில் அந்தணர் முதலிலும், வேளாளர் இறுதியிலும் குறிக்கப் பட்டுள்ளனர். முதலில் குறிக்கப்பட்ட அந்தணர் என்ற பகுப்பின்கீழ், தொகைநூல் செய்த சுந்தரரும், வகைநூல் செய்த நம்பிகளும் அமைகின்றனர். இறுதியில் உள்ள வேளாளர் என்னும் பகுப்பில் சேக்கிழார் அமைகின்றனர். அந்தணர்கள் என்று முதலில் குறிக்கப்பெறும் முறை வைப் பில் முதலில் குறிக்கப்பட்டதனால், முதல் நூல் செய்தற்கு அவ்வந்தண மரபில் வந்த இருவர்களும் பொருத்தமானவர் களே. இறுதி நூலாகிய விரிநூல் செய்தற்கு முறைவைப்பில் இறுதியில் வைத்துப் பேசப்பெறும் வேளாள மரபினர் பாடி இருத்தல் மிகமிகப் பொருத்தமாகும். இந்தக் கற்பனை நயத்தினை உட்கொண்டே ஈண்டுத் திரு பிள்ளை அவர்கள்,

பன்னியதொ கையும்வகையும் முதல்ஆத லான்முதற்
பகர்சைவ ரேஅருளினுர்
'பரிவுவிரி இறுதிஆ தலின்இறுதி யார்எனப்
படுசைவ ரேஅருளினுர்
துன்னிய பொருத்தம் இது

என்று பாடிக் காட்டினர்.

ஆதி எவ்வளவு சிறப்புடையதோ அவ்வளவு சிறப்புடையது அந்தம் என்ற அரிய குறிப்பைத் திரு பிள்ளை அவர்கள் குறிப்பிட்டிருப்பதையும் நுண்ணிதின் உணர்தல் வேண்டும். "அந்தம் ஆதி என்பனுர் புலவர்" என்பது சித்தாந்தநூல் கருத்தன்ருே? இது "துன்னிய பொருத்தம் இது" என்ற தொடரில் தொனிப்பதைக் காண்க. மேலும், இங்குக் கூறப்பட்ட கருத்திஞல் அந்தணர் அரசர் வணிகர் வேளாளர்கள் நால்வரும் நாட்டுச் சமுதாய நன்மைக்குத் தமக்குள் வேறுபாடோ, உயர்வு தாழ்வோ இன்றி அரிய செயல் புரிதற்கு உரியவர் ஆவார். சைவத்தைப் போற்றுதலில் வேளாளர் சிறந்தவர் ஆதலின், சைவர் எனப்பட்டனர்.

திருத்தொண்டத் தொகை மிக்க சிறப்புடையது என்ற காரணத்திஞல்தான் "பன்னிய தொகை" எனப்பட்டது. இந்த உண்மையினேச் சேக்கிழார், "தேசம் உய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்" என்று போற்றியுள்ளதால் தெளியலாம். சேக்கிழார் விரிநூல் பாடுதற்குச் சுந்தரர் நூலும், நம்பி அவர்களின் வகை நூலும் துணேயாக அமைந்தன என்பதை,

மற்றி தற்குப் பதிகம்வன் தொண்டர்தம்
புற்றி டத்தெம் புராணர் அருளிஞல்
சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகைஎனப்
பெற்ற நற்பதி கம்தொழப் பெற்றதாம்

அந்த மெய்ப்பதி கத்தடி யார்களே
நந்தம் நாதனும் நம்பிஆண் டார்நம்பி
புந்தி ஆரப் புகன்ற வகையிஞல்
வந்த வாறு வழாமல் இயம்புவாம்.

என்று கூறியுள்ளதைக் காண்க.

சேக்கிழார் தொண்டர் வரலாற்றை அநபாய சோழன் மட்டும் மகிழப் பாடியவர் அல்லர். உலகமே மகிழப்பாடியவர். இதில் ஐயம் இல்லை. அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்களின் இத்தகையவர்கள் என்று பாடியிருக்கும் போக்கே இஃது உலகம் உவக்கும் நூல் என்பது புலனாகிறது.

சேக்கிழார் வாக்குடன் சேக்கிழார் புராணமும் கூடச் சேக்கிழார்க்கு மூல நூல்கள் சுந்தரர் பாடல்களும், நம்பியாண்டார் நம்பிகள் பாடல்களும் ஆகும் என்பதை,

செம்பியர்பூ பதிமகிழ்ந்து வினவிக் கேட்பச்
சேக்கிழார் குரிசில்உரை செய்வார் ஞாலத்
தம்பலவர் திருத்தொண்டர் பெருமை ஆரூர்
அடிகள்முதல் படிஎடுத்துக் கொடுக்க நாவல்
நம்பிபதி னொருப்பாட் டாகச் செய்த
நலமலிதொண் டத்தொகைக்கு நாரைஊரில்
தும்பிமுகன் பொருள்உரைக்க நம்பி ஆண்டார்.
சுருதிமொழிக் கலித்துறைஅந் தாதி செய்தார்

ஆயுமறை மொழிநம்பி ஆண்டார் நம்பி
அருள்செய்த கலித்துறைஅந் தாதி தன்னைச்
சேயதிரு முறைகண்ட ராச ராச
தேவர்சிவா லயதேவர் முதலாய் உள்ள
ஏயகருங் கடல்புடைசூழ் உலகம் எல்லாம்
எடுத்தினிது பாராட்டிற்று என்ன?

என்று கூறுதலால் அறியலாம்.

சேக்கிழார் தொண்டர் வரலாறு அனைத்தையும் சொன்னார் என்று திரு பிள்ளை அவர்கள் கூறியதில் ஓர் அரிய குறிப்புக் காணப்படுகிறது. இதனைச் சிறிது ஈண்டு ஆராய்தல் சிறப்புடைத்து.

சுந்தரர் தம் திருத்தொண்டத் தொகையின் ஈற்றுப் பாடலில் சடையனாரையும், இசைஞானியாரையும் குறிப்பிட்டுள்ள இடத்தில், ஏனைய நாயன்மார்களுக்குக் கூறியது போல அடியேன், அடியேன், என்று கூறாமல், தாம் அவ்

விருவர்கட்குத் திருமகனுர் என்ற அளவில் சடையன் இசை ஞானி காதலன், என்று மட்டும் குறித்துச் சென்றனர். இவ்வாறு நம்பி ஆரூரர் கூறியுள்ள உட்கருத்தை ஆராய்தல் வேண்டும். அப்படி ஆய்கிறபோது, சுந்தரர் சடையனுர், இசைஞானியார் ஆகிய இருவர்களேயும் தம் பெற்ருேர் களாக எண்ணிப் பாடினுர் என்பதும், அவர்களே அடியார் களாகக் கருதிற்றிலர் என்பதும் தெரியவருகின்றன. பெற்ருேர்களேப் பிள்ளேகள் குறிப்பிடுவது தமிழ் நாட்டு மரபு. அம்மரபுபற்றியே இங்ஙனம் கூறினுர் என்க. "இல்லே சடையனுரையும், இசைஞானியாரையும் அடியார்களாகவே கருதினுர் சுந்தரர்." எனில், சுந்தரருக்குப் பழிவருமே அன்றிப் புகழ் வராது. ஏன்? திருஞான சம்பந்தரின் பெற்ருேரை யும், திருநாவுக்கரசரின் பெற்ருேரையும். கூருது தம் பெற்ருேர்கள் இருவரை மட்டும் கூறிச் சுயநலத்தைத் தோற்றுவித்துக் கொண்டார் என்ற காரணத்தால் ஆகும். ஆகவே, அப்பழிவாராதபடி நம்பி ஆரூரரை நாம் காண வேண்டும். ஆகவே, வன்ருெண்டர் தம் பெற்ருேர்களேப் பெற்ருேராகவே கருதிப் பாடினுரே அன்றி, அடியார்களாகக் கருதிற்றலர் என்று முடிவு காணுதல் ஆராய்ச்சிக்கு ஏற்ற தாகும். இன்னும் இதன் விளக்கத்தைக் காண அவாவுவார், அடியேன் எழுதியுள்ள "பொய்யடிமை இல்லாத புலவர் யார்?" என்னும் ஆய்வு நூலில் காணவும்.

சேக்கிழாரது மனம், வாக்கு, காயம் ஆகிய இம்மூன்றும் தூயன. இவற்றின் துணேகொண்டுதான் மன்னன் மனத்தை மாற்ற முடிந்தது. மேலும், இவர் தீயனவற்றைத் தம் வாயால் கூருர். அமங்கலத்தையும் மங்கலமாகவே சொல்ல வல்லவர். கொடூரமான நிகழ்ச்சிகளேயும், நாகரிகமாகவே கூறுபவர். சிலவற்றை வெளிப்படையாகக் கூருமல் மறை முகமாகவே செப்புவர். இவற்றை இவரது நூல் முற்றிலும் காணலாம்.

மெய்ப்பொருள் நாயனுரை முத்தநாதன் குத்தி விட்டான். நாயனுர் எழ ஒண்ணுப் பேருறக்கம் கொண்டார்.

அதாவது இறந்தார். "இதனை புரவலர் மன்றுள் ஆடும் பூங்கழல் சிந்தை செய்தார்" என்கிறார்.

சிறுத்தொண்டர் தம் அருமை மகனை அறுக்கின்றார். அந்த நிகழ்ச்சியில் இருவர் மனமும் பேர் உவகை எய்தி "அரியவினை செய்வார்" என்று சேக்கிழார் கூறியுள்ளனர். இத் தொடர் அரிதலாகிய செயல் என்பதோடு, செயற்கரிய செயல் என்று பொருள் தருதலையும் காண்க.

திருநீலகண்டர் மாதர்களின் இச்சையுள் ஈடுபட்டிருந் ததைக் குறிப்பிடுகையில் "இளமை மீதுர இன்பத் துறையில் எளியர் ஆனார்" என்றும், காரைக்கால் அம்மையார் மணப் பருவம் உற்றதைக் குறிப்பிடுகையில் "இல் இகவாப்பருவம்" என்றும் பாடினர். இன்னோரன்ன காரணங்களால் இவரது வாய் தூய்மை உடையது என்று அறிதலின், திரு பிள்ளை அவர்கள் தூவாய் மலர்ந்த என்று கூறியருளினர்.

திருவள்ளுவர் "வாய்ச்சொல்" என்று கூறியுள்ள தொடர்க்குப் பரிமேலழகர் பொருள் விளக்கம் கண்ட விடத்து, "வாய் என வேண்டாது கூறினார், தீயசொல் பயிலா என்பது அறிவித்தற்கு" என்றனர். பரிதியார் "உபதேசத்தோடு கூடிய நல்லோர் சொல் ஆபத்துக் காலத் துக்கு வைத்த உடைமை போல் உதவும், என்றவாறு" என்று விளக்கினார், "துறந்தாரின் தூய்மை உடையார்" என்ற தொடர்க்கு விளக்கம் தரும்போது. தூய்மை என்பதற்கு "மனம் மாசு இன்மை" என்ற விளக்கம் தந்தனர் காளிங்கர். அதாவது "மனம் வாக்குக் கருமம் என்னும் மூன்றினாலும் தூய்மை" என்பது. அகம் தூய்மை என்னும் தொடர்க்குப் பரிமேலழகர் கண்ட பொருள் "மெய்யுணர்தல்" என்பது, இவ்வாறு பேரறிஞர் கண்ட தூய்மைகளையுடையது சேக்கிழார் வாக்கு ஆதலின் "தூவாய்" என்றனர் என்று கூறினாலும் அமையும்.

வானவன் எனச் சேக்கிழாரை ஈண்டே சுட்டியதன் கருத்துத் தேவேந்திரனுக்குக் கீழ்ப்பட்ட தேவர்கள் என்ற

பொருளில் அன்று. மேலானவன் என்ற பொருளில் ஆகும். சேக்கிழார் மேலானவர் என்ற காரணத்தினுல்தான் இவர் சைவ ஆலயங்களில் அறுபான்மும்மை அடியார்களின் வரிசையில் வைத்துப் பூசிக்கப்படுகிருர். இவரது நூலும் சைவத் திருமுறைகளில் ஒன்ருக வைத்துப் போற்றப் படுகிறது. மேலும், இவர் அநபாயச் சோழனுல் கவரி வீசப் பட்ட பெருமைக்குரியர் ஆயினர். இன்னேரன்ன காரணங் களால் இவர் வானவர் (மேலானவர்) அல்லரோ?

தோன்றல் என்னும் சொல் தமிழில் விகுதி பெருத ஆண்பால் சிறப்புச் சொல் எனக் கூறப்படுவது. சேக் கிழாரும் ஆண் பாலினருள் பெருஞ் சிறப்புடைமையின் தோன்றல் எனப்பட்டனர். ஆன்ற என்னும் சொல் நிறைந்த சான்ற என்னும் பொருளுடையது. சேக்கிழார் அறிவு, தெளிவு. செறிவு, குணம் முதலிய பண்புகள் நிறைந்தவர். நிறைவு ஈண்டு, நற்குணம், நற்செய்கை. கல்வி, கேள்வி இவற்ருல் நிறைந்த நிறைவு. இவ்வாறு பரிமேலழகர் பொருள் காண்கின்ருர்.

ஆன்ற என்னும் சொல்லுக்கே பரிமேல் அழகர் மிகுந்த, மேலான, நிறைந்த, உயர்ந்த, வலிய, சிறந்த, உயர்ந்த அகன்ற, நிரம்பிய என்ற பொருள்களைக் காட்டியுள்ளனர். இன்னேரன்ன காரணங்களால் "ஆன்ற தோன்றல்" எனச் சேக்கிழார் சிறப்பிக்கப்பட்டனர்.

மன்னிய திருப்பாட்டு என்பது திருத்தொண்டத் தொகையின் இறுதியில் உள்ள பதினேராவது பாட்டாகும். அது,

மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்
தென்னவனுய் உலகாண்ட செங்கணுர்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனுர்க் கடியேன்

என்னவனும் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன்திரு நாவலூர்க்கோன்
அன்னவனும் ஆரூரன் அடிமைகேட் டுவப்பார்
ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே

என்பது.

இப்பாட்டில் குறிப்பிடப்பட்டவர்கள் எழுவர். அவர்கள் பூசலார், மங்கையர்க்கரசியார், நேசர், கோச்செங்கட் சோழர்' திருநீலகண்ட யாழ்ப்பாணர், சடையர், இசை ஞானியார், இவர்களையே திரு பிள்ளை அவர்கள் தொகை யாகப் பூசல் வித்தகர்முன் மேய எழுவோரும் என்றனர்.

**பூசலார்** தொண்டை நாட்டில் திருநின்ற ஊரிலே (இது போது தின்னனூர் என்று வழங்கப்படுகிறது) பிராம் மணர் மரபில் பிறந்தவர். வேதாகம கலைகளைப் பயின்றவர். சிவ பக்தி, சிவனடியாரிடத்து அன்பு மிகுதியும் உடையவர் சிவனடியார்கட்கு எந்தவிதமான தொண்டுகளையும் செய்து உவந்தவர், இந்நாயனர் சிவபெருமானுக்கு ஓர் ஆலயம் கட்டவேண்டும் என்ற எண்ணம் கொண்டு, பொருள் தேட முயன்ருர். பொருள் கிட்டிலது. அதனுல் மனத்தாலேயே கோவில் கட்டத் தீர்மானித்தார். நினைந்த வண்ணம் அடித்தலம் மேல் கட்டட அமைப்பு, கோபுரம், மதில், மற்றும் ஆலயத்திற்கு இருக்கவேண்டிய அமைப்புக்கள் அத்தனையையும் மனத்திஞலேயே கட்டி முடித்தார். கோயிலைக் கட்டி முடித்ததோடு இன்றி, இறைவனை அதில் தாபிக்கும் நாளையும் குறித்து விட்டனர்.

இஃது இவ்வாறு நிகழ, காஞ்சியம்பதியில் காடவர் கோன் என்பவர், தாம் ஒரு கோயிலை நிலத்தில் கட்டி, அக் கோவிலில் இறைவரைத் தாபிக்க நாளையும் குறித்து விட்ட னர். அந்நாள் பூசலார் குறித்த நாளே ஆகும். இறைவர் காடவர்கோன் கனவில் தோன்றி, 'அன்பனே, திருநின்றவூர் பூசலார் கோவில் எடுத்துக் குடமுழுக்கு விழா நடத்த ஏற் பாடு செய்துள்ளார். யாம் ஆண்டுச் செல்வோம். நீ

குறித்த நாளில் ஈண்டிரேம். ஆகவே, வேறு ஒருநாளில் விழாவைக் கொள்ளவும்" என்று கூறக் காடவர் கோன் அதிசயித்து, பூசலாரைக் காணப்புறப் பட்டனர். திருநின்றவூரை அடைந்தனர். பூசலார் கட்டிய கோவிலைத் தேடினர்; கண்டிலர். ஆனல் அங்குள்ளாரை விசாரித்தார்..அவர்கள் "அப்படி ஒரு கோவில் இல்லையே" என்றனர். ஆனல், பூசலார் இருக்கும் இடத்திற்கு அரசரை அழைத்துச் சென்றனர், அவரைக் கண்டு மன்னர் வணங்கித் தொழுது "பெரியீர், நீங்கள் கட்டிய கோவில் எங்குள்ளது? அதில் நீர் இன்று.சிவபெருமானைத் தாபிக்கப் போவதாகச் சிவபெருமானே என் கனவில் கூறினர். அக்காட்சியைக் கண்டு வணங்கிப் போற்றவே இங்கு வந்தேன்." என்று பணிவாகக் கூறினர்.

பூசலார் மருண்டார். இறைவரது திருவருளை வியந்தார். வியந்தவர் அரசனிடம் "என்னே, இறைவர் தம் பெருங் கருணை! நான் கோவில் கட்ட எண்ணினேன். பொருள் போதுமானதாகக் கிடைக்கவில்லை. மனத்தால் கட்டலாமா என்று சிந்தித்துக் கட்டினேன். கட்டிய முறை இது." என்று கூறினர். அரசர் கேட்டு மகிழ்ந்து பூசலார் நாயனரை தொழுது போயினர். பூசலாரும் மனத்தால் கோவில் கட்டியது போலவே இறைவரையும் மனத்திலேயே தாபித்து மகிழ்ந்து இறைவன் திருவடியுற்றர்,

இந்நாயனர் மனத்தால் ஆலயங் கட்டிய முறையினைச் சேக்கிழார் "அன்பால், காதலில் கங்குல் போதும் கண்படாது எடுக்கலுற்றர்" என்றனர். "கங்குல்போதும் கண்படாது" என்றதனல் ஊண் உறக்கம் இன்றிக் கோவிலைக் கட்டத் தொடங்கினர் என்பது பெறப்படுகிறது. இது காரணம்பற்றி "ஆகாரம் முதலிய மறந்து இராப் பகல் முயன்று" எனப்பட்டது.

காடவர் கோன் பூசலார் கட்டிய கோவிலைக் காண வந்த போது, ஊரார் அம்மன்னனிடம் "செப்பிய பூசல் கோயில் செய்த தொன்றில்" என்று கூறினர்கள். இதனல் நாயனர் கட்டிய கோவில் யாவர் கண்ணுக்கும் புலப்படவில்லை என்

பது புலனுகிறது: இதனை அறிவிக்கவே இங்கு ''வையத்து வாழ்வார்கள் நோக்காத வண்ணம்'' எனப் பட்டது.

பூசலார் நாயனுர் கட்டிய ஆலயம் இதுவரையில் எவரா லும் கட்டப்படாத ஆலயம். அதோடு அழகிய ஆலயமும் ஆகும். அக்கோயிலின் புதுமை,

அடிமுதல் உபானம் ஆதி ஆகிய படைகள் எல்லாம்
வடிவுறும் தொழில்கள் முற்ற மனத்தினுல் வகுத்து மான
முடிவுறு சிகரம் தானும் முன்னிய முழத்தில் கொண்டு
நெடிதுநாள் கூடக்கோயில் நிரம்பிய நினைவால் செய்தார்.

என்ற சேக்கிழார் வாக்கே நமக்கு நன்கு தெரிவிக்கின்றது. மேலும், அக் கோயில் அழகியதாக இருந்தது என்பதையும் சேக்கிழார் தம் திருவாக்கில்,

தூயியும் நட்டு மிக்க சுதையும்நல் வினையும் செய்து
கூவலும் அமைத்து மாடு கோயில்சூழ் மதிலும் போக்கி
வாவியும் தொட்டு மற்றும் வேண்டுவ வகுத்து

என்று கூறியுள்ளனர். இவற்றை உட்கொண்டே திரு பிள்ளை அவர்கள் ''நவமணி ஆலயம் புரிந்து'' என்றனர், ஈண் டுத் திரு பிள்ளை அவர்களின் பேரறிவுத் திறனை வியக்காமல் இருக்க முடியாது. பூசலார் ஆலயம் எடுந்தார் என்ருே, கட்டினுர் என்ருே கூருமல், ஆலயம் புரிந்து என்றனர். புரிந்து என்னும் சொல்லின் பொருள் ''விரும்பி'' என்பது. இதுவே இதற்குப் பொருள் என்பது ''புகழ் புரிந்தார்'' என்ற திருவள்ளுவர் வாக்கிற்குப் பாமேலழகர் ''புகழை விரும்பினுர்'' என்று எழுதுதல் காண்க. ஆகவே நாயனுர், ஆலயத்தை விரும்பிச் செயல்களைப் புரிந்தார் என்ற அரிய குறிப்பைக் காட்டிய திரு பிள்ளை அவர்களின் மாண்பை என்னென்பது!

இறைவர் காடவர் கோன் எடுத்த கோவிலில் இறை வரைத் தாபிக்க நாள் வைத்தபோது இறைவர் அவர் கனவில்,

நின்றவூர்ப் பூசல் அன்பன்
　　நெடிதுநாள் நினைந்து செய்த
நன்றுநீ டால யத்து
　　நாளைநாம் புகுவோம் நீஇங்
கொன்றிய செயலை நாளை
　　ஒழிந்துபின் கொள்வாய் என்று
கொன்றைவார் சடையார் தொண்டர்
　　கோயில் கொண்டருளப் போனார்.

என்று கூறினார்.

இதனை நன்கு உணர்ந்த காரணத்தால் "மன்னிய சடைப் பரமர் பிற தளி மறுத்து அடைவிதம் கண்டு" எனப் பட்டது.

இறைவர், பூசலார் ஆலயத்தில் புகுவோம் என்று காடவர் கோனுக்கு அருள் செய்த திறத்தை நாயனார் கேட்டு உள்ளம் மருண்டு பின் இறைவர் திருவருளை வியந்து, என்னை யோர் பொருளாக் கொண்டே தாம் கட்டிய மனக்கோயிலில் இருக்க வந்தமையின் பெருமகிழ்வு கொண்டனர் ஆதலின் "உவந்த பூசல்" என்றனர்.

பூசலார் பேரறிஞர். அவர் அறிவைப் புலப்படுத்த பல காரணம் கூறலாம். ஒன்று ஆலயம் கட்ட பொருள் தேடியும் பொருள் கிடைக்காதபோது மனத்தால் கட்ட முடிவு செய்தது. இதனைச் சேக்கிழார் நன்கு,

மனத்தினில் கருதி எங்கும்
　　மாநிதி வருந்தித் தேடி
எனைத்துமொர் பொருட்பே றின்றி
　　என்செய்கேன் என்று நைவார்
நினைப்பினால் எடுக்க நேர்ந்து
　　நிகழ்வுறும் நிதியம் எல்லாம்
தினைத்துணை முதலாத் தேடிச்
　　சிந்தையால் திரட்டிக் கொண்டார்.

என்று பாடியுள்ளனர்.

மற்றும் ஓர் அறிவுத்திறன் ஆலயத்தைக் கட்டத் தொடங்கியது. இதனையும் அருண்மொழித்தேவர்,

சாதனத் தோடு தச்சர் தம்மையும் மனத்தால் தேடி
நாதனுக் கால யம்செய் நலம்பெறு நன்னாள் கொண்டே
ஆதரித் தாக மத்தால் அடிநிலை பாரித் தன்பால்
காதலில் கங்குற் போதும் கண்படா தெடுக்க லுற்றான்.

என்று அறிவித்துள்ளார். இதனால்தான் இவரை ஈண்டுப் ''பூசல் வித்தகர்'' என்றனர்.

சேக்கிழாரின் கட்டடச் சிற்பக் கலையினையும், நுண்ணறிவுத் திறனையும் பூசலார் புராணத்தில் பாடியிருப்பதால் அறியலாம்.

ஈண்டு ஓர் அரிய கருத்தை நினைவு கூர்தல் சாலச் சிறந்ததாகும். அதாவது பூசலார் கோவிலைத் தம் மனத்தால் கட்டினார் என்பதன் உட்கருத்தை என்க. இதனை அப்பர் பெருமானார் திருப்பாடலை நினைவுகொண்டு சிந்தித்தால் உண்மை நன்கு புலனாகும். அப்பாடல்,

காயமே கோயி லாகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி இலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈச னார்க்குப் போற்றஇக் காட்டி னோமே.

என்பது.

**மங்கையர்க்கரசியார்:** இவ்வம்மையார் சோழ மன்னனது திருமகளார். நின்ற சீர் நெடுமாறரது வாழ்க்கைத் துணைவியார். பாண்டிய நாட்டில் பரவிய சமண சமயத்தை மாற்றித் திருஞான சம்பந்தர் துணைகொண்டு சைவ சமயத்தைப் பரவச் செய்தவர். திருஞானசம்பந்தர் பதிகத்தில் போற்றப் பட்டவர், திருநீற்று நெறியை வளர்த்தவர். தம் நாயகர்க்கு நல்ல வழித்துணையாய் அமைந்து சிவனருள் பெற்றவர்.

**நேசநாயனர்:** இவர் காம்பிலீ நகரத்தில் சாலியர் குலத்தில் பிறந்தவர். சிவனே இடையருது சிந்திப்பவர். அஞ்செழுத்து ஓதுபவர். கீள், கோவண ஆடை நெய்து சிவனடியார்கட்கு ஈந்து வந்தவர். தொண்டின் வழியே சிவப்பேறு பெற்றவர்.

**கோச்செங்கட்சோழர்:** இவரது பிறப்பு ஒரு தனிச் சிறப்புடையது. சோழ நாட்டில் சந்திர தீர்த்தம் என்ற வனத்தில் ஒரு வெண்ணுவல் மரம் இருந்தது. அம்மரத்தடியில் ஒரு சிவலிங்கம் இருந்தது. அந்தலிங்கத்தினை ஒரு யானை நீர் கொண்டு முழுக்காட்டி மலர் இட்டு வழிபட்டது. இவ்வாறு வனத்தில் யானை பூசித்து வந்ததால் அது திருவானைக்கா எனப்பட்டது.

சிலந்தி ஒன்று சிவலிங்கத்தின் மீது மரத்தின் இலை முதலியன உதிராவண்ணம் வலை இழைத்தது. இதனைக் கண்ட யானை அதனை அழித்து விட்டது. சிலந்தி சினம் கொண்டு யானையின் துதிக்கையில் புகுந்து கடித்தது. யானை தனது துதிக்கையை நிலத்தில் அறைந்தது. அதனுல் சிலந்தி இறந்தது. யானையும் இறந்தது. யானை சிவகதியுற்றது. சிலந்தி சோழனுகப் பிறந்தது. அச்சோழனே கோச்செங்கட்சோழர். இச்சோழர் தந்தையர் சுபதேவர். தாயார் கமலவதியார். கோச்செங்கட் சோழர் தாயின் கருவில் இருந்தபோது, "இன்னும் ஒரு நாழிகை கழிந்தபின் மகவு பிறக்குமாயின் பிறக்கும் குழந்தை மூன்றுலகையும் ஆட்சி புரியும்" என்று சோதிடர் கூற, அதன் பொருட்டுத் தாயைத் தலை கீழாக ஒரு நாழிகை கட்டியபின் குழந்தை பிறந்தது. அதனுல் குழந்தையின் கண் சிவந்தது. அக்காரணம் பற்றி அக்குழந்தை கோச்செங்கணுன் என்ற பெயரையும் பெற்றது. குழந்தை இளவரசு நிலை பெற்றபின் அரசமுடி சூட்டப் பட்டது.

கோச்செங்கட்சோழர் முன்னைய பிறப்பின் உணர்வால் இறைவனுக்குரிய கோவில்களைக் கட்டினுர். பூசைக்குரிய ஏற்பாடுகளைச் செய்தார். சிதம்பரம் சென்று நடராசப்

பெருமானை வணங்கினார். தில்லைவாழ் அந்தணர்கட்குத் திரு மாளிகைகளைக் கட்டினார். இம்முறையில் திருத்தொண்டு களைச் செய்து இறையடி உற்றனர்.

**திருநீலகண்ட யாழ்ப்பாணர்:** இவர் திரு எருக்கத்தம் புலியூரில் பிறந்தவர். இறைவர் புகழை யாழில் மீட்டி வாசித்து இன்பம் உற்றவர். திருக்கோயில் தோறும் இப் பணியினைப் புரிந்து வந்த இவர், மதுரைத் திருக்கோயில் வாயிலில் நின்று யாழைவாசித்தபோது, சொக்கலிங்கப் பெருமான் ஆலய அன்பர்களிடம் அவரை உள்ளே அழைத்து வரும்படி கனவில் கூறினார்.

இவர் தரையில் நின்று வாசிப்பின் யாழின் வீக்கு அழியும் என்று அவர்க்குப் பலகை இடுமாறும் கட்டளை இட்டனர். அவர்கள் பொற்பலகை தர அதன்மீது இருந்து யாழை வாசித்தார். பின்னர்த் திருவாரூர் சென்று இறை வரைப் பாடினார். இவர் பாடுதற்காகவே வடக்கு வாயில் அங்கு ஏற்பட்டது. பின்னர்ச் சீர்காழிக்கு வந்து திருஞான சம்பந்தரது நட்பைப் பெற்று அவர் பாடும் பதிகங்களைத் தம் யாழில் மீட்டி வாசிக்கும் பேறு பெற்றபின் அவருடன் திருநல்லூர்ப் பெருமணத்தில் சோதியில் கலந்தனர்.

**சடையனார்:** இவர் சுந்தரரைத் திருமகனாராகப் பெறும் பேறு பெற்றவர். முப்போதும் திருமேனி தீண்டிப் பூசிக்கும் ஆதிசைவப்பிராம்மண வகுப்பினர்.

**இசை ஞானியார்:** இவர் சடையனாரின் மனைவியார்; சுந்தரரின் தாயார்.

இவ்வெழுவர்களையே "மேய எழுவோர்" என்றனர். இவ்வெழுவர்களையும் சேக்கிழார் 'பூசலார் பொற்றாள் போற்றி, பாண்டிமா தேவியார் தம் பாதங்கள் பரவலுற் றேன், நேசர்கழல் வணங்கி, செங்கட்சோழர் தம் மலர்த் தாள் வாழ்த்தி, பெரும்பாணர் மலர்த்தாள் வாழ்த்தி என்று வாழ்த்திப் போற்றியது போலத் திருபிள்ளை அவர்

களும் "எம் இதயத்து மேவவைத்து ஏத்தெடுப்பாம்" என்றனர்.

சேக்கிழாரைப் போன்ற அடியார் பக்தியில் சிறந்த ஒருவரைக் காண இயலாது. காட்டவும் முடியாது. அங்ஙனம் இருக்க, அவர் சடையனார்க்கும், இசைஞானியார்க்கும் வணக்கமோ வாழ்த்தோ பாடிலர். திருத்தொண்டத் தொகையில் குறிக்கப்பட்ட ஒவ்வொரு நாயனார்க்கும் வணக்கமும் போற்றுதலும் பாடிய இவர், இவ்விருவர்கட்கும் அங்ஙனம் செய்யாததேன்? செய்யாமைக்குக் காரணம் இல்லாமல் இல்லை. இவ்விருவர்களும் அடியார் வரிசையில் வைத்தற்கு உரியர் அல்லர். அடியார்களின் வைப்பு முறையில் வைக்கப்படுவாராயின், அவர்கட்கும் அடியேன் என்று சுந்தரர் பாடி இருப்பர். அவ்வாறு அடியேன் என்று நம்பி ஆரூரர் கூறாமல், "சடையன் இசைஞானி காதலன்" என்று தான் கூறினார். ஆகவே, இவ்விருவர்களை வன்தொண்டரின் பெற்றோர்களாகக் கருதினர் சேக்கிழார் என்பது நன்கு தெரிகிறது, ஈண்டு அருண்மொழித்தேவர் இவ்விருவர்கட்கு வணக்கம், வாழ்த்து, போற்றி பாடி இருப்பின், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் பெற்றோர்கட்கும் அவ்வாறு போற்றுதல், வாழ்த்துதல், வணங்குதல் செய்திருக்க வேண்டும். ஆண்டும் இவர் செய்திலர். ஈண்டும் இவர் செய்திலர் என்பதை அறிதல் வேண்டும்.

திரு பிள்ளையவர்கள் தமது நூலின் பாட்டுடைத் தலைவர் சேக்கிழார் ஆதலின், அச் சேக்கிழாரைச் சுந்தரர் சுட்டியுள்ளவர்கள் காக்க வேண்டும் என்ற முறையில் காப்புப் பருவத்தை அமைத்துக்கொண்டார். எனவே, அம்முறையில் மன்னிய என்று தொடங்கும் செய்யுளில் எழுவர் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருத்தலின் அவ்வெழுவரையும் சேர்த்து" எழுவோரும் எம் இதயத்து ஏத்தெடுப்பாம்" என்றனர்.

திரு பிள்ளையவர்களின் உள்ளக் குறிப்பு நாயன்மார்கள் அனைவரும் சேக்கிழாராம் குழந்தையைக் காத்த

வேண்டும் என்பது. ஆனால், அவர் பாடிய சேக்கிழார் பிள்ளைத் தமிழில் நம்பி ஆரூரராம் சுந்தரர் சேக்கிழாரைக் காக்கவேண்டும் என்ற குறிப்புக் காணப்படவில்லை. என்ற லும், திருத்தொண்டத் தொகையில் குறிக்கப்பட்ட நாயன் மார்கள் சேக்கிழாரைக் காக்கவேண்டும் என்று உளங் கொண்டு பாடியபோது, சுந்தரர் தம் திருத்தொண்டத் தொகையில் உள்ள ஒவ்வொரு பாட்டின் முதற் குறிப்பையே தலைப்பாக வைத்துக் காப்புப் பருவத்தைப் பாடி முடித்துள்ளார். அம்முதற் குறிப்புப் பாடல்களின் முதல் பத்துப் பாடல்களின் ஈற்றிலும் "ஆரூரன் ஆரூரில் அம்மா னுக்காளே" என்றும், பதினோராவது பாட்டின் இறுதியில் "ஆரூரன் அடிமை" என்றும் இருத்தலின், சுந்தரரும் அடி யவர் என்ற பேற்றிற்கு உரியவர் ஆகின்றார். ஆகவே, சுந்தரரும் சேக்கிழாரைக் காக்கவேண்டும் என்ற குறிப்பு உள்ளதை உற்று நோக்குதல் வேண்டும். இதனால் சுந்தரரது வரலாற்றின் சுருக்கத்தையும் ஒரு சிறிது அறிதல் இன்றி யமையாததாகும்.

**சுந்தரமூர்த்திகள்:** இவர் நடுநாட்டில் திருமுனைப் பாடியில் திருநாவலூரில் ஆதிசைவ பிராம்மண மரபில் சடையனார், இசைஞானியார் இருவருக்கும் திருமகனாராகப் பிறந்தார். இவர்க்குப் பெற்றோர் இட்ட பெயர் நம்பி யாரூரர் என்பது. இவரை நரசிங்க முனையரையர் வளர்ப்புப் பிள்ளையாக ஏற்றுக் கொண்டனர். நம்பிஆரூரர் மணப் பருவம் உற்றார். உறவினர் பெற்றோர்கள் இவர்க்குப் புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியார் திருமகளாரை மணம் முடிக்க ஏற்பாடு செய்துவிட்டனர்.

நம்பிஆரூரர் முற்பிறவியில் கைலையில் இறைவர்க்குத் திருத்தொண்டு புரிந்துவந்தவர். அங்குத் தேவியார்க்குப் பூத் தொண்டு செய்துவந்த அனிந்ததை, கமலினி இருவரையும் காதலித்தனர். அக்காதலை நிறைவேற்றிக்கொள்ள இறைவர் இவரைப் பூமியில் பிறக்கும்மாறு செய்துவிட்டனர். அது போது சுந்தரர் இறைவரைத் தம்மை மண்ணுலக

மையலில் மூழ்காதபடி தடுத்தாட் கொள்ள வேண்டினர். அவ்வேண்டுகோட் கிணங்கிய இறைவர், நம்பியாரூரர் திருமணத்தின்போது வந்து திருமணம் முடித்துக்கொள்ளாத படி தடைசெய்து விட்டனர். பின் நம்பிஆரூரர் இறைவன் உறைவிடங்களுக்குச் சென்று திருவாரூரை அடைந்தனர். அங்குக் கமலினியார் பரவையார் என்ற பெயருடன் பிறந்து மணப்பருவம் உற்றிருந்தனர். அவரைத் திருவாரூர் தியாகேசன் திருவருளால் மணந்தனர். பின் திருவொற்றி யூரை அடைந்து, அங்கு வந்து பிறந்த அனிந்திதையாகிய சங்கிலியாரையும் இறைவர் திருவருளால் திருமணம் செய்து கொண்டனர். இம்முறையில் இவர் வாழ்ந்து சேரமான் பெருமாள் நாயனர் நட்புப் பெற்று, இறைவர் தந்த வெள்ளையானையின்மீது திருக்கையிலைக்குச் சென்றனர்." (11)

# 2. செங்கீரைப் பருவம்

1. ஒண்கொண்ட பொதுவகத் துலகெலாம் உய்யநா
றுலகெலாம் என்றதீஞ்சொல்
உவந்தே டெழுத்தாணி கொண்டெழு திரண்டுகை
அம்புவி யுறப்பதித்து
வண்கொண்ட ஒருதாள் மடித்தூன்றி ஒருதாள்
வயங்குற எடுத்தூன்றிஒண்
வாய்கவிச் சுவைஒழுக் கறிவிப்ப தெனஅமுத
மாட்சிமை ஒழுக்கெடுப்ப
வெண்கொண்ட நெற்றிநீ றிளநிலவும் ஒண்கா
திருங்குழை இளங்கதிரும்விட்
டெறிப்பஇள முறுவலும் தோன்றமலர் திருமுகம்
எடுத்துவான் அளவுநோச்சித்
திண்கொண்ட குன்றையம் பதியருள் மொழித்தேவ
செங்கீரை யாடியருளே
திருத்தொண்ட நன்னாட்டு வேளாளர் குலதிலக
செங்கீரை யாடியருளே

*(அ. செ.) ஒண்கொண்ட பொதுவகத்து - ஒளியைத் தன்னிடத்தே கொண்ட பொற்சபையிடத்து, ஒண்மை-பொலிவு, பொதுவகம் - பொற்சபை, உய்ய-பிழைக்க, ஈடேற, நாறு-மணக்கும். உலகெலாம் என்ற தீஞ்சொல்-இறைவனால் எடுத்துக் கூறப்பட்ட உலகெலாம் என்னும் இனியமொழி, தீஞ்சொல்-இனியமொழி, உவந்து-மகிழ்ந்து, அம்புவி-அழகிய பூமியில், வண்கொண்ட-வளமை கொண்ட, வயங்குற-விளக்கம் பொருந்த அமுதம்-(ஈண்டு) குழந்தையின் கடைவாயிலிருந்து ஒழுகும் எச்சில். எண்-மதிப்பு, நீறு-திருநீறு, இருங்குழை-பெருமைமிக்ககாதணி, கதிர்-ஒளி*

எறிப்ப-வீச, முறுவல்-புன்சிரிப்பு, வான்-ஆகாயத்தை நோச்சி - மதில்கள் சூழ்ந்த, திண்கொண்ட-உறுதி வாய்ந்த அருள்மொழித் தேவ-அருள்மொழித் தேவர் என்னும் பெயர் பெற்றவரே. திலகன்-மேன்மையானவன்.

**விளக்கம்:** பிள்ளைத் தமிழ் நூலில் இரண்டாவது பருவமாக அமைவது செங்கீரைப் பருவம். இஃது ஐந்தாம் மாதத்தில் கூறப்படுவது. செங்கீரைப்பருவமாவது குழந்தை பொருள் விளங்காத சொற்களை எழுப்பும் பருவமாகும். அதாவது, குழந்தை ங்குவா, ங்குவா என்று ஒலி எழுப்புவதாகும். இவ்வாறு எழுப்புமாறு கேட்கும் பருவம் செங்கீரைப் பருவமாகும். கீர்-சொல், பொருள் விளங்காத சொற்களைச் செங்கீர் எனக் கூறப்பட்டதன் காரணம், அவை குழந்தை மொழியாக இருத்தலின் என்க. குழந்தையின் மழலைமொழி பொருள் விளங்கும் நிலையில் இருக்கும். ஆனால் இந்த ங்குவா என்னும் ஓசை ஒலி வடிவில் இன்பம் பயக்கும். மோனை, எதுகைத் தொடைகள் இன்றி வரும் யாப்பினை ஓசையினிமை கருதிச் செந்தொடை என்று கூறுவது போல ஒலி இனிமை கருதிச் செங்கீரை எனப்பட்டது. பெரிய வாச்சான் பிள்ளை செங்கீர் என்பதற்கு ஒருநிருத்த விசேஷம் என்பர். கீர்-சொல். நக்கீரர் என்ற பெயர்க் காரணத்தையும் நினைவு கொள்க

செங்கீரைப் பருவத்திற்கு வேறு முறையிலும் பொருள் காண்பதுண்டு. அதுவே, ஒரு காலை நிலத்தில் பதித்து, ஒரு காலைத் தூக்கித் தலைநிமிர்த்தும் இருபுறத்தும் தலை அசைத்தும் ஆடும் பருவமாகும் என்பது. இதற்கு உதாரணமாக,

> ஒருதாள் உந்தி எழுந்திரு கையும்
> ஒருங்கு பதித்து நிமிர்ந்
> தருள்பொழி திருமுகம் அசைய அசைந்தினி
> தாடுக செங்கீரை

எனும் முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழையும்,

இருகைமல ரும்புவி பதித்தொரு முழந்தாள்
இருத்தியொரு தாள்மேல்நிமிர்த்து
இந்திரதிரு விற்கிடை தொடுத்தவெண் தரளநிரை
ஒயப்ப நுதல் வேர்பொடிப்பத்
திருமுகம் நிமிர்ந்தொரு குளந்தையமு தாம்பிகை
செங்கீரை ஆடியருளே

என்ற அமுதாம்பிகைப் பிள்ளைத் தமிழையும் காட்டுவார். இப்பிள்ளைத் தமிழிலும்,

உவந்துஏடு எழுத்தாணி கொண்டெழு திரண்டுகை
அம்புவி யுறப்பதித்து
வண்கொண்ட ஒருதாள் மடித்தூன்றி ஒருதாள்
வயங்குற எடுத்தூன்றி
திருமுகம் எடுத்து ***
செங்கீரை ஆடி அருளே

என்று கூறப்பட்டிருப்பதையும் காணலாம். செங்கீரை ஆடுவதைக் கிளி சாய்ந்தாடுவது போல ஆடுதல் என்றும் கூறுவர், அதுபோது செங்கீரை என்பது அழகிய கிளி என்று பொருள் படும்.

மெய்ஞ்ஞான ஒளிக்கும், பொன் ஒளிக்கும் சிதம்பரப் பொற்சபை காரணமாதலின் "ஒண்கொண்ட பொதுவகம்" எனப்பட்டது. மேலும், விசயாலயன் ஆதித்தன், பராந்தகன் முதலிய சோழ மன்னர்கள் தில்லைச் சிற்றம்பலத்தின் முகட்டையும், திருச்சிற்றம்பலத்தையும் பொன்வேய்ந்தனர் ஆதலின், "ஒண் கொண்டபொது" எனப்பட்டது எனினும் ஆம். தில்லைக்கூத்தப் பெருமானார் உலகம் உய்ய உவந்தாடும் இடம் கனகசபை. அது பொது என்றும் கூறப்படும். பொதுவாவது எவர்க்கும் உரிமை உடையது என்பதாம். இப்பொதுவும் சிறப்பாகச் சைவப் பெருமக்களும், பொதுவாக எல்லாச் சமயத்தவரும் வணங்கும் சபையாதலின் பொது எனப் பெயர் பெற்றது. தாயுமானார் இஃது எவர்க்கும்பொது ஆதலை, "பகர்வரிய தில்லை மன்றுள் பார்த்த போது அங்கு என்மார்க்கம் இருக்குது எல்லாம் வெளியே

14

என்ன எச்சமயத்தவர்களும் வந்து இறைஞ்சா நிற்பர்' என்று தெளிவு படுத்தியுள்ளனர்.

ஈண்டு 'உலகெலாம்' என்பது மூவேந்தர் தமிழ்வழங்கும் நாட்டுக்கப்பால் உள்ள உலகங்களையும், இராமலிங்க அடிகளார் எடுத்துக் கூறியுள்ள உலங்களையும் உணர்த்தும் தொடராகும். உலகெலாம் என்று இறைவர் எடுத்துக்கொடுத்த தொடர், பெரிய புராணத்தில் சிறப்பாக முதல் இடை, கடையாகிய மூவிடங்களிலும், பொதுவாகப் பல இடங்களிலும், கம்பர் ராமாயணத்தில் முதல் பாடலிலும், திருமுருகாற்றுப் படையின் தொடக்கத்திலும் மணந்து கொண்டிருத்தலின் "நாறும்" என்றனர். இதனை இறைவன் அன்பு கூர்ந்து இனிதாக எடுத்து மொழிந்தமையின், இனி தீஞ்சொல் ஆயிற்று. திருநீறு வெண்மையாகவே இருத்தல் வேண்டும் என்பது சைவசமயமரபு. இதுகுறித்தே திருமுறைகள், "செய்ய மேனி வெளிய பொடிப் பூசுவர். சுண்ண வெண்ணீறு, சாந்தம் வெண்ணீறெனப் பூசி, வெள்ளை நீறணியும், பால் வெண்ணீறு, வெண்ணீருடி, திருவெண்ணீறு அணியாத திருவில் ஊர், அருநோல்கள் கெட வெண்ணீறு அணியார், மறுவிலாத வெண்ணீறு பூசுதல்" என்று எடுத்து இயம்பியுள்ளன. அது குறித்தே ஈண்டும் "வெண்கொண்ட நெற்றிநீறு" என்றனர். சேக்கிழார் பெருமானார் திருநீற்றினை ஒளியுடைப் பொருளாக எண்ணி "அரந்தை தீர்க்கும் அடியவர் மேனிமேல் நிரந்த நீற்றொளி" என்றனர் ஆதலின், இங்கு நீறு இளநிலவு என்றனர். இப்பாடலில் சேக்கிழார் குழந்தைப் பருவத்துப் பொலிவு செம்மையுறக் காட்டப்பட்டிருப்பதைக் கண்டு இன்புறுக.

ஒரு நாட்டிற்குரிய உறுப்புக்களில் மதிலும் ஒன்று. இதனை வள்ளுவர்,

உயர்வுஅகலம் திண்மை அருமைஇந் நான்கன்
அமைவரண் என்றுரைக்கும் அரண்

கொளற்கரிதாய் கொண்டகூழ்த் தாகி அகத்தார்
நிலைக்குஎளிதாம் நீரது அரண்

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்அரணும் நாட்டிற்கு உறுப்பு

என்று கூறியுள்ளமை கொண்டு உணரலாம். இந்தத் தன்மையைக் குன்றத்தூர் பெற்றுள்ளது என்பார், வான் அளவு நொச்சித் திண்கொண்ட குன்றையம்பதி'' என்றனர். ஔவையார் ஏனைய நாடுகளைக் கூறும்போது நல் என்ற அடை கொடுக்காமல் கூறித் தொண்டை நாட்டைக் குறிப் பிடும்போது தொண்டை நன்னாடு என்று குறுப்பிட்டமை யின், ஈண்டும் திருத்தொண்டை நன்னாடு எனப்பட்டது. சான்றோரை இந்நாடு பெற்றுள்ளமையின் அச்சிறப்புத் தோன்றவே திருத் தொண்டை நன்னாடு எனப்பட்டது.

தொண்ட மண்டலமா அன்றித் தொண்டை மண்டலமா என்பது பற்றிய கருத்து வேற்றுமை எழுந்தபோது, இராம லிங்க சுவாமிகள் தொண்ட மண்டலம் என்றே தக்க இலக் கண இலக்கிய மேற்கோள்களுடன் நிறுவிக் காட்டினார். அப்படிக் காட்டியபோது, தொண்டன் மண்டலம் தொண்ட மண்டலம் என்றே மரபு வழுவாமை வழங்கல் வேண்டும் என்று கூறி அதற்குப் பிரமாணமாக,

முக்கணன் கணநா தர்க்கு
முதன்மைத்துண் டீரன் ஆண்டு
மிக்கதுண் டீரன் நாடாய்த்
தண்டக வேந்தன் தாங்கித்
தக்கதண் டகன்நன் நாடாய்த்
தபனன்மா குலத்துச் சோழன்
தொக்கதார்த் தொண்ட மான்காத்
தாயது தொண்ட னாடே

என்றும் எடுத்து எழுதினார். இது, பிள்ளை யவர்கட்கு உடன்பாடு இல்லைபோலும்! எனவே தொண்டை நன்னாடு எனக் குறிப்பிட்டனர் என்க. தொண்டை நாடு என்பது செங்கற்பட்டு வடஆர்க்காடு சித்தூர், முதலிய மாவட்டங்களையும், தென்னார்க்காட்டு ஜில்லாவில் ஒரு

பகுதியையும் தன் அகத்தே கொண்டது. தொண்டை நாட்டின் பழம் பெயர் குறும்பர் நிலம் என்பது. குறும்பர் ஒருவகை மரபினர். ஆடு, மாடு மேய்த்து வாழ்பவர். இவர்களை ஆதொண்ட சக்ரவர்த்தி வென்று அவர்கள் நாட்டைக் கைப்பற்றினன். அது முதல் அவன் பெயரால் தொண்டைநாடு என்று வழங்கப்பட்டது. நாகர் மகளுக்கும் சோழ மன்னனுக்கும் பிறந்த இளந்திரியன் என்பவன் குழந்தைப் பருவத்தில் தொண்டன் கொடியால் சுற்றப்பட்டவன். அவன் ஆண்டதால் தொண்டை நாடு என்ற பெயர் பெற்றதாகவும் கூறுவர். (12)

**2.** பொருவரிய தொண்டர்கள் புராணத்துள் இறையருள்
பொலிவான் நிரம்புசொற்கள்
போற்றிடு விருப்பநீர் நம்மையழ வாக்கிவாய்ப்
புகல்குதலை மழலைஎன்ன
மருவுமொழி ஆசையுற் றிர்பயன் உறுதென்ன
வள்ளால் மறுத்துரைத்தால்
வார்த்தைப் பயன்கொள வலேம்தக்க சான்றுநீ
வாய்மலர் புராணம்நின்றும்
ஒருவரிய தாம்செப்பல் உற்றபொருள் என்றகவி
ஓதவேண் டுவதின்இளவல்
உனதுசொல் பயன்உணர்தல் இலம்என்னின் மழவா
உவப்பதும் பொய்ம்மையாமே
திருவமிகு குன்றையம் பதியருள் மொழித்தேவ
செங்கீரை ஆடியருளே
திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக
செங்கீரை ஆடியருளே

*(அ.சொ) பொருவு அரிய-ஒப்புக் காண்பதற்கு அருமையான, இறை-இறைவனது, பொலி-விளங்கும், வான் நிரம்பு*

சொற்கள்-அசரீரியாக எழுந்த உலகெலாம் எனும் சொற்கள், அல்லது பொருள் நிரம்பிய நிறைமொழியாகிய பயன் நிறைந்த சொற்கள் எனினும் ஆம், விருப்பம்-விருப்பத்தால், மழவு-இளைய குழந்தைப் பருவம், "மழவும் குழவும் இளமைப் பொருள" என்பது தொல்காப்பியம் புகல்-கூறும், குழலை-குழந்தைகள் பேசும் திருந்தாத மொழிகள், மருவு-கலந்த, உறுது-அடையாது, வள்ளால்-வள்ளலே, (சேக்கிழார்) வள்ளன்மை உடையோர், சான்று-சாட்சி, ஒருவரிய தாம்-நீக்க முடியாததாம், செப்பலுற்றபொருள் என்ற முதலையுடைய பெரிய புராணச் செய்யுள், எவன்-ஏன் இது விைவினைக் குறிப்பு வினைமுற்று, மழவா உவப்பதும்-குழந்தையாகக் கொண்டு மகிழ்வதும், திருவம்-செல்வம்.

**விளக்கம்:** "தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே" என்பது ஔவையார் வாக்கு. மேலும், தொண்டர்கள் சிறந்த முனிவர்களாலும் வாழ்த்தத்தகுந்த பெருமை சான்றவர்கள். இதற்குச் சான்றாக உபமன்யு முனிவர் சுந்தரரை வணங்கியதனுல் அறியலாம். உபமன்யு முனிவர் தம் திருவாயால் "நம்பி ஆரூரன் நாம் தொழும்தன்மையான்" என்று கூறியதனுல் உணரலாம்.

பெருமையால் தம்மை ஒப்பார்
பேணலால் எம்மைப் பெற்றூர்
ஒருமையால் உலகை வெல்வார்
ஊனமேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றூர்
அன்பினுல் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்றூர்
இவரைநீ அடைவாய்

என்று நம்பி ஆரூரருக்கு அடியவர்களின் பெருமையினை இறைவனுர் எடுத்து மொழிந்தனர் எனச் சேக்கிழார் பெருமானுரே எடுத்து மொழிந்துள்ளனர். இதனை உட்கொண்டேதான் பொருவரிய தொண்டர்கள் என்று ஈண்டுச் சிறப்பிக்கப்பட்டனர். மேலும், சேக்கிழார் தமது

நூலுக்கு இட்ட பெயர் தொண்டர் புராணம் என்பதே ஆகும். இதனை அவரே,

இங்கிதன் நாமம் கூறின்
    இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டில் மாக்கள்
    சிந்தையுள் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப்
    புறத்திருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும்
    திருத்தொண்டர் புராணம் என்பாம்

என்று குறிப்பிட்டிருப்பது கொண்டு அறியலாம். இதனால் தான் "தொண்டர்கள் புராணத்துள்" என்றனர். உலகெலாம் என்னும் தொடர் இறைவனால் எடுத்துக் கொடுக்கப் பட்டு அருள் செய்யப்பட்டமையினால்தான் தொண்டர் சீர்பரவுவார் நூல் இனிது முடிந்தது. ஆகவே, ஈண்டு இறை அருள் பொலிவான் நிரம்பு சொற்கள்" எனப்பட்டது.

செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவரும் கொள்வரால்
இப்பொரு ருட்கென் உரைசிறி தாயினும்
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால்

என்று கூறியுள்ளார். இதனையே ஈண்டுச் "செப்பலுற்ற பொருள்" என்று குறிப்பிட்டனர். பொருள் என்பதற்குப் குழந்தை என்பதும் பொருள். "ஒண் பொருளும் நீ" என்று அப்பர் வாக்கில் இப்பொருள் இருத்தலைக் காண்க. "தம் பொருள் என்ப தம் மக்கள்" என்ற வள்ளுவர் வாக்கும் இப்பொருளதே. உலகில் பொதுவாகக் குழந்தைகள் மொழியும் சொற்கள் மழலை மொழிகள் என்றும் குதலை மொழிகள் என்றும் கூறப்பட்டு, அவை பொருள் நிரம்பா மொழிகள் என்று கருதப்படும். ஆனால், சேக்கிழாராம் மதலையின் மழலை மொழிகள் அவ்வாறு பொருள் பயவா நிலையில் இன்றிப் பொருள் செறிவுடையனவாய் யாவரும் பயனுறற்குரியனவாய் உள்ளன. அப்படி இருக்க "நீர் ஏன்

செப்பலுற்ற என்ற செய்யுளைப் பாடினீர், என்று வினவு முகத்தால் சேக்கிழாரின் மொழிச் சிறப்பை உணர்த்தினர். சில நூல்களில் உள்ள பாடல்களை இவை இடைச் செருகல் என நீக்க முயல்வர். அங்ஙனம் செப்பலுற்ற என்ற செய்யுளை நீக்க இயலாது. ஆகவே, அதனை ஒருவரிய என்று அடை கொடுத்துப் பாடினர். குன்றத்தூர் செல்வமிக்க ஊர் என்பதை இது போதும் காணலாம். நீர்வளத்திற்கே குறைவற்ற ஊர். ஆகவே, அது திருவமிகு குன்றையெனக் கூறப்பட்டது.

மனுநீதி கண்ட புராணத்துள் இறந்த ஆன்கன்றும், அரசகுமாரனும் இறைவன் திருவருளால் உயிர் பெறு கின்றனர். இங்ஙனம் உயிர்பெற்று எழுந்த நிலையினைச் சேக்கிழார் பெருமானார் குறிப்பிடுகையில்,

அந்நிலையில் உயிர்பிரிந்த ஆன்கன்றும் அவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடன்எழலும்
இன்னபரி சானென்என் றறிந்திலன்வேந் தனும்யார்க்கும்
முன்னவனே முன்னின்றால் முடியாத பொருள்உளதோ

என்று குறிப்பிட்டுள்ளார். இப்பாடலில் இறையருள் பொலிவான்நிரம்பு சொற்கள் இருத்தலைக்காண்க. இங்ஙனம் சேக்கிழாரின் சொல்லிலும், பொருளிலும், தோய்ந்தன்றோ திரு பிள்ளை அவர்கள் இப்பிள்ளைத்தமிழைப் பாடுகின்றனர். திரு பிள்ளை அவர்கள் சேக்கிழார் பெருமானை நோக்கி பெருமானே! உங்கள் சொற்கள் பயனுறாத சொற்களா? நாங்கள் பயன் அடையாமல் இருக்க ஒண்ணுமோ? நீங்கள் மறுத்து உரைத்தாலும் உங்கள் நூலில் உள்ள மொழிகளால் நாங்கள் பயன் கொளவல்லவராக இருக்கின்றோம். இதற்கு நீங்களே சான்று. நீங்களே "செப்பலுற்ற" என்ற செய்யுளைச் செப்பியுள்ளீர்கள். இந்தப் பாடலைப் பாடி இருக்க உங்கள் சொற்களின் பயனை நாங்கள் உணர்தல் இல்லை என்றால் (மழவா) பிள்ளைத் தமிழில் பாடி மகிழ்வதும் பொய்யாகும் அன்றோ என்று கூறிச் சேக்கிழார் சொல் வல்லமையினை எடுத்து மொழிந்துள்ளார். (13)

3. ஒப்பரிய தொண்டர்தம் அருமையும் பெருமையும்
உவக்கும்அவர் அவர்செய்கையும்
உவமையில் லாச்செய்கை நுட்பமும் திட்பமும்
உம்பர்கோன் அருள்தட்பமும்
தப்பரிய செந்தமிழ்த் தொடைநடையும் அடையும்
தவாப்பொருள் அணிச்சிறப்பும்
தமிழ்மறை அடங்குபல மந்தணமும் வெள்ளிடைத்
தவிரும்வெற் பெனவிளங்க
வெப்பரிய முழுமதிக் குடைநிழற் றனபாயன்
மேயஅவை அகம்நயந்து
விபந்துமெய்ப் பாட்டினொடு பாராட்டி மகிழமேல்
மேல்விரித் தருளியபிரான்
செப்பரிய குன்றையம் பதியருள் மொழிந்தேவ
செங்கீரை யாடியருளே
திருந்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக
செங்கீரை யாடியருளே.

*(அ. சொ) உவக்கும் - மகிழும், செய்கை - செயல், திட்பமும் - நிச்சயமும், உம்பர்கோன் - தேவர்களின் தலைவனும் சிவபெருமான், தட்பமும்- தண்மையும், நீங்காத பொருள் அணி - பொருட்சிறப்பும், அணிச் சிறப்பும் தொடை - பாமாலை, தவா - குறையாத, தப்பு - தவறு தமிழ்மறை - தேவாரமாம் வேதப்பொருள், மந்தணமும்- இரகசியப் பொருளும், வெள்ளிடத்து அவிரும் வெற்பு - வெள்ளிடைமலைபோல, இது ஒருபழமொழி, அவிரும்-விளங் கும், தவிரும் - தங்கும் வெற்பு - மலை, வெப்பு-வெப்பம், மதிக்குடை - சந்திரவட்டக்குடை, அவையகத்து - சபையில், நயந்து-யாவரும் விரும்பி, மெய்ப்பாட்டினொடு - கண்ணீர் அரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலான உடற்கண் தோன்றும் உணர்ச்சி யுடனே.*

**விளக்கம்:** *அமர்நீதி நாயனர் புராணத்துள் அமர் நீதியார் அன்புகலந்த தராசுத்தட்டுக்கு நேரே இறைவர்*

அருள் கலந்த கோவணம் வைக்கப்பட்ட போது, தராசுத் தட்டுச் சரிநிகராக இன்றித் தாழ்ந்து காட்டி நிற்க, அமர்நீதி யார் தட்டு உயர்ந்து நின்ற போது சேக்கிழார் பெருமானார், இவ்வாறான நிலைக்கு விளக்கம் தருவார் போல,

முட்டில் அன்பர்தம் அன்பிடும் தட்டுக்கும் முதல்வர்
மட்டும் நின்றதட்டு அருளொடு தாழ்வுறு வழக்கால்
பட்டொடு துகில்அ னேக கோடிகள் இடும்பத்தர்
தட்டு மேம்படத் தாழ்ந்தது கோவணத் தட்டு

என்று பாடி இருப்பதன் உட்பொருளைக் கூர்ந்து நோக்குகை யில், தொண்டர்களின் அன்புக்கு நிகராக இறைவன் அருள் நிற்காமல் தாழ்ந்து அவர்கள் திருவுளக் கருத்தை நிறைவேற்றி வைக்கும் என்பதை நன்கு உணரலாம். இதனையே ஈண்டு ஒப்பரிய தொண்டர் என்ற தொடர் விளக்கி நிற்கிறது.

தொண்டர்கள் அருமையினும் அருமையானவர். அதனால் தான் அவர்களைத் தெய்வமாகவே கொண்டு பெரிய முனிவர்களும் தொழுது வந்தனர். இதற்குச் சான்றாகப் பெருமிழலைக் குறும்பர் எனும் பரமயோகியார் சுந்தர ரைத் தெய்வமாகக் கொண்டு பூசித்ததை உதாரண மாகக் காட்டலாம். இங்ஙனம் தொழுது வந்தார் என்பதை,

மையார் தடங்கள் பரவையார்
மணவா ளன்தன் மலர்க்கழல்கள்
கையால் தொழுது வாயவாழ்த்தி
மனத்தால் நினைக்கும் கடப்பாட்டில்
செய்யாள் கோனும் நான்முகனும்
அறியாச் செம்பொன் தாளிணைக்கீழ்
உய்வான்சேர உற்றநெறி இதுவே
என்றன் பினில்உய்த்தார்

என்ற சேக்கிழார் பாடலால் காணலாம். துறைமங்கலம் சிவப்பிரகாசர் இதனை இன்னமும் விளக்கமுற,

"பெறுமிழலைக் குறும்பர்எனும் பரம யோகி
பெரிதுவந்துன் திருவடித்தா மரையைப் போற்றி
விரைமலர் தூய்வந்தனை செய்கின்றான்"

என்று பாடியருளினார். இவற்றிற்குக் காரணம் தொண்டர் அத்துணை அருமையானவர் என்பதனால் அன்றோ?

தொண்டர்கள் பெருமையுடையவர் என்பது குறித்துப் பாரித்துக் கூறவேண்டா. பெருமைக்கே உறைவிடமானவர்கள். தொண்டர்கள் இறைவனை நாடவேண்டும் என்பதும் இல்லை. இறைவனே தொண்டர்கள் இல்லம் தேடிச் செல்வன். "பழங்குடில்தோறும் எழுந்தருளிய பரனே" என்ற மணிமொழியார் வாக்கையும் காண்க. சிறுத்தொண்ட நாயனார் இல்லத்திற்கு இறைவன் செல்கின்றார். செல்கின்ற போது எவ்வாறு சென்றார்? தாம் வழியில் காண்பாரை எல்லாம் "சிறுத்தொண்டர் நீர்தாமோ?" என்று வினவிக் கொண்டே சென்றார் அல்லரோ? எங்கும் நிறைந்துள்ள இறைவர்க்கு—எல்லாம் அறிந்த இறைவர்க்கு—சிறுத்தொண்டர் இல்லம் தெரியாமலா போயிற்று? தெரிந்திருந்தும் ஏன் கண்டாரைச் சிறுத்தொண்டர் மனையை வினவிக்கொண்டே சென்றார்" தொண்டருடைய அருமையும் பெருமையும் எவர்க்கும் நினைவுபடுத்தவே அன்றோ? இதனை அன்றோ சேக்கிழார் பெருமானார்,

தண்டாத தொருவேட்கைப்
பசியுடையார் தமைப்போலக்
கண்டாரைச் சிறுத்தொண்டர்
மனைவினவிக் கடிதணைந்து
தொண்டானார்க் கெந்நாளும்
சோறளிக்கும் திருத்தொண்டர்
வண்டார்பூந் தாரார்இம்
மனைக்குள்ளா ரோஎன்ன

என்று குறிப்பிட்டுள்ளார்? தொண்டர்கள் பெருமைக் குரியவர் என்பதையும் சேக்கிழார் நன்கு உணர்ந்தவர் ஆதலின்,

அளவிலாத பெருமையர் ஆகிய
அளவிலாத அடியார்

என்றும், காரைக்கால் அம்மையார் புராணத் தோற்று வாயில்,

மயிலைப் புறம்கொள் மென்சாயல்
மகளிர் கிளவி யாழினொடும்
குயிலைப் பொருவும் காரைக்கால்
அம்மை பெருமை கூறுவதே

என்றும் பாடிக் காட்டினர்.

சேக்கிழார் பெருமானார் எடுத்து விளக்கவேண்டிய அடியார்கள் ஒருவர் அல்லர்; பலர். அவர்கள் பலராக இருப்பதற்கேற்ப அவர்களது செயல்களும் பல திறப்பட்டவை. அங்ஙனம் பல வகைப்பட்டனவாயினும், அவர் அவர் செயல்களை அறிந்து செப்பிய மாண்பு சேக்கிழார்க்கே உரித்தாயது. அதனால் அன்றோ "வாக்கினால் சொல்லவல்லபிரான்" என்று போற்றினர் சிவஞான முனிவர்.

காரி நாயனார் திருக்கடவூரினர்; தமிழ் மொழியில் நல்ல புலமை பெற்றவர். கவிபாடும் திறனும் அமைந்தவர். அக்கவிகள் சொல் நயம் பொருள் நயம் நிரம்பியவை. அவற்றை மூவேந்தர்கள்முன் பாடிக்காட்டிப் பரிசில்பெற்று, அப்பரிசில் பொருளைக்கொண்டு திருக்கோயில்களைக் கட்டிச் சிவனடியார்களுக்கு உதவி வாழ்ந்து வந்தவர். இவ்வாறான செயல்களைச் சேக்கிழார் பெருமானார்.

மறையாளர் திருக்கடவூர்
வந்துதித்து வளர்தமிழின்
துறையான பயன்தெரிந்து
சொல்விளங்கிப் பொருள்மறையக்
குறையாத தமிழ்க்கோவை
தம்பெயரால் குலவும்வகை
முறையாலே தொகுத்தமைத்து
மூவேந்தர் பால்பயில்வார்

அங்கவர்தாம் மகிழும்வகை
அடுத்தஉரை நயமாக்கிக்
கொங்கலர்தார் மன்னவர்பால்
பெற்றநிதிக் குவைகொண்டு
வெங்கண்அரா வொடுகிடந்து
விளங்கும்இளம் பிறைச்சென்னி
சங்கரனார் இனிதமரும்
தானங்கள் பலசமைத்தார்

யாவர்க்கும் மனம் உவக்கும் இன்பமொழிப் பயனியம்பித்
தேவர்க்கும் முதல்தேவர் சீரடியார் எல்லார்க்கும்
மேவுற்ற இருநிதியம் மிகஅளித்து விடையவர்தம்
காவுற்ற திருக்கயிலை மறவாத கருத்தினராய்

என்று விளக்கமாகக் கூறியருளினர்.

இங்குக் கூறப்பட்ட செயல்களுக்குரிய போதுமான குறிப்புக்கள், நம்பியாண்டார் நம்பிகள் காரி நாயனாரைப் பற்றிப் பாடிய பாடலில் காணப்படவில்லை. அப்பாடல்,

புல்லன வாகா வகைஉல கத்துப் புணர்ந்தனவும்
சொல்லின வும்நய மாக்கிச் சுடர்பொன் குவடுதனி
வில்லனை வாழ்த்தி விளங்கும் கயிலைபுக் கான்என்பரால்
கல்லின மாமதில் சூழ்கட வூரில் காரியையே

என்பது.

இப்பாடலால் இந்நாயனார் எவரிடம் பொருள் பெற்றார், அப்பொருளை என் செய்தார் என்பன போன்ற செயல்கள் பெறப்படாமையை உணர்க. இந்நிலையில் அரிய குறிப்பைச் சேக்கிழாரே தெரிந்து செப்பினர் என்றால், இவரது பலவகை ஆய்வுத்திறனை அறிவிக்கவும் வேண்டுமோ' இவரது அறிவு உவக்கும் தன்மையது அன்றோ!

மற்றும் தொண்டர்களின் செயல் நுட்பங்களையும் தெரிந்து கூறும் பேராற்றல் பெற்றவர் நம் சேக்கிழார் பெருமானார்.

திருக் குறிப்புத் தொண்ட நாயனார வண்ணார் வகுப்பினர். அவ்வகுப்பினர் செயலையும் சேக்கிழார் நன்கு அறிந்து கூறும்திறம், மிகமிகப் பாராட்டற்குரியது. திருக்குறிப்புத் தொண்ட நாயனார் குலத்தொழிலை,

குறித்த பொழு தேஒலித்துக்
  கொடுப்பதற்குக் கொடுபோந்து
வெறித்தடநீர்த் துறையின்கண்
  மாசெறிந்து மிகப்புழுக்கி

என்று குறிப்பிட்ட குறிப்பைக் காண்க.

மாசெறிதலாவது, நீரில் தோய்த்துக் கல்லில் மோதல், புழுக்கலாவது உவர்மண் ஊட்டி வெள்ளாவி வைத்தல். இச்செயல்கள் நுட்பமான செயல்கள் அல்லவோ?

அடியவர்கள் அன்பின் மிகுதியால் செயற்கரிய செயல்களைச் செய்பவர். அங்ஙனம் செயற்கரிய செயல்களைச் செய்பவர்கட்கு ஏற்ற முறையில் இறைவனும் திருவருள் சுரக்க வேண்டியவனாய் உள்ளான். சிறுத்தொண்டர் நாயனார் வைரவராக வந்த இறைவர் விருப்பப்படி தம் மைந்தனைத் தடிந்து கறியமுதாக்கி உணவு படைத்தனர். அவ்வாறு படைத்த அடியவர்க்கு இறைவர் எம்முறையில் அருள் செய்தனர்? துணித்துக் கறியமுதாக்கப்பட்ட மகனை எழுப்பித் தந்தனர். காட்சி தருகின்றபோதும், ஏனைய அன்பர்கட்குத் தாமும் தம் தையலுமாக இருந்து காட்சியளிப்பதுபோல் காட்சியினை அளிக்காமல், தம் இளைய குமாரனும் முருகனுடன் காட்சி தந்தனர். இவ்வாறு காட்சி அளித்ததன் குறிப்பு யாது? குழந்தையை அறுத்துக் கறி சமைத்துப் படைக்க என்று கேட்ட யாம், மகனைப் பெறாத மாண்பிலி போலும், என்று கருதாதே. யாமும் உன்போல மகனைப் பெற்ற மாண்பினரேம். உன் அன்பின் மாட்சியை அவனி யறியவேஇங்ஙனம் உன்னைச் செய்யுமாறு செய்தோம்'' என்பதை விளக்கவே என்பதன்றோ? இதனைச் சேக்கிழார், ''திருவாக்கிய மலையந்த

தையலோடும் சரவணத்துத் தனயரோடும் தாம் அணைவார்" என்ற அடியில் காண்க.

குன்றையாளியார் வாக்கில் திட்பமும் உண்டு என்பதனை அவர் சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு வணக்கம் கூறும் இடங்களில் நன்கு காணலாம்.

மலர்மிசை அயனும் மாலும் காணுதற் கரிய வள்ளல்
பலர்புகழ் வெண்ணெய் நல்லூர்ஆவணப் பழமை காட்டி
உலகுய்ய ஆண்டு கொள்ளப் பெற்றவர் பாதம் உன்னித்
தலைமிசை வைத்து வாழும் தலைமைநம் தலைமை ஆகும்

என்றும், "முதலைவாய் நின்று மீட்டார் கழல்கள் நினைவாரை மீளா வழியின் மீட்பனவே" என்றும், "கூனும் குருடும் தீர்த்தேவல் கொள்வார் குலவு மலர்ப்பாதம், யானும் பரவித் தீர்க்கின்றேன் ஏழுபிறப்பின் முடங்கூன்" என்றும் பாடித் தமது திட்ப நிலையினை அறிவித்துள்ளதைக் காணலாம்.

சேக்கிழார் பெருமானரது செந்தமிழ்த் தொடை நடைக்கு நூல் முழுமையுமே சான்றாகும்.

அவ்வண்ணம் தொழுதுரைத்த
அமைச்சர்களை முகநோக்கி
மெய்வண்ணம் தெரிந்துணர்ந்த
மனுவென்னும் விறல்வேந்தன்
இவ்வண்ணம் பழுதுரைத்தீர்
என்றெரியின் இடைத்தோய்ந்த
செவ்வண்ணக் கமலம்போல்
முகம்புலர்ந்து செயிர்த்துரைப்பான்

"உண்டிநாலு விதத்தில்ஆறு சுவைத்திறத் தினில்ஒப்பிலா
அண்டர் நாயகர்தொண்டர் இச்சையில் அமுதுசெய்ய அளித்துள்ளார்."

"தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீள்முடி
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம்"

என்ற எடுத்துக் காட்டுகளே ஸ்தாலிபுலாக நியாய முறையில் பானை சோற்றிற்கு ஒரு சோறு பதம்—என்ற மரபுபடி

காட்டப்பட்டன. இங்குக் கூறப்பட்ட பாடலைப் படிக்கும் போது நடையழகு துள்ளி விளையாடுவதைக் காண்க.

அடைமொழிகளை அருளும்போதும் சமயத்துக்கேற்ப அமைக்கும் திறன் சேக்கிழார் ஒருவர்க்கே உண்டு. "அந்தமில் புகல் ஆலாலசுந்தரன்" என்று அடைகொடுத்துப் புகழ்ந்தார். இது புராணத் தொடக்கத்தில் கூறப்பட்டது. இதனை நன்கு மனத்தில் நினைவு கொண்டு பின்னுல் சுந்தரரைப்பற்றிச் சங்கிலியாரிடத்தில் கூறும் வாய்ப்பு வாய்க்கும் போது,

சாரும் தவத்துச் சங்கிலிகேள்
    சால என்பால் அன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட
    தவத்தான வெண்ணெய் நல்லூரில்
யாரும் அறிய யான்ஆள
    உரியான் உன்னை எனைஇரந்தான்
வார்கொள் முலையாய் நீயவனை
    மணத்தால் அணைவாய் மகிழ்ந்தென்றுர்

என்று குறிப்பிட்டார்.

இப்பாடலால் சுந்தரர் அந்தமில் புகழ் ஆலாலசுந்தரன் என்று அடைகொடுத்துப்பேசப்பட்டது பொருத்தம் என்பது புலனுகின்றதன்றே?

திருவாரூருக்கு உள்ள சிறப்புப் பலவாகும். அத்தகைய சிறப்புக்களுள் ஒன்று, தேர் விழாச் சிறப்பாகும். ஏனைய சிறப்புக்களைக் கற்றறிந்தவர்களே அறிய நேரிடும். ஆனுல், கற்றவர்களும், கல்லாதவர்களும் திருவாரூரைப் பற்றி அறிந்த சிறப்புத் தேர்ச் சிறப்பு எனில், அது மிகையன்று. இதனைத் "திருவாரூர் தேர் அழகு" என்று வழங்கப்பட்டு வரும் பழமொழி கொண்டும் தெள்ளத் தெளிய உணரலாம். இவற்றை எல்லாம் மனத்தில் கொண்டு அன்றே, நம் சேக்கிழார் பெருமானுர், **"தேராரும் நெடுவீதித் திருவாரூர்"**

என்று அடைமொழி அமைத்துப் பாடியருளினர். இந்த அடைமொழியன்றோ இராமலிங்க வள்ளலாரையும்,

தேரூரும் திருவாரூர்த் தெருவுதொறும் நடப்பித்தாய்
ஆரூர நின்பெருமை அயன்மாலும் அளப்பரிதே

என்று குறிப்பிடச் செய்தது?

சேக்கிழார் மொழிகளில் பொருட் சிறப்புப் பொருந்தியிருக்கும். சுந்தரர் வரலாற்றில் இறைவர் வன்தொண்டரோடு வாதம் இட்டுத் தம் கோட்பாட்டை நிலை நிறுத்துகையில், நம்பி ஆரூரர் கிழவடிவில் இருந்த இறைவரை நோக்கி, **"பழைய மன்ருடி போலும்!"** என்று குறிப்பிடும் சொற்ருெடரின் பொருள் சிறப்பை என்னென்று கூறுவது! வெளிப்படையாகப் பார்க்கும்போது தொன்று தொட்டு விளங்கும் பொற்சபையின்கண்ணே நடனமாடும் கூத்தரசன் போலும் என்ற பொருளுடன், நீதி மன்றங்கள் பல கண்டு அங்கெல்லாம் வழக்காடி வென்று கைவந்த பழைய ஆள் போலும் என்ற சிறப்புப் பொருளும் அன்ருே ஈண்டுத் தொனிக்கிறது? திருநீலகண்டரது குலத்தைக் குறிக்குங்கால், அவரைக் குலாலனார் குலத்தினர் என்ருே, குயவர் குலத்தினர் என்ருே மண்வினைஞர் என்ருே குறிப்பிடாமல் வேண்டுமென்றே, "வேட் கோவர் குலத்துவந்தார்" என்று குறிப்பிட்டுள்ளார். வேட்கோவர் குலம் என்பது குயவர் குலமே. வேளாகிய மண்ணை வெட்டிக் கொணர்ந்து காலால் மிதித்து, பலகை கொண்டு தட்டிப் பணி புரியும் செயல்களைக் காணும்போது, மண்ணிடத்து அவர்கள் கோபங்கொண்டு இத்தகைய செயல்களைச் செய்கின்றனரோ என்று ஒரு சிலர் நினைக்கும் நினைவினை உணர்ந்தே குலாலரை வேட்கோவர் என்று குறிப்பிட்டார். இத்தொடர் சேக்கிழார் தம் நுண்ணறிவால் படைத்துக்கொண்ட ஒன்று. இங்ஙனம் ஏன் படைத்து மொழிந்தார் என்பதை நாம் சிந்திக்கும்போதுதான், அவர் அங்ஙனம் படைத்து மொழிந்த கருத்து நமக்குப் புலனாகிறது. அதாவது வேள் என்னும் சொல்லுக்கு மண் என்னும் பொருள் இருப்பது போலவே, மன்மதன் என்ற

பொருளும் உண்டு. அம் மன்மதனையே தம் வாழ்நாளில் முனிந்து அவன் குறும்புகள் தம்பால் அணுக ஒட்டாது அவனது செயல்களைக் கோபித்து ஒதுக்கிய காரணம் கண்டே, **வேட் கோவர்** குலத்து வந்தார் என்ற பொருட் சிறப்புத் தோன்றவும், குலம் இன்னது என்பதைக் குறிப்பிடவும் பாடியுள்ளார் எனில், அவரது, "சொற் பொருள் சிறப்பை" என்னென்று மொழிவது?

அவருடைய பாடல்களில் அணிச் சிறப்பு மிகுதியும் உண்டு. சுந்தரர் திருமணத்திற்கு முன் நீராடித் தம் முடியின் ஈரத்தைப் போக்கப் பணியாள் வெள்ளிய ஆடை கொண்டு, அவரது கரிய முடியின் ஈரத்தைத் துவட்டிக்கொண்டு வரும் நிலையினைக் கூறும் சந்தர்ப்பத்தில் காட்டிய உவமை அழகை என்னென்று கூறுவது! "முகில்நுழை மதியம் போலக் கைவலான் முன்கை துகில்கொடு குஞ்சி ஈரம் புலர்த்தி" என்று பாடியுள்ளார். அதாவது நம்பியாரூரரது தலை முடியின் கருமைக்கு மேகமும், தூய வெள்ளாடைக்குச் சந்திரனும் எவ்வளவு பொருத்தம் பாருங்கள்! மேலிருந்து வெள்ளாடை கொண்டு கருமயிரைத் துவட்டிக்கொண்டு வருவது சந்திரன் மேகத்தின் இடையே புகுந்து புகுந்து வருவது போன்றுள்ளது என்று கூறிய பொருள் அழகையும், அணிச் சிறப்பையும் காண்க.

மாதர்களின் கொங்கைகள் ஈர்க்கிடை போகா நிலையில் பருத்துத் திரண்டு இருப்பினும், பால் நிறைந்திருக்கும் என்று கூற இயலாது. அது போலவே கொங்கை திரங்கி இருப்பினும் பால் கரந்திருக்கும் என்றும், கூற இயலாது. ஆனால் அங்ஙனம் குடமுலையர்களும், திரங்கிய முலையர்களும் மகப் பேறுற்று, அம் மகவுகளது கரத்தால் தைவரப் பெறும் போது பால் சுரக்கும் வாய்ப்பைப் பெறுவர். இதனை நன்கு அறிந்த நம் சேக்கிழார் பெருமானார், நீரற்று வெறு மணலாக இருக்கும் பாலாற்றினை வர்ணிக்குங்கால், அம் மணலாறும் மள்ளர்கள் மணல் திடரைப் பிசைந்து கையால்

வருடிய அளவில் வெள்ளநீர் வீறிட்டு வரும் என்று காட்டு தற்கு மேலே விளக்கப்பட்ட பொருளேயே உவமை காட்டி,

" பிள்ளை தைவரப் பெருகுபால் சொரிமுலேத் தாய்போல்
மள்ளர் வேனிலின் மணல்திடர் பிசைந்துகை வருட
வெள்ள நீரிரு மருங்குகால் வழிமிதந் தேறிப்
பள்ள நீள்வயல் பருமடை யுடைப்பது பாலி "

என்று பாடியருளினர்.

சண்டேசுவரது தந்தையினைப்பற்றிக் கூறவந்த இடத்து அருள்மொழித்தேவர்,

பெருமை பிறங்கும் அப்பதியில்
மறையோர் தம்முள் பெருமனேவாழ்
தருமம் நிலவு காசிபகோத்
திரத்துத் தலைமை சால்மரபில்
அருமை மணியும் அளித்ததுவே
நஞ்சும் அளிக்கும் அரவுபோல்
இருமை வினேக்கும் ஒருவடிவாம்
எச்ச தத்தன் உளனுனன்

என்று பாடியுள்ளார்.

ஈண்டுச் சண்டேசுரரைப் பெற்றெடுத்த நல்வினே யுடையன் எச்சதத்தன் ஆதலின், அருமை மணியை அளித்தது போன்ற என்ற உவமை அழகும், அவனே சண்டேசுவரர் செய்த சிவ பூசையைக் குலைத்த காரணத்தால் நஞ்சும் அளிக்கும் அரவுபோல் ஆயினுன் என்ற உவமையினையும் கூறியிருக்கும் நிலேயில் இருந்து சேக்கிழாரின் உவமைத் திறனே உணரலாம்.

இவ்வாறு பல உதாரணங்களே அவர் ஆளும் அணிச் சிறப்புக்கு உரியனவாக எடுத்துக் காட்டலாம்.

மறை என்பது பொது அம்மறை அவ்வம்மொழினர் கட்கு உரியதாகக் குறிப்பிடப்பட்டிருந்தபோது, வடமொழி மறை, தென்மொழி மறை என்று குறிப்பிடப்பட்டது. தென்

மொழியிலும் மறைகள் இருந்தன என்பதில் எள்ளளவும் ஐயம் இன்று. தமிழில் மறைகள் இருந்தன என்பதற்குச் சான்றாகப் பல எடுத்துக்காட்டுக்கள் உள்ளன.

பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
மறைமொழி கிளந்த மந்திரத் தான

நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப

என்ற ஒல்காப் பெருமைத் தொல்காப்பியர் வாக்கையுணர்க. இவரது அடியை ஒட்டி வள்ளுவப் பெருந்தகையார்,

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்

என்று கூறியதையும் காண்க.

இவ்விரு பண்டைய பெருமக்கள் தமிழில் நூல் செய்கின்றார்கள் ஆதலின், தமிழர்களின் பண்பாட்டையும் ஒழுக்க முறைகளையும் விளக்குகின்றார்கள் ஆதலின், அவர்கள் குறிப்பிடும் மறை என்னும் சொல், தமிழர்கட்குரிய மறைகளையே உணர்த்தும் என்று கூறவேண்டா அன்றோ? மேலும், தொல்காப்பியப் பாயிரத்தில் வரும் **நான்மறை** முற்றிய அதங்கோட்டாசாற்கு என்ற இடத்து வரும் நான்மறை என்பது தமிழ் மறையையே என்க. நான்மறையாவது அறம், பொருள் இன்பம், வீடு என்னும் நாற்பொருள்களைப் பயக்கும் மறையே ஆகும். ஏலாதி என்னும் பதினெண் கீழ்க்கணக்கு நூலின் கடவுள் வாழ்த்துச் செய்யுளில் வரும் நான்மறை என்னும் தொடர்க்கு இங்ஙனமே பொருள் காணப்பட்டுள்ளது. வடமொழியாளர்கட்குரிய வேதம் நான்குஆனது பிற்பட்ட காலத்தே என்க. அவர்கட்கு உரிய ஆதி வேதம் ஒன்றே. அதுவே இருக் வேதம் என்பது. வரலாற்றுப் புலமையில் சிறந்து விளங்கும் பேராசிரியர் K. N. நீலகண்ட சாஸ்திரியார் எம். ஏ. அவர்கள் The hymns of the Rig Veda are the earliest historical documents of the Indian Aryans

(History of India Part I Page 18) என்று எழுதியுள்ளார். இதன் பிறகே ஆரியரின் ஏனைய வேதங்கள் வந்துள்ளன.

மேலே கூறிய வரலாற்றுப் பேராசிரியரே இதற்குத் தெளிவு கூறுகின்றனர். சமவேதத் தோற்றத்தினைப் பற்றிக் கூறுகையில் The Samaveda is only a seletions of hymns from Rigveda set to music for being chanted by singers trained to the task என்று கூறுகிறார். (ஷை நூலின் 25 ஆம் பக்கம் காண்க.) அதன் பின் அதர்வ வேதத்தைப் பற்றிக் கூறுங்கால், The Athervaveda, reckoned as pertaining to the Brahman, the priest who superintended the entire sacrifice is miscellaneous is charactor the most valuable for history and sociology ofter the Rigveda என்றனர். இந்தவாறான பாகுபாட்டு முறைகளை எல்லாம் பார்க்கும்போது யஜுர் வேதத்தின் தோற்றமும் பிற்பட்டது என்பது புலனாகும். இதனால் வடமொழியில் நான்கு வேதங்கள் ஆதியில் இல்லை என்பதும், நான்கு வேதங்கள் என்ற பாகுபாடு பின்னால் தோன்றியது என்பதும் பெறப் படுகின்றன. வேதங்களை நான்காகப் பகுத்தவர் வேத வியாசர் என்ற குறிப்பினை வில்லிபுத்தூரார் தம் பாரத நூலில், "தோத்திரமான தெய்வச் சுருதிகள் யாவும் நான்காக் கோத்தவன்" என்று கூறியுள்ளதையும் காண்க. நச்சினார்க் கினியரும் "பின்னர் வேதவியாதர் சின்னாள் பல்பிணிச் சிற்றறிவினோர் உணர்தற்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தார் ஆதலின்" என்றனர்.

ஆகவே, தொல்காப்பியர் குறிப்பிடும் மறை தமிழ் மறையே என்பதும், தமிழில் நான்மறை என்று கூறப்பட்டு வரும் இடங்களில் எல்லாம் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் பொருள் பற்றிக் கூறப்பட்டு வந்த நூற்கள் என்றும் கொள்ளுதல் வேண்டும். இந்த நான்மறைப் பொருள் களையே இறைவனார் கல்லாலவிருட்சத்தின் கீழ் இருந்து சனகாதி முனிவர்கட்கு உபதேசம் செய்தருளினார். இதனைத் திருவாசகம் தெள்ளத் தெளிய எடுத்து மொழிகிறது.

அருந்தவருக்கு ஆலின்கீழ் அறம்முதலா நான்கினையும்
இருந்தவருக்கு அருளுமது எனக்கறிய இயம்பேடி
அரும்தவருக்கு அறம் முதல்நான்கு அன்றருளிச் செய்திலனேல்
இருந்தவருக்கு உலகியற்கை தெரியாகாண் சாழலோ

என்ற திருப்பாடலைக் காண்க.

தேவாரத்திலும் இவ்வாறு இந்நான்மறைப்பொருளைச் சனகாதியர்கட்கு உபதேசம் செய்ததை முதல் திருமுறை திருமுதுகுன்ற பதிகத்தில், "அந்தணாளர்க்கு அறம்பொருள் இன்ப வீடு மொழிந்தவாயான் முக்கணுதிமேய முதுகுன்றே' என்றும், "அறங்கிளரும் நால்வேதம் ஆலின்கீழ் இருந்தருளி" என்றும் குறிப்பிட்டதையும் காண்க. இத்துடன் தமிழில் மறை உண்டு என்பதைத் தேவாரம், "மறை இலங்கு தமிழ்" என்றும் "மறை வளரும் தமிழ் மாலை" என்றும் குறிப்பிட்டுப் பாடியதையும் காண்க.

இன்னோரன்ன குறிப்புக்களினால் தமிழில் மறை உண்டென உணர்க. அந்தோ! இறைவர் சனகாதியர்கட்கு அருளிய மறைகள் மறைந்து போயின. என்றாலும், அந்நான் மறைகளின் உட்பொருளைத் தன்னகத்தே கொண்டு விளங்குவன நம் சைவத் திருமுறைகளும், திருக்குறளுமே ஆகும். இந்த உண்மையினை,

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திலமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

என்று ஔவை மூதாட்டியார் அறிந்து கூறிய அமுதவாக்கால் நன்கு உணரலாம்.

இந்தத் திருமுறைகளாம் தமிழ் மறையில் அமைந்த பல இரகசியங்களைச் சேக்கிழார் பெருமானார், வெளிப்பட எடுத்து மொழிந்துள்ளார். இதற்கு உதாரணம் வேண்டுவார் ஞான சம்பந்தர் பாடிய

" வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம் அரன்நாமமே
சூழ்க வையக மும்துயர் தீர்கவே"

என்று பாடிய திருப்பாட்டில் மறைந்து கிடக்கும் இரகசியப் பொருள்களை,

வேள்வி நற்பயன் வீழ்புன லாவது
நாளும் அர்ச்சனை நல்லுறுப் பாதலால்
ஆளும் மன்னனை வாழ்த்திய தர்ச்சனை
மூளும் மற்றவை காக்கும் முறைமையால்

ஆழ்க தீயதென் றோதிற் றயல்நெறி
வீழ்க என்றது வேறெல்லாம் அரன்பெயர்
சூழ்க என்றது தொல்லுயிர் யாவையும்
வாழி அஞ்செழுத் தோதி வளர்கவே

சொன்ன வையக மும்துயர் தீர்கவே
என்னும் நீர்மை இகபரத் தில்துயர்
மன்னி வாழுல கத்தவர் மாற்றிட
முன்னர் ஞானசம் பந்தர் மொழிந்தனர்

என்று வெளிப்படுத்திக் கூறியதைக் காண்க.

இவ்வாறு சேக்கிழார் பெருமானார் தம் நூலகத்து அரிய பெரிய குறிப்புக்களை வெள்ளிடைமலையெனப் பாடியமைத்த அருமைப் பாட்டை வியந்தே ஈண்டுத் திரு பிள்ளை அவர்கள் இப்பாட்டில், "தமிழ் மறை அடங்குபல மந்தண வெள்ளிடைத் தவிரும் வெற்பென விளங்க" என்ற அடிகளில் சுட்டி அருளினர்.

இவற்றுடன் இப்பெரிய புராணம் எங்கு எவர் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது என்பதை அறிவிக்கையில், "அனபாயன் மேய அவையகம்" என்று சுட்டி அறிவித்துள்ளனர். அனபாயன் காலத்தே இஃது அரங்கேற்றப்பட்டது என்பதைச் சேக்கிழார் பெருமானாரும் தம் நூலகத்து,

மேய இவ்வுரை கொண்டு விரும்புமாம்
சேய வன்திருப் பேரம் பலம்செய்ய
தூய பொன்னணி சோழன்நீ டூழிபார்
ஆய சீர்அந பாயன் அரசவை

என்று குறிப்பிட்டுள்ளார்.

இச் சோழ மன்னனுக்கு அபயன், குலோத்துங்கன் என்ற பெயர்களும் உண்டு. இதனை "சென்னி **அபயன் குலோத்துங்க சோழன்** தில்லைத் திருவெல்லை பொன்னின் மயமாக்கிய வளவர் போரே றென்றும் புவிகாக்கும் மன்னர் பெருமான் **அனபாயன்**" என்று சண்டேசுர நாயனார் புராணத்து வரும் பாடலில் காண்க. குலோத்துங்க சோழர் மூவர் இருந்திருக்கின்றனர். அவர்களுள் 1123—1148-ஆம் ஆண்டு வரை அரசு புரிந்த இரண்டாம் குலோத்துங்கனே ஈண்டு அநபாயன் எனப்பட்டான் என்பது சரித்திர ஆராய்ச்சி யாளரது துணிபாகும். எனவே, சேக்கிழார் காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்பதை ஈண்டே உறுதிப் படுத்திக் கொள்ளலாம்.

" காலம் களனே காரணம் என்றிம்
மூவகை ஏற்றி மொழிநரும் உளரே "

என்ற நூற்பாவில் கூறியபடி ஈண்டுக் காலத்தையும் களத் தையும் உணர்ந்தனம்.

இளங்கோவடிகள் சந்திரனைப் போற்றும்போது, கரிகால னது குடையினை உவமை காட்டி,

"திங்களைப் போற்றும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்த்தார் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்கண் உலகளித்த லான் "

என்று குறிப்பிட்டுள்ளார்.

இதனுள் கரிகாலனது வெண் கொற்றக் குடை "குளிர் வெண் குடை" என்று சிறப்பிக்கப்பட்டிருத்தலைக் காணும் போது, அம் மரபினனான அநபாயனது குடையும் அத்

தகையது என்பார் போன்று, ஈண்டுப் பிள்ளை அவர்கள், "வெப்பரிய முழுமதிக் குடைநிழற்று அநபாயன்" என்றனர். சேக்கிழார் பெருமானாரும் மனுச்சோழனது குடையினை, "தண்ணளி வெண்குடை" என்று கூறியுள்ளதையும் காண்க.

"அநபாயன் மேய அவையில் உள்ளார் மெய்ப்பாட்டினோடு பாராட்டி மகிழ" என்று கூறியதும் இந்நூல் அரங்கேற்றப் பட்டபோது, மக்கள் கொண்ட மனநிலையின் மாண்பைப் புலப்படுத்துவதாகும். மெய்ப்பாடு இன்னது என்பதை, "உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே, புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்றான் வெளிப்படுதல்" என்று உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் விளக்கியுள்ளார். இம் மெய்ப்பாடுகள் எவ்வெம் முறையில் வெளிப்படும் என்பதை ஒல்காப் பெருமையுடைய தொல்காப்பியம்,

" நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகைஎன்று
அப்பால் எட்டே மெய்ப்பா டென்ப "

என்று கூறுகிறது.

இத்தகைய மெய்ப்பாடுகளுள் சில மெய்ப்பாடுகளைக் காட்டி அவையினர் தொண்டர் புராணத்தைச் செவிமடுத்த காரணத்தைக் கொண்டே ஈண்டு, "மெய்ப் பாட்டினொடு பாராட்டி மகிழ" என்று கூறப்பட்டது.

இங்ஙனம் மெய்ப்பாட்டினுடன் பாராட்டி மகிழ்ந்தனர் அவையினர் என்பதை,

மருவுதிரு முறைசேர்ப்பார் எழுதுவார் இருந்து
வாசிப்பார் பொருளுரைப்பார் கேட்டிருப்பார் மகிழ்ந்து
சிரமசைத்துக் கொண்டாடிக் குதுகலிப்பர் சிரிப்பர்
தேவிப்பார் குன்றைமுனி சேக்கிழார் செய்த

அரியதவத் தினை நினைப்பார் அம்பலவர் முன்னாள்
அடிஎடுத்துக் கொடுக்கஇவர் பாடினார்என் றுரைப்பார்
பெரியபுரா ணம்கேட்ட வளவர்பிரான் செவிக்குப்
பிடிக்குமோ இனிச்சிந்தா மணிப்புரட்டென் றுரைப்பார்

என்ற உமாபதி சிவனார் வாக்கால் உணர்க.

மன்னர்களின் வெண்கொற்றக் குடையோடு சந்திரனை இயைபு காட்டல் கவிகளின் மரபாகும். சிலப்பதிகார ஆசிரியரும்,

''திங்களைப் போற்றுதும்''

என்று பாடியுள்ளது மேலே காட்டப் பட்டது. இதன் உள் கருத்தைக்கொண்டே ஈண்டு, ''வெப்பரிய வெண்மதிக் குடை நிழற்று'' என்று கூறப்பட்டுள்ளது.

குன்றையம்பதியே குன்றத்தூர். சென்னையிலிருந்து பல்லாவரம் அடைந்து அங்கிருந்து நாலு கல் தொலைவில் சென்றால் இதனை அடையலாம். அன்றிச் சென்னையிலிருந்து வெள்ளியூர் செல்லும் பேருந்தி (Bus) மூலமும் குன்றத்தூரை அடையலாம். இக் குன்றத்தூர், முன்னர்த் திருநாகேச்சரத்தையும், அதன் பின்னர் நத்தம் என்ற பெயரிய கிராமத்தையும் கொண்டு இரண்டாகத் திகழ்கிறது. நத்தமே சேக்கிழார் கோவில் திகழும் இடம். அவ்விடமே சேக்கிழார் பிறந்த இல்லம் என்பது இன்றுவரை சொல்லப்பட்டு வருகிறது. நத்தத்தில் சைவ வைணவ கோயில்கள் தமது பழமையினை விளக்கிக்கொண்டு இருக்கின்றன. இங்குக் கல்வெட்டுக்களையும் காணலாம். நத்தமே பழம்பெரு சிற்றூர் என்பதைத் தன்னகத்துக் கொண்ட தெருக்களாலும், பள்ளங்களாலும், மற்றும் சில குறிப்புக்களாலும் அறிவித்துக் கொண்டிருக்கிறது. சில ஆண்டுகட்கு முன்பு புதை பொருள் ஆராய்ச்சிக் குழுவினர் ஈண்டுப் புதை பொருள் ஆராய்ச்சியினைச் செய்தனர் என்றால், இதன் பழமைக்கு வேறு சான்றும் வேண்டுமோ? குளம் ஒன்றும்

*இங்கு உண்டு. இதனைச் சேக்கிழாரின் இளவலரான பாலரு வாயர் எடுத்ததாகக் கூறுவர். இதனை வற்புறுத்தும் நிலையில் அக்குளம், 'பாலருவாயர் குளம்' என்ற பெயரால் வழங்கப்பட்டு வருவதோடு, அப்பெயருடைய கல் ஒன்றையும் கரையில் பெற்றுத் திகழ்கிறது. முருகப் பெருமான் கோவில் ஒன்றும் சிறு குன்றில் திகழ்ந்து கொண்டிருக்கிறது. இன்னோரன்ன சிறப்பு இக்குன்றையம்பதி பெற்றிருத்தலின், "செப்பரிய குன்றையம்பதி" என்றனர்.* (14)

4. தாயவொளி இருள்தபுபொன் மாளிகைத் தில்லைச்
சபாநடன நாதர்பெத்தான்
சாம்பானை உய்த்தனம் நிருவாண தீக்கையால்
தகுமுத்தி அடைவிளன்றே
ஆயதிரு முகம்உய்த் திடப்பெற்ற கைலாய
அம்பரம் பரையில்அளவா
அருளுருவ மாய்அவை நரித்திட்ட மெய்ஞ்ஞான
அற்புத உமாபதிசிவன்
நேயமிக இம்மைக்கும் மறுமைக்கும் ஆதார
நிலயதீ தென்றுணர்ந்து
நினதுவர லாறருமை பாராட்டி அருள்செய
நிரம்புமான் மியமடைந்தாய்!
தேயநிகழ் குன்றையம் பதியருள் மொழித்தேவ
செங்கீரை யாடியருளே
திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக
செங்கீரை யாடியருளே.

**[அ. சொ.]** *தாய-பரவிய, தபு-ஒழிக்கும், கெடுக்கும், பெத் தான் சாம்பான்-பெத்தான் சாம்பான் என்னும் ஆதி திரா விடன் ஒருவன், உய்த்தனம்-உன்னிடம் அனுப்பியுள்ளோம், நிருவாண தீட்சை என்பது தீட்சை வகைகளுள் ஒன்று. தீட்சை என்பதன் பொருள் மலத்தைக் கெடுத்து*

ஞானத்தைக் கொடுப்பது என்பதாம். நிருவாணம்-மோட்சம், முத்தி, முத்தி-மோட்சம், திருமுகம்-கடிதம், உய்த்திடப் பெற்ற-கொண்டுவந்து கொடுக்கப் பெற்ற, நிலையது-இருப்பிடம், உமாபதிசிவம்-உமாபதி சிவாசாரியார், அளவா-அளவிட முடியாத, மெய்ஞ்ஞானம்-தத்துவஞானம், அற்புதம்-வியக்கத்தக்க செயல்கள், நேயம்-அன்பு, விருப்பம், இம்மை-இப்பிறப்பில் அனுபவிக்கும் இன்பம், மறுமை-மறு பிறப்பில் அனுபவிக்கும் இன்பம், மான்மியம்-பெருமை.

**விளக்கம்:** தில்லைச் சிதம்பரத் தலத்துள் திருவம்பலம் பொன்னால் வேயப்பட்டது. இங்ஙனம் இது பொன்னால் வேயப்பட்டது என்பதற்குரிய குறிப்புக்கள் பல சரித்திர வரலாறுகளாலும், தேவாரத் திருமுறைகளாலும் அறியப் படுகின்றன. திருப்புறம்பயக் கல்வெட்டினால் விக்கிரம சோழவள நாட்டின் அரசரான குலோத்துங்கர் சிதம்பரப் பேரம்பலம் பொன் வேய்ந்தமை புலனாகிறது. "சேயவன் **திருப்பேரம்பலம்** செய்ய தூய **பொன்னணி** சோழன்" என்று சேக்கிழார் கூறியுள்ளதையும் காண்க. அவரே மீண்டும், "தில்லைத் திருவெல்லை பொன்னின் மயமாக்கிய வளவர் போர் ஏறு" என்று பாடியுள்ளதையும் காண்க. இதனால் சேக்கிழார் பெருமானது வரலாற்றுப் புலமையும் நன்கு புலனாகின்றது. இவற்றை எல்லாம் உட்கொண்டே, "**தூய ஒளி இருள்தபு பொன் மாளிகைத் தில்லை**" என்று கூறப் பட்டது.

பெத்தான் சாம்பான் ஓர் ஆதித் திராவிடன். அவனுக்கு நிர்வாண தீட்சை செய்து முத்திப் பேறு அருளத் தில்லை நடராஜப் பெருமான் ஒரு கடிதம் உமாபதி சிவாசாரியாருக்கு எழுதி அனுப்பினர். அத் திருமுகப் பாசுரம்,

> " அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
> குடியார்க்கு எழுதிய கைச்சீட்டு—படியின்மிசை
> பெத்தான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
> முத்தி கொடுக்க முறை "

என்பது.

இத்திருமுகம் பெற்ற உமாபதி சிவாசாரியார் இறைவன் கட்டளையினைச் சிரமேற்கொண்டு, பெத்தான் சாம்பானுக்கு நிர்வாண தீட்சை செய்து முத்தி கொடுத்தார். தீட்சை யாவது முத்திக்கு ஏதுவாகிய தீட்சை.

ஞானகுருவானவர் மாணவனது பரிபக்குவ நிலைகளை அறிந்து கன்மங்களைப் போக்கி, அவனது ஆன்மாவை இறைவனது திருவடிகளில் ஒடுக்கி, மாணிக்கத்தைச் சேர்ந்த படிகம் போலத் தற்போதம் ஒடுங்க, திருவருள் குணங்கள் விளங்கச் சிவானந்தம் மேவிடச் செய்வர். இவ்வாறு செய்யப்படுவதே இங்குக் கூறப்பட்ட நிர்வாண தீட்சை என்பது. இந் நிர்வாண தீட்சை இரண்டு வகைப்படும். ஒன்று சத்தியோ நிர்வாணம், மற்றொன்று அசத்தியோ நிர்வாணம். முன்னது தீட்சை முடிவிலேயே மோக்கம் தருவது. பின்னது தேக முடிவில் வீட்டின்பம் தருவது.

பெத்தான்சாம்பான் தில்லைக் கூத்தப்பெருமானிடம் அன்புடைய ஓர் ஆதித் திராவிடன். கோயிலுக்கு விறகு வெட்டிக் கொணர்ந்தளிக்கும் தொண்டு புரிந்தவன். அவனது பக்குவம் கண்டு நடராசப் பெருமான் உமாபதி சிவத்திற்குக் கடிதம் அனுப்பி அவனுக்கு முத்தி கொடுக்கக் கட்டளையிட்டார். உமாபதி சிவம் அங்ஙனமே செய்தனர். அவனது மனைவி அரசனிடம் சாமியார் தன் கணவனைக் கொன்று விட்டார் என்று முறையிட்டபோது, அரசனே நேரில் வந்து உமாபதிசிவத்தைக் கேட்க, அவர் நடந்ததைக் கூறித் தீட்சையின் பெருமையை விளக்கி அவன் முன் முள்ளிச் செடிக்கும் சட்சுதீட்சை செய்து முத்தி கொடுத்தார். இதுவே பெத்தான்சாம்பான் முத்தி பெற்ற வரலாறு.

கொற்றவங்குடி உமாபதி சிவாசாரியார் அந்தணர் மரபினராக இருந்தும், ஆதி திராவிட மரபினனான பெத்தான் சாம்பானுக்கு நிர்வாண தீட்சை செய்து முத்தி பெறுமாறு செய்த செயலை உற்று நோக்கும்போது, உண்மை அந்தணர்களின் இயல்பு இன்னது என்பதை

"அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்"

என்று வள்ளுவப் பெருந்தகையார் கூறிய கூற்றுக்கு இயைய எடுத்துக்காட்டாக அமைந்தவர் உமாபதி சிவாசாரியார் என்பது புலப்படுகிறது. மேலும் அவர், சிவப்பிரகாசம் முதலான சைவ சித்தாந்த மெய்ந்நூல்கள் பலவற்றையும் கோயில் புராணம், சேக்கிழார் புராணம், ஆதியாய நூல்கள் பலவற்றையும் அருளிச் செய்த மெய்ஞ்ஞானப் பேரறிஞர் ஆவர். இவர் மெய்ஞ்ஞான அற்புத உமாபதியாவார் என்பதற்கேற்பத் தாம் மெய்ஞ்ஞானவிடயங்களையே புகல வல்லவர் என்பதை அவர் வாக்கான,

புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப்
புகல்அளவைக் களவாகிப் பொற்பணிபோல் அபேதம்
பிறப்பிலதாய் இருள்வெளிபோல் பேதமும்சொல் பொருள்போல்
பேதாபே தமும்இன்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனல் விளைவதாய் உடலுயிர்க்கண் அருக்கன்
அறிவொளிபோல் பிரிவரும்அத் துவித மாகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்க லுற்றும்

என்ற பாடலாலும் காணலாம்.

திருக்கைலாய பரம்பரையாவது இன்னது என்பதைச் சிறிது சிந்திப்போம். கைலைப் பெருமானது அருள் ஞானப் பெருக்குக் குருசந்தானம் ஆகும். ஆகவே, இது கயிலாயத் தினின்றும் தோன்றியது என்பதை உணர்தல் வேண்டும். இச் சந்தான வழியாக இரு சந்தானங்கள் கிளைத்தன. ஒன்று அகச்சந்தானம், மற்றொன்று புறச் சந்தானம். அகச் சந்தான ஆசிரியர்கள் திருநந்தி தேவர், சனற் குமார முனிவர், சத்தியஞான தரிசினிகள், பரஞ்சோதி முனிவர் என்பவர்கள். இந்த நான்கு ஆசாரியப் பெருமக்களைத் தேவசந்தானத்தார் என்பர்.

இதன்பின் ஸ்ரீ மெய்கண்ட தேவரை முதல்வராகக் கொண்டு புறச் சந்தானம் தழைக்கலாயிற்று. இச்சந்தான

குரவர்கள் ஸ்ரீ மெய் கண்ட தேவர். ஸ்ரீ அருள்நந்திசிவம், ஸ்ரீ மறைஞான சம்பந்தர், ஸ்ரீ உமாபதி சிவாசாரியர்.

ஸ்ரீ உமாபதி சிவாசாரியாரால் நியமனம் பெற்றவர் ஸ்ரீ அருள்நமச்சிவாயர். இவர்பால் தீட்சை பெற்றவர், சித்த மூர்த்திகளாகிய ஸ்ரீ சிவப்பிரகாசர். இவர் ஸ்ரீ பஞ்சாட்சர மூர்த்திகள் என்று போற்றப்படும் ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளைத் திருவாவடுதுறையில் ஆதீன முதல்வராக நியமித்தனர். அதனால் இவ்வாதீனம் ஸ்ரீ பஞ்சாட்சர தேசிகர் ஆதீனம் எனப் பெயர் பெற்று விளங்குகிறது. ஸ்ரீ மெய் கண்ட நாயனார் முதல் ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள் வரையுள்ள இந்த ஆசாரிய பரம்பரை பூதபரம்பரை எனப்படும். முன் கூறிய தேவ பரம்பரையும், இப்பூதபரம்பரையும் உபதேச பரம்பரை எனப்படும். இதற்கு மேல் விளங்கிவருவது அபிஷேக பரம்பரையாகும்.

இம்மரபு முறைகளை எல்லாம் உள்ளடக்கியே ஆசிரியர் 'கைலாய அப்பரம்பரை' என்றனர். இக் கைலாய பரம்பரையில் இதுபோது திருவாவடுதுறையில் இருபத்தோராவது குருமகா சந்நிதானமாக அருள் செங்கோல் நடத்திக்கொண்டு ஞானதானம், பொருள்தானம் ஆகியவற்றை வரையாது அருள் செய்து கொண்டு சைவசமயத்தை ஓம்பி வரும் பரமாசாரியர் ஸ்ரீ ல ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் ஆவார்.

இவை அனைத்தையும் உட்கொண்டே, 'நடனநாதர் உமாபதி சிவன்' என்று உமாபதி சிவனார் பெருமையினை ஈண்டுச் சிறப்பித்தனர். இவர் சேக்கிழார் வரலாற்றைப் பாடிய அருமையினை 'நினது வரலாறு பாராட்டி அருள்செய' என்று குறிப்பிட்டனர். உமாபதி சிவனார் சிறந்த மெய்ஞ்ஞானி. அந்தண மரபினர். அத்தகையவரே சேக்கிழார் வரலாற்றைப் பாடியுள்ளார் எனில், சேக்கிழார் பெருமை அளவிடற்கரியதன்றோ! அதனால் '**மாண்மியம் அடைந்தாய்**' என்று ஈண்டும் சிறப்பிக்கப்பட்டார். சேக்கிழார் வரலாறு இம்மைக்கும் மறுமைக்கும் ஆதார நிலையது என்றதையும் **கூர்ந்து கவனிக்க.**

5\. பொருந்துமா யிரமுகக் கங்கைமர பில்கதிர்கள்
பொலியுமா யிரம்உள்ளவன்
போல்தோன்றி ஆயிரம் மறைக்கும்எட் டாச்சென்னி
பொற்பஆ யிரமுடையகோன்
மருந்துநேர் அருள்பெற்ற மைக்கேற்ப ஆயிரம்
வயங்குபொன் கால்நிறீஇய
மண்டபம் இவர்ந்தா யிரம்தொண்டர் வரலாறு
வாய்மலர்ந் தவவாவிவாய்
இருந்துசூழ் கொழுவுண்டு புண்டரீ கத்தின்வாய்
இயைபுல வுறத்துவட்டி
இருஞ்சங்க னம்பேடெ னத்தழுவி நாணமுற்
றியல்பேடு மற்றென்றுனும்
செருந்துசூழ் குன்றையம் பதியருள் மொழித்தேவ
செங்கீரை யாடியருளே
திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக
செங்கீரை யாடியருளே.

*(ஆ.சொ)* *கங்கை மரபு-வேளாளர் குலம், பொலிவும்-விளங்கும், கதிர்கள் பொலியும் ஆயிரம் உள்ளவன் சூரியன், ஆயிரம் மறை-அளவில்லாத வேதம், ஆயிரம் என்றது அளவிட முடியாத என்னும் பொருளது, முகம்-வழிக்கால்கள், பொற்ப-அழகுற, ஆயிரமுடையகோன்-இறைவன், மருந்து-தேவாமுதம், நேர்-நிகரான, கால்-தூண், வயங்கு-விளங்கும். நிறீஇய-நிறுவப்பெற்ற, இவர்ந்து-ஏறி, 'மலர்ந்தவ-திருவாய் மலர்ந்தவரே, வாவிவாய்-குளத்தில், கொழு-நிணத்தை, புண்டரீகத்தின்வாய்-தாமரைமலரில், இயை - கலந்து' இருந்து, புலவு-புலால் நாற்றம், உற-பொருந்த, துவட்டி-வாடச்செய்து, இருஞ்சங்கு-பெரியசங்கை. அனம்-அன்னம், பேடு-தன் பெண் அன்னம் என்று, இயல்-பொருந்திய, மற்று-வேறென்று, உனும்-எண்ணும், செருந்து-செருந்தி மலர்.*

**விளக்கம்:** கங்கை பல கால்களாகப் பரவி ஓடுதலின், ஆயிரமுகக் கங்கை எனப்பட்டது. கங்கை ஆயிரமுகமாகத் தோன்றுகிருள் என்பதை ஆளுடைய அரசர்,

''கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை
ஆயிரமா முகத்திஞெடு வானில் தோன்றும்''

என்றும்,

மையறு மனத்த ஞய பகீரதன் வரங்கள் வேண்ட
ஐயமில் அமரர் ஏத்த ஆயிரம் முகம தாகி
வையகம் நெளியப் பாய்வான் வந்திழி கங்கை என்னும்
தையலேச் சடையில் ஏற்ருர் சாய்க்காடு மேவி ஞரே.

என்றும் பாடியருளியதைக் காண்க.

சூரியன் பல கிரணங்களேப் பெற்றமையின் ''கதிர்கள் பொலியும் ஆயிரம் உள்ளவன்'' எனப்பட்டான். ''ஆயிரம் ஞாயிறு போலும் ஆயிரம் நீள் முடியானும்'' என்பது தேவாரம். இறைவன் வேதங்கிடந்து தடுமாறு வஞ்சவெளி யாதலின், ''ஆயிரம் மறைக்கும் எட்டாச் சென்னி பொற்ப ஆயிரம் உடையகோன்'' எனப்பட்டான்.

''எதிர்மறை எட்டும் தோறும் வஞ்சஞய் அகல்வான்'' என்னும் பரஞ்சோதியார் வாக்கையும் உணர்க. இறைவன் திருவுருவமும் பல்லாயிரத் தோற்றத்துடன் பொலிவிட வல்லது ஆதலாலும், 'சென்னி பொற்ப ஆயிரம் உடையகோன் எனப்பட்டான். இதனேத் திருஞானசம்பந்தர் வாக்காகிய,

நொடியோர் ஆயிரம் உடையார்
நுண்ணிய ராம்அவர் நோக்கும்
வடிவ மாயிரம் உடையார்
வண்ணமும் ஆயிரம் உடையார்
முடியும் ஆயிர ம்உடையார்
மொய்குழ லாளேயும் உமையாள்
வடிவும் ஆயிரம் உடையார்
வாழ்கொளி புத்தூ ருறைவாரே.

என்பதையும், திருநாவுக்கரசர் வாக்காகிய,

ஆயிரம் தாமரை போலும் ஆயிரம் சேவடி யானும்
ஆயிரம் பொன்வரை போலும் ஆயிரம் தோளுடையானும்
ஆயிரம் ஞாயிறு போலும் ஆயிர நீண்முடி யானும்
ஆயிரம் பேருகத் தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே

என்பதையும் கண்டு தெளிக.

மருந்து என்றது ஈண்டுத் தேவாமுதத்தை என்க. இப் பொருள் இச் சொல்லுக்குண்டு என்பது,

விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டாற்பாற்று அன்று

என்ற இடத்து வந்துள்ளதைக் கொண்டு தெளிக.

சேக்கிழார் தமது பெரிய புராணத்தை இயற்றிய இடம் சிதம்பரம் ஆயிரக்கால் மண்டபம் ஆகும். இதனைத் திருத் தொண்டர் புரண வரலாற்று நூல்,

வந்துசூழ் நிரைத்த ஐஇரு
நூறு கால்மணி மண்டபத்
தெந்தையார் திருவருளை உன்னி
இருந்து சேவையர் காவலர்
செந்த மிழத்தொடை யால்வி
ளங்கிய திருவி ருத்தனுர்
தந்தசொல் முதலாஎ டுத்தனர்
தாணு வானபு ராணநூல்

கூறுகிறது. இவை அனைத்தையும் இயைத்தே, ''இவர்ந்து** மலர்ந்தவா'' என்று விளித்தருளினர்.

சங்குகள் வெண்ணிறமாக இருந்தன. அவ்வெண்ணிறச் சங்குகளை ஆண் அன்னம் தன் பெடை அன்னம் என்று எண்ணித் தழுவியபின்னர், அது பெடையன்னம் அன்று என்று அறிந்து நாணமுற்றுத் திரும்பிய செயல் ''சங்கம் அனப் பேடு எனத் தழுவி நாண'' என் குறிப்பிடப்பட்டிருப்பது, இலக்கியச் சுவைக்கு ஏற்றதாகும். இவ்வாறு கூறப்பட்டது மயக்க அணிக்கு ஏற்ற உதாரணமாகும்.

இவ்வாறு அஃறிணையின் ஆண் உயிர் இனங்கள் மயங்கித் தம்மினப்பேடு என்று கருதிக் கொள்வதைத் திரு ஈங்கோய்மலை எழுபது என்னும் நூலில்,

பிடிபிரிந்த வேழம் பெருந்திசைநான் கோடிப்
படிமுகிலைப் பல்காலும் பார்த்திட்டு—இடரா
இருமருப்பைக் கைகாட்டும் ஈங்கோயே வானோர்
குருவருட்குன் றாய்நின்றான் குன்று

எனப் பாடப்பட்டுள்ளதைக் காண்க.

பெரிய புராணத்துள் கூறப்பட்டவர் வரலாறுகள் நம்பி ஆண்டார் நம்பிகள் கருத்துப்படியும், சைவ சமயத்தவர்களின் தொன்று தொட்டு அறிந்து வந்த கருத்துப்படியும், (பொய்யடிமை இல்லாத புலவர் தொகை அடியர் அல்லர்; தனிஅடியார்களுள் ஒருவரே ஆவர் என்ற கருத்து ஆராய்ச்சி உலகில் நிலவி வருவதாலும், அடியேன் எழுதியுள்ள நூலாகிய பொய்யடிமை இல்லாத புலவர் யார்? என்னும் நூல்வழி பொய்யடிமை இல்லாத புலவர் தொகை அடியார் அல்லர். தனியடியாரே. அத்தனி அடியாரும் மாணிக்கவாசகரே என்றும் எழுதி இருப்பதால் இங்ஙனம் குறிப்பிட்டனன்) ஒன்பது தொகை அடியாரும், அறுபத்து மூன்று தனி அடியாரும் ஆக எழுபத்திரண்டு அடியவர்கள் வரலாறு என்பது வெளிப்படையாக இருந்தாலும், சேக்கிழார் பெருமானார் அப்பாலும் அடிச்சார்ந்த அடியார் யாவர் என்பதைக் குறிப்பிடுகையில்,

மூவேந்தர் தமிழ்வழங்கும் நாட்டுக் கப்பால்
முதல்வனார் அடிச்சார்ந்த முறைமை யோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையில் கூறும்
நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும்
பூவேய்ந்த நெடுஞ்சடைமேல் அடம்பு தும்பை
புதியமதி நதிஇதழி பொருந்த வைத்த
சேவேந்து வெல்கொடியார் அடிச்சார்ந் தாரும்
செப்பியஅப் பாலும்அடிச் சார்ந்தார் தாமே

என்று குறிப்பிட்டிருப்பதால் அடியார் தொகை பற்பல ஆதலின், "ஆயிரம் தொண்டர் வரலாறு வாய் மலர்ந்தவ" என்றனர்.

கரிகால் சோழன் தொண்டை நாட்டைவளமாக்கி நாற்பத்தெண்ணுயிரம் குடிகளைக் குடிபுகுந்து வாழச் செய்தவன். அக்குடிகளுள் சிறப்புக்குரியவராகக் குறிப்பிடத் தக்கவை புரிசைகிழான், வெண்குளப்பக் கிழான், சேக்கிழார், கூடல் கிழான் என்பவர்களின் குடிகள் ஆகும். சேக்கிழான் என்பதன் பொருள் எருதுகளின் துணை கொண்டு வயல்களை உழுது வாழும்வேளாளனைக் குறிப்பதாகும். இச்சேக்கிழான் குடியே முதல் முதல் தொண்டை நாட்டில் குடியேறிய வேளாள மரபாகும். இம் மரபினர் பல கோட்டங்களில் குடியேறினர். இப்படிக் குடியேறியவர்களுள் நமது சேக்கிழார் தலைசிறந்து விளங்கி வேளாள குலத்தின் பெருமையை விளக்கியதால் "இவரை வேளாள குலதிலக" என்று போற்றினர். (16)

6. தோம்பல உடையேம் பிறவியை அஞ்சேம்
சுடர்நின் சினகரம்முன்
தூரகேம் மெழுகேம் இரவும் பகலும்
துதியேம் ஆயினும்
நாம்பல தேவரை நண்ணேம் எண்ணேம்
நயவேம் வியவேமால்
நாள்மலர் பலகொடு நின்அடி ஏத்தி
நயத்தலை மேற்கொண்டு
கூம்பல்செய் கையேம் எய்யேம் இதனில்
கோமான் நீஅருளும்
கூலியை வன்கோல் அவாயது நல்கில்
குலாவும் உவப்புறுவேம்
ஆம்பல் அவாவுதல் மேய புயாசல
ஆடுக செங்கீரை
ஆர்அருள் ஆகர சேவையர் காவல
ஆடுக செங்கீரை

(அ.சொ.) ஆம்பல்-குவளை மலர், அவாவுதல்-விரும்புதல், மேய-பொருந்திய, புயாசல-மலைபோன்ற தோள்களையுடையவரே, ஆகர-இருப்பிடமாய் உள்ளவரே, சேவையர்-வேளாளர், காவல-தலைவரே, தோம்-குற்றம், சினகரம்-கோயில், சுடர்-ஒளியுடைய, தூகேம்-குப்பைக் கூளங்களைக் கூட்டமாட்டோம், நண்ணேம்-சேரமாட்டோம், நயவேம்-விரும்ப மாட்டோம், வியவேம்-அதிசயத்துப் பாராட்டமாட்டோம், நாள்-புதிய, அன்று அன்று மலர்ந்த, கொடு-கொண்டு, ஏத்தி-துதித்து, நயத்தலை-அன்புகொள்ளுதலை, கூம்பல்-கைகளைக் குவித்தல், எய்யோம்-பின்னிடமாட்டோம், இளைக்கமாட்டோம், கோமான்-தலைவரே, எவன்கொல்-எது அவாயது-விரும்பியது, நல்கில்-தந்தால், குலாவும்-விளங்கும், மகிழும் உவப்பு-மகிழ்ச்சியை, உறுவோம்-அடைவோம்.

**விளக்கம்:** பெரியோர்கள் தாம் நற்குண நற்செய்கையுடையராயினும், தாம் நற்குணம் இல்லாதவர் போல் கூறிக்கொள்ளுதல் அவர்கள் இயல்பு. "பணியுமாம் என்றும் பெருமை" என்பதன்றோ வள்ளுவர் வாக்கு! அந்த முறைக்கு இணங்க அப்பர் பெருமானார் கூறியதையும் ஈண்டு நினைவு படுத்திக்கொள்ளலாம்.

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானி யல்லேன்
நல்லாரோடு இசைந்திலேன் நடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லேன் இரப்பதே ஈய மாட்டேன்
என்செய்வான் தோன்றினேன் ஏழை யேனே

என்ற தாண்டகத்தைக் காண்க. ஈண்டுக் குற்றமே பெரிதுடையேன் என்பதற்கேற்பத் **தோம்பல உடையேம்** என்றார். இறப்புக்கும் பிறப்புக்கும் அஞ்சுதல் வேண்டும். ஞானிகளும் இவற்றிற்கு அஞ்சியுள்ளனர்.

வஞ்சநம வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சே உனைஅடைந்தேன் ஐயா பராபரமே

என்றார் தவராச சிங்கமாம் தாயுமானாரும். மணிமொழி யாரும் தம்மைப்பற்றிக் கூறும்போது, "யானே தும்பிறப் பஞ்சேன் இறப்பதனக்கு என் கடவேன்" என்றும்,

ஆமாறுன் திருவடிக்கே
அகம்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன்
புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோயில்
தூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன்
சதுராலே சார்வானே

என்று கூறினார். இத்திருவாசகப் பாடல் கருத்தே ஈண்டுத் "தோம் பல உடையேம் என்பது முதல் துதியேன்" என்ற வரைப் பாடப்பட்டுள்ளது. கோவிலைத் தூவுதலும், மெழுகு தலும் செய்யவேண்டும் என்பதுதான் நமது சைவ சித்தாந் தத்தில் கூறப்படும் சரியை மார்க்கமாகும். ஆளுடைய அரசும் தம் நெஞ்சை நோக்கி,

நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதி என்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே

என்று கூறியருளினார்.

அலகிட்டு மெழுக்கும் இட்டு என்ற தொடரைக் கவனிக்க.

அவ்வச் சமயத்தவர், அவர் அவர் தெய்வங்களையே வழிபடுதல் வேண்டும். இதில் தவறுதல் கூடாது. தவறினால்

அவர்கட்கு இம்மையிலும் அம்மையிலும் தண்டனை விதித்தல் முறையே ஆகும். இதனைத் திருமூலர் நன்கு தெளிவு படுத்தியுள்ளார்.

தத்தம் சமயத் தகுதியில்நில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன ஆகம நூல்நெறி
எத்தண் டமும்செயும் அம்மையில் இம்மைக்கே
மெய்த்தண்டம் செய்வதவ் வேந்தன் கடனே

என்பதைக் காண்க. ஆகவே, அவர் அவர் வழிபடு கடவுளை வணங்கி அவர் அவர் சமய ஒழுகலாற்றை மேற்கொள்ளுதல் வேண்டும். அதனால்தான் "**நாம் பல தேவரை நன்னோம் வியவோமால்**" என்றனர். இதற்கு மேற்கோளாக,

கொள்ளேன் புரந்தரன் மாலயன்
வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல்
லால்நர கம்புகினும்
என்ளேன் திருவரு ளாலே
இருக்கப் பெறின்இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னைஅல்
லால்எங்கள் உத்தமனே

என்ற திருவாசகப் பாடலை எடுத்துக்காட்டலாம். இறைவனை நம் வசப்படுத்தற்கு எளிய முறை நீராலும் மலராலும் வழி படுதலே ஆகும். இதனையே, "ஆராலும் அளவிடற்கரியவனை ஒருகரத்து நீராலும், மலராலும், நெஞ்சுருகப் பணலாமே" என்றார் சைவ எல்லப்ப நாவலர். இதனால் யமபாதையி லிருந்தும் விலகலாம். இதனை அப்பர்,

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக் கோநம னால்முனி வுண்பதே

என்றனர்.

இறைவன் திருமுன் நின்று மெய்ம்மயிர் பொடிப்ப இரு கைகளையும் சிர மேற்குவித்து வணங்குதல் முறை. அச்செய்

கைகளை உளத்தில்கொண்டே "நாள்மலர்கொடு நின் அடி ஏத்தி நயத்தலை மேற்கொண்டு கூம்பல் செய்கையேம்" என்று இவ்வாறு கூறப்பட்டது.

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்துன்
விரையார் கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி
சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழ விடேன்உடை
யாய்என்னைக் கண்டுகொள்ளே

என்ற மணிமொழியார் மணிவாக்கையும் காண்க.

நாம் இறைவற்கு உகந்த செயல்களைச் செய்தால் அதற்காகக் கூலிகேட்கும் உரிமை நமக்கு உண்டு. அப்பர் பெருமானார் தாம் மேற்கொண்ட செயற்கு இறைவனை நோக்கிக் கூலி கேட்கிறார். அதனை,

கருவாய்க் கிடந்துன் கழலே நினையும்
கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன்
உன தருளால்
திருவாய் பொலியச் சிவாய நமஎன்று
நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி
யூர்அரனே

என்ற திருப்பாடலில் காண்க. இக்கருத்தை ஒட்டி அன்றோ ஈண்டுத் திரு பிள்ளை அவர்கள் கோமான் நீ அருளும் கூலி எவன் கொல்? என்று வினவுகின்றார். விரும்பியது கிடைத்தால் எவர்க்கும் மகிழ்ச்சிதானே! அதனையே ஈண்டு 'அவாயது நல்கில் குலாவும் உவப்புறுவேம்" என்றார். சேக்கிழார் உத்தமச் சோழப்பல்லவர் என்ற பட்டம் பெற்று

மன்னன்போல் விளங்கினமையின் கோமான் எனப்பட்டார்.

ஒவ்வொரு மரபினர்க்கு ஒவ்வொரு மலர் அடையாள மலராக அமைவது தமிழரது மரபாக உள்ளது. பார்ப்பனர்களுக்குத் தாமரை மலர் அடையாள மலராகும். இதனைச் சுந்தரரே நன்கு குறிப்பிட்டுள்ளார். 'அல்லியம் தாமரைத் தார் ஆரூரன்' என்பது சுந்தரர் வாக்கு. ''மறையவர்தம் குரிசில் வயல் நாவலாரூரன் என்று சுந்தரர் தம்மை அந்தணர் என்றதையும் காண்க. பெரியாழ்வார் தம்மைத் ''திருவில்லிபுத்தூர் மறைவாணன் பட்டர் பிரான்'' என்று கூறிக் கொள்கிறார். இவரது மாலையைப்பற்றி ஸ்ரீஆண்டாள் அம்மையார் கூறும்போது, ''அணிபுதுவைப் பைங்கமலத் தார் தெரியல் பட்டர்பிரான்'' என்று பாடியுள்ளார். திருவிளையாடலில் ''தேமன் முல்லைத் தீந்தார்ச் சிறுதகை வணிகற் காக'' என்ற இடத்து வணிகர்க்கு முல்லைமலர் உரித்தாதலைக் காண்க. இம்முறைக்கு இணங்க ஈண்டு வேளாளர் குலத் திலகராம் சேக்கிழார் பெருமானுர்க்கு உரிய ஆம்பல்மலர் உரித்து என்பதை ''ஆம்பல் அலரவுதல் மோதுபாசல'' என்று கூறினர். முன்பும் இவ்வாறே கூறப்பட்டது.

அரசர் ஆவார் முடியுடை வேந்தர்களாகிய சேர பாண்டிய சோழர்களே ஆவர். அவர்கட்குரிய மலர்கள் முறையே பனம்பூ, வேம்பு மலர், ஆத்திப் பூ ஆகும். இதனை ஒல்காப் பெருமையுடைய தொல்காப்பியம்,

வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்
போந்தை வேம்பே ஆர்என வருஉம்
மாபெருந் தானையர் மலைந்த பூவும்

என்றனர். ஆகவே, அவ்வம் மரபினர்கட்கும் மலர் அடையாளமாக இருத்தலை உணர்க.

வேளாளர்களுக்குத் தொழில் உழுதுண்டு வாழ்தலாகும். இதனைத் தொல்காப்பியர்,

வேளாளர் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி

என்று குறிப்பிட்டுள்ளார். இங்ஙனம் உழுதுண்டு வாழும் வேளாளர்கட்குள் உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என இருவகையினர் இருத்தலின், அவர்களுள் சேக்கிழார் உழுவித்துண்ணும் மரபினருள் ஒருவர் என்பதை நினைப்பிப்பார்போல் "சேவையர் காவல" என்றனர்.

அநபாயன் சைவனாக இருந்தும், சமண நூலாகிய சிந்தாமணியில் ஈடுபட்டிருந்தான். அந்தோ! புறச்சமய நூலைக் கேட்டால் இம்மைக்கும் அம்மைக்கும் நன்மை ஏற்படாதே என்ற அருளுள்ளம் காரணத்தால் எண்ணிச் சிவனடியார் வரலாற்றைக் கேட்குமாறு செய்த திருவுள்ளம் காரணமாகச் சேக்கிழார் **ஆர் அருள் ஆகர** என்று கூறப்பட்டார்.

"வளவனும்குண் டமண்புரட்டுத் திருட்டுச் சிந்தா
மணிக்கதையை மெய்யென்று வரிசை கூற
உளமகிழ்ந்து பலபடப்பா ராட்டிக் கேட்க
உபயகுல மணிவிளக்காம் சேக்கி ழார்கண்
டிளவரசன் தனைநோக்கிச் சமணர் பொய்நூல்
இதுமறுமைக் காகாதிம் மைக்கும் அற்றே
வளமருவு கின்றசிவ கதைஇம் மைக்கும்
மறுமைக்கும் உறுதிஎன வளவன் கேட்டு"

என்ற சேக்கிழார் புராணப் பாடலையும் காண்க. (17)

7. புண்ணிய முதலே பொங்கொளி மணியே
பொய்யாப் பெருவாழ்வே
பொள்ளலில் முத்தே கள்ளமில் வித்தே
புரையில் சுவைப்பாகே
தண்ணிய அமுதே மண்ணியல் மதியே
தமிழ்நா வலர்ஏறே
சத்துவ நிதியே பொத்திய மலநோய்
சாடு பெரும்பகையே
எண்ணிய அன்பர் உளத்தமு தூற
இனிக்கும் நறுந்தேனே
என்றும் பத்தி ரசம்கனி கனியே
எந்நா ளினும்எங்கட்
கண்ணிய பொருளே ஆய்பவர் தெருளே
ஆடுக செங்கீரை
ஆரருள் ஆகர சேவையர் காவல
ஆடுக செங்கீரை

(அ. சொ) பொள்ளல்-துளை, புரை-குற்றம், மண்-நிலஉலகில், இயல்-விளங்கும், மதியே-சந்திரனே, நாவலர்-பேசும் ஆற்றலுடைய செந்நாவினைப் படைத்த அறிஞர்கள், ஏறே-தலைவரே. சத்துவம்-நன்மையை நோக்கும், நன்மை வாய்ந்த, நிதியே-பொக்கிஷமே, பொத்திய-நிறைந்துள்ள, மலநோய்-ஆணவ கன்ம மாயைகளால் ஏற்பட்ட துன்பங்களை, சாடும்-அழிக்கும். நறுந்தேன்-மணமுள்ளதேன், அண்ணிய, நெருங்கியுள்ள, இனிக்கும்படியான தெருளே-அறிவாய் விளங்குபவரே.

**விளக்கம்:** இச்செய்யுளைப் பாராயணம் செய்து கொண்டிருந்தாலே சேக்கிழாரது திருவருள் கிட்டும். சிவ பெருமானே அடி எடுத்துக் கொடுக்கத் தம் நூலைப்பாடத் தொடங்கினமையின் புண்ணிய முதல் ஆயினர். இவரது புகழ் மங்காது நிற்றலின், இவர் பொங்கொளிமணியே எனப்பட்

டார். வேளாளர் குலமே பொய்கூறுக் குலமாதலின், பொய்யாப் பெருவாழ்வே எனப்பட்டார். இவர் வாக்கிலும் பொய்வராமையின் இல்வாறு எனப்பட்டார் எனினும் ஆம்.

மணிகள் ஒன்பான் வகைப்படும். அவற்றுள் முன்னர் வைத்து எண்ணப்படுவது வைரம் ஆகும். அதுவே மணி என்னும் பெயர்க்கும் உரியது. அதற்கு அடுத்தாற்போல் சிறப்புக்குரியது முத்து. வைரத்தைக் குறிப்பிடுகையில் நலங்கேழ் ஒளி என்றனர். இந்திரசாசத்து இகல்ஒளி என்றும் கூறி ஒளியின் சிறப்பினைக் கூறுவர். இங்கு ஆசிரியர் பொங்கொளி மணியே என்றனர். மணியை யாரும் விரும்பி ஏற்றுப் பெருமையுறுதல்போல், சேக்கிழார் பெருமானாரையும் சிறப்பாகச் சைவ உலகமும் பொதுவாக ஏனை உலகமும் போற்றிப் புகழ்தலின், பொங்கொளிமணியே என்றனர். Dr. H. W. Schomerus என்பவர் ஜர்மானிய மொழியில் பெரிய புராணத்தை மொழிபெயர்த்துள்ளார். ஆகவே, சேக்கிழார் ஒவ்வொருவரும் விரும்பும் மணிபோல் இருத்தலைக் காண்க.

சேக்கிழார் எதையும் ஒளிமறைவு இன்றிக் கூற வல்லவர். அடியார்கள் ஒழுக்கநெறியில் வழிவினுல் அதனையும் கூறியே விடுவர். திருநீலகண்டரைப்பற்றிக் கூறுகையில், ''இளமை மீதூர இன்பத்துறையினில் எளியராஞர்'' என்று அவரது பரத்தமையைப் பற்றிக் கூறியதைக் காண்க. ஆகவே, இவரைப் பொய்யாப் பெருவாழ்வே என்றனர்.

முத்துக்களுக்கு நான்கு பெரும் குற்றங்களும், ஆறு நடுத்தரக் குற்றங்களும் உண்டு என்று ஸ்மிருதி ஸாரோத்திர நூல் கூறுவதாக நவரத்தின ஆராய்ச்சி அறிஞர் திருவாவடுதுறை T. S. வைத்தியநாதன் அவர்கள் தமது நவமணிகள் என்னும் நூலில் கூறியுள்ளனர். அவர் காட்டியுள்ள குற்றமுடைய முத்தைப் போன்றவர் அல்லர் சேக்கிழார். இவர் ''பொள்ளலில் முத்து'' ஆவார். கம்பர் ராமனைக் கண்ட வீதி மாதர்கள் காமுற்றனர் என்பதைத் தெள்ளத் தெளியப் பாடியுள்ளார்.

மைச்கருள் கூந்தல் செவ்வாய் வாள்நுதல் ஒருத்தி உள்ளம்
நெக்கென உருகுகின்றாள் நெஞ்சிடை வஞ்சன் வந்து
புக்கனன் போகா வண்ணம் கண்ணெனும் புலங்கொள்
வாயும்
சிக்கென அடைத்தேன் தோழி சேருதும் அமளி என்றாள்

என்று கம்பர் பாடிய பாட்டால் மிதிலா நகரத்து மாதர்கள் பெரிதும் காம உணர்ச்சி உடையவர்கள் என்பதைப் பெற்றோம். இவ்வாறு மாதர்களைப்பற்றிக் கம்பன் கூறியிருப்பது ஒரு குற்றமாகச் சிலர் கருதுவர். சேக்கிழார் இவ்வாறான கட்டத்தைக் கூறும்போதும், சுந்தரரைக் கண்ட மாதர்கட்கு எந்தவிதமான காமக் குறிப்பும் தோன்றாத நிலையில் சுந்தரரைக் கண்டு புகழ்ந்தனர் என்பதை அழகுற,

கண்கள்எண் ணிலாத வேண்டும்
காளையைக் காண என்பார்
பெண்களில் உயர நோற்றாள்
சடங்கவி பேதை என்பார்
மண்களி கூர வந்த
மணம்கண்டு வாழ்ந்தோம் என்பார்
பண்களில் நிறைந்த கீதம்
பாடுவார் ஆடு வார்கள்

என்று பாடியுள்ளார். கம்பரைக் குற்றமுடையவராகக் கருதுவதற்கு இடம் இருப்பதுபோலச் சேக்கிழார் பாடலில் இல்லாமையில் இவர் பொள்ளலில் முத்துப் போன்றவர் என்பதில் ஐயம் உண்டா?

ஆளுடைய நம்பிகள் சங்கிலியாரின் அழகைக் கண்டும் சொற்களைக் கேட்டும், வாய் அமுதமாம் முத்தம் உண்டும் உறுப்புக்களை மோந்து தழுவியும் இன்புற்று மகிழ்ந்திருந்தார்

என்பதைச் சிறிதும் ஒளிமறைவு இல்லாமல்,

பண்டுநிகழ் பான்மையினால் பசுபதிதன் அருளாலே
வண்டமிழ்பூங் குழலாரை மணம்புணர்ந்த வன்
தொண்டர்

புண்டரிகத் தவள்வனப்பைப் புறங்கண்ட தூநலத்தைக்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றமர்ந்திருந்தார் காதலினுல்

என்று பாடியுள்ளார். இத்துடன் நிற்காமல் மேலும்,

யாழின்மொழி எழில்முறுவல்
இருகுழைமேல் கடைபிறழும்
மாழைவிழி வனமுலேயார்
மணிஅல்குல் துறைபடிந்து
வீழும் அவர்,

என்றும் பாடியிருத்தலைக் காணும்போது, சேக்கிழாரின் கள்ளமிலா உள்ளத்தைக் காணலாம். இவ்வாறே கள்ளம் கபடம் இன்றிப் பாடவேண்டும் என்பதற்கு விதை போட்டவர் ஆதலின், இவரை கள்ளமில்லா வித்தே என்றனர். குளிர்க்கு உடைந்து தலைவனும் தலைவியும் ஒன்று சேர்ந்து கட்டித் தழுவிப் படுத்திருந்தனர் என்பதை,

நீடியஅப் பதிகள்எலாம்
நிரைமாடத் துறையுள்தொறும்
பேடையுடன் பவளக்கால்
புலவொடுங்கப் பித்திகையின்
தோடலர்மென் குழல்மடவார்
துணைக்கலச வெம்முலையுள்
ஆடவர்தம் பணைத்தோளும்
மணிமார்பும் அடங்குவன

என்று இத்துணைச் சுவைபடப் பாடியுள்ளதால் இவரைப் புரையில் சுவைப் பாகே என்றனர்.

பெரிய புராணக் கவிகள் படிக்கப் படிக்கப் அமுதுபோல இனிக்கும்படி இவர் பாடி இருத்தலின், தண்ணிய அமுதே எனபட்டனர். சேக்கிழார் தம் கவிகள் அஞ்ஞான இருளை நீக்கி மெய்ஞ்ஞான ஒளிக்கு இடமாய் இருக்கப் பாடி இருத்தலின், மண்ணியல் மதியே எனப்பட்டனர். குன்றைக் கோமகனுர் சொல்வன்மையில் ஈடும் எடுப்பும் அற்றவர்.

இதனைத் திருமணப் பந்தலில் விருத்த வேதியராக வந்த இறைவருக்கும் நம்பியாரூரருக்கும் நடந்த பேச்சுவழி நன்கு உணரலாம், நம்பியாரூரர்.

ஆசில்அந் தணர்கள் வேறோர் அந்தணர்க் கடிமை ஆதல்
பேசஇன் றுன்னைக் கேட்டோம் பித்தனோ மறையோய்
என்றார், இதற்கு விடையாக வந்த முதியவர்,

பித்தனும் ஆக பின்னும் பேயனும் ஆக நீயின்று
எத்தனை தீங்கு சொன்ன யாதுமற் றவற்றால் நாணேன்
அத்தனைக் கென்னை ஒன்றும் அறிந்திலை ஆகில் நின்று
வித்தகம் பேசவேண்டா பணிசெய்ய வேண்டும் என்றார்

இங்ஙனம் பாடிய பாடல்கள் வழி, சேவையர்காவலர் நாவலர் ஏறு என்பதில் தடையுண்டோ?

சேக்கிழார் எவரும் விரும்பி ஏற்றுக்கொள்ளும் நிலையினர் ஆதலின், பொள்ளலில் முத்தே எனப்பட்டார். மன்னனுக்குத் தம் கருத்தில் பட்டதைக் கூறி அவகதையினைக் கேளாதவாறு செய்து சிவ கதையினைக் கேட்குமாறு செய்ததனால் கள்ளமில் வித்தே எனப்பட்டார். சேக்கிழாரை எண்ணினும் அவர் திருப் பெயரைக் கூறினும் இனித்தல் பற்றி, சுவைப்பாகே எனப்பட்டார். இவரது பாடல்களைப் படித்து வந்தாலே அவைகள் இம்மைக்கும் மறுமைக்கும் நன்மை தந்து அமுதுபோல் சாகாமைக்கு வழி காணுதலின் அமுதே எனப்பட்டார், வானத்தன்றி மண்ணில் மதியென மிளர்தலின் மதியே எனப்பட்டார். தமிழ்ப் புலவர்கட்கு எல்லாம் தலைவராய் வைத்துப் போற்றப்படுதலின் **நாவலர் ஏறே** எனப்பட்டார். நன்மைதரும் சொற்களைத் தம் நூலில் பெய்திருப்பதனால் சத்துவ நிதியே எனப்பட்டார். இவரது நூல் மும்மலங்களை நீக்கவல்லது ஆதலின் மலநோய் சாடும் பெரும்பகையே எனப்பட்டார். இவர் மும்மலங்களும் நீக்கிய பெரியார் ஆதலின் இங்ஙனம் கூறப்பட்டார். இதனை இவரே செய்வண்ணத்திறம் மொழிவேன், தீவினையின் திறம் ஒழிவேன் என்றதனாலும் அறியலாம், அன்பர்கட்கு இனிமையானவர் பற்றி நறுந்தேனே எனப்பட்டார். பத்திச்

சுவை நனிசொட்டச் சொட்டக் கவி பாடியவர் ஆதலின், பத்திரசம் கனி கனியே எனப்பட்டார். அன்பர்கட்கு அண்மையராய் இருந்து இனிமை அருள்பவர் ஆதலின், அண்ணிய பொருளே எனப்பட்டார். இவர் தம் நூலை ஆராய்பவர்கட்கு, இவர் அறிவு விளக்காய் இருந்து ஒளி தருதலின் ஆய்பவர் தெருளே எனப்பட்டார் இவ்வாறெல்லாம் சிறப்பித்துக் கூறப்படும் பெருமைக்குரியவர் சேக்கிழார். இங்குக் கூறப்பட்ட தொடர்கட்குரிய பொருளை மேலே வரும் இடங்களில் இன்னமும் விரிவாக எழுதப்படும். ஆண்டு ஆண்டுக் காண்க. (18)

8. சூழியம் மேவிய கொண்டை விளங்கத்
தொட்டுக் கட்டியபொன்
சுட்டி இலங்கப் புண்டர நீறு
துதைந்து நிலாக்கால
வாழிய கனிவாய் ஊறல் தேறல்
மார்பில் வழிந்தோட
வடிகா தில்புனை குழையில் செவ்விய
மணிஇள வெயில்வீச
விழிய வாவிய வாய்இள முறுவல்
விளங்க அரைப்பொன்நாண்
மின்னுக் காலப் பேரெழில் நோக்குநர்
விழிகள் விருந்துசெய
வாழிய அன்பர் அகத்தமர் செஞ்சுடர்
ஆடுக செங்கீரை
ஆரருள் ஆகர சேவையர் காவல
ஆடுக செங்கீரை

(அ. சொ.) சூழியம்-உச்சியில் குழந்தைகட்கு அணியும் ஒருவகை ஆபரணம், சுட்டி - நெற்றியில் அணியும் ஆபரணம், இலங்க-விளங்க, புண்டரநீறு-திரிபுண்டரமாக

நெற்றியில் அணியும் திருநீறு, துதைந்து-மிகுந்து, நிலா-ஒளியை, கால-வீச, ஊறல்-குழந்தைகள் வாயினின்று ஒழுகும் உமிழ்நீர், தேறல்-தேன், வடிகாது-தொங்கும் காது, புனை-தரித்த, குழையில்-காதணியிலிருந்து, வெயில்—ஒளி, வீழி-விழுத்திப்பழம் வீழிப்பழம், அவாவிய-விரும்பிய, முறுவல்-புன்னகை, அரை-இடையில், நாண்-காயிறு, மின்னு-ஒளி, கால-வீச, எழில்—அழகை, விருந்து-புதுமை, அகத்து-உள்ளத்தில், சுடர்-ஒளியே.

**விளக்கம்:** ஈண்டுச் சேக்கிழார் பெருமானார் குழந்தைப் பருவத்தில் இருக்கும் காட்சியே கவினுறக் கூறப்படுகிறது. இக்குழந்தை எல்லா அணிகலன்களை அணிந்திருப்பினும், திருநீருகிய காப்பையும் அணிந்திருப்பதுதான் சிறப்பினும் சிறப்பாகும். எந்நிலையில் இருப்பினும் எக்கோலம் கொள்ளினும் திருநீற்றுக் காப்பு அணிவதில் மறதி இருத்தல் கூடாது. சுந்தரர் நரசிங்கமுனை அரையர் என்னும் மன்னனது வளர்ப்புப் பிள்ளையாக வளர்க்கப் பட்டவர். அந்நிலையிலும் தம் வைதிக ஒழுக்கத்திலிருந்து சிறிதும் ஒருவிலர். இதனை,

மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க
நன்னகர் விழவு கொள்ள நம்பிஆரூரர் நாதன்
தன்னடி மனத்துள் கொண்டு தகுந்திரு நீறு சாத்திப்
பொன்னணி மணியார் யோகப் புரவிமேல் கொண்டு
போந்தார்

என்று பெரியபுராணம் கூறுதல் காண்க.

திருநீறு ஒளியுடையது. அவ்வொளி நில ஒளிபோல் தண்ணிய ஒளி தரவல்லது. இதனைச் சேக்கிழார், "அண்ணல் வெண்ணீற்றொளி போன்றது நீண்நிலா" என்றே கூறியுள்ளார். இக்கருத்துப் பொதுளவே ஈண்டு "புண்டர நீறு துதைந்து நிலாக்கால" எனப்பட்டது. குழந்தைகளின் வாய் செவ்விய வாய் ஆகவே "கனிவாய்" என்றனர். 'பூநாறும் செய்யவாய்" என்றனர் புகழேந்தியார். குமரகுருபரர் குழந்தையின் வாய் நீரை "மழவுமுதிர் கனிவாய்ப்

பசுந்தேறல் விரல்சுவை உண்டு கனிந்த முதூறிய மேல் இதழ்'' என்றனர். எனவே, ஈண்டு, கனிவாய் ஊறல் தேறல் எனப்பட்டது.

சேக்கிழார் பெருமானுர் எழில் அதில் ஈடுபட்டவர்கள் கண்களுக்குப் பெருவிருந்தாய் இருந்தது என்றது உண்மை. வெறும் புகழ்ச்சி இல்லை. இதனை உமாபதி சிவம்,

வாரணத்தில் இவரைவரக்'கண்டதிரு வீதி [நாட்டிப்
மறுகுதொறும் தூய்மைசெய்து வாழைகளும்
பூரணகும் பமும்அமைத்துப் பொரியும்மிகத் தூவிப்
பொன்அரிமா லையும்நறும்பூ மாலைகளும் தூக்கித்
தோரணங்கள் நிரைத்துவிரை நறும்தூபம் ஏந்திச்
சுடர்விளக்கும் ஏற்றிஅணி மணிவிளக்கும் ஏந்தி
ஆரணங்கள் விரித்தோதி மாமறையோர் எதிர்கொண்
டறுகெடும்ப வாழ்த்தெடுத்தார் அரம்பையர்கள்
எல்லாம்

என்றும்,

மின்மழை பெய்தது மேக ஒழுங்குகள்
விண்ணவர் கற்பக விரைசேர்பூ
நன்மழை பெய்தனர் சேவையர் காவலர்
நாவலர் இன்புற நாவாரச்
சொன்மழை பெய்தனர் இரவலர் மிடிகெட
அள்ளி முகந்தெதிர் சோழேசன்
பொன்மழை பெய்தனன் உருகிய நெஞ்சொடு
கண்மழை அன்பர் பொழிந்தார்கள்

என்று குறிப்பிட்டிருப்பது கொண்டு தெளியலாம். இது பற்றியே ''பேர் எழில் நோக்குநர் விழிகள் விருந்து செய'' எனப்பட்டது.

இங்குச் சேக்கிழார் விளங்கும் தோற்றத்தைப்போலவே நம் முத்துக்குமரனும் விளங்கிய நிலையை நம் குமரகுருபரர் பாடியிருப்பதையும் அறிதல் நலமே யாகும்.

குழையொடு குழைஎதிர் மோதிக் காதணி
குண்டலம் வெயில் வீசக்
குமுத இதழ்க்கனி வாயமு தூறிய
குறுநகை நிலவூர
முழுவயி ரம்புய வலயமு முன்கை
முதாரியும் ஒளிகால
முத்தம் அரும்பி எனக்குறு வேர்வு
முகத்தில் அரும்பியிடப்
புழுதி அளைந்த பசுந்திரு மேனிப்
பொங்கொளி பொங்கிஎழப்
புண்டரி கங்கள் மலர்ந்த விழிக்கடை
பொழிஅருள் கரைபுரள
அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனி
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை

சேக்கிழார் பெருமானார் அடியார்தம் அகத்தில் ஞான சூரியனாய் எழுந்தருளி, அவர்தம் அஞ்ஞான இருளை நீக்கு கின்றமையின், அவரை ஈண்டு அன்பர் அகத்தமர் செஞ்சுர் என்றனர். இவர் நூல் இங்ஙனம் அகஇருளை நீக்கவல்லது என்பது,

இங்கிதன் நாமம் கூறின் இவ்வுல கத்து முன்னால்
தங்கிருள் இரண்டில் மாக்கள் சிந்தையுள் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர் புராணம்
என்பாம்

என்ற பெரியபுராணப் பட்டாலும் நன்கு தெரிய வருகின்றது. அவரது புராணமே இங்ஙனம் அக இருளைப் போக்கவல்லதாயின், அவர் போக்கவல்ல ஞான சூரியர் என்பதைக் கூறவேண்டா அன்றே!

உமாபதி சிவாசாரியார் "செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழார் அடிபோற்றி" என்றும், வடநூல் கடலும் தென்னூல் கடலும் நிலைகண்டுணர்ந்த சிவஞான முனிவர்,

தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகையினை
வாக்கி னுல்சொல்ல வல்ல பிரான்எங்கள்
பாக்கி யப்பய னுய்ப்பதி குன்றைவாழ்
சேக்கி ழானடி சிந்தை இருத்துவாம்

என்றும் போற்றி, தம் உளத்தில் கொண்டுள்ளமையினை நோக்கும்போது அன்பர் அகத்தெல்லாம் சேக்கிழார் அமர்ந்துள்ளனர் என்பது புலனுகிறது. (19)

9. இவர்சரி யையர்இவர் கிரியையர் யோகத்
தினர்இவர் இவர்ஞான
இயல்பினர் இவர்இல் லறத்து வழாதவர்
இவர்துற வறம்நின்ருர்
கவர்மனம் மொழிஇவர் பிரமச ரியநிலை
கைகொண் டோர்இவரே
கண்குளிர் வேடம் பொருள்என நம்பினர்
கருதரும் இவர்ஆதித்
தவர்நிலை உணரா அருளினன் இறைவன்
தக்கன உலகறியச்
சாற்றினன் அவன்அவ னேஉல கறியச்
சாற்றிய படிஎன்ன
அவரவர் செயல்முதல் அருளிய வல்லவ
ஆடுக செங்கீரை
ஆரருள் ஆகர சேவையர் காவல
ஆடுக செங்கீரை

(அ. சொ.) *சரியையர்-சரியை என்னும் மார்க்கத்தை மேற்கொண்டவர், கிரியையர்-கிரியை என்னும் நிலையை மேற்கொண்டவர், யோகத்தினர் - யோகமார்க்கத்தினை மேற்கொண்டவர், ஞான இயல்பினர்-ஞானமார்க்கத்தில் ஒழுகியவர், வழாதவர்-தவருதவர், கவர்-மாறுபட்ட, ஆதி-முதலிய, சாற்றியபடி-கூறியவிதமே,*

**விளக்கம்:** இப்பாடலின் தொடக்கம் இறைவனை அடைதற்குரிய நான்கு மார்க்கங்களின் பெயர்களைக் குறிப்பிடுகிறது. ஆகவே, அந்நான்கு மார்க்கங்களின் தன்மைகளை உணர்தல் முறையாகும். அந்நான்கு மார்க்கங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இந்நான்கு மார்க்கங்களும் முறையே தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம் எனப்படும். இந்த நான்கு மார்க்கங்களும் சிவனை அடையும் நன்மார்க்கங்கள் என்பதை,

சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம்
 தாதமார்க் கம்என்றும் சங்கரனை அடையும்
நன்மார்க்கம் நாலவைதாம் ஞான யோகம்
 நற்கிரியா சரியையென நவிற்றுவதும் செய்வார்
சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்ய
 சாரூப்பிய சாயுச்சியம் என்றுசதுர் விதமாம்
முன்மார்க்க ஞானத்தால் எய்தும் முத்தி
 முடிவென்பர் மூன்றினுக்கும் முத்திபதம் என்பர்

என்ற சிவஞான சித்தியார் திருப்பாடலால் அறியலாம்.

இப்பாடலால் அவ்வவ் மார்க்கத்தினர் அடையும் முத்தி நிலையும் குறிப்பிட்டிருப்பதையும் உணரலாம். இந்நான்கும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையன. இதனை நன்கு விளக்கவே தாயுமானவரும்,

" விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே "

என்று அருளிச் செய்தார்.

ஆகவே, இந்நான்கு மார்க்கத்தின் பயன் சாலோகம் சமீபம், சாருபம் சாயுச்சியும் அடைதல் என்பது பெறப்படுகிறது.

**சரியையாவது** (தாசமார்க்கம்) இறைவனை ஆகம முறைப்படி வழிபடுவதாகும். இதுவே, சரியை என்பது. திருக்கோயில் திருப்பணி செய்தல், சிவமூர்த்தங்களை வழி

படல் அடியாரைப் பூசித்தல் ஆகிய புறத்தொழிலால் இறைவனை நோக்கி நோக்கிச் செய்யும் வழிபாடாகும் என லாம். இறைவர் மணிமொழியார்க்கு உபதேசித்த உபதேச மொழிகள் கொண்டும் இக் கருத்தைத் தெளியலாம்.

ஆவ லால்எமக் காம்மலர் மரங்கல் ஆக்கல்
அம்மலர் பறித்தல்அம் மலரால்
தாவி லாவகை தார்பல சமைத்தல் தணப்பில்
எம்புகழ் சாற்றல்அன் புடனும்
மேவும் ஆலயம் அலகிடல் மெழுகல் விளங்க
நல்விளக் கிடுதல்எம் அடியார்க்
சேவல் ஆனவை செய்தல்இச் சரியை இயற்ற
வல்லவர்க் கெம்உல களிப்போம்

என்பது வாதவூர் அடிகள் புராணம்.

சிவஞான சித்தியாரும் இம்மார்க்கத்தின் இயல்பை இவ்வாறே எடுத்து இயம்புகிறது. அதுவே,

தாதமார்க் கம்சாற்றில் சங்கரன்தன் கோயில்
தலம்அலகிட் டிலகுதிரு மெழுக்கும் சாத்திப்
போதுகளுக் கொய்துபூந் தார்மாலை கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதில்திரு விளக்கிட்டுத் திருநந்த வனமும்
செய்துதிரு வேடங்கண் டால்அடியேன் செய்வ
தியாதுபணி யீர்என்று பணிந்துஅவர்தம் பணியும்
இயற்றுவதிச் சரியை செய்வோர் ஈசன்உல கிருப்பர்

என்பது.

இவ்வாறு இச் சரியை மார்க்கத்தைத் தாம் மேற் கொள்ளவில்லையே என்று மணிமொழியார் மொழிவதையும் காண்க.

" ஆமாறுஉன் திருவடிக்கே
அகம்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன்
புகழ்ந்துரையேன் புத்தேளிர்

கோமான்நின் திருக்கோயில்
தூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன்
சதுராலே சார்வானே ''

என்பது திருவாசகம்.

இச் சரியை மார்க்கத்தில் ஈடுபடுக என்று தம் நெஞ்சுக்கு அப்பர் அறிவுறுத்திய அறவுரையினையும் ஈண்டுக் காண்க.

நிலபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கராசய போற்றி போற்றி என்றும்
அனைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதி என்றும்
ஆரூரா என்றென்றே அலறு நில்லே

இது அப்பர் வாக்கு.

**கிரியையாவது** (சத்புத்திர மார்க்கம்) மேலே கூறப்பட்ட சரியையானது முதிர்ந்து வரவர, இறைவனது நுண் வடிவே பொருளென்றும், பருவடிவம் அதனை வழிபடுதற்குரிய திருமேனி என்றும் உணர்ந்து அகத்தாலும் புறத்தாலும் ஆகமநெறிப்படி வழிபடுவதாகும். சுருங்கக் கூறின் அகத் தொழில் புறத்தொழில் இரண்டினாலும் சிவனது அரு வுருவத் திருமேனியாகிய இலிங்கத்தை வழி படுவதாகும். இதுவே பொருள் என்பதை,

புத்திரமார்க் கம்புகலில் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனம்அமுது முதல்கொண்டைந்து
சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்தி மானும்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினால் அருசித்துப் பரவிப் போற்றிப்
பரிவினொடும் எரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலும்இக் கிரியையினை இயற்று வோர்கள்
நின்மலன்தன் அருகிருப்பர் நினையும் காலே

என்று சிவஞான சித்தியாரும்,

கந்த வர்க்கமும் கிளர்மணப் புகையும்
கவின்கொள் தீபமும் புனிதமஞ் சனமும்
கொந்த விழ்ந்தநல் மலரும்மற் றுளவும்
கொண்டு மாயையின் குணங்கள்ஒன் றிலராய்
ஐந்து சுத்திசெய் தகம்புறம் இறைஞ்சி
அங்கி யின்கடன் முடித்தருள் வழிநின்
றிந்த நற்பெருங் கிரியையன் புடனே
இயற்ற வல்லவர் எம்மருங் கிருப்பர்

என்று மணிமொழியார்க்கு மணிகண்டர் உபதேசித்த உபதேச மொழிகளும்,

நறைமலி தருமள ரொடுமுகை
நகுமலர் புகைமிகு வளர்ஒளி
நிறைபுனல் கொடுதனை நினைவொடு
நியதமும் வழிபடும் அடியவர்
குறைவில பதமணை தரஅருள்
குணமுடை இறையுறை வனபதி
சிறைபுனல் அமர்சிவ புரமது
நினைபவர் செயமகள் தலைவரே

என்ற ஆளுடைய பிள்ளையார் அருள்மொழிகளும்,

நின்போல் அமரர்கள் நீள்முடி
சாய்த்து நிமிர்த்துகுத்த
பைம்போ துழக்கிப் பவளம்
தழைப்பன பாங்கறியா
என்போ லிகள்பறித் திட்ட
இலையும் முகையும்எல்லாம்
அம்போ தெனக்கொள்ளும் ஐயன்ஐ
ஆறன் அடித்தலமே

என்ற ஆளுடைய அரசுகளின் ஆர்வ மொழிகளும்,

முத்தனே முதல்வா முக்கணா முனிவா
மொட்டறா மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யும்

சித்தனே செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே

என்ற மணிமொழியாரது மாண்புறு மொழிகளும் குறிப்பிடு வனவற்றால் உணரலாம்.

**யோகமாவது** (சகமார்க்கம்) அகப்புறச் செயல்களால் ஆகம முறைப்படி வழிபட்டபின், அகவழிபாட்டால் இறைவனைப் பூசிப்பதாகும். அதாவது தியான சாமதிகளான அகத் தொழில் ஒன்றினால் இறைவனது அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. இதனை வாதவூரர் புராணம்,

முக்கு ணம்புலன் ஐந்துடன் அடக்கி
மூல வாயுவை எழுப்பிரு வழியைச்
சிக்கெ னும்படி அடைத்தொரு வழியைத்
திறந்து தாண்டவச் சிலம்பொலி யுடன்போய்த்
தக்க அஞ்செழுத் தோர்எழுத் துருவாம்
தன்மை கண்டருள் தரும்பெரு வெளிக்கே
புக்க ழுந்தினர் எம்உருப் பெறுவார்
புவியில் வேட்டுவன் எடுத்தமென் புழுப்போல்

என்று விளக்குகிறது. சிவஞான சித்தியார்,

சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி இரண்டும்
சலிப்பற்று முச்சதுர முதலாதா ரங்கள்
அகமார்க்கம் அறிந்தவற்றின் அரும்பொருள்கள் உணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி அலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க அமுதுடலம் முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகள்
உகமார்க்க அட்டாங்க யோகம் முற்றும்
உழத்தலுழந் தவர்சிவன்தன் உருவத்தைப் பெறுவர்

என்று கூறுகிறது.

ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆன கெடுப்பன அஞ்செ ழுத்துமே

என்று திருஞான சம்பந்தரும் இந்த யோக மார்க்கம் இன்னது என்பதைக் குறிப்பிட்டனர்.

தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள் நாள்தொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேஓர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துளே
ஆடுவன் ஆடுவன் ஆமாத் தூர்எம் அடிகட்கே

என்ற சுந்தரர் செந்தமிழும் யோகமார்க்க இயல்பினைக் குறிப்பிடுதலைக் காணலாம்.

அப்பர் பெருமானார் சிவயோக மார்க்க நிலையினை அறிவிக்கும்கால்,

உயிரா வணம்இருந்து உற்று நோக்கி
உள்ளக் கிழியின் உருவெழுதி
உயிரா வணம்செய் திட்டுஉன்கைத் தந்தால்
உணரப் படுவாரோ டொட்டி வாழ்தி
அயிரா வணம்ஏறு தான்ஆன் ஏறுஏறி
அமரர்நா டாளாதே ஆரூர் ஆண்ட
அயிரா வணமேஎன் அம்மா னேநின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லா தாரே

என்று கூறிப் போந்தார்.

**ஞானமார்க்கமாவது** (சன்மார்க்கம்) சரியை, கிரியை யோக முதிர்ச்சியால் சரீரத் தொழில் மனத் தொழில், இரண்டையும் விடுத்து, கேட்டல், சிந்தித்தல் ஆகிய அறிவுத் தொழிலில் இறைவனை வழிபட்டு நல்வழிப்படுவதாகும். மேலும், இதனை விளக்கினால் இறைவன் அருவுருவம் கடந்த திருஉரு உடையவராகக் கேட்டல் ஆதியாய ஞானமார்கத்தின்படி அறிவால் வழிபடுதல் என்லாம்.

இதனைத் தெள்ளத் தெளியச் சிவஞான சித்தியார்,

சன்மார்க்கம் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவும் கீழாக மேலாம்
பதிபசுபா சம்தெரித்துப் பரசிவனைக் காட்டும்

நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடு ஞாதிருவு நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே

என்று கூறுகிறது.

வாதவூரர் புராணம் இதனை அறிவிக்கும்போது,

பரந்த வான்கலை முழுதுமா கமநூல்
பகுதி யும்பல சமயசாத் திரமும்
தெரிந்து தேர்ந்ததில் வாய்ந்தமுப் பொருளின்
செய்தி யேபொருள் எனமனம் தெரிந்து
புரிந்து போந்துள சிற்றறி வனைத்தும்
போக்கி அவ்வறி வெனச்சிவ போதம்
விரிந்து தோன்றுநெஞ் சுடையவித் தகரே
மேன்மை யானநம் மெய்ப்பதம் பெறுவார்

என்று கூறுகிறது.

ஆக, இவையே சரியை, கிரியை, யோகம், ஞானம் இன்ன என்பவை. இந்நால்வகை நெறிகளையும் மேற்கொண்ட நாயன்மார்கள் யாவர் என்பதை எடுத்து மொழிந்த பெருமை சேக்கிழார் பெருமானுர்க்கு இருந்தமையால் இவர் "சரியை*** ஞான இயல்பினர்" என்று கூறிப் பாராட்டினர். இக்கருந்துக்கு எடுத்துக்காட்டாக நாயன் மார்களுள் சிலரைக் காண்போமாக.

கணம்புல்ல நாயனுர் இறைவர்க்குத் திருவிளக்கிட்டுத் தொண்டு செய்த சரியை நெறியினர். இதனைச் சேக்கிழார், "தாவாத பெருஞ்செல்வம் தலைநின்ற பயனிது என்று ஓவாத ஒளிவிளக்குச் சிவன் கோயில் உள் எரித்து நாவாரப் பரவுவார்" என்று குறிப்பிட்டனர். சரியை மார்க்கத் தினர்க்கு விளக்கெரித்தலும் ஒரு நெறியாகும். இதனைச் சரியையின் இலக்கணம் கூறிய இடத்துக் காண்க.

கிரியா நெறிக்கு உரியவராகக் குங்கிலியக் கலைய நாயனுரைக் குறிப்பிடலாம். கிரியா நெறியினர் தூபம் இடுவர் என்பது முன்னர் விளக்கப்பட்டது.

பாலனும் மறையோன் பற்றப்
பயங்கெடுத் தருளுக ஆற்றல்
மாலும்நான் முகனும் காணு
வடிவுகொண் டெதிரே வந்து
காலனார் உயிர்செற் றூர்க்குக்
கமழ்ந்தகுங் குலியத் தூபம்
சாலவே நிறைந்து விம்ம
இடும்பணி தலைநின் றுள்ளார்

என்று குங்கிலியக்கலயர் தொண்டு பற்றிச் சேக்கிழார் கூறியுள்ளார்.

பெருமிழலைக் குறும்பனார் யோக நெறியினர் என்பதைச் சேக்கிழார்,

நாலு கரணங் களும்ஒன்றாய்
நல்ல அறிவு மேற்கொண்டு
காலும் பிரம நாடிவழிக்
கருத்துச் செலுத்தக் கபாலநடு
ஏல வேமுன் பயின்றநெறி
எடுத்த மறைமூ லந்திறப்ப
மூல முதல்வர் திருப்பாதம்
அடைவார் கயிலை முன்அடைந்தார்

என்று பாடியுள்ளார்.

பெருமிழலைக் குறும்பர் சிறந்த யோகி என்பதைத் துறைமங்கலச் சிவப்பிரகாசரும், "பெருமிழலைக் குறும்பரெனும் **பரம யோகி**" என்று சிறப்பித்துள்ளனர். யோகியர் செயலைப் பற்றி முன்னர் விளக்கப்பட்டதையும், இந்நாயனார் செயலையும் ஒத்திட்டுப் பார்ப்பின், இவர் யோகியர் என்பது தெள்ளத் தெளிய அறிய வரும். திருமூல நாயனார் ஞான நெறிக்கு ஏற்ற சான்றாய் இருப்பவர். அவரைப் பற்றிக் கூறவந்த இடத்துச் சேக்கிழார் பெருமானார்,

உள்ளுணர் வான ஞான முதலிய ஒருநான் குண்மை
தெள்ளுதீந் தமிழால் கூறும் திருமூலர்

என்றும்,

முழுதுணர்ந்த மெய்ஞ்ஞானச் சிந்தையினில்
வந்தசெயல் ஆராய்ந்து தெளிகின்றார்

என்றும் கூறிப் போந்தார்,

இல்லறத்தில் வாழ்ந்தவர், திருநீலகண்ட நாயனார். இவர் இல்லற நெறியினர் என்பதை "வையகம் போற்றும் செய்கை மனையறம் புரிந்து வாழ்வார்" என்று கூறப்பட்டிருப்பதால் உணரலாம்.

துறவற நெறியில் நின்றவராக விறல் மிண்டரை எடுத்துக் காட்டலாம். துறவு உள்ளம் படைத்தவர்க்கு உரிய உபதேசம் இன்னது என்பதை வள்ளுவனார்,

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

என்று கூறியிருப்பதற்கு இணங்க விறல்மிண்ட நாயனாரும்,

அப்பொற் பதியின் இடைவேளாண்
குலத்தை விளக்க அவதரித்தார்
செப்பற் கரிய பெருஞ்சீர்த்திச்
சிவனார் செய்ய கழல்பற்றி
எப்பற் றினையும் அறஎறிவார்
எல்லை தெரிய ஒண்ணாதார்
மெய்ப்பத் தர்கள்பால் பரிவுடையார்
எம்பி ரானார் விறல்மிண்டர்

என்று சேக்கிழாரால் கூறப்பட்டிருத்தலின், இவர் துறவற நெறியினர் என்பது புலனாயிற்று.

கவர்மனம் ஒழியவர் (அதாவது வஞ்சகமாகப் பொருளைக் கவரும் மனத்தை ஒழித்தவர்) என்பதற்குரியவராக அமர்நீதி நாயனாரைக் காட்டலாம். அவரிடம் இறைவர் கோவணம் ஒன்றைக் கொடுத்து மீண்டு வந்து பெற்றுக் கொள்வதாகக் கூறிச் சென்றனர். அதனை இவர் வாங்கிப் பத்திரப்படுத்தி வைத்தனர். அமர் நீதியாரிடம் வந்தவர் இறைவர் ஆதலின் அக்கோவணம் மறையுமாறு செய்தனர். இறைவர். பின்னர் வந்து அக்கோவணத்தைத் தருமாறு கேட்டபோது, அக்கோவணம் வைத்த இடத்தில் இராமை

கண்டு நாயனார் திடுக்கிட்டு, இறைவர் முன்வந்து. "அடிகள், நீர் தந்த கோவணத்தை வைத்திடத்து நான் கண்டிலன். மற்றும் ஓர் இடத்தில் உய்த்து ஒளித்தனர் இல்லை. அஃது ஒழிந்தவாறு அறியேன்" என்று கூறியதால், இவர் கவர்மனம் ஒழியவர் என்பது தெரிகிறது. இனி, கவர் என்பதற்கு வசப்படுதல் எனப்பொருள் கண்டு, மனத்தைக் கவரும் மொழிபேசுபவர் எனினும் பொருள் காணலாம், அதுபோது அத்தொடர் கவர்மன மொழியிவர் என்று ஆகும்.

பிரம்மசாரிய நிலையினை மேற்கொண்ட நாயனார் சண்டேசுரர் ஆவார். அவர் அந்நிலையினர் என்பதை,

அன்பு புரியும் பிரமசா ரிகளும்
மூழ்கி அரனார்க்கு
முன்பு போல மணல்கோயில்
ஆக்கி முகைமென் மலர்கொய்து
பின்பு வருஆன் முலைபொழிபால்
பெருகும் இடங்கள் பேணும்இடம்
தன்பால் கொணர்ந்து தாபித்துப்
பிறவும் வேண்டு வனசமைத்தார்

என்ற சேக்கிழார் வாக்கால் அறியலாம்.

சிவ வேடத்தையே மெய்ப் பொருளெனக் கொண்டவர் மெய்ப்பொருள் நாயனார். இவரைப் பற்றிச் சேக்கிழார் குறிப்பிடும்போது, "மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள் எனத் தொழுது வென்றார்" என்றே பாடியுள்ளார்.

மேலும், சேக்கிழார் பெருமானார் நாயன்மார்களின் செயல்களையும் ஒழுங்காகக் குறிப்பிட்டுப் போந்தார். தில்லை வாழ் அந்தணர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, அந்தணர்கட்குரிய செயல்களாகிய வேள்வி வேட்டலும், நான்கு வேதம், ஆறங்கம் முதலியவற்றைப் பயிலுதலும் ஆகிய செயல்களைத் தெளிவாக,

வருமுறை எரிமூன் றோம்பி
மன்னுயிர் அருளால் மல்கத்
தருமமே பொருளாக் கொண்டு
தத்துவ நெறியில் செல்லும்

அருமறை நான்கி னோடா
றங்கமும் பயின்று வல்லார்
திருநடம் புரிவார்க் காளாம்
திருவினுல் சிறந்த சீரார்

என்று செப்பிச் சென்றுர்.

இவ்வாறே ஏனைய நாயன்மார்களின் செயல்களைக் கூறிச் சென்றிருப்பதைப் பெரிய புராணத்தில் பரக்கக் காணலாம். சிவனடியார்களின் செயல்களைக் கருதுதற்கு அரிதரதலின், "கருதரும் இவர்" என்றனர்.

இவ்வாறெல்லாம் சேக்கிழார் பெருமானுர் தம்பேரருள் காரணமாகப் பேசிய திறனை நோக்குமிடத்துத் தில்லை நடராசப் பெருமானே சேக்கிழார் உணர்வில் கலந்து இந்நுட்பங்களை அறிவித்தனர் போலும் என்ற குறிப்பினையே ஈண்டுத் திருபிள்ளை அவர்கள், "அவனே (இறைவனே) உலகறியச் சாற்றியபடி என்ன" என்று கூறி அருளினர், (20)

10\. நந்தி வரைத்தலை ஒருமுனி சுரபி
நயக்கப் பொழிதீம்பால்
நதியாய் அங்கங் கோடுபு கூபம்
நயம்கிளர் ஏரிகுளம்
முந்தி எழுங்கால் ஓடை தடாகம்
முதல்பல வும்நிறையா
முழுத்த சுவைப்பால் ஆக்குபு பின்னும்
மூரிக் கடல்புக்கும்
புந்தி அவாவ நிரம்பலில் மாயோன்
புரிகண் துயிலும்இடம்
புகலிது வோஅது வோஎன ஆயப்
பொலிதண் டகநாட
அந்தி மதிச்சடை அண்ணற் கினியவ
ஆடுக செங்கீரை
ஆரருள் ஆகர சேவையர் காவல
ஆடுக செங்கீரை

(அ. சொ.) நந்திவ்வரைத்தலை-நந்தி என்னும் பெயரையுடைய மலையிடத்தில், (நந்திதுர்க்கம், நந்திமலை) ஒரு

முனி-ஒப்பற்ற வசிஷ்ட முனிவர், சுரபி-கர்மதேனு, நயக்க-யாவரும் விரும்ப, தீம்-இனிய, ஓடுபு-ஓடும்போது, செய்பு என்னும் வாய்பாட்டுவினை எச்சம், கூபம்-கிணறு, நயம்-அழகு, இனிமை, கிளர்-விளங்கும், கால்-வாய்க்கால், நிறையா-நிறைத்து, ஆக்குபு-செய்தபோது, மூரி-வன்மை மிக்க, புந்தி-மனம், அவாவ-விரும்ப, மாயோன்-திருமால், புரி-விரும்பும், கண்துயில் இடல்-உறங்கும் இடமான திருப் பாற்கடல், புகல்-சொல்க, ஆய-ஆராயும்படி, பொலி-விளங்கும், தண்டக நாட-தொண்டை நாட்டுத் தலைவ, அந்தி மதி-அந்திக் காலத்தில் தோன்றும் பிறைச் சந்திரனை, அண்ணல்-பெருமையில் சிறந்த சிவபெருமான்.

**விளக்கம்:** நந்திமலையாவது நந்தி துர்க்கம் என்பது. இது மைசூர் ராஜ்யத்தில் உள்ளது, இம்மலைமீது வசிட்டரது தெய்வப் பசு தனது பாலைப் பொழிந்தது. அதுவே ஆறுக ஓடிப் பாலாறுக ஆயது. மலையினின்று ஓடிவரும் நதி பள்ள முள்ள இடங்களில் படிந்து நிரப்பிச் செல்லும் இயல் புடையது ஆதலின், இவ்வாற்று நீரும் இடையில் தன்முன் அகப்பட்ட கிணறு, ஏரி, குளம், கால்வாய், ஓடை முதலிய வற்றை நிரப்பிச் சென்றது. இதுபற்றி ஈண்டு, "நந்திவரைத் தலை *** பலவும் நிறையா" எனப்பட்டது.

சேக்கிழாரும் திருக்குறிப்புத் தொண்டர் புராணத்துள் பாலாற்றின் தோற்றத்தையும் செயலையும் பற்றி, "துங்க மாதவன் சுரபியின் திருமுலை சொரிபால் பொங்கு தீர்த்த மாய் நந்திமால் வரை மிசைப் பொழிந்தே அங்கண நித்திலம் சந்தனம் அகிலொடு மணிகள் பங்க யத்தடம் நிறைப்பவந் திழிவது பாலி," என்று பாடி யுள்ளதைக் காண்க.

வசிட்டரிடம் இருந்த தெய்வப்பசு பொழிந்த பாலே பாலாறு ஆயது என்பதைக் கந்த புராணமும்,

கழிந்த பற்றுடை வசிட்டன
    திருக்கையாக் கவினுர்
மொழிந்த நந்தியம் பெருவரை
    மொய்த்தசூல் முகில்கள்
பொழிந்த சீதநீர் பொற்புறு
    சாடியில் பொங்கி
வழிந்த பாலெனத் திசைதொறும்
    இழிந்தன மன்னே

என்று கூறுகிறது.

இவ்வேறே காஞ்சி புராண ஆசிரியரும்,

கனைபெயல் எழிலிக் கூட்டம் கவிவீசும் பகடு போழ்ந்த
நனைமுடி நந்திக் குன்றம் நளிபடப் பொழியும் தெண்ணீர்
புனைமறை வசிட்ட மேலோன் செருத்தல்ஆன் பொழிந்த தீம்பால்
வனைபுகழ் வெள்ளம் என்னத் திசைதொறும் வழிந்த மன்னே

என்று கூறியுள்ளார்.

ஆற்று நீர் பல இடங்களில் தன் நீரை நிறைத்துச் செல்லும் இயல்பினைக் கம்பர்,

தாதுகு சோலை தோறும்
    சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும்
    புதுப்புனல் தடங்கள் தோறும்
மாதவி வேலிப் பூக
    வனம்தோறும் வயல்கள் தோறும்
ஓதிய உடம்பு தோறும்
    உயிர்என உலாய தன்றே

என்றனர்.

இவ்வாறெல்லாம் பாலாறு பாய்ந்து திருப்பாற் கடலில் புகுந்து, தானும் திருப்பாற் கடல்போல இருந்தமையின் எது திருமால் பள்ளி கொள்ளும் திருப்பாற் கடல் என்று மக்களால் அறிய ஒண்ணு நிலையில் இருந்தது என்பதை

விளக்கவே. "மாயோன் புரிகண் துயிலும் இடம் புகலிதுவோ அதுவோ" என்றனர்.

சேக்கிழார் சிவபெருமானுக்கு இனிமையானவராக இருந் தனர். சேக்கிழார்பால் இறைவர் இனியராக இருக்க வில்லை என்றால், "சேக்கிழான் நமது தொண்டர் சீர்பரவ நாம் மகிழ்ந்து உலகம் என்று வாக்கினால் அடி எடுத்து உரைத்திட வரைந்து நூல் செய்து முடித்தனர், காக்கும் வேல் வளவ நீ இதைக் கடிதுகேள்" என்று சோழனுக்குக் கூறுவரோ? ஆகவே, ஈண்டுச் சேக்கிழார், "அண்ணற்கு இனிய" என்று விளக்கப்பட்டார்.

தண்டகநாடு, தொண்டை நாடு. அந்நாடு தண்டக நாடு எனப்பட்டதற்குரிய காரணம் பின்வருவது.

முக்கணான் கணைநா தர்க்கு
முதன்மைத்துண் டீரன் ஆண்டு
மிக்கதுண் டீரன் நாடாய்த்
தண்டக வேந்தன் தாங்கித்
தக்கதண் டகன்நன் நாடாய்த்
தமனன்மா குலத்துச் சோழன்
தொக்கதார்த் தொண்ட மான்காத்
தாயது தொண்டை நாடே

என்னும் சதகச் செய்யுளால் துண்டீரனால்ஆளப்பட்டபோது துண்டீர மண்டலம், துண்டீரபுரம் என்றும், பின்னர்த் தண்ட கன் ஆட்சி செலுத்தியபோது தண்டக நாடு, தண்டகபுரம் என்றும், அதன்பின் ஆதொண்டன் ஆட்சிக் காலத்தில் ஆதொண்ட மண்டலம், தொண்ட மண்டலம் என்றும் பெயர் பெற்றதை உணர்க.

தன்னையே வேண்டித் தழல்மகம் செய்யத்
தண்டகற் கெண்திசை அரசு
தன்னைஈந் திடலால் தண்டக புரமாம்
தனிப்பெயர் பெற்றது அத்தனியூர்

என்னும் கந்தபுராணப் பாடலும் இதற்குச் சான்றாகும்.(21)

18

# 3. தாலப் பருவம்

1. வெண்ணந் தூரறி வயிறுளைந்து
வீற்று வீற்றுக் கருவுயிர்த்த
வெண்ணித் திலத்தை அரித்தெடுத்து
வெள்வாய்க் களமர் கரைகுவிக்க
வண்ணம் துவர்என் றுவமிக்கும்
வாயோ திமம்நீர் குடைந்தெழுந்து
மற்றங் குவியல் மேல்இவர்ந்து
மருவி முதிரா வெயில்காயக்
கண்ணந் துறஉண் டெழுதரும்அக்
களமர் மரால முட்டையினைக்
கதிர்நித் திலமென் றுறக்குவித்தோம்
கடையேம் மயங்கி எனநாணும்
தண்ணம் துறைசேர் குன்றத்தூர்த்
தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச்
சைவா தாலோ தாலேலோ

*[அ. சொ.] நந்து-சங்கு, உரறி-ஒலித்து, உளைந்து-நொந்து, வீற்று வீற்று-வரிசை வரிசையாக, கருஉயிர்த்த-தன் கருவை ஈன்ற, நித்திலத்தை-முத்தை, அரித்து-சல்லடை கொண்டு சலித்து, களமர்-உழவர், வண்ணம்-நிறம், துவர்-பவழம், ஓதிமம்-அன்னம், குடைந்து-முழுகி, இவர்ந்து-ஏறி உட்கார்ந்து, மருவி-பொருந்தி, கள்-கள்ளை, நந்துற-செருக்குற, மராள-அன்னத்தின், கதிர்-ஒளியுடைய, கடையேம்-கடைப்பட்டவராயினேம், நாணும்-நாணுதற்குக் காரணமான, தண்ணந்துறை-குளிர்ந்த நீர்க்கட்டம், சகல ஆகம பண்டித-எல்லா ஆகமங்களையும் பயின்ற அறிஞரே.*

**விளக்கம்:** தால் என்பது நாக்கு. அந்நாக்கை அசைத்து ஓசை எழுப்பிக் குழந்தைகளை உறங்க வைக்க முயலுவதால் இப்பருவம் தாலாட்டுப் பருவம் எனப்பட்டது. இஃது எட்டாம் மாதத்தில் நிகழ்த்தும் செயல். "எட்டாம் திங்களில் இயல் தாலாட்டும்" என்பது பிங்கலந்தை.

முத்துக்கள் பிறக்கும் இடம் பலவாகும். இதனை,

தந்தி வராகம் மருப்புஇப்பி பூகம் தனிக்கதலி
நந்து சலஞ்சலம் மீன்தலை கொக்கு நளினம்மின்னார்
கந்தரம் சாலி கழைக்கன்னல் ஆவின்பல் கன்னசெவிகார்
இந்து உடும்பு கராமுத்தம் ஈனும் இருபதுமே

என்ற பாடலால் உணரலாம்.

உரறுதல் என்னும் சொல் ஒலித்தல் என்ற பொருளில் வருதலை, "உரும் உரறும் கருவிய பெருமலை" என மலைபடுகடாத்திலும், நந்துதல் செருக்குதல் என்னும் பொருளில் வருதலை, "நந்திச் செறில் சாம்புவன்" எனக் கலித்தொகையிலும் வருதலைக் காண்க.

ஈண்டுச் சிப்பி ஈன்ற முத்தைப்பற்றிக் கூறப்படுகிறது. இவ்வாறே பகழிக் கூத்தரும் தமது திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழில் "கடுஞ்சூல் உளைந்து வலம்புரிகள் கரையில் தவழ்ந்து வாலுகத்தில் கான்றமணி" என்றனர். அன்னத்தின் அலகு செம்மை நிறமாக இருத்தல் பற்றி "துவர் என்று உவமிக்கும் வாய் ஓதிமம்" என்றனர். அன்னத்திற்கு எப்போதும் உயர்ந்த ஆதனத்தில் அமர்தல் விருப்பம்போலும்! தாமரை மலரில் வீறுடன் வீற்றிருக்கும் இயல்பைத் திருஞான சம்பந்தர் அழகுபட,

செறிஇதழ்த் தாமரைத் தவிசில் திகழ்ந்தோங்கும்
இலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்
வெறிகதிர்ச் சாமரைஇரட்ட இளஅன்னம்
வீற்றிருக்கு மிழலை யாமே

என்று பாடியருளினர்.

அம்முறை போல ஈண்டுள அன்னம் இப்பிகள் ஈன்ற முத்துக் குவியலில் சென்று வீற்றிருந்த நிலை "குவியல்மேல் இவர்ந்து" என்று கூறப்பட்டுள்ளது. பறவைகள் குளங்களில் படிந்து, பின் இறகுகளை உலர்த்திக் கொள்ளும் காட்சியினை அப்பரும் அழகுற,

குருகினம் கூடி ஆங்கே கும்மலித்து இறகுஉலர்த்தி
மருவலாம் இடங்கள் காட்டும் வலம்புரத் தடிகளாரே

என்று பாடினர்.

அதுபோல இங்கு அன்னங்கள் குளத்தில் மூழ்கித் தம் இறகுகளையும் உடம்பையும் உலர்த்திக் கொள்ளச் சென்ற காட்சியை "ஓதிமம் நீர் குடைந்து ** மேல் இவர்ந்து மருவி முதிராவெயில்காய" என்று கூறினர்.

வெயில் காயச் சென்ற அன்னங்கள் முத்துக் குவியலில் வீற்றிருப்பதைக் கண்ட உழவர்கள் அன்னத்தின் முட்டைகளை முத்துக்கள் என்று மயங்கி வாரிக் குவித்தனர் என்று தம் அறியாமையைப் பற்றி நொந்து கொண்டனர். இதனையே ஈண்டு "களமர்***நாணும்" என்றனர். இது மயக்க அணி. இங்ஙனம் இரண்டுக்கும் உரிய வேறுபாட்டை உணராமைக்குக் காரணம் அக்களமரது கட்குடியே ஆகும் என்பதையும் உடன் கூட்டிக் கள் குடியினால் அறிவு மயங்கும் என்பதையும் அறிவித்த திரு பிள்ளை அவர்களின் நுண்ணறிவை நாம் பாராட்டுதல் வேண்டும். கள்ளுண்பவர் நிலையினைப் பற்றி வள்ளுவர் கூறியுள்ள கூற்றினையும் ஈண்டு நினைவுபடுத்திக் கொள்வோமாக.

உட்கப் படாஅர் ஒளிஇழப்பர் எஞ்ஞான்றும்
கள்காதல் கொண்டொழுகு வார்

என்பது அக்குறள்.

ஆகமம், காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அம்சுமான், சுப்பிர

பேதம், விசயம், நிச்சுவாசம் சுவாயப்புவம், அனலம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திர ஞானம், முகவிம்பம் புரோற்கீதம், லளிதம், சித்தம், சந்தானம் சர்வோக்தம் பாரமேசுரம், கிரணம், வாதுளம் என இருபத்தெட்டாகும். இவற்றுள் நந்திபெற்ற ஆகமங்கள் ஒன்பது. அவை இன்ன என்பதைத் திருமந்திரம்,

பெற்றநல் ஆகமம் காரணம் காமிகம்
உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமள மாகும்கா லோத்தரம்
துற்றநற் சுப்பிரம் சொல்லு மகுடமே

என்று குறிப்பிடுகிறது.

ஆகமம் மந்திரம், தந்திரம், சித்தாந்தம் என்ற சொல்லாலும் குறிக்கப்பெறும். அறிவன் நூல் என்றும் இதனைக் கூறுவர். இது மந்திரக் கலை, தந்திரக் கலை, உபதேசக் கலை என மூன்று வகைப்படும். இவ்வாகம ஞானபாதம், யோக பாதம், கிரியா பாதம், சரியா பாதம் என்று தனித்தனி நான்கு பாதங்களையுடையது.

ஞானபாதமாவது பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களின் தன்மைகளையும், யோகபாதம் பிராணயாமம் முதலிய அங்கங்களோடு கூடிய சிவயோகத்தையும், கிரியாபாதம் மந்திரங்களின் உத்தாரம், சந்தியா வந்தனம், பூசை, செபம், ஓமம் என்பனவற்றையும், சமய விசேட நிருவாண ஆசாரிய அபிடேகங்களையும், சரியாபாதம் சமயாசாரங்களையும் அறிவிக்கும்.

இருபத்தெட்டு ஆகமங்கள் சிவ பேதம் என்றும், ருத்ர பேதம் எனவும் இருவகைப்படும். சிவ பேதம் ஒன்பது. ருத்ர பேதம் பத்தொன்பது.

சிவயோகிகள் கூறும் (திருமூலரும் குறிப்பிடும்) ஒன்பது ஆகமங்களுள் சிவ பேதத்தில் அடங்கியவை காரணம்

காமிகம், சிந்தியம், சுப்ரம் என்பன. ருத்ர பேதத்தில் அடங்கியவை வீரம், வாதுளம், காலோத்தரம், மகுடம் என்பன; இவ்வொன்பது குருபரம்பரையில் பெற்றவை. இவ்வொன்பான் ஆகமங்களை இறைவன் இன்னின்னார்க்கு உபதேசம் செய்தான் என்பதைத் திருமூலர்,

சிவமாம் பரத்தினில் சத்தி, சதாசிவம்
உவமா மகேசர், உருத்திர தேவர்,
தவமால், பிரமீசர் தம்மில்தாம் பெற்ற
நவஆ கமம்

என்று அறிவித்தனர்.

ஆ-பாசம் க-பசு, ம-பதி என்று பொருள் படுதலின், முப் பொருளை உணர்த்தும் நூல் ஆகமம் என்பதாயிற்று. அன்றி, ஆ-சிவஞானம், க-மோட்சம், ம-மலநாசம் என்றும் பொருள் படுதலின் ஆன்மாக்களின் மலத்தை நாசம் பண்ணி, சிவஞானத்தைத் தோற்றுவித்து மோட்சத்தைக் கொடுத்தல் பற்றி ஆகமம் என்ற பெயரைப் பெற்றது எனினும் ஆம்.

ஆகமம் அறிவனூலும் ஆகும். இதனை "ஆகமம் என்பது மனுமுதலாகிய அறனொடு புணர்ந்த திறன் அறிநூலே" என்ற தண்டி அலங்கார நூற்பாவால் தெளிக.

இன்னோரன்ன ஆகமம் பற்றிய பேர் அறிவினைச் சேக்கிழார் பெருமானார் பெற்றவர் ஆதலின், "சகலாகம பண்டித" என்றனர். வேதசாத் திரங்களைப் பயின்றவர் என்ற பொருளையும் இத் தொடர்க்குக் காண்க. ஆகமம், வேதம் என்ற பொருளையும் உகையது.

சேக்கிழார் பெருமானார் சகலாகம பண்டிதர் என்பதற் குரிய அகச்சான்றுகள் பல அவர் யாத்த பெரியபுராணத்தில் பரந்து கிடக்கின்றன. தில்லைவாழ் அந்தணர்கள் புராணத்து

அவர்கள் இயல்பைப் பற்றிக் கூறவந்த இடத்து, அவர்கள் "ஞானமே முதலா நான்கு நவையறத் தெரிந்து மிக்கார்" என்று கூறியருளினர். இவ்வந்தணர்கள் சிவதீட்சை பெற்றுச் சைவ ஆகமங்களை ஓதி உணர்ந்து, அவைகளால் அறிவிக்கப் படும் நான்கு பாதங்களையும் அனுட்டிப்பவர் என்பதை மேற் கூறிய அடியில் விளக்கினர் என்றால், இவர் ஆகம அறிவு பெறாது விளக்கி இருக்க முடியுமோ? முழுநீறு பூசிய முனிவர் புராணத்து நீற்றின் தன்மைகள் கூறியிருப்பதைக் காணும் இடத்து, இவருக்கு இருந்த சகலாகம அறிவு வெள்ளிடை மலை என விளங்கா நிற்கும். ஆகவே, இவரைச் சகலாகம பண்டித என்றது மிக மிகப் பொருத்தமே ஆகும்.

திருநீறு கற்பம், அநுகற்பம், உபகற்பம், அகற்பம் என நான்கு வகைப்படும். அவற்றுள் முதல் மூன்றும் ஏற்றுக்கொள்வதற்கு உரியவை. பின் ஒன்று ஏற்றுக் கொளற்குரியதன்று. நோயற்ற பசுவின் சாணத்தைக் மந்திரத்தால் ஏற்றுச் சிவாக்கினியில் இட்டு எடுக்கப் பட்டது கற்பம். காட்டில் உலர்ந்த சாணத்தைக் கைக் கொண்டு பொடியாக்கிக் கோசலத்தை இட்டுப் பிசைந்து மந்திரம்கூறி ஓமத்தீயில் இட்டு எடுப்பது அநுகற்பம். காட்டுத்தீயால் வெந்த நீற்றையும் பசுத் தொழுவங்கள் தீப் பிடிக்க வெந்த நீற்றையும் எடுத்து மந்திரம் சொல்லி ஆன் நீர் பெய்து உண்டையாக்கி மடத்தின்கண் எரிகின்ற ஓமத்தீயில் சுட்டெரித்து எடுக்கப்பட்டது உபகற்பம். இவற்றையே,

அம்பலத்தே உலகுய்ய ஆடும் அண்ணல்
உவந்தாடும் அஞ்சினையும் அளித்த ஆக்கள்
இம்பர்மிசை அநாமயமாய் இருந்த போதில்
ஈன்றணிய கோமயமந் திரத்தி னல்ஏற்
றும்பர்தொழ எழும்சிவமந் திரவோ மத்தால்
உற்பவித்த சிவாங்கிதனில் உணர்வுக் கெட்டா
எம்பெருமான் கழல்நினைந்தங் கிட்டதூநீ
றிதுகற்பம் என்றெடுத்திங் கேத்தல் ஆகும்

ஆரணியத் துலர்ந்தகோ மயத்தைக் கைக்கொண்
டழகுற நுண்பொடி ஆக்கி ஆவின்
நீரணிவித் தத்திரமந் திரத்தி ஞலே
நிசையமுறப் பிடித்தோம நெருப்பில் இட்டுச்
சீரணியும் படிவெந்து கொண்ட செல்வத்
திருநீரும் அநுகற்பம் தில்லை மன்றுள்
வாரணியும் முலையுமையாள் காண ஆடும்
மாணிக்கக் கூத்தர்மொழி வாய்மை யாலே

அடவிபடும் அங்கியினுல் வெந்த நீறும்
ஆன்நிலைகள் அனல்தொடக்க வெந்த நீறும்
இடவகைகள் எரிகொளுவ வெந்த நீறும்
இட்டிகைகள் சுட்டஎரி பட்ட நீறும்
உடன்அன்றி வெவ்வேறே ஆவின் நீரால்
உரைதிகழும் மந்திரங்கொண் டுண்டை ஆக்கி
மடம்அதனில் பொலிந்திருந்த சிவாங்கி தன்னுல்
வெந்ததுமற் றுபகற்பம் மரபின் ஆகும்

என்ற சேக்கிழாரின் செம்மை சான்ற வாக்குகளைக் காண்க. இவை அனைத்தும் ஆகம உணர்ச்சி பெற்றுல் அன்றிப் பெறப்படாக் கருத்துக்கள் ஆகும்.

சேக்கிழார் குடியினருள் திருமால் பெயரையும், தாங்கித் திருமால் பற்றும் கொண்டவராக இருந்திருக்கக்கூடும் என்ற ஐயம் எழுதற்கான நிலையில் சிலர் இருந்திருக்கின்றனர். "சயங்கொண்ட சோழமண்டலத்துக் குலோத்துங்க சோழவள நாடான புலியூர்க் கோட்டத்துக் குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் **ராம தேவன்** என்ற உத்தம சோழப் பல்லவராயன்" என்றும், குன்றத்தூர்ச் சேக்கிழான் **வரந்தரு பெருமாள் என்ற திருவூரகப்பெருமாள்** என்றும், கல் வெட்டுக்களில் வரப் பெறும் பெயர்களைக் காணும்போது, இவ்வையத்தின் உண்மை புலனுகும். ராம என்பது சிவபெருமானுக்கே உரிய மந்திரம். ரா என்பது அரா என்னும் சொல்லின் எழுத்தும், ம என்பது உமா என்னும் சொல்லின் எழுத்தும்

சேர்ந்த மகா மந்திரமாகும். ஆகவே, இது தாரக மந்திரம் ஆயிற்று. இராமேச்சிரத்தில் உள்ள இறைவனுக்குரிய, இராம நாதன், ராமசாமி. ராமலிங்கம் என்ற பெயர்களைக் காண்க. இராமனுகிய சாமி, இராமனுகிய நாதன், இராமனுகிய இலிங்கம் என்பதே இத்தொடர்களின் பொருள். இறைவன் திருப் பெயரைத் தாங்கும் பேறு பெற்ற தசரத ராமனுக்குத் தலைவர் என்ற பொருள் கோடலும் உண்டு. ஆகவே, சேக்கிழார் மரபு ராமன் என்னும் பெயர் தரித்ததும், சைவ மரபை ஒட்டியே ஆகும்.

இக்கருத்துக்கு அரண் செய்யும் முறையில் கம்பர், இறைவனது திருநாமமாகிய ராமநாமத்தின் சிறப்பை,

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே இராம என்றிரண் டெழுத்தினல்

ஓராயிரம் மகப்புரி பயனை உய்க்குமே
சுராதிபர் செல்வமும் புகழும் நல்குமே
வீராய்எனும் பவங்களை வேர ருக்குமே
இராமஎன் றொருமொழி இயம்பும் காலையே

மும்மைசால் உலகுக்கெல்லாம்
மூலமந் திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும்
தனிப்பெரும் பதத்தைத் தானே
இம்மையே எழுமை நோய்க்கும்
மருந்தினை இராமன் என்னும்
செம்மைசேர் நாமம்

என்றும் போற்றிப் பாடினர்.

இவ்வாறு சிவபெருமானது மந்திரமாகத் திகழும் கார ணத்தினல்தான் ஸ்ரீலஸ்ரீ காமகோடிபீடம் சங்கராசாரிய சுவா மிகள் எல்லோரையும் ராமநாமத்தை எழுதச் சொல்லுகிருர்

என்றூகிக்க இடன் இருக்கிறது. என்றாலும் சேக்கிழார் பெருமானாரும் வைணவப் பற்றிக்குரியவரோ என்று சிலர், கருத இடம் உண்டாகும். ஆதலின், அவ்வையம் எழாதிருக்கச் தெய்வச் சைவா என்று இவரது ஆழ்ந்த சைவசமயப்பற்றினை இவ்வாறு கூறி நிலைநாட்டினார் திரு பிள்ளைஅவர்கள். சேக்கிழார் தெய்வச்சைவர் என்பதனை இவர்க்குப் கூத்தப்பெருமானார் 'உலகெலாம்' என்று அடி எடுத்துக் கொடுத்ததிலிருந்து நன்கு உணர்ந்து கொள்ளலாம். (22)

2. நண்பால் எவரும் உறத்தரிக்கும்
நலம்கூர் நீற்றின் வெள்ஒளியால்
நாவால் எவரும் அரமுழக்கம்
நாளும் செயஆம் பேர்ஒலியால்
எண்பால் புலவர் அமுதுகொளற்
கெந்த இடத்தும் நெருங்குதலால்
ஏர்சால் அரம்பை எழுதலினல்
இயல்நா கேசன் வைகுதலால்
கண்பால் கரிதோய் திருமடந்தை
காமுற் றிடலால் மாளிகைமேல்
கருமால் கிடந்து கண்துயிலும்
காட்சித் திறனல் பொங்கிஎழும்
தண்பால் கடல்நேர் குன்றத்தூர்த்
தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச்
சைவா தாலோ தாலேலோ

[அ. சொ] நண்பு-அன்பு, உற-பொருந்த, நலம்-நன்மை, கூர்-மிகுந்த, நீற்றின்-விபூதியின், அரமுழக்கம்-ஹரஹரமகாதேவா என்ற ஒலியை, எண்பால்-எட்டுத் திசையிலும் மதிக்குந் தன்மை, புலவர்-புலவர்கள், தேவர்கள், ஏர்-அழகு, சால்-நிறைந்த, அரம்பை-வாழைமரங்கள், தேவமாதராம் அரம்பை முதலியோர், நாகேசன்-திருநாகேஸ்

வரன், ஆதிசேடனும் பாம்பு, வைகுதலால்-வாழ்வதால், கரி-கருநிறமுடைய திருமால், தோய்-புணரும், திருமடந்தை, இலக்குமி, காமுற்றிடலால்-விரும்புவதால். மால்-மேகம், திருமால், நேர்-ஒப்பாகும்.

**விளக்கம்:** திருநீறு சைவ சமயத்திற்கே சிறப்புடைய சின்னமே ஆயினும், பிற சமயத்தவர்க்கும் உரிய பொருளாகும். பிறசமயத்தவரும் இதனை விருப்புடன் தரிக்கின்றனர். இதைக் கருத்தில்கொண்டே, ''சமயத்தில் உள்ளதும் நீறு,'' என்று திருஞானசம்பந்தரும் திருவாய் மலர்ந்தனர். சமயத்தில் உள்ளது நீறு என்பதன் பொருள் எல்லாச் சமயங்களிலும் உள்ளது நீறு என்பதேயாகும். இக்காலத்திலும் முஸ்லீம்கள் **பாத்தியா** பண்ணும்போது முகத்தில் சாம்பலைப் பூசுவதைக் காணலாம். கிறிஸ்தவர்கள் வருடத்தில் ஒரு நாளைச் சாம்பல் திருநாள் எனக்கொண்டு அந்நாளைக் கொண்டாடுகின்றனர். திருமாலின் திருமேனியில்திகழ்வதும் இத்திருநீறே. ''கரியமேனிமிசை வெளியநீறு சிறிதே இடும் கோலத் தடங்கண்பெருமான்'' என்றே நம்மாழ்வார் குறிப்பிடுகிருர். இக்கருத்துக்கள் அனைத்தையும் உள்ளடக்கியே ஈண்டு, ''நண்பால் எவரும் உறத்தரிக்கும் நலம்கூர் நீறு'' என்று கூறப்பட்டது. ''உள்மாசு கழுவுவது நீறு'' ஆதலின், நலம்கூர் நீறு எனப்பட்டது. மேலும், ''தென்னன் உற்றதீப்பிணி ஆயின தீர' 'இது பயன் பட்டமையின், ''நலம் கூர் நீறு'' எனப்பட்டது என்றலுமாம்.

குன்றத்தூரில் இருப்பவர்கள் நீறுபூசும் நிலைமையினர். அவர்கள் தம்நாவால் அரஅரமகாதேவா என்று கூறும் இயல்பினர்

அரகர என்ன அரியதொன் றில்லை
அரகர என்ன அறிகிலர் மாந்தர்
அரகர என்ன அமரரும் ஆவர்
அரகர என்ன அறும்பிறப் பன்றே

என்பது.திருமந்திரம் ஆதலின், குன்றை நகரவாசிகள் அரகர என்பதை கூறும் மந்திரமாகக் கொண்டனர். இவற்றையே

"நீற்றின் வெள் ஒளியால், நாவால் எவரும் அர முழக்கம் நாளும் செய" என்றனர். குன்றை நகரத்தினர் வந்த விருந்தினரை உபசரிக்கும் இயல்பு பெற்றவர். ஆகவே, எத்திசையில் இருக்கும் புலவர்களும் அமுது கொள ஆண்டுப் புகுந்தனர். இதனையே "எண்பால் புலவர் அமுதுகொளற்கு எந்த இடத்தும் நெருங்குதலால்" என்றனர். எங்கும் வாழைகள் வளர்ந்து குன்றத்தூர் காட்சி அளிப்பதை இன்றும் காணலாம். இக்குறிப்பை ஈண்டு 'ஏர்சால் அரம்பை எழுதலினல்,' எனப்பட்டது.

குன்றத்தூரில் திருநாகேச்சுரம் என்னும் கோவில் உளது. இது சேக்கிழார்பெருமானரால் அமைக்கப்பட்ட திருக்கோயில். திருநாகேச்சுரம் என்னும் தலம் சோழ நாட்டில் ஒன்று உளது. அதுவே ஆதி திருநாகேச்சுரம். நாகராசனல் பூசிக்கப்பட்ட காரணத்தால் இப்பெயர் பெற்றது. இவனே அன்றி, சந்திரன் சூரியன், முதலியோரும் பூசித்து அருள் பெற்றுள்ளனர். இதனைத் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் சுந்தரர் ஆகிய மூவரும் பாடியுள்ளனர். இத்தலம் திருநாகேஸ்வரம் ரயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கே முக்கால் மைல் தூரத்தில்உள்ளது. இஃது இரண்டாம் ராஜராஜனுலும் மூன்ரும் குலோத்துங்கனுலும் புதுப்பிக்கப்பட்டது. முன்னர் இது ஜைன ஆலயமாக இருந்ததாகவும் கூறப்படுகிறது. சுவாமியின் திருப்பெயர் சண்பகாரண்யேஸ்வரர் தேவியார், குன்றுமுலைநாயகி எனப்படுவர். அம்மனுக்கு அபிடேகம் இல்லை. புனுகு சட்டம் சாத்தப்படுவதாகக் கூறப்படுகிறது. சங்குநிதி பதுமநிதி இன்ன என்பதைச் சிலைவடிவில் இருப்பதை இங்குக் காணலாம். இங்கு வாழ்பவர்கட்டுச் சர்ப்ப பயம் இல்லை. கோபுரத்தின் மூலம் இறைவர்க்குச் சூரிய பூசை நிகழ்வதைக் காணலாம். இத்தகைய சீரும் சிறப்பும் உடைய தலத்தின்மீது மிகுதியும் அன்பு கொண்டவர் சேக்கிழார். அத்தலம் சோழ நாட்டில் இருப்பதால், அத்தலத்தின் பெயரால் தம் தொண்டை நாட்டில் ஒரு கோயிலை அமைக்க எண்ணிய சேக்கிழார், தாம் பிறந்த குன்றத்தூரில் அக்கோயிலை அமைத்துக்கொண்டனர். அக்கோயிலே இப்போது

நன்றத்தூரில் உள்ள கோயிலாகும். சேக்கிழார் பெருமானார் குன்றத்தூரில் திருநாகேக்கரத் தலத்தை ஏற்படுத்தினமையைச் சேக்கிழார் புராணம்,

தம்பதிகுன் றத்தூரின் மடவளாகம்
தானாக்கித் திருக்கோயில் தாபித் தங்கண்
செம்பியர்கோன் திருநாகே சுரம்போல் ஈதும்
திருநாகே சுரம்எனவே திருப்பேர் சாற்றி
அம்புவியில் அங்கங்க வைப வங்கட்
கானபரி கலம்திருநாள் பூசை கற்பித்
இம்பர்புகழ் வளவன்அர சுரிமைச் செங்கோல்
இமசேது பரிபந்தம் இயற்றும் நாளில்

என்று கூறுகிறது. இந்தக் குறிப்பே ஈண்டு ''இயல் நாகேசன் வைகுதலால்'' என்ற தொடரால் விளங்குகிறது.

குன்றத்தூர் எல்லா நலன்களும் பெற்றுத் திகழ்தலின், இதனைத் திருமகளும் விரும்புகின்றாள் என்பதனை, 'திரு மடந்தை காமுற்றிடலால்' என்றனர். குன்றத்தூரில் உள்ள மாட மாளிகைகள் உயர்ந்து ஆகாயத்தை அளாவி நின்றன. அங்ஙனம் உயர்ந்து இருந்தமையின் மேகம், அம்மாளிகைகளில் தவழ்ந்தவண்ணம் இருந்தது. இதுவே ஈண்டு ''கருமால் (கருமேகம்) கிடந்து கண்துயிலும்'' என்ற தொடரால் விளங்கும் பொருள். இதுவரைக் கூறப்பட்ட குன்றத்தூர் சிறப்புத் திருப்பாற் கடலுக்கு ஒத்ததாக இருத்தலின், குன்றத்தூர் திருப்பாற் கடலுக்கு ஒப்பானது என்பது திரு பிள்ளையவர்களின் கருத்தாகும். ஆகவே, இப்பாடல் சிலேடை அணியைப் பெற்றது. திருப்பாற் கடலைக் குறிக்கும்போது சொற்களுக்குரிய பொருள் வேறாகும். அரமுழக்கம், அலை ஓசையாகும். புலவர் என்பார் தேவர் ஆவார். அமுது என்பது தேவாமுதம் ஆகும். அரம்பை என்பது ரம்பை என்பாளைக் குறிக்கும், அல்லது ரம்பை முதலான தேவ மாதரை குறிக்கும். நாகேசன் ஆதிசேடனாவான். மால் திருமாலாகி விடுவார்.

புலவர் அமுது கொள என்பது புலவர்கள் சோறுண்ண என்பதோடு, தேவர் அமுது உண்ண எனவும் அரம்பை எழுதல் என்பது, வாழை மரங்கள் வளர்தல் என்பதோடு தேவலோக மாதர்கள் குன்றத்தூருக்குக்கு வர எழுதல் எனவும், நாகேசன் வைகுதல் என்பது நாகேச்சுரம் தங்கி இருத்தல் என்ற பொருளுடன், பாம்புகட்கு அரசனுன ஆதிசேடன் இருத்தல் எனவும், திருமடந்தை காமுறுதல் என்பது செல்வம் இருக்க விரும்புதல் என்ற பொருளுடன் இலக்குமி விரும்புதல்எனவும், கருமால் கிடந்து துயிலல் என்பது கரிய மேகங்கள் படிந்திருத்தல் என்ற பொருளுடன் திருமால் அரிதுயில் அமர்தல் என்ற பொருளையும் தருதலின் இப்பாடல் இரட்டுற மொழிந்த சிலேடை அணியாகும்.(23)

3. முந்த எழுமாற் றுயர்பொன்னல்
முழுச்செம் மணியால் மாளிகையும்
முதுசூ ளிகையும் தெற்றிகளும்
முகப்பும் பிறவும் அமைதலினுல்
இந்த நகரம் பொன்னகரத்
திணும்மிக் கிமைத்தல் விதிஉளத்தில்
எண்ணி ஆடுஉம் மகடூஉவாம்
எல்லா உயிரும் விழிஇமைத்தல்
நந்த அருட்சம் பந்தர்மணம்
நண்ணி யவர்க்கும் கதிகொடுத்த
நலம்போல் இருசார் புவிஅகத்து
நகர்க்கெ லாம்செய் தனன்என்று
சந்தத் தவர்சொல் குன்றத்தூர்த்
தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச்
சைவா தாலோ தாலேலோ

*[அ. சொ.]* முந்த-முதன்மையாக, சூளிகை-நிலா முற்றங்கள், தெற்றிகள்-திண்ணைகள், முகப்பு-முற்பகுதிகள்,

பொன்னகரம்-தேவலோகம், இமைத்தல்-ஒளி விடுதல், விதி-பிரம்மதேவன், உளத்தில்-மனத்தில், ஆடூஉ-ஆண்களும், மகடூஉ-பெண்களும், நந்த-மிகுமாறு, தழைக்குமாறு, நண்ணியவர்கட்கு-கலந்து கொண்டவருக்கு, கதி-மோட்ச இன்பம், இது-இந்தக் குன்றத்தூர், புவியகத்து-பூமியில், சந்தத்தவர்-கவிகள், வண்ணச் செய்யுள்களைப் பாடுபவர்.

**விளக்கம்:** அணி வகைகளில் உயர்வு நவிற்சி அணியும் ஒன்று. அவ்வணிக்கு ஓர் எடுத்துக்காட்டாக இப்பாடலின் முதல் நான்கு அடிகள் அமைந்துள்ளன. குன்றத்தூரில் உள்ள மாளிகைகளும், நிலா முற்றங்களும், திண்ணைகளும், ஆகியவற்றின் முற்பகுதிகள் பொன்னாலும், மணியாலும் அமைந்துள்ளன என்று கூறப்பட்ட காரணத்தால், இஃது உயர்வு நவிற்சி அணியாயிற்று. ''வீறுகோள் அணி'' என்று கூறினும் அமையும். தேவலோகம் பொன்னுலகம் என்று கூறப்படுதல் மரபு. அத்தேவலோகம்போல, இந்தக் குன்றத்தூரும், விளங்குகிறது. அத்துடன், அத்தேவலோகத்தை விடவும் ஒளிவிட்டுத் திகழ்கிறது. அக்காரணம் கொண்டே தேவலோகத்தில் உள்ள ஆண், பெண் என்னும் இருபாலாரும் கண் இமைத்தலைக் குறைந்துக்கொண்டனர் என்று கூறியிருப்பது தற்குறிப்பு ஏற்ற அணியின்பால் படும். விண்ணுலக ஆடவர் பெண்டிரும் இமையாது பார்த்த வண்ணம் இருந்தனர் என்று கூறினும் அமையும்.

திருஞான சம்பந்தரின் திருமணத்திற்கு வந்திருந்தவர் யாவரும் வீடு பேறுற்றுப் பேரின்பம் எய்தினர். எல்லோரும் சோதியுள் புகுந்தனர் என்பதைச் சேக்கிழார்,

அணிமுத்தின் சிவிகைமுதல் அணிதாங்கிச் சென்றோர்கள்
மணிமுத்த மாலைபுனை மடவார்மங் கலம்பெருகும்
பணிமுற்றும் எடுத்தார்கள் பரிசனங்கள் வினைப்பாசம்
துணிவித்த உணர்வினராய்த் தொழுதுடன்புக் கொடுங்கினார்

என்று பாடியறிவித்தனர்.

இங்ஙனம் எவரும் எளிதில் வீடுபேறு பெற்றமையை எண்ணியும், இதனைத் தாம் பெற இயலாமல் போயிற்றே என்றும் நொந்து, இராமலிங்க வள்ளலார் ஒரு பாடல் பாடி யுள்ளார். அதுவே,

எங்கோவே யான்புகலி எம்பெருமான் தன்மணத்தில்
அங்கோர் பொருட்சுமையா ளானேல்—இங்கேநின்
தாள்வருந்த வேண்டேன் தடைபட்டேன் ஆதலின்இந்
நாள்வருந்த வேண்டுகின்றேன் நான்

என்பது.

திருஞான சம்பந்தரது அருள் பண்பு திகழும் இடங்கள் பற்பல. அவற்றுள் சில கொல்லிமழவனது மகள் முயலகனும் பொருவில் அரும் பிணியினால் வருந்துவதை அறிந்து, திருப்பாச்சிலாச்சிராமப் பரமனை நோக்கி,

அணிவளர் கோலம்எலாம் செய்து
பாச்சிலாச்சிராமத் துறைகின்ற
மணிவளர் கண்டரோ மங்கையை
வாடமையல் செய்வதோ இவர்மாண்பே

என்று பாடி அந்நோயைப் போக்கியதும், திருக்கொடி பாடச் செங்குன்றூரில் தம்முடன் இருந்த அடியவர்கள் நளிர் சுரத்தால் நலிந்தபோது,

கைவினைசெய்து எம்பிரான்
கழல்போற்றுதும் நாம்அடியோம்
செய்வினைவந் தெமைத் தீண்டப்
பெறுதிரு நீல கண்டம்

என்று பாடி அந்நளிர்க் காய்ச்சலைப் போக்கியதும், பாம்பு கடித்து இறந்த வணிகன் பொருட்டு அழுது அரற்றிய வணிக மகளின் அரற்றலையும், அழுகையினையும் கேட்டு அருள் கொண்டு, திருமருகல் இறைவனை நோக்கி,

சடையாய் எனுமால் சரண்நீ எனுமால்
விடையாய் எனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவள்உள் மெலிவே

என்று பாடி அவ் வணிகனை எழுப்பியதும் ஆகும். ஆகவே, அருள் சம்பந்தர் எனப்பட்டார்.

குன்றத்தூரும் தம்மை அடைந்தவருக்கு முத்தியாகிய கதியினைக் கொடுக்க வல்லது என்பதை இச் செய்யுள் அறிவித்து நிற்கிறது. (24)

4. முரிவில் வயிரம் கால்யாத்த
முழுமா ளிகைபால் கட்கடையா
முன்னம் திருமால் உருஒத்து
முயங்கும் எனவும் அதற்கருகே
பிரிவில் கருநீ லங்குயிற்று
பெருமா ளிகையக் கடல்கடைந்த
பின்னர் அன்னுன் உருவொத்துப்
பிறங்கும் எனவும் அதற்கருகே
எரிவில் விடுசெந் துகிர்மாடம்
எயில்சூழ் காஞ்சி அடைந்தன்னுன்
எய்தும் உருஒத் தஃதென்றும்
எந்நா வலரும் கொண்டாடச்
சரிவில் வளம்சால் குன்றத்தூர்த்
தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச்
சைவா தாலோ தாலேலோ

[அ. சொ.] முரிவில்-முறிக்கப்படமாட்டாத, கால்-தூண்கள், யாத்த-கட்டி அமைத்த, முயங்கும்-விளங்கும், பொருந்தும், நீலம்-நீலநிறக் கற்கள், குயிற்று-பதித்துள்ள காரணத்தால், அன்னுன்-அத்திருமாலின், பிறங்கும்-விளங்கும், எரி-தீயைப்போல, வில்விடு-ஒளிவிடும், துகிர்-பவழத்

தால் இயைந்த, எயில்-மதில், காஞ்சி-காஞ்சிபுரத்தை, அன்னோன்-அத் திருமால், அஃது-அந்தக் குன்றத்தூர், எந்நாவலரும்-எத்தகைய பெரும் புலவர்களும், சரிவில்-குறையாத, சால்-நிறைந்த.

**விளக்கம்:** திருமாலின் இயற்கைத் திருமேனி, வெண்ணிறமாகும். பின்னர் அது பச்சை வண்ணம் ஆயது. இங்ஙனம் பச்சை வண்ணம் ஆயதற்குக் காரணம் திருப்பாற் கடலைக் கடைந்தபோது, அதனின்று எழுந்தவிடத்தின் கொடுமையே ஆகும். அதன் வேகமே திருமாலின் நிறத்தை மாற்றியது என்க. இதனை நமது நாவுக்கரசராம் நல்லோர் அழகுற,

பருவரை ஒன்று சுற்றி அரவம்கை
விட்ட இமையோர் இரந்து பயமாய்த்
திருநெடு மால்நி றத்தை அடுவான்
விசும்பு சுடுவான் எழுந்த விசைபோய்ப்
பெருகிடம் மற்றி தற்கொர் பிதிகாரம்
ஒன்றை அருளாய் பிரானே எனலும்
அருள்கொடு மாவிடத்தை எரியாமல்
உண்டவன் அண்டர் அண்டர் அரசே

என்று பாடியருளினர்.

காஞ்சி புராணமும், திருமாலுக்கு இவ்வாறு வண்ணம் மாறியதை,

வருகனல் வல்விடம் தாக்கி
மாயவன் வெண்ணிற மேனி
கரிகினன் அன்றுதொ டங்கிக்
கரியன் எனப்பெயர்ப் பெற்றான்

என்று கூறுகிறது. பின்னர் ஏகம்பர நாதரைப் பூசித்துச் செந்நிழப் பெற்றனன்.

நகரத்தின் செல்வச் சிறப்பு ஆண்டுள்ள அழகிய திருமாளிகையின் மூலம் அறியலாம். சச்சந்த மகாராசனது அரண்மனையும், இவ்வாறு இருந்தது என்பதைச் சீவக சிந்தாமணி,

முத்த மாலை முப்புரி மூரிமா மணிக்கத
வொத்த நான்கு கோபுர மோங்கிநின் றொளிர்வன
சத்தி நெற்றி சூட்டிய தாமநீண் மணிவணன்
தத்தொளி மணிம்முடித் தாம நால்வ போலுமே

என்று கூறுகிறது.

இத்தகைய சிறப்புடையது குன்றத்தூர் என்பார் போல, "முரிவில் வயிரக்கால் யாத்த முழு மாளிகை" என்று பாடினர்.

இந்த அழகிய கருத்துக்களையே இப் பாடலின் முன்னர் உள்ள அடிகள் அறிவித்து நிற்கின்றன. குன்றத்தூர் எல்லா வளன்களும் ஒருசேரப் பெற்றிருப்பதால் **சரிவில் வளம்சால் குன்றத்தூர்** எனப்பட்டது. நாவலராம் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் குன்றத்தூரைப் பற்றிப் புகழும் போது,

பாலாறு வளம்சுரந்து நல்க மல்கும்
பாளைவிரி மணம்கமழ்பூஞ் சோலை தோறும்
காலாறு கோலிஇசை பாட நீடும்
களிமயில்நின் றாடும்இயல் தொண்டை நாட்டுள்
நாலாறு கோட்டத்துப் புலியூர்க் கோட்டம்
நன்றிபுனை குன்றைவள நாட்டு மிக்க
சேலாறு கின்றவயல் குன்றத் தூரில்
சேக்கிழார் திருமரபு சிறந்த தன்றே

என்று பாடியருளினர்.

இங்ஙனம் இம்மாபெரும் புலவரே குன்றத்தூர் வளத்தின் சிறப்பை இவ்வாறு பாடினர் என்றால், பிற புலவர் அதனை எம்முறையில் பாடுவர் என்று கூறவேண்டா அன்றோ? இக்காரணம் பற்றியே, "எந்நாவலரும் கொண்டாடச் சரிவில் வளம்சால் குன்றத்தூர்" என்று கூறப்பட்டது.

வைரத்தின் பண்பு ஐந்து என்பர். அவை,

"பலகை எட்டும் கோணம் ஆறும்
இலகிய தாரையும் சுத்தியும் தராசமும்
ஐந்தும் குணம்என்று அறைந்தனர் புலவர்
இந்திரச ாபத்து இலகொளி பெறினே" என்பன.

*குற்றங்கள் பன்னிரண்டாகும். அவைகள்,*

*சரைமலம் கீற்று சப்படி பிளத்தல்*
*துளைகரி விந்து காக பாதம்*
*இருத்துக் கோடிகள் இலாதன முரிதல்*
*தாரை மழுங்கல் தன்னோடு*
*ஈராறும் வயிரத்து இழிபென மொழிப*

என்பன.

*இங்ஙனம் குணங்களைப் பெற்றும், குற்றங்கள் இன்றியும் உள்ள வைரங்களை உளத்தில் கொண்டே ஆசிரியர், ''முரிவில் வைரம்'' என்றனர்.* (25)

5. சோறு மணக்கும் மடங்கள்எலாம்
தூய்மை மணக்கும் சிந்தைஎலாம்
சுவணம் மணக்கும் ஆடைஎலாம்
தொங்கல் மணக்கும் தோள்கள்எலாம்
சேறு மணக்கும் கழனியெலாம்
செல்வம் மணக்கும் மாடமெலாம்
தென்றல் மணக்கும் மேடைஎலாம்
தெய்வம் மணக்கும் செய்யுள்எலாம்
நீறு மணக்கும் நெற்றியெலாம்
நெய்யே மணக்கும் கறிகள்எலாம்
நெறுப்பு மணக்கும் குண்டமெலாம்
நேயம் மணக்கும் வீதிஎலாம்
சாறு மணக்கும் குன்றத்தூர்
தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச்
சைவா தாலே தாலேலோ

*[அ. சொ] மணக்கும் - விளங்கும், மணம்வீசும்; மடம்- அறச்சாலை தூய்மை - பரிசுத்தமான குணம், சிந்தை -*

மனம், சுவணம்-பொன்மயம், மணத்தல் - பொருந்துதல், கூடுதல் - கலத்தல், நேர்தல்; தொங்கல் மாலை, மாடம் - மாளிகை. தென்றல் - தென்றல்காற்று, குண்டம் - ஓம குண்டம். நேயர்-அன்பு, சாறு - விழாக்கள், தெய்வம் - தெய்வத்தன்மை.

**விளக்கம்:** பொதுவாக மடங்கள் உணவுக்குக் குறை வற்ற இடங்கள். எப்போது செல்லினும், சோறளிக்கும் பெருமை படைத்தவை. இவற்றை நேரே காணவிழைவ்ார் திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள், மதுரை, திருமைலம் முதலான மடங்களுக்குச்சென்று கண்டு தெளியலாம். உண்டும் உண்மைகளை உணரலாம். இதனை மனத்துள்கொண்டே திரு பிள்ளை யவர்கள் சோறுமணக்கும் மடங்கள் எலாம் எனப் ,பொதுப்படவே கூறியருளினர். திருப்பனந்தாள் திருமடத்தார் இன்றும் குன்றத்தூரில் சோறளித்து வருகின்றனர். சேக்கிழார் மடமும் சோறளித்து வருகிறது. குன்றத்தூர் வாசிகள் கள்ளம் கபட மற்றவர் என்பதை அவர்கள் மனம் தூய்மையாக இருக்கும் என்று கூறி விளக்கினர். 'மனத்தின் கண் மாசிலனாதல் அன்றோ அறம்? அவ்வூரின் செல்வச்சிறப்பை அவ்வூரினர் அணியும் பொன்னுடை கொண்டு விளக்கினர். இப்படியே அவ்வூரின் பல சிறப்பியல்பைக் கவிஞர் பாடலால் கூறினர். "அகல உழுவதிலும் ஆழ உழு" என்பது பழமொழி. அங்ஙனம் உழுவதால் மண் நன்கு கிளறப்படும். அந்நிலையில் நீரைப் பாய்ச்சினால் சேறுஆகும். இதனை இவ்வூர் உழவர்கள் செய்பவர்கள். நெய்யில்லா உண்டிப்பாழ் என்பதை நினைவில் கொண்ட குன்றத்தூர் வாசிகள், தாம் சமைக்கும் கறிவகைகளில் நெய்விட்டுச் சமைத்தனர் என்பதை "நெய்யே மணக்கும் கறிகளெலாம்" என்று கூறி அறிவித்தார்.

ஊருக்கு வறுமை வராமல் இருப்பதற்கு உரிய காலங் களில் யாகம் முதலிய வைதிக காரியங்களைக் செய்து வருவதனால் என்னலாம். இதனை அழகுபட நமது ஞானச்

செல்வராம் திருஞானசம்பந்த சுவாமிகள் "கற்றுங்கு எரி ஓம்பி, கலியை வாராமலே, செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலம்" என்று எரிஓம்பலைச் சுட்டியதன் மூலம் உணரலாம். பழம் பாடல் ஒன்று இந்த எரிஓம்பல் சிறப்பினை எடுத்துக் காட்டுகிறது. அப்பாடல்,

நல்லம்பர் நல்ல குடியுடைத்துச் சித்தன்வாழ்வு
இல்லந் தொறுமூன் றெரியுடைத்து—நல்லரவப்
பாட்டுடைத்துச் சோமன் வழிவந்த பாண்டியநின்
நாட்டுடைத்து நல்ல தமிழ்

என்பது. இந்த எரிஓம்பல் குன்றத்தூரில் தடைபடாது நடந்து வந்தது என்பதை உணர்த்த "நெருப்பு மணக்கும் குண்டமெலாம்" என்று கூறினர். நெருப்பாவது ஓமத்தீ, வேதாக்கினி. குன்றத்தூர் வாசிகள் அன்பு நிறைந்த உள்ளத்தினர். அவர்கள் தம் இல்லம் நோக்கி வந்தவரிடத்தில் மட்டும் அவ் அன்பைக் காட்டக் கூடியவர் என்பதன்றித் தெருவிலும் அவரைக் காணும்தோறும் அவ் வண்ணம் காட்டும் இஎல்பினராய்த் திகழ்பவர் என்பதைத் தான் "நேயம் மணக்கும் வீதி எலாம்" என்று கூறியுள்ளார். இவ்வூர் திருவிழாச் சிறப்புக்கும் குறைவற்றது என்பதும் தெரியவருகிறது. "சாறுமணக்கும் குன்றத்தூர்" என்ற தொடரே இதற்குப் போதுமான சான்றாகும்.

நேயம் மிக்கவராய் அங்கு வருபவரை மெய்யன்பர்கள் நல்வரவு கூறி நன்மொழியே பேசி உபசரிப்பதை இன்றும் காணலாம். திருநாகேச்சரத்தும் நத்தத்தும் திருவிழாக்கள் இன்றும் நடப்பதை நேரில் காணலாம்.

இப்பாடலில் மணக்கும் என்னும் சொல் பல பொருளில் ஆளப்பட்டிருத்தலின், இது சொல் பொருள் பின், வருநிலை அணிக்கு எடுத்துக் காட்டாகும். (26)

6. துங்கம் மிகுந்த அருந்தவம் மேவிய
தோலா நாத்திரண
தூமாக் கினியருள் தொல்காப் பியமே
தோன்றும் இலக்கணமரப்
பங்கம் இலாச்சம யாதி அடைந்து
பராம்சிவ சின்னமுறும்
பாக மருஉம்பக் குவரே கேட்கப்
படும்அதி காரிகளா
அங்கம் எடுத்துழல் துன்பம் ஒழிந்தின்
படைவது வேபயன
அற்புதம் மேவிய தொண்டர் புராணம
தருள்கரு ணைக்கடலே
சங்கம் மாஇஅமர் குன்றைத் திருமுனி
தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புயல்
தாலோ தாலேலோ

*[அ. சொ] துங்கம்-உயர்வு, பெருமை, தோலா-தோல்வி யுறுத, நா-நாவினைப் படைத்த, திரணதூமாக்கினி-தொல் காப்பியர், தொல்காப்பியம் என்பது தமிழ் இலக்கண நூல். தோன்றிய - பொருந்திய, பங்கம் - குற்றம், சமயாதி - சமய தீட்சை முதலியவைகளை, அடைந்து - பெற்று, பராம் - பராவும், சிவ சின்னம் - சைவ அடையாளங்களாகிய திருநீறு, உருத்திராக்கம் முதலியன, மருஉம் - சேரும், அங்கம்-உடல், சங்கம்-சற்சங்கங்கள், மாஇ-நிறைந்து, குன்றைத்திருமுனி-குன்றத்தூரில் அவதரித்த சேக்கிழார் பெருமானார், புயல்-மேகமே, பாகம்-மலபரி பாகம், பக்கு வர்-சத்தினிபாதத்து உத்தமர். சமயாதி என்பது சமயம் விசோடம், நிருவாணம் ஆகிய மூன்று தீட்சைகள்.*

**விளக்கம் :** தவத்திற்கு இருக்கும் பெருமையும் உயர் வும் மிகுதி. இதனை வள்ளுவர் வகுத்த தவம் என்னும் அதி

காரத்தின் மூலம் நன்கு உணரலாம். தவம் என்பதற்குப் பொருள் கண்ட பரிமேலழகர், "அஃதாவது மனம் பொறி வழி போகாது நிற்றல் பொருட்டு, விரதங்களால் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயில் நிலைநிற்றலும், மாரியிலும் பனியிலும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு அவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துப் பின் உயிர்களை ஓம்புதல்" என்றனர். மணக்குடவரும் இக்கருத்தினைப் போலவே, "தவமாவது, ஊணும் உறக்கமும் குறைத்தலும், வெயிலும் பனியும் தாங்கலும் தேவர் வழிபாடு முதலியனவும் மேற்கொண்டு முயலல்" என்றனர். சிறுபஞ்சமூலம்,

உயிர்நோய் செய்யாமை உறுநோய் மறத்தல்
செயிர்நோய் பிறர்கண் செய்யாமை—செயிர்நோய்
விழைவு வெகுளி இவைவிடுவா னாயின்
இழிவன் றினிது தவம்

என்கிறது.

"விழுப்பொருள் ஞாலம் நோற்பவருக்கு உரியவாகும்" என்பது சிந்தாமணி. "வேண்டிய விளைத்துக் கொள்ளும் விழுத்தவம்" என்பது சூளாமணி. "வேண்டின வேண்டினர்க்கு அளிக்கும் மெய்த்தவம்" என்பது கம்பர் வாக்கு. "பண்ணிய தவத்தால் அன்றி யாதாலும் படுபொருள் பிறிதில்லை" என்பது திருவிளையாடல் புராணம்.

அத்தவம் பிறவியை அகற்றி மேதகு
முத்தியை நல்கியே முதன்மை ஆக்குறும்
இத்துணை அன்றியே இம்மை இன்பமும்
உய்த்திடும் உளந்தனில் உன்னும் தன்மையே

என்பர் கச்சியப்ப சிவாசாரியார். இவை யனைத்திற்கும் காரணமாய் நின்ற குறள்,

" வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டும் முயலப் படும் "

என்பது.

இன்னோரன்ன காரணங்களால் "துங்கம் மிகுந்த அருந் தவம்" என்று தவம் சிறப்பிக்கப்பட்டது. இத்தகைய தவக் கோலம் பூண்டவர் திரண தூமாக்கினி. அவர் வாக்காகிய தொல்காப்பியமாம் தொன்மைநூல், எவராலும் அசைக்க ஒண்ணு அரும்பெருங் கருத்துக்களையும், இலக்கண நுட்பங் களையும் கொண்டுள்ளது. இதனை அவர் அவர்கள் அந்நூலைக் கொண்டு படித்தால் நன்கு உணர்வர். இத்தகைய நூலை எவரும் எத்தகைய குற்றமும் காணுத நிலையில் திரணதூ மாக்கினி பாடிய காரணத்தால், "தோலா நாத் திரண தூமாக்கினி" எனப்பட்டார். இதனை ஓர் எடுத்துக் காட் டால் மட்டும் எடுத்துக் காட்டி, மேலே செல்வோமாக. நன்னூல் ஆசிரியர் பல்கலைக்குரிசில் பவணந்தியார், உயர் திணைக் குரியார் யாவர்? அஃறிணைக்குரியார் யாவர் என் பதைக் குறிப்பிடுகையில்,

"மக்கள், தேவர் நரகர் உயர்திணை
மற்றுயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை"

என்றனர்.

ஒல்காப்பெருமை வாய்ந்த தொல்காப்பியர், இவ்விரு திணைகளைக் குறிப்பிடும்போது,

உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்பனர் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே

என்றனர்.

இவ்விருபெரும் ஆசிரியர்கள் அவ்வத்திணைக்குரியவர் களைக் குறிப்பிடும் நிலைகள் செவ்வனே வேறுபடுத்திக் கூறப் பட்டுள்ளதை நன்கு ஈண்டு நோக்குதல் வேண்டும். நரகரை யும் உயர்திணையின்பால் படுத்தினர் பவணந்தியார். தீவினை கட்குரியவர் அல்லரோ நரகர்? அவர்கள் எக்காரணத்தால் உயர்திணையாதல் கூடும்? வள்ளுவர் தேவர்களைப் பற்றிக் கருதியுள்ள கருத்து, கயவர் என்பதாகும். இதனை,

தேவரே அனையர் கயவர் அவரும்தாம்
மேவன செய்துஒழுக லான்

என்ற குறளைக்கொண்டு நன்கு தெரியலாம். இங்ஙனம் இருக்கத் தேவர்களையும் உயர்திணையர் என்று அறுதியிட்டு, உறுதியாகக் கூற முடியுமோ? இவ்வாறு உயர்திணைக்குரியவர்களைக் குறிப்பிட்டிருப்பது தவறு. பவணந்தியார்க்குத் தோல்வியுமாகும். ஆனால், தொல்காப்பியர் மிகவும் விழிப்புடன் மக்கள் பண்பு எவ்வுயிரிடத்தும் இருப்பினும், அவ்வுயிர் உயர்திணையே ஆகும் என்ற கருத்தில்தான், "உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே" என்றனர். தேவர்களும் "மக்கட் சுட்டு இலரேல், அவர்களும் உயர்திணை ஆகார் என்பது அவரது கருத்து. இங்ஙனம் அவர் விழிப்புடன் இலக்கணம் வகுத்திருத்தலின் "தோலாநா" என்று அடை கொடுத்துப் பேசப்பட்டனர்.

இந்தத் தொல்காப்பியமே தமிழ் மொழிக்கு இலக்கண நூலாகும். இதற்குமுன் இருந்த அகத்தியம் தமிழ் மொழிக்கு இலக்கணம் ஆகாதோ எனில், அவ்வகத்தியம் முற்ற முடிய அமைந்த நூலாக நாம் பெறுதற்கு இல்லா நிலையில் இருத்தலின், அதனையே தமிழ் இலக்கியங்கட்கு இலக்கணமாகக் கொள்ள அத்துணைப் பொருத்தமாகக் காணப்படாது. ஆகவே, திரணதூமாக்கினியார் எழுதிய தொல்காப்பியமே தமிழ் இலக்கியங்கட்கு இலக்கணமாகக் கொள்க. இக்கொள்கை பற்றியே ஈண்டுத் திரு பிள்ளையவர்கள் பெரிய புராணத்திற்குரிய இலக்கண அமைப்புத் தொல்காப்பிய இலக்கண அமைப்பே என்ற கருத்தில் "தொல்காப்பியமே தோன்றும் இலக்கணமா" என்று கூறினர். இதற்குச் சான்றுகள் பலவாக இருப்பினும், இரண்டினை மட்டும் ஈண்டு எடுத்துக் காட்டுவோமாக.

தொல்காப்பியத்தில் குறிஞ்சி முதலிய திணைகளுக்குரிய தெய்வங்கள் இன்ன என்பதைக் கீழ்வரும் நூற்பாவால் அறியலாம்.

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே

இந்நூற்பாவின் மூலம், முல்லை நிலத்துக்குரிய தெய்வம் மாயோன் என்பதையும், மருத நிலத்துக்குரிய தெய்வம் இந்திரன் என்பதையும் உணர்கின்றோம். இந்த இலக்கணக் குறிப்பினை எடுத்துக் காட்டுவார்போல நம் சேக்கிழார் பெருமானார், மருதநிலத்தின் தெய்வத்தைக் குறிப்பிடும் போது,

உழுத சால்மிக ஊறித் தெளிந்தசே
றிழுது செய்யினுள் இந்திர தெய்வம்
தொழுது நாறு நடுவார் தொகுதியே
பழுதில் காவிரி நாட்டின் பரப்பெலாம்

என்றும், முல்லை நிலத்துத் தெய்வம் மாயோன் என்பதை அறிவிக்குங்கால்.

''அங்கண் முல்லையின் தெய்வமென் றருந்தமிழ் உரைக்கும்
செங்கண் மால்''

என்றும் கூறியதையும் காண்க.

ஆகவே, இத்தொண்டர் புராணத்திற்கு இலக்கணம் தொல்காப்பியம் என்பதைத்தான், ''தொல்காப்பியம் தோன்றும் இலக்கணமா'' என்று கூறினர்.

சைவசமயாசாரமாகிய சரியை வழிபாட்டிற்கு அதிகாரியாக வேண்டுமானால், சமய தீட்சை பெறுதல் வேண்டும். சமய தீட்சை என்பது மண்டப பூசை செய்து விதிப்படி மாணக்கனை வழிபடுவித்துச் சம்போத ஓமத்தால் சுத்திப் படுத்துவதாகும். இந்தத் தீட்சையோடு விசேட தீட்சை, நிர்வாண தீட்சை முதலியனவும் பெற்றவரே சைவ ஆகம

நூல்களைக் கேட்கத்தக்கார் என்ற கருத்தில்தான் "சமயாதி அடைந்து" என்றனர். விசேட தீட்சையாவது சமய தீட்சை செய்து குண்டத்தில் வாகீசுரனையும், வாகீசுவரியையும் ஆவாகனம் செய்து, சீடனது சீவனை வாங்கி, இவ்விருவரின் நாடியில் செலுத்திக் கருப்பாதான முதலிய கிரியைகளை மூன்று மூன்று ஆகுதிகளால் நிரப்பிக் கரு உருவுற்றுப் பயந்ததாகப் பாவித்துக் குண்டத்தினின்று சீவனை மீண்டும் வாங்கிச் சீடனது இருதயத்தில் நிலைநிறுத்திச் சிவகுமரனாக ஆக்குவது. இத்தகையவனே சிவபூசை செய்யவும், ஆகமம் ஓதவும் யோகநெறியை மேற்கொள்ளவும் தகுதியுடையவன். நிர்வாண தீட்சை என்பது மேலே கூறப்பட்ட தீட்சைகள் செய்யப்பட்டு, சீவன் திரிகரணங்களால் செய்யும் செயல்கட்கு இடமாகிய அறுவகை அத்துவாக்களின் தன்மைகளும் அவை அடங்கும் முறைகளும் அறிந்து, மந்திர முதலிய ஐந்தினையும் கலை ஐந்திலும் பகுத்தடக்கி, நிவர்த்தி முதலிய கலை ஐந்தையும் சோதனை செய்து அவற்றினின்று நீங்கிய மாணாக்கன் ஆன்மாவை வாங்கிப் பிரசாத நெறியாலே பரமசிவனிடத்தில் ஒடுக்கித் தற்போதம் அடங்கிச் சிவானந்தம்மேல் இடும்படி செய்து மலத்தைப் போக்கி உண்மை ஞானம் விளங்கச் செய்வது. இங்ஙனம் செய்யின் அம்மாணவன் சிவப் பேற்றை அடைவான்.

பாகமரூஉம்பக்குவர் என்பவர் மல பரிபாகம் பெற்றுச் சத்திநிபாத நிலையுற்ற உத்தமர்கள். மல பரிபாகமாவது, மலம் தனது சத்தி தேய்தற்குரிய துணைக்கரணங்கள் எல்லாவற்றோடும் கூடுதலாம்.

சத்திநிபாதமாவது சரியை யாதி, தவம் முதலியவற்றில் பட்டு நிகழ்வதற்கேற்பப் பக்குவமாதற் பொருட்டு, மலத்துக்கு அநுகூலமாய் நின்று நடாத்திய திரோதான சத்தி, மலம் பரிபாகம் எய்தியவழிக் கருணை மறமாகிய செய்கை மாறிக் கருணை எனப்படும் சிவசத்தி வடிவமேயாகி உயிர்களிடத்து வெளிப்படுவதாம், பக்குவமுடைய ஆன்மாவிலே

திருவருள் பதிதல். இவ்வாறு, சிவஞான சித்தியாரும், "மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்தினி பாதம் மேவுதலும்" என்று விளக்குதலேயும் காண்க.

அற்புதம் மேவிய தொண்டர் புராணம் எனச் சிறப் பித்ததன் காரணமாக, இந்நூலில் பல செயற்கரிய செயல் களின் விளக்கம் கூறப்பட்டிருப்பதனுல் என்க.

சைவர்கட்கு உயிராகவும், உடலாகவும், உடையாகவும் உள்ளவை முறையே ஐந்தெழுத்து. திருநீறு, உருத்திராக்க மாகும். இவற்றுள் புறத்தே விளக்கம் தருவன திருநீறும், உருத்திராக்கமும் ஆகும். இவையே சிவசின்னம் எனப்படும்.

பெரிய புராணத்தைக் கேட்கத் தக்கவர் இன்னுர் என்பைதச் சேக்கிழார் கூறும்போது, "மெய்ப்பொருட்கு உரியார் கொள்வர் மேன்மையால்" என்று கூறியதற்கேற்ப, தொண்டர் புராணம் பாடி முடித்தபோது, கேட்டவர்கள் யாவர் என்பதை உணர்த்த வந்த கொற்றவங்குடி உமாபதி சிவாசாரியார்,

வாழிதிருத் தொண்டர்புரா ணத்தை நீரே
வாசித்துப் பொருள்அருளிச் செய்வீர் என்று
சோழர்பெரு மான்முதலாம் அடியார் எல்லாம்
சொலக்கேட்டுக் குன்றைமுனி மன்றுள் ஆடும்
தாழ்சடையான் அடிஎடுத்துத் தரத்தாம் செய்த
சைவகதை யிலைவிளங்க விரித்துச் சொல்லச்
சூழஇருந் தம்பலவர் அடியார் எல்லாம்
சுருதிமொழி இதுஎனக்கை தொழுது கேட்டார்

என்று கூறியருளினுர்.

இந்த எடுத்துக் காட்டினுல் பெரியபுராணம் கேட்டற் குரிய பக்குவர் இன்னர் என்பது பெறப்படுகின்றதன்றே? இது கருதியே, "சிவசின்னமுறும் பாக மரூஉம் பக்குவரே கேட்கப்படும் அதிகாரிகளா" என்றனர்.

உடம்பு எத்தகையது என்பதை மணிமேகலை,

வினையின் வந்தது வினைக்கு விளைவாயது
புனைவன நீங்கில் புலால்புறத் திடுவது
மூப்புவிளி வுடையது தீப்பிணி இருக்கை
பற்றின் பற்றிடம் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவின் செற்றக் கொள்கை
அவலக் கவலை கையா றழுங்கல்
தவலா உள்ளம் தன்பால் உடையது
மக்கள் யாக்கை இது

என்று தெளிவுறக் கூறுகிறது.

இதனை உட்கொண்டே ஆசிரியர் "அங்கம் எடுத்துழல் துன்பம்," என்றனர்.

பெரியபுராண நூலைப் படிப்பதன் பயன் பெரிது. இதனை சேக்கிழார் பெருமானாரே தெள்ளத் தெளிய எடுத்து மொழிந்துள்ளார். தமது நூலைச் சூரியனுக்கு ஒப்பிட்டுக் காட்டுகிறார் புலவர் பெருமானார். சூரியன் உலகில் உள்ள புற இருளை நீக்குகிறது. அதுபோல இப் பெரிய புராணமாம் திருத்தொண்டர் புராணம், மக்கள் உள்ளத்தில் நிறைந்த அஞ்ஞான இருளைப் போக்கவல்லது என்கிறார். அஞ்ஞானம் ஒழிந்தால் மெய்ஞ்ஞானம்தானே நிலவும். மெய்ஞ்ஞான மாகிய பலனைத் தவிர்த்துப் பெறவேண்டியது யாதுளது? ஒரு நூலால் அடைய வேண்டிய பொருள்களாகிய அறம் பொருள் இன்பம் வீடு என்றும் நூற்பொருள்களையும் மெய்ஞ்ஞானத்தால் பெறலாம் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? ஆகவே, தொண்டர் புராணம் அக இருளை நீக்கி, ஞான ஒளியை நல்கும் என்று கூறுவதால் பயனைக் கூறியதாகும் இதனைச் சேக்கிழார்,

இங்கிதன் நாமம் கூறின்
இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டின் மாக்கள்
சிந்தையுள் சார்ந்து நின்ற

பொங்கிய இருளை ஏனைப்
புறஇருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும்
திருத்தொண்டர் புராணம் என்பாம்

என்று விளக்கிப் போந்தார்.

இதனையே "இன்பம் அடைவதுவே பயன்" என்றனர். இன்பம் என்பது மெய்ஞ்ஞான இன்பமே ஆகும். சற்சங்கம் நிறைந்தபதி குன்றத்தூர் ஆதலின் சங்கம். மரீஇ அமர் குன்றை" என்றனர். அங்குப் பல சங்கங்களை இதுபோதும் நிறுவிப் பல சமய சமூக வளர்ச்சிக்கு, அங்குளார் பாடு படுவதை நேரில் காணலாம்.

தொண்டர்புராணத்துள் பற்பல அற்புதங்கள் நிறைந்துள்ளன. ஆன்கன்றும், அரசிளங்கன்றும் மந்திரியும் உயிர் பெற்று எழுந்தனர். திருநீலகண்ட நாயனாரும் அவர்தம் மனைவியாரும் மேவியமூப்பு நீங்கி விழிப்புறும் இளமை எய்தினர். அப்பர் சம்பந்தர், சுந்தரர் செய்த அற்புதங்கட்கு அளவில்லை. இங்ஙனம் பல அற்புதங்களைத் தொண்டர் புராணம் கொண்டது ஆதலின், "அற்புதம் மேவிய தொண்டர் புராணம்" என்றனர். சேக்கிழார் மன்னவன் சீவக சிந்தாமணியில் கொண்டிருந்த பற்றினைப் போக்கித் தொண்டர் புராணத்துள் அப்பற்றினைக் கொள்ளுமாறு செய்து, அவனைப் புறச் சமயத்தில் விழாதவாறு செய்து, சைவசமயத்தில் ஈடுபாடுகொள்ளச் செய்த காரணத்தால் "கருணைக்கடலே" எனப்பட்டனர். (27)

7. அடியார் பெருமையும் அருமையும் நாளும்
அறிஅம் பலவாணர்
அவர்வர லாறு விரித்துரை செய்பவர்
ஆரென உட்கருதிக்
கடியார் மற்றவர் அன்பத் தனையும்
கண்காண் படிசெய்து
காமரு முதலும் எடுத்தரு ளினர்இக்
கடல்சூழ் புவிஇடைஇப்
படியார் பெற்றார் தமிழ்மான் மியம்எப்
பாடைக ளுக்குளதிப்
பாக்கியம் நம்தவம் என்று பலோரும்
பகரப் படுவதீந்
தடியார் தடிசூழ் குன்றைத் திருமுனி
தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புயல்
தாலோ தாலேலோ

*[அ. சொ.] அம்பலவாணர் - நடராசப் பெருமான், கடியார் - விளக்கம் அமைந்த, அருள் புரிந்த, கண் - ஞானக்கண், காண்படி - காணும்படி, காமரு - அழகிய, முதலும் - உலகெலாம் என்ற முதல் தொடரையும், புவி - பூமி, பாடைகள் - மொழிகள், பலோரும் - பலபேரும், பகரப்படுபவ - சிறப்பித்துக் கூறப் படுபவரே, தீம்-இனிய, தடி - கரும்பு, ஆர் - பொருந்திய, தடி - வயல்.*

**விளக்கம்:** *இறைவர் அடியார்களுடைய பெருமையையும் அருமையையும் நன்கு அறிந்திருந்தமையால்தான், அவ்வப்போது, அவர்கட்கு ஏற்பட்ட இன்னல்களை எல்லாம் போக்கி அருளினர். அடியார்களின் பெருமையும் அருமையும் அறிந்ததனால் அன்றோ, திருநாளைப் போவார்க்கும், தில்லைவாழ் அந்தணர்கட்கும் கீழ்வரும் கட்டளை இட்டருளினர்.*

இப்பிறவி போய்நீங்க எரியினிடை நீமூழ்கி
முப்புரிநூல் மார்பருடன் முன்அணைவாய் எனமொழிந்
தப்பரிசே தில்லைவாழ் அந்தணர்க்கும் எரிஅமைக்க
மெய்ப்பொருளா னார்அருளி அம்பலத்தே மேவினார்

என்பது அக்கட்டளை மொழி.

இறைவர் சுந்தரருக்கும் அடியார் பெருமையினையும், அருமையினையும் அருளிச் செய்ததை,

''பெருமையால் தம்மை ஒப்பார்
பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார்
ஊனமேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார்
அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்றார்
இவரைநீ அடைவாய் என்று''

அருளியதாலும்,

சுந்தரரைப்பற்றிச் சங்கிலியாரிடம் கூறும்போது,

சாரும் தவத்துச் சங்கிலிகேள்
சால என்பால் அன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட
தவத்தான் வெண்ணெய் நல்லூரில்
யாரும் அறிய யான்ஆள
உரியான் உன்னை எனைஇரந்தான்
வார்கொள் முலையாய் நீஅவனை
மணத்தால் அணைவாய் மகிழ்ந்தென்றார்

என்று எடுத்து மொழிந்திருப்பதாலும், இறைவர் அடியார் அருமையும் பெருமையும் நாளும் அறி அம்பலவாணர் எனப் பட்டார்.

இறைவன் உள்ளிருந்து நமக்கு உணர்த்திலர் எனில், நம்மால் யாதும் செய்ய இயலாது. இதனை வற்புறுத்தவே அப்பர் பெருமானார்,

ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே
  அடக்குவித்தால் ஆர்ஒருவர் அடங்கா தாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே
  உருகுவித்தால் ஆர்ஒருவர் உருகா தாரே
பாட்டுவித்தால் ஆர்ஒருவர் பாடா தாரே
  பணிவித்தால் ஆர்ஒருவர் பணியா தாரே
காட்டுவித்தால் ஆர்ஒருவர் காணு தாரே
  காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே

என்று பாடியருளினர்.

இந்த உண்மையினை உணரும்போது சேக்கிழார் பெருமானார், இறைவன் தம் உள்ளத்தில் அமர்ந்து உணர்த்த தொண்டர்களின் வரலாற்றைப் பாடி முடித்தனர் என்பது தெரிகிறது.

இறைவன் முதல் எடுத்துக் கொடுத்த பின்பேதான் நூலைப் பாடினர் என்பதைச் சேக்கிழாரே,

அருளின் நீர்மைத் திருத்தொண் டறிவரும்
தெருளி னீர்இது செப்புதற் காமெனில்
வெஃருளின் மெய்ம்மொழி வான்நிழல் கூறிய
பொருளின் ஆகும் எனப்புகல் வாம்அன்றே

எனக் குறிப்பிட்டுள்ளார்.

இறைவரும் அனபாயனுக்கு இட்ட கட்டளையின் போது,

சேக்கி ழான்நமது தொண்டர்சீர் பரவ
  நாம்மகிழ்ந் துலகம் என்றுநம்
வாக்கி னுல்அடி எடுத்து ரைத்திட
  வரைந்து நூல்செய்து முடித்தனன்
காக்கும் வேல்வளவ நீயிதைக் கடிது
  கேள்

என்று அருளிச் செய்தனர்.

முதல் என்றது "உலகெலாம்" என்னும் தொடராகும். உலகு என்பது மங்கல மொழி. அதனுல்தான், "காமரும் முதல்" என்றனர்.

சேக்கிழார் அடியாரிடத்தில் அன்பும், அடக்கமும் கொண்டு திகழ்ந்தவர் என்பதை,

அளவி லாத பெருமையர் ஆகிய
அளவி லாஅடி யார்புகழ் கூறுகேன்
அளவு கூட உரைப்பரி தாயினும
அளவில் ஆசை துரப்ப அறைகுவேன்

தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ருஞ்சீர் புகலலுற் றேன்முற்றப்
பெருகு தெண்கடல் உற்றுண் பெருநசை
ஒருசு ணங்கனை ஒக்கும்த கைமையேன்

என்று அவர் பாடியுள்ள பாக்களால் நன்கு தெளியலாம். இது கருதியே ஈண்டு, "அன்பு அத்தனையும் கண் காண்படி செய்து" என்றனர்.

தமிழ் ஒன்றே மொழி என்னும் சிறப்புக்குரியது. ஏனையவை பாடை என்ற பெயரால் வழங்குதற்குரியவை. ஆதலின், இதனைச் சீகாளத்திப் புராணம் நன்கு தெளிவு படுத்தியுள்ளது.

மறைமுதல் கிளந்த வாயான்
மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரை நாட்டி
இலக்கணம் செய்யப் பெற்றே
அறைகடல் வரைப்பில் பாடை
அனைத்தும்வென் றாரி யத்தோ
டுறழ்தரு தமிழ்த்தெய் வத்தை
உள்நினைந் தேத்தல் செய்வம்

என்பது அந்நூற்பாடல்.

இதனுல்தான் "எப்பாடைக்கு உள்ளது" என்றனர்.

சேக்கிழார் பெருமானுர் திருத்தொண்டர் புராணம் செய்தது நாம் செய்த பாக்கியப்பயனே என்பதை நன்கு உணர்ந்து சிவஞான முனிவர்,

தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவகை
வாக்கி ஞல்சொல்ல வல்லபிரான் எங்கள்
பாக்கி யப்பய ஞய்ப்பதி குன்றைவாழ்
சேக்கி ழான்அடி சிந்தை இருத்துவாம்

என்று அருளிப் போந்தனர்.

இதனுல் அன்றே ஈண்டு "இப்பாக்கியம் நம் தவம்" என்று ஆசிரியரைக் கூறச் செய்தது.

இவ்வாறு இறைவர் அடி எடுத்துக் கொடுக்க நூல் தொடங்கிப் பாடப்பட்ட பெருமை எந்த மொழியும் பெற்றிராமையால், ஈண்டுத் திரு பிள்ளை அவர்கள் "இப்படி யார் பெற்ருர் தமிழ் மான்மியம் எப்பாடைகளுக்குரியது" என்று அறிவித்தனர். ஆருடை நம்பிகட்கும் இறைவர் "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கு அடியேன்" எனும் அடி எடுத்துக் கொடுத்துள்ளார் எனில், நம்பி ஆரூரர் ஆசாரியமூர்த்தி ஆவார். கச்சியப்ப சிவாசாரியார்க்கு முருகப் பெருமாஞர் "திகட சக்கரம்" என்ற தொடரை எடுத்து மொழிந்தார் எனில், அவர், புலவர் குழாத்தவர் அல்லர்; அவர் அர்ச்சகர். புலவர்கள் எவரும் இப்பெருமையினைப் பெருமையால் "யார் பெற்ருர்?" என்றனர்.

இப்பாடலில் 'தடி' என்னும் சொல் அருஞ்சொல் ஆகும். அது தனித்தனியே நின்று வெவ்வேறு பொருளில் வருமாறு பாடப்பட்ட அருமை ஆசிரியரைச் சாரும். நாட்டின் செழிப்பு அதன்பால் விளையும் விளைச்சலால் புலனுகும். ஈண்டுக் கரும்புகள் விளையும் வயல்கள் என்று கூறப்பட்டிருத்தலால், குன்றத்தூரின் சிறப்பு விளங்குகிறது. சேக்கிழார் பெருமாஞர் புலவர்போலக் காட்சி அளிப்பவர் மட்டும் அல்லர். ஒரு பெரிய முனிவர் போலவும் காட்சி அளிப்பவர். அனபாய சோழன் சோழநாட்டுச் சக்கரவர்த்தி. அவனைப் பிறர் வணங்க வேண்டுமே அன்றி, அவன் பிறரை வணங்காதவன். அத்தகையவனும் சேக்கிழாரின் திருமேனி கண்டு, கைகள் மேலே எடுத்துச் சிரமேற் கொண்டு வணங்கிப் போற்றினன் என்ருல், அதற்குக் காரணம் அவரது திருமுனிக் கோலமே

யாகும். அனபாயன் சேக்கிழாரது திருமுனி வேடத்தில் ஈடுபட்டு,

தொண்டர் சீர்பரவு வார்எ னப்பெயர்
சுமத்தி ஞானமுடி சூட்டுமுன்
மண்ட பத்தினில் இருத்தி மற்றவரை
வளவர் பூபதி வணங்கினன்

என்பர் சேக்கிழார் புராண ஆசிரியர்.

சேக்கிழார் பெருமானார் சைவ சமயத்தின் மேன்மையினைப் பல்வேறு இடங்களில் பண்புடன் பாடி அமைத்துள்ளார். "அருமறைச் சைவம் ஓங்குக" "சைவமெய்த்திருவின் கோலம், "ஆரம் கண்டிகை, ஆடையும் கந்தையே, பாரம் ஈசன் பணியலாது ஒன்றிலார்" என்பன போன்ற தொடர்களைப் பார்க்கும்போது, சேக்கிழார் பெருமானார் சைவப் பயிர் வளர்தற்கான முகிலாக இருந்தார் என்பது நன்கு பெறப்படுகிறது.

சேக்கிழார் வாக்கு எங்கும் சைவை மணம் கமழும் முறையிலேயே அமைந்திருக்கும். இதனைப் பல்வேறு இடங்களில் காணலாம். ஆற்றைப்பற்றிக் குறிப்பிடும்போது, "அண்ணல் பாகத்தை ஆளுடைய நாயகி, உண்ணெகிழ் கருணையின் ஒழுக்கம்போன்றது" என்றும்,

வம்பு லாம்மலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்து
எம்பி ரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி
உம்பர் நாயகர்க் கன்பரும் ஒக்குமால்

என்றும்,

நெற்கதிர்கள் அலர்ந்து வளர்ந்திருந்த நிலையினைக் கூறும் போதும், "அரனுக்கு அன்பர் ஆலின சிந்தைபோல அலர்ந்தன கதிர்களெல்லாம்." என்றும், அக்கதிர்கள் நன்கு முதிர்ந்து தலை சாய்ந்து நின்ற நிலையினைக் குறிப்பிடும் போது,

பத்தியின் பால ராகிப் பரமனுக்கு
ஆளாம் அன்பர்
தத்தமில் கூடி னார்கள் தலையினால்
வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை
வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன
சாலி எல்லாம்

என்றும்,

நம்பி ஆரூராரும் பரவையாரும் ஒருவரை ஒருவர் சந்தித்த நிலையினைக் குறிப்பிடுகையில், "அற்புதமோ சிவன் அருளோ அறியேன் என்று அதிசயித்தார்" என்றும், "மின்னேர் செஞ்சடை அண்ணல் மெய்யருள் பெற்றுடையவனோ" என்றும், பரவையாரைக் கண்டு காதலால் உளந்தளர்ந்த நிலையில் பரவையாரை நினைந்து,

ஈச னார்அருள் எந்நெறிச் சென்றதே
எம்பி ரான்அருள் எந்நெறிச் சென்றதே
எந்தை யார்அருள் எந்நெறிச் சென்றதே

என்றும்,

இருண்ட நிலையினைக் கூறுகையில், "அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர், நெஞ்சம் என்ன இருண்டது நீண்ட வான்" என்றும், நிலவின் ஒளியினைக் கூறுகையில் "வெண்ணீற்றின் பேரொளி போன்றது நீள்நிலா" என்றும் பாடியிருப்பது கொண்டு சேக்கிழார் சைவப் பயிர்த் தழையத் தழையும் புயல் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை அன்றோ?

ஏனைய புலவர்கள் வாக்கில் பெரிதும் காமப் பயிர் வளரும் முறையில் கவிகள் அமைந்திருப்பதைக் காணலாம். எடுத்துக் காட்டிற்குக் கல்வியில் பெரியராம் கம்பரை எடுத்துக் கொள்வோம். வெள்ளத்தைப் பற்றிக் கூறுகையில் "மலையில் உள்ள எலாம் கொண்டு மண்டலால் விலையின் மாதரை

ஒத்தது அவ்வெள்ளமே" என்றும், அகழினைப் பற்றிக் குறிப்பிடுகையில் "கன்னியர் அல்குல்தடம் என யார்க்கும் படிவரும் காப்பினதாகி" என்றும், சீதை தனது கொங்கைகளை நோக்கிக் கூறியதாகக் குறிப்பிடுகையில்,

இளைக்க லாத கொங்கைகாள்
எழுந்து விம்பி என்செய்தீர்
முளைக்கலா மதிக்கொழுந்து
போலும் வான்மு கத்தினன்
வளைக்க லாத விற்கையாளி
வள்ளல் மார்பில் உள்ளுறத்
திளைக்க லாகும் ஆசிலான
செய்த வங்கள் செய்ம்மினே

என்றும்,

இராமன் அனுமானிடம் சீதையின் அல்குலைப் பற்றிக் கூறியதாகக் கம்பர் கூறுகையில்,

வாராழிக் கலசக்கொங்கை வஞ்சிபோல்
மருங்கு லாள்தன்
தாராழிக் கலைசார் அல்குல்
தடம்கடற் குவமை தக்கோய்
பாராழி பிடரில் தாங்கும் பாந்தளும்
பனிவென் றேங்கும்
ஓராழித் தேரும் கண்ட
உனக்குநான் உரைப்ப தென்னே

என்றும் பாடி இருக்கும் கவிகளைக் காணலாம். இங்ஙனம் பல கவிகளை எடுத்துக் காட்டலாம். இத்தகைய காமச் சுவை ததும்பும் பாக்களை இத்தனை வெளிப்படையாகச் சேக்கிழார் வாக்கில் காண இயலாது. (28)

8\. பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப்
பாடிய கவிவலவ
பயனில தாரும் சிந்தா மணிவழி
படர்தல் எனப்போகித்
துத்திச் சுமையொரு தோள்வைத் திடுபுல்
உயர்த்தோன் மனம்அடியார்
உறுசெயல் நாட்டப் புரிமதி வலவ
ஒலாஅரு கந்தர்திறம்
முத்தித் திறம்அல என்றள விலர்பால்
முற்றிச் சிவமடைய
முயல்செயல் வலவ வயல்கண் மடைச்செறி
முத்தம் அனைத்தினையும்
தந்திப் புனல்பாய் குன்றைத் திருமுனி
தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புயல்
தாலோ தாலேலோ

*[அ. சொ.] நனி-மிகுதியும், கவிவலவ-கவியில் வல்லவரே, சிந்தாமணி-ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றாகிய நூல், படர்தல்-செல்லுதல் உத்தி-படத்தையுடைய ஆதிசேடன், புல்-புலிக் கொடி, உயர்த்தோன்-பிடித்தவனாகிய சோழன், உறு-பெரிய, புரி-செய்த, மதிவலவ-அறிவில் வல்லவரே, ஒலா-கூடாத, அருகந்தர்-சமணர், திறம்-வழி, முத்தி-மோட்சம், அளவிலர்பால்-அளவில்லாத பல்லோர் முற்றி-நல்வினை முற்றி, சிவம்-முத்தி, செறி-மிகுந்த, புனல்-நீர்.*

**விளக்கம்:** *பெரிய புராணத்தில் பக்திச் சுவை அமைந்த கவிகள் பல்கியுள்ளன என்பதைக் கூறவேண்டா. நூல் முழுமையும் பக்திச் சுவை மலிந்தே காணப்படும். இந்தப் பக்திச் சுவை அமைந்த கவிகளை அடியார்களின் வரலாற்றில் தான் சேக்கிழார் அமைத்துப் பாடியுள்ளார் என்றும் கூற இயலாது. இயற்கை நிகழ்ச்சியிலும் இந்தப் பக்திச் சுவை*

கனிந்த கவிகளைப் பாடியுள்ளார். நெற் கதிர்கள் நன்கு முதிர்ந்து தலை சாய்ந்து இருந்த நிலைமையினைக் கூறும்போது, அன்பர்கள் ஒருவரை ஒருவர் சந்திக்க நேர்ந்தால் எப்படித் தலை குனிந்து தழுவி அன்புடைமையினை வெளிக் காட்டுவரோ அதுபோல நெற்கதிர்கள் முதிர்ந்து தலை சாய்ந்து காணப் பட்டன என்பதை,

பத்தியின் பால ராகிப்
  பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடி னார்கள்
  தலையினால் வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தி யின்பால்
  முதிர்த்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல
  விளைந்தன சாலி எல்லாம்

என்ற சேக்கிழார் வாக்குப் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டக் கவி பாடிய காவலர் என்பதற்கு ஏற்ற சான்று அன்றோ? இத்துடன்,

சாலிநீள் வயலின் ஓங்கித் தந்நிகர் இன்றி மிக்கு
வாலிதாம் வெண்மை உண்மைக் கருவினும் வளத்த வாகிச்
சூல்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தரனுக் கன்பர்
ஆலின சிந்தை போல அலர்ந்தன கதிர்கள் எல்லாம்

என்பதையும் எடுத்துக் காட்டலாம்.

இது மட்டுமா? அப்பர் பெருமானார், கூத்தப் பெருமானார் முன் நின்ற நிலையினைக் கூறும்போது,

கையும் தலைமிசை புனைஅஞ் சலியன
  கண்ணும் பொழிமழை ஒழியாதே
பெய்யும் தகையன கரணங் களும்உடன்
  உருகும் பரிவின பேறெய்தும்
மெய்யும் தரைமிசை விழுமுன் பெழுதரும்
  மின்தாழ் சடையொடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர்க்கும் பிடும்அவர்
  ஆர்வம் பெருகுதல் அளவின்றால்

என்றும், திருவாரூர் திருவீதியில் அப்பர் சென்ற நிலையினை,

மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும்
 திருவடிவும் மதுர வாக்கில்
சேர்வாகும் திருவாயில் தீந்தமிழின்
 மாலைகளும் செம்பொன் தாளே
சார்வான திருமனமும் உழவாரத்
 தனிப்படையும் தாமும் ஆகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து
 பணிந்தேத்திப் பரவிச் செல்வார்

என்றும் பாடியிருக்கும் பாடல்களைக் காண்கையில், பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட பாடி இருத்தலை உணரலாம். இவ்வாறான கவிகள் பல.

கவிகளை அமைப்பதிலும் வல்லவர் குன்றை ஆசிரியர் அவை அடக்கம் பாடுகின்ற நிலையில் இவர்,

தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ரும்சீர் புகலலுற் றேன்முற்றப்
பெருகு தெண்கடல் ஊற்றுண் பெருநசை
ஒருசு ணங்கனை ஒக்கும் தகைமையேன்

என்று பாடுகிறார்.

இப்பாடலில் அமைந்துள்ள உவமை நயனை உணர்தல் வேண்டும்.

கடல், நீரையுடையதாயினும் அதனைப் பருக இயலாது, ஆகவே, அதன் சிற்றூறலே பருகுதற்குரியது என்பதற்காக "ஊற்றுண்" என்றும், நீர் மிகுதியாகக் கிடைப்பினும் அப்படியே பருகுதல் இயலாது. சிறிது சிறிதாகவே பருக இயலும் என்பதையும் உணர்த்த, சுணங்கனை உவமை கூறியும், ஆற்றில் வெள்ளம் ஓடினும் நாய் நக்கித்தானே குடிக்கவேண்டும் என்னும் பழமொழிக்கு இணங்கப் பாடிய வன்மையைக் காண்க. (நாய் நக்கியேதான் நீரைப் பருகும்).

சுந்தரர் தமக்குப் பரவையாரை மணம் புரிவித்தது போலச் சங்கிலியாரையும் மணம் செய்து வைக்கும்படி

இறைவனிடம் முறையிட்ட நிலையினை அருண்மொழித் தேவர் பாடும்போது,

மங்கை ஒருபால் மகிழ்ந்ததுவும்
அன்றி மணிநீள் முடியின்கண்
கங்கை தன்னைக் கரந்தருளும்
காதல் உடையீர் அடியேனுக்
கிங்கு நுமக்குத் திருமாலை
தொடுத்தென் உள்ளத் தொடைஅவிழ்த்த
திங்கள் வதனச் சங்கிலியைத்
தந்தென் வருத்தம் தீரும்என

என்று பாடியுள்ளனர்.

இதில், ஒரு மனைவி இருக்க மற்றொரு மனைவியை மணத்தல் முறையன்று என்பதை உணர்ந்தும், சங்கிலியை மணக்க விரும்பிக் கேட்டதற்குக் காரணம், இறைவரும் உமையை மணந்திருந்தும், கங்கையைப் புணர்ந்தார் அல்லரோ? ஆகவே, அதனைக் குறிப்பிட்டே கவியை அமைத்துப் பாடியுள்ளமை நோக்குங்கால், நயமான முறையில் கவி பாடுதலில் வல்லவர் என்பது புலப்படுதல் காண்க. இது குறித்தே, "கவிவலவ" என்றனர்.

சேக்கிழார் அனபாயனுக்குச் சீவக சிந்தாமணி பயன் அற்றது என்று எடுத்துக்காட்டிய இடம் முன்னரே கூறப் பட்டது. அதனை ஆண்டுக் காண்க. அவ்வாறே அடியார் வரலாற்றில் ஈடுபடக் கூறியதும் முன்னர் விளக்கப்பட்டது. சோழர்கட்குப் புலிக்கொடி உரித்தாதலைச் சங்க நூற்களில் பல இடங்களில் காணலாம். அக்கொடி பகைவர் குன்றுகளில் பறக்கவிடப்பட்டன என்பதும் அந்நூற்களைக் கொண்டு உணரலாம். "கொடுவரிக் கோண்மா குயின்ற சேண்" என்பது புறநானூறு. "மின்தவழும் இமய நெற்றியில் விளங்கு வில் புலி கயல் பொறித்த நாள்" என்றும்,

இப்பால் இமயத்து இருத்தியவாள் வேங்கை
உப்பாலைப் பொற்கோட் டுழையதா எப்பாலும்
செருமிகு சினவேல் செம்பியன்
ஒருதனி ஆழி உருட்டுவோன் எனவே

என்றும் சிலப்பதிகாரமும்,

> சென்று கொண்டுகரி காலனொடு காலில் இமயச்
> சிமய மால்வரை திரித்தருளி மீள அதனைப்
> பண்டு நின்றபடி நிற்கஇது என்று முதுகில்
> பாய்பு லிப்பொறி பொறித்தது மறித்த பொழுதே

என்றும் கலிங்கத்துப்பரணியும் கூறுவன இதற்கு எடுத்துக் காட்டுக்கள்.

சேக்கிழாரும் சோழர் கொடி புலிக்கொடி என்பதையும், அதனை இமயத்தில் நாட்டிய பெருமை சான்றவர்கள் சோழர்கள் என்பதையும்,

> " பாட்டியல் தமிழ்வரை பயின்ற எல்லையுள்
> கோட்டுயர் பனிவரைக் குன்றின் உச்சியில்
> சூட்டிய வளர்புலிச் சோழன் "

என்று பாடியருளினர்.

இக்கருத்துக்களை உட்கொண்டே "புல் உயர்த்தோன்" என்றனர்.

சைன சமயம் முத்தி இன்பத்திற்கு ஏதுவாகாது என்பதை நம் சைவத் திருமுறைகள் பல்லாற்றானும் விளக்கியுள்ளன. அவற்றிற்குரிய சான்றாகக் கீழ்வருவனவே போதுமானவை யாகும்.

"கழிக்கரைப் படுமீன் கவர்வார் அமண்" "கழியருகு பள்ளியிடமாக அடுமீன்கள் கவர்வார்" என்பன போன்ற திருமுறை வாக்குகளை உற்று நோக்கும்போது, சமணர் முத்திக்கு நேரான தொழிலில் ஈடுபட்டவர் என்பது புலனாக வில்லையா?

இக்கருத்தை ஒட்டியே சேக்கிழார் பெருமானாரும் சமயம் வாய்க்கும்தோறும் சமண் சமயத்தால் முத்தி கிட்டாது என்று அறிவித்துள்ளார். "**தவம் மறைந்து அல்ல செய்வார்**" என்றும், "வீடறியாச் சமணர்" என்றும், "காயமும் மனமும்மாசு கழுவுதல் செய்யார்" என்றும்,

சேக்கிழார் கூறுவதினின்றும் முத்தி வழிகாட்டுதற்குச் சமணர் ஏதுவாகாது என்பது பெறப்படுகின்றதன்றோ? திருஞானசம்பந்தர் தம் பதிகம் தோறும் சமண பௌத்தர்களைப் பாடியதன் கருத்து, அவர்கள் நெறி பயன் அற்றது என்பதாகும் என்பதைச் சேக்கிழார் உணர்ந்து "அருகந்தர் திறம் முத்தித் திறம் அல" என்றனர்.

வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதன்நெறி அறிந்துய்யார் தம்மிலே நலம்கொள்ளும்
போதம்இலாச் சமண்கையர் புத்தர்வழி பழிஆக்கும்
ஏதமே எனமொழிந்தார் எங்கள்பிரான் சம்பந்தர்

என்றும் பாடியுள்ளார். (29)

சைவ சமயமே முத்தி தரும் சமயம் என்ற குறிப்புப் பெரிய புராணத்துள் பல்வேறு இடங்களில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. "வேதப்பயனும் சைவமும் போல்" என்றும்,

வேத உள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையும் அவரடி யாரையும் நயந்து
பாத அர்ச்சனை புரிவதும் பணிவதும் என்றே
காத லால்அவை இரண்டுமே செய்கருத் துடையார்

என்றும் சைவ சமயத்தவர் கடமையையும், சைவத்தின் மேன்மையையும் குறிப்பிடுகின்றமையின், "சிவமடைய முயல் செயல்வலவ" என்றனர்.

சிவம் அடைய என்பதற்கு முத்தி அடைய என்ற பொருளும் இருத்தலின், சேக்கிழார் பாடல்கள் முத்தி அடைதற்குரிய நிலைகளையும் அடைந்த நிலைகளையும் பலவாறு எடுத்து மொழிந்துள்ளமையின், 'சிவம் அடைய முயல் செயல் வலவ" எனப்பட்டார் எனினும் ஆம். அங்ஙனம் செயவல்லார் என்பது, அவர் அடியார்கள் பெற்ற முத்தி நிலைகளை,

விறலுடைத் தொண்ட ருரும்
வெண்ணகைச் செவ்வாய் மென்தோள்
அறவியல் கூந்த லாளாம்
மனைவியும் அருளின் ஆர்ந்த

திறலுடைச் செய்கை செய்து
சிவலோகம் அதனை எய்திப்
பெறவரும் இளமை பெற்றுப்
பேரின்பம் உற்றார் அன்றே

என்றும்,

''திருப்பணி பலவும் செய்து சிவபதம் நிழலில் சேர்ந்தார்''
என்றும்,

நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டஅரச மர்ந்திருந்தார்

என்றும், பாடி இருந்தலால் அறிக. (29)

9. ஈற்றுத் தலையொரு மவுலி புனைந்தால்
என்னச் சொல்அணிஒன்
றெய்திப் பொலியப் பொருள்அணி ஆயின
எவ்விட னும்வீற்று
வீற்றுக் கிடைஇறை பட்டன அமைய
விளம்பு வனப்பினொடு
மேய முதற்பொருள் ஆகிய மூன்றும்
வேண்டும்இ டத்தெய்த
ஆற்றுப் புனல்நா மப்பொருள் கோள்முதல்
அறைமற் றுள்ளனவும்
அமையத் தொண்டர் புராணம் நவின்றவ
அட்ருபு சூழ்ந்தபசும்
தாற்றுக் கதலிக் குன்றைத் திருமுனி
தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புயல்
தாலோ தாலேலோ

[அ. சொ.] ஈற்றுத்தலை - செய்யுளின் இறுதி, மவுலி - முடி, எய்தி - அடைந்து, பொலிய - விளங்க, வீற்று வீற்றுக்கிடை - தனித்தனியாகக் கிடந்து, இறைபட்டன - சிந்திப்பரந்தன வனப்பு - அழகு, மேய - பொருந்த,

முதல் பொருள், ஆதிய-முதற் பொருள், கருப் பொருள், உயிர்ப் பொருள் முதலான, ஆற்றுப் புனல் நாமப் பொருள்கோள் - ஆற்றொழுக்குப் பொருள்கோள், என்ற பெயருடன் சொல்லப்படும் பொருள்கோள், அறை- சொல்லப்படும், மற்றுள்ளனவும்-வில் பூட்டு, அளைமறி யாப்பு, மொழிமாற்று, நிரல்நிரை, தாப்பிசை, கொண்டு கூட்டு அடிமறி மாற்று, பாவகைகள், சந்தங்கள், முதலியன என்பன. நவின்றவ - பாடியவரே, அடருபு - அடர்ந்து. தாற்றுக் கதலி-குலைகளைக் கொண்ட வாழை.

**விளக்கம்:** அணி வகைகளுள் பெரும் பிரிவாகப் பொருள் அணி சொல்லணி என்பர் இலக்கணிகள். அச் சொல்லணிகள் பலவாகும். அப்பலவகைச் சொல்லணிகளை நம் சேக்கிழார் பெருமானார் தம் நூலகத்துப் பற்பல விதத்தில் அமைத்துப் பாடியுள்ளார்.

பண்தரு விபஞ்சி எங்கும்
பாதசெம் பஞ்சி எங்கும்
வண்டறை குழல்கள் எங்கும்
வளர்இசைக் குழல்கள் எங்கும்
தொண்டர்தம் இருக்கை எங்கும்
சொல்வது இருக்கை எங்கும்
தண்டலை பலவும் எங்கும்
தாதகி பலவும் எங்கும்

மாடுபோ தங்கள் எங்கும்
வண்டுபோ தங்கள் எங்கும்
பாடும்அம் மனைகள் எங்கும்
பயிலும்அம் மனைகள் எங்கும்
நீடுகே தனங்கள் எங்கும்
நிதிநிகே தனங்கள் எங்கும்
தோடுசூழ் மாலை எங்கும்
துணைவர்சூழ் மாலை எங்கும்

இப்பாடல்களில் சொல்லணி இருத்தலைக் காணலாம்.

உவமை, உருவகம் தன்மை, வேற்றும் பொருள் வைப்பு தற் குறிப்பேற்றம் முதலிய அணிகள் பொருள் அணியின்

பால்படும். இவ்வணிகளுக்கும் உரிய இடங்கள் பலவற்றைச் சேக்கிழார் பெருமானார் தம் நூலில் காட்டியுள்ளார்.

வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்
தெம்பிரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி
உம்பர் நாயகற் கன்பரும் ஒக்குமால்

என்று இடத்து உவமையணியும்,

கயல்பாய்பைந் தடநந்தூன்
கழிந்தபெருங் கருங்குழிசி
வியல்வாய்வெள் வளைத்தரளம்
மலர்வேரி உலைப்பெய்தங்
கயலாமை அடுப்பேற்றி
அரக்காம்பல் நெருப்பூதும்
வயல்மாதர் சிறுமகளிர்
விளையாட்டு வரம்பெல்லாம்

என்ற இடத்து உருவக அணியும் இருத்தலைக் காணலாம்.

ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே
பாரம் ஈசன் பணிஅலா தொன்றிலார்
ஈர அன்பினர் யாதும் குறைவிலர்
வீரம் என்னால் விளம்பும் தகையதோ

என்பது தன்மை அணிக்கு ஏற்ற எடுத்துக் காட்டு.

அந்நிலையே உயிர்பிரிந்த ஆன்கன்றும் அவ்வரசன்
மன்னுரிமைத்தனிக் கன்றும் மந்திரியும்உடன்எழலும்
இன்னபரி சானான்என் றறிந்திலன்வேந் தனும்யார்க்கும்
முன்னவனே முன்நின்றால் முடியாத பொருள்உளதோ

இச் செய்யுள் வேற்றுப் பொருள் வைப்பணிக்கு உதாரண மாகும்.

மாமறை விதிவ ழாமல் மணத்துறைக் கடன்கள் ஆற்றித்
தூமறை மூதூர்க் கங்குல் மங்கலம் துவன்றி ஆர்ப்பத்
தேமரு தொடையல் மார்பன் திருமணக் கோலம் காணக்
காமுறு மனத்தான் போலக் கதிரவன் உதயம் செய்தான்

இது தற்குறிப்பு ஏற்ற அணியின் பால்படும். இவ்வாறு பல அணிகள் பெரிய புராணத்தில் தனித்தனியே சிந்திப் பரவி இருக்கின்றன. ஆதலின், ''வீற்று வீற்றுக் இறை பட்டன'' என்றனர்.

இங்ஙனம் சொல்லணியும், பொருளணியும் கூறும் போதும், இறைவனைப்பற்றிய குறிப்பினையும் உடன் கூறிச் செல்லும் பண்பு இவர்பால் உண்டு. இது குறித்தே இறைபட்டன என்னும் தொடரை ஆசிரியர் அமைத்தனர் என்று கூறினும் அமையும். சேக்கிழார் ஆனய நாயனர் கொன்றை மரத்தருகே சென்று குழலினை வாசிக்கச் சென்ற நிலையினைக் குறிப்பிடுகையில்,

சென்றணைந்த ஆனயர்
  செய்தவிரைத் தாமம்என
மன்றல்மலர்த் துணர்தூக்கி
  மருங்குதாழ் சடையார்போல்
நின்றநறும் கொன்றையினை
  நேர்நோக்கி நின்றுருகி
ஒன்றியசிந் தையில் அன்பை
  உடையவர்பால் மடைதிறந்தார்

என்று குறிப்பிட்டுள்ளனர். இஃது இறைபட்டன என்பதற்கு ஏற்ற சான்று அன்றோ?

வனப்பாவது அழகாகும். அவ்வழகு பத்து என்று புலவர் கூறுவர். அவையே,

சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை உடைமை ஆழமுடைத் தாதல்
முறையின் வைப்பே உலகம்மலை யாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுதல் நூலிற்கு அழகெனும் பத்தே

என்பன.

இந்தப் பத்து அழகும் நம் பெரிய புராணத்தில் உண்டு திருநாவுக்கரசு நாயனர் அப்பூதியார் அமைத்த தண்ணீர்ப்

பந்தலில் தம் பெயர் பொறித்திருப்பதைக் கண்டதும் வியப் புற்று, தம் பெயரை எழுதியவர் யாவர்? அவரை யாம் காண வேண்டும் அன்றோ? என்ற கருத்தில் அப் பந்தரிடை இருந்தவரை நோக்கி, ''இப்பந்தர் இப் பெயரிட்டு இங் கமைத்தார் யார்?'' என்று கேட்டனர். இவ்வாறு கேட்ட அப்பர் பெருமானுர்க்கு ஆண்டிருந்தோர் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் முறையில்,

துன்றியநூல் மார்பரும்இத்
தொல்பதியார் மனையின்கண்
சென்றனர்இப் பொழுதுஅதுவும்
சேய்த்தன்று நணித்தென்றூர்

என்றனர்.

இவ்விரண்டடிகளில் பந்தல் அமைத்தவர் அந்தணர் என்பதையும், அவ்வந்தணர் இவ்வூர்வாசி என்பதைவும், அவர் வீடு வாசலுடன் இல்லறத்தை நடத்துபவர் என் பதையும், அவர் இப்பொழுதுதான் தம் இல்லம் சென்ற தால், உடனே சென்றால் அவரைக் காணலாம் என்பதையும், அவர் வீடும் தூரத்தில் இல்லை அருகில்தான் உள்ளது என்பதையும் எத்துணை அழகுற சுருக்கமும் விளக்கமும் அமைய அறிவித்து நிற்கின்றனர். பாருங்கள்!

மாதொரு பாகனுர்க்கு வழிவழி அடிமை செய்யும்
வேதியர் குலத்தில் தோன்றி மேம்படு சடைய ஞுருக்கு
ஏதமில் கற்பின் வாழ்க்கை மனைஇசை ஞானியார்பால்
தீதகன் றுலகம் உய்யத் திருஅவ தாரம் செய்தார்

என்னும் இப்பாட்டில் சுந்தரர் அந்தணர் மரபினர் என்பதையும், அவரது பெற்றோர் இன்னர் என்பதையும் எவ்வளவு அழகுற விளங்க வைத்துள்ளார் என்பதைக் காண்க.

கொத்தார்மலர்க் குழலாள்ஒரு
கூறாய்அடி யவர்பால்
மெய்த்தாயினும் இனியானைஅவ்
வியன்நாவலர் பெருமான்

பித்தாபிறை சூடிஎனப்
பெரிதாம்திருப் பதிகம்
இத்தாரணி முதலாம்உல
கெல்லாம்உய எடுத்தார்

என்ற பாடலைப் படிக்கும்போது, நவின்றோர்க்கினிமை என்னும் அழகு காணப்படுகின்றதன்றோ ?

அப்பூதியடிகளார் தம் திருமகன் இறந்தனன் எனினும் அதன் பொருட்டு வருந்தாமல், தம் இல்லத்திற்குப் பெற லரும் விருந்தினராக வந்த திருநாவுக்கரசர் இறப்புக் காரண மாக உணவு கொள்ளாது போக நேரிடுமே என்று எண்ணி, இறந்த மகனை மறைத்து அப்பர் பெருமானார்க்கு அமுது படைக்கையில் அப்பர் பெருமானார்,

" ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல் "

என்ற குறட்பாவுக்கு ஓர் எடுத்துக்காட்டாக உள்ளவர் ஆதலின், அப்பூதியாரை நோக்கி, "உமது மூத்த மகன் எங்கே? என்று வினவியபோது அப்பூதியார், "இப்போது இங்கு அவன் உதவான்" என்றனர். இதனினும் நன்மொழி புணர்த்தி இயம்புதற்கு யாது உளது! இங்ஙனம் இயம்பும் புலமை நம் சேக்கிழார் பெருமானார்க்கே உண்டு.

தாளறுவன இடைதுணிவன தலைதுமிவன கலைமா
வாளிகளொடு குடல்சொரிதர மறிவனசில மரைமா
நீளுடல்விடு சரமுருவிட நிமிர்வனமிடை கடமா
மீளிகொள்கணை படுமுடலெழ விழுவனபல உழையே

இப்பாடல், ஓசை உடைமைக்கு ஓர் நல்ல எடுத்துக் காட்டன்றோ?

வீதி விடங்கன் ஏறி வந்த தேரின் சக்கரத்தில் பசுவின் கன்று அகப்பட்டு இறந்தது. அதனால் வருந்திய பசு தன் துயரை மனுநீதி மன்னன் அறிய அரண்மனை வாயில் மணியை அசைத்தது. அவ்வோசை கேட்ட மன்னன் ஓடிவந்து

பசுவின் துயருக்குக் காரணம் என்ன என்று வினவியபோது அமைச்சன்,

வளவநின் புதல்வன் ஆங்கோர்
மணிநெடுந் தேர்மேல் ஏறி
அளவில்தேர்த் தானைசூழ அரசுலாம்
தெருவில் போங்கால்
இளையஆன் கன்று தேர்க்கால்
இடைப்புகுந் திறந்த தாகத்
தளர்வுறும் இத்தாய் வந்து
விளைத்தநித் தன்மை என்றான்.

இப்பாடலில், ஆழமுடைய பொருள்கள் பொருந்தியுள்ளன. ''இந்த நிகழ்ச்சிக்குக் காரணன் எவனோ அல்லன்; உன் மகனே ஆவான் என்பதை, நின்புதல்வன் என்றும், நடந்து செல்லாமல், மேலே ஏறிச் சென்றதனால் கீழை நடப்பதை அறிதற்கு வாய்ப்பு இல்லை என்பதைத் தேர் மேல் ஏறி என்றும், தேரும் மணி ஓசையுடன் வருவதால், ஆவ்வோசை கேட்டு ஒதுங்க வேண்டியது கன்றின் கடமையாகும் என்பதை மணி நெடுந் தேர் என்றும், உன் மகன் தன்னந் தனியனாகச் செல்லாது படைசூழ நெருக்கமாகவே சென்றான் என்பதைத் தானைசூழ என்றும், அவன் சென்ற வீதி குறுகலான வீதி அன்று, மிகப் பெரிய ராஜவீதியே ஆகும் என்பதை அரசுலாம் தெரு என்றும் இளங்கன்று பயம் அறியாது என்பதனால்தான் பசுவின் கன்று அகப்பட்டுக் கொண்டது என்பதை இளைய ஆன் கன்று என்றும், உணரும் வகையில் பொருள் ஆழமுடைய சொற்களை அமைத்து, இவை அனைத்திற்கும் காரணம்தெய்வ சங்கற்பமே அன்றி, உன் மகனால் ஏற்பட்டது அன்று என்பதும் மன்னன் உணரும் வகையில் மந்திரியின் வாயில் வைத்துப் பேசியதன் மூலம் ஆழமுடைய பொருள் அழகு பொருந்தச் சேக்கிழார் பாடியுள்ளார் என அறியலாம்.

சீர்காழிக்குரிய பெயர்கள் பன்னிரண்டு. அப்பெயர்களைத் திருஞானசம்பந்தர் தம் திருவாக்கில்,

பிரமனூர் வேணுபுரம் புகலி
வெங்குருப் பெருநீர்த் தோணி
புரமன்னு பூந்தராய் பொன்னம்
சிரபுரம் புறவம் சண்பை
அரன்மன்னு தண்காழி கொச்சைவயம்
உள்ளிட்டங் காதி யாய
பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக்
கழுமலம் நாம்பரவும் ஊரே

என்று பாடிக் காட்டினர்.

இந்த வைப்புமுறை சிறிதும் வழுவாத முறையில் சேக்கிழார் பெருமானாரும் தம் திருவாக்கில்,

பிரமபுரம் வேணுபுரம் பெரும்புகலி வெங்குருநீர்ப்
பொருவில்திருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரம்முன்
வருபுறவம் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தாய்

என்று முறையின் வைப்பு என்ற வனப்பு அமையப் பாடிக் காட்டினர்.

அப்பூதி அடிகளார் அந்தணர். ஆளுடைய அடிகளார் வேளாளர். இத்தகைய இருவேறு பட்ட மரபினர்களுள் அந்தணராம் அப்பூதியார் வேளாளராம் அப்பர் பெருமானுரை எப்படிப் பூசித்தார் என்பதைத் தெள்ளத் தெளிய உணர்த்த வந்த சேக்கிழார் பெருமானர்.

மனைவியார் உடன்மக்கள் மற்றுமுள்ள சுற்றத்தோர்
அனைவரையும் கொண்டிறைஞ்சி ஆராத காதலுடன்
முனைவரையுள் எழுந்தருளு வித்தவர்தாட் முன்விளக்கும்
புனைமலர்நீர் தங்கள்மேல் தெளித்துள்ளும் பூரித்தார்

என்று அறிவித்தார்,

இப்பாடலைப் படிக்கும்போது உலகமலையாத நிலையில் பாடல் அமைந்ததையும் நன்கு காணலாம்.

உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியின் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்

என்ற பாடலில், இறைவன் அருவம், உருவம் அருவுருவம் என்ற வடிவில் திகழ்பவன் என்பதையும், அங்ஙனம் மூவகைத் திருமேனியுடையவன் ஆயினும், வாழ்த்துதற்கும், வணங்குதற்கும் உரியவன் என்பதையும் அறிவித்திருத்தலின், விழுமியது பயத்தல் என்ற அழகு அமைந்திருத்தலைக் காணலாம்.

சண்டேசுர நாயனருடைய தந்தைக்கு நல்ல உவமையைக் காட்டுகிறார் சேக்கிழார். இவனைப் பாம்பிற்குச் சமமாக்குகிறார். பாம்பு ரத்தினத்தையும் தருகிறது. விடத்தையும் கக்குகிறது. அதுபோலச் சண்டேசுர நாயனரின் தந்தையான எச்சதத்தன் இரத்தினம் போன்ற சண்டேசுரரைத் தந்தனன்; விடத்தைக் கக்குவது போலச் சண்டேசுர நாயனர் செய்த சிவபூசைக்கு இடர் செய்தனன். இதனை விளங்கு உதாரணத்தால் விளக்க வேண்டுமென்பதற்காகவே சேக்கிழார்,

அருமை மணியும் அளித்ததுவே
நஞ்சும் அளிக்கும் அரவுபோல்
இருமை வினைக்கும் ஒருவடிவாம்
எச்ச தத்தன் உளனனன்

என்று பாடியருளினர்.

இவ்வாறெல்லாம் சேக்கிழார் பெருமானர் பத்தழகுகளும் தம் நூலில் அமையப் பாடிய காரணத்தால்தான் ஈண்டுத் திரு பிள்ளை அவர்கள் "விளம்பு வனப்பினொடுமேய" என்றனர்.

முதற்பொருள் ஆதிய மூன்று என்பன முதல், கரு, உரிப்பொருளாகும். இவற்றைத் தொல்காப்பியம்.

முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலும் காலை முறைசிறந் தனவே
பாடலுள் பயின்றவை நாடும் காலை

என்று கூறுகிறது.

இவற்றுள் முதல் பொருள் என்பன முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை என்னும் நிலங்களும், பெரும்பொழுது, சிறு பொழுதுகளும் ஆகும். இதனை,

முதல் எனப்படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே

என வரும் நூற்பாவில் காண்க.

நிலங்கள் இன்ன என்பதை,

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே

என்ற தொல்காப்பிய நூற்பாவால் காணலாம். இந் நூற்பாவில் பாலை என்னும் நிலத்தையும் இணைத்துப் பேசிற்றிலர் தொல்காப்பியர் எனினும்,

நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே

என்ற நூற்பாவின் மூலம் தொல்காப்பியனார் பாலை நில உண்மையையும் உணர்த்தினமை காண்க. நடுவுநிலைத் திணையே பாலைத்திணையாகும். வெம்மையின் கொடுமையால், முல்லையும் குறிஞ்சியும் திரியுமாறால் பாலையாகும். இதனைச் சிலம்பு "முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்துபாலை என்பதோர் படுவம் கொள்ளும்" என்று நன்கு தெளிவு படுத்தி உள்ளது.

'காரும் மாலையும் முல்லை; குறிஞ்சி
கூதிர் யாமம் யென்மனார் புலவர்'

''பனிஎதிர் பருவமும் உரித்தென மொழிப''

''வைகுறு விடியல் மருதம்; ஏற்பாடு
நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்''

''நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலோடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே''

''பின்பனி தானும் உரித்தென மொழிப''

என்ற நூற்பாக்கள் மூலம் அவ்வந்நிலங்களுக்குரிய பெரும் பொழுது, சிறுபொழுதுகளைச் சுட்டியுள்ளமை காண்க.

பெரும்பொழு தென்று சிறுபொழு தென்று
இரண்டு கூற்ற தியம்பிய பொழுதே

என்று இலக்கண விளக்கம் எடுத்துப் பேசுவதையும் காண்க, பெரும்பொழுது இன்ன, சிறுபொழுது இன்ன என்பதையும். பெரும்பொழுது இந்தத் திங்களுக்கு உரியவை என்பதையும் சிறுபொழுதுகள் ஒருநாளில் இத்தனை நாழிகைக்குட்பட்டவை என்பதையும் கீழ்வரும் இலக்கண விளக்க நூல் எடுத்துக் காட்டுவதையும் அறிதல் நல்லதே.

''காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் வேனில் என்றுங்
கிருமூன்று திறத்தது பெரும்பொழு தவைதாம்
ஆவணி முதலா இண்டிரண் டாக
ஆடி இறுதிய ஆயும் காலே''

''மாலை யாமம் வைகுறு என்று
காலை நண்பகல் ஏற்பா டென்று
அறுவகைத் தென்ப சிறுபொழு தவைதாம்
படுசுடர் அமையத் தொடங்கி ஐயிரு
கடிகை அளவைய காணும் காலே''

என்பன அச்சூத்திரங்கள்.

கருப்பொருளாவன அவ்வந் நிலங்கட்குரிய தெய்வம், உணவு, மா, மரம், புள், பறை, தொழில் முதலியனவாகும். இதனையே தொல்காப்பியம்,

தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிய

என்று கூறுகிறது.

உரிப் பொருள் இன்ன என்பதை,

புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை
தேரும் காலைத் திணைக்குரிப் பொருளே

என்றும் தொல்காப்பியம் கூறுகிறது. அதாவது குறிஞ்சிக்குப் புணர்தலும், பாலைக்குப் பிரிதலும், முல்லைக்கு ஆற்றி இருத்தலும், நெய்தலுக்கு இரங்கலும், மருதத்திற்கு ஊடலும் உரிப்பொருள்கள் என்பதாம்.

குறிஞ்சி நிலம்:

செந்தழல் ஒளியில் பொங்கும் தீபமா மரங்க ளாலும்
மந்திகள் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலும்
ஐந்தும்ஆ றடக்கி யுள்ளார் அருப்பெருஞ் சோதியாலும்
எந்தையார் திருக்கா ளத்தி மலையினில் இரவொன் றில்லை

முல்லை நிலம்:

நீலமா மஞ்சை ஏங்க
நிரைக்கொடிப் புறவம் பாடக்
கோலவெண் முகையேர் முல்லை
கோபம் வாய் முறுவல் காட்ட
ஆலுமின் னிடைசூழ் மாலைப்
பயோதரம் அசைய வந்தாள்
ஞாலநீ டரங்கில் ஆடக்
காரெனும் பருவ நல்லாள்

மருதம்:

கருங்கதலிப் பெருங்குலைகள்
களிற்றுக்கைம் முகம்காட்ட
மருங்குவளர் கதிர்ச்செந்நெல்
வயப்புரவி முகம்காட்டப்

பெருஞ்சகடு தேர்காட்ட
வினைஞர்ஆர்ப் பொலிபிறங்க
நெருங்கியச துரங்கபல
நிகர்ப்பனவாம் நிறைமருதம்

நெய்தல்:

புயல்அ ளப்பன எனவலை புறம்பணை குரம்பை
அயல்அ ளப்பன மீன்விலைப் பசும்பொனின் அடுக்கல்
வியல்அ ளக்கரில் விடுந்திமில் வாழ்நர்கள் கொணர்ந்த
கயல்அ ளப்பன பரத்தியர் கருநெடுங்கண்கள்

பாலை:

வெங்க திர்ப்பகல் அக்க டத்திடை
வெய்ய வன்கதிர் கைபரந்
தெங்கு மிக்கபி ளப்பின்நாகர்தம்
எல்லை புக்கெரி கின்றன
பொங்க ழல்தெறு பாலை வெந்நிழல்
புக்க சூழல் புகும்பகல்
செங்க திர்க்கனல் போலும் அத்திசை
திண்மை மெய்த்தவர் நண்ணினார்

என்னும் இவ்வைந்து பாடல்களும் ஐந்திணைகளின் முதற் பொருள்கட்கு ஏற்ற உதாரணங்களாகும். இவற்றுள் கருப் பொருள்களும் நிறைந்திருப்பதைக் காணலாம்.

பெரும்பொழுது சிறுபொழுதுகட்குரிய பாடல்களும் சேக்கிழார் வாக்கில் உண்டு.

மயிலொடுங்க வண்டாட
மலர்க்கமல முகைவிரியக்
குயில்ஒடுங்கும் சோலையின்மென்
தளிர்க்கோதிக் கூவிஎழத்
துயில்ஒடுங்கா உயிர்அனைத்தும்
துயில்பயிலச் சுடர்வானில்
வெயில்ஒடுங்கா வெம்மைதரும்
வேனில்விரி தரும்நாளில்,

அளிக்குலங்கள் களித்தகல அரவிந்தம் முகம்புலரப்
பளிக்குமணி மரகதவல் லியில்கோத்த பான்மைஎனத்
துளித்தலைமெல் அறுகுபனி தொடுத்தசையச் சூழ்பனியால்
குளிர்க்குடைந்து வெண்படாம் போர்த்தனைய
குன்றுகளும்

எய்து மென்படை யோடிரை தேர்ந்துண்டு
பொய்கை யில்பகல் போக்கிய புள்ளினம்
வைகு சேக்கைகண் மேற்செல வந்தது
பையுள் மாலை தமியோர் பனிப்புற

பஞ்சின் மெல்லடிப் பாவையர் உள்ளமும்
வஞ்ச மாக்கடம் வல்வினை யும்அரன்
அஞ்செ ழுத்தும் உணரா அறிவிலோர்
நெஞ்சு மென்ன இருண்டது நீண்டவான்

போத ஞானப் புகலிப் புனிதரைச்
சீத முத்தின் சிவிகைமேல் ஏற்றிடக்
காதல் செய்பவன் போலக் கருங்கடல்
மீது தேரின்வந் தெய்தினன் வெய்யவன்

என்பனபோன்ற கவிகள் பெரும்பொழுது, சிறுபொழுது கட்கு ஏற்ற கவிகள்.

புணர்ச்சி:

பண்டுநிகழ் பான்மையினால்
பசுபதிதன் அருளாலே
வண்டயர்பூங் குழலாரை
மணம்புணர்ந்த வன்தொண்டர்
புண்டரிகத் தவள்வனப்பைப்
புறங்கண்ட தூநலத்தைக்
கண்டுகேட்டு உண்டுஉயிர்த்துற்
றமர்ந்திருந்தார் காதலினால்

என்று சுந்தரர் சங்கலியாரைப் புணர்ந்து இன்புற்ற நிலை யினையும்.

இருத்தல்:

இந்நிலை இவன்இங் கெய்தி
இருந்தனன் இப்பால் நீடும்
கன்னிமா மதில்சூழ் மாடக்
காரைக்கால் வணிகனுன
தன்னிகர் கடந்த செல்வத்
தனதத்தன் மகளார் தாமும்
மன்னிய கற்பிஞேடு மனையறம்
புரிந்து வைக

என்று காரைக்கால் அம்மையார் தம் கணவன் பிரிந்திருந்த போது ஆற்றி இருந்த நிலையினையும்,

பிரிதல் :

விடுவதே எண்ண மாக
மேவிய முயற்சி செய்வான்
படுதிரைப் பரவை மீது
படர்கலம் கொண்டு போகி
நெடுநிதி கொணர்வேன் என்ன
நிரந்தபல் இளைஞ ராகும்
வடுவில்சீர் வணிக மாக்கள்
மரக்கலம் சமைப்பித் தார்கள்

என்று பரமதத்தன் புனிதவதியாரைப் பிரிந்து பொருள் ஈட்ட முயன்ற முயற்சியில் பிரிதல் துணிந்தமையினையும்,

இரங்கல்:

கந்தம் கமழ்மென் குழலீர் இதுஎன்
கலைவாள் மதியம் கனல்வான் எனைஇச்
சந்தின் தழலைப் பனிநீர் அளவித்
தடவும் கொடியீர் தவிரீர் தவரீர்
வந்திங் குலவி நிலவும் விரையார்
மலையா னிலமும் எரியாய் வருமால்
அந்தண் புனலும் அரவும் விரவும்
சடையான் அருள்பெற் றுடையார் அருளார்

என்னும் இப்பாடலில் பரவையார் இரங்குதலையும்,

ஊடல்:

நம்பி அருளால் சென்றவரும்
நங்கை பரவை யார்தமது
பைம்பொன் மணிமா ளிகைஅணைந்து
பண்பு புரியும் பாங்கினால்
வெம்பு புலவிக் கடல்அழுந்தும்
மின்னேர் இடையார் முன்எய்தி
எம்பி ராட்டிக் கிதுதகுமோ
என்று பலவும் எடுத்துரைப்பார்

என்னும் இப்பாடலில் ஊடல் கொண்டு இருத்தலையும் காணும்போது, உரிப் பொருட்கவிகள் அமைந்திருத்தலைக் காணலாம். இன்னோரன்ன காரணத்தினால்தான் திரு பிள்ளை அவர்கள் "முதற் பொருள் ஆகிய மூன்றும் வேண்டும் இடத்து எய்த" என்று குறிப்பிட்டுள்ளார்.

பொருள்கோள் பற்றிய குறிப்பினை "நிரல் நிறை முதலியபொருள்கோள் பகுதியும்" என்னும் யாப்பருங்கல அடியாலும்

யாற்றுநீர் மொழிமாற்று நிரல்நிறை வில்புணர்
தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டுகூட்டு
அடிமறி மாற்றெனப் பொருள்கோள் எட்டே

என்னும் நன்னூல் சூத்திரத்தாலும் அறிகிறோம். இதனால் பொருள் கோள் எட்டு என்பதும் பெறப்படுகிறது. இப் பொருட் கோள்வகைக்குரிய பாடல்களும் சேக்கிழார் கவி களில் உண்டு என்பதை நன்கு உணர்ந்தே ஆசிரியர், "ஆற்றுப்புனல் நாமம் பொருள்கோள்முதல் அமைவுற்று உள்ளனவும்" என்று உணர்த்தியுள்ளனர். இவ்வுண்மை யினைக் கீழே காட்டப்பட்டுள்ள பெரிய புராணப் பாடல் களால்உணரலாம்.

ஆற்றுநீர் பொருள் கோள் இன்னது என்பதை,

மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகும்அஃ தியாற்றுப் புனலே

என்ற சூத்திரத்தால் உணரலாம். இதற்குப் பெரிய புராணத்துள் எடுத்துக் காட்டு.

அரிதரு செந்நெல் சூட்டின்
 அடுக்கிய அடுக்கல் சேர்ப்பர்
பரிவுறத் தடிந்த மன்மீன்
 படர்நெடும் குன்று செய்வார்
கரிவளை சொரிந்த முத்தின்
 சுடர்ப்பெரும் பொருப்பு யாப்பார்
விரிமலர்க் கற்றைவேரி
 பொழிந்திழி வெற்பு வைப்பார்

என்பது.

மொழிமாற்றுப் பொருள் கோளாவது.

ஏற்ற பொருளுக்கு இயைய மொழிகளை
மாற்றியோர் அடியுள் வழங்கல்மொழி மாற்றே

என்பது. இதற்குத் தொண்டர் புராணத்துள்,

நீலமா மஞ்ஞை ஏங்க நிரைக்
 கொடிப் புறவம் பாடக்
கோலவெண் முகையேர் முல்லை
 கோபம்வாய் முறுவல் காட்ட
ஆலுமின் இடைசூழ் மாலைப்
 பயோதரம் அசைய வந்தாள்
ஞாலநீ டரங்கில் ஆடக்
 காரெனும் பருவ நல்லாள்

என்ற பாடலே ஆகும்.

வாய், கோபம் காட்ட, முறுவல் முல்லை காட்ட என மொழிமாறி நின்று பொருள் காட்டலைக் காண்க. நிரல் நிறைப் பெருட்கோள் என்பது,

பெயரும் வினையுமாம் சொல்லையும் பொருளையும்
வேறு நிரல்நிறீஇ முறையினும் எதிரினும்
நேரும் பொருள்கோள் நிரல்நிறை நெறியே

என்ற நூற்பாவால் விளங்கும். அதாவது வரிசையாகச் சொற்களை நிறுத்தி நேரே பொருள் கொள்வது.

பொருகரியொடு சினஅரிஇடை புரைஅற உடல்புகலால்
வரும்இரவொடு பகல்அணைவன எனமிடையும்அவ்வனமே

என்னும், இப்பெரியபுராண அடிகளில் கரிக்கும் இரவும், அரிக்குப் பகலும் அமைந்திருப்பது நிரல் நிறை அணிக்கு எடுத்துக் காட்டு.

இருட்கடுவுண் டவர் அருளும் அகிலம்
எல்லாம் ஈன்றாள் தன் திருவருளும் எனவும்கூடித்
தெருட்கலைஞா னக்கன்றும் அரசும் சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தார்அன்றே

என்னும், இத்தொண்டர் புராண அடிகளில் எதிர் நிரல் நிறை பொருள்கோள் அமைந்துள்ளது. கடுவுண்டவர் அருள் அரசு, ஈன்றாள் தன் திருவருள், ஞானக்கன்று என்று இயைத்துப் பொருள் காணவேண்டி இருத்தலின் எதிர்நிரல் நிறை ஆயிற்று. பூட்டு வில் பொருள்கோளின் இலக்கணம்,

எழுவாய் இறுதி நிலைமொழி தம்முள்
பொருள்நோக் குடையது பூட்டுவில் ஆகும்

என்பது.

அதாவது வில்லின் கடைநாண் வில்லின் தலையில் பூட்டப்படுவதுபோல், பாட்டின் ஈறும் பட்டின், முதலும் பொருந்திப் பொருள் தருவதாகும். இதற்கு ஏற்ற எடுத்துக் காட்டாக,

மாநிலம்கா வலனாவான் மன்னுயிர்காக் கும்காலைத்
தான்அதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைதிறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறம்காப்பான் அல்லனோ

என்ற பாடலைக் காட்டலாம். இப்பாட்டின் இறுதி, முதல் தொடருடன் பொருந்திப் பொருள் உணர்தலைக் காண்க.

தாப்பிசை பொருள் கோள் என்பது,

இடைநிலை மொழியே ஏனைஈர் இடத்தும்
நடந்து பொருளை நண்ணுதல் தாப்பிசை

அதாவது இடையில் உள்ள சொல் முன்னும் பின்னும் இயைந்து பொருள் தந்து நிற்றலாம்.

"அரசிளம் குமரற்கேற்ப அன்பினால் மகன்மை கொண்டார்" என்னும் அடியில் இடை நின்ற "அன்பினால்" என்னும் சொல் அன்பினால் அரசிளம் குமரற்கேற்ப என்றும், "அன்பினால் மகன்மை கொண்டார்" என்றும் தாப்பிசைப் பொருள்கோளுக்கு ஏற்ற முறையில் பொருள் கொள்ளும் நிலையில் இருப்பதைக் காண்க.

செய்யுள் இறுதி மொழிஇடை முதலினும்
எய்திய பொருள்கோள் அளைமறி பாப்பே

என்பது.

அதாவது செய்யுளின் ஈற்றில் நின்ற மொழி இடையிலும் முதலிலும் சென்று பொருள் கொள்வதாகும்.

இசைவினால் எழுதும்ஓலை காட்டினான்
ஆகில் இன்று
விசையினால் வலிய வாங்கிக்
கிழிப்பது வெற்றி ஆமோ
தசையெலாம் ஒடுங்க மூத்தான்
வழக்கினைச் சாரச் சொன்னான்
அசைவில் ஆரூரர்எண்ணம்
என்என்றார் அவையில் மிக்கார்

என்ற பாட்டில் அவையில் மிக்கார் என்னும் ஈற்றுத் தொடரைக் கொண்டு, "தசையெலாம்" என்னும் இடையிலுள்ள தொடருடன் இயைத்துப் பின் "இசைவினால்" என்னும் முதல் அடியினுடன் இணைத்துப் பின் என் என்றார் என்பதுடன் முடிந்து பொருள் தரும் நிலையில் உள்ளமையின் இஃது அளைமறிபாப்புப் பொருள் கோள் ஆயிற்று.

கொண்டு கூட்டுப் பொருள்கோளாவது:—

யாப்படி பலவினும் கோப்புடை மொழிகளை
ஏற்புழி இசைப்பது கொண்டு கூட்டே

என்பது.

அதாவது பாட்டின் அடிகளில் உள்ள சொற்களைப் பொருள் முடிபுக்கு ஏற்பக் கொண்டு கூட்டுவதாகும்.

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவல் உறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய ஒண்ணுமை உணராதேன்

என்னும் பாடலின் பொருளை உணரவேண்டின், ஒரு நாவுக்கு என்று தொடங்கி, பேருலகில் என்பதனுடன் இயைத்துப் பின் திருநாவுக்கரசு என்பதோடு தொடர்ந்து சீர்பரவலுறு கின்றேன் என்று கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளும் முறையினை மேற்கொள்ள வேண்டலின், இது கொண்டு கூட்டுப் பொருளுக்கு ஏற்ற எடுத்துக்காட்டாகும்.

அடிமறி மாற்றுப் பொருள் கோளாவது,

ஏற்புழி எடுத்துடன் கூட்டுறு மடியவும்
யாப்பீ றிடைமுதல் ஆக்கினும் பொருள்இசை
மாட்சியும் மாறு அடியவும் அடிமறி

என்பது.

அதாவது செய்யுளில் அமைந்த நான்கு அடிகளை முன்னும் பின்னும் இடையும் வைத்துப் பொருள் காணினும் அஃது அடிமறி மாற்றுப் பொருள் கோளாம்.

மேகமும களிறும் எங்கும்
வேதமும் கிடையும் எங்கும்
யாகமும் சடங்கும் எங்கும்
இன்பமும் மகிழ்வும் எங்கும்
யோகமும் தவமும் எங்கும்
ஊசலும் மறுகும் எங்கும்
போகமும் பொலிவும் எங்கும்
புண்ணிய முனிவர் எங்கும்

என்னும் இப்பாடலின் அடிகளை எங்கு வைத்துப் பொருள் கொள்ளினும் பொருள் தந்து நிற்றலைக் காண்க. ஆகவே, இஃது அடிமறி மாற்றுப்பொருள் கோளுக்கு ஏற்ற உதாரண மாகும்.

"மற்றவை" என்னும் தொடர்க்குப் பொருள், எண் வகைப் பொருள்கோள்களே அன்றி, "பா வகைகளும், சந்தங் களும் ஆகிய மற்றைய சிறப்புக்களும்" என்று பொருள் காணவேண்டி இருக்கிறது. பா வகைகளும், சந்தங்களும் பெரிய புராணத்தில் நிரம்பியுள்ளன என்பதில் ஒரு சிறிதும் ஐயம் இல்லை.

பா வகைகளுக்குச் சில எடுத்துக்காட்டுக்களை முதற்கண் காண்போமாக.

*மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்*
*துதிசெயும் நாயன்மார் தூய சொல்மலர்*
*பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை*
*விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே*

என்பது கலி விருத்தம்.

*செங்குவளை பறித்தணிவார்*
*கருங்குழல்மேல் சிறைவண்டை*
*அங்கைமலர் களைக்கொடுகைத்*
*தயல்வண்டும் வரவழைப்பார்*
*திங்கள்நுதல் வெயர்வரும்பச்*
*சிறுமுறுவல் தளவரும்பப்*
*பொங்குமலர்க் கமலத்தின்*
*புதுமதுவாய் மடுத்தயர்வார்*

என்பது தரவு கொச்சகம்.

சங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையும் முடிமேல் வைத்த
அங்கணர் ஓலை காட்டி ஆண்டவர் தமக்கு நாடு
மங்கையர் வதன சீத மதிஇரு மருங்கும் ஓடிச்
செங்கயல் குழைகள் நாடும் திருமுனைப் பாடி நாடு

என்பது அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

மாக மீதுவ ளர்ந்த கானகம்
ஆகி எங்கும் மனித்தரால்
போக லாநெறி அன்றி யும்புரி
கின்ற காதல் பொலிந்தெழச்
சாக மூலப லங்கள் துய்ப்பன
வுந்த விர்ந்துத னித்துநேர்
ஏகி ஞர்இர வும்பெ ருங்கயி
லைக்கு லக்கிரி எய்துவார்

என்பது எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

பொங்குவிடம் தீர்ந்தெழுந்து நின்ருள் சூழ்ந்த
பொருவில்திருத் தொண்டர்குழாம் பொலிய ஆர்ப்ப
அங்கையினை உச்சியின்மேல் குவித்துக் கொண்டங்
கருட்காழிப் பிள்ளையார் அடியில் வீழ்ந்த
நங்கைஅவள் தனைநயந்த நம்பி யோடு
நானிலத்தில் இன்புற்று வாழும் வண்ணம்
மங்குல்தவழ் சோலைமலி புகலி வேந்தர்
மணம்புணரும் பெருவாழ்வு வகுத்து விட்டார்

என்பது எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

போது போயிருள் புலர்ந்திடக் கோயிலுள் புகுந்தே
ஆதி நாயகர் அயவந்தி அமர்ந்தஅங் கணர்தம்
பாத மூலங்கள் பணிந்துவீழ்ந் தெழுந்துமுன் பரவி
மாத ராரையும் கொண்டுதம் மனையில்மீண் டணைந்தார்

என்பது கலிநிலைத்துறை.

மண்டு போரின் மலைப்பவர்
துண்ட மாயிட உற்றெதிர்
கண்டர் ஆவி கழித்தனர்
உண்ட சோறு கழிக்கவே

என்பது வஞ்சி விருத்தம்.

இவ்வாறு பல பா வகைகளைப் பெரிய புராணத்துள் காணலாம்.

இனிச் சேக்கிழார் நூலில் அமைந்த சந்தங்களுக்குச் சில உதாரணங்களை உணர்வோமாக.

மங்கல வினைகள் எங்கும்
மணம்செய் கம்பலைகள் எங்கும்
பங்கய வதனம் எங்கும்
பண்களின் மழலை எங்கும்
பொங்கொளிக் கலன்கள் எங்கும்
புதுமலர்ப் பந்தர் எங்கும்
செங்கயல் பழனம் எங்கும்
திருமகள் உறையுள் எங்கும்

என்பதையும்,

பண்டிசரி கோவண உடைப்பழமை கூறக்
கொண்டதொர் சழங்கலுடை ஆர்ந்தழகு கொள்ள
வெண்துகில் உடன்குசை முடிந்துவிடு வேணுத்
தண்டொருகை கொண்டுகழல் தள்ளுநடை கொள்ள

என்பதையும்,

மொறையால்வரு மதுரத்துடன்
மொழிஇந்தள முதலில்
குறையாநிலை மும்மைப்படி
கூடும்கிழ மையினால்
நிறைபாணியின் இசைகோள்புணர்
நீடும்புகழ் வகையால்
இறையான்மகிழ் இசைபாடினன்
எல்லாம்நிகர் இல்லான்

என்பதையும்,

புலரும் படியன் றிரவென் றளவும்
பொறையும் நிறையும் இறையும் தரியா
உலரும் தனமும் மனமும் வினையேன்
ஒருவென் அளவோ பெருவாழ் உரையீர்

பலரும் புரியும் துயர்தான் இதுவோ
 படைமன் மதனர் புடைநின் றகலார்
அலரும் நிலவும் மலரும் முடியார்
 அருள்பெற் றுடையார் அவரோ அறியார்

என்பதையும்,

ஏரின் மல்கு வளத்தி னல்வரும்
 எல்லை இல்லதொர் செல்வமும்
நீரில் மல்கிய வேணி யார்அடி
 யார்தி றத்து நிறைந்ததோர்
சீரின் மல்கிய அன்பின் மேன்மை
 திருந்த மன்னிய சிந்தையும்
பாரின் மல்க விரும்பி மற்றவை
 பெற்ற நீடு பயன்கொள்வார்

என்பதையும்,

தாளில்வாழ் செருப்பர்தோல்
 தழைத்தநீடு தானையார்
வாளியோடு சாபம்மேவு
 கையர்வெய்ய வன்கணார்
ஆளியேறு போலஏகும்
 அண்ணலார்முன் எண்ணிலார்
மீளிவேடர் நீடுகூட்டம்
 மிக்குமேல் எழுந்ததே

என்பதையும்,

துடிஅடியன மடிசெவியென
 துறுகயமுனி தொடரார்
வெடிபடவிரி சிறுகுருளைகள்
 மிசைபடுகொலை விரவார்
அடிதளர்வுரு கருவுடையன
 அணைவுறுபிணை அலையார்
கொடியனஎதிர் முடுகியும்உறு
 கொலைபுரிசில மறவோர்

என்பதையும்,

பொய்வாய்மை பெருக்கிய புன்சமயப்
　　பொறையில்சமண் நீசர் புறத்துறையாம்
அவ்வாழ்குழி யின்கண் விழுந்தெழுமா
　　றறியாது மயங்கி அவம்புரிவேன்
மைவாச நறுங்குழல் மாமலையாள்
　　மணவாளன் மலர்க்கழல் வந்தடையும்
இவ்வாழ்வு பெறத்தருச் சூலையினுக்
　　கெதிர்செய்குறை என்கொல் எனத்தொழுதார்

என்பதையும்,

மாதர்ப் பிறைக்கண்ணி யானை
　　மலையான் மகளொடும் என்னும்
கோதறு தண்டமிழ்ச் சொல்லால்
　　குலவு திருப்பதி கங்கள்
வேத முதல்வர்ஐ யாற்றில்
　　விரவும் சாராசரம் எல்லாம்
காதல் துணையொடும் கூடக்
　　கண்டேன் எனப்பாடி நின்றார்

என்பதையும்,

கயமொடு கயமெதிர் குத்தின
அயமுடன் அயமுனை முட்டின
வயவரும் வயவரு முற்றனர்
வியனமர் வியலிட மிக்கதே

என்பதையும் பாடிப் பாருங்கள். அது போது சந்தங்களின் இன்பத்தை நன்கு துய்ப்பீர்கள்! (30)

10. மண்டலை வேலைப் புவியில் பத்திசெய்
மார்க்கம் அறிந்தவர்ஆர்
வண்சுவை அமுத ஒழுக்கென வார்த்தை
வழங்கத் தெரிகுநர்ஆர்
கொண்டலை நேர்பக டூர்தரு கூற்றம்
குதித்துய்ந் திடவலர்யார்
கொற்றக் கைலைக் கணநா தர்களொடு
கூடுபு மகிழ்பவர்ஆர்
விண்டலை யாரும் பெறல்அரும் இன்பம்
விராவும் திறலினர்ஆர்
விமலா நீஅவ தாரம் செய்யா
விடின்என மேயவபைந்
தண்டலை சூழும் குன்றைத் திருமுனி
தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புயல்
தாலோ தாலேலோ

*[அ. சொ :] மண்டு - மிகுந்த, நெருங்கிய, தொடர்ந்து வருகின்ற வேலை - கடல், மார்க்கம் - வழி, வண்சுவை - வளமான சுவை, கொண்டல் - மேகம், நேர் - ஒத்த, பகடு - எருமைக்கடா, ஊர்தரு-ஏறி நடத்தும், கூற்றம் - இயமன், குதித்து - வென்று, கடந்து, தப்பி உய்ந்திட - பிழைத்திட- வலர் - வல்லவர், கொற்றம் - வெற்றியுடைய, கூடுபு சேர்ந்து, விண்தலையார் - தேவலோகத்தில் உள்ளவர்களும் பெறல் அரும் - பெறுதற்கரிய, விராவும் - சேரும், திறலினர் வன்மையுடையவர், விமலா - குற்றமற்ற சேக்கிழார் பெருமானே, மேயவ - பொருந்தியவரே, பைந்தண்டலை - பசுமையான சோலை.*

**விளக்கம் :** உலகம் கடலால் சூழப்பட்டுள்ளது என்பதைக் கவிஞர் கூறல் மரபு. "வாராரும் கடல் புடைசூழ் வையம்" என்பர் உமாபதி சிவம். "நீராரும் கடல் உடுத்த

நிலமகள்'' என்பது மனோன்மணியம். ஆகவே, 'மண்டலை வேலைப்புவி' என்றனர். பக்தி மார்க்கத்தை நிலைநாட்டச் சேக்கிழார் அமைத்துள்ள கவிகள் பற்பல. இப்பகுதி இருபாலாகி இயலும். ஒன்று ஆண்டவனிடத்தில் காட்டும் பக்தி; மற்றொன்று அடியார் இடத்தில் காட்டும் பக்தி. இறைவனிடத்தில் பக்தி எழுமாறு செய்யும் முறையில் பாடியுள்ள கவிகளில் ஒன்று,

கையும் தலைமிசை புனைஅஞ் சலியன
கண்ணும் பொழிமழை ஒழியாதே
பெய்யும் தகையன கரணங் களுடன்
உருகும் பரிவின பேறெய்தும்
பெய்யும் தரைமிசை விழுமுன் பெழுதரு
மின்தாழ் சடையொடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர்கும் பிடும்அவர்
ஆர்வம் பெருகுதல் அளவின்றால்

என்பது. அடியார் பக்தியின் நிலையைக் கூறும் பாடல்களுள் ஒன்று,

மழையில் கரைந்தங் குவர்ஊறி
மேனி வெளுத்த வடிவினால்
உழையில் பொலிந்த திருக்கரத்தார்
அடியார் வேடம்என் றுணர்ந்தே
இழையில் சிறந்த ஓடைநுதல்
யானைக் கழுத்தின் நின்றிழிந்து
விழைவில் பெருகும் காதலினால்
விரைந்து சென்று கைதொழுதார்

என்பது. இதில் சேரர் பெருமானார் அரசராக இருந்தும், சிவனடியார் என வண்ணானை எண்ணி வணங்கியதைக் காண்க. இவ்வாறு பக்திமார்க்கநிலையினை இத்துணை அழகுற அறிந்து உணர்த்தியவர் நம் சேக்கிழார் அல்லரோ?

திண்ணனார் இறைவர்க்கு இறைச்சியினை ஊட்டும் நிலையினைப் பாடவந்த சேக்கிழார்,

கொழுவிய தசைகள் எல்லாம்
　　கோலினில் தெரிந்து கோத்தங்
கழலுறு பதத்தில் காய்ச்சிப்
　　பல்லினால் அதுக்கி நாவில்
பழகிய இனிமை பார்த்துப்
　　படைத்தஇவ் இறைச்சி சால
அழகிது நாயன் நீரே
　　அமுதுசெய் தருளும் என்றார்

என்றும்,

ஊன்அமுது கல்லையுடன் வைத்துமுன் னையின் நன்றால்
ஏனமொடு மான்கலைகள் மரைகடமை இவையிற்றில்
ஆனஉறுப் பிறைச்சிஅமு தடியேனும் சுவைகண்டேன்
தேனும்உடன் கலந்ததிது தித்திக்கும் எனமொழிந்தார்

என்றும் பாடியுள்ள பாட்டில் "வண்சுவை அமுத ஒழுக்கென" வார்த்தைகள் வழங்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

இயமனது ஊர்தி எருமைக்கடா. அதன் நிறம் கருமை. ஆதலின், மேகத்தை உவமை கூறிக் "கொண்டலை நேர் பகடு" என்றனர். இவ்வாறே "கார்மாமிசைக்காலன்" என்று அருணகிரியாரும் எருமைக் கடாவிற்குக் காரை (மேகத்தினை) உவமை காட்டியுள்ளனர்.

பெரிய புராணச் செய்யுட்களைப் பயிலும் தோறும் இயம வாதனை அற்று, இறை அன்பில் நிலைத்து இருக்கலாம். இதனைத் திருத்தொண்டர் புராணத்தில் வரும் அடியவர் களின் வரலாறுகளைக் கொண்டு அறியலாம். மெய்ப்பொருள் நாயனார் இறையடி எய்தியதைக் கூறும்போது "புரவலர் மன்றுள் ஆடும் பூங்கழல் சிந்தை செய்தார்" என்றும், திருநாளைப் போவாரின் முக்தி நிலையினைக் கூறும்போது, "ஒல்லை போய் உள் புகுந்தார். உலகுய்ய நடமாடும், எல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களும் கண்டிலரால்" என்றும், இவ்வாறு கூறிச் செல்லும் ஆற்றல் படைத்தவர் சேக்கிழார். ஆகவே, "கூற்றும் குதித்து உய்ந்திட" என்றனர் ஆசிரியர். சண்டுத் திரு பிள்ளை அவர்கள்

" கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு "

என்னும் குறட்பாவினை நினைவு படுத்தியுள்ளதை உணரவும்.

விறல்மிண்ட நாயனார் இறையடியில் இன்புற்றிருக்கும் நிலையினைக் கூறவந்த சேக்கிழார்.

ஒக்க நெடுநாள் இவ்வுலகில்
உயர்ந்த சைவப் பெருந்தன்மை
தொக்க நிலைமை நெறிபோற்றித்
தொண்டு பெற்ற விறன்மிண்டர்
தக்க வகையால் தம்பெருமான்
அருளி னாலே தாள்நிழற்கீழ்
மிக்க கணநாத ராகும்
தன்மை பெற்று விளங்கினார்

என்றும், எறிபத்தரது முத்தி நிலையினை அறிவிக்கையில்,

மற்றவர் இனைய வான
வன்பெருந் தொண்டு மண்மேல்
உற்றிடத் தடியார் முன்சென்
றுதவியே நாளும் நாளும்
நற்றவக் கொள்கை தாங்கி
நலமிகு கயிலை வெற்பில்
கொற்றவர் கணத்தின் முன்னால்
கோமுதல் தலைமை பெற்றார்

என்றும் சிவகணங்ளில் அடியார்கள் திகழ்தலைப் பாடியுள்ளனர்.

மேலே காட்டிய நிகழ்ச்சிகள் அனைத்தும் அடியார்களைப் பற்றியனவே ஆனாலும், அந்நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறி இவ்வாறு எவரும் அடைய இயலும் என்பதை நாம் யாவரும் உய்ய எடுத்து மொழிந்த பெருமை தொண்டர் சீர் பரவுவார்க்கு உரித்தாதலின், திரு பிள்ளை அவர்கள், யார்? யார்? என்ற வினாவினை எழுப்பி உணர்த்தியுள்ளனர்,

சேக்கிழார் பெருமானார் தமது திருத்தொண்டர் புராணத்தைப் பாடி முடித்ததும், அநபாய சோழன் திருமுறை

களேயும் இவரையும் யானேமீது ஏற்றித் தான் வெண்சாமரை வீசி வீதி உலாவரச் செய்தனன். அப்போது மக்கள் பலரும் சேக்கிழாரைப் பலவாறு போற்றினர்: வணங்கினர். அரசனும் அவரது திருவடியில் வீழ்ந்து வணங்கினன். இந் நிகழ்ச்சிகள் அனைத்தும் ஸ்ரீ உமாமதி சிவாசாரியார் பாடியுள்ள பாடல்களால் நன்கு தெளியலாம், அப்பாடல்கள்,

தேவரும் எழுதஒ ணுமறை
யைத்தமிழ் செய்து திருப்பதி கம்பாடும்
மூவரும் ஒருமுத லாயுல கத்து
முளேத்த முதல்பொருள் தான்

என்பார்.

மதுரஇ ராமா யணகதை உரைசெய்த
வான்மிக பகவனும் ஒப்பல்ல
விதிவழி பாரதம் உரைசெய்து கரைசெய்த
வேதவி யாதனும் ஒப்பல்ல
சிதைவற ஆயிர நாவுடன் அறிவுள
சேட விசேடனும் ஒப்பல்ல
பொதிகை மலேக்குறு முனிவனும் ஒப்பல
புகழ்புனே குன்றை முனிக்கென்பர்

மெய்யுள சிவசா தனமும் வெளிப்பட
வெண்ணீ றெழுதிய கண்ணேறும்
கையும் திகழ்மணி கண்டமும் ஒளிதரு
க்வளிகையும் புத்தக ஏடும்
நையும் திருவுளம் அழியும்தொறும்
அரகரஎனும் நாமமும் நாம்எல்லாம்
உய்யும் படிஅருள் கருணேயும் அழகிதெ
னத்தொழு தனர்உல கவரெல்லாம்

இப்படி இப்படி தன்னில் விதிப்படி
இம்பரும் உம்பரும் ஏனேரும்
அப்படி சூழ அரத்திரு வீதிவ
லம்செய்து அணேந்து

என்பன.

சேக்கிழார் இறைவன் திருவடிப் பேற்றினைப் பெற்ற நிலையினை ஸ்ரீ உமாபதி சிவாசாரியார் குறிப்பிடுகையில்,

தொண்டர் சீர்பரவு சேக்கி ழார்குரிசில்
தூய தில்லைநகர் தன்னிலே
பண்டுமூவர்பதி கத்து வந்தஅறு
பத்து மூவர்கதை தனையுணர்ந்து
அண்ட வாணர்அடி யார்கள் தம்முடன்
அருந்த வந்தனில் இருந்துபின்
இண்டை வைத்தசடை அம்ப லத்தவர்
எடுத்த பாதநிழல் எய்தினர்

என்று குறித்துள்ளார்.

இது குறித்துத் திரு பிள்ளை அவர்கள்,

"கூற்றம் குதித்துய்ந்திட வலர்யார்
கொற்றக் கைலைக் கண நாதர்களொடு
கூடுபு மகிழ்பவர் ஆர்"

என்று பாடியுள்ளதையும் ஓர்க.

இந்நிலைகள் எல்லாம் தேவர்களாலும் அடைதற்கரியன. இதனை உட்கொண்டே ஆசிரியர், "விண்தலையோரும் பெறல் அரும் இன்பம் விராவும் திறலினர் ஆர்" என்று வினவி யுள்ளனர். குன்றத்தூர் மரஞ் செடி கொடி வளம் மிக் குடைமையின், தண்டலை சூழும், குன்றை என்றனர். (31)

# 4. சப்பாணிப் பருவம்

1. விழைஅற முதல்கல்வி அறியுநுண் அறிவும்அம்
மேதைக் கிணங்கொழுக்கும்
மேயஇவை உடையார்த் தழீஇஅவர்சொல் இனிதேற்கும்
மேம்பாடும் மாறுகருதா
மழைநிகர் கொடைத்திறனும் நனிவருஉ தினிஈட்டும்
மாண்புமாற் றலரைஅஞ்சா
வன்மையும் இடம்காலம் முதல்அறித லும்கடிய
மாற்றம்நவி லாதகுணமும்
உழையரும் விருப்பம்அறி யாதடக் குதலும்நலன்
ஓங்குகாட் சிக்கெளிமையும்
உடையன்இவன் உலகுவத் தற்குரியன் என்றுளத்
துன்னிஇறை புனையமணிகள்
தழையும்முடி தொட்டுக் கொடுத்தருள் மலர்க்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்க் குன்றையாம் குன்றுதித் தெழுபானு
சப்பாணி கொட்டியருளே

*[அ. சொ.] விழை-எவரும் விரும்பும், மேதை-பேரறிவு, நுண்ணறிவு, இணங்கு-பொருத்தமான, மேய-பொருந்திய, ஒழுக்கு-ஒழுக்கம், உடையார்-உடையவர்களை, தழீஇ-தழுவி மாறு-எதிர்உதவி, கொடைத்திறன்-வள்ளன்மையின் கூறுபாடு, நனி-மிகவும், வருஉதினி-சேனை, ஈட்டு-தேடும். மாண்பும்-பெருமையும், மாற்றலர்-பகைவர், கடிய மாற்றம்-வன்சொல், நவிலாத-கூறாத, உழையரும்-பக்கத்தில் உள்ளவர்களும், உலகு - உலக மக்கள், உவத்தற்கு-விரும்புவதற்கு, உன்னி - எண்ணி, இறை - மன்னர்கள், புனைய -*

தரித்துக் கொள்ள, முடி-கிரீடம் குன்றையாம்-குன்றத்தூ ராகிய, பானு-சூரியனே.

**விளக்கம்:** பாட்டுடைத் தலைவனை குழந்தை கையுடன் கையைச் சேர்த்துக் கொட்டும் பருவமே சப்பாணிப் பருவம் எனப்படும். சப் என்ற ஒலிஎழக் கையைத் தட்டுதலால் சப்பாணியாயிற்று, பாணி-கை. இது குழந்தை பிறந்த ஒன்பதாம் மாதம் நிகழும் நிகழ்ச்சி. "ஒன்பதாம் திங்களில் உயர்சப்பாணியும்" என்று பிங்கலந்தை நிகண்டு கூறுதலையும் காண்க.

அறிவு பலவாகப் பாகுபடுத்திக் கூறப்படினும், நூல் அறிவு, நுண் அறிவு என இருபாலாகி இசைக்கவும் பெறும். நூல் அறிவே கல்வியறிவாகும். இதனை முதற்கண் பெற வேண்டுதலின் ஈண்டு "அற முதல் கல்வி" என அடை கொடுத்துக் கூறினர். நூல் அறிவின் பயன் அறம், பொருள் இன்பம் வீடு இவற்றை உணர்வதாகும், இதனை, "அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே" என்னும் நூற்பாவால் உணரலாம். இவற்றை எவரும் விரும்புவர் அல்லரோ?

"ஆகவே, விழை அறமுதல் கல்வி அறிவு," என்றனர் மேலும் இந்த உண்மையினை,

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்இசையும் நாட்டும்—உறுங்கவல்ஒன்
றுற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை.

என்று குமர குருபரர் வாக்காலும் உறுதிப் படுத்தலாம்.

'மாண் அறிவு என்பது நுழைமாண் நுண்புலன் ஆகும். அதாவது உள் நுழைந்து பொருளின் நுட்பத்தினை நன்கு தெளிதல்.

"நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை அற்று"

என்பது வள்ளுவர் வாக்கு.

இவ்வாருன நுண்மாண் நுழைபுலனைச் சேக்கிழார் பெரிதும் பெற்றவர். அதற்கு ஓர் உதாரணத்தைக்காட்டி உறுதிப்படுத்துவோமாக.

வள்ளுவப் பெருந்தகையார் இல்லறத்தானுக்குரிய பண்புகளைக் கூறிக் கொண்டு வருகையில்,

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்
ஐம்புலத் தாறுஓம்பல் தலை" [என்ருங்கு

என்பதும் ஆகும்.

இக்குறட்பாவிற்கு உரை கூற வந்த பரிமேலழகர் "பிதிரர், தேவர், விருந்தினர் சுற்றத்தார் தான் என்று சொல்லப்பட்ட ஐந்நிடத்தும் செய்யும் அறநெறியை வழுவாமல் செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறப்புடைய அறமாம்" என்று எழுதியுள்ளனர். இதற்குமேல் விளக்கம் கூறும்போது, பிதிரர் ஆவார், படைப்புக் காலத்து அயனுல் படைக்கப்பட்டதோர் கடவுள்சாதி; அவர்க்கிடம் தென் திசை ஆதலின், தென்புலத்தார் என்ருர்" என்றும் குறிப்பிட்டுள்ளனர். இதனுல், தென்புலத்தார் ஆவார் பிதிரர் என்பது பெற்றும். இனிச் சேக்கிழார் பெருமானுர் தமது நுண்மாண்நுழை புலனுல் தென்புலத்தார் என்பதற்கு என்ன பொருள் கண்டார் என்பதை அறிவோமாக.

சேக்கிழார், சோழ நாட்டின், சிறப்பினைச் சிறப்பித்துக் கொண்டு வருங்கால், குடிமக்களின் இயல்பைக் கூறும்போது,

அரசுகொள் கடன்கள் ஆற்றி
மிகுதிகொண் டறங்கள் பேணிப்
பரவரும் கடவுள் போற்றிக்
குரவரும் விருந்தும் பண்பின்
விரவிய கிளையும் தாங்கி
விளங்கிய குடிகள் ஓங்கி
வரைபுரை மாடம் நீடி
மலர்ந்துள பதிகள் எங்கும்

என்று பாடியுள்ளனர். இப்பாடலில் சேக்கிழார் "பொய்யா மொழியாரின் பொன் மொழியாகிய "தென்புலத்தார்,

தெய்வம், விருந்து ஒக்கல் தான் என்றாங்கு ஐம்புலத்தாறு ஓம்பல்தலை" என்னும் குறட்பாவின் கருத்துச் செவ்வனே அமைத்துள்ளதை ஊன்றி நோக்கினால் உணரலாம். "கடவுள் போற்றி" என்பதனால் தெய்வத்தையும், "விருந்தும்" என்பதனால் விருந்தையும், "கிளையும் தாங்கி" என்பதனால் ஒக்கலையும், "குடிகள் ஓங்கி" என்பதனால் தன்னைச் சுட்டியுள்ளமையையும் காண்க. பரிமேலழகர் தான் என்பதை விளக்கும் போது, 'எல்லா அறங்களும் தான் உளனாய் நின்று செய்ய வேண்டுதலின் தன்னை ஓம்புதலும் அறமாயிற்று' என்று எழுதினர். குடிகள் மக்கள் ஆதலின், அம்மக்கள் தான் என்னும் குறளின் பொருளைத் தழுவி நிற்றலின், அவர்களும் தம்மை ஓம்பிக்கொண்டால் அன்றி ஓங்க முடியுமோ? ஆகவே, குடிகள் ஓங்கி என்றனர். மேலும், சேக்கிழார் வாக்கிலும் "மிகுதிகொண்டு அறங்கள் பேணி" என்னும் தொடர் அன்றோ பரிமேலழகரையும் "எல்லா அறங்களையும் தான் உளனாய் நின்று செய்ய வேண்டுதலின் தன்னை ஓம்புதலும் அறனாயிற்று" என்று எழுதத் துணையலாயிற்று?

பரிமேலழகர் தென்புலத்தார் என்பதற்கு நேர்மையான பொருள் கண்டிலர். அவர் கண்டது தென்புலத்தார் என்பதற்குப் பிதிரர் என்பது. ஆனால், குன்றைக் கோமகனார் தென்புலத்தார் என்பதற்கு குரவர் என்று தமது நுண்மாண் நுழை புலனால் கண்டனர். குரவர் ஆவர் பெரியோர்கள். அதாவது அறிவால் மிக்கவர். புலம் என்னும் சொல் அறிவு என்னும் பொருளது. தென்புலத்தார் என்னும் தொடர் அழகிய அறிவினையுடைய பெரியோர் என்பதாகும். இவ்வாறு வள்ளுவர் கருத்தும் ஆகும் என்பது சேவை காவலரின் அழுத்தமான கருத்தாகும். இதுவேதான் கருத்து என்பதை இளங்கோ வாக்கால் அறிவிப்பின் எவர்தாம் ஏற்கா தொழிவர்?

அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் துறந்த என்னை

என்ற சிலப்பதிகார அடிகளைக் காண்க. இதனால் இல்லறத்தார் இவர்களை ஓம்பலும் தலையாய கடன் என்பதை இனிதின் பெறலாம். ஈண்டுத் துறவோர் குரவர் அல்லரோ? இவ்வரிய குறிப்பினை அன்றோ சேக்கிழார் தமது நுண்ணறிவுத் திறனால் குரவர் என்ற சொல்லில் குறிப்பாராயினர்.

புனிதவதியார் கணவன் பரமதத்தன், அம்மையாரைத் தணந்து, மதுரைபுக்கு வேறு ஒருத்தியையும் மணந்து மகவையும் பெற்று வாழலானான். இதனை அறிந்த அம்மையார், அவன் இருக்கும் ஆலவாயைத் தம் சுற்றத்துடன் அணைந்தனர். இஃது அறிந்த பரமதத்தன் பழம், பூவுடன் தன் இரண்டாம் மனைவி மகளுடன் வந்து அம்மையார் காலில் விழுந்தனன்.

கணவன் தன் மனையாள் காலில் விழுவது புறத்துக் கிடையாது; அகத்து உண்டு. அதாவது பள்ளி அறையில் ஊடல் கொண்டபோது, மனைவி காலில் கணவன் விழுந்து வேண்டுவன். இதனைத் துறைமங்கலம் சிவப்பிரகாசரும் தம் கற்பனை யேதைக் கிணங்க,

ஆதி பகவன் தனதூடல்
  தணிப்பான் பணிய அவ்விறைவன்
பாதம் இறைஞ்சும் அதற்கும்நெற்றிப்
  பகையும் அல்குல் பகையுமாம்
சீத மதியும் அரவும்விழும்
  செயற்கும் உவகை செயாமல்அலை
மாது பணியும் அதற்குமனம்
  மகிழும் உமையை வணங்குவாம்

என்று பாடியுள்ளார். இங்ஙனம் தலைவியின் உயர்வினையும் தலைவன் தாழ்வினையும் குறித்து இலக்கணமும் எடுத்து இயம்புகிறது. ஒல்காப் புலமைத் தொல்காப்பியனார்,

மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையும் காலைப் புலவியுள் உரிய

என்று சட்டம் வகுத்துக் கூறினர். இங்ஙனம் இருக்கப் பரமதத்தன் பலரும் அறிய அம்மையார் காலில் விழுந்தது பொருத்தமற்ற தன்றோ? இதனை அம்மையார் ஏற்பரோ? ஆகவே, அம்மையார் அதனை ஏற்காது ஒதுங்கி நின்ற நிலையினையும், அவனது செயலை ஏற்காது மருண்டு மருண்டு நோக்கிய நிலையினையும் சேக்கிழார் எத்துணை நுண்ணறிவுத் திறனால் நுவன்றுள்ளார் என்பதை, "மானிளம்பிணைபோல் நின்ற மனைவியார்" என்றும், "கணவர் தாம் வணங்கக் கண்ட காமர்பூங்கொடியனாரும்" என்று உவமை கூறித் தெளிவுபடுத்தியதிலிருந்து தெளியலாம் அன்றோ."

பரமதத்தனை அம்மையார் அதுவரையில் தம் அருமைக் கணவராக எண்ணி இருந்தனர். பின் அவனது செயல்களைக் கண்டு அவனை, வெறுத்தமையினைக் காட்டுவதைக் கூறவந்த சேக்கிழார், அம்மையார் வாக்கில் இரு முறை பரமதத்தனை 'இவன்' என்று ஒருமைச் சொல்லால் வழங்குமாறு செய்த நுண்ணறிவுத் திறனையும் ஈண்டு உணர்தல் வேண்டும். இதனை,

> ஈங்கிவன் குறித்தகொள்கை இதுஇனி இவனுக்காகத்
> தாங்கிய வனப்புநின்ற தசைப்பொதி இதுகழித்து

என்ற அடிகளிற் காணலாம். அடுத்தாற்போல் மற்றும் ஓர் எடுத்துக் காட்டினையும் காட்டி நிறுத்துவோமாக.

அனபாயச் சோழன் தன் அவையில் கூடியிருந்த புலவர்களிடையே, 'மலையில் பெரிது, கடலில் பெரிது, உலகில் பெரிது எது' என்ற வினாக்களை எழுப்பினன். இவ்வினாக்களுக்கு எவரும் விடை இறுத்திலர். அதுபோது அவன் உள்ளத்தில் தொண்டை நன்னாடு சான்றோருடைத்து என்னும் அடி நினைவுக்குவரத் தொண்டை நாட்டு மன்னனுக்கு எழுதி அவ்வினாக்களுக்குரிய விடைகளை அறிஞர்கள் வழி அறிந்து அனுப்புமாறு விடுத்தனன். தொண்டை நாட்டு மன்னன் சேக்கிழாரிடம் கொடுத்து விடை காணுமாறு வேண்ட, அருண்மொழித் தேவர் உடனே தட்டுத் தடையின்றி,

நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது

பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்
நன்மை கடலில் பெரிது

காலத்தினால் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது

என்று எழுதிக் கொடுத்தனர். இவ்வாறான சேக்கிழாரின் நுண்ணறிவுத் திறனை வியந்த கம்பர் தமது திருக்கை வழக்கு என்னும் நூலில்,

காவலன், மண்ணில் கடலில் மலையில் பெரியதென
எண்ணிஎழு திக்கொடுத்த ஏற்றக்கை

என்று போற்றிப் புகழ்ந்துள்ளார். இவையெல்லாம் சேக்கிழார் பெருமானார் அறிவின் மேதையைக் குறிக்கும்.

இன்னோரன்ன அறிவு இருந்தும் ஒழுக்கம் இன்றேல் பயன் இல்லை. ஆதலால் சேக்கிழார் ஒழுக்கத்திலும் தலை சிறந்து விளங்கினர். 'என் உரை சிறிது' "வீரம் என்னால் விளம்பும் தகையதோ" "ஈண்டு வாழ்த்துகேன்" "என் அறிந்து ஏத்துகேன்" என்பன போன்ற அவரது வாக்குகள் அவரதுஒழுக்க மேம்பாட்டை உணர்த்தும் நிலையைக் காண்க.

இத்தகைய பண்புடையவர்களையே மன்னர்கள் தழுவிக் கொள்ளுதல் வேண்டும் என்பார் "இவை உடையார் தழீஇ" என்றனர்.

"தான்அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறன்அறிந்து தேர்ந்து கொளல்

அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்

தம்மின் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை"

என்று வள்ளுவரும், மன்னன் பெரியாரது துணைக் கோடலை வற்புறுத்தி இருத்தலையும் ஈண்டுக் காண்க.

தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்

இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்கும் தகைமை யவர்

என்று கூறிப்போந்தார்.

மன்னர் தாராளச் சிந்தையராய் இருத்தல் வேண்டும். இவர் தம் கொடைத் திறன் கைம்மாறு கருதா மழைபோன்று கொடுக்கும் கொடைத் திறனாக இருத்தல் முக்கியமானது. "ஈந்தே கடந்தான் இரப்போர் கடல்" என்று கம்பரும் கூறுதல் காண்க. "தருகை நீண்ட தயரதன்" என்பது "தனியன்." "தருமத்தின் கவசத்தான்" என்று இராமாயணமும் "பருவக் கொண்மூப்படி எனப் பாவலாக்கு உரிமையின் உதவி" என்று திருமுகப் பாசுரமும், "காரின் மலிந்த கொடை" என்று பெரிய புராணமும் கூறுதல் காண்க. "ஈண்டுக் கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரி மாட்டு என்னாற்றுங் கொல்லோ உலகு" என்னும் குறள் நினைவுக்கு வரும் முறையில், "மாறு கருதா மழைநிகர் கொடைத் திறன்" என்னும் தொடர் அமைந்திருத்தலைக் காண்க.

அரசர்கள் தம் சேனையைப் பெருக்குதலும் கடனாம். வள்ளுவர்,

" இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லது அரசு "

என்று கூறியதற்கு உரை கண்ட பரிமேலழகர், வகுத்தல் என்பதற்கு விளக்கம் கூறுங்கால், "யானை, குதிரை, படை, நாடு, அரண் என்றிவற்றிற்கும்" என்று கூறியுள்ளார்.

மணக்குடவர், "யானை, குதிரை முதலிய படைக்குக் கொடுத்து அவையியற்றை உண்டாக்குதல்" என்றனர். பரிப்பெருமாள், "யானை, குதிரை, படைக்குக் கொடுத்து

அவையியற்றை உண்டாக்குதல்" என்றனர். இக் கருத்துக்களைத் தழுவியே, "நனி வருஉதினி ஈட்டும் மாண்பும்" என்றனர். வள்ளுவர்,

" இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு "

என்று அரசனது ஈகைத் தன்மையைப் புகழ்ந்தனர். பகைவரை அஞ்சாமை பார்த்திபர்க்குப் பண்பாதலின், வள்ளுவரும் வேந்தற்குரிய இயல்புகளைக் கூறும்போது முதற்கண் அஞ்சாமையினை வைத்து,

" அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற்கு இயல்பு "

என்றார்.

வேந்தர்கள் இடம் அறிந்து எதையும் இயற்றுதல் வேண்டும். இடம் அறிதற்கு உரை கூறவந்த பரிமேலழகர், 'பகைமேற் செல்வான்தான் வெல்லுதற்கு ஏற்ற நிலத்தினை அறிதல்' என்றனர்.

இடம் அறிதலின் மேன்மையை வள்ளுவர்,

" எண்ணியார் எண்ணம் இழப்பர் இடன்அறிந்து
துன்னியார் துன்னிச் செயின் "

தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடம்கண்ட பின்அல் லது

ஆற்றாரும் ஆற்றிஅடுப இடன்அறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின்

என்றனர்.

விநாயக புராணம் இடன் அறிதல் வேந்தன் சிறப்புக்களில் ஒன்றாம் என்பதை,

ஊக்கம் இலனா யினும்இடத்தோ
டுற்ற வினைசெய் குவனாயின்
ஊக்கம் உடையார்க் கிடன்இன்றாய்
ஒழியும் ஊக்கம் இலாதவனுக்கு

ஊக்கம் உடையான் ஆயிடினும்
உற்ற படையும் பலவேனும்
ஊக்கம் அறிவன் இடத்தோடு
முற்று வினைசெய் யாவிடினே

என்று கூறுகிறது.

காலம் அறிதலும் காவலனுக்குத் தேவையாகும் காலம் அறிதல் என்னும் தொடரை விளக்க வந்த பரிமேலழகர், "வலியான் மிகுதியுடையனாய்ப் பகைமேல் சேறலுற்ற அரசன், அச்செயலிற்கேற்ற காலத்தினை அறிதல்" என்றனர். மணக்குடவர் "அறிதலாவது வினை செய்தற்காம் காலம் அறிதல்" என்றனர்.

வள்ளுவர்,

"ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தால் செயின்"

"பருவத்தோ டொட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு"

என்றனர்.

"ஏற்றகாலம் வரும் அளவும் எண்ணி இருக்க" என்பதும், "போற்றி எனக்கு வென்றியுறும் பொழுது தேர்ந்தே வினை புரிக" என்பதும் விநாயக புராணம்.

சீலம் அல்லன நீக்கிச்செம் பொன்துலைத்
தாலம் அன்ன தனிநிலை தாங்கிய
ஞாலம் மன்னற்கு நல்லவர் நோக்கிய
காலம் அல்லது கண்ணும்உண் டாகுமோ

என்பர் கம்பர்.

இவற்றையெல்லாம் ஒருங்கு சேர்த்து இங்கு, "இடம் காலம் முதல் அறிதலும்" என்றனர். முதல் அறிதல் என்றதனால் வலி அறிதலும் அரசனது கடமை என்பது பெற்றும். அதாவது தனக்குள்ள வலியும் பிறர்க்குள்ள வலியும் அறிதல். செய்யத் தக்க வினையை, எண்ணினாலும் அதனைச்

செய்து முடிக்குங்கால் வலி அறிந்து செய்யவேண்டும். வலி அறிதலைப் பற்றி வள்ளுவர் கூறுங்கால்,

வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்

உடைத்தம் வலிஅறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்

என்று கூறிப் போந்தார்.

தன் தூக்கித் தன் துணையும் தூக்கிப் பயன் தூக்கி
மற்றவை கொள்வ மதிவல்லார்—அற்றன்றி
யாதானும் ஒன்றுகொண்டு யாதானும் செய்தக்கால்
யாதானும் ஆகி விடும் என்பது பழமொழி.

வினையின் வலியா திகள்நான்கு வேறு வேறு சீர்தூக்கி
நினது வலிமிக் குறிவினையை நிகழ்த்து.

என்பது விநாயக புராணம்.

வன்மையும், எவற்றையும் அறிந்து செய்யும் இயல்பும் அரசர்கட்கு இருப்பினும், இனிய மொழி கூறுதலும் அரசர் கட்கு இன்றியமையாத பண்பாகும். இதனை வள்ளுவர்,

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்"

என்று விதந்து கூறினர். பரஞ்சோதியார்,

கனியமுதம் அன்னகரு ணைக்குறையுள் காட்சிக்கு
எளியன்வட சொற்கடல் தமிழ்க்கடல் இகந்தோன்

என்றனர். கச்சியப்ப முனிவர்,

தங்கள் விழுக்குறை முறைசொல் வார்க்குத்
தடையறக் காட்சி நல்கித் தண்ணளிய இன்சொல் காட்டி

என்றனர். கம்பர்,

இனிய சொல்லினன் ஈகையன் எண்ணினன்
இனியன் தூயன் விழுமியன் வென்றியன்

நினையும் நீதி நெறிகட வான்எனில்
அனைய மன்னற்கு அழிவும்உண் டாங்கொலோ

என்றனர்.

இத்தகைய பண்பினை ஈண்டு ஆசிரியர், "கடிய மாற்றம் நவிலாத குணமும்*** நலன் ஓங்கு காட்சிக்கு எளிமையும் உடையவன்" என்று குறிப்பிட்டனர்.

"மன்னர்கள் தம் கருத்தையே, குறிப்பையோ, பிறர் அறியாதவாறு நடந்து கொள்ளல் வேண்டும். இதனைக் கருதியே திரு பிள்ளை அவர்கள் "உழையரும் விருப்பம் அறியாதடக்கல்" என்றனர்.

வேளாளர்கட்குரிய மேம்பாடுகள் பல. அவற்றுள் ஒன்று, மன்னர் முடி சூட்டிக்கொள்ளும் விழாவின்போது, அம் முடியினை வேளாளர் தம் மலர்க் கையால் எடுத்துக் கொடுத்த பின்னரே மன்னர் அதனைச் சூட்டிக்கொள்ளுதல் ஆகும். மன்னர்க்கு முடிசூட்ட வல்ல அத்தகைய பெருமைக் குரியவர்கள் வேளாளர்கள் என்பதைக் கம்பர் நன்கு உணர்ந்து, இராமனது முடி சூட்டு விழாவில் எடுத்து விளக்கியுள்ளார்.

அரியணை அனுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்த
பரதன்வெண் குடைகவிழ்க்க இருவரும் கவரிவீச
விரைசெறி குழலிஓங்க வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான்
[மௌலி

என்று பாடி இருக்கின்றனர். இதனால் "முடிதொட்டுக் கொடுத்தருள் மலர்க்கை" என்றனர்.

சேக்கிழார் பெருமானார், ஈண்டுப் பானு என்று போற்றப் படுகின்றார். பானு (சூரியன்) உலகில் உள்ள புற இருளைப் போக்கவல்லவன். சேக்கிழார் பெருமானார் மக்களுக்குள்ள அக இருளாம் அஞ்ஞானத்தைப் போக்கவல்ல ஞான சூரியர். ஆதலின் அவரை, "குன்றையாம் குன்று உதித்தெழு பானு" என்றனர். இப்பண்பு இவர்பால் முற்றிலும் அமைந்திருத்தலை, இவர் பெரிய புராணம் பாடித் தந்தது

கொண்டு நன்கு அறியலாம். இதனை உறுதிப்படுத்துதற்கு உகந்த செய்யுள்,

இங்கிதன் நாமம் கூறின் இவ்வுலகத்து முன்னாள்
தங்கிருள் இரண்டில் மக்கள் சிந்தையுள் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்குகின்ற
சங்கரன் ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர் புராணம் [என்பாம்

என்பது. அநபாயனது அஞ்ஞான இருளை நீக்கி மெய்ஞ் ஞான ஒளியைத் தந்தமையின் பானு எனப்பட்டார் என்றும் சொல்லலாம்.

குன்றத்தூர், காட்சிக்கு இனிமையாக இருத்தலின் தமிழ்க் குன்றை எனப்பட்டது. தமிழ் என்னும் மொழி இனிமை என்று பொருள் தருதலை, "வண்டு தமிழ்ப் பாட்டு இசைக்கும், தமிழ் மாருதம், தமிழ் தழீஇய சாயலவர் என்ற தொடர்களில் காண்க. (32)

2. கார்க்கோல மாலோன் புரந்தருன்வன் எனும்மொழிமு
கமன்உண்மை வேளாண்மையைக்
கருதஅபி தானம்கொள் குலமே எனப்பல்நூல்
கற்றவர்இயம்ப மறையோர்
போர்க்கோல மன்னர்எட் டியர்மூவர் புறம்எனப்
புகல்மூவர் பசிவருத்தம்
போக்கினம் எனக்களிப் புறஇலே கரும்அது
புகன்றுமகிழ் தலைசிறப்ப
வார்க்கோல முலைமங்கை பங்கர்தளி முன்பலவும்
வண்பூசை யொடுசிறப்பு
மாருது பொலியமழை வளனும் சிறப்பஅள
வாப்பெருமை வாய்ந்தமேழி
தார்க்கோ லொடும்தொடும் செங்கைத் தலம்கொண்டோர்
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்க் குன்றையாம் குன்றுதித் தெழுபானு
சப்பாணி கொட்டியருளே

[அ. சொ.] கார்க் கோலமாலோன்-மேகம் போன்ற கரு நிறம் கொண்டு அழகுடன் திகழும் திருமால், புரந்தருள்வன்-காப்பாற்றுவான், முகமன்-உபசாரம் மொழி (உண்மை யன்று) வேளாண்மையை-உபகாரமாம் தன்மையை, அபி தானம்-பெயர். இயம்ப-கூற, மறையோர்-வேதங்களை ஓது பவர், புகல்-சொல்லப்படும், மூவர்-அனுலோபர், பிரதி லோபர், சங்கரர், இலேகர்-தேவர், புகன்று-கூறி, வார்-கச்சு அணிந்த, கோலம்-அழகு வாய்ந்த, மங்கை-உமா தேவியார், பங்கர்-தம் உடலில் பாதி கொண்ட இறைவர், தளி-கோயில், பொலிய-விளங்க, அளவா-அளவிட்டுச் சொல்லி முடியாத, மேழி-ஏர், தார்க்கோல்-எருதுகளை ஓட்டக் கையில் கொண்ட சிறு கோல், (முன்னே கூறிய முள் போன்ற ஆணி அமைந் திருப்பது) பூசை நித்திய பூசையையும், சிறப்பு அவ்வக் கலத்துத் திருவிழாவையும் உணர்த்தும்.

விளக்கம்: திருமாலின் நிறம் வெண்மையே. திருப் பாற்கடலைக் கடைந்தபோது எழுந்தவிடத்தால் திருமால் நிறம் கருமையாயிற்று. விடவேகத்தால் வெண்ணிறம் கருநிறமாயிற்று என்பதை அப்பர்,

பருவரை ஒன்றுசுற்றி அரவங்கை விட்ட
    இமையோர் இரிந்து பயமாய்
திருநெடுமால் நிறத்தை அடுவான் விசும்பு
    சுடுவான் எழுந்த இசைபோய்
பெருகிடம் மற்றிதற்கோர் பிதிகாரம் ஒன்றை
    அருளாய் பிரானே எனலும்
அருள்கொடு மாவிடத்தை எரியாமல் உண்டவன்
    அண்டர் அண்டர் அரசே

என்று பாடியுள்ளதைக் காண்க.

வேளாண்மை என்னும் சொல் உபகாரம்செய்தல் என்ற பொருளைத் தருவது. இப்பொருள் இதற்கு ஆதலே,

"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தல் பொருட்டு"

என்ற குறளில் காணலாம்.

வேளாளர்கள் சிறந்த உபகாரிகள் என்பதை ஔவை மூதாட்டியாரும் கூறியுள்ளதைச் சான்றாகக் காட்டலாம். அது,

நூல் எனிலோ கோல்சாயும் நும்தமரேல் வெஞ்சமராம்
கோல்எனிலோ ஆங்கே குடிசாயும்—நாலாவான்
மந்திரியும் ஆவான் வழிக்குத் துணைஆவான்
அந்த அரசே அரசு

என்பது,

இந்த உபகாரச் சிந்தனை வேளாளர்கட்கு இருத்தலின், "அவர்கள் வேளாளர், வேளாண்மை புரிபவர், என்று தொன்றுதொட்டு கூறப்பட்டுவருகின்றனர். இதற்குச் சான்றாகக் கம்பன் "எந்நாளும் காப்பார் வேளாளர்காண்" என்று கூறியதைக் காண்க. இப்படி இருக்கத் திருமால் உலகைக் காக்கின்றனர் எனல் உபசாரமே அன்றி உண்மை இல்லை என்பார், "மாலோன் புரந்தருளுவன் எனும் மொழிமுகமன்" என்றனா. வேளாளர்களே அந்தணர், அரசர், வணிகர் ஆகிய மூவினத்தாருக்கும் உணவளித்து உபசரிக்கும் பெருஞ் சிறப்பினர் என்பதை இப்பாடல் அறிவித்து நிற்கின்றது. ஆம், உண்மையில் வேளாளர்களால்தான் மேலே குறிப்பிடப்பட்ட மூவினத்தாரும், ஏனையோரும் உண்டுகளித்து வாழ்கின்றனர். இந்த உண்மை,

செகதலந்தனில் அரசர்மனு நீதிமுறையும்
செய்யவேதியர் தர்மமும்
சித்தஒரு மைத்தவமும் முத்திநிலையும்
புகழ்சிறந்த தேவதை மகிமையும்
சுகவனிதை மேலின்பமயல் கொள்வதும்
பொருள்சுருதி யோடுபல காவியம்
சொல்கல்வியும் கருணையும் இல்அறமும்
திவ்வியசுந்தர விலாச எழிலும்
அகமகிழ்ந்திடு செல்வமும் பரிவுதாரமும்
அதிககுல மேன்மை வளமும்
அடையலரை வெல்வதும்கீர்த்திப் பிரதாபமும்
அஞ்செழுத் துணர்வு நிலையும்

சகலமும்புவி மிசையில் வேளாளர்
மேழியின் தனதுடைய பெருமையலவோ
தருமேவும் அருணைகிரி ஈசர்பால்
உறையுலகுதா யுண்ணமுலை யம்மையே

என்ற உண்ணமுலையம்மை சதகத்தாலும் உணரலாம்,

வேளாளப் பெருமக்களை, "வள்ளன்மையால் மிக்கிருக்கும் தாளாளர்" என்பர் திருஞான சம்பந்தர். இன்னமும் பலரால் இக்குலம் சிறப்புறப் பேசப்படுதின் "பல்நூல் கற்றவர் இயம்ப" என்றனர். தேவர்கள் மகிழ்தற்கும் வேளாளரே காரணம். இதனை,

தேவா லயம்தொறும் திருவிழாப்
பூசையும் செப்பிய பிரமாலயத்
தெய்வமறை யோர்செய்யும் நித்த
நைமித்தமும் திரிசந்தி யாகங்களும்
பூவாளும் மன்னர் சதுரங்க பலமுதலான
பொக்க சம்மிகும் செல்வமும்
பொன்வெள்ளி தனதான்யம் பலசரக்கினுல்
பொருளாக்கும் வணிகர் தொழிலும்
கோவாதி சோடசமகா தானதருமமும்
குவலயத் தனைவர் சுகமும்
கோளாறு கொண்டுமும் வேளாளர்
உருபடை கோலத்தின் பெருமைஅன்றோ
ஆவால்கறந்த பால்அபிடேக நேயனே
அருள்பெறு வசந்த ராயர்
அண்ணாவினில் துதிசெய் உண்ணமுலைக்
குரிய அண்ணாமலைத் தேவனே

என்று அண்ணாமலை யார் ச தகத்தால் அறியலாம்.

வேளாளர் தம் வேளாண்மை செய்தற்கு மழை இன்றியமையாதது. அம்மழை இன்றேல் வேளாளர் தம் கடமையினைச் செய்ய இயலாது. தேவாலாயங்களில் நித்திய நைமித்திக பூசையும் நடைபெறுது. இதனைக் கருதியே வள்ளுவர்,

"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"

என்றனர்.

இதனையே ஈண்டு, "தளிமுன் பலவும் வன்பூசையொடு சிறப்பு மாறாதே பொலிய மழை வளனும்" எனப்பட்டது. "சீரைத் தேடின் ஏரைத் தேடு" என்பது பழமொழியாதலின், "பெருமை வாய்ந்த மேழி" என்றனர். மேழிச் செல்வம் கோழைபடாத காரணத்தாலும் மேழி பெருமை வாய்ந்தது.

வேளாளர் சிறப்பைக் கம்பர் கூறும்போது,

வேதியர்தம் உயர்குலமும் விறல்வேந்தர் பெருங்குலமும்
நீதிவளம் படைத்துடைய நிதிவணிகர் தம்குலமும்
சாதிவளம் படைத்துடைய தாயனைய காராளர்
கோதில்குலம் தனக்குநிகர் உண்டாகில் கூறீரே

என்றும்,

வேதநூல் முதலாகி விளங்குகின்ற கலைஅனைத்தும்
ஓதுவார் எல்லாரும் உழுவார்தம் தலைக்கடைக்கே
கோதைவேல் மன்னவர்தம் குடைவளமும் கொழுவளமே
ஆதலால் இவர்பெருமை யாருரைக்க வல்லாரே

என்றும்,

சீர்வளரும் மறைவளரும் திறல்வேந்தர் முடிவளரும்
பேர்வளரும் வணிகருக்குப் பெருநிதியம் மிகவளரும்
ஏர்வளரும் திருவளரும் இசைவளரும் கடல்சூழ்ந்த
பார்வளரும் காராளர் பயிர்வளரும் திறத்தாலே

என்றும் குறிப்பிட்டுள்ளவற்றை அறிந்தால் உலகைக் காப்பவர் வேளாளர் என்பதை மேலும் உறுதிப்படுத்தலாம்.

"அது புகன்று" என்பது, "பசிவருத்தம் நீங்கினேம் என்று தேவர்கள் சொல்லி என்பதால், யாகாதி செய்யும் காலங்களில் அவிஸ் உணவு, அவர்கள் கொள்ளுதலைக் குறிப்பதாகும்.

திருமால் காக்கும் தொழிலை மேற்கொள்ளுதற்கு இறைவனே திருவருள் புரிந்த காரணன் என்பதை,

ஆக்குறும் செயல தொன்றே அயன்தனக் காக்கலோடும்
காக்குறும் செயலிரண்டும் கண்ணனுக் காக்கல் காத்தல்
போக்குதல் என்றிம் மூன்றும் புராந்தகற் களித்த வர்க்கு
நீக்கரும் இறைமை நல்கி நிறுவினன் குருகுகேசன்

என்றும் பிரபுலிங்க லீலை மூலம் அறியலாம்.

மேழி அளவாப் பெருமை வாய்ந்தது என்பது முற்றிலும் உண்மை. இதன் சிறப்பைக் கூறவந்த கம்பர்,

வாழிநான் மறையோர்கள் வளர்க்கின்ற வேள்விகளும்
ஆழியால் உலகளிக்கும் அடல்வேந்தர் பெருந்திருவும்
ஊழி பேரினும் பெயரா உரையுடைய பெருக்காளர்
மேழியால் விளைவ தல்லாம் வேறொன்றால் விளையாவே

என்றும்,

தார்க்கோலின் மாண்பு இன்னது என்பதைக் கூறவந்த இடத்தும் கம்பர், (தார்க்கோல் தாற்றுக்கோல் என்றும் கூறப்படும்,

வெங்கோபக் கலிகடந்த
வேளாளர் விளைவயலுள்
பைங்கோல முடிமுதிருந்தப்
பார்வேந்தர் முடிதிருந்தும்
பைங்கோதைக் கடல்தானைப்
போர்வேந்தர் நடத்துபெருஞ்
செங்கோலை நடத்துங்கோல்
ஏர்அடிக்கும் சிறுகோலே

என்று அறிவித்துள்ளனர். சிறு கோல் ஈண்டுத்தாற்றுக் கோல்

"நல்லார் ஒருவர் ஊளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை" என்பது உண்மை மொழி. உபகாரச் சிந்தையுடைய வேளாளர் நல்லவர் என்பதை விளக்க வேண்டியதில்லை. ஆகவே, அவர்கள் மழைப் பொழிவுக்கும் காரணராய் இருக்கின்றனர். இவர்க்கும் மழைக்கும்

தொடர்பு இருந்தலால்தான் "கொண்டல் கட்டி வேளாளர்" என்றும் இவர்கள் குறிப்பிடப்படுகின்றனர். இன்னோரன்ன காரணங்களால்தான் "மழை வளனும் சிறப்ப" என்றனர்.

இவற்றை எல்லாம் ஈண்டு உட்கொண்டே திரு பிள்ளை அவர்கள், "அளவாப் பெருமை வாய்ந்த மேழிதார்க் கோலொடும் தொடும் செங்கைத் தலம்" என்றனர். (33)

3. மேவாத பாயுடீஇத் தலைமயிர் பறித்துழறல்
மேயசமயப் பாழ்ங்குழி
வீழ்ந்தவர்முன் அச்சமய கண்டனம் பேசிஅது
விடஆற்று திருவாயினின்
ஓவாத பிரதாபம் ஒருகதிர் எனத்தோன்றி
உள்ளகோ கனகம்எல்லாம்
உறமலர்த் திடஅவ்வகை ஒப்பாயி னோம்என்
றுறப்பொலிதல் தேறுபன்னோர்
ஆவா தமியம்என அபயம்நல்கி உண்மைநிலை
அருளும்மை நின்றெழுபுகழ்
ஆலோன் எனத்தோன்றி எல்லாம் குவித்ததென்
றுன்னோர் எடுத்துரைக்கும்
தாவாத ஒளிகிளர்நின் அங்கைத் தலம்கொண்டோர்
சப்பாணி கொட்டிஅருளே
தண்டமிழ்க் குன்றையாம் குன்றுதித் தெழுபானு
சப்பாணி கொட்டியருளே

*[அ. சொ.] மேவாத-உடலில் பொருந்தாத, உடீஇ-உடுத்து, உழறல்-திரிதல், மேய-பொருந்திய, ஓவாத-நீங்காத, பிரதாபம்-புகழ், மேம்பாட்டுப் பொலிவு, ஒரு கதிர்-ஒப்பற்ற சூரியன், உள்ள கோகனகம்-மனமாகிய தாமரைகள், உற-நன்றாக, அவ்வகை-அப்படிப்பட்ட வகையில், பொலிதல்-விளங்குதல், தேறுபு-தேர்ந்து, அன்னோர்-*

பிறசமயத்தவர், ஆஆ இரக்கக் குறிப்புக் காட்டும் சொல். தமியம்-யாரும் அற்றுள்ளோம், நல்கி-தந்து? ஆலோன்-சந்திரன், ஆன்றோர்-அறிவால் நிறைந்த பெரியோர்கள், தாவாத-குறையாத, கிளர்-விளங்கும், அங்கைத் தலம்-அழகிய கை.

**விளக்கம்:** முதலடி சமணர்களைப்பற்றி அறிவிக்கின்றது. சமணர்கள் பாய் உடுத்தும், தலைமயிர் மறித்தும் உழல்வர் என்பதை நம் தேவாரம் நன்கு எடுத்து இயம்புகிறது. "தலையெலாம் பறிக்கும் சமண்" "முலை மறைக்கப்பட்டு நீராடாப் பெண்கள் முறைமுறையால் நம் தெய்வம் என்று தீண்டித் தலை பறிக்கும் தன்மையர்கள்" "பறிதலைக் கையர் பாய் உடுப்பார்கள்" என்றும் கூறியவற்றைக் காண்க. உடுக்கும் உடைபோலப் பாய் பயன்படாமையின், "மேவாத (உடலில் பொருந்தாத) பாய்" என்றனர் சமணப் பாழ்ங்குழி என்பதைச் சேக்கிழார், "பொய்வாய்மை பெருக்கியபுன் சமயப் பொறியில் சமணீசர் புறத்துறையாம் அவ்வாழ்குழியின் கண்விழுந்தெழுமாறு அறியாது மயங்கி அவம்புரிவேன்" என்று அப்பர் வாக்கில் வைத்துப் பாடலைக் காண்க.

சேக்கிழார் பெருமானார் சமண சமயத்தைப் பாழ்ங்குழி என்றதற்குக் காரணம் உண்டு. கொல்லாமை மறைந்தொழுகும் அமண் சமயம் ஆதலாலும், பொய்யொழுகும் அமண் குண்டர் ஆதலாலும் என்க.

இச் சமணர் தம் மதக் கொள்கைக்கேற்ற குணநலம் படைத்தவர் அல்லர் என்பது திருஞான சம்பந்தர் வாக்காலும் தெரிய வருகிறது. "கழிகரைப் படுமீன் கவர்வார் சமண்" என்றும், "கழி அருகு பள்ளி இடமாக அடுமீன்கள் கவர்வார்" என்றும் அவர் குறிப்பிட்டுள்ளதைக் காணவும். இதனால் அச் சமண், பாழ்ங்குழிச் சமயம் அன்றோ? சேக்கிழார், "தேற்றமில் சமண்" என்றும், "பழுது செய்த அமண்" என்றும் பலபடி கூறிச் சமய கண்டனம் செய்துள்ளனர்.

சேக்கிழார், சமண் சமய மறுப்பாகப் பாடிய பாடல் குறிப்புக்கள், அவர் நூலில் பல உண்டு. அவற்றினை நாயன் மார் வாழ்க்கைக் குறிப்பில் எடுத்து மொழிந்துள்ளார். திலக வதியார் தமது இளவல் சமண் சமயத்திலிருந்து விலக இறை வனிடம் வேண்டிய வேண்டுகோளை, "அடியேன்பின் வந்த வனை, ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்றும் எடுத்தாள வேண் டும்" எனப் பல முறையும் விண்ணப்பம் செய்தனர் என்றும் பாடியுள்ளனர். இவ்வாறு பல இடங்களில் கூறிச் செல்வர்.

சேக்கிழார் பெருமானுர் ஞான சூரியனுக விளங்கலின், அன்பர்களின் அகத்தாமரைகள் எல்லாம் அலர்வன ஆயின. ஆதலின், "கதிர் எனத் தோன்றி*** கோகனகம் எல்லாம் மலர்த்திட" என்றனர்.

சேக்கிழார் பெருமானுராம் சூரியனைக் கண்டு உளம், மலர்ந்து அன்பர் உற்ற நிலைகளைச் சேக்கிழார் புராணத்துள் நன்கு காணலாம்.

வாரணத்தில் இவரைவரக் கண்டதிரு வீதி
மறுகுதொறும் தூய்மைசெய்து வாழைகளும் நாட்டிப்
பூரணகும் பமும்அமைத்துப் பொரியும்மிகத் தூவிப்
பொன்னரிமா லையும்நறும்பூ மாலைகளும் தூக்கித்
தோரணங்கள் நிரைத்துவிரை நறுந்தூபம் ஏந்திச்
சுடர்விளக்கும் ஏற்றிஅணி மணிவிளக்கும் ஏந்தி
ஆரணங்கள் விரித்தோதி மாமறையோர் எதிர்கொண்டு
அறுகெடுப்ப வாழ்த்தெடுத்தார் அரம்பையர்கள் எல்லாம்

என்றும்,

மின்மழை பெய்தது மேக ஒழுங்குகள்
விண்ணவர் கற்பக விரைசேர்பூ
நன்மழை பெய்தனர் சேவையர் காவலர்
நாவலர் இன்புற நாவாரச்
சொன்மழை பெய்தனர் இரவலர் மிடிகெட
அள்ளி முகந்தெதிர் சோழேசன்
பொன்மழை பெய்தனன் உருகிய நெஞ்சொடு
கண்மழை அன்பர் பொழிந்தார்கள்

என்றும் கூறப்பட்டதனுல், சூரியனைக் கண்ட தாமரை போல் அன்பர்கள் மனம் மலர்ந்து தம் மகிழ்வைக் காட்டியதை அறிகிறோம்.

சந்திரனைக் கண்டபோது, தாமரை குவியும். அது போலச் சேக்கிழாராம் சந்திரனைக் கண்டபோது தாமரை போன்ற கைகளைக் குவித்து வணங்கியதையும் அப் புராணத்துள் காண்கிறோம்.

கண்ட போதுள மகிழ்ந்து தன்னைஅறி
யாது கைகள்தலை மீதுறக்
கொண்ட வேடம்அரன் அடியர் வேடம்இது
குறைவி லாததவ வேடம்என்
றண்ட வாணர்திரு அருளை உன்னிஅவர்
அடிமை கொண்டபெரு மையைநினைந்து
எண்த யங்குஅரசர் ஏறு சேவையர்
குலாதி பாதுகை இறைஞ்சினன்

என அரசர் கைகுவித்து வணங்கியதையும்,

மெய்யுள சிவசா தனமும் வெளிப்பட
வெண்ணீ றெழுதிய கண்ணேறும்
கையும் திகழ்மணி கண்டமும் ஒளிதரு
கவளிகை யும்புத் தகஏடும்
நையும் திருவுளம் அழியும் தொறும்அர
கரஎனும் நாமமும் நாமெல்லாம்
உய்யும் படிஅருள் கருணையும் அழகிதெ
னத்தொழு தனர்உல கவர்எல்லாம்

என்று மக்கள் கைகுவித்துத் தொழுததையும் பார்க்கின்றோம். இக் காரணங்களால்தாம் திரு பிள்ளை அவர்கள் சேக்கிழாரைச் சூரியனாகவும், சந்திரனாகவும் நமக்குக் காட்டினர். ஆன்றோர் ஈண்டு உமாபதிசிவாசாரியார், சிவஞான முனிவர் முதலானோர்.

சேக்கிழார் திருக்கரம், திருத்தொண்டர் புராணத்தைஎழுதியதால், ''தாவாத ஒளிகிளர் நின்அங்கைத்தலம்'' என்றனர்.

புகழைமெண்ணிறமாகக் கூறல் புலவர் மரபு ஆதலின், சூரியனை உவமை காட்டினர். இவ்வாறு புகழ் வெண்ணிறம் என்பதைச் சிவஞான முனிவர் காஞ்சிப் புராணத்தில்;

தனது கீர்த்தியும் திறல்பிர தாபமும் தரைமேல்
அனல்செய் கோபமும் முல்லையும்என எங்கும் அமைத்துப்
புனித மாம்அவை தம்மையும் பொதிந்துகொண் டன்னப்
பனிவி சும்பினில் சிவந்து வெண்ணிறம் படைத்த தன்றே

என்று பாடியிருத்தலை அறிக. கம்பரும் நிலாவொளியைப் புகழ் போன்றது என்று பாடியதை,

வண்ண மாலைக் கைபரப்பி
உலகை வளைந்த இருள்எல்லாம்
உண்ண எண்ணித் தண்மதியத்
துதயத் தெழுந்த நிலாக்கற்றை
விண்ணும் மண்ணும் திசைஅனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்தன்
புகழ்போல் எங்கும் பரந்துளதால்

என்ற பாட்டில் காண்க. (34)

4. துருமமலர் கொய்துநீர் ஆடிநீ றிட்டுநனி
தூயகண் இருந்துநேரே
துலங்குமொரு குறியில்ஆ வாகனம்உள் ளுதலோடு
தோன்றிடச் செய்வதன்று
பெருமஅடி யேங்களைப் புரவென்று தாழ்பவர்
பெருஞ்செல்வம் எய்திஜய
பிறங்குநா ராயணஉ பநிட்தம் உரைத்தபடி
பெற்றருள்தி இவர்வணக்கம்
கருமம்முதல் எம்மலமும் நீத்தின்பம் எய்தக்
கடைக்கணித் திடுதிஎன்று
கனிந்துவேண் டுவதன்று சிறுவருந் தமும்இலைக்
காரியம் அவாவிநின்றோம்
தருமசின கரமாம் கரம்குவித் தையஒரு
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்க் குன்றையாம் குன்றுதித் தெழுபானு
சப்பாணி கொட்டி யருளே

[அ. சொ.] துருமம்-மரம், துரும மலர்-மரக்கிளையில் பூக்கும் மலர், நீறிட்டு-திருநீறு தரித்து, நனி-மிகவும், தூய கண்-பரிசுத்தமான இடத்தில், துலங்கும்-விளங்கும், குறி-இலிங்கமாகிய குறியில், ஆவாகனம்-குறியில் வந்தருள மந்திரத்தால் இறைவனை அழைத்தல், பெரும - பெருமையில் சிறந்தவரே, புரவு-காப்பாற்றுக, பிறங்கு-விளங்கும், நாராயண உபநிடதம்-பாஞ்சராத்திரம் என்னும் உபநிடதம், எம்மலமும்-ஆணவம், மாயை என்னும் மற்றைய இருமலங்களும், நீத்து-ஒழித்து, எய்த-அடைய, கடைக்கணித்து-கடைக்கண் பார்வை செய்து, அவாவி-விரும்பி, தருமசீன கரமாம் கரம்-அறங்கோயிலாம் கை.

விளக்கம் : உபநிடதங்கள் நூற்றுஎட்டு. ஆவற்றுள் ஒன்று நாராயணீ உபநிடதம், காலையில் எழுந்து நீராடி, திருநீறிட்டு, மலர் கொய்து ஒருவடிவிலே வழிபடு கடவுளை அழைத்துப் பூசனை செய்து வேண்டியதைப் பெற வேண்டுவது நம்மனோர் கடமை. அப்பர் பெருமானும் தம் நெஞ்சுக்கு அறிவுறுத்தும்போது,

நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
 நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
 பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
 சங்கரா சயசய போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதி என்றும்
 ஆரூரா என்றென்றே அலறா நில்லே

என்றனர்.

கருமம் முதல் எம்மலமும் என்றது ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும் ஆகும். இவற்றோடு, மாயேயம், திரோதானம் இரண்டையும் சேர்த்து மலம் ஐந்து என்னும் மரபும் உண்டு. முதல் மூன்று குணங்களின் தன்மை இன்னது என்பதை இருபா இருபஃது.

கூறிய மூன்று மலத்தின் குணக்குறி
வேறு கிளக்கின் விகற்பம் கற்பம்
குரோதம் மோகம் கொலைஅஞர் மதம்நகை
விராய்எண் குணம்ஆ ணவம்என விளம்பினை

அஞ்ஞா னம்பொய் அயர்வே மோகம்
பைசால சூனியம் மாச்சரி யம்பயம்
ஆஏழ் குணனும் மாயைக் கருளினை

இருத்தலும் கிடத்தலும் இருவினை இயற்றலும்
விடுத்தலும் பரநிந்தை மேவல்என் றெடுத்த
அறுவகைக் குணனும் கருமத் தருளினை

என்று கூறுகிறது.

மாயேயம் என்பது மாயையின் காரியமே ஆகும். திரோதானம் என்பது மறைப்பு; மும்மலங்களையும் தொழில் படுத்தும் சக்தி வாய்ந்தது. இவ்வைந்தின் குணங்களைச் சிவஞான சித்தியார், மேலும் தெளிவுபடுத்தும் முறையில்,

மும்மலம் நெல்லி னுக்கு
முளையொடு தவிடு மிப்போல்
மம்மர்செய் தணுவின் உண்மை
வடிவினை மறைத்து நின்று
பொய்ம்மைசெய் போக பந்த
போத்திருத் துவங்கள் பண்ணும்
இம்மலம் மூன்றி னோடும்
இருமலம் இசைப்பன் இன்னும்

மாயையின் காரியத்தை
மாயேய மலம தென்றும்
ஏயும்மும் மலங்கள் தந்தம்
தொழிலினை இயற்ற ஏவும்
தூயவன் தனதோர் சத்தி
திரோதான கரிய தென்று
ஆய்வர்இம் மலங்கள் ஐந்தும்
அணுக்களை அணைந்து நிற்கும்

மலம்மாயை கன்மம் மாயே
யம்திரோ தாயி மன்னிச்
சலமாரும் பிறப்பி றப்பில்
தங்கிஇத் தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டம்
கறங்கென நிமிடத் தின்கண்
அலமாரும் இறைவன் ஆணை
யால்உயிர் நடக்கும் அன்றே

என்று கூறி விளக்குகிறது.

சேக்கிழார் பெருமானார் கருணைக்கு ஆகரமாய் இருப்பவர். இது குறித்தே அவரை "தரும சினகரம்" என்றே குறிப்பிட்டனர். அவரது திருக்கரமும் தருமசினகர மாம் கரம் ஆகும். இவர் கரமன்றோ பெரியபுராணமாம் செல்வந்தை அளித்தது! இதனை அநபாயனும் பொதுமக்களும் பெற்றனர் அல்லரோ?

அவர் திருமுன் எவர் எதை வேண்டினும் வேண்டுபவர் கட்கு எந்த வித வருத்தமும் இல்லாத முறையில் பொருள் சுரக்கும் பெருந்தகை ஆவார். இவற்றை எல்லாம் உட்கொண்டே, அன்பர்கள் காலையில் எழுந்து அப்பர் பெருமானார் கூறும் முறைப்படி, இறைவன் திருக்கோவிலில் மெழுகல், மலர் பறித்து இடல் செய்வதற்கும் இயலாராய் இறைவன் திருவருள் பெற்றவர் முன் சென்று எங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று வேண்டிய போது பெருஞ்செல்வம் எய்தி நி வர். அவர் பாதத்தைப் பற்றி எல்லாம் பெறுவர் என்பதைத் திருநாவுக்கரசர் ஏகாதச மாலையில்,

பதிகம்மே ழெழுநூறு பகரும்மா கவியோகி
பரசுநா வரசான பரமகா ரணஈசன்
அதிகைமா நகர்மேவி அருளினல் அமண்முண்டர்
அமர்செய்வா தைகள்தீரும் அனகன்வார் கழல்சூடின்

நிதியர் ஆகுவர் சீர்மை உடையர்ஆ குவர்வாய்மை
நெறியர்ஆ குவர்பாவம் வெறியர்ஆ குவர்சால
மதியர்ஆ குவர்ஈசன் அடியர்ஆ குவர்வான
உடையர்ஆ குவர்பாரில் மனிதர்ஆ னவர்தாமே

என்று நம்பிஆண்டார் கூறியது கொண்டு தெளிக.

அப்பர் அடியைச் சூடுவதுபோலச் சேக்கிழார் திரு அடியைச் சூடினும் இந்நிலை பெறுவர். ஆதலின், ''தரும சினகரன்'' என்றனர்.

ஒரு குறியில் ஆவாகனம் பண்ணுதலாவது இன்னது என்பதை அப்பர்,

உயிரா வணம்இருந்து உற்று நோக்கி
உள்ளக் கிழியின் உருவெழுதி
உயிரா வணம்செய்திட் டுன்கைத் தந்தால்
உணரப்படுவா ரோடுஒட்டி வாழ்தி
அயிரா வணம்ஏ றுதுஆன் ஏறுஏறி
அமரர் நாட்டாளா தேஆரூர் ஆண்ட
அயிரா வணமே என்னம் மானேநின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே

என்று குறிப்பிட்டுள்ளதை ஓர்க, இது யோகமுறை ஆவாகனம். கிரியா முறையில் ஆவகனம் செய்தலும் உண்டு.

நாராயணீய உபநிடதம் நாராயணனே இறைவனது தேவி என்று கூறிப் பராசக்தியின் பெருமையை உணர்த்துவது. இது சிறந்த உபநிடதங்களிலும் ஒன்று. இதில் வணக்கம் இன்னது என்பதை நாகைப்புராணம்,

அதிசயம் பயக்கும் நாராயண உபநிடதம் யாரை
மதியினில் குறித்தியாவர் வணங்கினும் இவ்வணக்கம்
துதிகெழு நினவே என்று சொலும்உனைக் குறித்து நாயேன்
விதியில் செய்வணக்கம் வேறு மேவுமோ விமல வாழ்வே

என்கிறது. அதாவது யாரேனும் எத் தெய்வத்தையேனும் வணங்கினாலும், அவ்வணக்கம் அம்மை அப்பனையே சாரும் என்பதாம். இந்த உண்மையினையே நாராயணீயம் கூறுகிறது. நமது சிவஞான சித்தியாரும்,

யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி,
மாதொரு பாகனார்தாம் வருவார் [ஆங்கே

என்று கூறுகிறது.

ஏன் அப்பர் பெருமானார் சூரிய வணக்கத்தினரைக் குறித்து,

அருக்கன் பாதம் வணங்குவோர் அந்தியில்
அருக்கன் ஆவான் அரனுரு அல்லனோ
இருக்கு நான்மறை ஈசனையே தொழும்
கருத்தினை அறியார் கல்கல் மனத்தவரே

என்றும், அக்கினி வணக்கம் செய்வோரைக் குறித்து, "எரி பெருக்குவர் அவ்வெரி ஈசனது உருவமாவது உணர்கிலர் என்றும்" கூறி இருப்பது காண்க. (35)

5. என்னரியவை என்னிய படிக்கடியவர்க்கருளும்
ஈசன்அருளால் அருள்உரு
ஈனசம யத்தொடக் கெல்லாம் ஒழிந்தனம்
எனக்கைதட் டுதலும்ஓவாத்
திண்ணிய மலச்செருக் கெல்லாம் ஒழிந்தனம்
தீர்ந்ததவ் வாதைஎன்று
செப்பிக்கை தட்டுதலும் இந்திரன் மலர்க்கமலன்
தேந்துழா யவன்வாழ்க்கையும்
நண்ணிய எழுங்கருத் தும்தவிர்ந்த தனம்என்று
நாடிக்கை தட்டுதலும்நேர்
நவில்நம் பரமகுரு சாமிஎன் றியாவரும்
நயக்கஅவ தாரம்செய்தாய்
தண்ணிய மலர்க்கைத் தலம்குவித் தையஒரு
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்க் குன்றையாம் குன்றுதித் தெழுபானு
சப்பாணி கொட்டியருளே

*[அ. சொ.] ஈன-தாழ்மையான, நீசமான, தொடக்கு-பாச பந்தம், ஓவா-நீங்காத, திண்ணிய-வன்மைமிக்க, மலச் செருக்கு-மும்மலங்களின் மமதை, வாதை-துன்பம், மலர்க்*

கஞன்-பிரமன், தேந்துழாயவன்-தேன்பொருந்திய துளசி மாலையணிந்த திருமால், நண்ணிய-பொருந்திய, நேர்-ஒப்பு, நவில - கூற, பரம-மேலான, நயக்க-விரும்ப, தண்ணிய-குளிர்ந்த, ஐய-தலைவரே, பேரழகுடையவரே.

**விளக்கம்:** ஈசன் திருவருள் அடியவர்கள் எண்ணியபடி அருளுவதே ஆகும். திருநாவுக்கரசர் இறைவனிடம் தாம் சமண சமயத்தில் சேர்ந்ததனால் மாசுண்ணப்பட்டமையினால், அம்மாசு நீங்க இறைவரிடம் வேண்டினார் என்பதைச் சேக்கிழார்,

புன்னெறியாம் சமண்சமயத்
தொடக்குண்டு போந்தஉடல்
தன்னுடனே உயிர்வாழத்
தரியேன்நான் தரிப்பதனுக்கு
என்னுடைய நாயக!நின்
இலச்சினைஇட் டருள்என்று
பன்னுசெழுந் தமிழ்மாலை
முன்னின்று பாடுவார்

என்று குறிப்பிட்டுள்ளனர்.

இஃது உண்மை என்பதை அப்பர் வாக்காகிய,

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு
விண்ணப்பம் போற்றி செய்யும்
என்னாவி காப்பதனுக் கிச்சை
யுண்டேல் இருங்கூற் றகல
மின்னாரும் மூவிலைச் சூலம்
என்மேல் பொறிமேவு கொண்டல்
துன்னார்க டந்தையுள் தூங்கானை
மாடச் சுடர்க் கொழுந்தே

கடவும் திகிரி கடவா தொழியக் கயிலை யுற்றான்
படவும் திருவிரல் ஒன்று வைத்தாய் பனியால் வரை போல்
இடபம் பொறித்தென்னை ஏன்றுகொள் ளாய்இருஞ் சோலை திங்கள்
தடவும் கடந்தை யுள் தூங் கானைமாடத் தெம்தத் துவனே

என்ற பாடல்களால் தெரியலாம்,

இவ்வேண்டுகோளை இறைவர் நிறைவேற்றினுர் என் பதைச் சேக்கிழார்,

நீடுதிருத் தூங்கானை மாடத்து நிலவுகின்ற
ஆடக மேருச் சிலையான் அருளாலோர் சிவபூதம்
மாடொருவர் அறியாமே வாகீசர் திருத்தோளில்
சேடுயர்மூ விலைச்சூலம் சினவிடையின் உடன்சாத்த

என்று உணர்த்தியுள்ளனர்.

தண்டி அடிகள் கண் பார்வை அற்றவர். அவரிடம் சமணர்கள் போந்து பரவி, "உன் கண்பார்வை உறுமாறு நீ பணியும் பரமர் செய்ய இயலுமோ? இயன்ருல் நாங்கள் இவ்வூரில் இரோம்" என்று அறைகூவிய போது, தண்டி யடிகள் இதனை இறைவனிடம் முறையிட்டுப் பின் திருவாரூர் கமலாலயக் குளத்தில் மூழ்கி எழுந்தனர். அதுபோது அவர்க்குக் கண் பார்வை நன்கு தெரியவந்தது. இதனைச் சேக்கிழார், "தொழுது புனல்மேல் எழும்தொண்டர் தூயமலர்க்கண் பெற்றெழுந்தார்" என்றருளினுர். சுந்தரர் இதனை அழகுற, "நாட்டமிகு தண்டிக்கும் அடியேன்" என்றருளிப் போந்தார். இவ்வாறு இறைவர் அடியவர் வேண்டியதை வேண்டியபடி ஈந்த இடங்கள் பல. இதனுல்தான் மணிமொழியார், "வேண்டத் தக்கது அறிவோய் நீ, வேண்ட முழுதும் தருவோய் நீ" என்றனர். வாகீசரும் "வேண்டுவார் வேண்டுவன ஈவான் கண்டாய்" என்றனர். வள்ளலாரும் "வேண்டியநான் வேண்டியவாறு எனக்கருளும் தெய்வம்" என்றனர்.

நம்பர் அருள் இன்றேல் ஈனசமயத் தொடக்கு இருந்தே தீரும். இதனைத் திருநாவுக்கரசர் நன்குணர்ந்தவர் என்ப தைச் சேக்கிழார் வாக்கு உணர்த்துகின்றது.

நில்லாத உலகியல்பு கண்டுநிலை யாவாழ்க்கை
அல்லேன்என் றறத்துறந்து சமயங்கள் ஆனவற்றின்
நல்லாறு தெரிந்துணர நம்பர்அரு ளாமையினுல்
கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயம் குறுகுவார்

என்ற பாடலைக் காண்க.

புலவர் பெருமக்கள் இயற்கையில் நிகழும் நிகழ்ச்சியினைத் தாம் எடுத்துக் கொண்ட பொருளுக்கேற்பத் தம் குறிப்பை அதனோடு தொடர்பு படுத்திப் பாடுவது இயல்பு. இது குறித்தே இத்தகைய பாடல்கள் தற்குறிப்பு ஏற்ற அணியின்பால் படும் என்பர். திருஞான சம்பந்தர் குழவிப் பருவத்தில் செங்கீரை ஆடினார். அதனைச் சேக்கிழார் குறிப்பிடுகையில்,

வருமுறைமைப் பருவத்தில் வளர்புகலிப் பிள்ளையார்
அருமறைகள் தலைஎடுப்ப ஆண்டதிருமுடி எடுத்துப்
பெருமழுவர் தொண்டல்லால் பிறிதிசையோம் என்பார்
போல்
திருமுகமண் டலம்அசையச் செங்கீரை ஆடினார்

என்றும், சப்பாணி கொட்டியருளியதை அறிவிக்கும்போது,

நாம்அறியோம் பரசமயம் உலகீர் எதிர்நடவாது
போம்அகல என்றங்கை தட்டுவதும் புனிதன்பால்
காமருதா ளம்பெறுதற் கொத்துவதும் காட்டுவதுபோல்
தாமரைச்செங் கைகளினால் சப்பாணி கொட்டினார்

என்றும், தவழ்தலைச் செய்ததைக் குறிப்பிடும்போது,

விதிதவறு படும்வேற்றுச் சமயங்கள் இடைவிழுந்து
கதிதவழ இருவிசும்பு நிறைந்தகடி வார்கங்கை
நதிதவழும் சடைமுடியார் ஞானம்அளித் திடஉரியார்
மதிதவழ்மா ளிகைமுன்றில் மருங்குதவழ்ந் தருளினார்

என்றும் தற்குறிப்பு ஏற்ற அணி அமையப் பாடியிருப்பதை அறியவும்.

இக்கருத்துக்களை மேற்கொண்டே திரு பிள்ளை அவர்களும் சேக்கிழார் பெருமானார் கைகொட்டுதற்குரிய காரணங்களை "ஈன சமயத் தொடக்கெல்லாம் ஒழித்தனம் எனக் கைதட்டுதலும்" என்றனர்.

சேக்கிழார் தம் திருவாக்கில் மலவாதனை தீர்த்தலைப் பற்றிப் பாடிய இடங்கள் பல. இளையான்குடிமாற நாயனார் கீரையினைக் கல்லி எடுத்ததை மொழியும் நிலையில் சேக்கிழார்,

"குழிநிரம் பாத புன்செய்க் குறும்பயிர் தடவிப் பாசப் பழிமுதல் பறிப்பார் போலப் பறித்தவை கறிக்கு நல்க" என்றும், திண்ணனார் தம் வேட்டையாடிச் செய்த செயல்களைக் கூறப் போவதாகக் குறிப்பிட வந்த இடத்து,

"இவ்வண்ணம் பெருமுனிவர் ஏகினார் இனிஇப்பால்
மைவண்ணக் கருங்குஞ்சி வனவேடர் பெருமானார்
கைவண்ணச் சிலைவளைத்துக் கான்வேட்டை தனிஆடிச்
செய்வண்ணத் திறம்மொழிவேன் தீவினையின் திறம்
ஒழிவேன்

என்று பாடியிருத்தலின், அவர் மலச் செருக்கு ஒழித்தவர் என்பது தெரிகிறது அன்றோ? "தாள் சூடித் தீவினை நீக்கல் உற்றேன் சிறப்புலியாரைச் செப்பி" என்றும் இவர் குறிப்பிட்டதையும் காண்க. இந்தக் கருத்தில்தான் கை தட்டினர் என்பார் என்பதையே, ஆசிரியர் "மலச் செருக்கெலாம் ஒழித்தனம் தீர்ந்தது அவ்வாதை என்று செப்பிக் கை தட்டுதலும்" என்றனர்.

உண்மை அன்பர்கள், இந்திரபதவியையோ, பிரம்மன் பதவியையோ, திருமால் பதவியையோ சிறிதும் கருதார், வேண்டவும் வேண்டார். இக்கருத்தினை மணி மொழியார்,

கொள்ளேன் புரந்தரன் மால்அயன்
வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல்
லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே
இருக்கப் பெறின்இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னைஅல்
லாதெங்கள் உத்தமனே

என்று அருளியதைக் கொண்டும், கச்சியப்ப சிவாச்சாரியார்,

கோல நீடிய நிதிபதி வாழ்க்கையும் குறியேன்
மேலை இந்திரன் அரசினைக் கனவினும் வெஃகேன்
மாலயன் பெறுபதத் தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்மையே வேண்டுவன் தமியேன்

என்று அறிவித்துக் கொண்டதையும், சம்பந்த சரணாலயர்,

அண்டர்பொய் வாழ்வையும் அயன்பொய் வாழ்வையும்
விண்டுவின் வாழ்வையும் வெஃகி லேனியான்
தண்டைகள் அணிந்தநின் சரணத் தன்மையே
கொண்டிட வேண்டுவன் என்று கூறினன்

என்று உணர்த்தி இருப்பதையும் ஈண்டு ஓர்க. இந்தக் கருத்துக்களையேதாம் "இந்திரன் மலர்க்கணான் தேந்துமாயவன் வாழ்க்கையும் நண்ணியஎழும் கருத்தும் தவிர்ந்தனம் என்று நாடிக் கை தட்டுதலும்" என்றனர்.

சேக்கிழார் பல்வேறு இடங்களில் அரிய உபதேசங்களை அருளிச் செய்துள்ளனர்.

"எல்லாக்கும் முன்னவனே முன்னின்றால் முடியாத பொருள் உளதோ" என்று கூறி மக்களுக்கு உபதேசித்துள்ளனர்;

ஊன்அ டைந்த உடம்பின் பிறவியைத்
தான்அ டைந்த உறுதியைச் சாருமால்
தேன்அ டைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மாந டம்செய் வரதர்பொன் தாள்தொழ

என்றும்,

மலர்மிசை அயனும் மாலும்
காணுதற் கரிய வள்ளல்
பலர்புகழ் வெண்ணெய் நல்லூர்
ஆவணப் பழமை காட்டி
உலகுய்ய ஆண்டு கொள்ளப்
பெற்றவர் பாதம் உன்னித்
தலைமிசை வைத்து வாழும்
தலைமைநம் தலைமை ஆகும்

என்றும் திருவருள் புரிந்த உபதேசங்களையும் காண்க.

"அறம் பொருள் இன்பமான அறநெறி வாழாமல் புல்லி மறங்கடிந்து அரசர் போற்ற வையகம் காக்க" வேண்டும் என அரசர்க்கும் உபதேசித்துள்ளனர். இவைகள் எல்லாம் சேக்கிழார் பெருமானுர் பரமகுருசாமி என்பதையும் அவதார புருடர் என்பதையும் காட்டுகின்றன அல்லவோ? இது குறித்தே திரு. பிள்ளை அவர்கள், "நம்பரமகுரு சாமி என்று யாவரும் நயக்க அவதாரம் செய்தாய்" என்று பாடிப் பரவினர். (36)

6. வம்பிட் டொளிர்முலை மாதுமை காண
மணிப்பொது நடனம்செய்
வார்முனம் மனம்நைந் துருகிட் நிற்றல்
மதித்தவர் முதல்நல்க
நம்பிட் டருமறை யோர்கை குவித்து
நயந்து வியந்துட்னே
நறுவிரை நல்கி அலங்கல் புனைந்து
நரும்பரி வட்டம்எடுத்
தம்பிட் டொளிர்சடை யவரே இவர்என்
றையமறத் தெளியா
யாத்திடு முன்னர் நன்னர் விபூதிய
தள்ளுபு கொள்ளுகெனக்
கும்பிட் டேற்ற திருக்கை குவித்துக்
கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல
கொட்டுக சப்பாணி

[அ - சொ] வம்பிட்டு - மார்புகச்சு இட்டு, மணிப்பொது – அழகிய பொற் சபையில், முனம் - சந்நிதி முன், அவர் - நடராசர், முதல் - உலகெலாம் எனும் முதல், நல்க-கொடுக்க, நம்பிட்டு-விரும்பி, அருமறையோர்-அருமையான வேதங்களை உணர்ந்தவர், நயந்து-விரும்பி, நறுவிரை-நல்ல மணமுள்ள சந்தனம், அலங்கல் - மாலை, புனைந்து-

அணிந்து, நகும்-விளங்கும், பரிவட்டம்-கடவுள்ஆடை, அம்பு-கங்கையாகிய நீர், சடையவர்- சடையுடைய சிவபெருமான்-ஐயம் - சந்தேகம், தெளியா - தெளிந்து, யாத்திடும்-தலையில் கட்டிடும் அள்ளுபு - அள்ளி, கொற்றச் சேவையர் தொண்டு புரிவதில் வெற்றிக் கொண்டவர், காவல-தலைவரே.

**விளக்கம் :** இறைவன் தேவி காணத் தில்லையில் திருநடனம் புரிகின்றனர் என்ற உண்மையினைச் சேக்கிழார் பெருமானுர். "மாதொரு பாகம் நோக்கி மன்னு சிற்றம் பலத்தே ஆதியும் நடுவும் இல்லா அற்புதத் தனிக் கூத்தாடும் நாதனுர்" என்றருளியுள்ளார். குமரகுருபரர் இக்கருத்தை அழகுபட,

"பொன்மன்றம் பொற்ரு மரைஒக்கும் அம்மன்றில்
செம்மல் திருமேனி தேன்ஒக்கும் அத்தேனை
உண்டு களிக்கும் கரிவண்டை ஒக்குமே
எம்பெரு மாட்டி விழி"

என்றனர்.

இறைவன் இறைவி காணத் திருநடம் புரிதற்குரிய காரணம் இன்னது என்பதை அவரர் திதம்பர் மும்மணிக் கோர்வையில்,

பாலுண் குழவி பசுங்குடர் பொருதெனை
நோயுண் மருந்து தாய்உண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக் கின்அருள் கிடைப்ப
வையம்ஈன் றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூல் கொண்ட ஐயரித் தடங்கண்
திருமாண் சாயல் திருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்த

என்று விளக்கியுள்ளனர்.

இக்கருத்தைத் திருவானைக்காப் புராணமும்,

இளங்குழவிப் பிணிக்கீன்ற தாய்மருந்து
நுகர்வபோல் இருளின் மாண்ட
களம்குலவும் மலம்உயிர்கட் கொழியஅருள்
நடம்காணும் கடன்மீக் கொண்டு
வளம்குளவும் தனதுபெருங் கற்பும்ஒரு
கணவர்இறை மாண்பும் தோன்ற
விளங்கும்இர ணியமன்றில் நின்றருளும்
மணிவிளக்கை விளம்பி வாழ்வாம்

என்று விளக்கிக் காட்டுகிறது

இறைவி இறைவனது ஊழிக் காலத்துத் திருநடம் போதும், அந் நடனத்தைக் காண்பவள் என்பதைச் சங்க நூலாகிய கலித்தொகையும்,

படுபறை பலஇயம்பப் பல்உருவம் பெயர்த்துநீ
கொடுகொட்டி ஆடுங்கால் கோடுயர் அகல்அல்குல்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ

மண்டமர் பலகடந்து மதுகையான் நீறணிந்து
பண்டரங்கம் ஆடுங்கால் பணைஎழில் அணைமென்தோள்
வண்டரற்றும் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ

கொலைஉழுவைத் தோல்அசைஇக் கொன்றைத்தார் சுவல்புரளத்
தலைஅங்கை கொண்டுநீ காபாலம் ஆடுங்கால்
முலைஅணிந்த முறுவலாள் முன்பாணி தருவாளோ

என ஆங்கு,

பாணியும் தூக்கும் சீரும் என்றிவை
மாணிழை அரிவை காப்ப
ஆணம்இல் பொருள்மைக் கமர்ந்தனை ஆடி

என்று கூறுகிறது,

ஆகவே, திரு பிள்ளை அவர்கள் "உமை காண மணிப் பொது நடனம் செய்வார்" என்றனர்.

சேக்கிழார் பெருமானார், தாம் திருத்தொண்டர் வரலாற்றினைப் பாடத் தில்லையம்பதி போந்தார். போந்தவர்

தில்லை எல்லையில் வந்து வந்தெதிர்
தெண்ட னாகவிழுந் தெழுந்து
அல்லி சேர்கம லத்த டத்தினில்
மூழ்கி அம்பல வாணர்முன்
ஒல்லை சென்றுப ணிந்து கைத்தலம்
உச்சி வைத்துளம் உருகிநைந்து
எல்லை காணரி தாய பேரொளி
இன்ப வாரியில் மூழ்கியே

அடைய லார்புரம் நீறெ ழத்திரு
நகைசெய் தன்றொரு மூவரைப்
படியின் மேல்அடி மைக்கொ ளும்பத
பங்க யங்கள் பணிந்துநின்று
அடிக ளேஉன தடியர் சீர்அடி
யேன்உ ரைத்திட அடிஎடுத்து
இடர்கெ டத்தரு வாய்எ னத்திரு
அருளை எண்ணி இறைஞ்சினார்

என்று சேக்கிழார் புராணம் கூறும்.

இங்ஙன மெல்லாம் இவர் செய்ததனாலேயே ஈண்டு "நடனம் செய்வார் மனம் மகிழ்ந்து நைந்து உருகிட நிற்றல் மதித்து" என்றனர். அதுபோது இவர்க்கு இறைவர் "உலகெலாம் என்று" அடி எடுத்துக் கொடுத்ததையும் அப்புராணம்,

அலைபு னல்பணி திந திச்சடை
ஆட ஆடர வாடநின்று
இலகு மன்றினில் ஆடு வார்திரு
அருளி னால்அச ரீரிவாக்கு
உலகெ லாம்என அடிஎ டுத்துரை
செய்த பேரொலி ஓசைமிக்கு
இலகு சீரடி யார்செ விப்புலத்
தெங்கும் ஆகிநி றைந்ததால்

என்கிறது.

இந்த உண்மையினை வெளிப்படுத்தவே 'அவர் முதல் நல்க' என்னும் தொடர் அமைந்துள்ளது. சேக்கிழார் செய்யப்போகும் வாணிபமாம் பெரிய புராணம் இயற்றற்கு,

இறைவர் முதல் (முதற்பணம்) தந்தருளினுர் என்ற நயம் இத்தொடரில் அமைந்திருத்தலேயும் காண்க.

இங்ஙனம் இறைவர் முதல் எடுத்து மொழிந்ததைக் கேட்ட தில்லே மூவாயிர அந்தணர்களும் வியந்து, சேக்கிழார் பெருமானுரின் பெருமையினே ஓர்ந்து, அவரைச் சிவனு ராகவே போற்றி, அவர்க்குச் சந்தனம், மாலே, பரிவட்டம், திருநீறு ஈந்து சிறப்புச் செய்த செயல்கள் இங்குச் செவ்வனே குறிப்பிடப் பட்டுள்ளன. அனே வரும் உச்சி மேல் கரம் குவித்து உளம் உருகினர். சேக்கிழார்க்குத் தில்லேவாழ் அந்தணர்கள் செய்த சிறப்பினே உமாபதி சிவசாரியார்,

உள்ள லார்புரம் நீறெழக்கணே ஒன்று
தொட்டுயர் மன்றில்வாழ்
வள்ள லார்திரு மாலே யும்திரு
நீறும் மெய்ப்பரி வட்டமும்
எள்ள லார்அலர் என்று சேவையர்
காவ லர்க்கிவை இனிதளித்து
அள்ள லார்வயல் நீடு தில்லேயில்
அனேவ ரும்களி கொண்டபின்

என்றனர்.

இதனே ஆசிரியர் "அருமறையோர் கைகுவித்து நயந்து வியந்து உடனே நறுவிரை நல்கி அலங்கல் புனேந்து நகும் பரிவட்டம் எடுத்து" என்றனர். பரிவட்டம் எடுத்தலாவது சிவநேயச் செல்வர்க்கு இறைவன் ஆடையினேத் தலேயில் சுற்றிச் சிறப்புச் செய்தல்.

ஈண்டுச் சேக்கிழார் பெருமானுரது பணிவு எம்முறையில் இருந்தது என்பதையும், திருநீற்றை எம்முறையில் ஏற்பது என்பதையும் ஆசிரியர் அழகுபட காட்டியுள்ளார். விபூதியினேக் கும்பிட்டு ஏற்ருர் என்பர் ஆசிரியர். இவ்வாறு திருநீற்றைப் பணிந்தே ஏற்க வேண்டும் என்பதைச் சேக்கிழார் பெருமானுர் அப்பர் புராணத்துள்,

திருவாளன் திருநீறு திலகவதி யார்அளிப்பப்
பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்று

என்று அருளிப் போந்தார்.

சேக்கிழார் பெருநாவலராய்ப் பொலிந்தமையினால் தான், அனபாயச் சோழன் சீவகசிந்தாமணியில் ஈடுபட்டிருந்தும், அவனைத் தம் நாவன்மையால் அறிவு கொளுத்தித் தொண்டர் வரலாற்றைக் கேட்குமாறு செய்தனர். அவர் அரசனை நோக்கி "சமணர் பொய்ந்நூல் இது மறுமைக்கும் ஆகாது இம்மைக்கும் அற்றே வளருகின்ற சிவ கதை இம்மைக்கும் மறுமைக்கும் உறுதி" என்று உரைத்தருளினர். அவனும் "அந்தத் தூயகதை அடைவுபடச்சொல்லீர்" என்று கேட்டு கொண்டனன். இந்நிலைக்கு அரசனைக் கொணர்ந்தது நம்பெருமானாரது நாவன்மை அன்றோ? இது கருதியே இவர் ஈண்டு "நாவல" எனப் போற்றப் பட்டனர். (37)

7. உண்டல் உடுத்தல் மணத்தல் முதல்பல
உன்னுபு நல்நயம்ஆர்
உத்தம என்றடை ஆதுலர் எண்ணம்
ஒருங்கு தெரிந்தனையார்
தண்டல் இலாமகிழ் பூப்ப மலர்க்கைத்
தலம்விரி யாதுகுவி
தருமோர் பழக்கம்முன் உள்ளது யாங்கள்செய்
தவம்வறி தாம்கொல்லோ
கண்டல் செறிந்த கருங்கடல் வண்ணன்
கலிகெழு பாற்கடல்மேல்
கண்துயில் வதுபொர வெண்சுதை தீற்றிய
காமரு மாளிகைமேல்
கொண்டல் உறங்கும் குன்றத் தூரன்
கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல
கொட்டுக சப்பாணி

[அ - சொ] உன்னுபு - எண்ணிக்கொண்டு, நயம் - அன்பு, நீதி, ஆர் - பொருந்திய, ஆதுலர் - ஏழைகள்,

ஒருங்கு - முழுமையும் அனையார் - அத்தகையவறியவர், தண்டல்-தடை-பூப்ப-தோன்ற, கைத்தலம் விரியாது-இல்லை என்னுமல், குவி தரும் - அள்ளிக் கொடுக்கும், வறிதாம்கொல் - வீணுகப் போகுமோ, தவம் - போற்றி செய்தல், கண்டல் - தாழை, செறிந்த - நிறைந்துள்ள, கடல் வண்ணன் - கடல் நிறம் படைத்த திருமால், கலி கெழு - ஓசை மிகுந்த, கண்துயில்வது - உறங்குவது, பொர -போல, சுதை-சுண்ணும்பு, தீற்றிய-பூசப்பெற்ற, காமரு-அழகிய, கொண்டல் - மேகம்.

**விளக்கம் :** உலகில் ஆதுலர்களாகிய ஏழைகள் "தம் எண்ணத்தில், பட்சணம், உண்ண உணவு இல்லையே, உடுக்க உடையில்லையே என்ற ஏக்கத்துடன், நற்குணம் வாய்ந்த மனையாளை மணந்து வாழ்வதற்கும் இல்லையே" என்று எண்ணிக் கொண்டிருப்பர். அங்ஙனம் எண்ணியவர்கள் தம் குறைகளை நீக்குவோரிடத்துச் சென்று கூறி, அக்குறைகளை நீக்கிக் கொள்வர். உணவு வேண்டி இருந்தமையினை இரங்கேச வெண்பா,

அங்கிஉம்பர் கோன்கா அருந்த நினைந்தர்ச் சுனன்பால்
இங்கிதமாப் பெற்முன் இரங்கேசா

என்று கூறுகிறது.

உடை வேண்டி இறைவர் நேசநாயனுரிடத்தில் இரந்ததை முதுமொழி மேற்வைப்பு என்னும் நூல்,

ஈசன் இரந்தாலும் ஈந்தாரோ டொத்துயர்ந்தார்
நேசர் இடத்திரந்து நிற்றலால்

என்று இயம்புகிறது.

மணத்தல் பொருட்டு வேண்டுதலைத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், தருமி என்பான் இறைவனிடத்தில் சென்று,

"எந்தையே கந்தர் தந்தா இளைத்தனன்
பொருளோ இல்லை
மைந்தனுண் டாக என்னை மன்றல்செய்
வித்தல் வேண்டும்

என்று வேண்டியதாகக் கூறுகின்றது.

இங்ஙனம் வேண்டுவார் எண்ணங்களை அறிந்து, அவர் கட்டு ஈகின்ற சிறப்பினைப் பெற்ற குலம் வேளாளர் குலம் ஆகும்.

வேளாளர் குலம் பிறர்வேண்டுவதை ஈயும் பண்புடைய குலம் என்பதை மானக்கஞ்சாற நாயனார் செய்கை மூலமும் அறிந்து கொள்ளலாம். இவர் வேளாளர். இவரது திருமக ளார்க்குத் திருமணம் நடக்கும் மணப்பந்தலில் மாவிரத முனிவர் வந்துற்று, அம் மணமகளாரது கூந்தல் அழகைக் கண்ணுற்று, இக் கூந்தல் மயிர், தமக்குப் பஞ்சவடிக்குப் (மயிர்ப் பூணலுக்கு) பெரும் பயனாகும் என்று மானக் கஞ் சாற நாயனாரைக் கேட்டபோது, வேளாளர் மரபினரான நாயனார் சிறிதும் தயங்காமல் அதனை ஈந்து விட்டனர், இதைச் சேக்கிழார்.

அருள்செய்த மொழிகேளா அடல்சுரிகை தனைஉருவிப்
பொருள்செய்தாம் எனப்பெற்றேன் எனக்கொண்டு பூங்
கொடிதன்
இருள்செய்த கருங்கூந்தல் அடியில்அரிந் தெதிர்நின்ற
மருள்செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தின் இடைநீட்ட

என்றறிவித்துள்ளனர்.

குறிப்பு அறிந்து ஈயும் இயல்பினர் வேளாளர், என் பதையும் சேக்கிழார்,

மாரிக் காலத் திரவினில் வைகிஓர்
தாரிப் பின்றிப் பசிதலைக் கொள்வது
பாரித் தில்லம் அடைந்தபின் பண்புற
வேரித் தாரான் விருந்தெதிர் கொண்டனன்

ஈர மேனியை நீக்கி இடம்கொடுத்
தார இன்னமு தூட்டுதற் காசையால்
தார மாதரை நோக்கித் தபோதனர்
நீர வேபசித் தார்செய்வ தென்என்று

கூற, அதுபோது அவர்தம் மனைவியார்

செல்லல் நீங்கப் பகல்வித் தியசெந்நெல்
மல்லல் நீர்முளை வாரிக் கொடுவந்தால்
வல்ல வாறமு தாக்கலும் ஆகும்மற்
றல்ல தொன்றறி யேன்என் றயர்வுற

என்றதும், நாயனூர்

மற்றம் மாற்றம் மனைவியார் கூறலும்
பெற்ற செல்வம் எனப்பெரி துள்மகிழ்ந்
துற்ற காதலி னுல்ஒருப் பட்டனர்
சுற்று நீள்வயல் செல்லத் தொடங்குவார்

என்றும், அறிவித்திருப்பதைக் காண்க.

இத்தகையவர் குலத்தில் நந்தம் சேக்கிழார் பெருமானுர் பிறந்துள்ளார். அவர் தம் குலப் பெருமைக்கேற்ப இலம் என்று உரையாது ஈந்து வந்த பெருமையர். இதனை நன்கு அறிந்த ஆசிரியர் ஈண்டு "ஆதுலர் எண்ணம் ஒருங்கு தெரிந்து அனையார் தண்டல் இலா மகிழ்பூப்ப மலர்க் கைத் தலம் விரியாது குவிதல்" என்று குறித்துப் பாடியுள்ளார். இவ்வாறு கொடுக்கும் இயல்பினரிடம் சென்று இரத்தலும் ஓர் அழகாகும் என்பதைத் திருவள்ளுவர்,

கரப்பிலார் நெஞ்சின் கடன்அறிவார் முன்நின்று
இரப்பும்ஓர் ஏஎர் உடைத்து

என்றனர்.

இங்ஙனம் இரக்கின்றவர்கட்குக் கொடுக்கும் பண்பு குல முடையவரிடத்தில்தான் உண்டு என்பதையும் திருவள்ளுவர்,

இலம்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலமுடையார் கண்ணே உள

என்று அறிவுறுத்தினர்.

புறநானூறும் "இன்மைதீர்க்கும் குடி" என்று இங்ஙனம் ஈவார் குடியையே புகழ்கின்றது.

இஃது இவர்களது பிறவிக் குணம். இதனை ஔவையார்,

சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையும் நடைப்பழக்கம் நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம்

என்றனர். இதனுல்தான் "ஓர் பழக்கம் முன் உள்ளது" என்றனர்.

கடல் அருகே தாழைகள் மிகுதியும் உண்டு. இதனைப் புலவர்கள் நெய்தல் நிலத்தைக் கூறும் இடங்களில் எல்லாம் கூறியே செல்வர். திருஞான சம்பந்தரும் திருவெண்காட்டுப் பதிகத்தில்,

விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் தண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்தம் நகைகாட்டும் காட்சியதே

என்று குறிப்பிட்டுள்ளனர்.

குன்றத்தூரில் மாளிகைகள் வெண்மை நிறச் சுண்ணம் தீட்டப்பட்டமையின், திருப்பாற்கடலுக்கு உவமையாதலைக் காணவும். திருமாலுக்கு நிகராக மேகங்கள் கூறப்பட்டன. பாற்கடல் உவமை மாளிகையின் பரப்பையும், வெண்ணிறத்தையும் உணர்த்தற்கே ஆம், அத்தகைய மாளிகைமேல் மேகம் உறங்குதல் என்பதால் மாளிகையின் உயர்ச்சி கூறிய வாருயிற்று. மேகம் வெண்ணிற மாளிகையில் படிதலின் திருப்பாற்கடலில் பள்ளிகொள்ளும் திருமால் உவமையாகக் கூறப்பட்டார். உயர்ச்சி வாய்ந்த இடங்களில் மேகங்கள் தவழ்வதைச் சேக்கிழார் பெருமானுர்,

காரேறும் கோபுரங்கள் கதிர்ஏறும் மலர்ச்சோலை
தேரேறும் மணிவீதி திசையேறும் வசையில்அணி

வாரேறும் முலைமடவார் மருங்கேறும் மலர்க்கணையோன்
பாரேறும் புகழ்உறழ்ந்தைப் பதியின்வளம் பகர்வரிதால்

என்றும் பாடியுள்ளார். (38)

8. படியிடை ஒருபை திரவரு ணனைபுரி
 பாவலர் ஐந்திணையும்
பகுத்தொரு முப்பொரு ளோடும் விரித்துப்
 பயனு கத்தெய்வம்
கடிதலில் சினகரம் உள்ளன ஓதக்
 கற்பித் தவநெஞ்சம்
கனியக் கனியக் கண்ணீர் வாரக்
 கவிபா டியஇறைவ
ஒடிவரி தாம்இரு பன்னிரு கோட்டத்
 துள்ஒரு கோட்டம்அலா
தொருகோட் டமும்உறல் இல்லாய் நல்லாய்
 உலவா வளமைப்பல்
குடிகள் நெருங்கும் குன்றத் தூரன்
 கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல
 கொட்டுக சப்பாணி

[அ. சொ.] படியிடை-பூமியில், பைதிரம்-நாடு, ஐந்திணையும்-குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து நிலங்களையும், ஒரு-ஒப்பற்ற, முப்பொருள்-முதற் பொருள், கருப் பொருள், உரிப் பொருள், கடிதல்-நீக்குதல், சினகரம்-கோவில், வார-ஒழுக, இறைவ-தலைவ, ஒடிவு அரிதாம்-தாழ்வு கூறப்படுதற்கு அரியதாம், அழிவில்லாத, இரு பன்னிருகோட்டம்-இருபத்து நான்கு கோட்டங்கள், ஒரு கோட்டம்-ஒப்பற்ற புலியூர்க் கோட்டம், அலாது-அல்லாமல், (கோட்டமும் கோணலும், வேறு இல்லை என்றவாறு) உறல்-பொருத்துதல், உலவா-குறையா.

**விளக்கம்:** சேக்கிழார் பெருமானார் தமக்குப் பின்வந்த புலவர்கட்கெல்லாம், ஒரு நாட்டை வர்ணிக்க வேண்டுமாயின், அந்த நாட்டின் ஐந்திணை வளங்களையும்

ஒவ்வொரு திணைகளுக்குரிய முப்பொருள்களையும், அவ்வத் திணைகட்குரிய கோயில்களையும் பாடுதல் வேண்டும் என்பதைத் திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில் விளக்கமுறக் கூறிச் சென்றுள்ளார்.

கொண்டல் வானத்தின் மணிசொரி
வனகுல வரைப்பால்
தண்டு துணர்க்கொன்றை பொன்சொரி
வனதள வயற்பால்
வண்டல் முத்தம்நீர் மண்டுகால்
சொரிவன வயற்பால்
கண்டல் முன்துறைக் கரிசொரி
வனகலம் கடற்பால்

என்று நான்கு திணைகளையும் கூறி, முல்லையும் குறிஞ்சியும் வெய்யோன் வெப்பத்தால் திரிந்து பாலையாக மாறுதலின் அதனையும் உட்கொண்டு,

கோல முல்லையும் குறிஞ்சியும் அடுத்தசில இடங்கள்
நீல வாள்படை நீலிகோட் டங்களும் நிரந்து
கால வேனிலில் கடும்பகல் பொழுதினைப் பற்றிப்
பாலை யும்சொல லாவன உளபரல் முரம்பு

என்று பாலைத் திணையையும், அத்திணைக்குரிய கோயிலையும் கூறியுள்ளார். ஏனைய திணைகளுக்குரிய கோயில்களைக் குறிப்பிடும் இடத்து,

அம்பொன் வார்குழல் கொடிச்சியர் உடன்அர மகளிர்
வம்பு லாமலர்ச் சுனைபடிந் தாடுநீள் வரைப்பின்
உம்பர் நாயகர் திருக்கழுக் குன்றமும் உடைத்தால்
கொம்பர் வண்டுசூழ் குறிஞ்சிசெய் தவம்குறை உளதோ

என்று குறிஞ்சி நிலத்துக் கோயிலையும்,

நீறு சேர்திரு மேனியர் நிலாத்திகழ் முடிமேல்
மாறில் கங்கைதான் அவர்க்குமஞ் சனந்தர மகிழ்ந்தே
ஊறுநீர்தரும் ஒளிமலர்க் கலிகைமா நகரை
வேறு தன்பெரு வைப்பென விளக்குமா முல்லை

என்று முல்லை நிலத்துக் கோயிலையும், (கலிகைமாநகர்-தக் கோலம் என்னும் திருவூறல் திருக்கோயில்)

அருவி தந்தசெம் மணிகளும் புறவில்ஆய் மலரும்
பருமி ஓடைகள் நிறைந்திழி பாலியின் கரையின்
மருவு கங்கைவாழ் சடையவர் மகிழ்ந்தமாற் பேறும்
பொருவில் கோயிலும் சூழ்ந்த பூம்பணை மருதம்

என்று மருத நிலத்துக் கோயிலையும்,

மெய்த ரும்புகழ்த் திருமயி லாபுரி விரைசூழ்
மொய்த யங்குதண் பொழில்திரு வான்மியூர் முதலாப்
பைத ரும்பணி அணிந்தவர் பதியெனப் பலவால்
நெய்தல் எய்தமுன் செய்தஅந் நிறைதவம் சிறிதோ

என்று நெய்தல் நிலத்துக் கோயிலையும் பாடிக் காட்டி இருத்தல் காண்க. இப்படி ஏனைய புலவர்கள் பாடிக் காட்டுவர். இவ்வைந்திணைகட்குரிய முப்பொருள்கள் ஆவன முதற் பொருள், கருப் பொருள், உரிப்பொருள் என்பன. இவை இன்னின்ன என முன்பே விளக்கப் பட்டன. விளக்கத்தினை ஆண்டுக் காணவும்.

"அங்கண் முல்லையின் தெய்வம்என்று அருந்தமிழ் [உரைக்கும்
செங்கண்மால்"

என முதற் பொருளையும்,

"வியல்அளக்கரில் விடும்திமில் வாழ்நர்கள் கொணர்ந்த
கயல்அளப்பன பரத்தையர் கருநெடுங் கண்கள்"

எனக் கருப் பொருளையும்,

மென்பூஞ் சயனத் திடைத்துயிலும்
மேவார் விழித்தும் இனிதமரார்
பொன்பூந் தவிசின் மிசையினிரார்
நில்லார் செல்லார் புறம்பொழியார்
மன்பூ வாளி மழைகழியார்
மறவார் நினையார் வாய்விள்ளார்
எண்பூ டுருக்கும் புலவியோ
பிரிவோ இரண்டின் இடைப்பட்டார்

என உரிப் பொருள்களையும் பாடிக் காட்டினர். இவை யனைத்தையும் நம்மனோர் அறிய ஆசிரியர் ஈண்டு "படியிடை** கற்பித்தவ"ரென்று சுட்டிக் காட்டினர்.

சேக்கிழார் பெருமானார் கண்ணீர் வடிய வடியக் கவி பாடவல்லார் என்பதை,

" களியா னையின்ஈர் உரியாய் சிவதா
எளியார் வலியாம் இறைவா சிவதா
அளியார் அடியார் அறிவே சிவதா
தெளிவார் அமுதே சிவதா சிவதா"

என்றும்,

நஞ்சே சரணம் புகுதும் தமியோர்
நெஞ்சேய் துயரம் கெடநேர் தொடரும்
மஞ்சே எனவீழ் மறலிக் கிறைநீள்
செஞ்சே வடியாய் சிவதா சிவதா

என்றும்,

அடியாராம் இமையவர்தம் கூட்டம் உய்ய
அலைகடல்வாய் நஞ்சுண்ட அமுதே செங்கண்
நெடியானும் நான்முகனும் காணாக் கோல
நீலவிட அரவணிந்த நிமலா வெந்து
பொடியான காமனுயிர் இரதி வேண்டப்
புரிந்தளித்த புண்ணியனே பொங்கர் வாசக்
கடியாரும் மலர்ச்சோலை மருங்கு சூழும்
கவின்மருகல் பெருமானே காவாய் என்றும்.

வந்தடைந்த சிறுமறையோன் உயிர்மேல் சீறி
வருங்காலன் பெருங்கால வலயம் போலும்
செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரிய கோலம்
சிதைந்துருள உதைத்தருளும் செய்ய தாளா
இந்தவிடக் கொடுவேகம் நீங்கு மாறும்
யான்இடுக்கண் குழிநின்றும் ஏறு மாறும்
அந்திமதிக் குழவிவளர் செய்ய வேணி
அணிமருகல் பெருமானே அருளாய் என்றும்

பாடுமாற்றால் அறியலாம்.

இருபத்துநான்கு கோட்டங்கள், புழல் கோட்டம், ஈக்காட்டுக் கோட்டம், மணவூர்க்கோட்டம், செங்காட்டுக்

கோட்டம், பையூர்க் கோட்டம். எயில் கோட்டம், தாமல் கோட்டம், ஊற்றுக்காட்டுக் கோட்டம், களத்தூர்க் கோட்டம், செம்பூர்க் கோட்டம், ஆம்பூர்க் கோட்டம் வெண்குன்றக் கோட்டம், பல்குன்றக் கோட்டம், இலங் காட்டுக் கோட்டம், கலியூர்க் கோட்டம், செங்கரைக் கோட்டம், படுவூர்க் கோட்டம், குடிகூர்க் கோட்டம். குன்றவட்ட கோட்டம், வேங்கடக் கோட்டம், வேலூர்க் கோட்டம், சேத்தூர்க் கோட்டம், புலியூர்க் கோட்டம் என்பன. இப்புலியூர்க் கோட்டத்தைச் சேர்ந்தவர் சேக் கிழார். கோட்டம் என்பது நிலப் பிரிவில் ஒரு பகுதிக்கும், கோணலுக்கும் பொருளாகும் சொல்லாதலின், ஆசிரியர் அழகுபடுத்திக் கூறும் முறையில் சேக்கிழாரை நோக்கி, நீர் புலியூர்க் கோடடம் தவிர்த்து வேறு கோட்டம், (கோணல் இல்லாதவர் என்பதை ஒரு கோட்டமும் உறல் இல்லாய்'' என்றனர். நாட்டில் குடிகள் செறிந்துவாழ வேண்டும்) என்பர் வள்ளுவரும்.

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு

என்று கூறிச் சென்றார். இந்தப் பண்பு குன்றத்தூரில் உண்டு என்பார் ''குடிகள் நெருங்கும் குன்றத்தூரன்'' என்றனர். "தாழ்வில் திருவினர் தக்கோர் சாலச் செறிந்தது தொண்டைநாடு'' என்று தணிகைப் புராணம் கூறுகிறது.

இருபுனல் வாய்ந்த மலைவரு புனலும்
இடவிய நகர்களும் உடைத்தாய்ப்
பெருகளப் பொருளும் ஒழிவற விளக்கும்
பெருங்குடி களும்கலம் காலால்
பொருள்பல ஈட்டம் செல்வரும் மறையோர்
புரைஅறு தவத்தினர் துறவோர்
மருளறு கலைஞர் ஆதியோர் பலரும்
மன்னிவாழ்ந் திருப்பது நாடு

என்று விநாயக புராணம் கூறுதலையும் காண்க. (39)

9. நாடிய விரிநூல் சொற்றிடும் திறனல்
நல்நூல் ஆசிரியன்
நகுபா சுரம்முதல் உரைசெய் தலினல்
நவில்உரை ஆசிரியன்
நீடிய பரசம யக்குழி வீழ்ந்தவர்
நீப்பப் போதனைசெய்
நிலையால் போத காசிரி யன்இவை
நிகழ்தோறும் நிகழ்தோறும்
ஆடிய ஞானத் திறன்உற லால்ஞா
னசிரி யனும்நீஎன்
ருன்ருேர் பலரும் புகழப் படுபவ
அகிலம் எலாம்சென்று
கூடிய புகழ்சால் குன்றத் தூரன்
கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல
கொட்டுக சப்பாணி

*[அ. சொ.] நாடிய-தேடிய, சொற்றிடும்-பாடிடும் திறன்-வன்மை, நகு-விளங்கும், பாசுரம்-திருஞான சம்பந்தரது பாசுரப் பதிகம், நவில்-கூறப்படும், நீப்ப-நீங்க, ஆன்ருேர்-பெரியோர், அகிலம்-உலகம், சால்-மிகுந்த.*

**விளக்கம் :** *பெரிய புராணத்திற்குப் பெருந் துணை செய்த நூல்கள் தேவாரமும் ஏனைதிரு முறைகளும், கல்வெட்டுக்களும், செப்புப் பட்டயங்களும் வரலாறுகளும் ஏனைய துணைக் கருவிகளும் என்ருலும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்த திருத்தொண்டத் தொகையும் நம்பியாண்டார் நம்பிகள் செய்தருளிய திருத்தொண்டர் திருவந்தாதியுமே அடிப்படை நூல்களாகும், இதனை நம் சேக்கிழார் பெருமானரே,*

*மற்றி தற்குப் பதிகம்வன் தொண்டர்தாம்*
*புற்றி டத்தெம் புராணர் அருளினல்*

சொற்ற மெய்த்திருத் தொண்டர் தொகைஎனப்
பெற்ற நற்பதி கம்தொழப் பெற்றதாம்

அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை
நந்த நாதனும் நம்பிஆண் டார்நம்பி
புந்தி ஆரப் புகன்ற வகையினால்
வந்த வாறு வழாமல் இயம்புவாம்

என்று குறிப்பிட்டுள்ளார். இங்ஙனம் குறிப்பிட்டதனால் திருத் தொண்டத் தொகை, தொகை நூலாகவும், திருத் தொண்டர் திருவந்தாதி வகை நூலாகவும், பெரிய புராணம் விரி நூலாகவும் அமைதலைக் காணலாம். இம்முறையில் நூல்கள் செய்யப்படுதலைத் தொகுத்தல், விரித்தல், தொகை விரி, மொழி பெயர்த்து அதர்ப்பட யாத்தலோடு அனைமரபினவே" எனத் தொல்காப்பியச் சூத்திரத்தாலும் தெளியலாம். எனவே, பெரிய புராணம் விரி நூல்வகையைச் சார்ந்ததாயிற்று. இவ்வாறு சேக்கிழார் பெரிய புராணத்தைப் பாடியதால் இவர் சிறந்த விரி நூல் செய்த நன்னூலாசிரியர் ஆயினர்.

பெரிய புராணத்துள் பாயிரப் பகுதியும், பதின்மூன்று சருக்கங்களும், இச்சருக்கங்களில் அடங்கிய அறுபத்துமூன்று தனி அடியார்களின் புராணங்களும், ஒன்பது தொகை அடியார்களின் புராணங்களும் திருக் கூட்டச் சிறப்பு, திரு நகரச் சிறப்பு, திருநாட்டுச் சிறப்பு, திருமலைச் சிறப்பு ஆகிய வைகளும் இவற்றிற்குரிய நாலாயிரத்து இருநூற்று எண்பத்தாறு பாடல்களும் இருத்தலின் இது விரிநூல்தானே?

சேக்கிழார் பெருமானார் விரிநூல் செய்ததை வியந்து உமாபதி சிவாசாரியரும்,

தில்லைவாழ் அந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாம் திருத்தொண்டர் தொகையடியார்
பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர் சேக்கிழார் அடிபோற்றி

என்று பாடிப் பரவினர்.

பெரிய புராணத்தில் உபதேச முறையில் அமைந்த கவிகள்பல உள்ளன. அவை உயிர்களைப் பற்றியுள்ள பல பந்தங்களை நீக்கவல்லன.

ஊன டைந்த உடம்பின் பிறவியே
தான டைந்த உறுதியைச் சாருமால்
தேன டைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மாநா டம்செய் வரதர்பொற் றாள்தொழ

என்பது உயிர்களைப் பற்றிய மலத்தை நீக்கச் செய்யும் உபதேசம் ஆகும். இவ்வாறே அன்றி அடியாரின் சரித்திர வாயிலாகஉபதேசித்த உபதேசங்கள் பலவாகும். அவற்றுள் ஒன்று,

கொண்டு வந்து மனைப்புகுந்து
குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலின் ஆத னத்திடை
வைத்த ருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தில் ஆறு
சுவைத்தி றத்தினில் ஒப்பிலா
அண்டர் நாயகர் தொண்டர் இச்சையில்
அமுது செய்ய அளித்துளார்

என்பது இல்லறத்தார்க்கு ஏற்ற உபதேசம் அன்றோ?

மாநிலம்கா வலன்ஆவான் மன்னுயிர் காக்கும்காலை
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைதிறத்தால் கள்வரால் உயிர்கள் தம்மால்
ஆனபயம் ஐந்தும் தீர்த்துஅறம் காப்பான் அல்லனோ

என்பது அரசர்கட்கு ஏற்ற உபதேசம் மொழிகள் அல்லவோ? ஆகவே, சேக்கிழார் பெருமானார் போதகாசிரியர் ஆகின்றார். முன்பும் இவரது உபதேச மொழிகள் காட்டப் பட்டுள்ளன. ஆண்டும் காண்க.

திருஞானசம்பந்தர் சமணர்களுடன் சமய வாதம் புரிகையில் புனல் வாதமும் புரிந்தருளினர். அப்போது "வாழ்க அந்தணர்" என்று தொடங்கும் திருப்பாடல் முதல் "நல்லார்கள்" என்று தொடங்கும் இறுதிப் பாடல் உள்பட பன்னிரண்டு திருப்பாடல்களைப் பாடி அருளினர்.

இப்பாடல்களில் அடங்கிய அரிய சீரிய பொருள்களைச் சீரிய முறையில் விரித்துக் காட்டியுள்ளார் சேக்கிழார் பெருமானர். அவற்றுள்,

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்,
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே,
சூழ்க வையக மும்துயர் தீர்கவே

என்னும் பாடற்கு,

அந்தணர் தேவர்ஆன் இனங்கள் வாழ்களன்று
இந்தமெய்ம் மொழிப்பயன் உலகம் இன்புறச்
சந்தவேள் விகள்முதல் சங்க ரர்க்குமுன்
வந்தஅர்ச் சனைவழி பாடு மன்னவாம்

ஆழ்க தியதென் றோதிற் றயல்நெறி
வீழ்க என்றது வேறெல்லாம் அரன்பெயர்
சூழ்க என்றது தொல்லுயிர் யாவையும்
வாழி அஞ்செழுத்து ஓதி வளர்கவே

வேள்வி நற்பயன் வீழ்புனல் ஆவது
நாளும் அர்ச்சனை நல்லுறுப் பாதலால்
ஆளும் மன்னனை வாழ்த்திய தர்ச்சனை
மூளும் மற்றிவை காக்கும் முறைமயால்

சொன்ன வையக முந்துயர் தீர்கவே
என்னும் நீர்மை இகபரத் தில்துயர்
மன்னி வாழுல கத்தவர் மாற்றிட
முன்னர் ஞானசம் பந்தர் மொழிந்தனர்

என்று உரைகூறி விளக்கினர்.

இவ்வாறு 'வாழ்க அந்தணர்' என்னும் ஒரு பாடலுக்கு விளக்க உரை கூறிச் சென்றனர். இம் முறைப்படியே ஏனைய பதினேரு பாடல்கட்டும் விளக்க உரை தந்துள்ளமையின் இவரை ஆசிரியர் "நகுபாசுர முதல் உரை செய்தலினல் நல்ல உரை ஆசிரியர்" என்றனர்.

திருப் பாசுரப் பதிகம் பன்னிரண்டு பாடல்களைக் கொண்டது. இப் பன்னிரு பாடல்கட்குச் சேக்கிழார்

இருபத்துமூன்று பாடல்களைத் தாம் பாடி விளக்கம் உணர்த்தியுள்ளார். அவ்வுரை விளக்கம் திரு ஞான சம்பந்தரது உள்ளக் குறிப்பை அறிந்து உரைக்கப் பட்டது. அங்ஙனம் இருந்தும் சேக்கிழார் தம் அடக்கப் பண்புக்கு ஏற்ப,

வெறியார் பொழில்சண் பையர் வேந்தர் மெய்ப்பா
சுரத்தைக்
குறிஏ றியஎல்லை அறிந்துகும் பிட்டேன் அல்லேன்
சிறியேன் அறிவுக் கவர்தம்திருப் பாதம் தந்த
நெறியே சிறியான் அறிநீர்மைகும் பிட்டேன் அன்பால்

என்று அருளிச் செய்வாராணல், அவர் தம் பெருமையினை எவ்வாறு எடுத்து இயம்புவது!

சேக்கிழார் பெருமானார் வாக்கில் கருத்தில் ஞானத்திறன் மிகுதியாக உண்டு. "அருமறை முதலில் நடுவினில் கடையில் அன்பர் தம் சிந்தையில் அலர்ந்த திருவளர் ஒளி சூழ் திருச்சிற்றம்பலம்" என்ற இடத்து இவரது வேதாகம சாஸ்திர ஞானக் குறிப்பும்,

முந்தை மறைநூல் மரபின் மொழிந்தமுறை எழுந்துவேய்
அந்தமுதல் நாலிரண்டில் அரிந்துநரப் புறுதானம்
வந்ததுளை நிரைஆக்கி வாயமுதல் வழங்குதுளை
அந்தமில்சீர் இடையீட்டின் அங்குலிஎண் களின்அமைத்து

என்ற இடத்து இவர் தம் இசை ஞானத்தையும்,

அருக்கன்முதல் கோளனைத்தும் அழகியஉச் சங்களிலே
பெருக்கவலி யுடன்நிற்கப் பேணியநல் ஓரைஎழத்
திருக்கிளரும் ஆதிரைநாள் திசைவிளங்கப் பரசமயத்
தருக்கொழியச் சைவமுதல் வைதிகமும் தழைத்தோங்க

என்று பாடிய இடத்து இன்னார்தம் ஜோதிட நூல் ஞானத்தையும்,

இருநிலத்தின் மீசைதோய்ந்த எழுதரிய திருவடியும்
திருவடியில் திருப்பஞ்ச முத்திரையும் திகழ்ந்திலங்க

(பஞ்சமுத்திரை-பத்மம், சங்கம், மகரம்), சக்கரம், தண்டம் ஆகிய பஞ்ச ரேகைகள்) என்ற இடத்து இவர் தம் ரேகை சாஸ்திர ஞானத்தையும்.

அடிமுதல் உபானம் ஆதி ஆகிய படைகள் எல்லாம்
வடுவுறும் தொழில்கள் முற்ற மனத்தினுல் வகுத்து மான
முடிவுறு சிகரம் தானும் முன்னிய முழத்தில் கொண்டு
நெடிது நாள் கூடக் கோயில் நிரம்பிட நினைவால் செய்
தார்

என்ற இடத்து இவரது கோயில் கட்டட நூல் ஞானத்தையும் உணரலாம்.

திருஞான சம்பந்தர் தாம்பாடிய பதிகங்களில் ஒரு போக்கைச் சிறப்பு முறையில் கைக் கொண்டுள்ளார். அதாவது, ஒவ்வொரு பதிகத்தின் எட்டாவது பாட்டில், இராவணனது செருக்கை இறைவன் அடக்கியதையும், ஒன்பதாவது பாடலில், அயனும் அரியும் ஆகிய இருவரும் இறைவனது திருமுடி, திருவடிகளைக் காண இயலாது விழித்ததையும், பத்தாவது பாடலில், சமண பௌத்த சமயங்களின் போக்கையும் இழிவையும் எடுத்துக் கூறுவதையும், மேற்கொண்ட போக்காகும்.

இவ்வாறே அப்பர் பெருமானும், தாம் பாடிய ஒவ்வொரு பதிகத்தின் ஈற்றிலும் இராவணன் கைலை மலையைத் தூக்க முயன்று துன்புற்றதையும் குறிப்பிட்டுள்ளார். (சிற்சில பதிகங்களில் இப்போக்கு இல்லை என்றாலும், பெரிதும், குறிப்பிட்டுப் பேசிய பதிகங்களே உள.)

இங்ஙனம் இவ்விரு சைவ சமைய ஆசிரியர்கள் இம்முறையினை ஏன் பின்பற்றினர் என்பதை நம் சேக்கிழார் பெருமானார் தமது ஞான உணர்வினால் உணர்ந்து, அதற்குப் பின் வரும் காரணங்களைக் காட்டினார்.

மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையின்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட
எண்ணமிலா வல்லரக்கன் எடுத்துமுறிந் திசைபாட
அண்ணல்அவற் கருள்புரிந்த ஆக்கப்பா டருள்செய்தார்

தொழுவார்கே அருளுவது சிவபெருமான் எனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
இழிவாகும் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை
விழுவார்கள் அஞ்செழுத்தும் துதித்துய்ந்த படிவிரித்தார்

வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதன்நெறி அறிந்துய்யார் தம்மிலே நலம்கொள்ளுந்
போதம்இலாச் சமண்கையர் புத்தர்வழி பழிஆக்கும்
ஏதமே எனமொழிந்தார் எங்கள்பிரான் சம்பந்தர்

எனக்கூறி ஆளுடைய, பிள்ளையாரின் போக்கிற்குரிய காரணங்களையும்,

இத்தன்மை நிகழ்ந்துழி நாவின்மொழிக்
  கிறையாகிய அன்பரும் இந்நெடுநாள்
சித்தந்திகழ் தீவினை யேன்அடையும்
  திருவோஇது என்றுதெருண் டறியா
அத்தன்மையன் ஆய இராவணனுக்
  அருளும் கருணைத்திற மானஅதன்
மெய்த்தன்மை அறிந்து துதிப்பதுவே
  மேல்கொண்டு வணங்கினர் மெய்யுறவே

எனக்கூறி ஆளுடைய அரசு அவர்களின் முறைக்குரிய காரணத்தையும் மொழிந்தருளினர். இவ்வாறெல்லாம் எடுத்து இறம்புதற்கு இவர் ஞானம் கைவரப் பெற்றிலர் எனில், எடுத்து இயம்ப ஒண்ணுமோ? ஒருகாலும் இயலாது.

அப்பர் பெருமானூர், அப்பூதி அடிகளார் தண்ணீர்ப் பந்தரிடை இருந்தவரை நோக்கி 'எவ்விடத்தார்' என்று வினவியபோது, வினவுவார் உள்ளக் கிடக்கையினை உணர்ந்து உடனே,

துன்றியநூல் மார்பரும்இத் தொல்பதியார் மனையின்கண்
சென்றனர்இப் பொழு ததுவும் சேய்த்தன்று நணித்
தென்றூர்

என அப்பருக்கு வேண்டிய குறிப்புக்கள் அனைத்தையும் ஒரு வினாவிற்கு விடையாகக் கூறியதைக் காணுமிடத்து, இவர்

*தம் மனோதத்துவ சாத்திர ஞானத்தை-உளநூல் அறிவை-அறியலாம். இன்னோரன்ன காரணங்களினால் இவர் ஞானாசிரியராயினர். பெரிய புராணத்தில் உபதேச முறையில் பல பாக்களைப் பாடி இருத்தலின் இவர் ஞானாசிரியராகத் திகழ்கின்றனர் என்றாலும் பொருந்தும்.*

*சேக்கிழார் பிறந்தருளிய காரணத்தால் குன்றத்தூர் அகிலம் எல்லாம் புகழும் பெருமை பெற்றது என்பதை ஆசிரியர் இறுதியில் குறிப்பிட்டுள்ளனர்.* (40)

**10.** நிலவிய நாகே சுரரினி தமர்தலின்
நிகழ்நா கேசுரமாய்
நீல்மணி மாடம் நிலாவலின் இந்திர
நீல பருப்பதமாய்க்
கலவிய செம்மணி மாடத் தால்ஒளி
கால்அர தனகிரியாய்க்
கருடப் பச்சை யில்ஆலியா வோரும்
காண்மர கதமலையா
உலவிய வெண்சுதை தீற்றும் இலால்ஓங்
கொருகை லைக்கிரியாய்
உத்தமம் ஆர்பல ஏதுவி னால்இனும்
உரைதரு பற்பலவாய்க்
குலவிய வளமார் குன்றத்தூரன்
கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல
கொட்டுக சப்பாணி

**(அ. சொ.)** *நிலவிய-விளங்கிய, பொருந்திய, நாகேசரம்-திருநாகேஸ்வரம் என்னும் ஆலயம், நீல்மணி-நீலமணி, மாடம்-மாளிகை, திருப்பதி, இந்திர நீலப்பருப்பதம்-இந்திர நீலப் பருப்பதம் என்னும் தலம், கால-வீச, அரதன*

கிரி-இரத்தினகிரி, வாட்போக்கி, ஆலியாவோர் - கண்ணீர் சிந்தும் அன்பர்யாவரும், மரகதமலை-திருஈங்கோய்மலை, சுதை-சுண்ணும்பு, தீற்றும்-பூசும், இலால்-வீடுகளால், ஒரு-ஒப்பற்ற, உத்தமம்-சிறப்பு, ஆர்-பொருந்திய, ஏதுவினுல்-காரணத்தால், இனும்-மேலும், குலவிய-விளங்கிய. உலாவிய-சூழஇருந்த

**விளக்கம்:** இப்பாடல் குன்றத்தூர் பல தலங்களின் சிறப்புக்களைப் பெற்றிருத்தலின், அவ்வத்தலங்கள்போல் விளங்குகின்றது என்பதை அழகுற எடுத்துக் காட்டுகிறது. சேக்கிழார் பெருமாணுர் சோழ நாட்டில் உள்ள திருநாகேசுரத் தலத்தின்மீது அளவு கடந்த பற்றுக் கொண்டிருந்த காரணத்தால், தம் ஊராகிய குன்றத்தூரில ஒரு கோயில் அமைத்து, அதைச் சுற்றித் திருமடவளாகமும் அமைத்துத் திருநாகேசுரம் என்று பெயர் இட்டு இங்கேயே வ்ழிபட்டு வந்தனர். அந்தக் கோயிலை இன்றும் குன்றத்தூரில் காணலாம். சோழ நாட்டுத் திருநாகேசுரம் குன்றத்தூரில் துலங்கலின், "நிகழ் நாகேசுரமாய்" என்றனர். இத்தலத்து இறைவர் திருப்பெயர் நாகேசுரர் என்பது. தேவியார் மரகத வல்லி அம்மையார் திருநாகேச்சுரம் இரயில்வே ஸ்டேஷன் உண்டு. அங்கிருந்து முக்கால் மைலில் இத்தலம் உளது.

இந்திர நீலப்பருபதம் என்பது தேவாரம் பெற்ற வட நாட்டுத் தலங்களுள் ஒன்று. ஆனுல், இத்தலத்தை அடைதற்குரிய வழிவகைகளை அறிதற்கு இல்லை. எப்போதும் மேகங்கள் கவிந்து நீல நிறமாகத் தோற்றம் அளித்தலின், இப்பெயர் பெற்றது. இதுபோல நீலநிற மாளிகைகள் குன்றத்தூரில் இருத்தலின், குன்றத்தூர் இந்திர நீலப் பருப்பது போன்றது எனப்பட்டது.

ரத்னகிரி என்பது திருவாட்போக்கி என்னும் பெயரிய தலமாகும். இது குழித்தலை ஸ்டேஷனில் இருந்து ஆறரை மைலில் உளது. செம்மணி மாடங்கள் குன்றத்தூரில் இருத்தலின், அது ரத்னகிரி போன்று விளங்கியது எனப்பட்டது.

மரகதமலை என்பது திருவீங்கோய் மலைத்தலமாகும். இதனைத் திருவிங்கநாதமலை என்றும் கூறுவர். குழித்தலை ஸ்டேஷனிலிருந்து வடக்கேயுள்ள அகண்ட காவிரியைக் கடந்து முசிறியை அடைந்து அங்கிருந்து மூன்று மைல் சென்றால், அதனை அடையலாம். கருடப்பச்சை ஒளியுடன் குன்றத்தூர் விளங்கலின், அது மரகதமலையாம் திருவீங்கோய் மலைத்தலம்போல் விளங்குகிறது.

கைலயங்கிரி என்பது வெள்ளிமலை. இது நொடித்தான் மலை என்றும் கூறப்படும். கைலங்கிரி வெள்ளை வெளேறென இருக்கின்றது என்பதைச் சேக்கிழார்,

நாய கன்கழல் சேவிக்க நான்முகன்
மேய காலம் இலாமையின் மீண்டவன்
தூய மால்வரைச் சோதியில் மூழ்கியொளின்
றூய அன்னம் காணு தயர்க்குமால்

என்று கூறுவது கொண்டு உணரலாம்.

முத்தங்களைப் பற்றிய சிறப்புக் குறிப்புகள்-

திருநாகேச்சுரம் என்பது திருநாகேச்சுவரம் இரயில் அடிக்குத் தெற்கே முக்கால் கல் தொலைவில் உள்ளது. இதனைச் சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவரும், பாடியுள்ளனர். ஆறு பதிகங்கள் இப்பதிக்கு உண்டு. நாகராசனும் ஆதிசேடனும் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றது. சூரியன், சந்திரனும் பூசித்துள்ளனர். இதனை நாயிறும் திங்களும் கூடி வந்தாடு நாகேச்சுரம்'' என்று சம்பந்தர் பாடலும் அறிவிக்கிறது. இத்தலம் சண்பகாரண்யம் எனவும் வழங்கப் பெறும். இறைவர் சண்பகாரண்யர், இறைவியார் குன்றமுலை நாயகியார். ஈண்டுள தீர்த்தம் சூரிய புஷ்கரணி. பெரிய கோயில். நாற்புறமும் கோபுரத்தைக் கொண்டது. இங்குச் சங்கநிதி, பதுமநிதி, விக்கிரங்களைக் காணலாம். சுந்தரர் பரவையாருடன் காட்சி அளிக்கிறார். சேக்கிழார் பெருமானார்க்கு ஆன்மார்த்த தலமாகும். இது குறித்தே குன்றத்தூரில் இப்பெருமனார் ஒரு தலத்தையும் நிறுவினர்.

திருஇந்திர நீலப் பருப்பதம் வடநாட்டுத் தலங்களில் ஒன்று. ஞானசம்பந்தரால் பாடப்பட்டது. இதற்கு ஒரே பதிகம் உளது. மேகம்தவழ்ந்த வண்ணமாகக் காட்சி அளித்தலின் இஃது இந்திர நீலப் பருப்பதம் என்ற பெயரினைப் பெற்றது. இந்திரனால் பூசிக்கப்பட்டுள்ளது. இதனைச் சம்பந்தர் இந்திரன் கைதொழு நீல் பருப்பதம் என்று குறிப்பிட்டுள்ளனர். இத்தலம் திருக்கேதாரம் போகும் வழியில் உள்ளது என்பர். இறைவர் நீலாசலநாதர் எனவும், இறைவியார் நீலாம்பிகை எனவும் கூறப் பெறுவர். அர்ச்சுனன் தவம் செய்த இடம்; இறைவனிடம் பாசுபதாஸ்திரம் பெற்ற இடம். மூகாசூரன் மடிந்த இடமும் இதுவே.

இரத்தினகிரி என்பது தேவாரத்தில் வாட் போக்கி என்று குறிக்கப்பட்டுள்ளது. "ஆலநீழல் அமர்ந்த வாட் போக்கியார் அரக்கனுக்கருள் செய்த வாட் போக்கியார்" என்ற திருநாவுக்கரசர் திருவாக்கைக் காண்க. மாணிக்கத்தை விரும்பி வடநாட்டு மன்னன் இங்கு வந்தனன். அவனுக்கு இறைவர் ஒரு நீர்த் தொட்டியைக் காட்டி, அதில் காவிரி நீரை நிரப்பும்படி கட்டளை இட்டனர். மன்னன் பெரிதும் முயன்றும், அவனால் அவ்வாறு செய்ய இயலாமல் போயிற்று. அதனால் சினம் கொண்ட மன்னன் இறைவன் மீது தன் வாளை வீசினான். இத்தழும்பு சிவலிங்கத்தில் இன்றும் இருப்பதைக் காணலாம். இறைவன் அவ்வாளைப் போக்கி இரத்தினம் அளித்தனன். இக் காரணங்களால் வாட் போக்கி எனவும், இரத்தினகிரி எனவும் பெயர் பெற்று இம்மலை திகழ்கிறது. அரசன் உலகை வெறுத்து அங்கேயே தொண்டு செய்து முத்தி பெற்றனன். இங்கு இந்திரன் சயந்தன், சூரியன், வாயு, சேடன், அகத்தியர் ஆதியோர் பூசித்துப் பேறு பெற்றனர். கோவில் மலை மீது உளது. இறைவர் ரத்னகிரிநாதர் எனவும், தேவியார் சுரும்பார் குழலி அம்மை என்றும், பெயர் பெற்றுள்ளனர். காவிரியே இதற்குத் தீர்த்தம். அப்பர் பெருமானார் பாடிய

பதிகம் ஒன்றே உளது. குழித்தலை இரயிலடியிலிருந்து தெற்கே மட்சாலை வழி ஆறரைகல் கடந்தால் இத் தலத்தை அடையலாம், இம் மலையைக் காகம் அணுகாதாம். பன்னிரண்டு வருடத்திற்கு ஒரு முறை இடி பூசை நடந்து வருகிறது. அகத்தியர் நடுப் பகலில் இறைவரைப் பூசித்து இறைவரின் காட்சியைக் கண்டனர். ஆதலில், நடுப் பகலில் இங்குச் சென்று வணங்கல் சிறந்தது. இத்தரிசன விசேடத்தால் மாத்தியான சுந்தரர் என்ற பெயரையும் இறைவர் கொண்டுள்ளனர். இந்திரனால் உண்டாக்கப்பட்ட வேப்ப மரம் ஒன்று இங்குளது. அதனைத் தரிசித்தலும் சிறப்பாகும். வீரவாகு தேவர் இங்கு வீரப்பெருமாள் என்ற பெயருடன் துலங்குகின்றார்.

திருவீங்கோய் மலை என்பது இப்போது திருவிங்கநாத மலை என வழங்கப்பட்டு வருகிறது. அகத்தியர் ஈவடிவாய் இத்தலத்து இறைவரைப் பூசித்தனர். இறைவர் மரக தாசலர் ஆதலின், இம்மலை மரகத மலை எனவும்படும். இறைவியார் மரகதவல்லியார். காவிரியின் தென்கரையிலுள்ள கடம்பந்துறையைக் காலையிலும், திருவாட்போக்கியை மத்தியானத்திலும் இத்தலத்தை மாலையிலும் ஒரே நாளில் தரிசித்தால் பெரும் பேறு உண்டாகும். இது குறித்தே "காலைக் கடம்பர், மத்தியானச் சொக்கர், மாலைத் திருவிங்கநாதர்" என்ற பழமொழியும் வழக்கத்தில் உள்ளது. இத்தலத்தைக் குழித்தலை இரயில் அடியிலிருந்து வடக்கே அகண்ட காவிரியைக் கடந்து, இரண்டு கல்லில் இருக்கும் முசிரியையும் தாண்டி, 'மேற்கே கல் சாலையினை மூன்று கல் நடந்தால் அடையலாம். இதற்குத் திருஞான சம்பந்தர் பாடிய பதிகம் ஒன்றே உளது. சங்ககால நக்கீரர் திருவீங்கோய் மலை எழுபது என்னும் நூலைப் பாடியுள்ளனர். இத்தலத்தின் இறைவர் மாண்பு, திருஈங்கோய் மலை இயற்கைவளம் முதலியவற்றை அடியேன் அந்நூலுக்கு எழுதியுள்ள உரை விளக்கத்தில் பரக்கக் காணலாம். கார்த்திகை சோமவார தரிசனம் இத்தலத்திலும், மேலே குறிப்பிடப்பட்ட இரு தலங்களிலும் செய்தல் விசேடமாகும்.

கைலயங்கிரி திருநொடித்தான் மலை என்னும் பெயர் பெறும். இதனை மூவர் முதலிகளும் பாடியுள்ளனர். இதற் குரிய பதிகங்கள் ஏழு. இறைவன் பரமசிவன் என்றும் இறைவி பார்வதியம்மை என்றும் பெயர் பெறுவர். இறை வர் சங்காரக் கடவுளும் ஆதலின் அவர் வீற்றிருக்கும் மலை நொடித்தான் மலை என்ற பெயரினைப் பெற்றுள்ளது. இது, வடநாட்டில் இமயமலையில் இருப்பது. சேர்தற்கரிதான் தலம். என்றாலும், இதுபோது திகழும் திருத்தருமை ஆதீனம் குரு மகாசந்நிதானம் கைலை தரிசனம் செய்து வந்தவர். இந்த அருமை பெருமை காரணமாக ஸ்ரீலஸ்ரீ கைலை சுப்ரமண்ய தேசிகஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் என்றே அன்பர் களால் போற்றப்பட்டு வருகின்றார். கைய யாத்திரை என்ற நூலும் தருமை ஆதீனத்தாரால் வெளியிடப் பட்டுள்ளது.

மேலும், சில குறிப்புக்களை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தா ரால் வெளியிடப்பட்ட ஸ்ரீ கயிலாலயம் என்னும் நூலில் காணலாம். இத்தலத்தைக் காண முயலும் முயற்சியினை ஆணி, ஆடி, ஆவணி மாதங்களில் மேற்கொள்ளுதல் நலம்.

குன்றத்தூர் மேலும் பல சிறப்புக்களைப் பெற்றமை யினாலும், வளம் பல உடையமையினாலும், சிறப்பும் பெற் றுள்ளமையினாலும் திரு பிள்ளை அவர்கள், உத்தமமார் பல ஏதுவினால் இனும் உரைதரு பற்பலவாய்க் குலவிய வளமார் குன்றத்தூர்'' என்றனர்.

வேளாளர்கள் பெருந் தொண்டர்கள். . இதுகுறித்தே அப்பர் பெருமானார் தம் திருவாக்கில் ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்றருளினார். ஆகவே, இவர்கள் சேவையர் எனப்பட்டனர். மேலும், வேளாளர்கள் தம் தொண்டின் காரணமாக எதிலும் பெரும் வெற்றியே கண்டு வருபவர்கள். இதனைப் பல சான்றுகளைக் கொண்டு நிறுவலாம். சங்க காலத்துச் சான்றுகள் காட்டினாலே இக் கருத்தை நிலைநாட்டப் போதுமானதாகும்.

ஒரு முறை சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் மலையமான் மக்களை யானைக்கிடுவுழிக் கோவூர்கிழார் மன்னனை அடைந்து,

களிறுகண் டழூஉம் அழாஅல் மறந்த
புன்தலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி
விருந்தில் புன்கண்நோ உடையர்
கேட்டனை ஆயின் வேட்டது செய்ம்மே

என்று பாடி அவர்கள் உய்யச் செய்தனர்.

மற்றொரு முறை சோழன் நலம் கிள்ளி உழைநின்று, உறையூர் புகுந்த இளந்தத்தர் என்னும் புலவரைக் காரி யாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தார் என்று அவரை கொல்லப் புக்குழிக் கோவூர்கிழார்,

பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
ஓம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதுஅறிந் தன்றோ இன்றே திறம்பட
நண்ணார் நாண அண்ணாந் தேகி
ஆங்கினி தொழுகின் அல்ல தோங்குபுகழ்
மண்ணாள் செல்வம் எய்திய
நும்மோர் அன்ன செம்மலும் உடைத்தே

என்று பாடி அவரை உய்யக் கொண்டனர்.

இன்னோரன்ன நிகழ்ச்சிகள் வேளாளர்களாம் சேவையர்களின் வெற்றிச் சிறப்பைக் காட்டுகின்றன அல்லவோ? ஆகவே, திரு பிள்ளையவர்கள் வேளாளர்களை, "கொற்றச் சேவையர்" என்றே குறிப்பிட்டுப் பாடினர். இத்தகையோர்களில் சேக்கிழார் தலைமையானவர் ஆதலின், "கொற்றச் சேவையர் காவல" எனப்பட்டார். (41)

# 5. முத்தப் பருவம்

1. திருப்பஞ் சாதி மறையுணர்மண்
தேவ ராதி நால்வர்களுஞ்
செறிந்த மற்றை மூவர்களுந்
தீரா இருவல் வினைத்தொடர்பால்
உருப்பஞ் சாரும் பிறந்தைமரீஇ
யுறமேற் போயுங் கீழிழிந்தும்
உழற லாய பெருந்தாகம்
ஒருங்கு மாய்த்தின் பொருங்கடைய
விருப்பஞ் சாரு மெய்யடியார்
மிக்க தொகையா ரொன்பதின்மர்
மேயா தனியா ரறுபதின்மர்
மேலு மூவர் சரித்திரமாங்
கருப்பஞ் சாறு மொழிமதுரக்
கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங்
கனிவாய் முத்தந் தருகவே.

(அ. சொ.) பஞ்சாதி-வேதங்களில் ஐந்து, ஐம்பது எண்ணிக்கையில் அமைந்த ஸ்லோகம். இதனை வடமொழி யாளர் பஞ்சாத் என்பர். தனித்தனியே பெரும்பாலும் ஐம்பது மொழிகள் கொண்ட யசுர்வேதம் என்பர். இவ்வாறு முறைப்படுத்தி அமைத்தவன் இராவணன் என்றும் கூறப் படுகிறது. மண்தேவர்-பூசுரர் எனப்படும் பிராமணர், ஆதி-முதலிய, நால்வர்-வேதியர், அரசர், வணிகர், வேளாளர், செறிந்த-சேர்ந்த, கலப்பினால் உண்டான மற்றைமூவர்-அநுலோபர், பிரதிலோமர், சங்கரர்,' இரு வல்வினை-இரண்டு கொடிய வினைகளாகிய, நல்வினை தீவினை கள், உருப்பம்-வெப்பம், பிறந்தை-பிறப்பு, மரீஇ-பொருந்தி,

உழறல்-உயர்ந்த யோனிகளிலும் தாழ்ந்த யோனிகளிலும் மாறிப்பிறத்தல், தாகம்-காமவேட்கை, ஒருங்கு-ஒருசேர, இன்பு-பேரின்பம், இன்பம்-வீடு-கனக்குன்றயன்-பொன்மய மான குன்றுகள் நிறைந்த குன்றத்தூரர், அனக-குற்றம் அற்றவனே.

**விளக்கம்:** முத்தப் பருவம் என்பது குழந்தை பிறந்த பதினோராம் மாதத்தில் தாதியர் குழந்தையை நோக்கித் தமக்கு முத்தம் தருமாறு வேண்டும் பருவமாகும். "பத்தினோ டொன்றில் முத்தம் கூறலும்" என்பது பிங்கலந்தை. பிராமணர்கட்குப் பஞ்சாதி ஓதுதல் கடமையாதல் போல ஏனையோர்க்குப் பஞ்சபுராணம் ஓதல் கடமை ஆதலின் பஞ் சாதி எனப் பொதுப்படக் கூறினர். தேவாரம், திருவாசகம், திரு விசைப்பா, திருப் பல்லாண்டு, பெரிய புராணம் ஆகிய இவற்றின் பாடல்களைப் பூசை முடிவில் ஓதுதலே பஞ்ச புராணம் கூறல் ஆகும்.

அநுலோபர், பிரதிலோபர், சங்கரர் எனப்படும் மூவர் கள். இவர்கள் உயர்ந்த சாதி கலப்பாலும் தாழ்ந்த சாதி கலப்பாலும் தாழ்ந்த சாதி உயர்ந்த சாதி கலப்பாலும் இவ்வாறு பலவகை கலப்பாலும் பிறந்த மரபினர் ஆவார்.

சுரர் என்னும் சொல் தேவர்கள் என்று பொருள்படும். அவர்களே தேசுரர் என்றபோது தேவலோக தேவர் என்றும், பூசுரர் என்றபோது மண்ணுலக தேவர் என்றும் குறிக்கப்பெறுவர். ஆகவே, அவர்கள் ஈண்டு மண்தேவர் எனப்பட்டனர். இக்கால நாகரிக வாழ்வில் ஈடுபடாமல், அக்கால வேத ஒழுக்கத்தில் ஈடுபட்டு, ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுவகை தொழிலினை மேற்கொண்டு விளங்கினமையின் அவர்கள் மண்தேவர் என்னும் சிறப்புக்கு உரியவராயினர். "அறு வகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்பது தொல்காப் பியம். பூசுரர் ஆயினும் ஒழுக்கத்தில் இவர்கள் பெரிதும் விழிப்புடையராய் இருத்தல் வேண்டும் என்பதை வள்ளுவர், "மறப்பினும் ஒத்துக் கொளல் ஆகும், பார்ப்பான்

பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்" என்றனர். ஆகவே, அவர்கள் இதனை நினைவில் கொளல் வேண்டும்.

வினை, என்றும் உயிர்களைப்பற்றி இருத்தலின், தீரா இரு வல்வினை என்றனர். இதனை,

நெல்லிற் குமியும் நீகழ்செம் பிற்களிம்பும்
சொல்லில் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்மம் அன்றுளவாம்

என்ற சிவஞான போத வெண்பாவாலும் "இருவினை இன்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து வருவது போவ தாகும்" என்று சிவஞான சித்தியார் திரு விருத்தத்தாலும் உணரலாம். நல்வினையும் பிறவிக்கு ஏதுவாதலின் திருவள்ளுவரும், "இருள்சேர் இருவினையும்" என்றனர். இத் தொடர்க்குப் பரிமேலழகர் பொருள் கூறுங்கால், "மயக்கத்தைப் பற்றி வரும் நல்வினை தீவினை" என்றும் கூறி, மேலும் விளங்குங்கால், "நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாகலாம் இரு வினையும்" என்றனர் என்று விளக்கினர். "இருள்புரி வினைகள்" என்பது யசோதர காவியம். "தீவினை இரண்டும் தீர்ந்தோம்" என்பது திருவிளையாடற் புராணம். "ஞானாசாரியரது அருள்நோக்கால் அன்றி வேறு வகையில் தீராமை பற்றித் "தீரா இருவினை" என்றார்.

பிறவிக்கு இருவினையும் காரணமாகும். இது குறித்தே மணிமொழியார், "அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப், புறந்தோல் போர்த் தெங்கும் புழுஅழுக்கு மூடி, மலம் சோரும் ஒன்பது வாயில் குடிலை" என்றனர்.

பிறந்தை என்பது ஓர் அருஞ்சொல்; பிறப்பு என்னும் பொருளது. பிறவி வெம்மை நிறைந்தது என்பது உண்மையாதலின், இறைவன் திருவடியினை அடைதலைத் திருவடி நீழல் அடைதல் என்பர். "குளிர்தருவே" என்றதும் இக்கருத்துப் பற்றியே ஆகும். பெருந்தாகம் என்பது காமம். இவ்விச்சை இப்பிறவியில் உயிர்களை அலைப்பது ஆதலின், பெருந்தாகம் என்றனர்.

இந்த உண்மையை நன்கு உணர்ந்த மணிமொழியார்,
தனியனேன் பெரும்பிறவிப் பௌவத்து எவ்வத்
 தடந்திரையால் ஏற்றுண்டு பற்றுஒன்று இன்றிக்
கனியின்நேர் துவர்வாயார் என்னும் காலால்
 கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்டு
இனிஎன்னே உய்யுமாறு என்றென் றெண்ணி
 அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதல்அந்தம் இல்லா மல்லல்
 கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே

என்றருளிப் போந்தார்.

மெய்யடியார்கள் வெப்பம் மிகுந்த பிறவியை நீக்கிப் பேர் இன்பம் பெற விழைவர் என்பது உண்மை. இதனை அருணகிரியார் வாக்காகிய,

குடலிடை தீதுற் றிடையிடை பீறிக்
 குலவிய தோலத் தியினூடே
குருதியி லேசுக் கிலமது கூடிக்
 குவலயம் வானப் பொருகாலாய்
உடல்எழு மாயப் பிறவியில் ஆவித்
 துறுபிணி நோயுற் றுழலாதே
உரைஅடி யேனுக் கொளிமிகு நீபத்
 துனதிரு தாளைத் தரவேணும்

என்பது கொண்டும் தெளியலாம். இதனால்தான் ஈண்டுத் திரு பிள்ளை அவர்கள், "உருப்பம் சாரும் பிறந்தைமரீஇ உறமேற் போயும் கீழ்இழிந்தும் உழறல் ஆய பெருந்தாகம் ஒருங்கு மாய்த்து இன்பு ஒருங்கு அடைய விருப்பம் சாரும் மெய் அடியார்" என்றனர்.

தொகையடியார் ஒன்பதின்மர்கள். தில்லைவாழ் அந்தணர்கள், பொய்யடிமை இல்லாத புலவர்கள், பத்தராய்ப் பணிவார்கள், பரமனையே பாடுவார்கள், சித்தத்தைச் சிவன் பாலே வைத்தவர்கள், திருவாரூர்ப் பிறந்தார்கள், முப்போதும் திருமேனி தீண்டுவார்கள், முழுநீறு பூசிய முனிவர்கள், அப்பாலும் அடிச்சார்ந்தார்கள். அறுபதின்மர் என்போர் சுந்தரர், அப்பர், சம்பந்தர் நீங்கலாகத் திருநீலகண்ட

நாயனர் முதல், இசைஞானியார் வரையில் உள்ள அறுபது தனியடியார்கள். மூவர் என்பார் அப்பர், சுந்தரர், சம்பந்தர். இவர்களும் அடியவர்களே ஆயினும், சமய ஆசாரிய நிலையில் இருப்பவர்கள் ஆதலின், தனித்துப் பிரித்துக் கூறப் பட்டனர். இவ்வடியார்களின் சரித்திரங்கள் கேட்க கேட்கக் இனிப்பாய் இருத்தலின், "கருப்பஞ்சாறு" என்று உவமை கூறி விளக்கினர்.

சேக்கிழார் பெருமானர்க்கு இம்மூவர் சரிதங்களைப் பெரு விருப்பத்துடன் கருப்பஞ்சாறுபோல் இனிக்க இனிக்கச் செப்பினர் என்பதை அவர்கள் வரலாற்றைப் பல நூறு கவிகளில் பாடி இருப்பது கொண்டு தெரிந்து கொள்ளலாம். சேக்கிழார் பெருமானர்க்கு இம் மூவர் வரலாற்றில் இருந்த ஈடுபாடு எத்துணைத்து என்பதைச் சுந்தரர், அப்பர், சம்பந்தர் வரலாறுகளில் முறையே,

வருமணக் கோலத் தெங்கள்
வள்ளலார் தெள்ளும் வாசத்
திருமணப் பந்தர் முன்பு
சென்றுவெண் சங்கம் எங்கும்
பெருமழைக் குலத்தின் ஆர்ப்பப்
பரிமிசை இழிந்து பேணும்
ஒருமணத் திறத்தின் ஆங்கு
நிகழ்ந்தது மொழிவேன் உய்ந்தேன்

என்றும்,

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவல் உறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய ஒண்ணுமை உணராதேன்

என்றும்,

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயல்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்

என்றும் பாடியிருப்பதால் அறியலாம்.

ஈண்டுத் திரு பிள்ளையவர்கள் சைவ மரபுபடி பொய் யடிமை இல்லாத புலவரையும் தொகை அடியார் இனத்தில் சேர்த்துத் தொகை அடியார் ஒன்பதின்பர் என்றனர். இதற்கு அரணாக நம்பி ஆண்டார் நம்பிகள் பொய்யடிமை இல்லாத புலவர் பற்றித் தாம் பாடிய பாடலாகிய,

தரணியில் பொய்மை இலாத்தமிழ்ச்
சங்கம் அதில்கபிலர்
பரணர்நக் கீரர் முதல்நாற்பத்
தொன்பது பல்புலவோர்
அருள்நமக் கீயும் திருவால
வாய்அரன் சேவடிக்கே
பொருள்அமைத் தின்பக் கவிபல
பாடும் புலவர்களே

என்பதில், கபிலர், நக்கீரர் முதலிய சங்கத்து நாற்பத் தொன்பது புலவர்களைக் குறிப்பிட்டுள்ளனர். ஆனால், திருத் தொண்டத் தொகையினை நன்கு துருவி ஆயும்போது, பொய்யடிமை இல்லாத புலவர் என்பார் சங்கச் சான் றோர்கள் அல்லர். அத்தொடரில் குறிப்பிடப்பட்டுள்ளவர் ஏனைய தனி அடியார்களைப் போல ஒரு தனியடியாரே என்பது புலனாகின்றது. இவ்வாறு கருதுதற்குக் காரணமும் இருக்கின்றது. சுந்தரர் தொகையடியார்களைத் தொகுத்து ஒரே பாடலில் குறித்துள்ளனர். அவர் பொய்யடிமை இல்லாத புலவர் என்பாரைத் தனி அடியார்களைப் பற்றிக் கூறிய பட்டியலில்தான் சேர்த்துக் கூறியுள்ளனர். ஆகவே, பொய்யடிமை இல்லாத புலவர் என்பார் தனி அடியாரே ஆவார். தொகையடியார் ஆகார். ஆனால் "தில்லைவாழ் அந்தணர்களும் தனியடியார் வரிசையில் இணைத்துப் பேசி இருப்பதனால், தில்லைவாழ் அந்தணர்களும் தனி அடியார் தாமோ?" என்று சிலர் வினவலாம். அத்தொடர் ஆரூர் பெருமானால் அருளிச் செய்யப்பட்டது. ஆகவே, அது மகுட மாக வைக்கப்பட்டதே அன்றி வேறன்று. சேக்கிழார் பெருமானார்க்கும் பொய்யடிமை இல்லாத புலவர் என்பார் சங்கச் சான்றோர் என்ற எண்ணமே இல்லை என்பதை அவர்

பொய்யடிமை இல்லாத புலவரைப் பற்றிப் பாடியுள்ள பாடல்களைக் கொண்டு நன்கு தெள்ளத் தெளிய உணரலாம்.

அப்பாடல்களில் மதுரைச் சங்கத்தைப் பற்றியோ, நக்கீரர், கபிலர், பரணர்களைப் பற்றியோ எந்தவிதமான குறிப்பும் காணப்படாமையினைக் காணவும்: மேலும், தனி அடியார்கள் அறுபான்மும்மை அடியார்களா என்பதையும் நாம் ஆராய்தல்வேண்டும். இவ்வாராய்ச்சிக்குப் பெருந்துணை செய்வது சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையே ஆகும். திருத்தொண்டத் தொகையில் சுந்தரர் ஒவ்வோர் அடியார்களையும் சுட்டிச் சுட்டி, அன்னார்க்கும் அன்னார் அடியார்கட்கும் தாம் அடிமை அடிமை என்ற முறையில் அடியேன் அடியேன் என்று பாடிச் சென்றுள்ளார். அங்ஙனம் பாடிய அவர், தம் பெற்றோராகிய சடையனார் இசைஞானியர்களின் பெயர்களைச் சுட்டியபோது, அவர் கட்கும் அடியேன் என்று கூறிற்றிலர். ஆனால், அன்னார் இருவர்கட்குத் தாம் திருமகனார் என்பதைத்தான் கூறி யுள்ளனர். அதனால் சுந்தரர் தம் இரு முது குரவர்களைப் பெற்றோர்கள் என்று கருதியுள்ளாரே அல்லாமல், அடி யார்கள் என்று கருதினார் இல்லை என்பது புலனாகின்ற தன்றோ? ஆகவே, தனியடியார் அறுபான் மூவர் என்று தொகை கொடுத்து முடிவு கட்டுதல் ஆராய்ச்சி உலகிற்கு அரண் செய்யாது. ஆனால், சமய உலகிற்கு அரண் செய்யும் என்பதை ஈண்டு நினைவுபடுத்துகின்றேன்.

பொய்யடிமை இல்லாத புலவரைப்பற்றி மேலும் தெள்ளத் தெளிய அறிய அவாவுவார், அடியேன் எழுதி யுள்ள பொய்யடிமை இல்லாத புலவர் யார்? என்னும் ஆய்வு நூலில் காண்பாராக.

குன்றத்தூர் வெண்சுதை தீட்டப்பெற்ற வெள்ளிய கட்டடங்களின் மாடமாளிகைகள் கூடகோபுரங்களை உடை யது. ஆகவே, அது கைலைக்கிரி ஆயிற்று. இவற்றின் மீது சூரியனது ஒளிக்கதிர்கள் படும்போது, அவை பொன் னிறமாக ஒளிவிடும். இதனை யாப்பருங் கலக் காரிகைப் பாடல் கொண்டும் நிறுவலாம்.

சுருக்கமில் கேள்வித் துகள்தீர்
புலவர்முன் யான்மொழிந்த
பருப்பொருள் தானும் விழுப்பொரு
ளாம்பனி மாலிமயப்
பொருப்பகம் சேர்ந்தபொல் லாக்கருங்
காக்கையும் பொன்னி
இருக்கும்என் றிவ்வா றுரைக்கும்
அன்றோஇவ் இருநிலமே

என்பது அப்பாடல். இக்கருத்துக்களை உளம்கொண்டே ஈண்டு, "கனகக் குன்றை" எனப்பட்டது.

சேக்கிழார் பெருமானது திருவாய் கொவ்வைக் கனி போன்ற செம்மைத்தாதலின், "கனிவாய்" என்றும், அன்பு கனியும் வாய் எனவும் அறிதலின், "கனிவாய்" என்றும் திரு. பிள்ளை அவர்கள் கூறிய நயம் காண்க. (42)

2. எண்ணில் பொலிபல் புலவர்குழாத்
தெய்தி நும்மோ டியாமொருவேம்
என்று கூறி யெம்பெருமான்
இருந்தாய் தருநன் னயமுடைத்தாய்
மண்ணில் பொலிபு கயிலாய
வரைக்கண் இவர்ந்தம் மாதேவன்
வடிகா தகம்புக் உள்ளுருக்கும்
வளமை யுடைத்தாய் வளத்தருவாழ்
விண்ணில் பொலிவார் களும்வியப்ப
வெள்என் பழத்திற் குயிர்அருளி
வெங்க ராக்கொண் டதுமீட்கும்
மிக்க விறலிற் றுய்எங்கள்
கண்ணில் பொலிசெந் தமிழ்மணக்குங்
கனிவாய் முத்தம் தருகவே
கனகக் குன்றை அனகசெழுங்
கனிவாய் முத்தம் தருகவே.

[அ. சொ.] பொலி-விளங்கும், குழாத்து-கூட்டத்தில் எய்தி-அடைந்து, ஆய்தரும்-ஆராயும், நயம்-அன்பு, சொல் நயம், பொருள் நயம் அணிநயம்என்றலும் ஆகும். பொலிபு-விளங்கி, வரைக்கண்-மலையில், இவர்ந்து-ஏறி, மாதேவன்-மகாதேவனும் இறைவன், வடிகாதகம்-அழகிய காதில், வளத்தரு-வளமான கற்பக விருட்சம், விண்ணில்-தேவலோகத்தில்,பொலிவார்கள்-விளங்குபவர்கள், என்பு அழத்திற்கு-எலும்பாகக் கிடந்த பிணத்திற்கு, அழம்-பிணம், வெங்கரா-கொடிய முதலை, விறலிற்ருய்-வன்மை மிக்கதாய், பொலி-விளங்கும்.

**விளக்கம்:** இப்பாடலில் ஆசிரியர் திரு பிள்ளை அவர்கள் தமிழ்மொழியின் மாண்பைக் குறிப்பிட்டுச் செல்கின்ருர். இறைவர் புலவர்களிடையே தாமும் ஒரு புலவராய் இருந்ததைத் திருவிளையாடற் புராணம்.

கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்த இப்பசுந் தமிழ்ஏனை
மண்ணிடைச்சில இலக்கண வரம்பில மொழிபோல்
எண்ணிடப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ

என்று வீறுகொண்டு விளம்புவாராயினுர்.

இதனை உட்கொண்டே ஈண்டுப்பிள்ளை அவர்கள் "புலவர் குழாத்து எய்தி 'நும் மோடுயாம் ஒருவேம்' என்று கூறி எம்பெருமான் இருந்தாய்" என்றனர்.

இறைவர் புலவர்களோடு ஒருவராய் இருந்தது முதற் சங்கக் காலத்தில் ஆகும். இதனை இறையனுர் அகப்பொருள் உரை கொண்டு நன்கு தெளியலாம். "தலைச்சங்கம் இருந்தார் அகத்தியனுரும், திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், குன்றெறிந்த முருகவேளும் முரிஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின் கிழவனும் என இத் தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மர்" என்பது அவ்வுரை. புலவர்கள் "ஐஞ்ஞூற்று நாற்பத்து ஒன்பதின்மர் ஆதலின், புலவர் குழாத்து" எனப்பட்டது.

சுந்தரர் மண்ணுலகு தணந்து கைலயங்கிரி செல்லும் அவாவினராய்க் கைலைக்குச் சென்றதை அவரே,

நிலைகெட விண்ணதிர நிலம்எங்கும் அதிர்ந்தசைய
மலையிடை யானைஏறி வழியேவரு வேன்எதிரே
அலைகட லால்அரையன் அலர்கொண்டுமுன் வந்திறைஞ்ச
உலையணை யாதவண்ணம் நொடித்தான்மலை யுத்தமனே

என்றருளியுள்ளனர்.

"மண்ணில் பொலிபு "என்று கூறியதனால் சுந்தரர் பூத வுடலுடன் இருந்தபோதே கைலாயத்திற்குச் செல்ல ஒருப் பட்டார் என்பது தெரிகிறது. சுந்தரர் கைலைக்குச் செல்லும் போதும் நொடித்தான் மலை இறைவனது காது குளிரத் தேவாரம் ஓதினமையின், அப்பதிகம் தீந்தமிழ் ஆனமை யின், "காதகம் உள்ளுருக்கு வளமை உடைத்தாய்" என்றனர். இதனைச் சுந்தரரே,

இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளஎன்னை மத்தயானை அருள்புரிந்து
மந்திரம் மாமுனிவர் இவன்ஆர்என எம்பெருமான்
நந்தம்ஆ ரூரன்என்றான் நொடித்தான்மலை உத்தமனே

என்றருளினர்.

இனிக் கயிலாயவரைக்கண் இவர்ந்து அம்மாதேவன் வடிகாத கம்புக்கு உள்ளுருக்கு வளமை உடைத்தாய் என்பதற்குக் காரைக்கால் அம்மையார் இறைவர் காதகம் குளிர, "அங்கணன் அம்மை யேஎன் றருள்செய அப்பா என்று, பங்கயச் செம்பொன் பாதம் பணிந்துவீழ்ந் தெழுந்தார்" என்று எடுத்துக் காட்டினும் பொருந்தும். அல்லது, சேரமான் பெருமாள் நாயனார் திருக்கைலையில் தாம் இயற்றிய திருக்கயிலாய ஞான உலாவை இறைவர் செவி குளிரப் பாடி அருளினமை கருதி இவ்வாறு கூறப் பட்டது என்று விளக்கினும் அமையும். இதனைச் சேக்கிழார்,

பெருகு வேதமும் முனிவரும் துதிப்பரும்
பெருமையாய் உனைஅன்பால்
திருஉ லாப்புறம் பாடினேன் திருச்செவி
சாத்திடப் பெறவேண்டும்
மருவு பாசத்தை அகன்றிட வன்தொண்டர்
கூட்டம்வைத் தாய்என்ன
அருளும் ஈசரும் சொல்லுக என்றனர்
அன்பரும் கேட்பித்தார்

என்று விளக்கி உள்ளதைக் காண்க.

திருஞானசம்பந்தர் திருமயிலைச் சிவநேசச் செட்டியார் திருமகளார் பூம்பாவை இறந்தபின் தம் மகளாது எலும்பைச் சேமித்து வைத்துச் சிரபுரக் கோன் முன் வைக்க திரு ஞானசம்பந்தப்பிள்ளையார் இறைவனை நோக்கி,

மட்டிட்ட புன்னையம் கானல் மாடமயிலைக்
கட்டிட்டம் கொண்டான் கபாலீச் சரம்அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணுதே போதியோ பூம்பாவாய்

என்று பாடி எலும்பைப் பெண்ணுக்கினர்.

இந்த அற்புதத்தைக் கண்ட விண்ணவரும் மண்ணவரும் வியந்து போற்றினர். இதனைச் சேக்கிழார்,

தேவரும் முனிவர் தாமும் திருவருள் சிறப்பு நோக்கிப்
பூவரு விரைகொள் மாரி பொழிந்தனர்'ஒழிந்த மண்ணோர்
யாவரும் இருந்த வண்ணம் எம்பிரான் கருணை என்றே
மேவிய கைகள் உச்சி மேற்குவித் திறைஞ்சி வீழ்ந்தார்

என்று பாடிக் காட்டினர்.

இதனை உள்ளிட்டே "ஈண்டு விண்ணிற் பொலிவார்களும் வியப்ப" எனப்பட்டது.

சுந்தரர் திருப்புக்கொளியூர் சென்றபோது, அங்கு ஓர் அந்தணக்குடும்பத்தார் தம் குமரன் முதலையால் விழுங்கப் பட்டு இறந்ததனால் வருந்த, அதை அறிந்த திருநாவலூரர் அவிநாசி அப்பரை நோக்கி,

உரைப்பார் உரையுகந் துள்கவல் லார்தங்கள் உச்சியாய்
அரைக்கா டரவா ஆதியும் அந்தமும் ஆயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூர்அவி நாசியே
கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே

என்று வேண்டி, மகனை முதலை வாயினின்று வரவழைத்தார்.

இதனைக் குறிப்பிடவே "வெங்கராக் கொண்டது மீட்கும் மிக்க விறலிற்றாய்" என்றனர். இங்கு விறலிற்றால் என்ற சொல்லைப் பயன் படுத்தியதில் ஒரு நயம் உளது. சுந்தரர் செய்த செயல் செயற்கரிய செயலாகும். ஏனெனில், முதலை உண்டதாயின் அப்போதே சீரணித்திருக்கும். மேலும் முதலை விழுங்கிச் சில ஆண்டுகளும் ஆய் இருந்தன. இங்ஙனம் முதலை விழுங்கிச் சில ஆண்டுகள் ஆயின என்ற குறிப்பு,

உரைப்பார் உரைஎன் றெடுத்ததிருப்
பாட்டு முடியா முன்உயர்ந்த
வரைப்பான் மையில்நீள் தடம்புயத்து
மறலி மைந்தன் உயிர்கொணர்ந்து
திரைப்பாய் புனலின் முதலைவயிற்
றுடலில் சென்ற ஆண்டுகளும்
தரைப்பால் வளர்ந்த தெனநிரம்ப
முதலை வாயில் தருவித்தான்

என்று பாடிய சேக்கிழார் வாக்கால் அறிய வருகின்றது.

இது வியப்பினும் வியப்பன்றோ! இது வியத்திறகுரிய செயலே என்பதைத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமி களும்,

போத முண்ட பிள்ளை என்பு
பொருகண் மாது செய்ததோ
காதல் கொண்டு சொல்லில் மன்னர்
கன்மி தப்ப உய்த்ததோ
வாய்தி றந்து முதலை கக்க
மகனை நீஅ ழைத்ததோ
யாது நம்பி அரிதெ னக்கு
நன்கி யம்ப வேண்டுமே

என்று பாராட்டிப் பேசினர்.

தமிழ் மொழி இன்னோரன்ன வன்மை மிக்கது என்பதைப் பரஞ்சோதியாரும்,

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
உண்ட பாலனை அழைத்ததும் எலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததும் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்

என்று அறைகூவிப் பிறமொழியினரை அழைப்பாராயினர்.

"இவ்வரிய நயம் குறித்தே பிள்ளையவர்கள் விறலிற்றாய்" என்றனர். பிள்ளையவர் சேக்கிழார் திருவாய் தமிழ்ப் பாக்களைப் பாடிப் பாடிப் பழகியதால், அது செந்தமிழ் மணக்கும் கனிவாய் ஆயிற்று, கனிவாய் என்றதனுல் சேக்கிழாரின் உடல் நிறம், உறுப்பு, அழகு முதலியன புலனுகின்றன. தமிழைப் பயின்றாலும் தமிழ்ப் பாட்டைத் தொட்டாலும், எழுதினாலும் மணமே வீசப்பெறும் என்ற உண்மையினை,

மட்டாரும் தென்களந்தைப் படிக்காசன்
உரைத்தமிழ் வரைந்த ஏட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும்
பரிமளிக்கும் பரிந்த ஏட்டைத்
தொட்டாலும் கைம்மணக்கும் சொன்னாலும்
வாய்மணக்கும் துய்யசேற்றில்
நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே
பாட்டினுடை நளினந் தானே

என்னும் தனிப் பாடலாலும் உணரலாம்.

சேக்கிழார் புலவர் குழாத்துள் ஒருவராகச் சிறந்து விளங்குவதாலும், தெய்வப் புலவர் சேக்கிழார் என்று கூறப் படுதலாலும், ஆராயும் அறிவு பெற்றுள்ளமையாலும், இறைவன் உவக்கும் முறையில் பாடல்களைப் பாடி இருப்பதாலும், காரிட்ட ஆணவக் கருவறையில் கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண்டிருந்த ஆன்மாக்களை எல்லாம் தம் கவிவளத்தால் உயிர்ப்பும் உணர்ச்சியும் வரச் செய்வ

தாலும், "வாங்கு சிலைபுரையும் உடல் எனும் குளத்தில் மூல மலமெனும் ஓர் வெங்கராவின் பகுவாயின் நின்றும் தீங்கில் உயிர் எனும் பனவக் குலமகனை ஆதி திரோதாயி என்னும் ஒரு வெந்திறல் கூற்றுவனால் ஓங்குறு நாதாந்தமெனப் பெயரிய அக்கரையில் உமிழ்வித்துச் சிவமெனும் ஓர் தந்தையொடும் கூட்டும் கவிகளைப் பாடி உயிர்களை உய்வித்திருப்பதாலும் நம் தம் பெருமானார் சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவர்களின் தோற்றமாக நம் கண்முன் பொலிதலினாலும், தீந்தமிழால் பெரிய புராணம் பாடி அருளியதாலும் திருபிள்ளை அவர்கள் எங்கள் கண்ணில் பொலி செந்தமிழ் மணக்கும் கனிவாய்" என்று சேக்கிழார்க்கும் பொருந்தப் பாடினார் எனினும் பொருத்தமே.

தமிழ் இலக்கிய நோக்கம் கொண்டு பார்க்கும்போது சிந்தாமணி சீரிய காவியமே என்றாலும், அதில் சைவ சமயச் சார்புடைய சோழகுல மன்னர் ஈடுபட்டிருந்ததை இவர் மெல்ல நீக்கிச் சைவ சமயச் சார்பில் ஈடுபடும்படி செய்தனர். இப்படிச் செய்தது சேக்கிழார்க்குக் குற்றம் ஆகும் என்று ஒரு சிலர் இவர்மீது குற்றம் கூறத் துணிபவரும் உளர். அவர்கள், சேக்கிழார் ஒரு புலவர் மட்டும் அல்லர், அமைச்சரும் ஆவர் என்பதை மறந்தவர் ஆவார். அமைச்சர் இயல்புகள் இத்தகைய என்பதை வள்ளுவர் வகுத்துக் கூறும்போது,

> தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
> சொல்லலும் வல்லது அமைச்சு

என்றும்,

> அறிகொன்று அறியான் எனினும் உறுதி
> உழைஇருந்தான் கூறல் கடன்

என்றும் கூறியிருப்பதுகொண்டு மன்னனுக்கு அறிவுறுத்தி ஆட்கொண்டது குற்றமாகாது. ஆகவேதான், ஈண்டு ஆசிரியர் சேக்கிழாரை "அநக" என்றனர்.

சம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கிய திறனையும், சுந்தரர் வெள்ளை யானைமீது கயிலை சென்ற காட்சியினையும் குறித்துக் கற்பனைக் களஞ்சியமாம் சிவப்பிரகாசர் பாடி

*யுள்ள நால்வர் நான்மணி மாலைப் பாடல்களையும் ஈண்டு நினைவு கூர்வோமாக.*

*இடுகாட்டுள் மாதர் எலும்பில் புரள்மால்
சுடுகாட்டுள் ஆடுவான் சுட்டி—நெடுகாட்டும்
சம்பந்தா என்புநின்பால் தந்தாக்கிக் கொண்டிலன்என்
கும்பந்தாம் என்னுமுலைக் கொம்பு*

*உனற்க ரும்புகழ் மேவிய சுந்த்ரன் உம்பல்மீ திவரா
நினைப்ப ரும்கயி லாயம்அ டைந்தமைநின்று காண்குறவே
எனக்கு வந்துறு போமக வென்றழு கின்ற நாளலைபால்
தனித்து அருந்துபு மாலை உமிழ்ந்திடு தம்பி ரான்அலனே*

*என்பன அப்பாடல்கள்.* (43)

3. சொல்லும் பொருளும் நனிசிறப்பச்
சுருங்கச் சொல்லன் முதலாய
தோட்டி யமைய அமங்கலமாஞ்
சொற்கள் புணரா தறக்களைந்து
வெல்லுந் தகைய முரண்காட்டி
விலக்கு விலக விதிதழுவி
விரும்பு மூல இலக்கியமே
வேறு காதென் றுலகேத்த
அல்லும் பகலும் அம்பலவர்
அருட்ற் காய வரும்பணிசெய்
தருள்பெற் றுய்ந்த அடியார்தம்
அருமை பெருமை பாராட்டிக்
கல்லுங் கரையக் கவிபாடுங்
கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங்
கனிவாய் முத்தந் தருகவே.

*(அ. சொ.) நனி-மிகவும், தோட்டி-அழகு, புணராது-சேராது, அற-முற்றிலும், முரண்-மாறுபாட்டினை, விலக்கு-*

ஒதுக்கவேண்டிய குற்றங்கள். விதி-ஏற்கவேண்டிய இலக்கண விதிகளை, உலகு-உலக மக்கள், ஏத்த-போற்ற, அல்-இரவு, பணி-தொண்டு, உய்ந்த-பிழைத்த, அருள்தற்கு+ஆய.

**விளக்கம்:** இச்செய்யுள் பெரியபுராணம் மூல இலக்கியம், ஆதிகாவியம் என்பதை நன்கு எடுத்து இயம்புகிறது. சேக்கிழார் தம் செய்யுட்களில் சொல் அழகும் பொருள் அழகும் சிறந்த முறையில் அமைந்துள்ளன.

கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்னச்
சுரும்பல்லி குடைநீலத் துகள்அல்ல பகல்எல்லாம்
அரும்பல்ல முலைஎன்ன அமுதல்ல மொழிஎன்ன
வரும்பல்லா யிரங்கடைசி மடந்தையர்கள் வய
[லெல்லாம்

என்றும்,

பேர்பரவை பெண்மையினில் பெரும்பரவை விரும்பல்குல்
ஆர்பரவை அணிதிகழும் மணிமுறுவல் அரும்பரவை
சீர்ப்பரவை ஆயினாள் திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை இடைப்பட்ட என்ஆசை எழுபரவை

என்றும் சொல்லின் அழகைப் புலப்படுத்திய ஆற்றைக் காண்க.

சுந்தரர் திருவாரூரில் பரவையாரை மணந்திருந்தும் திருவொற்றியூரை அடைந்தபோது, சங்கிலியாரையும் மணக்க விரும்பி, ஒற்றித் தியாகனை வேண்டுமிடத்துச் சேக்கிழார் பெருமானார் சுந்தரர் திருவாக்காக,

மங்கை ஒருபால் மகிழ்ந்ததுவும்
அன்றி மணிநீள் முடியின்கண்
கங்கை தன்னைக் கரந்தருளும்
காதல் உடையீர் அடியேனுக்கு
இங்கு நுமக்குத் திருமாலை
தொடுத்தென் உள்ளத் தொடைஅவிழ்த்த
திங்கள் வதனச் சங்கிலியைத்
தந்தென் வருத்தம் தீரும்என

என்று பாடியதில், முதல் இரண்டடிகளின் உட்பொருள், "இறைவரே, நீங்கள் உமையம்மையாரை மணந்திருந்தும், கங்கையாளையும் மணந்து இன்புற்றிருப்பது போல, யானும் பரவையாரை மணந்திருந்தும் சங்கிலியாரை மணக்க அவாவியுள்ளேன் ஆதலின், தடையின்றி என் வேண்டுகோளை நிறைவேற்றி யருளவேண்டும் என்பதன்றோ? புனித வதியாராம் காரைக்கால் அம்மையார்] தம்மைத் தணந்து பன்னாள் ஆகியும், தம் கணவர் வாராதது கண்டு பின்னர் அவர் மதுரையம்பதியில் மற்றொருத்தியை மணந்து மகவை யும் பெற்று வாழ்வதாக உணர்ந்து, ஆண்டுச் சுற்றம் சூழச் சென்று தம் வருகையினைக் கணவனார்க்குக் கூறி அனுப்பக் கணவராம் பரமதத்தன், தம் மனைவி மகவுடன் வந்து அம்மையாருடைய திருவடியில் வணங்க, அம்மையார் அவ் வணக்கத்தை ஏற்காது அச்சத்துடன் ஒதுங்க, உறவினர்கள், "உன் மனைவியை நீ வணங்கலாமோ"? என்றபோது, பரம தத்தன், "இம்மாதரார் மானிடர் அல்லர்; மாபெருந் தெய்வம், நீங்களும் இவரை வணங்குங்கள்" என்று கூறக் கேட்ட அம்மையார் உடனே,

எங்குஇவன் குறித்த கொள்கை
இதுவெனில் இவனுக் காகத்
தாங்கிய வனப்பு நின்ற
தசைப்பொதி கழித்தங் குன்பால்
ஆண்டுநின் தாள்கள் போற்றும்
பேய்வடி வடியே னுக்குப்
பாங்குற வேண்டும் என்று
பரமர்தாள் பரவி நின்றார்

என்று இவ்வாறு பாடிக்காட்டினார் சேக்கிழார். பரமதத் தன் அம்மையாரை வணங்கியபோது, "**கணவர்தாம் வணங்கக் கண்ட**" என்று பாடிய சேக்கிழார், ஈண்டு, அப்பரமதத்தனை "**இவன்** குறித்த கொள்கை" என்றும், "**இவனுக்காக**" என் றும், ஒருமைச் சொல்லால் குறித்துள்ள பொருட் சிறப்பே புலவர் பெருமானது பேரறிவுத் திறனுக்கு ஓர் எடுத்துக் காட்டாகும். வேண்டும் என்றே, "இவன், இவன்" என

இருமுறை இந்தச் சொற்களைப் பெய்து அச்சொல்லின் பொருள் நயத்தைப் புலப்படுத்தியுள்ளார். கணவன் மனைவியைப் பணிதல் உண்டு. அப்பணிதற்குரிய விதி இலக் கணத்திலும் கூறப்பட்டுள்ளது.

மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய

என்பது தொல்காப்பியம்.

ஆனால், பரமதத்தன் மனைவியைப் பலரும் அறியும் வகையில், பணிந்தமையினால், அவன் மனிதப் பண்பு அற்ற வனாயினான். கணவனுக்குரிய கட்டுப்பாடும் இல்லாதவ னாயினான். ஆதலின், அன்னானை மரியாதைச் சொல்லால் குறிக்காது, ஒருமைச் சொல்லால், பொருட்பொலிவு தோன்ற இவன் என்றும் கூறியதன் நுண்பொருள் புலவர் கட்கு ஒரு விருந்தே ஆகும். இவற்றைக் கருதியே "சொல்லும் பொருளும் நனிசிறப்ப" என்றனர் திரு பிள்ளை அவர்கள்.

காவியங்களில் அமையவேண்டிய அழகுகள் பத்து. அவையே,

சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை ஆழமுடைத் தாதல்
முறையின் வைப்பு உலகம் மலையாமை
விழுமியது பயத்தல் விளங்கு உதாரணத்தால்
ஆகுதல் நூலிற்கு அழகெனும் பத்தே

இந்தப் பத்து அழகும் பெரிய புராணத்தில் அமைந் துள்ளது.

அப்பூதி அடிகளார் புராணத்துள், அப்பெருமானார் தம் பெயரால் தண்ணீர்ப் பந்தல் நடைபெறுவதைக் கண்டு, அப்பந்தரிடை இருந்தாரை நோக்கி, இவ்வாறு இதனை நிறுவியவர் யார்? என்று ஒரு வினவிய வினாவிற்கு விடையாக அங்கிருந்தவர்கள் சுருக்கமாக "துன்றிய நூல்மார்பரும் இத் தொல்பதியார், மனையின்கண் சென்றனர். இப்பொழுது

அதுவும் சேய்த்தன்று நணித்து" என்றார். இதில், தண்ணீர் பந்தரை அமைத்தவர் அந்தண மரபினர் என்பதையும், அவர் உள்ளூர் வாசியினரே அன்றி, வெளியூரினர் அல்லர் என்பதையும், வீட்டிற்குத்தான் போயுள்ளாரே அன்றி, வேறிடத்திற்குச் சென்றார் அல்லர் என்பதையும், அங்ஙனம் சென்றவர் இப்போதுதான் சென்றனர் ஆதலின், வீட்டிற்குச் சென்றால் காணலாம் என்பதையும், அவ்வீடும் சேய்மையில் இல்லை, சென்று காணுதற்குரிய முறையில் அண்மையிலேயே உள்ளது என்ற யாவற்றையும் சுருங்கிய முறையில் சொற்றதைக் காணவும்.

சூதபா டலங்கள் எங்கும் சூழ்வழை ஞாழல் எங்கும்
சாதிமா லதிகள் எங்கும் தண்தளிர் நறவம் எங்கும்
மாதவி சரளம் எங்கும் வகுளசண் பகங்கள் எங்கும்
போதவிழ் கைதை எங்கும் பூகபுன் னாகம் எங்கும்

என்ற இடத்து மரங்களின் பெயர்களை விளங்க வைத்தமை காண்க.

மறைவளர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெறு மணியே சுருதியின் ஒளியே வெளியேவந்து
இறையவன் உமையாள் உடன்அருள் தரஎய் தினை
[என்பார்

என்ற கவி, நவின்றோர்க்கு இனிமை பயத்தலை உணரவும்.

அப்பர் பெருமானார் அப்பூதி அடிகளார் மைந்தர் அரவு கடித்து இறந்ததை அறியாராய்த் தாம் உணவு கொள்ளுங் காலத்தே திருநீறு நல்க மூத்தமகனாரையும் அழையும் என்ற போது, அப்பூதியடிகளார் அவன் இறந்தான் என்று கூறி, அப்பர் பெருமான் உள்ளத்திற்கு உறுகண் உறுமாறு சொல்ல ஒண்ணாது என்று உளம் கொண்டவராய் நன்மொழி புகலும் முறையில், "இப்போது இங்கு அவன் உதவான்" என்று கூறியதாகச் சேக்கிழார் அப்பூதி அடிகளார் வாக்கில் அமைத்துப் பேசியது, நன்மொழி புணர்த்திப் புகன்றதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

இறைவன் மைந்தன் தன்னை அழையும் என்ற போது சிறுத் தொண்டரும் இப்போது உதவான் அவன் என்றதையும் எடுத்துக்காட்டலாம்.

துடியடியன மடிசெவியன துறுகயமுனி தொடரார்
வெடிபடவிரி சிறுகுருளைகள் மிசைபடுகொலை விரவார்
அடிதளர்வுறு கருவுடையன அணைவுறுபிணை அலையார்
கொடியனஎதிர் முடுகியும்உறு கொலைபுரிசிலை மறவோர்

என்ற இடத்து ஓசையுடைமையின் அழகைக் காண்க.

வீதிவிடங்கன் தேரேறி வீதி வழியே சென்றபோது, பசுக்கன்று துள்ளி வந்து தேர்க்காலில் அகப்பட்டு இறந்தது. அதனை அறிந்த அமைச்சர் மனுச்சோழனிடம் சென்று,

வளவநின் புதல்வன் ஆங்கோர்
மணிநெடுந் தேர்மேல் ஏறி
அளவில் தேர்த் தானைசூழ
அரசுலாம் தெருவில் போங்கால்
இளையஆன் கன்று தேர்க்கால்
இடைப்புகுந் திறந்த தாகத்
தளர்வுறும் இத்தாய் வந்து
விளைத்ததுஇத் தன்மை

என்னும் இப்பாடலில் அமைந்த பொருளாழத்தை அளவிட்டுக் கூறமுடியாது.

வளவ! என்று விளித்ததன் பொருள், எல்லா வளங் கொண்டுள்ள சோழ மன்ன உனது அரசியலில் எந்தவிதக் குறையும் ஏற்படுதற்குக் காரணம் இல்லை. இப்பசுவிற்கு கன்றிற்கு நடந்த நிகழ்ச்சிக்குக் காரணர் வேறு எவரும் இலர், உன் புதல்வனே ஆவான் என்பதை உணர்த்த "நின் புதல்வன் என்றும், அரண்மனை அருகு ஒன்றும் நடக்கவில்லை. வெளியே நடந்தது என்பான் "ஆங்கு" என்றும், அரச மகன் ஏறிச்சென்ற தேர் எந்தவிதமான பழுதும் இல்லாதது என்ற குறிப்பை "ஓர்" (ஓர்-ஒப்பற்ற) என்ற அடைமொழியைக் கொடுத்தும், அத்தேர் ஒலி செய்யாது செல்லவில்லை, வருவார்

போவாரை எல்லாம் விலகிப் போமாறு உணர்த்துவது போல மணி ஓசையுடன் சென்றது என்பான். "மணித்தேர்" என்றும், அரசிளங்குமரன் அமர்ந்திருந்த தேர் நீண்ட தேராகவும், அதன்மேல் ஏறி இருந்ததனுல் கீழே நடப்பதைக் கவனிப்பதற்கு இயலாமல் போனது என்பான், "நெடுந் தேர்மேல் ஏறி" என்றும், தேர்மீது சென்றபோது தக்க காப்பாளருடன் சென்றனன் என்பதை உணர்த்த, "அளவில் தேர்த்தானை சூழ" என்றும், தேர் சென்ற வீதியும், குறுகிய தெருவாக இன்றிப் பரந்த அரச வீதி என்பான். "அரசுலாம் தெருவில் போங்கால்" என்றும், இளங் கன்று பயம் அறியாது ஆதலின், அது துள்ளி வந்து தாளுகவே அகப்பட்டுக்கொண்டது என்பான். "இளைய ஆன்கன்று தேர்க்கால் இடைப்புகுந்து இறந்தது" என்றும், காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு ஆதலின், சோகத்தால் பசு இவ் வாறு மணியை அசைத்தது என்பான். "தளர்வுறும் இத் தாய் வந்து விளைத்தது இத்தன்மை" என்றும் கூறினன். இதனினும் பொருளாழம் உடைய செய்யுட்கு வேறு எந்தச் சான்றை எடுத்துக் காட்டுவது?

சுந்தரர் பரவையாரைக் கண்டபோது,

கற்பகத்தின் பூங்கொம்போ
காமன்தன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின்
புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர்
மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ
அறியேன்என் றதிசயத்தார்

அதே சமயம் பரவையார் சுந்தரரைக் கண்டபோது,

முன்னேவந் தெதிர்தோன்றும்
முருகனே பெருகொளியால்
தன்னேரில் மாரனே
தார்மார்பின் விஞ்சையனே

மின்னேர்செஞ் சடைஅண்ணல்
மெய்யருள்பெற் றுடையவனே
என்னேஎன் மனம்திரித்த
இவன்யாரோ எனநினைந்தார்

இவ்விரு பாடல்களில் முறையின் வைப்பு என்னும் அழகு வெகு பொருத்தமாக இருத்தலை அறியலாம்.

சுந்தரர் பரவையாரைக் கற்பகத்தின் பூங்கொம்போ என்று எண்ணினர். கற்பகத்தின் நிழலில் வளர்ந்தவள் தெய்வயானை. அந்தக் குறிப்புக்கு இணங்கப் பரவையார், சுந்தரரை முன்னே வந்து எதிர் தோன்றும் முருகனே என்று நினைத்தனர். சுந்தரர் காமன் தன் பெருவாழ்வோ (இரதியோ) என்று எண்ணியதற்கு ஏற்பப் பரவையார் தன்னேரில் மாரனே என்று எண்ணினர். "சுந்தரர் புண்ணியத்தின் புண்ணியமோ" என்று உரைத்ததற்கு இணங்கப் பரவையார் புண்ணியத்தின் பயனாக விஞ்சையராகப் பிறப்பதும் உண்டு ஆதலின், தார்மார்பில் விஞ்சையனே என்று வியந்து பாராட்டினர். சுந்தரர், 'சிவனருளோ" என்று தீர்மானித்ததற்கு இணங்கப் பரவையார், "சடையண்ணல் மெய்யருள் பெற்றுடையவனே" என்று சிந்தித்து முடிவு கண்டனர். இம்முறையில் முறையின் வைப்பு என்னும் அழகு முற்றிலும் பொருத்த மாதலைக் காணலாம்.

சேக்கிழார் பெருமானார் நாட்டு வளம் கூறுங்கால், பொருள்களைத் தெளிவுற வர்ணிக்குங்கால், உலகமலைத்து விடாது உள்ளது இதுவே என்று உணரும் முறையில்,

கரும்பல்ல நெல்என்னக் கமுகல்ல கரும்பென்னச்
சுரும்பல்ல குடைநீலத் துகள்அல்ல பகல்எல்லாம்
அரும்பல்ல முலையென்ன அமுதல்ல மொழிஎன்ன
வரும்பல்லா லாயிரம் கடைசி மடந்தையர்கள் வயல்
[எல்லாம்

என்று பாடிய திறத்தால் உலகம் மலையாமை ஆகிய அழகு இருத்தலை உணரலாம்.

விழுமியது பயத்தலாவது உயர்ந்த பொருள் நயம் நூல்களில் அமைந்திருத்தலே ஆகும். புலவர் உலா பாடுதல் வழக்கம். இதனைத் தனி நூலாகவேனும், காவியங்களில் இணைத்தேனும் பாடுவர். இதனைச் சிவக சிந்தாமணி,

தேசிக முடியும் திருந்துபட் டுடையும்
பாச மாக நின்றுபன் மலர்க்கழுநீர்
மூசிவண் டிமிரும் மொய்யலங்கல் தாழக்
காசில்கா மம்செப்பிக் கண்ணினல் இரப்பர்

என்று பாடிச் சீவகனைக் கண்ட மாதர்கள் அவனிடத்துக் காம வேட்கை கொண்டதைக் கூறுகிறது.

இராமாயணத்தில் கம்பர், ராமன் உலாவரும் காலத்துக் கண்ட மாதர்கள் நிலையைக் கூறும்போது,

நனிவ ருந்தி நலம்குடி போயிடப்
பனிவ ருங்கணர் பாசிழை அல்குலாள்
முனிவ ரும்குல மன்னரும் மொய்ம்பறத்
தனிவ ரும்கொல் கனவின் தலைஎன்றுள்

எனக் கூறி, இராமனைத் தனித்துத் தழுவி இன்புற ஒரு மாது நினைத்ததாகப் பாடினர்.

சேக்கிழாரும தமது புராணத்தில் உலாப் பாடுகிறர். அங்கு மாதர்கள் சுந்தரரைக் கண்ட நிலையினைக் கூறும்போது, இவ்வாறு தம் கற்புக் கெடும் வகையில் மாதர்கள் நடந்து கொள்ளாது, சீரிய முறையில்,

கண்கள்எண் ணிலாத வேண்டும்
காளையைக் காண என்பார்
பெண்களில் உயரநோற்றுள்
சடங்கவி பேதை என்பார்
மண்களி கூரவந்த மணம்கண்டு
வாழ்ந்தோம் என்பார்
கண்களில் நிறைந்த கீதம்
பாடுவார் ஆடுவார்கள்

என்று பாடிக்காட்டி, அவர் தம் கற்பின் விழுப்பத்தை எடுத்துக் காட்டியதைக் காணும்கால் 'இதனினும் விழுமியது பயத்தற்கு ஏற்ற உதாரணம் யாது வேண்டும்? உதாரணங் களைக் கூறும்போதெல்லாம்' விழுமிய கருத்துக்கள் தோன் றவே பாடுவர். "அரனுக்கு அன்பர் ஆலின சிந்தைபோல அலர்ந்தன் கதிர்கள் எல்லாம்" என்றும், "வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி எல்லாம்" என்றும் கூறுமிடத்துக் காண்க.

சேக்கிழார் பெருமானார் கூறும் உதாரணங்கள் விழுமிய பொருள் பயப்பதோடு இன்றி, விளக்கமான பொருள் கொண்டதாகவும் இருக்கும். சிறுத்தொண்டர் இல்லத்திற்கு வந்த பயிரவர், தொண்டரிடம் பெரும்வேதனை தரத்தக்க மொழிகளைக் கூறப்போவதாகக் கூறுமிடத்து அவர் திரு வாயால் "இன்னம் புண்செய் நோயில் வேலெறிந்தால் போலும் புகல்வது ஒன்று" என்று புகல வைத்தபோது, எவர்க்கும் விளங்கும் வகையில் எடுத்துக்காட்டிய உதாரணத் தாலும், முத்தநாதன் வெளித்தோற்றத்தில் சிவவேடப் பொலிவுடன் இருந்தாலும், அவன் உள்ளத்தில் மாசு படிந் திருந்ததை விளக்கும் முகத்தால், "மைப்பொதி விளக்கே அன்ன மனத்தினுள் கறுப்பு வைத்து" என்றும் கூறி விளங்கு உதாரணம் நூலில் உரைத்திருப்பது கொண்டும், பெரிய புராணத்தில் பத்து அழகுகள் பரவி இருப்பதைக் காணலாம். இக்காரணங்களைக் கொண்டே ஆசிரியர் ஈண்டு, "சுருங்கச் சொல்லல் முதலால் தோட்டி அமைய" என்று பாடினர்.

பெரிய புராணத்தில் அமங்கலமாகக் கூறுமிடத்தெல் லாம் அவ்வமங்கலத்தினைத் தம் திருவாயால் கூற அஞ்சிய சேக்கிழார் பெருமானார் மங்கலமாகவே கூறிச் சென்றிருப் பதைக் காணலாம். முத்தநாதன் மெய்ப்பொருள் நாய னாரை வெல்ல பலவகையிலும் முயன்றும் பயனுறாது பின்னர் வஞ்சக வேடத்தனாய்ச் சென்று அவரை முடித்து விட்டதைக் கூறவந்த புலவர் பெருமானார்,

புத்தகம் அவிழ்ப்பான் போன்று
புரிந்தவர் வணங்கும் போதில்
பத்திரம் வாங்கித் தான்முன்
நினைந்த அப்பரிசே செய்ய

என்று கூறினர்.

அவன் நினைந்தவண்ணமாக அவரைக் கொல்லலாகிய செயலைச் செய்ததை எத்துணை மங்கலமான முறையில் கூறிப் போந்தரர் புலவர் நாயகம்! இவ்வாறே அதிசூரன் என்பானும் வஞ்சக வேடத்தனுய்த் தோன்றியபோது (அதாவது வெண்ணீறே என்றும் அணியாத அவன் அன்று, வெண்ணீறணிந்து தன் கேடகத்தால் மறைத்துச் சென்றது) ஏனுதி நாயனுர் அவ்வெண்ணீற்றைக் கண்டதும், இந்தச் சிவவேடப் பொலிவுடைய நாயனுருடனு நாம் மலைவது என்று மயங்கி, போர் செய்ய வீர உணர்ச்சி இன்றிப் பொய்ப் போர் புரிகையில், அதிசூரன் அவரைக் கொன்றனன். இச்செய்தியினையும் சேக்கிழார் மங்கலமாக "முன்நின்ற பாதகனும் தன் கருத்தே முற்றுவித்தான்" என்று பாடினுர். மெய்ப்பொருள் நாயனுர் புராணத்துள் அந்நாயனுர் முத்த நாதனுல் குத்துண்டு இறந்தபோது, "புரவலர் மற்றுள் ஆடுகப் பூங்கழல் சிந்தை செய்தார்" என்றே புகன்றுர். சிறுத்தொண்டர் தமது மகன் கழுத்தைச் சிதைத்த செய்தியினையும், "அரியவினை செய்தார்" என்றுர். இதன் பொருள் எங்கும் எவரும் செய்யாத அருமையான் செயலைச் செய்தார் என்னும் பொருள் படப்பாடியுள்ளதைக் காண்க. இக்காரணம் பற்றி ஈண்டு "அமங்கலமாம் சொற்கள் புணராது அறக் களைந்து" என்று சுட்டிக் காட்டினர்.

சேக்கிழார் பெருமானுர் பெரிதும் நம்பியாண்டார் கருத்தையே தழுவிச் செல்பவராயினும், சிற்சில இடங்களில் ஒரு சிறிது முரண்பட்டும் செல்லுவர். இதற்குச் சான்றுக அமர்நீதி நாயனுர் புராணத்தை எடுத்துக் காட்டலாம். நம்பியண்டார் நம்பிகள் அமர்நீதியாரைப் பற்றிக் கூறவந்த இடத்து,

மீண்டும் பொழில்பழை யாறை
அமர்நீதி வெண்பொடியின்
முண்டம் தரித்த பிராற்குநல்
லூரின்முன் கோவணநேர்
கொண்டிங் கருள்என்று தன்பெருஞ்
செல்வமும் தன்னையும்தன்
துண்ட மதிநுத லாளையும்
ஈந்த தொழிலினனே

என்று குறிப்பிட்டுச் சென்றனர்.

அதாவது கோவணம் இருந்த தராசுத்தட்டு நிறைகாணச் செல்வத்தையும், துணிமணிகளையும் இட்டதோடு இன்றித் தாமும் தம் மனைவியாரும் ஏறினர் என்பதாம். ஆனால், சேக்கிழார் பெருமானார் தராசுத் தட்டில் ஏறியவர்கள் மனைவியாரும் அமர் நீதியாரும் மட்டும் அல்லர்; அவர்களுடன் அவர்கள்தம் குழந்தையும் ஏறியிருந்தது என்பதை,

மனம கிழ்ந்தவர் மலர்க்கழல் சென்னியால் வணங்கிப்
புனைம லர்க்குழல் மனைவியார் தம்மொடு புதல்வன்
தனையு டன்கொடு தனித்துலை வலங்கொண்டு தகவால்
இனைய செய்கையில் ஏறுவார் கூறுவார் எடுத்து

என்றதோடு நில்லாது,

தொழுது போற்றிஅத் துலைமிசை நின்றுநேர் துதிக்கும்
வழுவில் அன்பரும் மைந்தரும் மனைவியார் தாமும்
முழுதும் இன்னருள் பெற்றுத்தம் முன்தொழு திருக்கும்
அழிவில் வான்பதம் கொடுத்தெழுந் தருளினார் ஐயர்

என்றும் பாடித் தம் கருத்தை வலியுறுத்தினார்.

ஆகவே, சேக்கிழார் பெருமானார் சிற்சில சமயங்களில் முரண்களும் காட்ட வேண்டி இருந்தது. ஆனால், அம்முரண் பாடான கருத்துக்களும் முற்றிலும் ஒப்புக்கொள்ளக்கூடியனவே அன்றி வேறல்ல. இதனை அறிந்தே ஈண்டு ''வெல்லும் தகைய முரண்காட்டி'' என்று பாடப்பட்டது. ஆயினும், ஈண்டுச் சிலர் நம்பியாண்டார் நம்பிகளும் தராசுத் தட்டில் குழந்தையுப் ஏற்றப்பட்டது என்பதைக் கூறியே

யுள்ளார் என்று வாதாடி அதற்குச் சான்றாக, ''தன்பெருஞ் செல்வமும்'' என்னும் தொடரைக் காட்டி ''ஈண்டுச் ''செல்வம்'' என்பது புத்திரச் செல்வமே ஆகும்'' என்று எடுத்துக் காட்டுவர். செல்வம் என்று புத்திரர்களைக் கூறுவது மரபே யானாலும், ஈண்டு நம்பியாண்டார் நம்பிகளால் குறிப்பிடப்பட்ட பெருஞ் செல்வம் என்பது புத்திரரை அன்று. இதனை அவர் பாடிக் காட்டியுள்ள செய்யுள் போக்கைக் கொண்டே உணரலாம். ''தன்னையும் தன் துண்டமதிநுதலாளையும்'' என இணைத்துக் கூறாது செல்வமும் எனப் பிரித்துச் காட்டி இருப்பதை நோக்கவும். ஆகவே, செல்வமும் என்பது ஈண்டுப் பொருட் செல்வமே அன்றிப் புத்திரச் செல்வம் அன்று. இதனை விளக்கவே பெருஞ் செல்வமும் என்று அடைகொடுத்துப் பேசினர். இன்னோரன்ன காரணங்களால் நம்பியாண்டார் நம்பிகளின் கருத்துத் தராசுத்தட்டில் ஏறியவர்கள் அமர்நீதி நாயனாரும், அவர்தம் மனைவியாருமே பொருள்களுமே என அறிதல்வேண்டும். சேக்கிழார் பெருமானார் நம்பியாண்டார் நம்பிகள் பாடியுள்ள செய்யுளில் காணும் பெருஞ் செல்வமும் என்னும் தொடர்க்கு ஒருசிலர் புத்திரச் செல்வம் என்று பொருள் கண்டு, மயங்கக் கூடும் என்பதை அறிந்தே தராசுத்தட்டில் ஏறியவர்கள் நாயனாரும், அவர்தம் மனைவியாரும், குழந்தையும் என்பதை ஒரு முறை மட்டும் குறிப்பிடாமல் இருமுறையும் குறிப்பிட்டுள்ளனர். மேலும், தம் கருத்தை வலியுறுத்தவே ''புதல்வன் தனையுடன் கொடு'' என்றும் ''மைந்தரும்,'' என்று பாடிக் காட்டினார்.

திருஞானசம்பந்தர் சமணர்களைக் கழுவேறுமாறு செய்ததுஅவருக்கு மாசு அன்றோ என்று நம் சமயாசாரியருக்கும் குற்றம் கற்பிப்பார் உணரும் வகையில்,

புகலியில் வந்த ஞானப் புங்கவர் அதனைக் கேட்டும்
இகலிலர் எனினும் சைவர் இருந்துவாழ் மடத்தில் தீங்கு
தகலிலாச் சமணர் செய்த தன்மையால் சாலும் என்றே
மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த வேலை

என்று பாடிக் குற்றம் இல்லை என்பதை விளக்கிக் காட்டினர்.

மற்றும் ஒரு சிலர் "தாதையின் தாளை தனயன் வெட்டுதல் ஒண்ணுமோ? அது குற்றம்தானே" என்று சண்டேசுரர் மீதும் குற்றம் கூறுபவர் உள்ளம் கொள்ளும் வகையில் தந்தையார் செய்தது தவறு என்பதையும், அடியார்கள் செய்கை யாவும் தவச் செய்கையே அன்றி, அவச் செய்கை அன்று என்பதையும் விளக்குபவராய்,

வந்து மிகைசெய் தாதைதாள்
மழுவால் துணித்த மறைச்சிறுவர்
அந்த உடம்பு தன்னுடனே
அரனுர் மகனுர் ஆயினுர்
இந்த நிலைமை அறிந்தாரார்
ஈறி லாதார் தமக்கன்பு
தந்த அடியார் செய்தனவே
தவமாம் அன்றே சாற்றுங்கால்

என்று பாடிக் காட்டினர்,

இறைவர், அடியார் செய்தனவற்றையும் தவமாக்குவர் என்ற கருத்தை நம் சேக்கிழார் பெருமானுர், திருவாசகம் பயின்ற பயிற்சியினுல்தான் அறிந்தார் ஆதலின், இங்ஙனம் பாடினுர். இந்த உண்மையினை,

புத்தன் முதலாய புல்அறிவில் பலசமயம்
தத்தம் மதங்களிலும் கட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தம் சிவம்ஆக்கிச் செய்தனவே தவம்ஆக்கும்
அத்தன் கருணையினுல் தோள்நோக்கம் ஆடாமோ

தீதில்லை மாணி சிவகருமம் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டும்
சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர்தொழப்
பாதகமே சோறு பற்றினவா தோணேக்கம்

என்னும் திருவாசகப் பாடல்கள் கொண்டு நன்கு தெரியலாம்.

"ஆகவே சேக்கிழார்" விலக்கு விலகக் கவிபாடவல்லவர் என்பது தேற்றம்.

விதிகளைத் தழுவிப் பாடிய கவிகள் பெரிய புராணத்தில் பலவுண்டு: திருமணத்திற்குமுன் பலவிதிகளை மேற் கொள்ளுதல் மரபாகும். இதனைத் தடுத்தாட்கொண்ட புராணத்தும் காணலாம். "குலமுதல் அறிவில் மிக்கோர் கோத்திர முறையும் தேர்ந்து" என்பதும், "குறித்து நாள் ஓலைவிட்டார்" என்பதும், "நீள் முளை சாத்தினார்கள்" என் பதும், "பணைமுரசு இயம்ப வாழ்த்திப் பைம்பொன் நாண் காப்புச் சேர்த்தார்" என்பதும், மற்றும் பல செய்திகளும் பாடப் பட்டு இருத்தல் "விதிதழுவி" பாடப்பட்டமைக்கு ஏற்ற சான்றாகும். விதிதழுவிப் பாடவல்லவர் என்பதைத் தாமே "மாமறை விதிவழாமல் மணத்துறைக் கடன்கள் ஆற்றி" என்று கூறு மாற்றாலும் தெளியலாம்.

சேக்கிழார் பெருமானார் பெரியபுராணம் பாட மூல இலக்கியங்களாக உள்ளவை, திருமுறைகள். இந்தத் திரு முறைகளில் காணும் கருத்துக்களுக்கு முரணாகாதவாறு கவிபாகும் திறமை சேக்கிழார் பெற்றுள்ளார். சுந்தரர் தம் திருத்தொண்டத் தொகையில் திருநீலகண்டரைப் பாடும்போது, "திருநீலகண்டத்துக் குயவனார்க்கு அடியேன்" என்று குலத்தைக் குறிப்பிட்டுச் சொன்னதற்கு இணங்கச் சேக்கிழார் "வேட்கோவர் குலத்துவந்தார்" என்றும், சுந்தரர் "வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்கு அடி யேன்" என்பதற்கு விளக்கம் கூறுபவர்போல், "மெய்த் தவ வேடமே மெய்ப் பொருளெனத் தொழுது வென்றார்" என்றும், காரைக்கால் அம்மையார் தமது அற்புதத் திருவந் தாதியில்,

> பெறினும் பிறிதியாதும் வேண்டேம் நமக்கீ
> துறினும் உருதொழியு மேனும் - சிறிதுணர்த்தி
> மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்தன் பேயாய
> நற்கணத்தில் ஒன்றாய நாம்

என்று பாடியிருப்பதை அறிந்து,

பொற்புடைச் செய்ய பாத புண்டரீ கங்கள் போற்றும்
நற்கணத் தினில்ஒன் ருனேன் நான்என்று நயந்து பாடி

என்றும்,

கண்ணப்ப நாயனுர் தம் கண்ணை இடந்து காளத்தியப்பர் கண்ணில் வைக்க முயன்றபோது, இறைவர் அவ்வாறு செய்ய உடன்படாது உடனே, "நில்லு கண்ணப்ப நில்லு கண்ணப்ப என் அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப" என்று மூன்று முறை நில் நில் நில் என்று நக்கீரர் தாம் பாடிய திருக் கண்ணப்ப தேவர் திருமறத்தில் பாடி இருப் பதை உட்கொண்ட இவர்,

தங்கண்முன் இடக்கும் கையைத்
தடுக்கமுன் றடுக்கு நாக
கங்கணர் அமுத வர்க்குக்
கண்ணப்ப நிற்க

என்றும் பாடிக்காட்டியிருப்பனவற்றைப் பார்க்குங்கால் மூல இலக்கியமே வேருகாது பாடவல்லார் என்பதை நன்கு அறியலாம். இந்தக் கருத்தையே "மூல இலக்கியமே வேருகாது" என்றனர். இவ்வாறு பல சான்றுகளை எடுத்துக் காட்டலாம்.

இறைவர் தமக்குத் திருவருள் செய்யத் தாம் பணி பல புரிந்தனர் என்பதற்குச் சான்ருக, அவர் குன்றத்தூரில் திருநாகேச்சுரர் என்னும் பெயரால் திருத்தலம் அமைத்து வழிபட்டதே சான்ருகும். "இதனை நித்தன் உறை திருநாகேச் சுரத்தில் அன்பு நிறைதலினுல் மறவாத நிலைமை மிக்கார்" என்று சேக்கிழார் புராணம் கூறுதல் ஈண்டு அறியும்போது, "அல்லும்பகலும் அம்பலவர் அருள் தரற்குஆய அரும்பெரும் பணி செய்து" என்பது உண்மை என்பதை உணரலாம். அன்றி இந்த "அல்லும்***பணி செய்து" என்னும் தொடரை அடியார்க்கு அடையாக்கிப் பொருள் காணின், அடியார்கள் இம்முறையில் தொண்டு செய்து அருள் பெற்றதை அவ் அவர்தம்புராணத்துக் கண்டு தெளியலாம்.

அடியார்கள் அல்லும் பகலும் தொண்டு செய்தவர்கள் என்பதைத் தொண்டர் புராணத்தில் பரக்கக் காணலாம். திண்ணனார் இரவு முழுதும் கண் விழித்திருந்து புரிந்த தொண்டு இன்னது என்பதை,

அவ்வழி அந்திமாலை
அணைதலும் இரவு சேரும்
வெவ்விலங் குளஎன் றஞ்சி
மெய்ம்மையின் வேறு கொள்ளாச்
செவ்விய அன்பு தாங்கித்
திருக்கையில் சிலையும் தாங்கி
மைவ்வரை என்ன ஐயர்
மருங்குநின் றகலா நின்றார்

என்ற பாடலால் தெரியலாம். "கருங்கடல் என்ன நின்று கண்துயிலாத வீரர்" என்றும் கூறி இருப்பதையும் காண்க.

பகல்போதும் தொண்டினையே சிறப்பாகக் கொண்டு செய்ததைச் சிறுத்தொண்டர் வரலாற்றில் பகற்போதில் அடியாரைத் தேடிச் சென்ற நிலையினைத் தொண்டர் சீர் பரவுவார்.

அம்பலவர் அடியாரை அமுதுசெய்விப் பார்இற்றைக்
கெம்பெருமான் யாவரையும் கண்டிலர்தே டிப்போனார்
வம்பெனநீர் எழுந்தருளி வருந்திருவே டங்கண்டால்
தம்பெரிய பேறென்றே மிகமகிழ்வர் இனித்தாழார்

என்று பாடியுள்ளனர்.

இவற்றால் அடியவர்கள் அரனார் அருள் பெறும் நிலையில் அல்லும் பகலும் தொண்டு செய்தமை காண்க.

சேக்கிழார் பெருமானார்தம் கவி, கனிவுதரும் கவி. அக்கவிகளைக் கானத்துடன் இசைக்குங்கால் கல்லும் கரையும். இதனைப் பல்வேறு இடத்துக் காணக் கூடு மாயினும், பரவையார் விரகதாபத்தால் வாய்விண்டு பாடியதைப் படித்தாலே போதுமானது.

கந்தம் கமழ்மென்குழ லீர்இதுஎன்
கலைவாள் மதியம் கனல்வான் எனைஇச்
சந்தின் தழலைப் பனிநீர் அளவித்
தடவும் கொடியீர் தவிரீர் தவரீர்
வந்திங் குலவி நிலவும் விரையார்
மலையா னிலமும் எரியாய் வருமால்
அந்தண் புனலும் அரவும் விரவும்
சடையான் அருள்பெற் றுடையார் அருளார்

புலரும் படியன் றிரவென் அளவும்
பொறையும் நிறையும் இறையும் தரியா
உலரும் தனமும் மனமும் வினையேன்
ஒருவன் அளவோ பெருவாழ் வுரையீர்
பலரும் புரியும் துயர்தான் இதுவோ
படைமன் மதனர் புடைநின் றகலார்
அலரும் நிலவும் மலரும் முடியார்
அருள்பெற் றுடையார் அவரோ அறியார்

தேரும் கொடியும் மிடையும் மறுகில்
திருவா ரூரில் நீரே அல்லால்
ஆரென் துயரம் அறிவார் அடிகேள்
அடியேன் அயரும் படியோ இதுதான்
நீரும் பிறையும் பொறிவாள் அரவின்
நிரையும் நிரைவெண் தலையின் புடையே
ஊரும் சடையீர் விடைமேல் வருவீர்
உமதன் பிலர்போல் யானோ உறுவேன்

இப்பாடல்களைப் போலப் பல பாடியிருப்பதால் ஈண்டு, திரு பிள்ளை அவர்கள் "கல்லும் கரையக் கவிபாடும் கனிவாய்" என்று பாராட்டிப் பாடியதன் சிறப்புப் புலனாகும்.

சேக்கிழார் பெருமானார் அடியார்களின் அருமை பெருமைகளைப் பாராட்டி இருப்பதுபோல் எப்புலவர்களும் பாராட்டி இலர். இவ்வரிய உண்மையினை,

ஒழியாப் பெருமைச் சடையனார்
உரிமைச் செல்வத் திருமனையார்
அழியாப் புரங்கள் எய்தழித்தார்
ஆண்ட நம்பி தனைப்பயந்தார்

இழியாக் குலத்தில் இசைஞானிப்
பிராட்டி யாரை என்சிறுபுன்
மொழியால் புகழ முடியுமோ
முடியா தெவர்க்கும் முடியாதால்

என்ற பாடலாலும்,

நீண்டசெஞ் சடையி னார்க்கு
நினைப்பினால் கோயில் ஆக்கிப்
பூண்டஅன் பிடைய றாத
பூசலார் போற்றாள் போற்றி
ஆண்டகை வளவர் கோமான்
உலகுய்ய அளித்த செல்வப்
பாண்டிமா தேவி யார்தம்
பாதங்கள் பரவ லுற்றேன்

என்ற செய்யுலாலும் நன்கு உணரலாம். (44)

4. எண்ணி இதுசெய் திடின்இதனால்
எய்தப் படுவ திஃதெய்தா
திரியப் படுவ திஃதுண்மை
எய்தப் படலால் பயன்இன்றேல்
நண்ணி-யஅதை மறந்தொழிக
நள்ளார் முனைமேல் இப்பொழுது
நயந்து படர்ந்து பொருதுவமேல்
நமதே ஆகும் நகுவாகை
தண்ணி மயம்போல் புகழ்ப்போர்வை
தாங்கற் காய கருமம்இது
தப்பா தாற்றப் பொருள்வருவாய்
தவாதுண் டாம்என் றிவைமுதலாம்
கண்ணி வளவற் குரைத்தருள்செய்
கனிவாய் முத்தம் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங்
கனிவாய் முத்தம் தருகவே

[அ. சொ.] எய்தப்படுவது - அடையப் பெறுவது, எய்தாது-அடையப் பெருமல், இரியப்படுவது-சிதறுண்டு போவது, நண்ணிய-நெருங்கி, மேற்கொண்டுள்ள, நள்ளார்-பகைவர், முனைமேல் - பகைப்புலத்தின் மீது, படர்ந்து - சென்று, பொருதுவமேல்—சண்டை செய்தால், நகு-விளங்கும், வாகை-வெற்றி, ஆற்ற-செய்ய, தவாது-குறையாது, ஆர்ங்கண்ணி-ஆத்திமாலை, வளவற்கு - அனபாய சோழனுக்கு,

**விளக்கம்:** இப்பாடலில் சேக்கிழார் பெருமானுர் தாம் அமைச்சராக இருந்தபோது, அநபாய சோழமகாராசர்க்கு அவ்வப்போது அறிவுறுத்தி வந்த திறனைக் காணலாம். மேலும், இப்பகுதியில் அமைச்சர்களின் கடமை இன்ன என்பதையும் ஈண்டே உணரலால். இப்பாடலில் திருக்குறட் பாக்களின் கருத்துக்கள் பலவும் பொதிந்துள்ளன. திருக்குறள் பொருட்பாலில் அமைச்சர்க்கு எனப் பத்து அதிகாரங்கள் பகுத்துக் கூறப்பட்டிள்ளன.

எண்ணி எண்ணி அரசர்க்கு இயம்பவேண்டிய கடன் அமைச்சர்க்கு உரியது. இது குறித்தே வள்ளுவர்,

"அறிகொன் றறியான் எனினும் உறுதி
உழைஇருந்தான் கூறல் கடன்"

கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு

வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்டது அமைச்சு

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்லது அமைச்சு

என்றனர்.

இவ்வாறு செய்வது அமைச்சர் கடமையே ஆகும். பழமொழி நானூறு இதனை,

உலப்பில் உலகத்து உறுதியே நோக்கிக்
குலைத்தடக்கி நல்லறம் கொள்ளார்க்கு உறுத்தல்

மலைத்துஅமுது உண்ணக் குழவியைத் தாயர்
அலைத்துப்பால் பெய்து விடல்

என்று கூறுகிறது.

மூரித்தேன் தாரி ஞய்நீ முனியிலும் உறுதி நோக்கிப்
பாரித்தேன் தரும நுண்நூல் வழக்கது வாதல் கண்டே

அற்றமின் றுலகம் காக்கும்
அருந்தொழில் புரிந்து நின்முன்
கற்றவர் மொழிந்த வாறு
கழிப்பது கடன தாகும்
மற்றவர்க் குறுதி நோக்கி
வருபழி வழிகள் தூரச்
செற்றவர்ச் செகுக்கும் சூழ்ச்சி
தெருண்டவர் கண்ட தன்றே

என்பன சூளாமணி.

தம்முயிர்க் குறுதி எண்ணுர்
தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி
விடாதுநின்று உரைக்கும் மெய்யர்

என்பது கம்பராமாயணம்.

மன்னவர் செவியழல் மடுத்த தாம்என
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவர் அமைச்சர்கள் துணைவர் மேலையோர்
ஒன்னலர் விழைந்தவா றுரைக்கின் ருர்களே

முற்றுற வருவதும் முதலும் அன்னதால்
பெற்றிடு பயன்களும் பிறவும் தூக்கியே
தெற்றென உணர்ந்துபின் பலவும் செய்வரால்
குற்றம்ஒன் றவர்வயின் குறுக வல்லதோ

என்று கந்தபுராணமும்,

செவிசுடச் சென்ருங்கு இடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா கவுள்மதத்த

கைம்மா வயத்ததோ பாகுமற் றெத்திறத்தும்
அம்மாண் பினவே அமைச்சு

என்று நீதிநெறி விளக்கமும் கூறியுள்ளது.

காலத்தையும் கருமத்தையும் உணர்த்த வேண்டியவனும் அமைச்சனே. இதனைத்தான் வள்ளுவர்,

" கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு "

என்றனர்.

இப்பண்புகள் அமைச்சனுக்குத் தேவை என்பதை விநாயக புராணம்,

நணிபயன் பயப்பச் சிறுமுயற் சியினால்
நலத்தகு வினையும்மற் றனைய
வினையினைத் தொடங்குங் கால்அது தனக்கு
வேண்டிய பொருள்களும் படையும்
இனிதுறப் பொழுதும் உபாயமும் செயலும்
இடைப்படும் ஊறுகள் நீக்கித்
துணிவுற முடிவு போக்கிடு மாறும்
சூழ்தர வல்லவன் அமைச்சன்

என்கிறது.

காலம் அறிந்து செயல்களைச் செய்தல் வேண்டுமெனக் கூற வேண்டியவனும் அமைச்சனுவான். வெற்றி காணற்குக் காலம் இன்றியமையாதது. இதனால்தான் வள்ளுவர்,

" பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு "

" ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தான் செயின் "

என்று கூறியுள்ளனர்.

இக் குறட்பாக்களின் விளக்கம் போன்று சிந்தாமணியும்,

இடத்தொடு பொழுதும் நாடி
எவ்வினைக் கண்ணும் அஞ்சார்
மடப்படல் இன்றிச் சூழும்
மதிவல்லார்க் கரிய துண்டே

என்கிறது.

அரசர்கட்குத் பொருள் இன்றியமையாதது. அதனைச் சேர்த்தற்கான வழிவகைகளைக் கூறும் பொறுப்பு அமைச்சனையே சார்ந்ததாகும். அரசர்கட்குப் பொருள் வருவாய்க் குரிய வாய்ப்புக்கள் இன்ன என்பது,

"உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்"

என்ற குறளால் தெரிய வருகிறது. இக்குறட்பாவிற்குரிய விளக்கமே,

அருள்கொடு புரக்கப் படும்குடி அன்போ
டளித்திடும் ஆறினில் ஒன்றும்
இருநிலத் தெடுத்த பழம்பொருள் உரிமை
இன்றியே இறந்தவர் பொருளும்
மருவிய சுங்கப் பொருளும்ஒட் டலரை
மாட்டிய பொருளும்ஈட் டுகஇப்
பொருளறம் இன்பம் புகழ்தரும் பகையைப்
புரட்டும்எவ் வினைகளும் முடிக்கும்

என்னும் விநாயக புராணப் பாடல்.

இன்னோரன்ன அமைச்சர்க்குரிய பண்புகளைப் பெற்றவர் சேக்கிழார் பெருமானார். இவற்றையுடையவர் இவர் என்பதையே ஈண்டு ஆசிரியர் நன்கு எடுத்து இயம்பினர்.

இமயம்போல் புகழ் என்பதை "இமயம்போல நிலீஇய ரத்தைநீ நிலமிசையானே" என்றபுறநானூற்றில் காண்க.(45)

5. நிலஞ்சார் தெய்வக் கற்பகமே
நிமல ஞான வாரிதியே
நீடுஞ் சைவப் பெருவாழ்வே
நிலவா நின்ற குணக்குன்றே
வலஞ்சார் பெருநா வலரேறே
மாறா அருட்சிந் தாமணியே
மதிப்பார் மதியுள் எழுஞ்சுடரே
வாழ்த்து வார்தம் பெரும்பேறே
புலஞ்சார் பத்தி விளைநிலமே
போக்கு வரவில் பூரணமே
புந்திக் கினிக்குஞ் சுவையமுதே
போற்றி இனிமேல் ஒருதாயர்
கலஞ்சார் முலைப்பால் அருந்தாத
கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங்
கனிவாய் முத்தந் தருகவே.

*[அ. சொ.] சார்-அடைந்த, நிமல-குற்றம் அற்ற, ஞானவாரிதியே-அறிவுக் கடலே, நிலவா-விளங்கி, வலம்-வெற்றி, ஏறே-தலைவரே, மாறா-தவறாமல், மதிப்பார்-போற்றுபவர், மதியுள்-அறிவில், பூரணமே-நிறைவே, போக்கு-இறப்பு, வரவு-பிறப்பு, புந்திக்கு-அறிவுக்கு, கலம் சார்-செப்புக் குடம் போன்ற,*

**விளக்கம்:** *ஆசிரியர் ஈண்டுச் சேக்கிழார் பெருமானாரை "கற்பகமே, வாரிதியே, பெருவாழ்வே, குணக்குன்றே, நாவலர் ஏறே, சிந்தாமணிச் சுடரே, பெரும்பேறே, பத்திவிளைநிலமே, பூரணமே, அமுதே" என்று வாயாரப் போற்றிப் புகழ்கின்றார்.*

*கற்பகம் என்பது தேவலோகப் பஞ்ச விருட்சங்களுள் ஒன்று. பஞ்ச விருட்சங்கள் அரிச்சந்தானம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன. தன்னைச்*

சார்ந்தார்க்கு வேண்டிதைத் தர வல்லது. ஈண்டுச் சேக்கிழாராகிய கற்பகம், நில உலகில் வாழ்ந்து, பெரிய புராணத்தின் வாயிலாக, இறைவனிடத்து அன்பு, அடியார் இடத்து அன்பு முதலானவற்றை வேண்டியவர்க்கு அளித்து நிற்கின்றது. சேக்கிழார் ஞானக் கடலே ஆவார்.

மற்றி தற்குப் பதிகம்வன் தொண்டர்தாம்
புற்றி டத்தெம் புராணர் அருளினல்
சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகையெனப்
பெற்ற நற்பதி கம்தொழப் பெற்றதால்

என்னும், இச்செய்யுளில் பதிகம் என்னும் வடமொழிச் சொல்லை இரு முறை பெய்துள்ளார். முன்னது பிரதிகம் என்னும் வடசொல்லின் திரிபு. பின்னது பங்கிகம் என்னும் வடசொல்லின் திரிபு. இதனல் இவரது வடமொழி ஞானம் பெறப்படுகிறது.

அருக்கன்முதல் கோள்அனைத்தும் அழகியவுச்
பெருக்கவலி யுடன் நிற்க [சங்களிலே

என்று பாடியதனல், இவர்தம் சோதிட ஞானத்தையும் அறியலாம்.

முந்தைமறை நூல்மரபின்
மொழிந்தமுறை எழுந்தவேய்
அந்தமுதல் நால்இரண்டில்
அரிந்துநரம் புறுதானம்
வந்துதுளை நிரைஆக்கி
வாயுமுதல் வழங்குதுளை
அந்தமில்சீர் இடையீட்டின்
அங்குலி எண்களின் அமைத்து
எண்ணியநூல் பெருவண்ணம்
இடைவண்ணம் வனப்பென்னும்
வண்ணஇசை வகைஎல்லாம்
மாதுரிய நாதத்தில்

நண்ணியபா ணியும்இயலும்
தூக்குநடை முதற்கதியில்
பண்ணமைய எழும்ஓசை
எம்மருங்கும் பரப்பினார்

என்று பாடி இருப்பது கொண்டு இவரது இசை ஞானத்தையும் அறியலாம்.

விடம் தீண்டப்பட்டவர்க்கு ஏறும் வேகம் எட்டு. அவை, மூர்ச்சை, வெதுப்பு, கண் செருகல், வாந்தி, கபம், உணர்ச்சிக் கேடு, விரைப்பு, மரணம் என்பன. இது மருத்துவ நூலின் கண்ட உண்மை. இதனைச் சேக்கிழார் நன்கு உணர்ந்த காரணத்தினால்தான்,

எரிவிடம் முறையே ஏறித்
தலைக்கொண்ட ஏழாம்வேகம்
தெரிவுற எயிறும் கண்ணும்
மேனியும் கருகித் தீந்து
விரியுரை குழறி ஆவி
விடக்கொண்டு மயங்கி வீழ்வான்
பரிகலக் குருத்தைத் தாயர்பால்
வைத்துப் படிமேல் வீழ்ந்தான்

என்று பாடிக் காட்டித் தமது மருத்துவ ஞானத்தை அறியச் செய்துள்ளனர்.

சேக்கிழாரது உறுப்பு நூல் ஞானத்தை,

'இருநிலத்தின் மிசைதோய்ந்த எழுதரிய திருவடியும்
திருவடியில் திருப்பஞ்ச முத்திரையும் திகழ்ந் திலங்க.'

என்னும் அடிகளில் குறிப்பிட்டிருப்பதுகொண்டு அறியலாம்.

இவ்வாறு பல ஞானங்கட்கு உறைவிடமாக இவர் இருந்தமையின், ஞானவாரிதியே ஆவார். இவர் தம் ஞானத்தில் குற்றம் காண முடியாமையின் இவர் ஞானம், ''நிமல ஞானமாயிற்று.''

சேக்கிழார் சைவ வாழ்வே பெருவாழ்வாகக் கொண்டவர். இதனை அவர் திருவாக்குகள் பல தெரிவித்து நிற்

கின்றன. "மிகு சைவத்துறை விளங்க" என்று பாடுதலாலும், அருகனைத் தெய்வமாகத் தம் வாயினால் கூறுதற்கும் விரும் பாராய் அமணர்கள் தம் பொய்கொள் விமானம்" என்றும் சைவ சமயம் மேம்பாட்டையும் சிவனடியார்களின் சிறப்பை யும் கூறுமிடத்து,

அருட்பெருகு தனிக்கடலும் உலகுக் கெல்லாம்
அன்புசெறி கடலுமாம் எனவும் ஓங்கும்
பொருட்சமயம் முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் இரண்டெனவிப் புவனம்உய்ய
இருட்கடுவுண் டவரருளும் அகில மெல்லாம்
ஈன்றாள்தன் திருவருளும் எனவும் கூடித்
தெருட்கலைஞா னக்கன்றும் அரசும் சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தார் அன்றே

என்று பாடித் தம் அடியார் பக்தியையும் காட்டி யுள்ளமையின் சைவப் பெருவாழ்வு ஆயினர். நீடு சைவ சமயம், எல்லாச் சமயக் கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டு துலங்குகின்றமையின் நீடும் சைவம் என்றனர் மேலும், வடஅமெரிக்காவில் கோலறடோ என்னும் ஆற்றின் அருகே உள்ள ஒரு சிறு குன்றின்மீது சிவன் கோயில் என்ற ஓர் இடம் இருக்கிறது. இவ்விடம் பல்லாயிரம் ஆண்டுக்கு முற் பட்டது என்பர் ஆய்வாளர்.

In the wild mountanious State of Colorado seventh largest in America scientist of the W. S. Musem of Natural History three months ago announced discovery of a Lost World. The focal point was Shiva's grant Temple a half square mile of solid rock plateau isolated from the main land by 9000 ft. Canyons eroded by rivers some 200000 years ago.

—London news review 23-9-1937

ஆசியா கண்டத்து வழிபாட்டிலும் சைவ வணக்கக் குறிப்புக் காணப்படுகிறது. அவர்கள் கடவுள் இடபத்தில்

வீற்றிருக்க இறைவி சிம்பத்தில் வீற்றிருப்பாளாம். இது நம் அம்மை அப்பரின் தோற்றப் பொலிவு அன்றோ!

This god is seated in the bull throne, and the goddess wearing the mural crown sits on a lion throne.

—The Hittle Empire.

மோசே என்பவர் ஏகோவா அருளிய பத்துக் கட்டளைகளையும் சிவன் என்னும் மாதத்தில் ஆறும் தேதி மலைமீது இருந்து மக்களுக்கு மொழிந்தாராம். இவ்வாறு விவிலிய பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

"The events occurred on the 6th day of the third month Sivan." —Analysis of Scripture History.

சுமேரியர் காலத்து நாகரிக நாடுகளில் ஒன்று அக்கேடியா. அவர்கள் சிறப்பாகக் கொண்ட ஏழு விண்மீன்களில் ஒன்று சிவன் என்ற பெயரியது.

The Indian god Shiva or Shiba fathers of Sebo appears in the Ural Altaik astronomy of the Ackkadian the third star of their seven parant stars.

—History of Choronology of the Mith Making Age.

ஜப்பானிய சமயப் பிரிவிலும் இலிங்க வணக்கம் இருப்பதாக வரலாற்று ஆசிரியர் கூறுவர்.

Dr. Kats says that even now in the secluded parts of the land, public Phallic worships contained.

—The indigenous Religion of Japan.

சர் ஜான் மார்ஷல் அவர்கள், தமது புதைபொருள் ஆராய்ச்சி வழி, சைவத்தின் மிக மிகப் பழமையினையும், அப்பழமை மாக்கல் காலத்திற்கும் முற்பட்டது என்பதையும் குறிப்பிட்டுள்ளனர்.

Saivism has a history going back to the chalcolithic Age or perhaps even further still and it

thus takes its place as the most ancient living failth in the world.

—Mohenjo-Dro and the Indus Civilization.

டாக்டர் G. W. Pope அவர்கள் சைவ சமயத்தைப் பற்றிக் கொண்டுள்ள கருத்துத் திராவிடர்களின் அறிவின் விளைவு என்பது. இந்தியாவில் உள்ள எல்லாச் சமயத்திலும் விரிவானது என்பதும் செல்வாக்கு உடையது மதிப்பு வாய்ந்தது என்பனவும் அவரது கருத்துக்கள் ஆகும்.

It is the choicest product of the Dravidian intelect and the most elaborate influential, and undoubtedly the more intrinsicically valuable of all the religions of India

—Rev. Dr. Pope.

கௌடி என்பவர் "சைவ சித்தாந்த வழிபாட்டு முறைமை, கருத்துச் சிறப்பு அமைந்த கொள்கை, வேறு எதற்கும் இன்று, இது பழையானது. பிற சமயங்கட்கு வழி காட்டி. ஏனையவை சமீப காலத்தவை. சமய உணர்வு, உண்மை முதலியவற்றை உணர்த்தும் ஆற்றல் இதற்கே உண்டு" என்று எழுதியுள்ளார்.

There is no school of thought and no system of faith or worship that comes to us with anything like the claims of 'Saiva Sidantha. The system possesses the merits of great antiquity. In the religious world The Saiva system is the heir to all that is most ancient in South India; it is the religion of the Tamil people by the side of which every other form is of comparatively foreign and recent origin. As a system of religious thought, as an expression of faith and life, theSaiva Sidantha is by far the best that South India possesses.

—Rev. Goudie.

நீதியினுல் இவைஎல்லாம் ஓரிடத்தே காண
நின்றதுயா தொருசமயம் அதுசமயம் பொருள்நூல்
ஆதலினுல் இவையெல்லாம் அருமறைஆ கமத்தே
அடங்கியடும் அவைஇரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்

என்று சிவஞான சித்தியார் வாக்கையும் ஈண்டு உணர்க. நீடும் சைவம் என்றது நீண்ட காலமாக இருந்து வரும் பழைய சமயம் என்ற பொருளும் தரும், Sir John Marshal என்பார் Saivisim is the most ancient living religion in the world என்றும், சித்தாந்த தீபிகா என்னும் பத்திரிகை இங்கிலாந்து சைவ சமய நகரமாகவே தோற்றம் அளிக்கிறது என்பதை It is impossible to think of England as anything else except a Saivaite country என்றும் கூறுவதால் நீடும் என்னும் சொல் எங்கும் நீண்டு விளங்கும் என்ற பொருளும் தருதலை அறியலாம்.

சேக்கிழார் பெருமானுர் பல நற்குணங்கட்கு உறைவிடம். அவற்றுள் சிறப்பாக அவரது பணிவு அடக்கம் முதலான பண்புகளை எடுத்துக் காட்டலாம். சுந்தரரைப் பற்றிக் கூறுமிடத்து,

உலகுய்ய ஆண்டு கொள்ளப்
பெற்றவர் பாதம் உன்னித்
தலைமிசை வைத்து வாழும்
தலைமைநம் தலைமை யாகும்

என்றும், கண்ணப்பரைக் கழற வந்த இடத்து "நம் பெருமான் செய்தபணி நாம்தெரிந்த வாறுரைப்பாம்" என்றும், மானக்கஞ்சாறரைப் பற்றிப் பேச வந்த இடத்து,

பான்மைத்திண் கலய ஞரைப் பணிந்தவர் அருளி ஞலே
மானக்கஞ் சாறர் மிக்க வண்புகழ் வழுத்தல் உற்றேன்

என்றும் பாடித் தம் பணிவுடைமையினைக் காட்டியுள்ளமையின், "நிலவா நின்ற குணக்குன்றே" எனப்பட்டார்.

சேக்கிழார் மிக்க நாவன்மை படைத்தவர் என்பதை அவர் பாடியுள்ள பெரிய புராணமே சான்ருக நின்று காட்ட

வல்லது. இதனை அனபாயன் சீவகசிந்தாமணியில் ஈடுபட்டிருந்ததை அறிந்து உடனே அவனிடம், "சமணர் பொய் நூல் இது மறுமைக்கு ஆகாது இம்மைக்கும் அற்றே வளமருவுகின்ற சிவ கதை இம்மைக்கும் மறுமைக்கும் உறுதி" என்று தம் நாவன்மையால் கூறக் கேட்டதும் சோழன் அவரை நோக்கி,

அவகதையாய்ப் பயன்அற்ற கதையீ தாகில்
அம்மையும் இம்மையும் உறுதிபயக்கத் தக்க
சிவகதைஏ து*** சாற்றும்

என்று கேட்கும் அளவுக்கு வந்தனன் எனின், இது சேக்கிழாரின் நாவன்மையைக் காட்ட வல்லது அன்றோ? ஆகவே, இவர் பெருநாவலர் ஏறு ஆயினர். தம் நாவன்மையால் வெற்றியும் கண்டவர் ஆதலின் வலஞ்சார் பெருநாவலர் ஏறும் ஆயினர்.

சிந்தாமணி தெய்வலோகக் கல். இது நினைத்ததை அளிக்கும் இயல்புடையது. அதுபோலப் பெரிய புராணமாம் காப்பியமும் அறிஞர்க்கும் அன்பர்க்கும் நினைத்ததை அளிக்கவல்லது. அதனை யாத்துத் தந்தவர் சேக்கிழார் ஆதலின், அவர் மாறு அருள் சிந்தாமணியானார். சேக்கிழார் அருட் பண்பும் உடைவர் ஆதலின், அப்பண்பைப் பல இடங்களில் பாடியும் காட்டியுள்ளார். திருநாவுக்கரசர் புராணத்தில்,

தம்பியார் உளராக வேண்டும்என வைத்ததயா
உம்பருலக ணையஉறு நிலைவிலக்க உயிர்தாங்கி
அம்பொன்மணி நூல்தாங்கா தனைத்துயிர்க்கும்
[அருள்தாங்கி
இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதி யாரிருந்தார்

என்று பாடியுள்ளார்.

சேக்கிழார் அறிஞர்களின் மதியுள் பெருஞ் சுடராய்த் திகழ்பவர் என்பதை, அவரைப்பற்றித் தோத்திரங்கள் பல புலவர் பெருமக்களால் பாடப்பட்டது கொண்டு தெளிய

லாம். வடநூற் கடலும், தென்னூற் கடலும் நிலைகண் டுணர்ந்த சிவஞான முனிவர்,

தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னுற்சொல்ல வல்ல பிரான்எங்கள்
பாக்கி யப்பய னுய்ப்பதி குன்றைவாழ்
சேக்கி ழான்அடி சென்னி இருத்துவாம்

என்று பாடித் துதித்தனர்.

சிவஞான முனிவர் காஞ்சிப் புராணத்தில்,

திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்தைந்
திணைவளனும் தெரித்துக் காட்ட
மருத்தொண்டை வாய்ச்சியர்சூழ் குன்றைநகர்க்
குலக்கவியே வல்லன் அல்லாற்
கருத்தொண்டர் எம்போல்வார் எவ்வாறு
தெரிந்துரைப்பர்

என்று பாராட்டியுள்ளார்.

சபாபதி நாவலர், சிதம்பர சபாநாதர் புராணத்துள்,

ஞாலம்மலை கடல்தன்னில் பெரியதெது
எனஎடுத்து ஞான மாள்செங்
கோல் அறபாயன்வின வியமுத் திறக்குறிப்பைக்
குறிப்பின் ஓர்ந்து
சாலவுயர் திருக்குறள்மூன் றிறையாக
எழுதியவன் அரசு தாங்கி
வாலறிவால் திருத்தொண்டர் புகழ்விரித்த
சேக்கிழார் மலர்த்தாள் போற்றி

என்று போற்றினர்.

ஆதிப் பிரான்அடி யார்அறு பான்மூவர்
நீதிச் சரிதைஎங்கே நீறெங்கே—ஓதிச்
செவிக்குமொழி ஐந்தெங்கே சேக்கிழான் எந்தை
புவிக்குவரல் இன்றேல் புகல்

என்று பூவை கலியாண சுந்தர முதலியார் பாடிப் பரவினர்

சிரங்கொள்திருத் தொண்டர்புராணத்தை அளவிடற்குச்
சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் அறிதே

என்று துதித்தனர் உமாபதி சிவாசாரியர்.

காவலவன், மண்ணில் கடலில் மலையில் பெரிதென்என
எண்ணிஎழு திக்கொடுத்த ஏற்றக்கை

எனக் கம்பரும் கனிவுடன் போற்றியுள்ளார். இன்னோரன்ன காரணங்களால் சேக்கிழார் மதியார் மதியுள் எழுஞ் சுடராகவும், வாழ்த்துவார் தம் பெரும் பேறுகவும் திகழ்கின்றனர்.

சேக்கிழார் பிறவி நீங்கிப் பேரின்ப நிலை உற்ற காரணத்தால் ஆசிரியர், "தாயர் கலஞ்சார் முலைப்பால் அருந்ாது" என்றனர்.

சேக்கிழார் பெருமானுரைப் போலப் பக்திச் சுவை ததும்பப் பாடவல்லவர் எவரும் இலர். இவரது வர்ணனைகளும் யாவும் பக்தி ரசம் சொட்டும் நிலையில் அமைந்திருக்கும். "அரனுக்கு அன்பர் ஆலின் சிந்தைபோல அலர்ந்தன கதிர்கள் எல்லாம்" என்றும்,

பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடினார்கள் தலையினால் வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தியின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மைபோல விளைந்தன சாலிஎல்லாம்

என்றும், இப்படிப் பல எடுத்துக்காட்டுக்களை எடுத்து இசைக்கலாம். ஆகவே இவர், "புலஞ்சார் பத்திவிளை நிலமே" எனப்பட்டார்.

சேக்கிழார் பெருமானார் திருக்கோவில்களில் சிலை, விக்கிரக வடிவில் வைத்துத் துதிக்கப்பெறும் பேறு பெற்றனர். இப் பேறு பிறப்பு இறப்பு ஒழித்த கடவுள் அடியார்களுக்கே எய்துவதாகும். மேலும், உமாபதி சிவாசாரியார் சேக்கிழார் திருவடி இணைகளைத் துதிப்பவர், பிறவிப் பிணியினின்றும் விடுபடுவர் என்பதை,

அண்ட வாணர்தொழு தில்லை அம்பலவர்
அடிஎடுத் துலகெ லாம்என‌த்
தொண்டர் சீர்பரவு சேக்கி ழான்வரிசை
துன்று குன்றைநகர் ஆதியன்
தண்ட காதிபதி திருநெ றித்தலைமை
தங்கு செங்கைமுகில் பைங்கழல்
புண்ட ரீகமலர் தெண்ட னிட்டுவினை
போக்கு வார்பிறவி நீக்குவார்

என்று போற்றினர்.

இங்ஙனம் சேக்கிழார் பெருமானார் திருவடிகளை வணங்குபவர்கள் பிறவிப் பிணி நீங்குவர் என்றபோது, சேக்கிழார் அதனின்று நீங்கியவர் என்பது தேற்றம். எனவே, அவர் "போக்கு வரவில் பூரணமே" எனப்பட்டார். அதனை விளக்க மேலும் பிள்ளையவர்கள், "இனிமேல் ஒரு தாயர் கலஞ்சார் முலைப்பால் அருந்தாத கனிவாய்" என்றும் போற்றினர். பிறவி எடுத்தால் அன்றோ தாயர் முலைப் பாலினை அருந்த இயலும்?

பிறவி தோறும் தாய்மார்தரும் பால் திருப்பாற் கடலும் சிறிதாகும் அளவுக்கு இருக்கிறது என்பதைச் சோணசல தேவர் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் ஒடுக்கத்தில் நிஷ்டை கூடி இருந்தபோது,

எடுத்தசன னங்கள்தொறும் ஈன்றெடுத்த தாயார்
கொடுத்த முலைப்பால் அனைத்தும்கூட்டில் அடுத்துவளர்
பன்னு கனைத்துளிலும் பாலாழி யும்சிறிதாம்
மன்னு சிதம்பரதே வா

என்று தோத்தரித்ததன் மூலம் அறியலாம்.

சேக்கிழார் யாவர் உள்ளத்தும் இனிக்கும் சுவை அமுதாகத் திகழ்ந்தனர் என்பதை உமாபதி சிவனார் பலபடப் புனைந்து பாடியுள்ளமையினால் தெரியலாம். இதனை,

*வாரணத்தில் இவரைவரக் கண்டதிரு வீதி*
*மறுகுதொறும் தூய்மைசெய்து வாழைகளை நாட்டிப்*
*பூரணகும் பமும்அமைத்துப் பொரியும்மிகத் தூவிப்*
*பொன்னரிமா லையும்நறும்பூ மாலைகளும் தூக்கித்*
*தோரணங்கள் நிரைத்துநிரை நறுந்தூபம் ஏந்திச்*
*சுடர்விளக்கும் ஏற்றிஅணி மணிவிளக்கும் ஏந்தி*
*ஆரணங்கள் விரித்தோதி மாமறையார் எதிர்கொண்*
*டறுகெடுப்ப வாழ்த்தெடுத்தார் அரம்பையார்*
*[எல்லாம்*

*என்று போற்றியதனுல், இவர் எவர்க்கும் சுவை அமுதாய்த் துலங்கிய உண்மை புலனாகிறது.* (46)

6. நூலாறு தேர்ந்தவர் உஞற்றும்அக் குண்டங்கள்
நோக்கிஅழல் பாய மேய
நுவல்புலவர் உதரகுண் டத்தில் சருப்பாய
நோன்மைசால் மேகம் எல்லாம்
சாலாறு பாயவலை யெறியுததி பாயத்
தவாதருவி வரைகள் பாயத்
தையலார் குரிசிலார் மேல்சம்ப ராரிபொழி
சரம்எலாம் பாய மலரில்
காலாறு பாயஅம் மலர்மதுப் பாயக்
கமழ்ந்தபட் டத்தி னின்றுங்
கற்பம் கழுத்தொடிய வாளைபா யப்பொய்கை
கருமேதி பாய மிக்குப்
பாலாறு காலாறு பாய்தொண்டை நன்னுட
பவளவாய் முத்தம் அருளே
பரவுசீர் உலகெலாம் விரவுசே வையர்பிரான்
பவளவாய் முத்தம் அருளே.

[அ. சொ.] *நூல்-வேதநூல், ஆறு-ஆறு வகையான சாத்திரங்கள், உஞற்றும்-நடத்தும், குண்டங்கள்-யாக*

குண்டங்கள், குழிகள், அழல்-ஓமாக்கினி, நுவல்-சிறப்பித்துக் கூறப்படும், புலவர்-தேவர், உதரகுண்டம்-வயிருகிய குழி, சரு-அவிர்ப்பாகம் (தேவர் உணவு), அரிசி, கோதுமை, நெய், பாலுடன் சமைத்த உணவு, நோன்மை-பெருமை, வலிமை, சால்-மிகுந்த, சால்-நீர்ச்சால், உததி-கடல், தாவாது-குறை யாது, வரைகள்-மலைகள், தையலார்-பெண்கள், குரிசிலார்-சிறந்த ஆண்கள், சம்பராரி-சம்பராசுரனைக் கொன்ற மன் மதன், சரம்-மலராகிய அம்புகள், காலாறு-ஆறு கால்களை யுடைய வண்டுகள், மது-தேன், பட்டம்-குளம், கற்பம்-கற்பக மரம், மேதி-எருமைகள், கால் ஆறு-பலவாய்க்கால் களாக, பரவு-போற்றும், சீர்-புகழ், விரவு-கலந்த.

**விளக்கம்:** இப்பாடல் தொண்டை நாட்டின் வளனை அழகுபட அறிவித்து நிற்கிறது. ஈண்டு வேதியர்கள் தம் கடனுகிய யாகாதி காரியங்களைச் செம்மையுடன் செய்து வந்ததனுல், யாக குண்டங்களில் யாகாக்கினி எழுந்த வண்ணம் இருந்தது. இதனைத் திருநீலநக்கர் புராணத்துள், "ஆங்கு வேதியில் ஆருத செந்தீவலம் சுழிவுற்ருேங்கி முன்னையில் ஒருபடித் தன்றியே ஒளிர" என்று நம் சேக்கிழார் கூறும் ஆற்ருலும் உணரலாம். இங்ஙனம்யாகாதி காரி யங்கள் இடைவிடாது செய்யப் பெற்ருல் நாட்டில் வறுமை நிலவாது. இதனைச் சம்பந்தப் பெருமானுர், "கற்ருங்கு எரி யோம்பிக் கலியை வாராமே செற்ருர் வாழ்தில்லை" என்று அறிவித்திருப்பதைக் காண்க. திருஞான சம்பந்தர் திருமுகப் பாசுரத்தில் வாழ்க அந்தணர் என்று பாடியதற்கு விளக்கம் காட்டவந்த சேக்கிழார்,

அந்தணர் தேவர்ஆன் இனங்கள் வாழ்கஎன்று
இந்தமெய்ம் மொழிப்பயன் உலகம் இன்புறச்
சந்தவேள் விகள்முதல் சங்க ரர்க்குமுன்
வந்தஅர்ச் சனைவழி பாடு மன்னவாம்

என்று அருளிப் போந்தார்.

இங்ஙனம் வேள்விபுரிபவர் வேதங்களையும் ஆறு அங்கங் களையும் தேர்ந்தவராக இருத்தல் வேண்டும். இது குறித்தே

ஈண்டு, "நூல்ஆறு தேர்ந்தவர்" என்றனர். ஆறுவன ஆறு அங்கங்கள். அவை சிட்சை, வியாகரணம், சந்தசு, நிறுத்தம், சோதிடம், கற்பம். எனவே ஈண்டு, "நூலாறு*** அழல்வாய்" என்றனர். யாகாக்கினியில் நெய் முதலிய அவிஸ் பாகங்கள் பெய்யப்படுவதன் நோக்கம், அவை தேவர்கட்கு உணவாகப் போய்ச் சேர்தல் என்னும் மரபு நோக்கியாகும்.

மேகமே நீர்ச் சால்களுக்கும் ஆறுகளுக்கும் நீரைத் தரும் கருவி ஆதலின், மேகம் எல்லாம் சாலாகவும் ஆறுகவும் பாய என்றனர். ஆறுபோல் நீர்ச்சால் பாய என்று கூறினும் அமையும். மேகம் இன்றேல் உலகம் இல்லை. இதனை வான் சிறப்பு என்ற அதிகாரத்தில் வள்ளுவர் சிறப்புறச் செப்பிச் சென்றனர்.

" வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுஉணரல் பாற்று "

" துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை "

" சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு "

" தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்
வானம் வழங்காது எனின் "

" நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின் "

என்றும் கூறிப்போந்தார்.

" அமுதூறு மாமழை நீரத னாலே
அமுதூறும் பன்மரம் பார்மிசை தோற்றும்
கமுகூறு தெங்கு கரும்பொடு வாழை
அமுதூறும் காஞ்சிரை ஆங்கது வாமே "

என்பர் திருமூலர். எனவே, அது நோன்மைசால் மேக மாயிற்று.

கடலில் சென்று ஆறுகள் பாய்வதனுலும், மலைகளின் உச்சியினின்று அருவிகள் பாய்வதனுலும் மலர்களில் தேன் இருத்தலாலும் ஈண்டு ஆசிரியர் "மேகம் எல்லாம் அலை உததி பாய" என்றும், "அருவி வரைகள் பாய" என்றும், "மலர் மதுப் பாய" என்றும் ஈண்டு கூறினர்.

சம்பராரி என்பவன் மன்மதன். அவன் சம்பரன் என்போனைக் கொன்றவன்.
இதனை இரதி,

செம்பதுமை திருக்குமரா தமியேனுக்
    காருயிரே திருமால் மைந்தா
சம்பரனுக் கொருபகைவா கன்னல்வரிச்
    சிலைபிடித்த தடக்கை வீரா
வம்பவளக் குன்றனைய சிவன்விழியால்
    வெந்துடலம் அழிவுற் ருயே
உம்பர்கள்தம் விழிஎல்லாம் உறங்கிற்ரு
    அயனுரும் உவப்புற் ருரோ

என்று புலம்பிய புலம்பலில் குறிப்பிட்டிருப்பது காண்க.

மன்மதன் மோகம் ஊட்டுதற்கு ஐந்து மலர் அம்புக் களைக் கொண்டவன். அவை தாமரை, அசோகு, மா, முல்லை, கருங்குவளை. இதனுல்தான் ஈண்டு, "சரமெலாம்" என்றனர். மன்மதன் காதலர்கள் இடையே நின்று அவன் கணைகளைச் செலுத்துவது கடனுகக் கொண்டவன் என்பதைச் சேக்கிழார் பெருமானுர், "நாவலர் காவலர் நின்ருர் நடுநின்ருர் படை மதனுர்" நடுநின்ருர் என்பதனுல், இருவர்மீது அம்பு பாய இடை நின்ருன் மன்மதன் என்பது பெற்ரும்.

நீர்வளத்தின் மிகுதியினைப் புலவர்கள் வாளையின் துள்ள லைக்கூறி வர்ணித்தல் மரபு. குமரகுருபரரும் வாளை ஆகாயம் அளவு பாய்ந்து சந்திரனில் மோதி அமுத வெள்ளம் பொழியச் செய்தது என்பதை, "மதிமுயல் கலைகிழித்து இழி அமுத வெள் அருவி பாய வெடிபோய் மீளும்தகட்டு அகட்டு இளவாளை மோத" என்றனர். இக்கருத்தைப்

போன்றதே ஈண்டும், ''கற்பம் கழுத்து ஓடிய வாளைபாய'' என்பதும். பொய்கைகளில் மேதி பாய்வதும் நீர் வளத்தின் மாட்சியே ஆகும். ''மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்று என்று வீட்டளவும் பால் சொரியும் வெண்ணெயே'' என்பர் கம்பர். இங்கு, ''பொய்கைகருமேதிபாய'' என்றனர். தொண்டை நாட்டின் வளத்திற்குப் பாலாறு காரணமாதலை உமாபதி சிவனுர், ''பாலாறு வளஞ்சுரந்து நல்கமல்கும் பாளை விரிமணம் கமழ்பூஞ் சோலை தோறும், காலாறு கோலி இசை பாட நீடும் களிமயில் நின்ருடும் இயல் தொண்டை நாடு'' என்பர். இங்கு, ''பாலாறு காலாறு பாய்தொண்டை நன்ளுடு'' எனப்பட்டது. சேக்கிழார் பெருமானுர் பாடிய பெரிய புராணத்தைக் கேட்க யாவரும் வருக என ஓலை போக்கினர். இங்ஙனம் ஓலை போக்கிய முறையை உமாபதியார், ''கதை கேட்பதற்கு அண்டவாணர் அடியார் எல்லாம் கடுக வருக என்றுதிசை திசைதொறும் எண்தயங்கு அரசன் ஏடு எடுத்து எழுதி ஆளும் ஓலைகளும் ஏவினுன்'' என்றனர். அதுபோது, சிவ சமயத்தவர் யாவரும் திரண்டனர். அவர்கள் திரண்டதோடு இன்றி,

பாடினர் தும்புரு நாரதர் நீடிசை பாடாநின்று
ஆடினர் வானில் அரம்பையர் அஞ்சலி எஞ்சாமல்
சூடினர் மண்ணின் மடந்தையர் எந்தை துணைப்பாதம்
தேடினர் மாலயன் அன்பர் நடம்தரி சித்தார்கள்

என்று பாடி இருப்பதால், இவர் புகழ் மண்ணுலகே அன்றி விண்ணுலகு அளவும் சென்றது என்பது தெரிகிறது. இது குறித்தே, ''பரவுசீர் உலகெலாம் விரவு சேவையர் பிரான்'' எனப்பட்டார். ''பாய'' என்னும் சொல் பலமுறை வருதலின், அது சொல்பின் வருநிலை அணி. வானளாவ வாளை பாய்ந்தது என்பது உயர்வு நவிற்சி அணியாகும். (47)

7. மேயபல ஆரியர் குழாத்தினுள் பூரியர்
விராயதென வாய தூய
வெள்ளோதி மக்குழாம் நிலேகுலேய மேதிகால்
விசைத்தெழீஇப் பாய ஆங்கண்
ஆயவெடி வாளேயேர் பருகிலாங் கலிமோத
அதின்உதிர் பழத்தின் வெருவி
அம்மேதி கரையேற அதுகண்ட அவ்வாளே
ஆயவா லாமை தீரத்
தூயநெடு வான்நீர் துளேந்தாடி மீளின்
தொடக்குநீங் காமை யெண்ணிச்
சோதிமதி மண்டலங் கீண்டமுத தாரையொடு
துணேயக் கிழக்கி றங்கும்
பாயதடம் மலியும் திருத்தொண்டை நன்னுட்
பவளவாய் முத்தம் அருளே
பரவுசீ ருலகெலாம் விரவுசே வையர்பிரான்
பவளவாய் முத்தம் அருளே.

*[அ. சொ.] ஆரியர்-மேலோர், பூசிக்கத்தக்கவர், அறிவுடைய ஆசிரியர்கள், குழாத்தினுள்-கூட்டத்துள், பூரியர்-அற்பர், அறிவீனர், விராயது-கலந்திருத்தல், தூய்-சுத்தமான், ஓதிமம்-அன்னம், குழாம்-கூட்டம், மேதி-எருமைகள். விசைத்து-வேகமாக நடந்து, அங்கண்-அவ்விடத்தில், ஆய-இருந்த, வெடி-அச்சமுற்ற, வாளே-வாளே மீன்கள், ஏர்பு-எழுந்து, இலாங்கலி-தென்னே மரத்தில், வெருவி-பயந்து, ஆய-உண்டான, வாலாமை-தீட்டு, வான்நீர்-கங்கையாற்று நீரில், துளேந்தாடி-படிந்து மூழ்கி, தொடக்கு-தட்டு, மதி-சந்திரன், கீண்டு-கிழித்து, தாரை-ஒழுக்கு, துணேய-விரைய, கிழக்கு-கீழே, பாய-பரந்த, தடம்-குளங்கள், மலியும்-மிகும்.*

**விளக்கம்:** *இப்பாடலும் திருத்தொண்டை நன்னுட்டின் நீர்வளத்தை மிகுதிப்படுத்திக் காட்டுவதாகும். குளங்களில் உள்ள அன்னங்கட்கு இடையே எருமைகள் இருத்தல்*

அறிஞர் பெருமக்களுக்கு இடையே அறிவீனர்களாம் அற்பர்கள் இருத்தலை உவமை காட்டியது பொருத்தமே. அன்னம் வெண்ணிறத்தது. வெண்ணிறம் தூய்மையானது. தூய்மை அறிவு ஒளிக்கு உகந்தது. எருமை கருமையானது. கருமை அஞ்ஞானத்துக்கு உவமையாவது. ஆகவே, உவமை அழகு உவத்தற்குரியது. மேலும், இப்பாடலில் வாளையின் அட்டகாசம் மிகுதியாகக் கூறப்பட்டுள்ளது. எருமை குளத்தில் பாய்ந்ததனுல் வாளை தென்னையில் மோதியது. அப்படி மோதியதால் தென்னம் பழங்கள் குளத்தில் வீழ்ந்தனவாம். அங்ஙனம் வீழ்ந்த ஓசை கேட்டு மேதிகள் பயந்து கரை ஏறினவாம். வாளைகள் குளத்தில் தூய்மையுடன் இருக்கையில், அதை விடுத்துத் தென்னையினைத் தீண்ட வேண்டி ஆனமையின் தீட்டு உற்றனவாம். அத்தீட்டினைப் போக்க மேலும் துள்ளி ஆகாய கங்கையில் நீராடியும் தீட்டுப் போகாமையினுல், சந்திரமண்டலத்தையும் ஊடுருவிச் சென்று சந்திரனது அமுத தாரையுடன் கீழ் இறங்கினவாம். இத்துணையும் உயர்வு நவிற்சி அணியின்பால் பட்டதாகும். வாளை மீனின் வன்மை இங்ஙனம் புகழ்ந்து கூறப்பட்டது.

ஆரியர் குழாத்துள் பூரியர் உண்டு என்பதைத் திருவிளையாடற் புராணத்துள் அங்கம் வெட்டின படலத்துள் காணலாம். குலோத்துங்க பாண்டியன் அரசு செலுத்தி வரும் நாளில், ஓர் வில்லாசிரியர் வில் வித்தை பயிற்றுவித்து வந்தார். அவரைப் பற்றிப் பரஞ்சோதியார் கூறும்போது,

வாள்வினைக் குரவன் அன்னுன்
 வல்அமண் விடுத்த வேழம்
தோள்வினை வலியால் அட்ட
 சுந்தர விடங்கள் தன்னை
ஆள்வினை அன்பும் தானும்
 வைகலும் அடைந்து தாழ்ந்து
மூள்வினை வலியை வெல்லும்
 மூதறி வுடையன் அம்மா

என்கிருர்.

ஆகவே, இவர் ஆரியர் அல்லரோ? இவரிடம் கற்ற மாணவர்களுள் ஒருவன் சித்தன் என்பவன். அவன் தன் ஆசிரியரது மனையாளை விரும்பிப் பலகால் அம்மாது தனித்து இருக்கும் சமயங்களில் சென்று சொல்லால் தொந்தரவு செய்து வந்தனன். ஒரு நாள் அவன் செயலாலும் தொந்தரவு செய்யலானான். அதனைப் பரஞ்சோதியார்,

பின்னொரு பகல்போய்ச் செங்கை
பிடித்தனன் வலிப்பத் தள்ளி
வன்னிலைக் கதவம் நூக்கித்
தாழக்கோல் வலித்து மாண்ட
தன்னிலைக் காப்புச் செய்தாள்
தனிமனக் காவல் பூண்டாள்
அந்நிலை பிழைத்த தீயோன்
அனங்கத்தீ வெதுப்பப் போனான்

என்றனர். இவன் ஆரியர் குழாத்தில் உள்ள பூரியன் அல்லனோ? ஆகவே, ஆரிய குழாத்தினுள் பூரியர் விராயது என'' என்றனர்.

வாளை பாய்தலையும் தெங்கம்பழம் விழுதலையும் ஈண்டுப் பிள்ளை அவர்கள் குறிப்பிடுவதைக் காணும்போது திருத்தக்க தேவரது வாக்காகிய,

காய்மாண்ட தெங்கின்பழம் வீழக் கமுகின்நெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங்கனி சிதறிவாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங்கதம் என்றிசையால் திசைபோய துண்டே

என்பதை நினைவு கூராமல் இருக்க இயலாது.

இதே நேரத்தில் திருமங்கை ஆழ்வார்,

பாளை வான்கமு கூடுயர் தெங்கின்வண்
பழம்விழ வெருவிப்போய்
வாளை பாய்தடம் சூழ்தரு நாங்கூர்
வரைபுரு டோத்தமமே

என்று பாடி இருப்பதையும் அறிதல் வேண்டும். குமர குருபரர் தாம் பாடிய மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழில் வாளையின் அட்டகாசத்தை,

ஓடும் படலை முகில்படலம்
உவர்நீத் துவரி மேய்ந்துகரு
ஊறும் கமஞ்சூல் வயிறுடைய
உகைத்துக் கடவுள் கற்பகப்பூங்
காடும் தரங்கக் கங்கைநெடும்
கழியும் நீந்தி அமுதிறைக்கும்
கலைவெண் மதியின் முயல்தடவிக்
கதிர்மீன் கற்றை திரைத்துதறி
மூடும் ககன வெளிக்கூட
முகடு திறந்து புறங்கோத்த
முந்நீர் உழக்கிச் சினவாளை
மூரிச் சுறவி னொடுவிளை
யாடும் பழனத் தமிழ்மதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்சூல் கொண்ட அங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ

என்று பாடியிருப்பதையும் படித்து இன்புறலாம்.

சந்திரனில் அமுதுண்டு என்பது,

பொன்மய மான சடைமதிக் கலையின்
புத்தமுது குத்தனர் அதுபோய்ச்
சின்மய மானதம்மடி அடைந்தார்ச்
சிவமய மாக்கிய செயல்போல்
தன்மய மாக்கி அந்நகர் முழுதும்
சாந்திசெய் ததுவது மதுர
நன்மய மானதன் மையால் மதுரா
நகர்என உரைத்தனர் நாமம்

என்ற திருவிளையாடற் புராணப் பாடலால் தெரிய வருகிறது. மதியில் அமுதிருத்தலை மேலே காட்டப் பட்ட குமரகுருபரர் பாடல்கொண்டும் அறியவும்.

தொண்டை நாட்டில் பொய்கைகள் மிகுதியும் உண்டு என்பதைக் கச்சியப்பர் கழற வரும்போது,

முன்னூறு பிணிகள் மாற்றிடும் பொய்கை
முதல்வர்கள் முடிவுறுங் காலைச்
செந்நிற மாகும் பொய்கைமுக் காலம்
தெரித்திடும் பொய்கைகண் ணுதலோன்
தன்னடி காட்டும் பொய்கை வேண்டியது
தந்திடும் பொய்கை மெய்ஞ்ஞானப்
பொன்னியும் செல்வம் வசீகரம் தருநால்
பொய்கையோ டொன்பதாம் பொய்கை

என்று குறிப்பிட்டனர்.

தொண்டை நாட்டின் தலைநகரான காஞ்சியம்பதியில் இத்துணைச் சிறப்புடைய குளங்கள் இருக்குமானால், தொண்டை நாடு முழுதும் எத்துணை இருக்கும்! ஆகவே ஆசிரியர், ''தடம் மலியும் தொண்டை நாடு'' என்றனர். (48)

8. மிக்குவரு வெள்ளத் தெதிர்ந்தேறு பருவரால்
வேகத் துருண்டு போதும்
வேழத்தை முட்டுபு வெகுண்டு வெடிகொண்டுதாய்
விண்ணம் துளைத்து விரைவில்
புக்குமகிழ் மழஇளங் கன்றது தெறித்தெழீஇப்
பேரயதெங் கென்று நாடும்
புந்திப் பெருங்காம தேனுவின் மடித்தலப்
பொம்மல்குழை வெய்த முட்டத்
திக்குநிக ழப்பசுப் பொழிகின்ற பால்வரால்
செய்த புழையூ டிறங்கித்
திரைகரை எறிந்துவரு குடிஞைக்கு முன்புதான்
செய்தபெய ரைப்பு துக்கும்
பக்குநவில் அருவளம் படுதொண்டை நன்னுட
பவளவாய் முத்த மருளே
பரவுசீர் உலகெலாம் விரவுசே வையர்பிரான்
பவளவாய் முத்த மருளே.

*[அ. சொ.]* போதும்-போகும், வேழத்தை-யானையை, வெடிகொண்டு-பயந்து, தாய்-தாவி, விண்ணம்-ஆகா யத்தை, மழ இளங்கன்று-மிக இளைய கன்று, தெரித்து-துள்ளி, எழீஇ-எழுந்து, புந்தி-மனம், குழைவு-நெகிழ்வு, புழையூடு-துவாரத்தின் வழியாய், திரை-அலை, குடிஞைக்கு-ஆற்றுக்கு, (பாலாற்றுக்கு) பக்கு-பகுத்து, நவில்-கூறுதற்கு, பொம்மல்-பருமன், திக்குநிகழ்-திசைளில் புகழ் பெற்ற.

**விளக்கம்:** ஈண்டு வரால் மீனின் வளத்தைக் கூறுகின்றனர் அது, பெருவெள்ளத்தையும் எதிர்த்து வருகின்றது எனில், அது வன்மை மிக்கது என்பது சொல்லாமலே பெறப் படுகின்றது. அப்படி எதிர்த்து வரும் வரால் ஆற்று வெள்ளத்தில் உருண்டு வரும் யானைமீது மோதுவதால் சினம் மிகுந்து, ஆகாயம் அளவு தாவி ஆகாயத்தையும் துளைத்தது. துளைத்துச் சென்று அங்குள்ள காமதேனுவின் மடித்தலத்தையும் முட்டியது. அதனால் அதன் மடித்தலம் குழைந்தது. வரால் முட்டியதால் முலைக் காம்புகள் துவாரம் கொண்டு அவற்றின் மூலம் பால் பெருகலாயிற்று. அந்தப் பால், ஆற்றில் பெருகியதால்! பாலாறு என்ற பெயர் அழியாதவாறு புதுக்கப்பட்ட நிலையினை அவ்வாறு பெற்றது. இவ்வளவும் உயர்வு நவிற்சியணியும் தற்குறிப்பு ஏற்ற அணியும் ஆகும். முட்டுபு என்பதுசெய்பு என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். காமதேனுவின் மடித்தலத்தை வரால் முட்டியதும், காமதேனு தன் கன்று தான் முட்டியதே என்று மகிழ்ந்து பாலைச் சுரக்கத் தொடங்கிவிட்டது. வரால் முட்டினால் கறவைகள் தம் கன்றுதான் முட்டியது என்று பாலைச் சுரத்தல் இயற்கை. இதனை, "மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று வீட்டளவும் பால் சொரியும் வெண்ணெயே" என்ற கம்பர் வாக்காலும் உணரலாம். வரால் முட்டியதும் ஆண்டு நில்லாது கீழ் இறங்கிவிட்டமையின், காமதேனு, முட்டிய தன் கன்று எங்கே என்று தேடத் தொடங்கியது. **மழஇளம்** என்பது ஒரு பொருட் பன்மொழி எனப்படும். மீமிசைச் சொல் எனினும் அமையும். அப்பசு என காம

தேனுவைச் சுட்டினர். ஆகவே "அ" ஈண்டு உலகறி சுட்டாகக் கொள்ளலாம். காமதேனு திக்கெலாம் புகழும் புகழ்ச்சி வாய்ந்தது. ஆதலின், "திக்கு நிகழ் அப்பசு" எனப் பட்டது.

பாலாறு என்ற பெயர் சொல்லளவில் இருந்தது, உண்மையாகவே பால் பெருகி ஓடும் நிலையினைப் பெற்ற மையின், "பெயரைப் புதுக்கும்" என்று கூறப்பட்டது.

குறிஞ்சி, முல்லை நெய்தல். மருதம் என்று பகுத்துக் கூறப்படும் நான்கு நிலப் பொருள்களையும் தொண்டை நாடு தன்னிடத்துக் கொண்டமையால் பக்கு நவில் அருவளம் என்றனர். தொண்டை நாட்டின் வளம் இன்னது என்பதைச் சுருக்கமாகக் கச்சியப்பர்,

செக்கரம் துடைமுடிச் சிவனுக்கு அன்பராய்த்
தக்கவர் அறிஞர்கள் தவத்தர் செல்வராய்த்
தொக்கவர் யாரும்வாழ் தொண்டை நாட்டினின்
மிக்கதோர் அணியியல் அதுவி ளம்புகேன்

என்று சுட்டியருளினர். மேலும், தொண்டை நாட்டின் நீர் வளம், நாட்டு வளம், நகர் வளம் காண விழைவார் பெரிய புராணத்துள் திருக்குறிப்புத் தொண்டர் நாயனர் புராணத்துள்ளும், கந்தபுராணத்துள்ளும், காஞ்சிபுராணத் துள்ளும் காண்க.

சேக்கிழார் பெருமானுரைப் போலத் தொண்டை நாட் டின் சிறப்பைப் பாட எப்புலவராலும் இயலாது. அவரே

ஆய நானிலத் தமைதியில் தத்தமக் கடுத்த
மேய செய்தொழில் வேறுபல் குலங்களின் விளங்கித்
தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தை
தூய மாந்தர்வாழ் தொண்டைநாட் டியல்பு சொல்
வரைத்தோ

என்று பாடுவாராயின், அது பிறநாட்டிற்கு அமையாப் பெரு வளம் கொண்டது என்பதைக் கூறவும் வேண்டுமோ?

குமரகுருபரர் வராலின் செயலை,

கரும்பொன் தொடிக்கடைசீ
மெல்லியர் வெரீஇப் பெயரவான்
மீன்கணம் வெருக்கொள்ள
வெடிவரால் குதிகொள்ளும்

என்றனர். இதுவே அன்றி, மற்றும் பல மீன் இனங்களின் தன்மைகளையும் குமர குருபரர்,

முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழில்,

படுவில் வெடிபோம் வரிவாளை
பண்ணத்திருள் தூங் கழுவநீர்ப்
பரப்பு என்று அகல்வான் மிசைத்தாவ

என்றும்,

பெருங்கற் பகத்தின் கழுத்தொடிய
பிறழும் வாளைப் பகடுதைத்த
தென்னம் பழம்வீழ் சோணாடர்

என்றும் பாடி, நாட்டின் நீர்வளத்தைக் கூறி இருத்தல் காண்க.

வெள்ளத்தில் யானைகளும் உருண்டு வருதலைக் கம்பர்,

பணைமு கக்களி யானைபல் மாக்களோ
டணிவ குத்தென ஈர்த்திரைத் தரர்த்தலின்
மணியு டைக்கொடி முந்தவந் தூன்றலால்
புணரி மேல்பொரப் போவது போன்ற த

என்றனர். (49)

9. வீங்குகரு மேதிபிணர் படுதட மருப்பினல்
விடுபடாக் கடுவேலி வாய்:
விட நீக்கி உட்புகூஉம் மென்கரும் பினைமென்று
மென்றுதின் றிடவ ழிதரா
ஆங்குநிகழ் சாறப் படப்பையை நிரப்பிமேல்
அரம்பைஅம் துடவை மோதி
ஆருகி நெல்போர் அடங்கச் சுமந்துசென்
றலைஆழி யில்க லந்து
தேங்குதிடர் செய்துவரும் மாற்றிஅம் தமிழ்வாய்ச்
செறிந்துவர லால்இனி மையாய்த்
திகழ்கின்ற தென்றெண்ணி ஆடுநர்கள் உண்டுமகிழ்
தேக்களந் நாளுஞ் செயும்:
பாங்குபடு செல்வமென் பால்தொண்டை நன்னாட்
பவளவாய் முத்த மருளே.
பரவுசீர் உலகெலாம் விரவுசே வையர்பிரான்
பவளவாய் முத்த மருளே.

[அ. சொ.] *வீங்கு-பருத்த, மேதி-எருமை, பிணர்படு-சமம் அற்ற தன்மை, சுரசுரப்பு, தடமருப்பினுல் - வளைந்த கொம்பினுல், வாய்விட-வழிதர, புகூஉ-புகுந்து, வழிதரா-வழிந்து ஒழுக, படப்பை-தோட்டம், சோலை, அரம்பையம் துடவை-வாழைகள் நிறைந்த அழகிய தோட்டத்தை, ஆழி-கடல், திடர்-மேடு, உவரும்-உப்புத் தன்மையையும் தமிழ் இனிமை, செறிந்து-நிரம்பி, பாங்கு-நன்மை, மென் பால்-மருத நிலம்.*

**விளக்கம்:** *எருமைகளின் உடல், பருமனுக இருத்தலின் "வீங்குகரு மேதி" என்றனர். கரும்பின் சாறு ஆருகப் பாய்ந்தது என்பது உயர்வு நவிற்சி அணி கருதி என்க. ஆறு தனக்கு எதிரே உள்ள பொருள்களை எல்லாம் அடித்துப் போதல் இயற்கை ஆதலின், எதிரே இருந்த நெற்கதிர்களை எல்லாம் அடித்துக்கொண்டு கடலை அணுகியது. ஆண்டு*

இந் நெற்போர் திடராக நின்றது. தொண்டை நாடு செல்வம் மிக்கது என்பதும், கரும்புச் சோலைகளை மிகுதியாகக் கொண்டது என்பதும் ஈண்டுக் கூறப்பட்ட கருத்துக்களாகும். கடல் நீர் உப்பானது. ஆனால், கருப்பஞ் சாருகிய ஆறு கடலோடு கலந்ததனால் அவ்வுப்புநீர் இனிப்பு நீராக மாறியது. இதனை அறியாத மக்கள் கடலில் நீராடுகையில் அந்நீர் இனித்தலை அறிந்து, இஃது இனிமை கலந்திருத்தலின் இனிப்பாக மாறியது என்றும் கருதினர் என்க.

தமிழ் எனும் சொல்லுக்கு இனிமை என்னும் பொருள் இருத்தலின், அப் பொருள் இங்குப் பெய்யப் பட்டுள்ளது. இப் பொருட்டாதலை தமிழ் மாருதம் எனச் சேக்கிழாரும் வண்டு தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரையே என்று கம்பரும் கூறுதல் காண்க. ஆகவே "ஈண்டும் தமிழ் வாய்ச் செறிந்தும்" எனப்பட்டது.

ஆறு எங்குப் பரந்து போயினும், அடையவேண்டிய இடம் கடலே ஆதலின், "அலைஆழியில் கலந்து" என்றனர். கம்பரும், "கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்" என்றனர்.

உவரிநீர் உப்புச் சுவை உடையது. அதனை மாற்றும் ஆற்றல் கருப்பஞ் சாருக்கு உண்டு ஆதலின், "உவரும் மாற்றி" என்றனர். குமரகுருபரரும் இதுபோன்ற கலப்பால் உவரி உவர்ப்பு நீங்கும் என்பதைக் "கலுழி வெள்ளம் உவரோடு உவரிக்கடல் புலவு மாற்றும் கடவுள் கந்தபுரி" என்றனர்.

கடல்நீர் கரும்பஞ்சாற்றின் கலப்பால் இனிமையாய் இருந்தமையில், "இனிமையாய்த் திகழ்கின்றதென்று எண்ணி ஆடுநர்கள் உண்டு மகிழ்" என்றனர். கம்பர் மீன்கள் உண்டு மகிழ்ந்தன என்பதை,

ஆலைவாய்க் கரும்பின் தேனும்
அரிதலைப் பாளைத் தேனும்
சோலைவாய்க் கனியின் தேனும்
தொடைஇழி இறலின் தேனும்

மாலைவாய் உகுத்த தேனும்
வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப உண்டு
மீனெலாம் களிக்கும் மாதோ

என்று பாடியுள்ளனர்.

பாங்குபடு செல்வமென்பால் (மருத நிலம்) என்பது உண்மை என்பதைச் சேக்கிழார் மருதவளம் பாடும் இடத்துப் பாங்குற மொழிந்துள்ளனர்.

ஓங்கு செந்நெலின் புடையன உயர்கழைக் கரும்பு
பூங்க ரும்பயல் மிடைவன பூகம்அம் பூகப்
பாங்கு நீள்குலைத் தெங்குபைங் கதலிவண் பலவு
தூங்கு தீங்கனிச் சூதநீள் வேலிய சோலை

நீடு தண்பணை உடுத்தநீள் மருங்கின் நெல்லின்
கூடு துன்றிய இருக்கைய விருந்தெதிர் கொள்ளும்
பீடு தங்கிய பெருங்குடி மனையறம் பிறங்கும்
மாடம் ஓங்கிய மறுகன மல்லல்மூ தூர்கள்

தொல்லை நான்மறை முதல்பெருங் கலைஒலி துவன்றி
இல்ல றம்புரிந் தாகுதி வேள்வியில் எழுந்த
மல்கு தண்புகை மழைதரு முகில்குலம் பரப்பும்
செல்வம் ஓங்கிய திருமறை யவர்செழும்பதிகள்

என்பன போன்ற பாடல்களைக் காண்க.

உவரிநீர் கருப்பஞ் சாற்றால் இனிமையுற்றது என்று ஈண்டுக் கூறியதுபோல, குமர குருபரர் கற்பகத்தின் தேன் கலந்து கழனி தெய்வமணம் கமழ்ந்தது என்பதை அழகுபட அறிவித்ததையும் படித்தல் சுவை தருவதாகும். அப்பாடல்,

கோடுபடு கொங்கைக் குவட்டுக் கிளைத்திட்ட
கொடிஇடைக் கடைசியர் குழாம்
குரவைஇடு துழனியில் கொண்டல்திரை யத்தாவும்
குழவுப்பகட்டு வாளை

சேடுபடு புத்தேள் நிலத்துப் புனிற்றிளம்
சேதா வயிற்று முட்டச்
சேங்கன் றெனத்தடவு மடிமடை திறந்துற்று
தம்பால் சினேக்கற் பகத்
தேடுபடு தடமலர்த் தேன்அருவி யொடுசொரி
தேரியொடு கால்நிரம்ப
இழுதுபடு கழனியும் தெய்வ மணம் நாறஏன்
றின்சுவை முதிர்ந்து விளையும்
காடுபடு செந்நெல்பைங் கன்னல்நிகர் பூள்ளூர
கனிவாய் முத்தம் அருளே
கங்கைக்கு நெடியவன் தங்கைக்கும் ஒருமகன்
கனிவாய் முத்தம் அருளே

என்பது.

எருமைகளின் தன்மை பற்றி ஈண்டுக் குறித்தது போலக் குமர குருபரர் தம் திருவாரூர் நான்மணி மாலையில் தமிழிலும்,

கருந்தாது கடுத்த பெரும்பனே தாங்கும்
படாமருப் பெருமைபெங் குவளை குதட்டி
மடிமடை திறந்து வழிந்த பாலருவி
கரைபொரு தலேப்பப் பெருபூந் தடத்து

என்றும், முத்துக்குமார சுவாமி பிள்ளேத் தமிழில்,

பானுறு செந்நெல் பசுங்கதிர் கறித்துமென்
பைங்குவளே வாய்குதட்டும்
பணைமருப் பெருமைமடு மடிமடை திறந்ததீம்
பால்ஆறு பங்கயச்செந்
தேனுறு டன்கடவுள் வாறு றெனப்பெருகும்

என்றும் பாடி இருத்தல் காண்க. (50)

10. நீளைநேர் மாதரொடு காளைநேர் மைந்தர்கள்
நெருங்கிவிளை யாடு பாலி
நெடுவெள்ளம் உவர் ஆழி யுள்புக அனுர்குழீஇ
நிறைமலர்கொய் பொழில்வா விவாய்
வாளைதாய் எழவிடபம் வைகுதேத் தடைகீற
மடைஉடைந் தென்ன வழியும்
மதுவெள்ள மும்புகக் களமர்கள் கருப்பாலை
வழிசாற்று வெள்ளமும் எழீஇ
ஆளைமோ தும்படி புகக்கண்ட் அறிஞர்ஏழ்
ஆழியும் இதன்கண் ஆய
ஆன்றநுண் அறிவினுர் ஆராயின்என் ருேதஅமை
யாப்பெரு வளங்கு லாவும்
பாளைவாய் கந்திமென் பால்தொண்டை நன்னுட்
பவளவாய் முத்த மருளே
பரவுசீர் உலகெலாம் விரவுசே வையர்பிரான்
பவளவாய் முத்த மருளே.

*[அ. சொ.] நீளை-நீளாதேவி, நேர்-ஒப்பான, காளை-எருதுகள், பாலி-பாலாறு, உவர்-உப்புத் தன்மைவாய்ந்த, ஆழி-கடல், அனுர்-அத்தகையார் (ஆண்கள் கூட்டமும் பெண்கள் கூட்டமும்,) குழீஇ-கூடி, பொழில்-சோலை, வாவிவாய்-குளத்தில், விடபம்-மரக்கொம்பு, வைகுதல்-தங்குதல், தேத்து அடை-தேன் கூட்டை, மது-தேன், களமர்கள்-உழவர்கள், கருப்பு-கரும்பு, ஏழ்-ஏழு, ஆன்ற-நிறைந்த, அமையா-நீங்காத, வாய்-பொருந்திய, குலாவும்-விளங்கும், கந்தி-பாக்குமரம்.*

**விளக்கம்:** *நீளாதேவி அழகுக்கு ஓர் எடுத்துக்காட்டு; திருமால் தேவியருள் ஒருத்தி. காளையரும் கன்னியரும் ஆற்றில் சலக் கிரீடைச் செய்வது இயல்பு.*

*பொன்னுடைய வாசப் பொகுட்டு மலர்அலையத்*
*தன்னுடனே மூழ்கித் தனித்தெழுந்த—மின்னுடையு*

பூணுள் திருமுகத்தைப் புண்டரீகம் என்றுஅயர்த்துக்
காணுது அயர்வானைக் காண

என்பர் புகழேந்தியார்.

தாளையேய் கமலத் தாளின் மார்புறத் தழுவு வாரும்
தோளையே பற்றிவெற்றித் திருவெனத் தோற்று வாரும்
பாளையே விரிந்த தென்னப் பந்துநீ ருந்து வாரும்
வாளைமீன் உகள அஞ்சி மைந்தரைத் தழுவு வாரும்

என்பர் கம்பர்.

ஏந்திழை மகளிர் தாமும் மைந்தரும் இருநீர் தன்னுள்
பாய்ந்தனர் ஆடும் எல்லை

என்பர் கச்சியப்ப சிவாசாரியார்.

ஆகவே, "நீளைநீர் மாதரொடு காளைநேர் மைந்தர் நெருங்கி விளையாடுபால்" என்றனர். ஆண்களும் பெண்களும் குழுமிப் பூக்கொய்தும் இன்புற்றனர் என்பதை,

கொய்த மலரைக் கொடுங்கையி ஞல்அணைத்து
மொய்குழலில் சூட்டுவான் முன்வந்து—தையலாள்
பாதார விந்தத்தே சூட்டிஞன் பாவைனின் இடைக்கு
ஆதாரம் இன்மை அறிந்து

எனப் புகழேந்தியார் பாடினா.

போரன்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொள்
(திண்தோள்
மாரன் அனையான் மலர்கொய் திருந்தாளை வந்தோர்
காரன்ன கூந்தற் குயிலன் னவள்கண் புதைப்ப
ஆரென்ன லோடும் அனல்என்ன வெதும்பு கின்ருள்

எனப்பாடினர் கம்பர்.

அங்கொ ருத்தியை நோக்கியோர் அண்ணல்உன்
கொங்கை ஒத்திடாக் கோங்கலர் கொள்கென
எங்கை தன்முலைக் கொப்பதென்று எண்ணியோ
செங்கை யாற்பறித் தீர்என்று சீறிஞள்

என்ற கவியைப் பாடினர் கச்சியப்பர்.

குளங்களில் வாளை எழலை முன்பும் கண்டனம். சம்பந்தரும் நீர் நிலைகளில் மீன் பாய்தலை, "வரிகெண்டை பாய"

என்பர். வாளை பாய்தலால் சந்திரமண்டலம் கிழிதலும், காமதேனு மடித்தலம் குழைதலும் முன்பு கண்டனம். ஈண்டு, மரக்கொம்பில் உள்ள தேனடை கீண்டது. தேனடை கீண்டப்பட்டால் தேன்பாயும் என்று கூறவா வேண்டும்? அத்தேன் வெள்ளமும் கரும்பாலைச் சாறும் கலந்த படியினை ஈண்டுக் கூறியுள்ளார். வெள்ளத்தின் மிகுதியினால் ஏழ் கடலும் நன்றாக இணைந்து பாயத் தொடங்கினவோ என்று வியந்து கூறத் தொடங்கிவிட்டனர். இவ்வளவு வளமும் தொண்டை நாட்டில் இருத்தலின், ''அமையாப் பெருவளம்'' எனப் பேசினர் புலவர். ஏழ் கடல்களுள் பாற் கடலும் தேன் கடலும் உள அல்லவோ?

திரு பிள்ளை அவர்கள் முத்தப் பருவத்தில் பெரிதும் தொண்டை நாட்டின் நீர்வளம் நிலவளம் இவற்றைச் சிறப்பித்துள்ளனர். திரு பிள்ளை அவர்கட்குத் தமது பாட்டுடைத் தலைவரைப் புகழும் வாய்ப்புப் பெற்ற நிலையில், அவரது நாட்டினையும் பெரிதும் சிறப்பித்துப் பேச வேண்டும் என்ற கருத்தினால்தான் இவ்வளவு சிறப்பாகத் தொண்டை நாட்டின் வளத்தினை வர்ணிப்பாராயினர். இவ்வாறு பாடுதற்கு வழிகாட்டியவர் நமது சேக்கிழாரே ஆவார். சேக்கிழார் பெருமானார் தமது தொண்டை நாட்டின் சிறப்பினைப் பாடத் திருக் குறிப்புத் தொண்டர் நாயனார் புராணத்தைக் கருவியாகக் கொண்டனர். அப் புராணத்தில் திருக்குறிப்புத் தொண்டர் நாயனாரது வரலாறு பற்றிய பாடல்கள் பதினெட்டே ஆகும். ஆனால், தொண்டை நாட்டுச் சிறப்பைக் கூறும் பாடல்கள் நூற்றுப் பத்தாகும்.

திரு பிள்ளை அவர்கள் தொண்டைநாட்டின் நீர்வளத்தினைக் குறித்துப் பாடியுள்ள இடங்களில் பெரிதும் வாளை மீன்களின் செயல்களைப்பற்றியும், கருமேதியின் செயல்களைப் பற்றியும் ஆகும். இவ்வாறு பாடுதலின் வன்மை பெற்றவர் குமரகுருபரர் அவரது நூலை இவர் நன்கு சுவைத்துப் பயின்றிருந்ததனால் என்று கூறின் அது மிகை ஆகாது.

விண்ணுறு மதிமுயல் கலைகிழிந்து இழிஅமுத
வெள்ளருவி பாயவெடி போய்
மீளும் தகட்டகட் டிளவாளை மோதமுகை
விண்டொழுகுமுண்டகப்பூந் தெண்ணுறு அருவியாய

என்றும்,

மீத்தந்த மாகத்து மேகத்தி
ஞேடுமூடு மீன்இரியல் போகவுகளும்
வெடிவாளை மதிஅகடு உடைத்தூற்று
தெள்ளமுத வெள்ளருவி

என்றும்,

குரவையிடு துழனியில் கொண்டல்திரை யத்தாவு
குழவுப் பகட்டுவாளை
சேடுபடு புத்தேள் நிலத்துப் புனிற்றிளம்
சேதா வயிற்றுமுட்டச்
சேங்கன் றெனத் தடவு மடிமடை திறந்தூற்று
தீம்பால் சினைக்கற்பகத்
தேடுபடு தடமலர்த் தேன்அருவி யொடுசொரிந்து
ஏரியொடு கால்நிரம்ப
இழுதுபடு கழனியும் தெய்வமணம் நாறஎன்று
இன்சுவை முதிர்ந்து விளையும்

என்றும், வாளைமீன்களின் அட்டகாசங்களைக் குமரகுருபரர் பாடியிருப்பதைக் காண்க.

இவ்வாறே எருமைகளின் செயல்களையும்,

தென்னம் தமிழின் உடன்பிறந்த
சிறுகால் அரும்பத் தீங்கரும்பும்
தேமா நிழற்கண் துஞ்சும்இளம்
செங்கண் கயவாய்ப் புனிற்றெருமை
இன்னம் பசும்புல் கறிக்கல்லா
இளங்கன்று உள்ளிமடித் தலம்நின்று
இழிபால் அருவி உவட்டெறிய
எறியும் திரைத்தீம் புனல்பொய்கை

என்றும் பாடியுள்ளனர். (51)

# 6. வாரானைப் பருவம்

1. மண்டலம் மதிக்கும்மணி யாத்தஉச் சிப்பூவும்
வண்பட்ட முஞ்சுட்டியும்
வாகுவல யமும்மதா ணியும்உதய வெயில்செய
மகத்துவத் தொண்டர்சீர்த்தி
விண்டலம் மதிக்கஎழு செய்யவாய்ப் புகழெழுதல்
விழையஎழு குறுமுறுவலும்
வெண்ணீறு முத்தமா லிகையும்இள நிலவுசெய
வெய்யேம் மனத்தடத்துந்
தண்டல்அமை யாதலர் சரோருகப் பதமேல்
சதங்கையும் தண்டையும்ஒளி
தவாஞெகிழி யும்படீஇக் கலகல இரட்டஉயர்
சைவநிலை எங்கும்நிகழக்
கொண்டல்அமர் கொடைகொண்ட கரதலச் சேவையார்
குலசிகா மணிவருகவே
கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவிஎழு
குன்றைப் பிரான்வருகவே

*[அ. சொ.] மண்டலம்-உலகம், மணி-இரத்தினக் கற்களால், யாத்த - பதித்த, உச்சிப்பூ - குழந்தைகட்கு அணியும் ஒருவகை அணிகலன், இஃது உச்சியில் அணியப் படுவது, வண்பட்டம்-வளமான நெற்றிப்பட்டம் என்னும் ஆபரணம், சுட்டி-நெற்றிச் சுட்டி என்னும் அணிகலம். வாகுவலயம் - தோள்வளை என்னும் நகை, மதாணி-மார்பில் அணியும் ஒருவகை கலம், வெயில்-ஒளி, சீர்த்தி-மிகுந்த புகழை. விண்தலம்-தேவலோகம், விழைய-ஒப்ப, குறுமுறுவல்-சிறுநகை, மாலிகை-மாலை, வெய்யேம்-கொடுமை மிக்கவர்களாகிய எமது, தடம்-குளம்*

தண்டல்-தவா-நீங்காத சரோருகம்-தாமரை, ஞெகிழி-இதுவும் ஒருவகைச் சிலம்பு, இரட்ட-ஒலிக்க, கொண்டல்-மேகம், அமர்-விரும்பும், கொடை-வள்ளன்மைக் குணம், கரதலம்-கை, சேவையர் குலம்-வேளாளர் குலம், சிகாமணி-சிரோரத்னமே, சடாடவியர்-சடைக்காட்டையுடையவராம் சிவபெருமான், மன்றை - பொற்சபையை, சடை+அடவி, பராவி-போற்றி.

**விளக்கம்:** குழந்தையைத் தம் அருகே அன்புடன் அழைக்கும் பருவமே வாரானைப் பருவமாகும். இது பன்னிரண்டாம் மாதம் நிகழும் நிகழ்ச்சி. ''ஆண்டு வரையின் ஈண்டு வருக'' என்பது பிங்கலந்தை. இது வருகைப் பருவம் என்றும் கூறப்பெறும். வாரானை என்பது வா+ரு+ஆனை எனப்பிரியும்-ஆனை தொழிற்பெயர் விகுதி. விரித்தல் விகாரம் வா-பகுதி.

இப்பாடல் குழந்தைகட்குப் பூட்டப்படும் அணிகள் இன்னின்ன என்பதைப் புலப்படுத்தி நிற்கிறது. இவ்வாறு குழந்தைகட்கு அணிகலன்களைப் பூட்டி அழகு பார்ப்பது பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் உவகையாகும். குமரகுருபரரும் முத்துக் குமாரசாமிபிள்ளைத் தமிழில்,

செம்பொன்அடிச்சிறு கிண்கிணி யோடு
சிலம்பு கலந்தாடத்
திருவரை அரைஞாண் அரைமணி யொடுமொளி
திகழுடைர வடமாடப்
பைம்பொன் அசும்பிய தொந்தியொ டுஞ்சிறு
பண்டி சரிந்தாடப்
பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச்
சுட்டி பதிந்தாடக்
கம்பி விதம்பொதி குண்டல மும்குழை
காதும் அசைந்தாடக்
கட்டிய சூழியும் உச்சியும் உச்சிக்
கதிர்முத் தொடும்ஆட

அம்பவ ழத்திரு மேனியும் ஆடிட
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை

என்றனர்.

இரத்தினங்கள் உலகம் மதிக்கும் பெருமை வாய்ந்தவை ஆதலின், மண்டலம் மதிக்கும் மணி எனப்பட்டன. உச்சிப்பூ இரத்தினங்களால் செய்யப்பட்டது என்பதனுல் சேக்கிழார் குடியின் வளம் பெறப்படுகிறது. பட்டமும். சுட்டியும், வாகுவலயமும், மதாணியும் உதய வெயில் செய என்ற தனுல் இவையும் உச்சிப்பூப்போல இரத்தினங்களால் செய்யப்பட்டன என்பது தெரிகிறது. தொண்டர்கள் மகத்துவமுடையவர்கள் என்பது, "தொண்டர்தம் பெருமை சொல்லவும் அரிதே" என்பதனுலும், "அன்பர்பணி செய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால் இன்பநிலை தானேவந்து எய்தும் பராபரமே" என்றதனுலும் "வாயாரத் தன்னடியே பாடும்தொண்டர் இனத்தகத்தான்" என்றதாலும் தொண்டர்கள். பெருமைக்கு உரியவர்கள் என்பது தெரிகிறது.

முட்டில் அன்பர்தம் அன்பிடும் தட்டுக்கும் முதல்வர்
மட்டும் நின்றதட் டருளொடும் தாழ்வுறும் வழக்கால்
பட்டொ டும்துகில் அநேககோ டிகளிடும் பத்தர்
தட்டு மேற்படத் தாழ்ந்தது கோவணத் தட்டு

என்னும் பாடல் மூலம் தொண்டர் அன்பின்முன் இறைவர் அருள் தாழ்ந்தே நிற்கும் என்று சேக்கிழாராலும் அறிவிக்கப் பட்ட காரணங்களாய் தொண்டர் மகத்துவம் சிறந்தது என்பது உண்மையாகும். சீர்த்தியாவது மிகுபுகழாகும். "சீர்த்தி மிகுபுகழ்" என்பது தொல்காப்பியம்.

தொண்டர் புகழ் விண்டலம் மதிக்கும் அளவு உடையது என்பதைக் கயிலையம் கிரிச்சாரலில் இருந்த உபமன்யு முனிவர் முதலான முனிபுங்கவர்கள் சுந்தரரைத் துதித்த முறையால் உணரலாம். இந்த உண்மையினைச் சேக்கிழார்,

கைகள் கூப்பித் தொழுதெழுந் தத்திசை
மெய்யில் ஆனந்த வாரி விரவிடச்
செய்ய நீள்சடை மாமுனி செல்வுழி
ஐயம் நீங்க வினவுவோர் அந்தணர்

சம்பு வின்அடித் தாமரைப் போதலால்
எம்பி ரான்இறைஞ் சாய்இஃ தென்எனத்
தம்பி ரானைத்தன் உள்ளம் தழீஇயவன்
நம்பி ஆரூரன் நாம்தொழும் தன்மையன்

எனவரும் தம்வாக்குகளால் தெரிவிக்கின்றனர்.

நம்பி ஆரூரரும்,

இந்திரன் மால்பிரமன் எழிலார் மிகுதேவர் எல்லாம்
வந்தெதிர் கொள்ளஎன்னை மத்தயானை அருள்புரிந்து
மந்திர மாமுனிவர் இவன்யா ரெனஎம் பெருமான்
நந்தம் ஆரூரன் என்றான் நொடித்தான்மலை உத்தமனே

என்று பாடிய திருப்பாட்டாலும் தெளியலாம்.

சேக்கிழார் பெருமானார்க்கு அடியார் புகழை அறிவிப்பதில் பெருவிருப்பம் உண்டு என்பதைச் சேக்கிழார் வாக்கே தெரிவிக்கும்.

அளவி லாத பெருமையர் ஆகிய
அளவி லாஅடி யார்புகழ் கூறுகேன்
அளவு கூட உரைப்பரி தாயினும்
அளவில் ஆசை துரப்ப அறைகுவேன்

என்ற இடத்துப் புலனாதல் காண்க.

இதனால் ''கீர்த்தி***எழுகுறுமுறுவல்'' எனப்பட்டது.

சேக்கிழார் திருவடிகளை அன்பர்கள் தம் இதயத்து வைத்துப் பூசித்துப் போற்றியதை முன்பு கண்டனம். ஆண்டுக் காண்க.

''சைவத்தின்மேற் சமயம் வேறில்லை. அதில் சார் சிவமாம் தெய்வத்தின்மேற் தெய்வம் இல்லை' என்றும், ''சைவ சமயமே சமயம்'' என்றும் அனுபவ ஞானிகள் கூறுவதால்

அஃது உயர் சைவமாயிற்று. சேவையர் என்பார் வேளாளர். இவர்கள் சேவை (காளைகளை) வைத்திப்பதால் இப் பெயர்க்கு உரியர் ஆயினர். அவர்கள் கொடை, கொண்டல் போன்று கைம்மாறு வேண்டாது ஈயும் தன்மையது. கம்பர் இதனை உணர்ந்து,

செட்டிமக்கள் வாசல்வழி செல்லோமே செக்காரப்
பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே—முட்டிப்புகும்
பார்ப்பார் அகத்தைஎட்டிப் பாரோமே எந்நாளும்
காப்பாரே வேளாளர் காண்

என்றதாலும்,

மேழி பிடிக்கும்கை வேல்வேந்தர் நோக்கும்கை
ஆழி திருத்தி அருளும்கை—சூழ்வினையை
நீக்கும்கை என்றும் நிலைக்கும் கைநீடூழி
காக்கும்கை காராளர் கை

என்றதனாலும், "வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்" என்பதாலும் அவர்கள் கரதலம் கொண்டல்நிகர் கரதலமாயிற்று. வேளாளர்கள் பிறர்க்குக் கொடுக்கக் கற்றவர்களே அன்றி, வாங்கக் கற்றவர் அல்லர் என்ற அரிய குறிப்பைக் கற்பனைக் களஞ்சியமாம் சிவப்பிரகாசரும் அப் பரை நோக்கி,

[ஒரு
கொள்ளைக்கதிர் முத்தின் பந்தரும் சின்னமும் கொள்ளும்
பிள்ளைக் கதுதகும் நாவர சாய பெருந்தகையோய்
கள்ளைக் குவளை உமிழ்வீழி யில்படிக் காசுஒன்றுநீ
வள்ளைக் குழைஉமை பங்காளர் கையில்என் வாங்கினையே

என்று கூறினர்.

தேசி லங்குமுகில் குன்றை யாதிபதி
தொண்டர் சீர்பரவு சேக்கிழார்
வாசல் அன்றுமுதல் இன்று காறும்இனி
மேலும் வாழையடி வாழையாய்

வீசு தென்றல்மணி மண்ட பத்தரசு
வீற்றி ருக்கும்முடி மன்னருக்கு
ஈசன் அன்பர்கள் புராண மும்சொலி
அமைச்சும் ஆடிநலம் எய்துமால்

என்றும்.

பாராட்டிப் பேசிய காரணத்தால் ஈண்டுச் "சேவையர் குலசிகாமணி" ஆயினார் சேக்கிழார்.

இறைவன் சடை ஓர் அடவி போன்றது. அதனால் அது சடாடவி எனப்படுகிறது. சடை அடவி சடாடவி ஆயிற்று. காட்டில் பலபொருள்கள் செறிந்து காணப்படும். அதுபோல இறைவன் திருச்சடையில் பல பொருள்கள் விரவி இருத்தலின், அது சடாடவி ஆயிற்று. சம்பந்தர்,

அரவும் அலைபுனலும் இளமதியும் நகுதலையும்
விரவும் சடை

என்றும்,

வன்னி கொன்றை மதமத்தம் எருக்கொடு கூவிளம்
பொன்னி யன்றசடை

என்றும்,

அப்பர் பெருமானார் "புற்றினில் வாழும் அரவுக்கும், திங்கட்கும், கங்கை என்னும் சிற்றிடையாட்டும் செறிதரு கண்ணிக்கும் சேர்விடமாம்" என்றும்,

அங்கண் கடுக்கைக்கும் முல்லைப் புறவம் முறுவல்செய்யும்
பைங்கண் தலைக்குச் சுடலைக் களரிப் பருமணிசேர்
கங்கைக்கு வேலை அரவுக்குப் புற்றுக் கலைநிரப்பாத்
திங்கட்கு வானம் திருவொற்றி யூரர் திருமுடியே

என்றும்,

போற்றியுள்ளமையின், ஈண்டுக் "கொன்றைச் சடாடவியர் எனப்பட்டார்," இறைவர்.

இறைவர் மன்று சிதம்பரம். அச்சிதம்பரத்தைப் பணிவதில் பேரார்வம் படைத்தவர் சேக்கிழார். இதனைத் தில்லைவாழ் அந்தணர் புராணத்தைத் தொடங்கும்போதே,

ஆதியும் நடுவும் ஆகி
அளவிலா அளவும் ஆகிச்
சோதியாய் உணர்வும் ஆகித்
தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா ஏகம் ஆகிப்
பெண்ணுமாய் ஆணும் ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப்
பொதுநடம் போற்றி போற்றி

என்றும்.

மூவரும் சென்று தில்லையை வணங்கும்போது தாமே வணங்குவார் போன்று ஆர்வம் பொங்கப் பாடியதைப் பெரிய புராணத்துள் காணலாம்.

பெருமதில் சிறந்த செம்பொன்மா ளிகைமின்
பிறங்குபேர் அம்பல மேரு
வருமுறை வலம்கொண் டிறைஞ்சிய பின்னர்
வணங்கிய மகிழ்வொடும் புகுந்தார்
அருமறை முதலில் நடுவினில் கடையில்
அன்பர்தம் சிந்தையுள் அலர்ந்த
திருவளர் ஒளிசூழ் திருச்சிற் றம்பலமுன்
திருஅணுக் கன்திருவாயில்

கையும் தலைமிசை புனைஅஞ் சலியன
கண்ணும் பொழிமழை ஒழியாதே
பெய்யும் தகையன கரணங் களும்உடன்
உருகும் பரிவின பேறெய்தும்
மெய்யும் தரைமிசை விழுமுன் பெழுதரு
மின்தாழ் சடையொடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர்க்கும் பிடும்அவர்
ஆர்வம் பெருகுதல் அளவின்றால்

*நந்தி எம்பிரான் முதற்கண நாதர்கள்*
*நலங்கொள்பன் முறைகூட*
*அந்த மில்லவர் அணுகிமுன்*
*தொழுதிரு அணுக்கனும் திருவாயில்*
*சிந்தை ஆர்வமும் பெருகிடச்*
*சென்னியில் சிறியசெங் கையேற*
*உய்ந்து வாழ்திரு நயனங்கள்*
*களிகொள உருகும்அன் பொடுபுக்கார்*

என்பன போன்ற பாடல்களைக் காண்க.

இதனை உட்கொண்டே "மன்றைப் பராவிஎழு குன்றைப் பிரான்" எனப்பட்டார். மேலும் பெரிய புராணம் பாடச் சிதம்பரம் போந்தார் அல்லரோ இதனை,

*தில்லை எல்லையில் வந்து வந்துஎதிர்*
*தெண்ட னுகவி ழுந்தெழுந்*
*தல்லி சேர்கம லத்த டத்தினில்*
*மூழ்கி அப்பல வாணர்முன்*
*ஒல்லை சென்றுப ணிந்து கைத்தலம்*
*உச்சி வைத்துளம் உருகிநைந்*
*தெல்லை காணரி தாய பேரொளி*
*இன்ப வாரியில் மூழ்கியே*

*அடைய லார்புரம் நீறெ ழத்திரு*
*நகைசெய் தன்றொரு மூவரைப்*
*படியின் மேல்அடி யைக்கொ ளும்பத*
*பங்க யங்கள் பணிந்துநின்*
*றடிகளே உனதடியர் சீர்அடி*
*யேன்உ ணர்த்திட அடியெடுத்*
*திடர்கெ டத்தரு வாய்எ னத்திரு*
*அருளை எண்ணிஇ றைஞ்சினர்*

உமாபதி சிவாசாரியார் பாடி இருத்தலாலும் உணரலாம்.

உலகில் தொண்டே தலைசிறந்தது. தொண்டு எனினும் சேவை எனினும் ஒன்றே. இந்த அரிய செயலைப் புரிந்து பெருமை கொள்பவர் சேவையர் எனவும்படுவர். இவர்களை வேளாளர் என்றும் கருதுவர். இவர்கள் தொண்டு நாட்டில் இல்லை ஆயின், நாடே அழிந்து போகும். நாடு

என்ற பெயர்க்கே இடம் இல்லாமல் போகும். இத்தகைய பெருமைகட்கு உரிய குலத்தில் பிறந்தவர் சேக்கிழார். அக் குழத்தில் பலர் பிறந்திருந்தாலும், அவர்கட்கெல்லாம் இவர் சிரோரத்தினமாய்த் திகழ்ந்தமையின், சேவையர் குல சிகாமணியாயினர்.

தொண்டை நாட்டினை வளம்படுத்தி, நாற்பத்தெண்ணாயிரத்து நற்குடிகளை இந்த நாட்டில் குடிபுகுமாறு செய்தவன் கரிகாற்சோழன். அக்குடிகளுள் ஒன்று சேக்கிழார் குடி. கூடல்கிழான், புரிசைக்கிழான், வெண்குளப்பாக் கிழான் என்பார்களை ஒட்டிய குடிகள் சிறப்புடையன வாயினும், சேக்கிழான் குடிக்குள்ள பெருமை சிறப்பானதே ஆகும். கூடல், வெண்குளப்பாக்கம் என்ற இடப் பெயர்களை ஒட்டிக் குடிகள் எழலாயின. ஆனால், சேக்கிழான் குடியோ வேளாளர்கட்குரிய இலச்சினை) இரடபக்குறியினை உரிமையாகக் கொண்டெழுந்த குடி என்ற காரணத்தாலும் சேக்கிழார் குடி சிறப்புக்குரியதாயிற்று. இக் குடியின் சிறப்பைச் சேக்கிழார் பெருமானார் இக்குடியில் தோன்றி அனபாயனுக்குத் தலைமை அமைச்சராகும் மாண்பினையும் பெற்று, பெரிய புராணம் எழுதும் பேறும் பெற்று, அம் மன்னனால் பல சிறப்புக்களையும் பெற்றமையினால் நாம் உணர்கின்றோம். அதன் பிறகே சேக்கிழார் குடிக்குத் தன்னேரில்லாச் சிறப்பு ஏற்பட்டது. இதனை உமாபதி சிவனார் "குன்றத்தூரில் சேக்கிழார் திருமரபு சிறந்த தன்றோ" என்றும்,

> நாடெங்கும் சோழன்முனம் தெரிந்தே ஏற்றும்
> நற்குடிநாற் பத்தெண்ணா யிரத்துவந்த
> கூடல்கிழான் புரிசைகிழான் குலவு சீர்வெண்
> குளப்பாக்கி ழான்வரிசைக் குளத்து ழான்முன்
> தேடுபுக ழாரிவரும் சிறந்து வாழச்
> சேக்கிழார் குடியில்இந்தத் தேசம் உய்யப்
> பாடல்புரி அருண்மொழித்தே வரும்பின் நந்தம்
> பாலறா வாயரும்வந் துதித்து வாழ்ந்தார்

என்றும் பாடினர். (52)

2. நிலவுவிரி மதியும்ஒண் பனியும்உவ வாஎனினும்
நெஞ்சம்எப் பொழுதும்நெக்கு
நெக்குநகு வார்மதியும் அத்தகையர் கண்பனியும்
நேரேஉ வத்தல்செய்வ
கலவுசெம் மையும்மணமும் உடைமைக் கிணங்கஎவர்
கடையின்அவை உள்ளவேனும்
காமுறுவ அளிவிரா வுறமலர்வ ஆயகோ
கனகநறு மலர்இரண்டும்
உலவுதலில் அன்புசெறி யுந்தலைப் பெயராமை
உள்ளவே னும்பெயர்த்தே
உவகைபொங் கட்குவர மறுசம யருக்கெலாம்
உட்குவர முறுவலித்துக்
குலவுபுக ழேபோர்வை யாக்கொண்ட சேவையார்
குலசிகா மணிவருகவே
கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு
குன்றைப் பிரான்வருகவே

*[அ. சொ.] நிலவு-ஒளி, மதியம்-சந்திரனும், உவவா-விரும்பா, மகிழமாட்டா, மதியும்-அறிவும், அத்தகையர்-அத்தன்மையர், அன்பர்கள், கண்பனியும்-பனிபோல் ஒழுகும் கண்ணீரும், உவத்தல்-மகிழ்தலை, எவர்கடையும்-எவரிடத்தும், அவை-செம்மையும் மணமும், காமுறுவ-விரும்புவன, அளி-வண்டு, விராவுற-கலப்பதனால், கோகனகம்-தாமரை, (திருவடித் தாமரை) உலவுதல்-மாறுதல், செறியும்-நிரம்ப நெருங்கியுள்ள, தலை-இடத்தை விட்டு, பெயராமை-நீங்காமை, நறுமலர்-நல்ல மணமுள்ள மலர், செறி-நிறைந்த, உவகை-மகிழ்ச்சி, மறு-மற்றைய, உட்கு-அச்சம், முறுவலித்து-நகைத்து, சேவையார்-தொண்டராம் வேளாளர், சடை அடவியர்-சடைக்காட்டை யுடையவராம் சிவபெருமானார், (சாடாடவியர்) மன்றை-பொற்சபையை, பராவி-போற்றி.*

**விளக்கம்:** மதி பொதுவாக எல்லா மக்களுக்கும் உவகை செய்யவல்லதாயினும், காதலர் பிரிந்திருக்கையில் அவர்கட்கு அஃது உவகை ஊட்டுவதில்லை. இதனைச் சேக்கிழார் பெருமானாரே தடுத்தாட்கொண்ட புராணத்தில், "சாத்தும் வெண்மதி போன்றிலை தண்மதி" என்றும், "நிலவு உமிழும் தழல் ஆற்றாள் (ஈண்டு நிலவினைத் தழல் எனக் கூறியதைக் காணவும்) என்றும் பாடினர். சொக்கநாதப் புலவர்,

*ஊரைச் சுடுமோ உலகந்தனைச் சுடுமோ*
*ஆரைச் சுடுமோ அறியேன்—நேரே*
*பொருப்புவட்ட மானமுலைப் பூவையரே இந்த*
*நெருப்புவட்ட மான நிலா*

என்றும், புகழேந்தியார் "திங்கள் சுடர்பட்டுக் கொப்புளங் கொண்ட குளிர்வானை" என்றும் பாடியுள்ளனர். "அத்திக் காய், ஆலங்காய் வெண்மதியே" என்று ஒரு புலவர் சந்திரனை வெறுத்துக் கூறினர். ஆகவே, இத்தருணத்தில் நிலவுவிரி மதி உவவா ஆயிற்று. பனி எவர்க்கும் உவப்பைத் தராது என்று கூற வேண்டுவதில்லை. "பனிக்கு ஆலம் மிக நல்லது" என்று திரு பிள்ளை அவர்களே, தாமும் தம் நண்பர் திரு ஆறுமுக நாவலரும் மார்கழித் திங்களில் வைகறையில் நீராடுகையில் கூறியுள்ளார். தாமரைகட்கு மதியும், பனியும் உவகை செய்யா என்பதை ஈண்டு நினைவுகொள்ளல் வேண்டும். சேக்கிழார் பெருமானாரும் பனியின் கொடுமையினை,

*அளிக்குலங்கள் சுளித்தகல*
*அரவிந்தம் முகம்புலரப்*
*பளிக்குமணி மரகதவல்*
*லியிற்கோத்த பான்மைஎனத்*
*துளித்தலைமெல் அருகுபனி*
*தொடுத்தசையச் சூழ்பனியால்*
*குளிர்க்குடைந்து வெண்படாம்*
*போர்த்தனைய குன்றுகளும்*

மொய்பனிசூர் குளிர்வாடை
முழுதுலவும் பொழுதேயாய்க்
கொய்தளிர்மென் சோலைகளும்
குலைந்தசையக் குளிர்க்கொதுங்கி
வெய்யவனும் கரம்நிமிர்க்க
மாட்டான்போல் விசும்பினிடை
ஐதுவெயில் விரிப்பதுவும்
அடங்குவதும் ஆகுமால்

என்று பாடியுள்ளார். இந்நிலையில் பனியின் கொடுமை யிருக்குமானால் எவர்தாம் அதனை உவப்பர். ஆகவே, ஈண்டு "மதியும் பனியும் உவவா" என்று ஓதினர். ஆனால், எவரும் உள்ளம் உருகுவார் மதியினையும் (அறிவினை) அவர் தம் ஆனந்தக் கண்ணீரையும் உவப்பர். அப்பர் பெருமானை வணங்கும் வணக்கப் பாடலில் சிவஞான முனிவர்,

இடையறாப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவாரத்தின்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப்பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்

என்று துதித்து வணங்கினர்.

இதனால் நெக்கு உருகுவார் மதியும், அத்தகையார்கள் பனியும் உவத்தல் செய்ய என்பது உண்மை ஆதலைக் காணவும்.

தாமரை மலர் செம்மை நிறமும் மணமும் உடைமை யோடு, வண்டுகள் மொய்க்கப் பெறும் தன்மையையுமுடை யது. இதுவே ஈண்டு உணர்த்தப்பட்டது. ஈண்டுக் கோகனம் இரண்டு என்றது சேக்கிழார் பெருமானரது திருவடிகளை என்க,

சேக்கிழாரது திருவடிகளாகிய தாமரைகள் அடியார்களின் மதிக்கும் அனந்தக் கண்ணீராம் பனிக்கும் உவகை செய்வன என்று கூறிய நயத்தைக் காண்க. இதனுல் இயற்கைத் தாமரைக்கும் சேக்கிழாரது திருவடித் தாமரைக்கும் வேற்றுமை காட்டி வேற்றுமை அணி அமையப் பாடிய நயத்தையும் காண்க. மேலும், ஈண்டு இயற்கைத் தாமரைக்கும். பாதத் தாமரைக்கும் இயைபு காட்டப்பட்டுள்ளது, செம்மை, செந்நிறம் என்ற பொருளையும், நேர்மை என்ற பொருளையும், மணம் என்பது நறுமணம், நல்ல நிலை என்ற பொருளையும் அளி என்பது வண்டு என்ற பொருளையும், காத்தல் என்ற பொருளையும் தரும் பொருளில் ஈண்டு அமைக்கப் பட்டன. திருவடித் தாமரை நேர்மையும், நன்னிலையும், காத்தலையும் கொண்டு விளங்குகிறது. இயற்கைத் தாமரை, செந்நிறத்தையும், நறுமணத்தையும், வண்டுகளையும் கொண்டு திகழ்கிறது. ஆகவே, சிலேடை அணியும் இதில் உண்டு.

தாதியர் சேக்கிழாராம் குழந்தையினைப் புன்னகை புரியுமாறு வேண்டுகின்றனர். அங்ஙனம் வேண்டுகையில், தங்கட்கு இன்பம் தோன்றவும், பிற சமயத்தவர்க்குத் துன்பம் தோன்றவும் சிரித்துக்கொண்டு நடந்துவர வேண்டுகின்றனர். சமயாசாரியர்கள் செயல்கள் இங்ஙனம் அகச் சமயத்தார்க்கு அகக்களிப்பையும், புறச்சமயத்தார்க்குத் துணுக்கத்தையும் தருதல் மரபு. இதனைச் சேக்கிழாரே திருஞானசம்பந்தப்பெருமானுர் தழந்தைப் பருவத்தைப்பற்றிப் பாடுகையில்,

விதிதவறு படும்வேற்றுச் சமயங்கள் இடைவிழுந்து
கதிதவழ இருவிசும்பு நிறைந்தகடி வார்கங்கை
நதிதவழும் சடைமுடியார் ஞானம்அளித் திடவுரியார்
மதிதவழ்மா ளிகைமுன்றில் மருங்குதவழ்ந் தருளினுர்

என்று பாடினர்.

சேவையர் குலம் உலகு புகழையே போர்வையாகக் கொண்டது.

ஆழித்தேவர் கடலாஞர் அல்லாத்தேவர் அம்பலத்தார்
ஊழித்தேவர் தாம்கூடி உலகம்காக்க வல்லாரோ
வாழித்தேவர் திருமக்கள் வையம்புரக்கும் பெருக்காளர்
மேழித்தேவர் பெருமைக்கு வேறும்தேவர் கூறேனே

தொழுங்குலத்தில் பிறந்தால்என்
சுடர்முடி மன்னர்ஆகி
எழுங்குலத்தில் பிறந்தால்என்
இவர்க்குப்பின் வணிகரெனும்
செழுங்குலத்தில் பிறந்தால்என்
சிறப்புடைய ராஞல்என்
உழுங்குலத்தில் பிறந்தாரே
உலகுய்யப் பிறந்தாரே

அழுங்குழவிக் கன்புடைய
தாய்போல் அனைத்துயிர்க்கும்
எழுங்கருணைப் பெருக்காளர்
எளியரோ யாம்புகழ
உழுங்கொழுவில் கருவீறி
உலகமுதல் கருவாகச்
செழுங்கமலத் தயன்இவரைச்
செய்துலகம் செய்வானேல்

வேதியர்தம் உயர்குலமும் விறல்வேந்தர் பெருங்குலமும்
நீதிவளம் படைத்துடைய நிதிவணிகர் தம்குலமும்
சாதிவளம் படைத்துடைய தாயனைய காராளர்
கோதில்குலம் தனக்குநிகர் உண்டாகில் கூறீரே

என்று ஏர் எழுபது பாடல்களால் வேளாளர், புகழே போர்வையாக உடையவர் என்பது புலஞகும்.

சேவையர் காவலராம் சேக்கிழார் மறுசமயத்தவர் உட்குவரப் பாடவல்லவர் என்பது,

அவம்பெருக்கும் புல்லறிவின் சமண்முதலாம் பரசமயம்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறும்
தவம்பெருக்கும் சண்பையிலே தாவில்சரா சரங்கள்எலாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தார்

என்றும்,

அங்கவள் உருவம் காண்பார் அதிசயம் மிகவும்எய்திப்
பங்கமுற் றுரே போன்றூர் பரசமயத் தில்உள்ளோர்
எங்குள செய்கை தான்மற் றென்செய்த வாறிதென்று
சங்கையாம் உணர்வு கொள்ளும் சமணர்தள் ளாடி
[வீழ்ந்தார்

என்றும் பாடிய ஆற்றுல் அறியலாம். (53)

3. நீடும்இன் பரிவையர் புணர்ப்பென்ம ரும்ஐந்து
நிகழ்கந்த மும்கெடுதலே
நிலவும்இன் பென்மநம் குணம்மூன்றும் ஒழிதலே
நிரம்பல்உறும் இன்பென்மரும்
நாடும்இன் பிருவினைக் கேடென்ம ரும்மலம்
நசித்தலே இன்பென்மரும்
நவில்விக்கி ரகநித்தம் இன்பென்ம ரும்தோன்றும்
ஞானமே இன்பென்மரும்
பாடும்இன் புயிர்கெடுதல் என்மரும் பகுதிமேல்
கெடுதலே இன்பென்மரும்
படுசித்தி இன்பென்ம ரும்பிறநும் வாதம்
படர்ந்துவரு திறன்அறவளம்
கூடுசெந் தமிழ்அருமை அறிபெருஞ் சேவையார்
குலசிகா மணிவருகவே
கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு
குன்றைப் பிரான்வருகவே

[அ. சொ.] இன்பு-இன்பம், முத்தி, அரிவையர்-மாதர்களது, புணர்ப்பு-புணர்ச்சி இன்பம், என்மரும்-என்று சொல்பவரும், ஐந்துநிகழ் கந்தம்-பஞ்சகந்தம், ஸ்கந்தம்-கூட்டம், குணம் மூன்று-ராஜச, தாமச, சாத்வீக குணங்கள், இருவினை கேடு-நல்வினை தீவினைகள்இரண்டும் கெடுதலே, மலம்-ஆணவம், கன்மம் மாயை என்னும் மூன்று மலங்களும், நசித்தலே-ஒழித்தலே, நவில்-கூறப்படுகின்ற, விக்கிரக நித்தம்-உடல் அழியாதிருத்தல், பாடும்-உண்டாகும்

விக்கிரகம்-சுத்தமாயா சரீரம், சித்தி-அட்டமா சித்திகளைப் புரிதல், பசுகரணம் கெட்டுச் சிவகரணம் ஆதலும் ஆம். படு-தோன்றும் திறன்-கூறுபாடுகள், அற-ஒழிய, பகுதி-பிர குருதிகள், வாதம் கூர்ந்து-வாதம் பேசி, வளம்கூடுதல். உண்மை முத்தி கூடுதல். வளம் கூடுசெந்தமிழ்-சைவத் திரு முறைகள், அருமை-பெருமை.

**விளக்கம்:** உலகில் மக்கள் ஒரே தன்மையராக இலர். வைதீகர்களாயினும் சரி; லௌகீகர்களாயினும் சரி; இரு வகையினரும் தாம் தாம் இன்பம் துய்ப்பதனைக் குறித்துத் தம் தம் கருத்தினைக் கூறி வருவர். மாதர்களோடு கூடி இன் புறுதலே சிறந்தது என்பர் ஒரு சிலர். இவர்களை உலகாயதர் என்று சைவ சித்தாந்த நூல் கூறும். இவர்கள் கொள்கையை,

ஈசனுர் அயனுர் மாலோ டிந்திரன் தெரிவை மார்பால்
பேசொணு வகைகள் எல்லாம் செய்தன்றே பெரியோர் ஆனுர்
ஆகையால் அவர்போல் நாமும் ஆகவே வேண்டுமாயின்
வாசமார் குழலா ரோடும் வல்லவா கூடி வாழ்மின்

என்னும் சிவஞான சித்தியார் பரபக்கப் பாடலாலும்,

தண்ணுளி தேயன்பர் மேவிக் கலப்பத் தனையருளும்
எண்ணுளி காழிப்பிரான்எனத் தன்னை இகலதெறுமைக்
கண்ணுளி யாதும் கருதா தளிக்கக் கலந்தனம்யாம்
விண்ணுளி ஆரணன் நாரணன் போகமும் வேண்டிலமே

என்று சீர்காழிக் கோவைப் பாடலாலும்,

தாண்டும் சினைவிடை எம்மான்
தனிவெங்கைத் தன்சிலம்பில்
யாண்டும் பெறலரும் இன்பம்
எல்லாம்ஐம் புலனும் இன்று
தூண்டும் சுடர்என நின்றஇம்
மாதரில் துய்த்தனவால்
வேண்டும் பொருள்நமக் கேதோ
இனிஇந்த மேதினிக்கே

என்று திருவெங்கைக் கோவை கூறும் பாட்டாலும் தெளிய லாம்.

''உரன்என்னும் தோட்டியால் ஓர்ஐந்தும் காப்பான்
வரன்என்னும் வைப்புக்கோர் வித்து''

என்றும்,

அடல்வேண்டும் ஐந்தின் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு

என்றும் திருக்குறள் கூறுவதால் ஐந்து நிகழ் கந்தம் கெடுதல் வேண்டும் என்பது பெற்றும்.

மேலும், இவ்வைந்து கந்தங்களைப் பகுத்துப் பகுத்துக் கூறத் தொடங்கின் கீழ் வருமாறு பகுக்கப்படும். அவை, உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் எனப் படும். இவற்றுள் உருவக் கந்தம் பூத உரு, உபாதாய உரு என இருவகைப்படும். பூத உரு மண், நீர், தீ, காற்று என்னும் நான்காகும். வேதனைக் கந்தம், குசல வேதனை (சுக அறிவு) அகுசல வேதனை (துக்க அறிவு) குசலா குசல வேதனை (சுக துக்க அறிவு) என்றும் மூவகையாகும். குறிப்புக் கந்தம், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்தும் மனம் ஒன்றும் ஆகிய ஆறும் ஆகும். பாவனைக் கந்தம் மனோவாக்குக் காயங்களினுல் உண்டாகும் புண்ணிய பாவங்களாகும். விஞ் ஞான கந்தமாவது, மேலே கூறப்பட்ட உருவம், வேதனை, குறிப்பு, பாவனை ஆகிய இந்நான்கு கந்தங்களின் உண்மை நிலையை அறியும் அறிவாகும். இந்தப் பஞ்ச கந்தங்களும் கெடுதல் முத்தி இன்பம் என்பவர்கள் பௌத்தரில் சௌத் திராந்திகர். இவர்கள் மதக் கொள்கையினைச் சிவஞான சித்தி யார் பரபக்கம்,

ஓங்கிய உருவ மோடும் வேதனை குறிப்பி னேடும்
தாங்குபா வனைவிஞ் ஞானம் தாம்இவை ஐந்தும்கூறி
பாங்கினுல் சந்தா னத்தில் கெடுவது பந்த துக்கம்
ஆங்கவை பொன்றக் கேடாய் அழிவது முத்திஇன்பம்

எனக் கூறுகிறது.

முக்குணமாகிய ராஜச தாமச சாத்வீகங்களும் கெடுதல் இன்பம் என்பவர்கள் நிர்க்குணவாதிகள். இவர்களைச்

சமணருள் நிகண்டவாதிகள் என்பர். இவர்கள் நல்வினை, தீவினை கெடுதல், இன்பம் என்பவர்கள். இவர்கள் தன்மையை,

சீர்சால் நல்வினை தீவினை அவைசெய்யும்
வருவழி இரண்டையு மாற்றி முன்செய்
அருவினைப் பயனது பவித்தறுத் திடுதல்
அதுவீ டாகும் என்றனன்.

என்று மணிமேகலை கூறுகிறது. இக் கொள்கையினைப் பிரபாகரன் மதம் என்றும் கூறுவர்.

ஆணவ மலம் நசித்தலை இன்பம் என்பவர் பேதவாத சைவர்.

விக்கிரக நித்தம் இன்பம் என்பவர் சிவ சமவாத சைவர். இவர்கள் சிவசாரூப முதலான பதபத்திகளைப் பெறுதலே முத்தி இன்பம் என்பவர்.

ஞானமே இன்பம் என்பவர் மாயா வாதிகள். இவர்களது மதக் கொள்கையினைச் சிவஞான போத பரபக்கம்,

தானே தானாய் அனுபோகம்
    தன்னில் தன்னை அனுபவித்திட்
டூனே உயிரே உணர்வேஎன்
    றென்றும் இன்றி உரைஇறந்து
வானே முதலாம் பூதங்கள்
    மாய மாயா தேமன்னி
நானே பிரமம் எனத்தெளியும்
    ஞானம் பிரம ஞானமே

என்றும்,

"சாற்றும் மறைதத் துவமசிமா
    வாக்கி யங்கள் தமைஉணர்ந்தால்
போற்றி அதுநீ ஆனாய்என்
    றறைவ தல்லால் பொருள்இன்றே"

என்றும் கூறுகிறது,

உயிர் கெடுதல் இன்பம் என்பவர், பாற்கரிய மதத்தர். இவர்களது இயல்பைச் சித்தியார் பரபக்கம்.

சித்தே உலகாய்ப் பரிணமித்துச்
சீவன் ஆகித் திகழ்ந்தமையால்
சத்தே எல்லாம் முத்தியினைச்
சாரக் கண்ட ஞானங்கள்
வைத்தே மொழியும் மாமறைகள்
சொன்ன மரபே வந்தக்கால்
ஒத்தே கெட்டுப் பிரமத்தோ
டொன்றாய்ப் போமென் றுரைத்தனனே

என்கிறது,

பகுதிமேற் கெடுதல் இன்பம் என்பவர் பாடாணவாத சைவர். இவர்களது கொள்கை ஆன்மா ஒன்றும் விளங்குதல் இன்றிக் கல்லு போல் கிடப்பதே முத்தி என்பது.

இன்னோரன்ன அரிய குறிப்புக்களைப் புகுத்தி வைத்த திரு. பிள்ளை அவர்களின் சைவசித்தாந்தப் பேரறிவுத் திறனை என்னென்று போற்றுவது!

மேலே காட்டிய விளக்கமே அன்றிக் கீழ்வருமாறு விளக்கம் காட்டினும் இழுக்காது.

குணரகிதராக இருப்பதே இன்பம். சத்வக் குணமும் கெடுதல் எனக் கூறியதன் கருத்து அதுவும் பிறவிக்கு ஏதுவாதலின் என்க. நல்வினை தீவினை இரண்டும் கெடுதலே இன்பம். இதனை "இருமைவகை தெரிந்து" என்றும் குறட்குப் பரிமேலழகர் எழுதிய விளக்கத்தால் அறியலாம். அவர், "நல்வினையும் பிறவிக்கு ஏதுவாதலின், அதுவும் இருள்சேர் வினை" என்று அடைகொடுத்துப் பேசியதாக எழுதியுள்ளார். இது போன்றதே சாத்வீகக் குணமும் கெடுதல் வேண்டும் என்பது. மலம் ஒழிதல் இன்பத்திற்கு ஏது எனக் கூறவேண்டுவதில்லை. இம்மலத்தின் கொடுமையினைச் சித்தியார்,

மும்மலம் நெல்லினுக்கு முளையொடு தவிடு மிபோல்
மம்மர்செய் தணுவின் உண்மை வடிவினை மறைத்து நின்று
பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத்து வங்கள்
பண்ணும்

என்று அதன் கொடுமையினை கூறுகின்றது. ''உயர்சிவ ஞானத்தாலே போழிளமதி யிணைப் போற்றுவார் அருள் பெற்றரே'' போக்குவார் என்றும் கூறி, அதனைப் போக்கும் வழியைக் காட்டியது. ஆகவே, மலம் நசித்தல் இன்பம் ஆயிற்று.

மலம் நலிந்தால் இன்பம் உண்டு என்பதை,

செம்மைநலம் அறியாத சிதடரொடும் திரிவேனை
மும்மைமலம் அறிவித்து முதலாய முதல்வன்தாள்
நம்மையும்ஓர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த
அம்மைஎனக் கருளிய வாறுஆர் பெறுவார் அச்சோவே

எனும் மணிமொழியார் வாக்கால் தெளிக.

உடலை அழியாது வைத்திருத்தல் இன்பம் என்பதைத் திருமூலர் கூறுமாற்றால் உணரலாம்.

உடம்பார் அழியில் உயிரார் அழிவார்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடப்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே

உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே

என்பனவற்றைக் காணவும்.

ஞானமே இன்பு என்பர் என்பதை அப்பர் வாக்கு அறியுறுத்தும்.

ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
ஞானத் தால்தொழு வேன்உனை நான்அலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தால்உனை நானும் தொழுவனே

என்று கூறியதோடு நில்லாது, இறைவனே ஞானமயன் என்று கூறி இன்புறுவாராயினர்.

கான நாடு கலந்து திரியில்என்
ஈனம் இன்றி இருந்தவம் செய்யில்என்
ஊனை உண்டல் ஒழிந்துவான் நோக்கில்என்
ஞானன் என்பவருக் கன்றி நன்கில்லையே

என்றதூஉம் காண்க.

இறைவனைப் பாடுதலே இன்பு என்பது எவரும் அறிந்த உண்மை. இறைவனே சுந்தரரை நோக்கி,

மற்றுநீ வன்மை பேசி
வன்தொண்டன் என்னும் நாமம்
பெற்றனை நமக்கும் அன்பில்
பெருகிய சிறப்பில் மிக்க
அர்ச்சனை பாட்டே யாகும்
ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடுகென்றார்
தூமறை பாடும் வாயார்

என்றனர்.

பன்மாலை திரள்இருக்கத் தமைஉணர்ந்தோர்
பாமாலைக் கேநீதான் பட்சம் என்று
நன்மாலை யாஎடுத்துச் சொன்னார் நல்லோர்
நலம்அறிந்து காலாத நானும் சொன்னேன்

என்று தாயுமானவரும் பாடி இன்பு கண்டார். உயிர் கெடுதல் என்பதுடன் இன்பு என்னும் சொல்லைக் கூட்டுக. உயிர் கெடுதலாவது பாடுங்காலத்துத் தம்மை மறந்து அத்து விதமாய் நிற்றலை என்க. உயிர் கெட்ட நிலையில் இன்பு பெற்றதை மணிமொழியார்,

வான்கெட்டு மாருதம் மாய்ந்தழல் நீர்மண் கெடினும்
தான்கெட்டல் இன்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு
ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட் டென்உள்ளமும் [போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ

என்று அறிந்து அறிவித்ததை அறியவும்.

பகுதிமேல் கெடுதல் என்பதன் விளக்கத்தினைப் பரிமேலழகர்,

சுவைஒளி ஊறுஓசை நாற்றம்என்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு

என்ற குறட்கு எழுதிய இடத்துக் காணவும்; பகுதி என் பதனை ஐம்பொறிகளாகிய பகுதி எனக் கொண்டு அவை கெடுதல் இன்பம் எனக் கொள்ளினும் பொருந்தும். இது கருதியே உரன் என்னும் தோட்டியான் ஓர் ஐந்தும் காப்பான் வரன் என்னும் வைப்புக் கோர்வித்து என்றனர். நாலடியாரும்,

மெய்வாய்கண் மூக்குச் செவிஎனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை அவாவினைக்—கைவாய்க்
கலங்காமல் காத்துய்க்கும் ஆற்றல் உடையான்
விளங்காது வீடு பெறும்

என்று கூறுகிறது' கெடுதல் என்பது அடக்குதல் என்று பொருள் கொள்க.

சித்தி என்பன அணிமா, மகிமா, கரிமா, இலகிமா. பிராப்த்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன, அணிமா அணுவாகச் சுருங்கும் வன்மை, மகிமா உருவைப் பெருக்கும் வன்மை, கரிமா கனமாகும் வன்மை, இலகிமா கனம் இன்மையாகும் வன்மை, பிராப்தி விரும்பியதை விரும்பியவாறு அடையும் வன்மை, பிராகாமியம் கூடு விட்டுக் கூடு பாய்தல், ஆகாய கமனம் செய்தல், விரும்பிய போகங்களை இருந்த இடத்தில் அடைதல், முக்கால உணர்ச்சி, தன் உடல் ஒளியால் எல்லாப் பொருள்களையும் காணல், முக்கால நிகழ்ச்சிகளை அறிதல் ஆகிய வன்மை, ஈசத்துவம் எத்தகையோர்க்கும் மேம்பட்டு இருத்தலாம் வன்மை, வசித்துவம், சராசர பொருள்களைத் தன் வசம்ஆக்கும் வன்மை. இச் சித்திகள் கைவரப் பெறுதல் இன்பம் எனக் கருதுபவர் உளர். இவ்வாறு இன்பத்திற்குரிய வழிகளைப் பலவாறு கூறுதலின், "வாதம் படர்ந்து வரும்திறன்" என்றனர்.

இவற்றில் ஈடுபடாது செந்தமிழ் அறிந்து போற்றுதலே கடனாகக் கொண்டவர் சேக்கிழார் ஆதலின், "வளம் கூடு செந்தமிழ் அருமை அறி*** சிகாமணி" எனப்பட்டார்.

தேவாரத் திருமுறைகள் சொல் வளம், பொருள் வளம் பொருந்தப் பெற்றமையின் வளம் கூடு செந்தமிழ் எனப் பட்டது. அல்லது பொதுவாகத் தமிழ்மொழிக்கே இத் தொடரைப் பொருள் படுத்தினும் பொருத்தமே.

தமிழுக்கு வளமாவது பல மொழிகள் தோன்றி அழிந்து போக, இது மட்டும் அழியாத தன்மையில் கன்னித் தமிழாக அன்றும் இன்றும் இருந்து வருவதாகும். இருந்து வருவதோடு இன்றிப் பிற மொழிகட்குத் தாயகமாகவும் சில மொழிகளை வென்று வெற்றியுடன் திகழ்வதும் ஆகும். இதனை,

பல்லுயிரும் பலவுலகும்
படைத்தளித்துத் துடைக்கினும்ஓர்
எல்லையறு பரம்பொருள்முன்
இருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும்
கவின் மலையா ளமும்துளுவும்
உன் உதரத்து உதித்தெழுந்தே
ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக்
கழிந்தொழிந்து சிதையாஉன்
சீரிளமைத் திறம்வியந்து
செயல்மறந்து வாழ்த்துதுமே

என்று மனோன்மணியமும்,

மறைமுதல் கிளர்ந்தவாயால் மதிமுகிழ் முடித்தவேணி
இறைவர்தம் பெயரைநாட்டி இலக்கணம் செய்யப் [பெற்ற
அறைதரு பாடைஅனைத் தையும்வென்று ஆரியத்தோடு
உறழ்தரு தமிழ்த்தெய்வத்தை உள்நினைந்து ஏத்தல் [செய்வாம்

என்று சீகாளத்திப் புராணமும் கூறிதலைக் காணவும். இங்ஙனம் எல்லாம் விளங்குதற்கு வளம் இருந்தால் அன்றி இயலுமோ?

தமிழின் பெருமையினைச் சேக்கிழார் நன்கு அறிந்தவர் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. காரணம் அவர் தமிழைப் பற்றிக் கூறும்போதெல்லாம், "ஞாலம் அளந்த மேன்மைத் தெய்வத் தமிழும்" என்றும், "சால்பாய மும்மைத் தமிழ் என்றும், "விரும்பும் தமிழ்" என்றும், "வசையில் செழும் தமிழ்" என்றும், "பரவுசொல் தமிழ்" என்றும், "தூக்குஇன் தமிழ்" என்றும், "உயர் தமிழ்" என்றும், "அருஞானச் செந் தமிழ்" என்றும் தமிழின் அருமை அறிந்து செப்பிய இடங்கள் பல ஆதலின், "தமிழ் அருமை அறிசிகாமணி" எனப்பட்டார். இப்பாட்டில் கூறப்பட்ட சைவசித்தாந்த விளக்கங்களை மேலும் காண விழைவார் சிவஞான மாபாடியத்துள் காணவும்.

சிவப்பிரகாசத்தில் உமாபதி சிவாசாரியார்,

அரிவையரின் புறுமுத்தி கந்தம் ஐந்தும்
அறுமுத்தி திரிகுணமும் அடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போம் முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்திஇவை பழிசேர் முத்தி
திரிமலமும் அகலவுயிர் அருள்சேர் முத்தி
திகழ்முத்தி இதுமுத்தித் திறத்த தாமே

என்று கூறி இருப்பதை ஈண்டு நினைவு கொள்வோமாக. (54)

4. செற்றசெங் கன்னல்படு தரளமும் கந்திச்
செழுஞ்சோலை படுதரளமும்
திண்மருப் புக்கடாக் களிறுமறை யப்போய
செஞ்சாலி படுதரளமும்
துற்றபைங் கதலியில் படுதரள மும்பாலி
துறைதொறும் எடுத்துவீசுஞ்
சுடர்மணிக ளுங்கரும நட்டுவோர் வாருபு
சுமந்துகொடு வந்துதூய
முற்றமெங் கணுநிறை தரக்குவித் திடல்கண்டு
மோகமுற் றோடிஆடி
முகந்திட்றி ஏற்றியொன் றுக்கிவிளை யாடுசிறு
முண்டகத் தாள்பெயர்த்துக்
கொற்றவன் தருமுதன்மை கொண்டுமிளிர் சேவையார்
குலசிகா மணிவருகவே
கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு
குன்றைப் பிரான்வருகவே.

*[அ. சொ.] செற்ற-நெருங்கிய, கன்னல்-கரும்பு, படு-தோன்றுகின்ற, தரளம்-முத்து, கந்தி-பாக்கு மரம், திண்மருப்பு-வன்மைமிக்க தந்தம், கடாக்களிறு-மதசலம் ஒழுக்கும் யானை, போய-மிகவளர்ந்த, செஞ்சாலி-செந்நெற் கதிர், துற்ற-நெருங்கிவளர்ந்த, கதலியில், வாழையில், பாலி-பாலாறு, துறை-கரைதோறும், கருமம் நடவுவோர்-வயலில் வேலை செய்பவர், சுடர்மணி-ஒளிவிடும் முத்து, வாருபு-வாரிக்கொண்டு, தூய-சுத்தமான, மோகமுற்று-ஆசை கொண்டு, எற்றி-உதைத்து, முண்டகத்தாள்-தாமரைப் பாதம், கொற்றவன்-அனபாய சோழமன்னன், முதன்மை-முதல் அமைச்சர் பதவி, மிளிர்-உத்தமசோழ பல்லவன் என்னும் பெயருடன் விளங்கும்.*

**விளக்கம்:** *இப்பாடல் மூலம் முத்துக்கள் தோன்றும் இடங்களை அறியலாம். முத்துக்கள், கரும்பு, பாக்கு மரம்*

யானைத் தந்தம், நெற்கதிர், வாழை முதலான இடங்களில் உண்டாதலை,

தந்தி வராகம் மருப்புஇப்பி பூகம் தனிக்கதலி
நந்து சலஞ்சலம் மீன்தலை கொக்கு நளினம்மின்னார்
கந்தரம் சாலி கழைக்கன்னல் ஆவின்பல் கட்செவிகார்
இந்து உடும்பு கராம்முத்தம் ஈனும் இருபதுமே

என்ற பாடலால் அறியலாம்.

இங்ஙனம் எல்லாம் பிறக்கும் முத்துக்கும் விலையுண்டு. ஆனால், முருகன் தரும் முத்திற்கு விலை கூற இயலாது என்பதைப் பகழிக்கூத்தர்,

கத்தும் தரங்கம் எடுத்தெறியக்
கடுஞ்சூல் உளைந்து வலம்புரிகள்
கரையில் தவழ்ந்து வாலுகத்தில்
கான்ற மணிக்கு விலையுண்டு
தத்தும் கரட விகடதட அந்திப்
பிறைக்கூன் மருப்பில்விளை
தரளம் தனக்கு விலையுண்டு
தழைத்துக் கழுத்து வளைந்தமணிக்
கொத்தும் சுமந்த பசுஞ்சாலிக்
குளிர்முத் தினுக்கு விலையுண்டு
கொண்டல் தருநித் திலம்தனக்குக்
கூறும் தரம்உண்டு உன்கனிவாய்
முத்தம் தனக்கு விலையில்லை
முருகா முத்தம் தருகவே
முத்தம் சொரியும் கடலலைவாய்
முதல்வா முத்தம் தருகவே

என்று பாடி மகிழ்ந்தார்.

இக்கருத்தையே குமரகுருபர சுவாமிகளும் தம் மீனாட்சி அம்மன் பிள்ளைத் தமிழில்,

கொழுதி மதர்வண் டுழக்குகுழல்
கோதைக் குடைந்த கொண்டலும்நின்
குதலைக் கிளிமென் மொழிக் குடைந்த
குறுங்கண் கரும்பும் கூன்பிறைக்கோ

டுழுத பொலன்சீ றடிக்குடைந்த
செந்தா மரையும் பசுங்கழுத்துக்
குடைந்த கமஞ்சூல் சங்கும்ஒழு
கொளிய கமுகும் அழகுதொய்யில்
எழுது தடந்தோட் குடைந்ததடம்
பணையும் பணைமென் முலைக்குடைந்த
இணைமா மருப்பும் தருமுத்துன்
திருமுத் தொவ்வா இகபரங்கள்
முழுதும் தருவாய் நிறைகனிவாய்
முத்தம் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தம் தருகவே''

என்று பாடியுள்ளனர்.

நன்கு வளர்ந்த செஞ்சாலி யானையை மறைக்கும் என்றதனால் நெல்வளம் கூறியதாயிற்று. இவ்வாறு நெல்லின் வளர்ச்சியினைச் சிவஞான முனிவர்,

பங்கம் நிரந்த வயல்கண் விளைந்து
பழுத்துஎழு நெற்குலைபோய்ப்
பசும்புர வித்திரள் பூட்டிய தேரில்
பரிதிக் கடவுள்புடைப் பொங்கொளி
வெண்கவ ரித்தொகை வீசுவ
போல ஒசிந்தசையும்

என்றனர். ''களிறு மறையப் போய செஞ்சாலி'' என்று மதுரைக் காஞ்சியும் கூறுதல் காண்க.

பாலாற்றில் அடித்து வரும் பொருள்களுள் மணியும் ஒன்று. மணி எனப் பொதுப்படக் கூறியதனால் முத்துக்களே அல்லாமல், ஏனைய மணிகளையும் கொள்க. ஆறு பல இடங்களையும் கடந்து வருதலின், அவ்வவ் இடங்களின் மணிகளை அது வாரிக்கொண்டு வருகின்றது- முத்துக்கள் பிறக்கும் இடங்கள் பலவாக இருத்தலின், அவை அங்கங்குப் பரந்து கிடக்க உழவர் அவற்றை வாரிக் குவிக்க நேர்ந்தது. குழந்தைகள் நூதனப் பொருள்களைக் காணின், அவற்றை நாடி ஓடித் தொட்டு விளையாடுதல் மரபாதலின், சேக்கிழாராம்

குழந்தையும் முற்றத்தில் குவிக்கப்பட்ட முத்துக் குவியலைக் கண்டதும் ஓடி காலால் இடறி எற்றி விளையாடியது.

இரண்டாம் குலோத்துங்கன் நம் சேக்கிழார் பெருமானுர்க்குத் தம் அரச அவையில் முதல் அமைச்சர் பதவி ஈந்து, உத்தமச் சோழப் பல்லவர் என்ற பட்டத்தையும் சூட்டி மகிழ்ந்தனன். இதனை உமாபதிசிவாசாரியார்,

அத்தகைய புகழ்வேளாண் மரபில் சேக்கி ழார்குடியில்
வந்தஅருள் மொழித்தே வர்க்குத்
தத்துபரி வளவனும்தன் செங்கோ லோச்சும்
தலையளித் தவர்தமக்குத் தனது பேரும்
உத்தமச்சோ ழப்பல்ல வன்தான் என்றும்
உயர்பட்டம் கொடுத்திட ஆங் கவர்நீர் நாட்டு
நித்தனுறை திருநாகேச் சுரத்தில் அன்பு
நிறைதலினல் மறவாத நிலைமை மிக்கார்

என்று போற்றிப் பாடினர். இதனை உட்கொண்டே, "கொற்றவன் தரு முதன்மை கொண்டுமிளிர்" என்று கூறினர் திரு பிள்ளை அவர்கள். (55)

5. மாயா மலம்கரும மலம்இவைக் கேதுவாம்
மலம்வே ரொடும்கழன்று
வலியதன் சத்திகெடு மாறுநிரு அருள்பதிய
வந்துபதி செம்மலர்த்தாள்
ஆயாத எம்மனரும் அகலாத தாள்அடியர்
அவிர்புதல்வர் தோழர்தாங்கள்
அடைந்தமார்க் கம்பொலிய என்னும் திருத்தாள்
அராவுரி நிகர்த்ததாசு
காயாத கால்நீத்த மலரோடு விரித்தஇக்
கடையில்பெ யர்த்துவைத்துக்
கருங்கொண்டல் போல்வாலும் மிகைபோனக் கடல்சூழ்ந்த
காசினிஉ ளாரைஎல்லாம்
கூயார தரிக்குங் குணம்தழுவு சேவையார்
குலசிகா மணிவருகவே
கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவிபெழு
குன்றைப் பிரான்வருகவே,

[அ. சொ.] மயாமலம்-மும்மலங்களில் ஒன்று, கரும மலம்-இதுவும் மும்மலங்களில் ஒன்று, ஏதுவாம்மலம்-எல்லா வற்றிற்கும் காரணமாகிய ஆணவமலம், தன்சத்தி-ஆண வத்தின் வன்மை, திருவருள்-சிவசக்தி, பதிய-நிபாதமாக, அதாவது சத்திநிபாத நிலை அமைய ஆயாத—ஆராயாத எம் மனம்-எம்முடைய சிறுபுத்தி, அடைந்த-விசேடணமாக கொண்ட, அடியர்-தாசமார்க்கம் சார்ந்த அடியவர், அவிர்-விளங்கும், புதல்வர் - சத்புத்ரமார்க்கத்தர், தோழர்-சக மார்க்கத்தவர், தாங்கள் அடைந்த மார்க்கம்-சன்மார்க்கம், பொலிய-விளங்க, அராவுரி-பாம்புத் தோல், நீத்த-நீக்கிய மலர்-மல்லிகை முல்லை போல்வன இக்கடை-இவ்விடத்தில்; கடை-இடம், வாசல் தூசு-ஆடை, கால்-காம்பு கொண்டல்-மேகம் போன்ற நிறமுடைய திருமால், மிசை-வீண்· காசினி-பூமி, கூய்-கூப்பிட்டு, சேவையார்-வேளாளர்.

**விளக்கம்:** இப்பாடலில் சேக்கிழார் திருவடிச் சிறப்பும், அவர் உலகைக் காக்கும் பண்பும் கூறப்பட்டுள்ளன. உயிர்களைப் பந்தித்து நிற்பவை ஆணவம் கன்மம் மாயை என்பனவாகும். பசுவாகியஉயிர்கள் பாச பந்தங்களினால் கட்டுப்பட்டிருக்கும் காரணங்களாலேயே பசு என்னும் பெயரைப் பெற்றது. அவற்றுள் மாயாமல மாவது இப்பிரபஞ்சமாகிய காரியப் பொருளுக்கு ஆதி காரணமாகியும், உயிரின் அனாதியாகவே பற்றிநிற்கும் ஆணவத்தோடும் சேர்ந்து அதனைப் பக்குவப்படுத்துவதாகி யும், எதையும் நினைக்கவிடாமல் எல்லா உலகங்களையும் மயக்கித் தொழில் படுத்தும் தன்மையது. இம்மலம் அஞ் ஞானத்தை உண்டுபண்ணும், பொய்கூறச்செய்யும், மேலும் காமவசம் ஆக்கல், மயங்குதல், பொறாமைப்படுதல், பயப் படுதல், ஆசையுண்டாதல் ஆகிய செயல்களுக்கும் காரண மானது.

மாயா மலத்தின் தன்மையைச் சித்தியார்,

நித்தமாய் அருவாய் ஏக நிலையதாய் உலகத் திற்கோர்
வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமல ஞர்க்
கோர்

சத்தியாய்ப் புவன போகம் தனுகர ணமும் உயிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யும் அன்றே

என்கிறது.

கருமமலமாவது உயிர்கள் எடுத்த தேகத்திற்கு முன்னிலைக் காரணமானது; பல புசிப்புக்களை உண்டாக்குவது; பிறப்பு இறப்புக்களைத் தோற்றுவிப்பது; ஆன்மாக்கள் தோறும் சென்று பொருந்துவது; மனமொழி மெய்களால் செய்யப்படுவனவற்றிற் குரிமையுடையது; புண்ணிய பாவங்கட்குக் காரணமானது; சம்ஹார காலத்தில் மாயா காரணத்திலே சென்று படிவது; மாயையோடு கூடிக் காரியப்படுவது; அரூபமாய் இருப்பது; சடமாய் உள்ளது.

கன்மலமாகிய இஃது உயிர்களிடத்தில் காணப்படும் பல் வேறு இன்ப துன்பங்கட்கும் பிறவி மாற்றத்திற்கும் காரணம் என்று அறிதல் வேண்டும். இதனைச் சிவஞான சித்தியார்,

இருவினை இன்ப துன்பத் திவ்வுயிர் பிறந்தி றந்து
வருவது போவ தாகும் மன்னிய வினைப்ப யன்கள்

என்று எடுத்து மொழிதல் காண்க.

ஆணவமாவது செம்பில் களிம்புபோலச் சீவனைப் பற்றி அறிவு முழுமையை மறைப்பது. ஆனல், சிவபுண்ணிய மேலீட்டால் பக்குவப்படவல்லது; அதிக இருளாய் இருப்பது; ஆணவ இருள் தன்னையும் காட்டாது; பிறபொருளையும் காட்டாது; இருளாயினும் பிறபொருளைக் காட்டாது போயினும், தன்னையேனும் காட்டும். இது குறித்தே திருவருட்பயன்

''ஒருபொருள் காட்ட திருள்; உருவம் காட்டும்
இருபொருளும் காட்ட திது''

என்று விளக்குகிறது.

மேலும், சிவஞானசித்தியார் இம்மலத்தின் இயல்பை,

ஒன்றதாய் அனேக சக்தி உடையதாய்
உடனுய் ஆதி
அன்றதாய் ஆன்மா வின்தன் அறிவொடு
தொழிலை ஆர்த்து
நின்றபோத் திருத்து வத்தை நிகழ்த்திச்செம்
பினில்க ளிம்பேய்ந்து
என்றும்அஞ் ஞானம் காட்டும் ஆணவம்
இயைந்து நின்றே

என்று எடுத்து இயம்புகிறது. மேலும் இவ்வாணவ மலம்,

''பிறப்பு இறப்பு இல்லை துக்கமோ, சுகமோ வீடோ திருவருளோ எதுவும் இல்லை எனச் சாதிப்பது. ஆன்மாவின் இச்சை ஞானம் கிரியைகளைச் சற்றும் சீவியாதபடி செய்வது; ஆன்மாவை மறைத்து நிற்பது.

தன்னைத் தவிர யாரும் நிகரானவர் இல்லை என்றல் கோபம் கொள்ளுதல், விரோதம் பண்ணுதல், எதையும் ஆசைப்படுதல், உயிரைக் கொள்ளுதல், அகங்காரமாய் நடந்து கொள்ளுதல் ஆகிய குணங்களையும் கொண்டது. இந்த ஆணவ மலமே கன்மமலம் மாயாமலம் ஆகிய மலங் கட்குக்காரணமாதலின், ''ஏதுவாம் மலம்'' என இதனை ஆசிரியர் குறிப்பிட்டார். இம்மலம் விலகியது போலத்தோன்றும். ஆனல், விலகியது ஆகாது. அதனுல்தான் இம்மலம் உயிரோடு பொருந்தி இருப்பதற்குச் செம்பினுள் களிம்புபோல என்றும் உதாரணம் தந்து பேசுவர். செம்பினைத் தேய்த்து ஒளியாக்கிய போது, களிம்பு முற்றிலும் நீங்கிவிட்டதாக எண்ணி மகிழ்கின்றோம். ஆனல், சில நேரங்களுக்கெல்லாம் அக்களிம்பு வெளிப்படுதலைக் காணலாம். அதுபோலவே மலம் கழன்றதுபோலத் தோன்றினும் கழன்றதாகவே கூற முடியாது. இதனை நன்கு உணர்த்தவந்த ஆசிரியர் மெய் கண்டார்,

நெல்லிற் குமியும் நிகழ்செம்பின் னிற்களிம்பும்
சொல்லில் புதிதன்று தொன்மையே—வல்லி

மலகன்மம் அன்றுளவாம் வள்ளலால் பொன்வாள்
அலர்சோகம் செங்கமலத் தாம்

என்றனர்.

மேலும் இதனைச்சிவப்பிரகாச நூலாசிரியராகிய உமாபதி சிவாசாரியார்''

ஏகமாய்த் தம்கால எல்லைகளின் மீளும்
எண்ணரிய சத்தியதாய் இருள்ஒளிர இருண்ட
மோகமாய்ச் செம்பினுறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாய்அறிவு முழுதினையும் மறைக்கும்

என்றும்,

நெல்லின்முளை தவிடுமிபோல் அனுதி யாக
நிறுத்திடுவர் இதுசைவம் நிகழ்த்தும் ஆறே.

என்றும் விளக்கிப் போந்தார்.

ஆகவே, இத்தகைய மலத்தின் சக்தி பெரிது. இதனை அறுக்க வேண்டின் சத்தினிபாத நிலையினைப் பெறுதல் வேண்டும். அதனையே ஈண்டு ஆசிரியர் திருவருள் பதிதல் என்றனர். திருவருள்தான் சத்தி என்பது. திருமூலர் போன்றார் கருத்து அருள் சத்தி என்பது "அருளான சத்தி" என்றும் திருமந்திரம் கூறுதல் காண்க. சத்தினிபாதம் என்பது இருவினை ஒப்பு மல பரிபாகமாகும். அதாவது மும்மலம் நீங்கிப் பக்குவமுடைய ஆன்மாவிலே திருவருள் பதிகை என்பதாகும். ஆண்டவனது அருள் சத்தி நம் மாட்டுப் பதிதல் ஆகும். ஆகவே, இறைவனது அருட்சத்தியாம் திருவருள் பேற்றைப் பெற்றால் மலம் நீங்கப் பெறுவோம். இம் மலத்தைப் போக்கும் முறை குறித்தே சிவஞானபோதம்,

செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன்எனத் தொழுமே

என்று உபதேசிக்கிறது,

சிவஞான சித்தியாரும் மலநீக்கும் மார்க்கத்தினே,

பிணத்தினை ஒத்து வாழ்வோர்
பின்நடைப் பிணங்கள் போல
உணக்கியே உழல்வீர் உங்கள்
உடல்உயிர் உணர்வும் எல்லாம்
கணத்திடைத் தோன்றி மாயும்
காயம் என்றறிந் தொருக்கால்
வணக்குறீர் அரனை என்றும்
வானவர் வணங்க வைப்பன்

என்கிறது.

அருளே சத்தி என்பதைச் சிவஞான சித்தியார் நன்கு தெளிவுற,

அருளது சத்திஆகும் அரன்தனக் கருளை இன்றித்
தெருள்சிவம் இல்லைஅந்தச் சிவம் இன்றிச் சத்தி இல்லை
மருளினை அருளால்வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்
கிருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப் போல ஈசன்

என்கிறது,

இறைவனது திருவருளைப் பல வகைகளில் பெறலாம்' அப்பலவகைகளில் தாசமார்க்கமும், சத்புத்திர மார்க்கமும். சகமார்க்கமும், சன்மார்க்கமும் ஆகும். இந்நால்வகை மார்க் கங்களை விளக்கியவர்களே ஆளுடைய அரசர், ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய நம்பிகள், ஆளுடைய அடிகள் என்பவர்கள். அப்பர் தாதமார்க்கமாம் தொண்டு மார்க்கத்தைக் காட்டியவர் என்பது "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று அருளியதனுலும் "நிலைபெருமாறு எண்ணுதியேல்" என்றதாண்டகத்தில் தொண்டு செய்ய வேண்டும் என்பதைத் தம்நெஞ்சிற்கு உபதேசம் செய்திருப் பதாலும் தெளியலாம்.

திருஞான சம்பந்தர் சத்புத்திர மார்க்கத்தை விளக்க வந்தவர் என்பது அவர் அம்மை அப்பரிடம் அமுது பெற்றுச் சைவப் பயிரை வளர்த்துச் சிவனடி உற்றதை அவர் பாடல்

களால் தெளியலாம். தாம் அம்மையப்பர் கொடுத்த பாலை யுண்டதை அவரே.

போதையார் பொற்கிண்ணத்து அடிசில் பொல்லா
தெனத்
தாதையார் முனிவுறத் தான்எனை ஆண்டவன்
காதையார் குழலினன் கழுமல வளநகர்ப்
பேதையாள் அவளொடு பெருந்தகை இருந்ததே

என்று பாடியுள்ளார்.

"வாசி தீரவே காசு நல்குவீர்" என்று குழந்தை கேட்பது போலக் காசு கேட்டதனாலும், அத்தர் பியல்மீது (தோள் மீது) இருந்துதாம் பாடினர் என்பதை அவரே "அத்தர்பியல் மேல் இருந்து இன்இசையால் உரைத்தபனுவல்" என்று பாடியிருப்பதாலும், இவர் குழந்தை நிலையில் இருந்து சத்புத்திர மார்க்கத்தை விளக்கிப் பேறுபெற்றனர் என்பதைத் தெளியலாம்.

சுந்தரர் சகமார்க்கமாம் தோழமை மார்க்கத்தை விளக்க வந்தவர் என்பதை அவர் வாக்கைக் கொண்டே நிறுவலாம். ஆரூரர், திருவாரூர் இறைவனைப்பற்றிக் குறிப்பிடுகையில்,

"ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய தோழனுமாய்"

என்று பாடிக் குறிப்பிட்டுள்ளனர்.

இறைவர் சுந்தரரைத் தோழராகவே கொண்டார் என்பதைச் சேக்கிழார்,

வாழிய மாமறைப் புற்றிடங்கொள்
மன்னவன் ஆரரு ளால்ஓர் வாக்குத்
தோழமை ஆக உனக்குநம்மைத் தந்தனம்
நாம்முன்பு தொண்டு கொண்ட
வேள்வியில் அன்றுநீ கொண்ட கோலம்என்றும்
புனைந்துநின் வேட்கை தீர
வாழிமண் மேல்விளை யாடுவாய்என் றாரூரர்
கேட்க எழுந்த தன்றே

என்று எடுத்து இயம்பியுள்ளார், இதனைக் கற்பனைக் களஞ்சியம் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்,

அறிந்து செல்வம் உடையானும்
அளகைப் பதியான் தோழமைகொண்
டுறழ்ந்த கல்வி உடையானும்
ஒருவன் வேண்டும் எனஇருந்து
துறந்த முனிவர் தொழும் பரவை
துணைவா நினைத்தோ ழமைகொண்டான்
சிறந்த அறிவு வடிவமாய்த்
திகழும் நுதல்கண் பெருமானே

என்று நன்கு விளக்கியுள்ளனர்

மணிமொழியார் சன்மார்க்கமாகிய ஞானமார்க்கத்தை உணர்ந்தவர் என்பது அவர் ஞானாசிரியனை அடைய அவா வுற்று அங்ஙனமே பெற்று அருள் உபதேசம் உற்று ஞான மார்க்கத்தினை நிலவுலகில் பரப்பினர் என்பதற்குரிய சான்று கள் பல அவர்தம் வாசகத்தில் உண்டு.

அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமை

என்றும்.

ஊனை நாடகம் ஆடு வித்தவா
உருகி நானுனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடு வித்தவா
நைய வையகத்துடைய இச்சையே

என்ற அவர்தம் திருவாசகப் பாடலைக் காண்க.

மாணிக்க வாசகர் ஞானம் பெற வேண்டி ஞானாசிரியரைத் தேடிவந்த நிலையினைக் கடவுள் மாமுனிவர்,

மர்க்கட விலங்கு தன்னால் வளங்கெழு விளேவின் மேவும்
நற்கனி கொள்ள வேண்டி நயந்துகல் எறிவார் போலச்
சற்குரு உளரோஎன்று நாடுவார் தர்க்கம் எல்லாம்
சொற்கலை ஞானசைவர் தம்மொடும் சொல்ல லுற்றார்

என்று பாடி இருத்தலால் அறியலாம்.

மேலே சொல்லப்பட்ட நான்கு மார்க்கங்களும் இறைவனை அடைதற்குரிய மார்க்கம் என்பதைச் சிவஞான சித்தியார்,

சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம்
தாதமார் கம்என்னும் சங்கரனை அடையும்
நன்மார்க்கம் நால்அவைதாம் ஞான யோகம்
நற்கிரியா சரியைஎன நவிற்றுவதும் செய்வர்

என்று கூறுகிறது.

சேக்கிழார் மேலே கூறப்பட்ட நால்வகை நெறியினையும் எண்ணும் இயல்பினர்.

தாசமார்க்கத் தலைவரான அப்பரது சேவடிகளைச் சேக்கிழார் வணங்கிப் போற்றினர் என்பதை,

அடியேன் ஆதரவால் ஆண்டஅர சின்சரிதப்
படியையான் அறிந்தபடி பகர்ந்தேன்அப் பரமுனிவன்
கடிமலர்மென் சேவடிகள் கைதொழுது

என்ற பாடலால் அறிக.

சத்புத்திரமார்க்கத் தலைவரான திருஞான சம்பந்தரது பாதமதரைப் போற்றினர் என்பதை,

அருந்தமிழ்ஆ கரர்சரிதை அடியேனுக் கவர்பாதம்
தரும்பரிசால் அறிந்தபடி துதிசெய்தேன் தாரணிமேல்

என்ற பாடல் உணர்க.

சகமார்க்கமாம் தோழமை நெறியை விளக்கிய சுந்தரர் திருவடிகளைச் சேக்கிழார் போற்றியுள்ளனர் என்பது,

மலர்மிசை அயனும் மாலும்
காணுதற் கரிய வள்ளல்
பலர்புகழ் வெண்ணெய் நல்லூர்
ஆவணப் பழமை காட்டி

உலகுய்ய ஆண்டு கொள்ளப்
பெற்றவர் பாதம் உன்னித்
தலைமிசை வைத்து வாழும்
தலைமைநம் தலைமை ஆகும்

என்ற பாடலில் நன்கு வெளிப்படையாகத் தெரிகிறது.

ஆனால், சன்மார்க்கச் செந்நெறியினரான மணிமொழி யாரது மலரடி வணங்குதற்கு நேரடியான வாய்ப்புச் சேக்கிழார்க்கு இன்றேனும், அவரது திருவாசகத்தினின்றும் பல அரிய கருத்துக்களைத் தம் நூலில் எடுத்து ஆண்டுகொண்டு அவரது பொன்னார் திருவடிகளைத் தம் உள்ளத்தால் போற்றி வணங்கியவர் என்பது பெரியபுராணச் செய்யுட்களால் நன்கு விளங்குகிறது. அவற்றுள் ஒன்று,

ஆங்கவர் மனத்தின் செய்கை
அரனடிப் போதுக் காக்கி
ஓங்கிய வாக்கின் செய்கை
உயர்ந்தஅஞ் செழுத்துக் காக்கித்
தாங்குகைத் தொழிலின் செய்கை
தம்பிரான் அடியார்க் காகப்
பாங்குடை உடையும் கீளும்
பழுதில்கோ வணமும் நெய்வார்

என்பது. இது,

சிந்தனைநின் தனக்குஆக்கி நாயி னேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதம் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கி

என்னும் திருவாசக அடிகளை ஒட்டியது அன்றோ?

இவ்வாறான நான்குநெறிகளின் பொருள்களைச் சேக்கிழார் தமது பெரிய புராணத்தில் விரித்து வைத்து அன்பர்கள் கொள்ளச்செய்த அருமையினைக் கண்டு "திரு. பிள்ளை அவர்கள் "பொலிய எண்ணும்" என்றனர். ஆடையின் மென்மைக்கு அரவின் தோலை உவமை காட்டினர். இவ்வாறு

சங்கநூலில் பல இடத்தும் இவ்வுவமை கூறப்பட்டுள்ளது. "அரவுரிஅன்ன அறுவை" என்ற பொருநர் ஆற்றுப் படை புகல்வதைக் காண்க. இதனால் நம் தமிழ் நாட்டவர் மிக மெல்லிய ஆடைகளை நெய்தமை தெரிதல் காண்க.

சேக்கிழார் பெருமானார் மேலே சொல்லப்பட்ட சிறப்புக்களுக்குக் காரணர். ஆதலின், அவர்தம் திருவடிகளை அணுகுபவர்கள், உள்ளத்தில் வைத்துப் போற்றுகின்றனர் ஆதலின், அத்தகைய திருவடிகளைப் பெயர்த்து வருமாறு வேண்டுகின்றனர்.

காயாத கால் நீத்த மலர் என்பன மல்லிகை முல்லை போல்வன.

பிரம்மா விஷ்ணு உருத்திரர் என்னும் மூவருள் திரு மாலுக்குச் காத்தல் தொழிலை ஏற்று நடத்துமாறு முக்கண் மூர்த்தியின்கட்டளை இருத்தலின், திருமால் காக்கும் தெய்வம் ஆயினர். அவரும் உழவர் உழுது பயிரிட்டு உலகை ஆதரிப் பதனால் தேவை இல்லை என்று கூறி வேளாளர் சிறப்பை விளக்கக் கூய் ஆதரிக்கும் குணம் தழுவும் சேவையார் குலம் என்றனர்.

பலகுடை நீழலும் தம்குடைக்கீழ் காண்பர்
அலகுடை நீழ லவர்

"உழுவார் உலகத்தார்க்கு ஆணி" என்று குறட்பா கூறுவனற்றைக் காண்க. உழவர்களே உலகை ஆதரித்துப் பசி யின்றி வைப்பவர் என்பது,

கார்நடக்கும் படிநடக்கும்
காரளர் தம்முடைய
எர்நடக்கும் எனில்புகழ்சால்
இயல்இசை நாடகம்நடக்கும்
சீர்நடக்கும் திறம்நடக்கும்
திருவறத்தின் செயல்நடக்கும்
பார்நடக்கும் படைநடக்கும்
பசிநடக்க மாட்டாதே

என்ற ஏர் எழுபது பாடலால் தெரியவருகிறது.

இதனால்தான் ஆசிரியர் "ஆதரிக்கும் குணம் தழுவும் சேவையார் குலம்" என்றனர். இதனைக் காஞ்சிப் புராணம் அழகுற,

முருகுயத் தலர்ந்த மலரவன் தனாது
 முகமுதல் உறுப்பெலாம் தாங்கிச்
சரணமென் றுரைக்கும் உறுப்பினில் தோன்றிச்
 சாற்றும்அம் முகமுதல் உறுப்பின்
வருஒரு மூவர் தங்களை உழவின்
 வண்மையான் நிலைபெறத் தாங்கும்
உரியவே ளாண்மை பூண்டபேர் தனக்கே
 உடையவர் இடம்பல அவண

என்று கூறுவதைக் காண்க. (56)

6\. நலத்தின் உயரும் பழையனூர்
 நாளும் பொலியும் அவையகத்து
நலிவு புரிநீ லியைக்கண்டு
 நடுங்கா நின்ற வணிகனுக்கு
நிலத்தில் இயல்நின் உயிர்க்கிறுதி
 நேரு மாயி னியாமெல்லாம்
நெருப்பில் முழுகி உயிர்துறப்போம்
 நீஓ ருதிஎன் றுரைத்தபடி
வலத்தின் உயரச் சொல்தவறு
 வண்ணம் எழுநாக் குழிமுழுகி
வடஆ ரணியத் தாடொருவர்
 மலர்த்தாள் அடைந்த எழுபதின்மர்
குலத்தில் உதித்தார் அருள்மழைபெய்
 கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக்
 கோமான் வருக வருகவே.

(அ. சொ.) பழையனூர் என்பது திருவாலங்காட்டிற்குக் கிழக்கே ஒரு கல் தொலைவில் உள்ள ஓர் ஊர். பொலியும்-

விளங்கும், அவையகத்து-மன்றத்தில், நலிவுபுரி-போவார் வருவாரைத் துன்பம் செய்யும், நீலி-பேயாய் மாறிய ஒருத்தியின் பெயர், நடுங்காநின்ற-நடுங்கிய, இறுதி-அழிவு, ஒருதி-உணர்க, வலத்தில்-வெற்றியில், எழுநா-ஏழு நாவினைப் பெற்ற அக்கினி, வடஆரணியம்-திருஆலங்காடு, ஆடுஒருவர்-நடனமிடும்இரத்தின சபாபதியாம் ஒப்பற்ற இறைவர், ஆர் அருள்-அருமையான அருளை, கொண்டல்-மேகமே, குன்றைப் பொரு-சிறுமலைகளைப்போன்ற, குன்றைக்கோமான்-குன்றத்தூரில் அவதரித்த தலைவராம் சேக்கிழார் பெருமானே.

**விளக்கம்:** பழையனூர் என்பது திருஆலங்காட்டிற்குக் கிழக்கே ஏறக்குறைய ஒருகல் தொலைவில் உள்ள ஊர். இப் பழையனூர் கங்கைகொண்ட சோழனால் திருவாலங்காடுடைய மகாதேவர்க்குத் தானமாகக் கொடுக்கப் பட்டது என்பதும், முதல் முதல் இவ்வூர்த் தென்னையும் பனையும் ஈழவரால் கள் இறக்கப்படாததாகவும் இருந்தது என்பதும் செப்பேடுகளால் அறிய வரும் செய்திகள். இதனால் மது விலக்கிற்கு முன்பே அடிகோலிய ஊர் பழையனூர் என்பது பெற்றும்.

இங்குக் காரைக்கால் அம்மையார் கோவில் உண்டு. இவ்வூருக்கு ஆலங்காட்டு அப்பர் பங்குனி உத்திரத்தின் போதும், மார்கழி திருவாதிரையின்போதும் எழுந்தருளுவர். அப்பர் இவ்வூரைப் ''பழனை'' என மருஉ மொழியாக்கித் தம் பதிகத்தில் குறித்துள்ளனர். ''அள்ளல் அப்பழனை மேய ஆலங்காட்டடிகளாரே'' என்றனர். இவ்வூர், பொழில் வளமுடையது. இசைவாணர்தம் முழவோசைமிக்கது, தீர்த்த விசேடம் உடையது என்றும் சிறப்பித்துள்ளனர். சம்பந்தர் இப்பழையனூரைச் சிறப்பிக்கும்போது,

''கொந்தண் பொழில்சோலை அரவில் தோன்றிக்
கோடல்பூத் தந்தண்பழையனூர்'' என்றும்,

''கோலம்பொழில் சோலைப் பெடையோடாடி
ஆலும் பழையனூர்'' என்றும், [மடமஞ்சை

"கார்க்கோள் கொடிமுல்லை குருந்தம்ஏறிக் கருந்தேன் மொய்த்து
ஆர்க்கும் பழையனூர்" என்றும்,
"பெடை வண்டறையும் பழையனூர்" என்றும்,
"பிள்ளையும் சிறுமறியும் கலையும் எல்லாம் கங்குல் சேர்ந்து
அணையும் பழையனூர்" என்றும்,
"தவழும் கொடிமுல்லை புறவம்சேர நறவம்பூத்து
அவிழும் பழையனூர்" என்றும்,
"தண் பழையனூர்" என்றும் புகழ்ந்துள்ளனர்.

"பன்மலர்கள் அவைகொண்டு பலரும் ஏத்தும் பழைய னூர்" என்று சுந்தரரும் புகழ்ந்துள்ளனர். இவற்றை எல்லாம் உட்கொண்டே ஆசிரியர் "நலத்தின் உயரும் பழைய னூர்" என்றனர்.

பழையனூரில் வேளாளர் மிகுதி. அவர்கள் நீதி நெறியி னின்றும் தவருதவர்கள். சொன்ன சொல்லைத் தட்டாத வர்கள். வாய்மையின் பொருட்டு உயிரையும் ஈய வல்ல வர்கள். இம்பாடலில் வணிகனுக்கு வாக்குக் கொடுத்தபடி தீமூட்டி எழுபதின்மர் அதில்மூழ்கி உயிர் விட்டனர். பழைய னூர் வேளாளர் என்ற சிறப்புக் குறிப்பே உள்ளது. இவ் வேளாளர் உயிர்விட்ட அக்கினிக் குண்டம் இன்றும் பழைய னூரில் உள்ளது.

வணிகன் ஒருவன் வேற்று மகளிர் இன்பத்தில் ஈடு பட்டதால், கட்டிய மனைவி கண்டித்தனள். அத்தொந்தர வால் அவன் அவளை வஞ்சனையால் கொன்றான். அப்பழிக்குப் பழிவாங்கப் பேய் வடிவில் உருத்தாங்கிச் சத்திரத்தில் தங்கி இருந்தனள். அவ்வழியே வணிகன் சென்றபோது அவனைப் பற்றி, "நீ என்னை இங்குத் தனியே விட்டுப் போவது முறையோ? என்னோடு கூடவே இச்சத்திரத்தில் தங்கிப் பொழுது விடிந்ததும் போக வேண்டும்" என்று தொந்தரவு செய்தாள். வணிகன் அவ்வடிவு பேய்வடிவு என்று நன்கு தெரிந்து, அதற்கு இசையான் ஆயினன். என்றாலும், பேயாம் நீலி விட்டிலள். அவள் அதுபோது அவ்வழியே வந்த வேளாளரிடம் தான் அவன் மனைவி என்றாள். தன்னைத் தனியே விட்டுச் செல்வதாகவும் கூறினாள்; முறையிட்டாள்.

தன்னிடம் இருந்த குழந்தையை ஏவி அப்பா என்று வணிகனைக் கட்டி அணைக்கச் செய்தாள். என்றாலும், வணிகன் அவ்வழி வந்த வேளாளரிடம், "ஐயா! இவள் என் மனைவி யல்லள். இவள் ஒரு பேய்; நான் இவளோடு இங்கு இவ்விரா இருப்பேனாஞல், இவள் என்னை அறைந்து கொன்று விடுவள்" என்று கூறினான். இருவர் பேச்சுக்களையும் கேட்ட வேளாளர் கட்கு இன்னவாறு தீர்ப்புக் கூறுவது என்பது புலனாகவில்லை.

இறுதியில் அவர்கள் வணிகனை நோக்கி, "நீ இவளோடு இன்று இரவு இங்கு இரு. அப்படி இருப்பதால் நீ இறக்க நேரின். நாங்கள் எழுபதின்மரும் உன் ஓர் உயிர் பொருட்டு உயிர் விடுவோம்" என்று கூறி இருக்குமாறு வற்புறுத்திச் சென்றுவிட்டனர். வணிகன் இரவு அவளோடு இருந்தான்; அவ்விரவே இறந்தான். மறுநாள் வேளாளர்கள் வந்து கண்டபோது மாதராளும், மகவும் அச்சத்திரத்தில் இல் லாது, வணிகன் மட்டும் இறந்து இருந்தலைக் கண்டு, தாம் சொன்ன சொல்லை நிறைவேற்றும் நிலையில் தீ வளர்த்து அதில் மூழ்கி இறந்தனர். இவ்வரலாறே இப்பாடலில் அமைந்துள்ளது.

இவ்வாறு நீலி வஞ்சித்து வணிகனைக் கொன்ற குறிப் பைத் திருஞானசம்பந்தரும்,

வஞ்சப்படுத்து ஒருத்தி வாணாள்கொள்ளும் வகை கேட்டு
அஞ்சும் பழையனூர்

என்றும் பாடியுள்ளனர்.

இவ்வரலாற்றை உமாபதிசிவனாரும்,

மாறுபடு பழையனூர் நீலிசெய்த வஞ்சனையால்
வணிகன்உயிர் இழப்பத் தாங்கள்
கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக்
குழியில்ஏழு பதுபேரும் முழுகிக் கங்கை
ஆறணிசெஞ் சடைத்திரு வாலங்காட் டப்பர்
அண்டமுற நிமிர்ந்தாடும் அடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை எம்மால்
பிரித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ

என்று புகழ்ந்து பாடினர்.

சேக்கிழாரும் இதனைத் திருக்குறிப்புத் தொண்டர் புராணத்துள்,

நற்றி றம்புரி பழயனூர்ச் சிவத்தொண்டர் நவைவந்
துற்ற போதுதம் உயிரையும் வணிகனுக் கொருகால்
சொற்ற மெய்ம்மையும் தூக்கிச் சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மையில் திகழ்ந்தது பெருந்தொண்டை
நாடு.

என்று குறித்துள்ளனர்.

கம்பரும் இக்கதைக் குறிப்பை, "நீலி தனக்கஞ்சி நின்ற வணிகனுக்காகக் கோலி அபயம் கொடுத்த கை" எனத் திருக்கை வழக்கம் என்னும் தம் நூலில் குறிப்பிட்டுள்ளனர்.

சத்தியத்தைக் காக்க உயிர் விட்டனர் ஆதலின், அவர்கள் ஆலங்காட்டப்பர் திருவடி அடையும் பேறு பெற்றனர் என்பார். "மலர்த்தாள் அடைந்தார்" என்றார்.

திருவாலங்காடு அரக்கோணம் செல்லும் இரயில் மார்க்கத்தில் அமைந்த ஒரு ஸ்டேஷன். அங்கிருந்து மூன்றுகல் தொலைவில் இஃது உளது. பல கல்வெட்டுக்களும், செப்பேடும் உடையது. பொற்சபை, வெள்ளிச்சபை, சித்திரச்சபை, தாம்பரச்சபை, இரத்தினச்சபை என்ற நடராசப் பெருமானது ஐந்து சபைகளில் இரத்தினச்சபையினை உடையது. பொற்சபை சிதம்பரத்திலும், வெள்ளிச்சபை மதுரையிலும், சித்திரச்சபை குற்றாலத்திலும், தாம்பரச் சபை திருநெல்வேலியிலும் உள்ளன. இத்தலத்தில் காளியின் பொருட்டு ஆடிய தாண்டவம், ஊர்த்துவத் தாண்டவம் எனப்படும். ஊர்த்துவத் தாண்டவங் என்பது "இடக்காலைக் காதளவு தூக்கி ஆடிய நடனம்." காளிகாண இறைவர் திருநடம் புரிந்தார் என்பதை "ஆடினார் காளிகான ஆலங் காட் டடிகளாரே" என்று அப்பர் பாடியதைக் காணவும். ஊர்த்துவத் தாண்டவமூர்த்தி எண் தோளுடன் காண்பார்க்கு மிக்க கவர்ச்சியுடன் இன்றும் அங்கு விளங்கிக் கொண்டிருக்கின்றனர்.

இத்தலத்திற்குக் காரைக்கால் அம்மையார் மூத்த திருப் பதிகங்கள் இரண்டும், சம்பந்தர் பதிகம் ஒன்றும், அப்பர் பதிகங்கள் இரண்டும், சுந்தரர் பதிகம் ஒன்றும் உள்ளன. காரைக்கால் அம்மையார் "அரவா நீ ஆடும்போது உன் அடியின் கீழ் இருக்க" என்று வரம் வேண்டியதால், அவ் வேண்டுகோட்படி ஊர்த்துவத் தாண்டவமூர்த்தியின் சபையில் பணிந்து இருப்பதைக் காணலாம்.

திருஞான சம்பந்தர், காரைக்கால் அம்மையார் திருத் தலையாலே நடந்த பதி திருவாலங்காடு ஆதலின் அதனைக் காலால் மிதிக்கலாகாது என்று அஞ்சிப் பழையனூரில் தங்கி விட இறைவர், அவர் கனவில் தோன்றி "நம்மை அயர்த் தனையோ பாடுதற்கு" என்று அறிவிக்க விழித்தெழுந்த ஆளுடைய பிள்ளையார்,

துஞ்ச வருவாரும் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்
வஞ்சப்படுத் தொருத்தி வாணாள்கொள்ளும் வகைகேட்டு
அஞ்சும் பழயனூரர் ஆலங்காட்டெம் மடிகளே

என்று பாடியருளினார். இக் குறிப்புக்கொண்டு காரைக்கால் அம்மையார் திருஞானசம்பந்தர்க்கு முற்பட்டவர் என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

இன்னோரன்ன சிறப்புக்குரிய வேளாளர் குலத்தில் உதித்த பெருமைக்குரியவர் சேக்கிழார் என்பதைத் திரு. பிள்ளை அவர்கள், நெஞ்சார நெகிழ்ந்து பாடுகிறார். பெரிய புராணப் பாடல்களைச் சேக்கிழார் திருவருட்கவியால் பாடினர் ஆதலின், "அருள்மழை பெய் கொண்டல்" எனப் பட்டனர்.

குன்றத்தூரில் பெரிய பெரிய கட்டடங்கள் காணப்படு தலின், அவை குன்றுகளுக்கு உவமையாகக் கூறப்பட்டன.

முன்னுள்ள குன்றை என்னும் சொல் சிறுமலையினையும் பின்னுள்ள குன்றை குன்றத்தூரையும் உணர்த்தி நிற் கின்றன. (57)

7. அண்டம் அளவும் வரைநாட்டில்
அரசர் கலகம் ஆதலினல்
ஆங்காங் கொருவி வணிகர்எலாம்
அயல்நாட் டகம்புக் கினிதமர்ந்து
விண்ட கலகத் திறம்தெரிந்து
மேய தத்தம் இடம்புக்க
விதம்உள் உணர்ந்து தம்சரணு
மேவி இருந்த மடக்கொடியை
மண்ட அழைத்துக் கொடுசென்றிம்
மடமா தினைக்கொள் ளுதிர்என்ன
மயங்கல் கண்டு தங்கைஎனும்
வாய்மை கொடுமைத் துனக்கேண்மை
கொண்ட குலத்தில் உதித்தருள்பெய்
கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக்
கோமான் வருக வருகவே

*[அ. சொ] அண்டம் - வானம், அளவும் - அளாவி உயரும், வரைநாட்டில்-மலை நாட்டில், சேரநாட்டில், ஒருவி-விட்டு நீங்கி, நாட்டகம்-நாட்டில், விண்ட-நீங்கிய, திறம்-கூறுபாட்டை, மடக்கொடியை-இளமையான பூங்கொடி போன்ற மாதினை, கேண்மை-முறைமை, உறவு, மண்ட-விரைந்து.*

**விளக்கம்:** *மலைகள் அண்டம் அளவும் அளாவியது என்றது உயர்வு நவிற்சி அணியின் அமைப்பாகும். இவ்வாறு புகழ்தல் புலவர்களது இயல்பு என்க.*

*வான மதிதடவல் உற்ற இளமந்தி*
*கான முதுவேயின் கண்ணேறித்—தானங்*
*கிருந்துயரக் கைநீட்டும் ஈங்கோயே நம்மேல்*
*வருந்துயரம் தீர்ப்பான் மலை*

*என்ற ஈங்கோய் மலை எழுபதில் மலையின் உயர்ச்சியினைக் காட்டியது காண்க. நாட்டில் கலகம் ஏற்பட்டபோது*

மக்களை உய்வு தேடி இனிதிருக்கச் செய்வர் அரசர். இதுவே அறப்போர் முறையும் ஆகும். இதனை நந்தம் புறநானூற்றில் "எம் அம்புகடிவிடுதும் நும்அரண் சேர்மின்" என்று கூறும் ஆற்றல் அறியலாம். இம்முறை மேற்கொண்ட நாட்டில் கலகம் கண்ட வணிகர்கள் அயல்நாட்டகம் புகுந்தனர். இதுவே முதல் நான்கு வரிகள் உணர்த்தும் கருத்து.

இப்பாடலில் அமைந்த வரலாறு பின் வருவது: ஒரு காலத்தில் சேர நாட்டில் கலகம் ஏற்பட்டது. அதனால் சேர வணிகர்கள், வெவ்வேறு நாடுகளில் சென்றனர். அவ்வாறு சென்ற வணிகர்களுள் ஒரு பெண் தவறித் தொண்டை நாட்டு வேளாளர்களைச் சரண் அடைந்தனள். அவளைத் தம் மகளாகவே ஏற்று வேளாளர்கள் வளர்த்து வந்தனர்.

பல நாட்களுக்குப் பின் கலகம் நீங்க மீண்டும் தம் சேர நாட்டை அடைந்தனர். அங்ஙனம் அடைந்த அவர்கள் தம்மைவிட்டு நீங்கிய பெண் தொண்டை நாட்டுக் காஞ்சி புரத்தில் வேளாளர்களிடம் வளர்வதை அறிந்து அவளை அழைத்துப் போக வந்தனர். அதுபோது வேளாளர்கள் "நாங்கள் இப் பெண்ணை எங்கள் தங்கைபோல வளர்த்தோம். அவளை நீங்கள் குறைவாக எண்ணாமல் உங்கள் மரபினன் ஒருவனுக்கு மணம் செய்து கொடுப்பதானால் அனுப்புவோம்" என்றனர். வணிகர்கள் அவ்வாறே அவளை வணிகன் ஒருவனுக்குத் திருமணம் செய்து கொடுக்க வேளாளர்கள் அப்பெண்ணிற்குச் சீதனம் முதலியவற்றைக் தந்தனர். அத்துடன் இன்றி அவ்வணிகர்கள் அவ்வேளாளர்களை மைத்துன முறைமை கொண்டாடும்படியும் செய்தனர் என்பதாம்.

இதனைச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தில்,

ஆணையாம்என நீறுகண்டடிச் சேரன் என்னும்
சேணுலவுசீர்ச் சேரனார் திருமலை நாட்டு
வாணி லாவுபூண் வயவர்கண் மைத்துனக் கேண்மை
பேண நீடிய முறையது பெருதொண்டை நாடு

என்று குறிப்பிட்டுள்ளனர். தொண்டை மண்டலச் சதகமும் இவ்வரலாற்றை,

கொத்தலர் கோதைவியன் சேரமண்டலக்
கொம்பைத் தன்பால்
வைத்திருந் தாங்கவள் தம்கேளிர்
நேடிவர அவர்க்கே
உய்த்திரு வோர்க்கும் வரிசையும்
ஆற்றி உடனும்சென்று
மைத்துனக் கேண்மை படைத்ததன்றே
தொண்டை மண்டலமே

என்று கூறுகிறது.

வணிகர்கள் தம் பெண் வேளாளர்களிடம் பல நாட்கள் வளர்ந்ததனால் ஒரு சிறிது அவள் ஒழுக்கத்தில் ஐயம் கொண்டு மயங்கியதால் "மயங்கல் கண்டு" எனப்பட்டது.

தமிழ்நாட்டவர் தம்பால் வந்த பெண்களைப் பெண்டாகக் கொள்ளாது பெண்ணாகக் கொண்டதைச் சுந்தரர் வரலாற்றில் காணலாம். கோட்புலியார் என்னும் தானைத் தலைவர் தாம் பெற்ற சிங்கடி, வனப்பகை என்னும் மாதரார் இருவரையும் சுந்தரர்பால் கொண்டு விடுத்து, அவர்களை அடிமையாக ஏற்றருள வேண்டியபோது ஆளுடை நம்பியார் அவ்விரு மாதர்களை மகண்மையாகக் கொண்டனர். இதனை,

அடியேன் பெற்ற மக்கள்இவர்
அடிமையாகக் கொண்டருளிக்
கடிசேர் மலர்த்தாள் தொழுதுய்யக்
கருணை அளிக்க வேண்டும்எனக்
தொடிசேர் தளிர்க்கை இவர்எனக்குத்
தூயமக்கள் எனக்கொண்டப்
படியே மகண்மை யாக்கொண்டார்
பரவை யார்தம் கொழுநனார்

என்று சேக்கிழார் கூறுமாற்றால் தெளியலாம். இந்த உண்மையினைத் திருநாவலூரர்,

கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற
கொடிறன் கோட்புலி சென்னி
நாடார் தொல்புகழ் நாட்டியத் தான்குடி
நம்பியை நாளும் மறவாச்

சேடார் பூங்குழல் சிங்கடி அப்பன்
திருவா ரூரன் உரைத்த
பாடீர் ஆகிலும் பாடுமின் தொண்டீர்
பாடலும் பாவம் பற்றறுமே

நாணியூரன் வனப்பகை
அப்பன்வன் தொண்டன்சொல்
பாணியால் இவைஎத்துவார்
சேர்பர லோகமே

என்றும் பாடிய திருப்பாடல்களால் உணரலாம்.

திரு பிள்ளை அவர்கள் கூறவந்த உட்கருத்துப் பண்பு மிக்க வேளாளர் தம்பால் அடைக்கலம் புகுந்தவர்களை ஆத ரித்து ஆவன செய்வர் என்பதாம். இத்தகைய வேளாளர் குலத்தில் சேக்கிழார் பிறந்தவர் என்பதை அறிவித் துள்ளனர். (58)

8. விற்றங் கியவி பூதியினுல்
விளர்ப்புற் றன்பின் வழிஇயங்கி
வேறு வேறும் பரசமய
வெய்ய கோடை முழுதொழியச்
சிற்றம் பலநா யகர்கருணைத்
திரைவா ரிதியில் படிந்துண்டு
திசைஎங் கணும்தோற் றிடமின்னித்
தீய ஒழுக்கம் தபக்கறுத்துக்
கற்றங் கமையார் மலத்துன்பம்
கழல அரமா முழக்கெழுப்பிக்
கருதா நின்ற திருத்தொண்டர்
காமர் வாய்ந்த சரித்திரமாம்
கொற்றம் பொலியும் மழைபொழிந்த
கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக்
கோமான் வருக வருகவே

[அ. சொ.] வில் - ஒளி, வில்+தங்கிய, விளர்ப்புற்று-வெண்ணிறமுற்று, இயங்கி-நடந்து, பரசமய வெய்ய கோடை-பிறமதங்களாகிய வெம்மைமிக்க கோடை, சிற்றம் பல நாயகர்-தில்லையில் உள்ள சிற்றம்பலத்தில் நடனம் புரியும் தலைவர் நடராசப் பெருமானார், கருணைத்திரை-கருணையாகிய அலை, வாரிதி-கடல், தப-கெட, அமையார்-கற்றபடி அமையாதவர், மலத்துன்பம்-மும்மலங்களால் வரக்கூடிய துன்பம், அரமாமுழக்கு: அர, அர என்று கூறும் சிறந்த ஒலி, காமர்-அழகு, கருதா நின்ற-கருதப்பட்ட, கொற்றம்-வெற்றி, பொலியும்-விளங்கும்.

**விளக்கம்:** நீற்றிற்கு ஒளியுண்டு ஆதலின் "வில் தங்கிய விபூதி" என்றனர். சேக்கிழாரும் நீற்றின் ஒளிக்கு சந்திரனைக் கூறி இருப்பதையும் நாம் அறிதல் வேண்டும். "அண்ணல் வெண்ணீற்றின் ஒளி போன்றது நீள் நிலா" என்ற தொடரைக் காணவும். வேறு வேறும் பரசமயம் என்பன உலகாயதன், சௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்தியமிகன், வைபாடிகன், நிகண்டவாதி, ஆசீவகன், பட்டாசாரியன், பிரபாகரன், சத்தப்பிரம்பவாதி; மாயா வாதி, பாற்கரியன், நிரீச்சுரசாங்கியன், பாஞ்சராத்திரிகள், மேற்கொண்டவை. இம்மதங்கள் வெம்மை செய்து நன்மை செய்யாத காரணத்தால் கோடையாக உவமித்தனர் ஆசிரியர். மேலே கூறப்பட்ட சமயங்கள் நன்மையாகாதவை என்பதைச் சிவஞான சித்தியாரில் பரபக்கப் பகுதியில் தனித்தனியே அவற்றின் கொள்கை இன்ன என எடுத்துக் கூறி அவை பொருந்தாதவை என்பதைத் தக்க ஏதுவினைக் காட்டிக் கண்டித்துச் சத்காரியவாதமாகிய சைவ சித்தாந்தத்தை நிலைநாட்டி இருப்பதைக் காண்க.

என்றாலும் பானை சோற்றிற்கு ஒருசோறு பதம்போல இரண்டு மதங்களின் கொள்கைகளை ஈண்டு உணர்வோமாக.

மாயாவாதியின் மதத்தின் கொள்கைகள் பல. இருந்தாலும், அவர்கள் முக்கியமாக உணர்த்துவது இதுதான் என்பதைச் சிவஞான சித்தியார்,

சாற்றும் மறைத் துவமசிமா
வாக்கி யங்கள் தமைஉணர்ந்தால்
போற்றி அதுநீ ஆனுய்என்
றறைவ தல்லால் பொருள்இன்றே
தேற்றும் இதனைத் தெளியாதார்
தெளியப் பஞ்ச ஆதனமேல்
ஏற்ற இயம நியமாதி
யோகம் இருநான் கியற்றுவரால்

என்று கூறி, அவ்வுபதேச மொழி சரி அன்று என்பதையும் அந்நூலே

ஆர ணங்கள்தரு தத்து வம்அசி
பதங்க ளின்பொருள் அறிந்திடாய்
சார ணம்அதுவும் நீயும் என்றிருமை
கண்டு வேறதின்மை கருதிடாய்
நார ணன்பிரம ஞலும் நாடரிய
நாய கன்கழல்கள் நண்ணிநீ
ஏர ணைந்துபொலி சாத னங்கள்கொடு
யோக ஞானமும் இயற்றிடே

என்று கூறி உய்யும் வகையும் காட்டுகிறது

பாஞ்சராத்திரி மதத்தார் முதலை வாயில் அகப்பட்ட கஜேந்திரன் ஆதிமூலமே என்று அழைத்த போது, வேறு எந்தத் தேவரும் அப்பெயர் தமக்குப் பொருத்தம் அன்று, என்று வாளா இருக்கத் ஆதிமூலமாகிய திருமாலேதான் வந்து காத்தார் ஆதலின், திருமால்தான் உலக முதல்வர் எனக் கூறித் தம்மதப் பெருமையை அறைவர் என்பதைச் சிவஞானசித்தியார் ஆசிரியர்,

பொய்கைவாழ் முதலைவாயில் போதகம் போதமாட்டது
ஐயனே நாதா ஆதி மூலமே என்ற ழைப்ப
உய்யயாம் பணிமால் ஓல ஓலஎன் றோடிச்சென்று
வெய்ய வாய்முதலை வீட்டிக் கரிக்குவீ டருளி னனே

என்று கூறி, அவர்கள் கூற்றுக்கும் தக்க விடை கூறுவாராய்,

கைவரை மூலமேயோ எனக்கரிக் குதவும் காட்டில்
மொய்வரை எடுத்தான் மூலம் ஆயிட வேண்டுமோதான்
ஐயனே முறையோ எனமுல் அரசனே அங்குச் செல்வான்
வையகம் காப்பான் செய்கை வழக்கன்றே ஊர்க்காப்
பான்போல்

என்று அருளியதையும் அந்நூலில் காணவும்.

திருச்சிற்றம்பலவன் கருணை வடிவினன் என்பதைச் சேக்கிழார் ''கற்பனை கடந்த சோதி கருணையே வடிவ மாகி'' என்று போற்றுமாற்றால் உணரலாம். இறைவன் கருணைக்கடல் எனத் தோத்திர நூல்கள் பல இடங்களில் கூறுதலை ஈண்டு நினைவு கொள்க.

சிற்றம்பலவர் கருணைக்குப் பல எடுத்துக் காட்டுகளை எடுத்துக் காட்டலாம். அவற்றுள் சில கீழ் வருவன: குங்கிலியக்கலய நாயனார் மிக்க பசியினால் இருத்தலை அறிந்து,

சாலநீ பசித்தாய் உன்தன் தடநெடும் மனையில் நண்ணி
பாலின்இன் அடிசில் உண்டு பருவரல் ஒழிக என்றார்,

அப்பர் பெருமானார் பசித்து இளைத்து வருதலை அறிந்து,

வெங்கண் விடைவே தியர்நோக்கி
மிகவும்வழிவந் திளைத்திருந்தீர்
இங்கென் பாலே பொதிசோறுண்
டிதனை உண்டு தண்ணீர்இப்
பொங்கு குளத்தில் குடித்திளைப்புப்
போக்கிப் போவீர் எனப்புகன்றார்.

சீர்காழிச் செம்மலார் அழுவதை அறிந்த திருத்தோணியப்பர், தம் கருணையினால்,

அழுகின்ற பிள்ளையார் தமைநோக்கி அருட்கருணை
எழுகின்ற திருவுள்ளத் திறைவயர்தாம் எவ்வுலகும்
தொழுகின்ற மலைக்கொடியைப் பார்த்தருளித் துணை
முலைகள்
பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன

என்று பணித்தருளினார்.

சுந்தரர் உண்ணீரின் வேட்கையுடன் உறுபசியால் மிக வருந்தித் திருக்குருகாவூர் வழியே வருவதை அறிந்த திருச்சிற்றம்பலவர், அவர் தம்மை எதிர்நோக்கி,

சாலமிகப் பசித்தீர்இப் பொதிசோறும் தருகின்றேன்
காலம்இனித் தாழாமே கைக்கொண்டிங் கினிதருந்தி
ஏலநறும் குளிர்தண்ணீர் குடித்திளைப்புத் தீரும்என

மொழிந்தார்.

கடல் நீர் முந்நீர் என்ற பெயரையும் பெற்றுளது. கடல் தன்னகத்து ஆற்று நீர், ஊற்று நீர், வேற்று நீரையும் கொண்டு திகழ்வதே இதற்குக் காரணம். வேற்று நீர் ஆவது தூய்மையற்ற நீர் ஆகும். அந்நீரையும் கடல் ஏற்றுத் தன் மயமாக்குகிறது. அதுபோலவே இறைவர் இன்னுர் இனியர் என்ற வேறுபாடு கருதாது ஏற்று அருள் தருதலின் கருணைக் கடல் என உவமிக்கப் பட்டனர் என்க. ''எவ்வுயிர்க்கும் இயல்பானுன்'' என்பது மணிமொழி அன்றே?

கற்றதன் பயன் கல்வி அறிவால் செருக்குறுதல் அன்று. கற்றதன் பயன் கண்ணுதல் கழலடி வணங்குவதே ஆகும். இதனை நன்கு உணர்ந்த திருவள்ளுவர் ''கற்றதனுல் ஆய பயன்என்கொல் வாலறிவன் நற்றுள் தொழாஅர் எனில்'' என அருள் உபதேசம் செய்துள்ளனர். இதுதான் கற்றதன் பயன் என்பதைச் சேக்கிழாரும் சிறுத்தொண்டர் புராணத்திலும்;

உள்ளநிறை கலைத்துறைகள்
ஒழிவின்றிப் பயின்றவற்றுல்
தெள்ளுவடித் தறிந்தபொருள்
சிவன்கழலில் செறிவென்றே
கொள்ளும்உணர் வினில்முன்னே
கூற்றுதைத்த கழற்கன்பு
பள்ளமடை யாய்என்றும்
பயின்றுவரும் பண்புடையார்

என்று அருளிப் போந்தார்.

மனுநீதிச் சோழன் மகனது கலைப் பயிற்சியைப் பற்றிக் கூறவந்த இடத்தும், சண்டேசுரர் கலைப் பயிற்சியைப்பற்றிச் சொல்லவந்த போதும், சேக்கிழார் எத்தகைய கல்வியினைக் கற்கவேண்டும் என்பதை நன்கு உணர்ந்து முறையே,

தவம்முயன் றரிதில் பெற்ற தனிஇளம் குமரன் நாளும்
சிவம்முயன் றடையும் தெய்வக் கலைபல திருந்த ஓதி.

என்றும்,

அலகில் கலையின் பொருட்கெல்லை
ஆடும் கழலே எனக்கொண்ட
செலவு மிகுந்த சிந்தையினில்
தெளிந்தார் சிறிய பெருந்தகையார்

என்றும் பாடிக் காட்டினர்.

இங்ஙனம் கற்காதவர்களையே "கற்றங் கமையார்" என்றனர். மலத் துன்பம் இன்னது என்பது முன்பே விளக்கப்பட்டது. ஆண்டுக் காண்க. அன்பர்கள் அரகர என்று எழுப்பும் ஒலி "மாமுழக்கு" என்பது,

வேதியர் வேத முழக்கொலி வேதத் தைத்தமிழால்
ஓதிய மூவர் திரும்பதி கத்தொலி ஓவாமல்
பூதி அணிந்து அரகரஎன அன்பர் புகழ்ந்தோதும்
காதியல் பேரொலி கார்ஒலி போல்ஒலி கைத்தேற

என்ற உமாபதி சிவனார் உரையால் உணர வருதல் காண்க.

திருத்தொண்டர் சரித்திரம் காமர் வாய்ந்தது என்பதை இப்புராணத்தைக் கேட்கப் பலர் விரும்பி வந்ததையும், மண்ணவரே அன்றி விண்ணவரும் போற்றிப் புகழ்ந்தனர் என்பதையும் உமாபதி சிவசாரியார் நன்கு எடுத்து இயம்பியுள்ளனர்.

கவசம் அணிந்த சனங்களும் இங்கித முங்கம்பித்
தவச முறும்சிவ சிந்தையும் அன்பக லாமேன்மை
தவச ரிதத்தொழி லும்சிவ சாதன முஞ்சாரச்
சிவச மயத்தவர் யாவரும் வந்து திரண்டார்கள்

பூசிப் பவர்சிலர் பூசித் தன்பொடு புனிதன்தாள்
நேசிப் பவர்சிலர் பிறவா வரம்அருள் நிமலாஎன்
றியாசிப் பவர்சிலர் திருமுறை எழுதிக் களிகூர
வாசிப் பவர்சில ராக இருந்து மகிழ்ந்தார்கள்

தெள்ளு திரைக்கடல் மீது
மிதந்த திருத்தோணி
வள்ளலை அன்புசெய் அன்பர்
மடங்கள் தொறும்பாலர்
மெள்ள இருந்து மிழற்று
புராண விருத்தத்தைக்
கிள்ளைகள் பாடி உரைப்பன
கேட்பன மெய்ப்பூவை

மற்றது கண்டு களித்த நலத்த மனத்தோடு
சுற்றிய மந்திரி மாரொடு தந்திரி மார்சூழத்
தெற்றென வந்து திரண்டு முரண்தரு சீர்நாடு
பெற்றது செல்வம் எனத்தனி யோகை பெருத்
தார்கள்

பாடினர் தும்புரு நாரதர் நீடிசை பாடாநின்
றாடினர் வானில் அரம்பையர் அஞ்சலி எஞ்சாமல்
சூடினர் மண்ணின் மடந்தையர் எந்தை துணைப்பாதம்
தேடினர் மாலயன் அன்பர் நடந்தரி சித்தார்கள்

என்பன போன்ற பாடல்களால் இவ்வுண்மையைத் தெளிக.

இத்தொண்டர் சரித்திரம் அநபாய மன்னன் சீவக சிந்தாமணியில் ஈடுபட்டிருந்த நிலையினை மாற்றி வெற்றி கண்டது ஆதலின் "கொற்றம் பொலியும் மழை" எனப் பட்டது. ஈண்டுத் திருத்தொண்டர் புராணமாம் மழை என்க.

திரு பிள்ளை அவர்கள் ஐந்து பாடல்களில் சேக்கிழாரைக் கொண்டல் என்று உருவகப் படுத்திக் கூறியுள்ளனர். அவ் வுவமைப் பொருத்தத்தைப் பொருத்திக் காட்டவேண்டும் என்ற கருத்தில் இப்பாடலை அதற்கெனவே அமைத்துக்

கொண்டு எங்ஙனம் சேக்கிழார் கொண்டல் ஆயினர் என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளனர்.

கொண்டல், முதலில் வெண்ணிறமாக இருந்து பின் கடல் நீரைப் பருகிக் கருமேகமாக மாறி, ஆகாயவழிச் சென்று மின்னல் கொண்டு, இடி முழக்கம் செய்து மழை நீரைப் பொழியும். சேக்கிழாரும் வெண்மேகம் போல் திருநீற்றைப் பூசிக்கொண்டு, அன்பின் வழிச் சென்று பரசமயமாம் கோடை ஒழிய இறைவரது கருணைக்கடலை முகந்து, தம் புகழாம் மின்னல் எங்கும் ஒளிவிட்டு இலக, அன்பர்கள் இடி ஓசை போல் அரகர என்னும் ஓசையினை எழுப்பத் தொண்டர் சரித்திரமாம் மழையினைப் பொழிந்தனர் என்று கூறியுள்ள கருத்துக்களைக் காண்கையில் சேக்கிழாரைக் கொண்டல் எனக் கூறியிருப்பது பொருத்தம் ஆகின்றதன்றோ?

இவ்வாறு கொண்டல் எனக் கூறிச் சீரிய சான்றோர் அதற்கேற்பச் செய்யுளை அமைத்துப் பாடுவர் என்பதை,

முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள்
இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பில் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னில் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்

என்று திருவாதவூரரும்.

ஆழி மழைக்கண்ணா ஒன்றுநீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்

*ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து*
*தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்*
*வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்*
*மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்*

*என்று நாய்ச்சியாரும் நவின்றிருப்பதைக் காண்க.* (59)

9. விள்ளும் மலர்ஆ தனத்தானும்
வெய்ய சுதரி சனத்தானும்
விரும்பும் அதிகா ரக்கதையா
விளம்பா நின்ற கோல்கொள்ள
நள்ளும் பிரம சரியர்எலாம்
நாடும் பலாசக் கோல்கொள்ள
நான்காம் ஆச்சி ரமத்தமைந்தார்
நயந்து முந்நூழ்க் கோல்கொள்ளத்
தெள்ளும் வணிகர் குலம்எல்லாம்
தேற்றும் துலாக்கோல் அதுகொள்ளச்
செம்பொன் மோலி அரசர்எலாம்
செங்கோல் கொள்ளச் சிறுகோல்கைக்
கொள்ளும் குலத்தில் உதித்தஅருள்
கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா விகைக்குன்றைக்
கோமான் வருக வருகவே

*(அ. சொ.) விள்ளும்–மலரும், மலர் ஆதனத் தான்–தாமரை மலராகிய ஆதனத்தில்உள்ள பிரமதேவன், வெய்ய–கொடுமை மிக்க, சுதரிசனத்தான் - சுதரிசனம் என்னும் சக்கரம் படைத்த திருமாலும், கதை-தண்டு என்னும் ஆயுதம், விளம்பாநின்ற-விளம்புகின்ற, நள்ளும்-வேத வேதாந்தத்தை விரும்புகின்ற, பலாசக்கோல்-முள்முருக்கம் கொம்பு, நான்காம் ஆச்சிரமத்து அமைந்தார்-நான்காம் நிலையாகிய சந்நியாச நிலையில் அமர்ந்தவர், ஆச்சிரம்-நிலை,*

முந்தூழ்-மூங்கில், தெள்ளு-தெளிவான அறிவுடைய, துலாக்கோல்-தராசுக் கோல், மோலி-கிரீடம், முந்தூழ்க் கோல்-ஏகதண்டம், திரிதண்டம் என்பன. சிறுகோல்-சிறிய தாற்றுக்கோல், குலத்தில்-வேளாளர் குலத்தில்.

**விளக்கம்:** இப்பாடலில் திரு பிள்ளை அவர்கள் வேளாளர் சிறுகோல் பிடித்து ஏர் உழுவதினுல்தான் பிரம் மாதி விஷ்ணுக்களும் தாம் தாம் தாங்கவேண்டிய கோலுடன் திகழவேணடி உள்ளது. அவ்வேளாளர் அச்சிறு கோலைத் தம் கையில் பிடித்திலரேல், எவரும் கோலைத்தாங்க இயலாது என்பதை எடுத்து இயம்பியுள்ளனர்.

ஆதிகாரம் நடத்துவோர் தம் கோல் கையில் வைத் திருத்தல் மரபு. இதனைப் பரஞ்சோதி முனிவர், நந்தியம் பெருமானுக்கு வணக்கம் செலுத்தும் பாடலில் இனிதுற,

வந்திறை அடியில் தாழும் வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையால் தாக்கி
அந்தியும் பகலும் தொண்டர் அலகிடும் குப்பை ஆக்கும்
நந்தியம் பெருமான்பாதம் நகைமலர் முடிமேல்வைப்பாம்

என்று பாடிக்காட்டியுள்ளதை ஈண்டு நினைவு படுத்திக் கொள்ளவும்.

பிரம்மன் கையில் யோகதண்டமும், திருமால் கையில் அம்பாகிய கோலும், பிரமசரியர் கையில் கல்யாண முருக்கங் கோலும், நான்காம் ஆசிரமத்தார் ஆகிய சந்நியாசிகள் கையில் மூங்கில் கோலும் பிடிப்பதற்குக் காரணம் வேளாளர் தம் கையில் தாற்றுக் கோல் பிடிப்பதனுல் என் பதை ஆசிரியர் திறம்பட விளக்கியுள்ளனர்.

முருக்கங்கோல் ஏந்துவதன் கருத்து வேதத்தின் பொருள் எளிதில் கொள்ளும் சக்தியினைப் பெறுவதற்கு என்பர். சந்நியாசிகள் மூங்கில்கோல் உடையர் என்பதைத் திருக்கோவையார்,

வெதிர்ஏய் கரத்துமென்தோல்
ஏய்சு வல்வெள்ளை நூலில்கொண்மூ
அதிர்ஏய்மறையின் இவ்வாறு செல்வீர்

என்று குறிப்பிடுதல் காண்க.

இவர்கட்கு முக்கோல் தண்டு உண்டு என்பது,

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயும் காலை அந்தணர்க் குரிய

என்று தொல்காப்பியம் கூறுவதனுல் அறியலாம்.

இதற்கு இலக்கியமாக,

எறித்தரு கதிர்தாங்கி
ஏந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும்
உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவல்அசைஇ
வேருேரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயல்மாலைக்
கொளைநடை அந்தணீர்

என்ற கலித்தொகை அடிகளை எடுத்துக் காட்டலாம்.

வணிகர்களின் பண்பு இத்தகையது என்பதைப் பட்டினப் பாலை குறிப்பிடுகையில்,

நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நல்நெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்பநாடி
கொள்வதூஉம் மிகைபடாது
கொடுப்பதூஉம் குறைபடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்

இயல்பினர் என்கிறது. வள்ளுவரும் இவர்கள் இயல்பை, ''வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப் பிறவும் தம் போல் செயின்'' என்றனர்.

இப்பண்பகளை நன்கு தெளிந்தவர் வணிகர் என்ற காரணத்தால்தான் திரு பிள்ளை அவர்கள், தெள்ளும் வணிகர் என்றனர். துலாக்கோல் தன்பால் வைத்த பொருள்களின் நிறையின் ஏற்றத் தாழ்வுகளை இனிதின் காட்டவல்லது. இது குறித்தே செந்நாப் போதார், "சமன் செய்து சீர்தூக்கும் கோல்" என்று துலாக்கோலுக்குரிய இலக்கணத்தைக் கூறினர். இதனால்தான் ஈண்டு "தேற்றும் துலாக்கோல்" எனப்பட்டது.

மன்னர்கள் தம் கையில் செங்கோல் பிடித்து அரசு இயற்றுதற்கு அடிப்படைக் காரணம், வேளாளர் தம்கையில் சிறுகோல் பிடித்து ஏர் அடித்து உழவு செய்வதினால்தான் என்ற உறுதிப் பாட்டை உமாபதியார்,

ஏரால்எண் திசைவளர்க்கும் புகழ்வே ளாளர்
ஏரடிக்கும் சிறுகோலால் தரணிஆளச்
சீராரும் முடியரசர் இருந்து செங்கோல்
செலுத்துவர்வே ளாளர்புகழ் செப்ப லாமோ

என்று விளம்பியுள்ளனர்.

கம்பரும்,

பொங்கோதை கடல்தானைப்
போர் வேந்தர் நடத்துபெருஞ்
செங்கோலை நடத்துங்கோல்
ஏர்அடிக்கும் சிறுகோலே

என்றனர்.

இத்தகைய மாண்புகளுக் கெல்லாம் நிலைக்களனும் வேளாளர் குலத்து உதித்தவர் சேக்கிழார் எனச் சிறப்புடன் மொழிய வந்த திரு பிள்ளை அவர்கள்,

"சிறுகோல் கைக்கொள்ளும் குலத்தில்
உதித்த அருள் கொண்டல்;"

என்று பாடி மகிழ்ந்தனர். (60)

**10.** எள்ளும் திறத்துப் பரசமயர்
ஏறு வருக தேறுதலில்
எங்கள் உணர்வின் கணும்மதுரித்
தினிக்கும் இருங்கோல் தேன்வருக
தெள்ளும் புலத்தர் பெறுகாம
தேனு வருக அருகந்தர்
சிந்தா மணியைப் பொருட்படுத்தாச்
செல்வச் சிந்தா மணிவருக
உள்ளும் அவருக் கெய்ப்பிடைவைப்
பொத்துள் எழும்ஒள் ஒளிவருக
ஒழியாப் பத்திக் கடல்வருக
உலவா தமைந்த சிவபோகம்
கொள்ளும் சைவப் பயிர்வளர்க்கும்
கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக்
கோமான் வருக வருகவே

அ. சொ. *எள்ளும்-இழிவாகப் பேசும், திறத்து-தன்மையுடைய ஏறு-சிங்கமே உணர்வின்கணும்-உணர்வினிடத்தும், மதுரித்து - இன்பம் செய்து, இருங்கோல்தேன் - பெரிய கொம்புத்தேனே, தெள்ளும் புலத்தார்-தெளிந்த அறிவுடையோர், ஞானிகள் அருகந்தர்-அருகர்களுடைய, சிந்தாமணியை-சீவக சிந்தாமணி என்னும் நூலை, சிந்தாமணி-தேவலோகத்தில் உள்ள சிந்தாமணியே, உள்ளுமவர்க்கு-நினைப்பவர்களுக்கு, எய்ப்பிடைவைப்பு-தளர்ந்த காலத்து உதவும் சேமநிதி, போகம் - விளைவு, சிவபோகம் - ஆன்மாவின் ஆனந்தானுபவ நிலை, உலவாது-குறையாது.*

**விளக்கம்:** *பரசமயத்தவர் ஈண்டுச் சமணர்கள், பௌத்தவர்கள். அவர்கள் செயல் நற்செயலாகப் புலனாகவில்லை. அவர்கள் சம்பந்தர் இருந்த இடத்திற்குத் தீயிட்டனர் என்றால், அவர்தம் கொடுமைக்கு வேறு யாது கூற இயலும்?*

ஆகவே, அவர்களைச் சேக்கிழார் எள்ளும் திறத்தினர் என்பதில்குற்றம் இல்லை. இவர்களை "இருள்போல வந்து தந்தொழில் புரிந்தனர் வஞ்சனை மனத்தோர்" என்றும், "கருமுரட்டு அமண்கையர்" என்றும், "மால்பெருக்கும் சமண் கையர்" என்றும், "புல்லறிவில் சாக்கியர்கள்" என்றும், அஞ்சாது உண்மையைக் கூறியதால் சேக்கிழாரை "பரசமய ஏறு" என்றனர்.

தேன் நாவளவில்தான் இனிக்கும். உணர்வில் இனிக்கும் தன்மையது அன்று. ஆனால், சேக்கிழாராம் தேன் உணர்வில் சென்று இனித்தலின், உணர்வின்கணும் மதுரித்து இனிக்கும் தேன் என்று உம்மை கொடுத்து உரைத்துள்ளளர். மணிமொழியார் "கோல்தேன் எனக்கென்கோ" என்று திருவாசகத்திலும், "காலனை ஓலமிட அடர்த்தகோல்தேன்" என்று திருக்கோவையாரிலும் கூறியதையும் காண்க.

தெள்ளும் புலத்தார் என்பார்க்கு விளக்கம், பலவாறுகக் கூறலாம். இவர்களைப் பகுத்தறிவாளர் என்றும் சீர்திருத்தக் காரர் என்றும் கூறலாம். பகுத்தறிவாளர்கள்தம் சீர் திருத்தக் கருத்துக் கேற்ற பொருள்கள் உண்டா என்று பெரிய புராணத்துள் காண நுழைந்தால், அவர்கள் விரும்பும் விருப்பப்படி அத்தகைய கருத்துக்களையும் சேக்கிழார் கூறி இருத்தலின், 'தெள்ளும் புலத்தார் பெறுகாம தேனு' என்றுசிறப்பிக்கப்பட்டனர். இதனைச் சுந்தரர் வேசியர் குலத்தும் மாதராம் பரவையாரையும், வேளாள குலத்துச் சங்கிலியாரையும் மணந்து கொண்டதைச் சேக்கிழார், "திருநாவலூரன் மகிழத் தாம்க்குழலாள் பரவைவதுவை தகுநீர்மையினுல் நிகழச் செய்தார்" என்றும், 'பண்டு நிகழ் பான்மையினுல் பசுபதிதன் அருளாலே, வண்டமர்பூங் குழலாரை மணம் புணர்ந்த வன்றெண்டர்' என்றும் பாடிக் காட்டி இருப்பதால் அறிக.

சுந்தரர் வேதியர் என்பதை 'மாதொரு பாகனுர்க்கு வழி வழி அடிமை செய்யும் வேதியர் குலத்தில் தோன்றி' என்றும், பரவையார் பரத்தையர் குலத்தவர் ஆதலே,

"உருத்திர கணிகைமாராம் பதியிலார் குலத்தில் தோன்றி" என்றும், சங்கிலியார் வேளாளர் மரபினர் என்பதை "மேலாம் கொள்கை வேளாண்மை மிக்க திருஞாயிறு கிழவர், பாலாதரவு தரும்மகளா ராகிப் பார்மேல் அவதரித் தார்" என்றும் சேக்கிழார் வெளிப்பட உணர்த்தியுள்ளதை உணர்க.

அப்பூதி அடிகளார் வேதியர் மரபினர். அப்பர் பெருமான் வேளாள மரபினர். "நின்ற மறையோர் அது கேளா" "ஆதிநான்மறை நூல் வாய்மை அப்பூதியார்" என்று அப்பூதியார் வேதியர் என்பதையும், திருநாவுக்கரசர் குடியினைப் பற்றிப் பேசுகையில் 'மேதக்க நிலை வேளாண் குலம்' என்றும் சுட்டியுள்ளனர். இத்தகைய இருவேறு பட்டவர்கள் இவர்கள். 'இந்நிலையில் அப்பூதியார், வேளாளராம் திருநாவுக்கரசர்தம் திருவடிகளைப் பூசித்து, அவர்திருவடி நீரை உள்ளுக்கும் உட்கொண்டார் என்றும், அவருடன் தாமும் அமர்ந்து உணவு உட்கொண்டார் என்றும் சேக்கிழார் கூறுவதைக் காணும்போது இதனினும் சீர்திருத்தக் கருத்தை நாம் யாண்டுக் காண இயலும்?

முனைவரைஉள் எழுந்தருளு வித்தவர்தாள் முன்விளக்கும்
புனைமலர்நீர் தங்கள்மேல் தெளித்துள்ளும் பூரித்தார்

என்றும்,

மைந்தரும் மறையோர் தாமும் மருங்கிருந் தமுதுசெய்யச்
சிந்தைமிக் கில்ல் மாதர் திருவமுது எடுத்து நல்கக்
கொந்தவிழ் கொன்றை வேணிக் கூத்தனுர் அடியாரோடும்
அந்தமிழ் ஆளியார்அங் கமுதுசெய் தருளி னுரே

என்றும் பாடியுள்ளவற்றைக் காண்க. இங்ஙனம் வேண்டு வார் வேண்டினது தம் நூலில் தருதலின், காமதேனு என்னப்பட்டனர் சேக்கிழார்.

உமாபதிசிவம் சிவஞானமுனிவர் போன்ற அறிவுசான்ற ஞானியர்கள் வேண்டும் பொருளைச் சேக்கிழார் தம் பெரிய புராணத்தில் தருகின்றுர் ஆதலின், "தெள்ளு புலத்தர் பெறு காமதேனு" எனக் கூறுதலும் ஈண்டுப் பொருந்தும்.

சிந்தாமணி ஒருவகைத் தெய்வீகக் கல். இதுவும் வேண்டியதை ஈயும் தன்மையது. அதுபோன்றவர் என்பது முன்பு கூறியிருத்தலில் சிந்தாமணி எனப்பட்டனர். சேக்கிழார் சிந்தாமணியினைப் பொருள் படுத்தா நிலையினை முன்பே பலவேறு இடங்களில் விளக்கப் பட்டிருத்தலைக் காணவும். சித்தாமணியைச் சேக்கிழார் பொருள் படுத்திலர் என்பது உபசாரமே என்று உண்மை அன்று. அரசன் சைன சமயத்தைச் சாராதிருக்கச் செய்ய அதனை இழித்துப் பேசினர் என்க.

பெரிய புராணத்தினை நன்கு சிந்தித்துப் போற்றி வருபவர்க்கு அது எய்ப்பினில் வைப்பு என்பதை அவர் அவர் அனுபவத்தால் நன்கு உணரலாம். அடியேனும் இதற்கு ஓர் எடுத்துக் காட்டென ஈண்டு எழுதுவது குறித்து மன்னிக்கவேண்டுகின்றேன்.

சேக்கிழார் பெருமானுர் பிறந்த பதியாகிய குன்றத்தூர் நத்தத்தில், அவர்தம் குருபூசை விழாவில் எம்பிரானுரைப் பற்றிப் பேசுகையில், மேல் சட்டையுடனும் விசிறிமடிப்பு மேல் துணியுடனும் பேசுகையில், ஆண்டு வந்து சொற்பொழிவைச் செவி மடுத்துக் கொண்டிருந்த சைவ அன்பர் ஒருவர், ‘நீங்கள் இத்துணை அளவு சைவ சமயத்தைப் பற்றிச் சிறப்புடன் பேசுகிறீர்களே! மேற் சட்டையின்றி அக்கமாலையுடன் நின்று சொற்பொழிவு ஆற்றலாமே'' என்றனர். அவர் கூறியதில் தவறு இல்லை. என்ருலும், அவர் பேச்சை அடக்குதற்குப் பெருந்துணையாக நின்றது சேக்கிழாரது சீரிய வாக்கே ஆகும். அவ்வாக்கு, ‘‘எந்நிலையில் நின்ருலும் எக்கோலம் கொண்டாலும் மன்னிய சீர் சங்கரன்தாள் மறவாமை பொருள்'' என்பது. இவ்வாறு எய்ப்பிடைவைப்பாய் இவர் உள்ளார் என்பதற்கு வேறு எச்சான்று தேவை?' இவ்வரிகளை உடனே எடுத்து இயம்பி அவ்வன்பரை மேலே பேச ஒட்டாது செய்து விட்டனன்.

சேக்கிழாரது பக்திப் பெருக்கை இவர்தம் பிறந்த ஊர்க்கண்மையில் திருநாகேச்சுரத்தை ஏற்படுத்தி வழிபட்டு

வந்ததைக் கொண்டு தெளியலாம். இதனை உமாபதியார், "நித்தன் உறை திருநாகேச்சுரத்தில் அன்புநிறைதலினால் மறவாத நிலைமைமிக்கார்" என்று உணர்த்தியுள்ளனர். பொதுவாக இவருக்குச் சிவபெருமானிடத்தில் இருந்த பக்தியினைச் சிவபெருமானைப்பற்றிப் பாடியுள்ள வணக்கப் பாடலாலும், மேலும், இவருக்கிருந்த சைவப் பற்றினை இவர் ஐந்தெழுத்தைப் பற்றியும் திருநீற்றைப் பற்றியும் அங்கங்கே பாடி இருத்தலைக் கொண்டும் உணர்ந்து கொள்ளலாம். ஆசிரியர் பொதுப்படப் பக்திக் கடலாகச் சேக்கிழாரைக் குறிப்பிட்டிருப்பதால், ஆண்டவன் பக்தியே அன்றி, அடியார் பக்தியும் இவர் கொண்டவர் என்பதைத் தொண்டர் புராணத்தில் எங்கும் காண்கின்றோம். ஒவ்வோர் அடியார் புராணத்தை முடித்து, அடுத்த அடியார் புராணத்தைக் கூறுவதாகக் கூறும் போதும் அடியார்களை வணங்கியே கூறுவர்.

ஆறு முடிமேல் அணிந்தவருக்
　　கடியார் என்று கறிஅமுதா
ஊறி லாத தனிப்புதல்வன்
　　தன்னை அரிந்தங் கமுதூட்டிப்
பேறு பெற்றார் சேவடிகள்
　　தலைமேற் கொண்டு பிறஉயிர்கள்
வேறு கழறிற் றறிவார்தம்
　　பெருமை தொழுது விளம்புவாம்

என்று பாடித் தம் அடியார் பக்தியை உணர்த்தியவாறு உணர்க.

"உலவாதமைந்த சிவபோகம்" என்பதற்கு எடுத்துக் காட்டாக, நமது சைவ மடங்கள் இன்றும் திருக்கயிலாய பரம்பரை என்று வழங்கப் பட்டுச் சிவபோக பரம்பரையை வளர்த்து வருவதைக் கண்கூடாகக் காணலாம். பண்டார சாத்திரங்களில் "சிவபோகசாரம்!" என்னும் நூல் இருப்பதையும் அறியவும். உலகம் எங்கும் இச் சைவ போகம் இருப்பதை அங்கங்குச் சிவலிங்க உருவங்களும், சைவக் குறிப்புக்களும் காணப்படுதலால் அறியலாம்.

சேக்கிழார் சைவப் பயிர் வளர்க்கும் கொண்டல் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை.

புலவர் தன்முன் திருவலகு பணிமாறிப் புனிறகன்ற
நலமலிஆன் சாணத்தால் நன்குதிரு மெழுக்கிட்டு
மலர்கொய்து கொடுவந்து மாலைகளும் தொடுத்தமைத்து
பலர்புகழும் பண்பினுல் திருப்பணிகள் பல செய்தார்''

என்று அப்பர் புராணத்தும், ''சைவமுதல் வைதிகமும் தழைத்தோங்கத் தாவில் சராசரங்கள் எலாம் சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தார்'' என்றும்,

உணர்வின் நேர்பெற வருஞ்சிவ
போகத்தை ஒழிவின்றி உருவின்கண்
அணையும் ஐம்பொறி அளவினும்
எளிவர அருளினை

என்றும் திருஞான சம்பந்தர் புராணத்தும் பாடிச் சைவப் பயிர் தழையச் செய்ததைக் காணவும்.

சேக்கிழார் பெருமானர் இற்றைக்கு ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகட்கு முன்பு பெரிய புராணத்தைப் பாடிச் சைவப் பயிர் தழையைச் செய்தனர் ஆயினும், அப் புராணம் இன்றும் இனியும் சைவப் பயிரை வளர்த்து வருகின்றதாலும், வளர்த்து வரப் போவதாலும், ஈண்டுத் திரு பிள்ளை அவர்கள் சைவப் பயிர் வளர்க்கும் எனச் செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்றுல் அறிவித்துள்ளார். இவ்வாறுதான் கூறவேண்டும் என்பதற்கு விதி தொல்காப்பியத்தில் உண்டு அது.

முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழும் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல் வேண்டும்

என்பது,

ஈண்டு வளர்க்கும் என்னும் சொல்லைக் கொண்டல், என்னும் சொற்கு அடையாகக் கொள்ளாது, அச் சொல்லுக்குப் பயனிலை சொல்லாகக் கொண்டு பொருள் காணவும்.

# 7. அம்புலிப் பருவம்

1. பாடுமதி யோன்எனப் படுதலால் வாய்விண்டு
பதினா யிரம்சுரும்பர்
பண்பாட இன்நறவு வீசுகழு நீர்மாலை
பாங்குற உவந்திடுதலால்
நீடுசுடர் படுசம்பு வொடுகூட் லால்கலை
நிரம்பத் தழைத்திடுதலால்
நெடியஅம் பரவைஅலை றத்தோன்ற லால்என்றும்
நிகழ்சாந்த மேஉடைமையால்
வாடுதலில் சேக்கிழான் ஆதலால் நகும்ஏர்
வளம்தழுவ லால்எம்ஐயன்
மானுதல் தெரிந்துவரு கென்றழைத் தான்மழைபெய்
வானம்கிழித்து மேல்போய்
ஆடுகொடி மாளிகைக் குன்றைநகர் ஆளியுடன்
அம்புலீ ஆடவாவே
அருள்உருத் தேசுபொலி அருள்மொழித் தேவனுடன்
அம்புலீ ஆடவாவே

(அ. சொ.) பாடு-பெருமைமிக்க, மதியோன்-அறிவுடையோன், சந்திரன், விண்டு-மலர்ந்து, சுரும்பர்-வண்டுகள், பண்-இசை, நறவு-தேன், கழுநீர்மாலை என்பது ஒருவகை மலர்மாலை, (செங்குவளை மலர்) ஆம்பல்-செங்குவளை மலர், பாங்குற-அழகுற, நன்மை பொருந்த, உவந்திடுதலால்-மகிழ்வதனால், நீடு-அளவில்லாத, சம்புவொடு-சிவனோடு, சுகத்தைத் தருபவனாகிய இறைவனோடு, கலை-சாத்திர அறிவு, அம்-அழகிய, பரவை-கடல், வம்பர்-வீணர், அவை-கூட்டம், சாந்தம்-அமைதி, குளிர்ச்சி, சேக்கிழான்-சேக்கிழார் என்ற பெயருடைமை, இரடபராசிக் குரியவன், ஏர் - அழகு,

கலப்பை, சே-இரடபம், மானுதல்-ஒத்தல், நகர்ஆளி-நகரில் தோன்றிய சிங்கம் போன்ற சேக்கிழார், அம்புலீ-சந்திரனே, தேசு-ஒளி, பொலி-விளங்கும், அருண்மொழித் தேவர்-சேக்கிழாருக் குரிய மற்ருெரு பெயர்.

**விளக்கம் :** அம்புலி என்பது நிலா. இந்நிலாவை, நோக்கி அழைத்துக் குழந்தையுடன் ஆடும்படி கேட்டலின் இப்பருவம் அம்புலிப் பருவம் எனக் குறிக்கப்பட்டது. இது குழந்தை பிறந்த பதினெட்டாம் மாதத்தில் நிகழ்த்தும் நிகழ்ச்சி, "மதிஈர் ஒன்பதில் மதியை அழைத்தலும்" என்று பிங்கலந்தை நிகண்டு கூறுதல் காண்க. இப் பருவத்திற்கும் ஏனைய பருவங்களுக்கும் வேறுபாடு உண்டு. செங்கீரை முதலிய பருவங்கள் பாட்டுடைத் தலைவனும் குழந்தையை நேரே விளித்து, இவ்வாறு செய்க என வேண்டுதலாகும். ஆனல், அம்புலிப் பருவத்தில் மட்டும் நிலாவை அழைத்துக் குழந்தையின் மாண்பினைச் சொல்லி அழைப்பதாகும்.

அம்புலிப் பருவம்தான் பிள்ளைத் தமிழ் நூலை பாடும் புலவன், தன் புலமையினைக் காட்டுதற்கு மிகச் சிறந்த இடமாகும். இவ்வாறே ஒவ்வொரு பிரபந்தத்திலும் ஒவ்வோர் இடம் சிறப்பிடம் பெற்றுள்ளது. கலம்பகத்தில் அம்மானை என்னும் உறுப்பைப் பாடுவதில் தன் அறிவாற்றலைக் காட்டிப் பாடவேண்டும். இன்றேல் இழுக்கு எய்துவன். இவ்வாறு பாடும் ஆற்றலை அழகிய மணவாள தாசர் என்னும் திவ்விய கவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பெறுததனல் அன்ருே, "ஐயங்கார் அம்மானையில் அடிசரக்கினர்" என்னும் அபவாதத்திற்கு உள்ளாயினர்?"

பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் திருவரங்க நாதனுக்குப் பெருமைகூற எண்ணி,

> தேனமரும் சோலைத் திருவரங்கர் எப்பொருளும்
> ஆனவர்தாம் ஆண்பெண் அலியலர்காண் அம்மானை
> ஆனவர்தாம் ஆண்பெண் அலிஅலரே யாமாகில்

சானகியைக் கொள்வரோ தாரமாய் அம்மானை
தாரமாய்க் கொண்டதுமோர் சாபத்தால் அம்மானை

என்று அம்மானைப் பாடலைப் பாடினர். இவ்வம்மானைப் பாடல் பாடவேண்டிய முறையில் அமைந்துள்ளது. ஆனால், தாம் முழு முதலாகக் கொண்ட திருவரங்கனுக்குச் சாபம் உண்டு. என்ற பொருளையும் அமைத்துப் பாடிவிட்டனர். ஆதலின் அய்யங்கார் அம்மானையில், அடிசரக்கினர் எனப் பிறர் இழித்துக் கூறும் நிலையினை எய்தினர். ஆனால், அம்மானை பாடிப் பல புலவர்கள் வீறு எய்தியுள்ளனர். திருமால் சாபம் உற்று அவதாரங்களை எய்தியதைச் சிவஞான சித்தியாரும்,

தவகுணனுய்மால் சென்று தீவியைச்
சக்கரத்தால்
அவகுணம் செய்தன் றேடப்
பிருகுவந் தவளைப் பார்த்துச்
சிவனல தறியேன் ஆகில்
இதுசெய்தோன் செறிக பத்துப்
பவம்என மொழிய மாலும்
பயப்பட்டுப் பதறி வீழ்ந்தான்.

என்கிறது.

உலாவில் பெதும்பைப் பருவம் சிறந்தது ஆதலின், அதனையும் திறம்படப் பாட வேண்டியது புலவன் கடனு யிற்று. இவற்றை எல்லாம்உட் கொண்டே அவ்வையார்,

காசினியில் பிள்ளைக் கவிக்கம் புலிபுலியாம்
பேசும் உலாவில் பெதும்பைப்புலி—

என்று கூறியுள்ளார்.

அம்புலிப் பருவம் பாடும்போது எங்ஙனம் தன் திறனைக் காட்டவேண்டி உளதெனில், பிள்ளைத் தமிழ்ப் பாட்டுடைத் தலைவனும் குழந்தையின் மாண்பினைப் பேசி, அம்மாண்பு சந்திரனுக்கு இல்லை என்பதைக் காட்டியும், பாட்டுடைத் தலைவனுக்கும் நிலவுக்கும் ஒப்புமை காட்டியும் பாட்டுடைத்

தலைவனும் குழந்தையுடன் வந்து ஆடுமாறு அழைக்கும் முறையில் பாடுதலாம் என்க. அங்ஙனம் அழைக்கையில் சாம உபாயம், பேத உபாயம், தான உபாயம், தண்ட உபாயம் இவற்றை எல்லாம் மேற்கொண்டு அழைக்கும் முறையிலும் பாடவேண்டும் பிள்ளைத் தமிழ் பாடும் புலவன். இங்ஙனம் எல்லாம் பாடுதலில் தலைசிறந்தவர் திரு. பிள்ளை அவர்கள். இவர் குமரகுருபரரைப் போலப் பல பிள்ளைத் தமிழ் நூல்களைப் பாடிய பேரறிஞர். இதனால் இவர் பிள்ளைத் தமிழ் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை என்னும் சிறப்புடன் அழைக்கவும் பட்டனர். இவர் பாடிய ஏனைய பிள்ளைத் தமிழ் நூல்களிலும், இச்சேக்கிழார் பெருமானார் மீது பாடப்பட்ட பிள்ளைத் தமிழில் தமது முழுத் திறனையும் திரு. பிள்ளை அவர்கள் காட்டியுள்ளனர் என்பது வெறும் புகழ்ச்சி அன்று; உண்மையே ஆகும். இஃது உண்மை என்பதை இதற்குமுன் வந்த பருவங்களின் பாடல்களிலும் அவற்றின் விளக்கங்களிலும் கண்டோம். இனி இப்பரு வத்தில் அவரது தனித்திறமையினையும் காண்போமாக.

இம்முதற் பாடல், சேக்கிழாரை ஒருசார் சந்திரன் ஒப்பாவன் என்ற ஒப்புமை காட்டி, அவனை அழைப்பதைத் தெரிவிக்கின்றது. ஆகவே, இதன்கண் சிலேடை அணியும் அமைந்துள்ளது. இப்பாடல் **சாம உபாயம்** அமைந்த பாடல் ஆகும்.

சந்திரன் பெருமைக்குரியவன் என்று புலவர்களால் பாடப்படும் காரணத்தால் அறியலாம். சேக்கிழார் நிலாவை "நீற்றின் பேரொளி போன்றது நீள் நிலா" என்றும் பாடினர் அல்லரோ? ஆதலால் புலவர்களால் பாடப்படும் மதியோனும் ஆவான். புலவர்கள் பலரும் சந்திரனைப் பாடுதலை அவ்வவர்தம் நூலில் காணலாம். அதனால் சந்திரனும் பெருமைக்குரியவன். சந்திரன் தோன்றக் கழுநீர் மலர்கள் மலரும். இக்காரணத்தால் சந்திரனைக் குவளை மலர்கட்குக் கணவன் என்றும் புலவர்கள் கூறுவர். ஆகவே, சந்திரன் குவளையை உவப்பதும், குவளைகள்

சந்திரனை உவப்பதும் மரபாயிற்று. பதினாயிரம் வண்டுகள் என்றது பல வண்டுகள் என்பதாம். இவ்வாறு மிகுதிப் படுத்திக் கூறுதல் புலவர் மரபு. வில்லிபுத்தூராரும், விதுரர் வாயில், "அறுநூறாயிரம் மடையர் (சமையல்காரர்) தம்மை நோக்கினர் அவர்களும் விரைவுடன் சமைத்தார்" என்று பாடியுள்ளனர். மலர்கள் மலர்ந்தால் வண்டுகள் சூழ்ந்து ஒலிப்பதை "பண்பாட" என்றனர். "வண்டுதமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரையே" என்றனர் கம்பர். சந்திரன் சிவ பெருமானது சடையில் கூடியிருக்கிறான். இதனால் இறைவன் சந்திரசேகரன் என்ற பெயரையும் பெற்றுளான் அல்லனோ? இறைவன் பிறைசூடிய சிறப்பை நமது திருமுறைகள் பலபடி எடுத்து இயம்புகின்றன. இறைவன் சீரொளிய தழல் பிழம்பாய்நின்றவன். அரும்பெருஞ் சோதி ஆதலின், "நீடு சுடர்படு சம்பு" என்றனர்.

சம்பு என்னும் பெயர் இறைவனுக்கு இருப்பதன் காரணம், அவன் இன்புருவன் ஆதலினால் என்க. அவன் இன்புறுவினன் என்பதை மணிமொழியார்,

தினைத்தனை உள்ளதோர்
பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும்
பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புள்நெக
ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே
சென்றூதாய் கோத்தும்பீ

என்றும், "சட்டோ நினைக்க மனத்தமுதாம் சங்கரன்" என்றும் அறிவித்துள்ளதை அறிவோமாக.

சந்திரன் பதினாறு கலைகளுடன் திகழ்பவன்; திருப்பாற் கடலில் தோன்றிய சிறப்பும் சந்திரனுக்கு உண்டு. சந்திரன் குளிர்ந்த ஒளியுடையவன். சந்திரனது குளிர்ந்த ஒளியைக்

கண்ட போது கடல் பொங்கும். இதனைச் சிவப்பிரகாச சுவாமிகள் "தண் கதிரால் பொங்கும் கடல்" என்றனர். வில்லிபுத்தூராரும் "இந்துவின் கதிர் கண்டு மேல் மேல் உற்று இரங்கி, வான் கரை கடந்தேறும் சிந்து வெண்திரைச் சிந்து" என்றனர். இக்கருத்துக்களை உள் அடக்கியே "பரவை அலறத் தோன்றலாய்" எனப்பட்டது. அவன் சே(ரிடப) ராசிக்கு உரியவன். அதாவது சந்திரன் இடப ராசியில் உச்சம் உடையோன் என்பது சோதிட நூல் கருத்து. அவன் அழகிய வளத்தைக் கொண்டவன். அவன் அழகுடையவன் என்பதை அவனை மாதர்களின் முகத்திற்குப் புலவர்கள் ஒப்புக் கூறுதலால் அறியலாம்.

சேக்கிழார் பெருமானும் பெருமைமிக்க அறிவுடையவர். இவர், "கொழுநன் தொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை" என்ற குறட்பாவை எத்துணை நுட்ப அறிவால் "மழைக்குதவும் பெருங்கற்பு" என்ற தொடரில் குறிப்பிட்டுளார்? ஆகவே, இவர் மதி, பாடு மதி ஆயிற்று. சேக்கிழார் வேளாளர். வேளாளர்கட்குரிய மாலை கழுநீர் மலர்மாலை. ஆகவே, கழுநீர்மாலை உவந்திடலால் என்றனர். "செங்குவளை மாலை அணி திண்டோள் வலத்தனை" என்று முன்பும் கூறப்பட்டுள்ளது. இவ்வாறே வேதியர்கட்கும் மாலையுண்டு. அவர்கள் மாலை தாமரை. இதனைச் சுந்தரர் செம்மையுற, "அல்லியம் தாமரைத்தார் ஆரூரன்" என்று தம் மரபு மாலையைக் குறிப்பிட்டுள்ளனர். வணிகர்கட்கு முல்லைத்தார் உரியது. அமர் நீதியார் வணிகர். அவரைப் பற்றிச் சுந்தரர் குறிப்பிடுகையில் "அல்லி மென் முல்லையம் தார் அமர் நீதிக்கடியேன்" என்றது காண்க.

சேக்கிழார் பல்கலைக் குரிசில். இதனை அவர் இயற்றிய நூலில் பரக்கக் காணலாம். "நண்ணிய பாணியும் இயலும் தூக்குநடை முதல் கதியில் பண் அமைய எழும் ஓசை எம் மருங்கும் பரப்பினரே" என்றது இசைக்கலையினையும், "எரிவிடம் முறையே ஏறித் தலைக்கொண்ட ஏழாம் வேகம் தெரிவுற" என்று மருத்துவக் கலையினையும் '(மூர்ச்சை, கண்

செருகல், வாந்தி, கபம், உணர்ச்சியின்மை, விறைப்பு இவ் வேழு மிக்கபின் மரணமே என்பது வாகட விதி.) இதனை அறிந்தே சேக்கிழார் மேல்பாடலில், "ஆவிவிட" என்றனர். "அருக்கன் முதல்கோள் அனைத்தும் அழகிய உச்சங்களிலே பெருக்கவலியுடன் நிற்க" என்று கணித நூல் கலையினையும், "திருவடியில் திருப்பஞ்ச முத்திரையும் திகழ்ந்திலங்க" என்று ரேகை சாத்திரக் கலையினையும் (பஞ்சமுத்திரை என்பன பத்மம், சங்கம், மத்ஸயம், சக்கரம், தண்டம் எனும் பஞ்ச ரேகைகள்) பற்றிய கலைக் குறிப்புக்கள் இவர் பாடலில் காணப்படுதல் கொண்டு உணர்வோமாக. மற்றும் பல் கலை ஞானக் கருத்துக்கள் இவர் நூலில் உண்டு. இன்றேல்,

சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்
உவமைஇலாக் கலைஞானம், உணர்வரிய மெய்ஞ்ஞானம்

என்று ஞானவகைகளைக் கூற இயலுமோ?

இது குறித்தே "கலைநிரம்பத் தழைத்திடுதலால்" என்றனர். இவரது தோற்றத்தால் வம்பர் கூடிய அவைகள் அலறி வாய் அடங்கின. நெடிய வம்பரவை என்பதை நெடிய+அம்+பரவை எனவும், நெடிய+வம்பர்+அவை எனவும் பிரித்துச் சிலேடைப் பொருள் காண்க. சேக்கிழார் சாந்த வடிவினர் என்பதைக் கூறவேண்டியதில்லை. சேக்கிழார் சேவாகிய ரிஷபத்தை உரிமையாக உடையவர். உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பின்மையாலும், மற்றைய பணிகட்குப் பழுதுண்டு ஆதலாலும் இவர் எருதால் ஏராம் கலப்பை வளத்தால் உழுது என்றும் மேன்மை கொண்டவர். மேலும், சேக்கிழார் குடியில் சிறந்து விளங்கியவர். பதினாயிரம் சரும்பர் என்பது சிவனடியார் பலரைக் குறிக்கும். சிவ பெருமானுடன் இரண்டறக் கலந்தவர். அதனால் சம்புவோடு கூடலால் எனப்பட்டார்.

ஆகவே, சேக்கிழார் சந்திரனுக்கு ஒப்பாவர். இந்த ஒப்புமை நயம் செய்யுளில் இருத்தலை உய்த்து உணர்ந்து கொள்ளவும். வானம் கிழித்துச் சென்று கொடிகள் ஆடும்

என்றது உயர்வு நவிற்சி. கொடியின் உயர்வைக் கூறவருங் புலவர்கள் கொடிக்சீலை சந்திரனின் மாசினைத் துடைக்கும் என்றும் கூறுவர்.

சேக்கிழாருக்குரிய பெயர்களில் அருண்மொழி என்பதும் ஒன்று. அருண்மொழி என்ற பெயர் இராஜராஜனுக்குரிய பெயர். "அலை புரியும் புனல்பொன்னி ஆறுடைய சோழன் அருண்மொழிக்கு" என்ற திருமலைக்கல் வெட்டைக் காணவும். பெற்றோர்கள் இம்மன்னனிடத்துக் கொண்ட அன்பினால் இப்பெயரைச் சூட்டினர். சேக்கிழார் தெய்வ ஒளி பெற்ற மையின், "அருள்உருத்தேசுபொலி அருண்மொழித் தேவன்" என்றனர். இல்லை என்றால், அநபாயன் கவரி வீசி இருப்பானா? (62)

2. மேயஅம் போருகம் எலாம்குவி கரத்தினை
இராமனை அடங்க அளவா
வியன்சாலி யொடுபொலிய மகிழ்வையால் ஓர்அறவர்
விழியின்வெளி வந்தொளிருவை
பாயபர மன்சடா டவிஅமரும் வரநதிப்
பந்தமுனை நந்தமர்கரப்
பண்ணவனும் மிகையெனப் பல்உயிரும் ஓம்பிடப்
படுகருவி யாய்நின்றனை
நேயமிகும் இவையாதி யால்எங்கள் பெருமானை
நிகரா திராய்அடுக்கு
நிலையேழு கொண்டமையின் உலகேழு மேஎன
நிரம்புபா வலர்புகழுதற்
காயமணி மாளிகைக் குன்றைநகர் ஆளியுடன்
அம்புலீ ஆடவாவே
அருள்உருத் தேசுபொலி அருண்மொழித் தேவனுடன்
அம்புலீ ஆடவாவே

[அ. சொ.] மேய-தடாகங்களில் பொருந்திய, அம் போருகம்-தாமரை மலர்கள், இராமனை-இரவுக்கரசனைப்

இருக்கிறாய், அடங்க-எல்லாவற்றோடும், அளவா-கலந்து, வியன்-பரந்தவொளியுடைய, சாலி-நட்சத்திரங்கள், பொலிய-விளங்க, ஓர்-ஒப்பற்ற, அறவர்-துறவறம்பூண்ட அத்திரிமா முனிவர். இவர் சந்திரன் பிதா என்பது புராண மரபு, பரமன்-மேலான இறைவனும் சிவன், சடாடவி-சடைக் காட்டில், சடை அடவி, வரநதி-சிறந்த நதியாகிய கங்கை, முளை-தோன்றுகின்ற, நந்து-பாஞ்சசன்யமாகிய சங்கு, கரம்-கையுடைய, பண்ணவன்-தேவனாகிய திருமால், நிகராது இராய்-ஒவ்வாமல் இருக்கமாட்டாய், பாவலர்-பாட்டில் வல்ல புலவர், நேயம்-பண்பு.

**விளக்கம்:** இப்பாடலும் சேக்கிழாருக்கும் ஒப்புவமை காட்டி நிற்கிறது. சந்திரன் தோன்றத் தாமரைகள் குவிந்து விடும். அத்தகைய ஒளிக்கதிர்களைப் பெற்றவன் சந்திரன். சாலி என்பதும் அருந்ததி நட்சத்திரம் என்றாலும், ஈண்டுப் பொதுவாக நட்சத்திரங்களைச் சுட்டி அமைந்துள்ளது. ஆகவே, நட்சத்திரங்களுடன் பொலிபவன் ஆயினன். சந்திரன் அத்திரிமாமுனிவர் விழியின்நின்று வந்தவன் என்பது புராணம். இறைவன் சடாமுடியில் இருக்கும் கங்கையுடன் சந்திரனுக்கும் இருக்கும் சம்பந்தம் உடையவன். அந்த நெருக்கத்தை "சந்திரனை மாகங்கை மோட்" என்று தேவாரம் உணர்த்தும் ஆற்றால் உணரலாம்.

சந்திரன் அத்திரி முனிவர் விழியில் தோன்றிய வரலாறு பின் வருவது:

அத்திரி முனிவர் ஓர் உபப்பிரமர். இவர் இந்திரிய நிக்கிரகம் செய்து, மூவாயிர வருடம் தவம் புரிந்தார். அது போது அவருடைய கண்களில் இருந்து பேரொளி தோன்றிப் பத்துத் திசைகளிலும் ஒளி வீசிக்கொண்டு அக் கண்கள் நீரையும் பெருக்கிக் கொண்டிருந்தன. அந்தக் கருப்பத்தைத் திக்குத் தேவியர் பதின்மரும் தாங்கத் தொடங்கினர். ஆனால், அவர்களால் பொறுக்க முடியவில்லை. சந்திர வடிவான அந்தக் கருப்பத்துடன் பூமியில் வீழ்ந்தனர். பிரமன் அந்தச் சந்திரனை வேதமயமான தேரில் ஏற்றிக்

கொண்டு செல்ல, ஏழு ரிஷிகள் வேத மொழிகளால் துதித்தனர். அத்துதியின் விசேடத்தால் அச் சந்திரன் மிக்க ஒளி பெற்றனன். உலகுக்கு ஒளிதரும் பேறும் பெற்றனன்.

காக்கும் தெய்வம் திருமால். சந்திரனும் பொருள்களின் விளைச்சலுக்குப் பால் சுரப்பித்து உலக உயிர்களைக் காப்பவன் ஆவன். ஆகவே, திருமால் காக்கவேண்டிய நியதி இல்லை எனச் சந்திரனை உயர்த்திக் கூறினர். திருமால் கையில் சங்கு உண்டு. "செங்கண்மால் தடக்கையில் சங்கம்" என்றனர் சிவப்பிரகாசர்.

சேக்கிழார் பெருமானும் அன்பர்களது கைகளாகிய தாமரைகள் குவிய விளங்குபவர். வீடு முழுதும் நெல் (சாலி) நிரம்பக்கொண்டு மகிழ்பவர். புண்ணியவான் திருக் கண்முன் காட்சி தந்து பொலிபவர். சிவனார் கண் போல் பொலிபவர். வேளாளர்கள் கங்கா நதி சம்பந்தமுடைய வர்கள். அவர்களை கங்கை புத்திரக்கள் என்று கூறுதல் உண்டு. கரிகாலன் இவர்களைக் கங்கைக் கரையினின்று தென் னாட்டில் குடி ஏற்றினன் என்று கூறும் வரலாறும் உண்டு. அத்தகைய வேளாள குலத்தினைச் சார்ந்தவர் சேக்கிழார் ஆதலின், வரநதிப் பந்தம் என்றனர். வேளாளர்கள் உல குயிர்களை உழவு வளத்தால் காப்பவர். அதனால் திருமால் உயிர்களைக் காத்தல் மிகை ஆயிற்று. இக்காப்புத் தொழில் வேளாளராம் சேக்கிழார்க்கும் உண்டு. இன்னோரன்ன காரணங்களால் சந்திரனும் சேக்கிழாரும் ஒருவரை ஒருவர் ஒப்பாவர். எனவே, புலவர் சந்திரனைத் தம் பாட்டுடைத் தலைவராம் குழந்தையுடன் ஆட அழைக்கின்றார். இச் செய்யுளும் சிலேடை அணி. எழுநிலை மாடங்கள் குன்றத் தூரில் உள என்பது உயர்வு நவிற்சி அணி. ஈற்றடிகளில் குன்றத்தூர் மாடமாளிகைகளைப் புலவர் புகழ்ந்துள்ளனர்.

இப் பாடலும் சாம உபாயத்தால் சந்திரனை அழைத்த லாகும். சாம உபாயமாவது சமாதான முறையில் அழைத்தலாம். (63)

3. இரவோன் எனத்திரிவை நீமகரப் பிரபுஎன
எங்கள்ஐ யன்பொலிகுவன்
இகழ்ச்சிசால் கள்வனை உவப்பைநீ உவவாமல்
இவன்வெறுப் பான்எஞான்றும்
உரவோன்எம் வள்ளலே நல்லோன் எடுத்தினி
உரைப்பதெவன் நீஅல்லோனே
உயர்விஞல் எமன்வான வன்காண் உரைப்பார்
உனக்கும்ஒரு தானவப்பேர்
பரவோன்அ லாதவன் எனல்குறித் தல்லவோ
பாதிகொண் டான்நின்னைஎம்
பண்ணவனை முழுமையும் கொண்டனன் காண்மணிப்
பணியெனத் தோள்புனைந்த
அரவோன் உணர்ந்திடுதி குன்றைநகர் ஆளியுடன்
அம்புலீ ஆடவாவே
அருளுருத் தேசுபொலி அருள்மொழித் தேவனுடன்
அம்புலீ ஆடவாவே

*(அ. சொ) இரவோன்-இரவில் தோன்றுபவன், யாசகம் புரிபவன், ஐயன் -தலைவராம் சேக்கிழார், பொலிகுவன்-விளங்குவர், சால்-மிகுந்த, கள்வனை - நண்டை, திருடனை, கடகராசியை, உவப்பை - விரும்புவாய், உவவாமல் - விரும்பாமல், எஞான்றும் - எக்காலத்தும், உரவோன் - அறிவு வன்மை மிக்கவன், வள்ளல் - வள்ளன்மையில் சிறந்த சேக்கிழார், அல்லோனே-நல்லவன் அல்லாதவன், ஞானி அல்லாதவன், இரவில் தோன்றுபவன், எமன் - எம்தலைவர் (சேக்கிழார்) வானவன்-சிறந்தவர், தேவர், மேலானவர் தானவப்பேர்-இராட்சதன் என்ற பெயர், (சந்திரனுக்குத் தானவன் என்ற பெயர் உண்டு) பரவோன் அலாதவன்-போற்றுதற்கு உரியவன் அல்லாதவன், பரவோன் - மேலாயவர், பண்ணவனை-தேவனாகிய சேக்கிழாரை, மணிப் பணி-இரத்தினாபரணம், அரவோன் - பாம்பையணிந்தவனும் சிவபெருமான்,*

**விளக்கம்;** சந்திரன் இரவில் தோன்றுபவன்; யாசிப் பவனும் ஆவான். ஆதலின் இரவோன் எனப்படுபவன். சேக்கிழார் இல்லை என்னாத வேளாளர்தம் பெருங்குலத்தில் உதித்தவர். என்றும் காப்பவன் வேளாளன். ஆகவே பிரபு எனப்பட்டனர். இதுமட்டும் அன்று. அனபாயன் கவரிவீசப் பெறும் மாண்பும் மன்னர் போல யானைமீது இவர்ந்து வந்த சிறப்பும், சிவ காணங்களாகத் தோன்றும் தில்லை மூவாயிரவர் இவரது பவ்னி பின் சென்ற பெருமையும் கூத்தப்பெருமான் கொடுத்த முதலைப்பெற்ற மூதறிஞரும், மேலும் மடாதிபதிகள், புலவர்கள். நாவீறு படைத் தவர்கள் கைஎடுத்து வணங்கி ஏவல்வழி நிற்கப்பெறும் பேறுடையரும் ஆதலாலும் பிரபு எனப்பட்டனர் எண்க. கள்வன் என்பான் திருடன். அவன் இரவில்தான் வெளி வருவான். அவன் சந்திரன் வருகையினை உவக்கின்றனன். அவன் வர இவன் துணையாதலின், உவப்பவன் என்றனர். அதனோடு கள்வனும் நண்டு ராசியிலும் சந்திரன் சஞ்சரிப்பவன். சேக்கிழார் கள்வர்களை வெறுப்பவர். சேக்கிழார்க்குக் கள்வர்களாகச் சமண பௌத்தர்களைக் கொள்ளலாம். அவர்களை இவர் வெறுத்ததை இவர் நூலில் காணலாம். சேக்கிழார் உரவோர் ஆவர். நண்டு முதலிய புலாலை வெறுப்பவர். உரம் ஈண்டு உண்மை ஞான மாகும். இச்சொல்லுக்கு ஞானம் மட்டும் அன்றி ஊக்கம், திண்மை, வெற்றி, உண்மை, பாதுகாப்பு, சிறப்பு முதலிய பொருள்களும் உண்டு. இவரது ஞான அறிவிற்குப் பல எடுத்துக் காட்டுக்கள் உண்டு.

திருவள்ளுவர் இல்லறத்தானுக்குரிய பண்புகள் பல வற்றில்,

> தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்
> ஐம்புலத்தா றோம்பல் தலை. [என்றுங்கு

என்றனர். இக்குறட்பாவின் கருத்தை அப்படியே சேக் கிழார் தமது நூலில்,

அரசுகொள் கடன்கள் ஆற்றி மிகுதிகொண் டறங்கள் பேணிப்
பரவரும் கடவுள் போற்றிச் குரவரும் விருந்தும் பண்பின்
விரவிய கிளையும் தாங்கி விளங்கியகுடிகள் ஓங்கி
வரைபுரை மாடம் நீடி மலர்ந்துள பதிகள் எங்கும்.

என்று பாடியுள்ளனர். இதில் சேக்கிழாரின் நுண்ணறிவின் உரம் தோன்றுதல் காண்க. அதாவது தென்புலத்தார் என்பதற்குக் குரவர் என்று பொருள் கண்டதாகும். இதுவே உண்மைப் பொருள். பரிமேலழகர் கொண்ட பொருள் அத்துணைப் பொருத்தம் இல்லை.

சுந்தரருக்குப் பெற்றோர் இட்ட பெயர் நம்பி ஆரூரர் என்று கூறவந்த இடத்தில், "தவத்தினால் மிக்கோர் போற்றும் நம்பியா ரூரர்என்றே நாமமும் சாத்தி" என்றனர். இதனை மறவாது இதற்கு மேற்கோள் காட்டுவார் போல, பெருமிழலைக்குறும்பர் நாயனாரின் இயல்பைக் கூறும்போது,

நாளும் நம்பி ஆரூரர் நாமம் நவின்ற நலத்தாலே
ஆளும் படியால் அணிமாதி சித்திஆன அணைந்து

என்றனர்.

இவ்வாறு சேக்கிழார் நினைவாற்றலோடு பாடியது போலவே தாமும் பாடவேண்டும் என்ற கருத்தில் கம்பரும் ஆரண்ய காண்டத்தில் சீதையை இராவணன் "இதயமாம் சிறையில் வைத்தான்" என்று கூறி, யுத்த காண்டத்தில் மண்டோதரி புலம்பலில் சீதையை அச் சிறையில் நின்று விடுதலை புரிவார்போல இராவணன் மார்பைப் பல துளைகளாகத் துளைத்தமைக்குக் காரணம் காட்ட,

"கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கும் எனக்கருதி உள் புகுந்து
தடவியதோ ஒருவன் வாளி"

என்று பாடினர்.

சண்டேசுரர் தந்தையான எச்சதத்தன் இறைவனது முழுக்குக்கென வைக்கப்பட்ட பால் குடங்களைத் தன் "**காலால்** இடறிச் சிந்தினன்" இதனை உணர்ந்த சண்டேசுரர் **இரு கால்களையும்** சிதைத்தார் என்று சேக்கிழார் பாடுகிறார். "சிறுவர் இறையில் தீயோனைத் தந்தை எனவே அறிந்து அவர் தாள்கள் சிந்தும் தகுதியினால் ** எறிந்தார்" என்று பாடினர். ஒரு காலையே வெட்ட வேண்டி இருக்க, இரு கால்களையும் வெட்டலாமா என்று ஒரு சிலர் வினவலாம் அன்றோ? அவர்கள் உய்த்து உணரும் வகையில் பால் குடத்தை இடறிச் சிந்துதற்கு மற்றொரு கால் நிலத்தில் ஊன்றி இருக்கத் துணை செய்தமையின், அதுவும் குற்ற முடையது என்ற கருத்தில் இரு தாள்களும் தண்டித்தற் குரியன என்ற கருத்தில் தாள்கள் சிந்தும் தகுதியினால் என்றனர்.

நெடுமாறன், "சமணர்கள் சம்பந்தருடன் அனல்வாதம், புனல் வாதம் புரிந்து தோற்றனர். ஆகவே அவர்களைக் கழுவில் ஏற்றுக" என்று ஆணைப் பிறப்பித்தனன். இப்படிப் பிறப்பித்தபோது சம்பந்தர் தடுக்காது வாளா இருந்தனரே! அது அவர் பெருமைக்கு அடாது எனத் திருஞான சம்பந்தர்க்குக் குற்றம் கூறக் கூடும் என்று தம் நுண் ணறிவால் உணர்ந்த சேக்கிழார் அத்தகையவர்கட்கு விடை கூறுவார்போல்,

புகலியில் வந்த ஞானப் புங்கவர் அதனைக் கேட்டும்
இகலிலர் எனினும் சைவர் இருந்துவாழ் மடத்தில் தீங்கு
தகவிலாச் சமணர் செய்த தன்மையால் சாலும் என்றே
மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த வேலை

என்று பாடி அமைத்தனர்.

இங்ஙனம் எல்லாம் பாடுதற்கு உண்மை ஞான அறிவு வன்மை இன்றெனில் இயலுமோ? இதனால்தான் பிள்ளை அவர்கள், "எஞ்ஞான்றும் உரவோன் எம்வள்ளல்" என்றனர்.

கற்பகப்பூந் தளிர்அடிபோய்க் காமருசா ரிகைசெய்ய
உற்பலமென் முகிழ்விரல்வட் டணையோடும் கைப்பெயரப்
பொற்புறுமக் கையின்வழிப் பொருகயல்கண் புடைபெயர
அற்புதப்பொற் கொடிதுடங்கி ஆடுவபோல் ஆடுவார்

என்ற இவரது நடனக் கலைஞானத்தைக் காண்க. இவரது ஊக்கத்தினை இப்பெரிய புராணத்தினை ஓராண்டில் முடித்த தனுல் அறியலாம். இவரது திண்மையினை அரசனிடம் "சிந்தாமணிக் கதை வேண்டா, சிவனடியார் கதைகளைக் கேட்க" என்று கூறியதனுல் தெளியலாம், அப்படிக் கூறி வெற்றி கண்டதையும் அறியலாம். சேக்கிழார்க்கு உள்ள சிறப்பு எப்புலவர்க்கும் இல்லை. இவர் தெய்வப் புலவர் என்ற பெயரினைப் பெற்றவர். இப்பெயருடைய மற்ருெருவர் திருவள்ளுவர். இறைவன் எடுத்துக் கொடுத்த தொடர் பெற்றுப் பாடிய சிறப்பும் பெற்றவர். இவர்க்கு முன் இச்சிறப்புப் பெற்றவர் சுந்தரர். ஏனைய புலவர்களின் சிறப்பினைத் தனித்தனிப் பாடல்களான தனியன் பாக்களால் அறியலாம். இவரது சிறப்பினை விளக்கும் தனிநூல் பெற்றவர் இவரே ஆவார். அதுவே இப்பிள்ளைத் தமிழ். தனிப் புராணமும் பெற்றவர் இவரே. அப்புராணமும் சித்தாந்த செம்மலாம், சித்தாந்த நூல் பல செய்த ஸ்ரீ உமாபதி சிவத்தால் பாடப்பட்டது. புலவரின் சிறப்பும் நூற் சிறப்பும் கூறப்பட்ட தனிநூல் பெற்றவர் திருவள்ளுவரை அன்றி வேறு யாரையும் கூற இயலாது. அதுவே திருவள்ளுவ மாலை. சைவ நூல் புலவர்கள் பெரிதும் சேக்கிழார்க்கும் வணக்கப் பாடலைக் கூறி வணங்குவர். இச்சிறப்புப் புலவர்களுள் யார்க்கு உண்டு? அருள்நாத ஒலியில் எழுந்த மகாமந்திரங்களாக விளங்கும் திருமுறைகளோடு இவரது நூலும் திருமுறைகளுள் ஒன்றுக விளங்குகிறது என்ருல், இதனினும் வேறு சிறப்புயாது வேண்டும்? ஏழு திருமுறைகட்குப் பின் ஒவ்வொரு திருமுறைகளாகப் பதினென்ருகிப் பின் பன்னிரண்டாகத் திருத்தொண்டர் புராணம் சேர்க்கப்பட்டபின், வேறு நூல்கள் திருமுறை

களோடு சேர்க்கப்படாமையும் இவரது சிறப்புக்குச் சிறந்த எடுத்துக் காட்டன்றோ?

வள்ளுவர் என்ற பெயர்க்கு ஆராய்ச்சியாளர், திருக்குறள் செல்வத்தைப் பொய்யாமொழியார் தமிழ் மக்களுக்கு அளித்த பெருமைக்குரிய வள்ளல் ஆதலின், வள்ளுவர் எனப் பட்டார் என்று காரணம் கூறுவர். அதுபோல நமது சேக்கிழார் பெருமானுர் பெரிய புராணமாம் பெருஞ் செல்வத்தைச் சிறப்பாகச் சைவ மக்களுக்கும் பொதுவாகத் தமிழ் மக்களுக்கும் கொடுத்த பெருவள்ளல் ஆதலின் வள்ளல் எனப்பட்டார்.

சந்திரன் சிற்சில சமயங்களில் நல்லவன் என்றபெயரை எடுப்பதில்லை. அவனைப் பழித்துப் பேசிய இடங்கள் உண்டு.

ஊரைச் சுடுமோ உலகந் தனைச்சுடுமோ
ஆரைச் சுடுமோ அறியேனே—நேரே
பொருப்புவட்ட மானமுலைப் பூவையரே இந்த
நெருப்புவட்ட மான நிலா

என்று தனிப்பாடலும்.

நீங்கா மாயை யவர்தமக்கு
நிறமே தோற்றுப் புறமேபோய்
ஏங்காக் கிடக்கும் எறிகடற்கும்
எனக்கும் கொடியை ஆனுயே
ஓங்கா நின்ற இருளாய்வந்
துலகை விழுங்கி மேல்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பின்
இடையே எழுந்த வெண்ணெருப்பே

என்று கம்பராமாயணமும் சந்திரனை நல்லோன் அல்லன் என்று கூறுவதை அறிக. நமது சேக்கிழார் என்றும் நல்லோரே.

வான் ஆகாயமாகும். அஃது உயர உள்ளது. வானவர் ஆவார் உயர்ந்தவர். அவர்கள் தேவர்கள். அம்முறையில் சேக்கிழார் உயர்ந்தவர், தேவரும் ஆவர். ஆகவே, ஆவர்

வானவர் எனப்பட்டார். சேக்கிழார் தேவர்களுள் ஒருவராகக் கோயில்களில் பூசிக்கப்பட்டு வருபவர். சந்திரன் தேவர்களுள் ஒருவனே ஆயினும், ராட்சதன் எனப் பொருள் படும் தானவன் என்ற பெயரும்உடையன். ஆதலின், சிறுமை யுற்றவன் ஆயினன். சேக்கிழாரை எல்லோரும் பரவினர். பரவுகின்றனர். பரவப்படுபவரும் ஆவார். ஆகவே, அவர் பரவோன் ஆயினர். சந்திரன் அத்தகையன் அல்லன். பரவுவோர் இகழவும் செய்வர். ஆகவே, பரவுவோன் அலாதவன் எனப்பட்டான்.

இறைவன் சந்திரனை முழுமையும் கொள்ளாது, பாதி கொண்டமைக்குக் காரணம், பரவோன் அல்லன் என்பதனுல் என்றது தற்குறிப்பு ஏற்ற அணியாம். இறைவன் சேக்கிழாரை முற்றிலும் ஏற்றனர் என்பது, முதல் தந்து தம் அடியார் வரலாற்றைப் பாடச் செய்து, தம்அடி சேர்த்துப் பேர்இன்பம் துய்க்கச் செய்ததாகும்,

இறைவன் பாம்பினையே ரத்தினுபரணம் என்று கொண்டனர். இதற்குரிய காரணத்தை ஒரு புலவர் வெகு அழகுற நகைச் சுவை தோன்ற.

ஒட்டாக ஒட்டியும் கால்பொன்னில்
மாப்பொன் உபாயமதாத்
தெட்டா திரான்பணி செய்யா
திரான்செம்பொன் மேருவினைக்
கட்டாகக் கட்டிக்கடுகள
வாகக் காட்டவல்ல
தட்டானுக் கஞ்சிஅல் லோஅணிந்
தான்சிவன் சர்ப்பத்தையே

என்று பாடியுள்ளனர்.

இம் மூன்ருவது பாடல் சேக்கிழார்க்கும் சந்திரனுக்கும் உள்ள வேற்றுமையைக் காட்டும் முறையில் அமைந்துள்ளது. இது பேத உபாயம் அமையப்பாடப்பட்டுள்ளது. பேத உபாயமாவது எதிரியின் உள்ளத்தைக் குழப்பித் தன் வசமாக்கச் செய்யும் உபாயம் ஆகும். (64)

4. சாறுசால் வீதித் திருத்தில்லை அம்பலம்
தன்னில்எஞ் ஞான்றும்நின்று
தாண்டவம் நவிற்றிஉல உய்யச் செயும்பரம
சற்குரவன் இனிதுசெய்யும்
பேறுமே வியஅனுக் கிரகம்முழு தும்பெற்ற
பெரியோன் இவற்குவானோர்
பேணுகுர வன்பாங்கர் நிக்கிரக மேபெற்ற
பேதைநீ மாற்றுயர்ந்து
வீறுசெம் பொன்னோ டிரும்பொத்த போதினும்
மேஒப் புருமைமண்ணும்
விண்ணும்உண ரும்கருணை நினைஅழைத் தஃதிந்த
விதம்ஓர்ந்து கொடியோடும்வான்
ஆறுதோய் சூளிகைக் குன்றைநகர் ஆளியுடன்
அம்புலீ ஆடவாவே
அருளுருத் தேசுபொலி அருள்மொழித் தேவனுடன்
அம்புலீ ஆடவாவே

*[அ. சொ.] சாறு-திருவிழாக்கள், சால்-மிகுந்த, திரு-சிறந்த, தில்லை-சிதம்பரத்தில் உள்ள, அம்பலம்-பொற் சபை, எஞ்ஞான்றும்-எக்காலத்தும், தாண்டவம்-நடனம், நவிற்றி-செய்து, உய்ய-பிழைக்க, பரமசற்குரவன்-மேலான ஞானாசாரியனாகிய இறைவன். வானோர்-தேவர், பேணு-போற்றும், குரவன் பாங்கர்-பெரியோனாகிய பிரகஸ்பதி யிடத்தில், அநுக்கிரகம்-அருளிப்பாடு, நிக்கிரகம்-சாபம், கோபத்தால் தள்ளப்படுதல். வீறு-சிறந்த, மண்ணும்-இம்மண்ணுலகமும், விண்ணும் - மேலுலகமும், ஓர்ந்து-ஆராய்ந்து அறிந்து, இந்த விதம்-இந்த விடயத்தை, வான் ஆறு-ஆகாயகங்கை, சூளிகை-நிலாமுற்றம், அழைத்தஃது அழைத்தது. இச்சொல்லின் இடையில் ஆய்த எழுத்துத் தோன்றியது விரித்தல் விகாரம் ஆகும்.*

**விளக்கம்;** இப்பாடலும் சேக்கிழாருக்கும் சந்திர னுக்கும் உள்ள வேற்றுமையினை உணர்த்துகிறது. தில்லைக்

குரிய பல சிறப்புக்களில் ஒன்று திருவிழாக்கள் அடிக்கடி நிகழ்வதாகும். ஆகச் "சாறுசால்வீதி" என்றனர். இறைவனது நடனத்திற்கு ஓய்வில்லை. அவன் நடனம் செய்தலை நிறுத்தின், உலகம் அசைவின்றி நின்றிடும். உலக அசைவு நின்றால் உயிர்களின் அசைவும் இல்லை.

எங்கும் திருமேனி எங்கும் சிவசத்தி
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்
எங்கும் சிவமாம் இருத்தலால் எங்கெங்கும்
தங்கும் சிவனருள் தன்விளை யாட்டதோ

தேவர் சுரர்நரர் சித்தர்வித் தியாதரர்
மூவர்கள் ஆதியில் முப்பத்து மூவர்கள்
தாபதம் சத்தர் சமயம் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறை ஆடவே

படங்கொடு நின்றஇப் பல்லுயிர்க் கெல்லாம்
அடங்கலும் தாமாய்நின் றாடுகின் றாரே

என்று திருமந்திரம் இறைநடம், அற்புத நடனமாகி யாவும் ஆட ஆடும் நிலையினை அறிவிக்கிறது.

சேக்கிழார் பெருமானும் "ஆதியும் முடிவும் இல்லா அற்புதத் தனிக் கூத்து" என்றனர். இடைவிடாது இறைவன் நடம் புரிகின்றனர் என்ற கருத்தில்தான் மணிமொழியாரும், "நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே" என்றனர். இந்த உண்மையினை மேற்கு நாட்டவரும், இக்கால நவின ஆங்கிலம் படித்த இந்தியரும் நமது இறைவனால்தான் இவ்வுலகில் ஒவ்வோர் அணுவும் அசைகின்றது என்று ஆணித்தரமாக எழுதியுள்ளனர்.

"The Universe is consisted of atoms and all the atoms move in a rhythimic dances"—Prof Hakkal.

"Lord Siva dancing in the heart of the universe and in my own heart —Roman Rolle.

" The Sports in the world. He sports in the Soul." The whole universe is bright with his smile and alive with his joyous movements.

"His dancing is sympolical perpetwal and gracious action through out the universe and in loving heart"—
Dr. G. U. Pope.

" It is the image of his rhythimic play as the sourse of all movements with in the cosmos, Universe Love and Order."

"The purpose of the dance in the release the countless souls of men from the snare of illusion."

"Chidambaram in the Centre of the Universe i. e. within the heart." Dr. A K. Kumaraswamy.

இவ்வாங்கிலப் பகுதிகளின் திரண்ட பொருள், "உலகம் பல அணுக்களால் நிறைந்தது. அவ்வணுக்கள் ஓர் ஒழுங் கான நடனத்தால் இயங்கிக் கொண்டிருக்கின்றன. சிவ பெருமான் உலக நடுவில் நடனம் இயற்றிக்கொண்டிருக் கிறுன். அத்துடன் என் உள்ளத்திலும் நடனம் புரிகின்ருன். அவன் உலகில் நடனம் புருகிருன். ஆன்மாவின் உள்ளும் தாண்டவம் செய்கின்றனன்."

"நடராசப் பெருமானது புன்னகையால் எல்லா உலகங் களும் ஒளிவிட்டு விளங்குகின்றன. அவனது இன்ப நடனத் தால் நிலைத்துள்ளன."

"தாண்டவமூர்த்தியின் தாண்டவம் ஐம்பெருந் தொழில்களைக் குறிக்குங்குறியாகவும், இடைவிடாததாகவும் கருணைக்குக் காரணமாகவும் அமைந்த அசைவு. இவ்வசைவு உலக முற்றிலும், அன்பார்ந்த உள்ளத்திலும் அமைந்து நிகழ்கிறது.

"நடராச வடிவமே தாள சந்தம் நிறைந்த நடன வடிவ மாகும். அஃது ஒழுங்கு முறையில், உலகங்களின் எல்லா அசைவுகட்கும் காரணமானது."

"இந்நடனத்தினை நடிப்பதன் அடிப்படைக் காரணம், எல்லை அற்ற உயிர்கள் மாயவலையில் சிக்குண்டிருத்தலினின்று மீட்பதற்காகும்" என்பதாகும்.

இவ்வுண்மைகளை நம் முன்னோர்கள் நன்கு உணர்ந்திருந் தனர். உமாபதியார் இவை அனைத்தையும் உள்ளடக்கி "வாராரும் கடல்புடை சூழ் வையமெலாம் ஈடேற ஏராரும் மணிமன்றுள் எடுத்த திருவடி போற்றி" என்றனர்.

இந்தக் கருத்துக்களைக் கொண்டுதான் திரு. பிள்ளை அவர்கள், "என்ஞான்றும் நின்று தாண்டவம் நவிற்றி உலகுய்யச் செய்யும் பரம சற்குரவன்" என்றனர்.

இறைவன் பரம சற்குரவனாகித் தானே வந்து ஜீவான் மாக்களை நல்வழிப்படுத்தி அருளுதலை நமது சித்தாந்த நூல்கள் நன்கு உணர்த்துகின்றன.

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனை
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே"

என்று சிவஞானபோதமும்,

மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்துஅவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ என்றவரில் பிரித்துப்
பெருமையொடும் தானாக்கிப் பேணு மாபோல்
துன்னியஐம் புலவேடர் சுழலில் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறுதொல் உயிரை
மன்னும்அருட் குருவாகி வந்தவரின் நீக்கி
மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்

என்று சிவஞான சித்தியாரும் கூறுவது கொண்டு இறைவன் சற்குருவாய் வந்து அருள் செய்வதைக் காண்க.

இதற்கு எடுத்துக் காட்டாக மணிமொழியாரும் இறை வர் குருமூர்த்தமாகவந்து பேரருள் தமக்குப் புரிந்ததை,

அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி அருளிய பெருமையும்

என்றும்,

நானேயோ தவம்செய்தேன்
சிவாயநம எனப்பெற்றேன்
தேனாய்இன் அமுதமுமாய்த்
தித்திக்கும் சிவபெருமான்

தானேவந் தெனதுள்ளம்
புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனுரும் உயிர்வாழ்க்கை
ஒறுத்தன்றே வெறுத்திடவே

என்றும் மொழிந்துள்ளமை காண்க.

ஆகவே, இறைவன் "பாமசற் குரு" எனப்பட்டான். இவனே எல்லாச் சந்தானங் கட்கும் முதல் குரவன் ஆவான். இவனது அரும்பேற்றையும் அனுக்கிரகத்தையும் சேக்கிழார் பெரிதும் பெற்றவர். இதனால்தான் "பேறு மேவிய அனுக் கிரகமும் பெற்ற பெரியோன்" என்றனர்.

சேக்கிழார் இறைவனது அருளிப் பாட்டைப் பெற்றவர் என்பது பலபடி முன்னமே கூறப்பட்டது:

பிரகஸ்பதி, வியாழ பகவான். அவர் தேவர்கட்குக் குரு. அதனால் தேவ குரு என்றும் கூறப்படுபவர். அவரைத் தேவர்கள் பேணிப் போற்றுவர். பரஞ்சோதியார் இவரது பெருமையினைக் கூறும்போதும் தேவர்கள் குரு என்பதையும் "பையரவு அணிந்த வேணிப் பகவனே அனைய தங்கள் ஐயனும் வியாழப்புத்தேள்" என்றனர். தங்கள் என்றது தேவர்களை ஆகும். சந்திரன் தேவ குருவின் பத்தினியாகிய தாரையைப் புணர்ந்து புதன் என்பவனைப் பிள்ளையாகப் பெற்றான். இக் காரணத்தால் குருவின் நிக்கிரகத்தைப் பெற்றவனானான். அவரால் வெறுக்கவும் பட்டவன் சந்திரன்.

பொன் செம்பொன் என்றும், இரும்பு கரும் பொன் என்றும் கூறப்படுதல் மரபு. இதனால் பொன் என்ற பெயர் ஒற்றுமையால் இரண்டும் ஒன்றுபோல் காணப்படினும், செம்பொன்னுக்குள்ள சிறப்பே பெரிது. இந்த உண்மையினை விண் மண் ஆகிய இரு உலகங்களும் நன்கு உணரும். வீறு என்பதன் பொருள் பிற ஒன்றுக்கும் இல்லாத தனிச் சிறப்பாகும். அதுபற்றியே இது பொன்னுக்கு அடையாக நிற்கிறது.

*சேக்கிழார்க்கு ஒரு புடை சந்திரன் ஒப்பாதல் இரும்பும் பொன் என்னும் பெயர் அளவில் பொன்னுடன் ஒப்புமையாதல் போன்றது. அங்ஙனம் இருந்தும் தமது கருணைப் பண்பால் சந்திரனை அழைத்தது எனச் சேக்கிழாரின் அருள் இரக்கத்தினை ஆசிரியர் போற்றினர். கொடி வான் என்றது குன்றை நகரின் மாளிகையின் உயர்ச்சியைக் குறித்த வாறும். அது போலவே குன்றை நகர் மாளிகையின் நிலா முற்றம் ஆகாய கங்கை தோயும் என்றது அதன் உயர்ச்சியினை உயர்வு நவிற்சி அணியின்பால் வைத்துப் பாடியதே அன்றி வேறன்று. இதுவும் பேத உபாயம் தோன்றப் பாடப்பட்டது.* (65)

5. எம்மைஇனி தாள்பவன் செம்மைமதி யவன்நீ
இயற்கையே வெண்மைமதியோன்
எற்றைக்கும் இகுதண்மை யுடையரோ டுறவுகொளும்
இயல்பினல் எங்கள்ஐயன்
வெம்மையுடை யவர்களொடு மதிதொறும் மதிதொறும்
விராய்உறவு கொள்ளுவோன்நீ
வியக்கும்ஒரு தன்மையோன் எங்கள்கிரு பாமூர்த்தி
மெய்ம்மைஒரு கால்வளருவாய்
மும்மையுல கறியஒரு கால்தேய்கு வாய்இவை
முயங்காதொர் கால்ஒழிகுவாய்
மொழியும்நீ இவைஓர்ந்தும் ஆட்வா என்றது
முழுக்கருணை காண்எஞ்ஞான்றும்
அம்மைஅனை யார்மருவு குன்றைநகர் ஆளியுடன்
அம்புலீ ஆட்வாவே
அருளுருத் தேசுபொலி அருள்மொழித் தேவனுடன்
அம்புலீ ஆட்வாவே

*[அ. சொ.] செம்மை-செம்மையான, மதியவன்-அறிவுடையவன், அதாவது செம்பொருள் காணும் அறிஞர், வெண்மை மதியோன்-வெள்ளிய சந்திரன், வெள்ளறிவுடையவன். அறிவீனன் என்பது கருத்து. எற்றைக்கும்-எக்காலத்*

தும், தண்மை-குளிர்ந்த அருட்பண்பு, இயல்பினால்-தன்மை யால், வெம்மையுடையவர்கள்-பன்னிரண்டு சூரியர்கள், மதிதொறும்-மாதந்தோறும், விராய்-கலந்து, ஒருகால் - ஒரு பட்சத்தில், மும்மை உலகு-சுவர்க்க, மத்திமம் பாதாள மாகிய மூன்று உலகங்கள், இவை-இவ்வாறான தேய்தலும், வளர்தலும், முயங்காது-சேராமல்படி, ஓர்ந்தும்-அறிந்தும், எஞ்ஞான்றும் - எக்காலத்தும், அம்மை - தாய், அனையார்- போன்றவர், மருவு-சேரும், அ+மை எனப்பிரித்து அந்த மேகம் போன்ற கொடையுடையவர் எனினும் ஆம்.

**விளக்கம்:** இப் பாடலும் சேக்கிழார்க்கும் சந்திர னுக்கும் உள்ள வேற்றுமையினைக் கூறுகிறது. சேக்கிழார் அன்பர்களை என்றும் அடிமை கொண்டு அருள்பவர் ஆதலின் எம்மை இனிது ஆள்பவன் என்றனர். சேக்கிழாரது அறிவு செம்பொருள் காணும் அறிவு. செம்பொருளாவது இறைவன். இதனைச் "சிவன் எனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி அம்மான்" என்னும் அப்பர் அருள் மொழியால் தெளியலாம். திருவள்ளுவரும் இத்தகையவரை "செம் பொருள் கண்டார்" என்றே குறிப்பிட்டுள்ளனர். சந்திரன் வெண்மை மதியோன். அதாவது வெள்ளிய நிறமுடையன். இங்குக் கருதிய பொருள் பேதமையான அறிவுடையவன் என்பதாம். இப்பொருட்டாதலைத் திருவள்ளுவர் "வெண்மை எனப்படுவது யாதெனில்" என்ற தொடரில் குறிப்பிட் டுள்ளதைக் காணவும். பறிமேலழகர் வெண்மை என்னும் சொல்லுக்கு "அறிவு முதிராமை" என்று விளக்கம் தந்ததைக் காண்க. கம்பர் இப் பொருளில் இச் சொல்லை ஆண்டதை "வெண்மை இல்லை பல கேள்வி மேவலால்" என்ற தொடரில் அறிக. நாலடியாரும், "வெண்மையுடையார் விழுச் செல்வம்" என்கிறது. சேக்கிழார் இறைவனடி சேர்ந்த மெய்யன்பர்களிடத்தும், மாலற நேயம் மலிந்தவரிடத்தும் அன்புடையராய், அவர்களோடு உறவு கொண்டாடுபவர். இதனை இவர், "மயலில்சீர்த் தொண்டனூரை யான்அறி வகையால் வாழ்த்தி, உம்பர்பிரான் காளத்தி உத்தமர்க்குக் கண்ணப்பு நம்பெருமான்" என்றும், "தூது கொள்பவ

ராம் நம்மைத் தொழும்பு கொண்டு உரிமை கொள்வாம்'' என்றும் தாம் அடியரோடு உறவுகொண்டு உரைத்த மொழி களைக் கொண்டு உணரலாம். ஆகவே, அவரை 'தண்மையுடை யவரோடு உறவுகொள்ளும் இயல்பினன்' என்றனர். தண்மை யுடையவர்கள் பிறவியாம் கோடை நீங்கி, இறைவன் திரு வடியாம் தண்ணடி சேர்ந்தவர்கள்.

சந்திரன் பன்னிரண்டு ராசிகளிலும் சூரியனுடனும் தங்கித் தங்கி வருபவன். மேலும், அமாவாசை அன்று சூரிய னும், சந்திரனும் ஒன்றுபடுகிறார்கள் என்பது சோதிட மரபு. சோதிட நூல்படி கருதப் படுகின்ற பாபக் கிரஹங்களாகிய சனி, இராகு, கேது ஆகிய கோள்களுடன் மதி இருக்க நேரிடு கின்றது, சோதிட அமைப்பில் மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனு, மகரம், கும்பம், மீனம் என்னும் பன்னிரண்டு ராசிகள் கூறப்படு கின்றன. இவ்ராசிகளில் ஒன்பது கிரகங்களும் உலாவி வரு கின்றன. அங்ஙனம் உலாவும்போது, சந்திரன் ஒவ்வொரு ராசியிலும் இரண்டேகால் நாள் தங்கிச் செல்வதால், தீய கோள்களான சனி, ராகு, கேதுக்களையும் கூடும் வாய்ப்பு ஒவ்வொரு மாதமும் ஏற்படுகிறது. ஆக இவனை ''வெம்மை யுடையவர்களோடு உறவு கொள்ளுவோன்'' என்றனர்.

சேக்கிழார் ஒரே தன்மையினர். அவரது வாழ்வில் குறைவு இல்லை. என்றும் நிறைவே உண்டு அவரை அரசரும் அந்தணரும் போற்றிப் புகழ்ந்ததை முன்னரே பற்பல இடங் களில் கண்டோம். இதனால் அவரைக் குறைவற்றவர்; நிறை வுடையவர் என்பது புலனாகிறதன்றோ? சந்திரனுக்கு மாதந் தோறும் பதினைந்து நாள் வளர்ந்து நிறைதலும், பதினைந்து நாள் தேய்ந்து குறைதலும் இயல்பாக உள. இதனை கீழ் நடு மேல் என்னும் மூன்றுலகங்களும் நன்கு அறியும். ஒரு தன்மையர் என்றனர். இதனைத் தேய்குவாய் என்ற அடியில் கூறினர். கிருபா மூர்த்தியாவார் அருள் வடிவினரான சேக்கிழார். ஒருகால் ஒழிவாய் என்றது அடியோடு உருவின்றி இருத்தலை என்க. அதுவே அமாவாசை நாள்,

மேல்கூறப்பட்ட குறைகள் பல சந்திரனிடத்து இருந்தும், ஆடவா என்று அழைத்தது சேக்கிழாரது கருணையே ஆகும் என்க.

சேக்கிழார் கிருபாமூர்த்தி என்பதும், முழுக் கருணையுடையார் என்பதும் அவர் வாக்கால் அறியவருகின்றன.

மறைத்தவன் புகுந்தபோதே மனம்அங்குவைத்ததத்தன்
இறைப்பொழு தின்கண் கூடி வாளினால் எறியல் உற்றான்
நிறைந்தசெங் குருதிசோர வீழ்கின்றார் நீண்ட கையால்
தறைப்படும் அளவில் தத்தா நமர்எனத்தடுத்து வீழ்ந்தார்

என்று மெய்ப்பொருள் நாயனார் வாக்கில் வைத்துப் பாடியதையும், திருஞானசம்பந்தர் பையவே சென்று பாண்டியற்காகவே என்ற தொடர்க்கு விளக்கம் கூறும்போது,

பாண்டிமா தேவியார் தமதுபொற்பில்
பயிலும்நெடு மங்கலநாண் பாதுகாத்தும்
ஆண்டகையார் குலச்சிறையார் அன்பினாலும்
அரசன்பால் அபராதம் உறுதலாலும்
மீண்டுசிவ நெறிஅடையும் விதியினாலும்
வெண்ணீறு வெப்பகலப் புகலிவேந்தர்
தீண்டியிட பேறுடையன் ஆதலாலும்
தீப்பிணியைப் பையவே செல்க, என்றார்

என்று விளக்கி இருப்பதையும் காணும்போது, சேக்கிழாரது கிருபையும் கருணையுமே இங்ஙனம் பாடச் செய்தது என்பதை அறிந்து கொள்ளலாம்.

ஒருசிலர் உள்ளத்தில் பகை கொண்டு உதட்டில் நட்புக் கொண்டு உறவாடுவர், அவர்களைப் போன்றவர் அல்லர் நம் சேக்கிழார் என்ற கருத்தில் "முழுக்கருணை" என்றனர்.

குன்றை நகர் சிறப்பைப் பலபடி பாடும் திரு. பிள்ளை அவர்கள், இங்கு அம்மை அனையார் சேர்ந்திருக்கும் குன்றை என்றனர். "அம்மை" என்ற சொல்லைத் திறம்பட ஆண்டு சீரிய பொருள் அமையச் செய்த பெருமை திரு பிள்ளை அவர்கட்கே உரியது. அம்மை என்பதன் பொருள் தாய் ஆகும். தாயின் பண்பு அன்பு, இரக்கம், கருணை முதலியன. இப் பண்பு தாய்மார்க்கு உண்டு என்பதை மணிமொழியார்,

*"பால்நினைந்தூட்டும் தாய்" என்றும், திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் "குழவி அழுத குரல் கேட்டுத் தாய் வந்து அமுதூட்டும் கெழுதகை" என்றும் தெரிந்து கூறினர். அங்ஙனம் குன்றை நகர் மக்கள் தம்மை அடைந்தவர்கட்குத் தேவை தெரிந்து உதவினர் என்பதையும், வேட்டவர்க்கு வேட்டவாறு வழங்கினர் என்பதையும் இச்சொல் அறிவிக்கின்றது. அம்மை என்பதனை அழகிய மேகம் என்றோ, நீரையுடைய மேகம் என்றோ பொருள் கொண்டு காணின், அந்நகர வாசிகள் மேகம் போலக் கைம்மாறு கருதாது உதவி புரிபவர் என்பதும் தெரியவரும். வள்ளுவர் "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரி" என்று அன்றோ கூறியுள்ளனர்? இத்தகையர் வாழும் குன்றை நகர் ஆளியுடன் ஆட வருதலால் கைம்மாறு வேண்டா உதவியைப் பெறலாம் என்ற குறிப்பும் இங்கு இருத்தலைக் காண்க. இப்பாடலும் பேத உபாயம் அமையப் பாடப்பட்டது. (66)*

6\. குறையுடைய பாம்பொன் றெடுத்துண் டுமிழ்ந்திடக்
குலைகுலைந் துழல்வை எங்கள்
கோமான் பெருங்கல்வி ஆட்சியை உணர்த்துசெங்
குருமணிச் சூட்டுமோட்டு
நிறைவெகுழு துத்திப் பணுடவிப் பாம்பொன்று
நேரடைய மன்றுள் நாளும்
நினையின்ற தொருபரவை இலகுவே பாரமென
நெல்நுனைத் தனையும்எண்ணேன்
முறையின்ஒரு சிறுநூக்கில் எழுபரவை யும்புக
முடித்துற நிறுத்தான்இவன்
மொழிஎங்கள் தம்பிரான் வல்லபம் உணர்ந்திலைகொல்
முத்தமா ளிகைவானயாற்
றறைமணித் திடராய குன்றைநகர் ஆளியுடன்
அம்புலீ ஆடவாவே
அருள்உருத் தேசுபொலி அருள்மொழித் தேவனுடன்
அம்புலீ ஆடவாவே

[அ. சொ.] குறையுடைய பாம்பு - இராகு கேது என்னும் கிரகங்களாகிய பாம்புகள். ஈண்டு ராகுவைக் குறித்தனர், குலேகுலேந்து - நடுநடுங்கி, உழல்வை - திரிவை. கோமான்-தலேவராம் சேக்கிழார், மணிச்சூட்டு-மணிமுடி, மோட்டு-பருத்த, குரு-நிறம், துத்தி-புள்ளிகளேயுடைய, பணுடவி-பாம்புப்படம், மன்றுள்-பொற்சபையுள், நாணும்-கூசும், ஈன்ற-பெற்ற, பரவை-கடல், பாற்கடல், இலகுவே-எளிதில், நெல்நுனே-நல்லின் நுனி, தனேயும்-அளவும், தூக்கில்-பாட்டில், அறை-வரை அறுக்கப்பட்ட, வானயாறு-ஆகாய கங்கை, திடர்-மேடு.

**விளக்கம்:** இப்பாட்டும் சேக்கிழார்க்கும் சந்திரனுக்கும் உள்ள வேற்றுமைகளேக் காட்டுகிறது. ராகு சந்திரனே உண்டு உமிழ்கின்முன் என்பதைச் சந்திரா கிரணத்தில் அறிகிருேம். இங்ஙனம் ராகு உண்டு உமிழ்கின்ற வரையில் சந்திரன் ஒளி மாழ்கி இருப்பதால், சந்திரனே ஒரு பாம்பு எடுத்து உமிழ்ந்திட உழல்வை என்றனர்.

சைம்மிகேயன் என்பவன் பாம்பு வடிவினன். அவன் அமுதம் பெறத் தேவர்களினிடையில் தன் உருமாறி அமர்ந்திருந்தான். அமுதத்தையும் உண்டான். இவனேச் சூரியசந்திரர்கள் அமர்தத்தைப் பங்கிட்டுக்கொண்டுவந்த திருமாலுக்குக் காட்டிக்கொடுத்தனர். உடனே திருமால் அமுதத்தை முகக்கும் அகப்பையால் அவனேப் புடைத்தனர். அவன் அமுதுண்ட காரணத்தால் இறப்பினே அடையாமல் தலேவேறு உடல்வேருகி இராகு, கேது என்ற இருகோள்களாகிக் கோள் சொல்லிய சூரியசந்திரர்களேச் சிற்சில சமயங்களில் பீடித்துவருகின்றனன். இது புராணக் கதை. இதனுல் "குறையுடைய பாம்பு ஒன்று" என்றனர் ஈண்டு ஒன்று என்றது இராகுவை என்க.

ஆதிசேடன் என்பவன் பாம்புகட்கு எல்லாம் அரசன். அவனுக்கு ஆயிரம் தலேகள் உண்டு. அவன் தன் முடிகளில் நாகரத்தினம் என்னும் மணியை உடையவன். அவனது படங்களில் புள்ளிகள் உண்டு. இத்தகையவன் அறிவில்

சிறந்தவன். ஆதிசேடன்தான் வடமொழி இலக்கணம் செய்த பாணினி முனிவர் என்றும் கூறுவர். பாணினி சிவ பெருமானிடம் வடமொழி இலக்கணம் பயின்றவர். இதனைச் சிவஞான முனிவர், "வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி" என்றும் கூறியுள்ளனர். இதனுல் ஆதிசேடன் பேரறிவு படைத்தவன் என்பது தெரிகிறது. "அத்தகைய பெரிய அறிஞனும், பாம்பரசனுமான ஆதிசேடனும் சேக் கிழார் மன்றின் எதிரே வருவற்கு அஞ்சுவன். அத்தகைய மாண் புடையவர் சேக்கிழார். நீ ஒரு சிறு பாம்பால் அலைக் கழிக்கப் படுபவன்" என்றனர் ஆசிரியர். சேக்கிழார் அருகு வருவற்கு ஆதிசேடன் அஞ்சும் காரணம், தம் அறிவினும் சேக்கிழார் அறிவு விஞ்சி இருப்பதனுல் என்க. இதனை உமாபதி சிவம் "சிதைவற ஆயிர நாவுள சேடவி சேடனும் ஒப்பல்ல** குன்றமுனிக்கு" என்று அறிந்து கூறியவற்ருல் அறிக. இதனை உட்கொண்டே "எங்கள் கோமான் பெருங் கல்வி ஆட்சியை உணர்ந்து" என்றனர்

பாம்பின் முடியில் மணி உண்டு என்பதைக் சேக்கிழார் "முழை அரவு உமிழ்ந்த செய்ய பணிவெயில்" என்றதையும், "அருமை மணியும் அளித்ததுவே நஞ்சும் அளிக்கும் அரவு" என்றதையும் காணவும். இதனுல் மணிச்சூட்டு என்றனர். ஆதிசேடன் தலைகள் அடர்ந்து இருத்தலின் காடு என்றனர். பணம்+அடவி-பணுடவி பணம்=படம், அடவி=காடு.

சந்திரன் திருப்பாற்கடல் கடைந்த ஞான்று அதில் தோன்றினன் என்பது புராணமரபு ஆதலின், ஒருபரவை நினை இலகுவே ஈன்றது என்றனர். பரவை கடலாகும். சிறிதளவேனும் உன்னை மதியேன் என்ற கருத்தில் நெல் நுனியை உவமை காட்டினர். மேலும், திருப்பாற்கடல் கடைந்தபோது, காமதேனு, கற்பக விருட்சம், இலக்குமி முதலானவர்கள் தோன்றியது போல நீயும் தோன்றியதால், அஃது உன்னை இலேசாக ஈன்றது. அதனுல் தனிச் சிறப்பு உனக்கு உண்டாகாது." என்ற கருத்தில்தான் ஆசிரியர், "ஈன்றது இலகுவே பாரம் என நெல்நுனைத்தனையும் எண்

ணேன்'' என்றனர். பாரமாவது பெருமை, சந்திரன் திருப்பாற்கடலில் தோன்றியதை வில்லியார், ''அம்புராசி யின் ஆர் அமுதுடன் அவதரித்தோன்'' என்றனர்.

சுந்தரர் தம் எதிரே கண்ட மாதராரை, ''யாவள்?'' என்று அருகில் நின்றாரை வினவினர். அதுபோது அவர்கள் ''நங்கை பரவையார்'' என நவின்றார்கள். அவ் வளவு தான்! ஆளுடைய நம்பியார் அப்பரவை என்ற பெயரைப் பல பொருள் தரும் நிலையில் பன்னுவாரா யினர். இதனைச் சேக்கிழார் ஒரே செய்யுளில் ஏழுமுறை பரவை என்னும் சொல் பயின்று வரப் பாடியுள்ளனர். அப்பாடல்,

> பேர்பரவை பெண்மையினில்
> பெரும்பரவை விரும்பல்குல்
> ஆர்பரவை அணிதிகழும்
> மணிமுறுவல் அரும்பரவை
> சீர்பரவை ஆயினாள்
> திருவுருவின் மென்சாயல்
> ஏர்பரவை இடைப்பட்ட
> என்ஆசை எழுபரவை

என்பது.

முதலில் பரவை என்னும் மொழி அம்மையாரின் திருப் பெயரைச் சுட்டி நிற்கிறது. இரண்டாவது பரவை முன்னும் பின்னும் உள்ள சொற்களுடன் இயைந்து ''பெரு+உம்பர்+ அவ்வை'' எனப் பிரிக்கப்படும் நிலையில் உள்ளது. அதாவது தேவலோக சபையினர் விரும்பும் தாய் என்பது பொருள். மூன்றாவது பரவை என்பது ஆர்பு+அரவு+ஐ எனப் பிரிக்கப்பட்டு அல்குலுக்கு ஒப்புக் கூறப்படும் ஆதிசேடனும் போற்றும் தலைவி என்னும் பொருள் தந்து நிற்கிறது. நாலாவது பரவை. அரும்பர்+அவை என்றாகிப் பற்கள் முல்லை அரும்பு போன்றவை என்ற பொருளில் உள்ளது. ஐந்தாவது பரவை, இலக்குமி போற்றும் அழகள்

என்பது. ஆறுவது பரவை, பரப்பு என்னும் பொருளதாய் அமைந்துள்ளது. பரவு+ஐ பரவு-பகுதி, ஐ தொழிற் பெயர் விகுதி. ஈற்றில் உள்ள ஏழாவது பரவை கடல் என்ற பொருளில் எந்தவித மாறுதலும் இன்றி அமைந்துள்ளது இப்பாட்டின் திரண்ட பொருள் "இவள் பேர் பரவை" இவளது பெண்மை அழகு முதலிய காரணத்தால் தேவர் கட்கும் தாய் ஆவாள். இவளது விரும்பத்தக்க அல்குல் (பெண் குறி) பாம்புகட்குத் தலைவனான ஆதிசேடன் படம் போன்றது. இவளது அழகிய பற்கள் முல்லை அரும்புகள் போன்றவை. இவளது அழகு திருமகளும் புகழும் தன்மையது. இவளது திருவுருவின் மெல்லிய சாய லில் இடைப்பட்ட என் ஆசை ஏழுகடல் போன்றது" ஏன்பதாம். பெரு உம்பர் அவை விரும்பு அல்குல்ஆர் பரவு ஐ எனப்பிரித்துத் தேவ லோக சபையினர் விரும்பும் ரம்பை முதலிய மாதர் போற்றும் தலைவி என்றும் பொருள் கூறலாம்.

தூக்கு என்பது பாட்டு என்ற பொருளையும் தராசு என்ற பொருளையும் கொண்டது. இவ்விரு பொருளும் தரும் நிலையில் திரு பிள்ளை அவர்கள், "சிறு தூக்கின் எழுபரவையும் புக முடித்துற நிறுத்தான்" என்றனர். அதாவது ஒரு பாட்டில் ஏழுமுறை பரவை எனும் சொல்லை (கடல்களையும்) நிறுத்தினான் என்பதும், தராசில் ஏழு கடல்களையும் புகுமாறு நிறுத்துக் காட்டினான் என்பதும் ஆகும் இச்செயல் வல்லபம் மிக்க செயல் அன்றோ? ஆகவே, வல்லபம் உணர்ந்திலைகொல் என்று சந்திரனை வினவினார். கடல் ஏழு ஆவன உப்பு, நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் என்பன. குன்றத்தூரின், முத்துப் பதித்த மாளிகைகள் மணித்திடர் ஆயது என்பது உயர்வு நவிற்சி அணி. இதுவும் பேத உபாயத்தால் சந்திரனை அழைத்த தாகும். (67)

7. செறிதமிழ்ச் சங்கத்து முதன்மையோன் அன்பின்ஐந்
திணையென நவின்றநூலின்
செப்பிய விதிப்படி கரிகுழைத் தெழுதுகண்
செய்யவாய் வெண்நகைநலார்
முறிவற வணங்குதோ றெருவிடுத லால்வளரும்
மொய்ம்பு பெற்றனைஎநாளும்
மொய்த்தளரு விடுதல்அத னல்வளர்நல் உழவுதொழில்
முயல்இவன் காட்டுதொழிலே
மறிவரிவ இந்நன்றி உள்உணர்ந் தனைஎன்னில்
வாராதிருப்பை கொல்லோ
மதியோன் எனும்பெயர் குறிப்புரு மல்கவிக
மகன்வாதி வாக்கிஆய
அறிவர்கழ கம்பரவு குன்றைநகர் ஆவியுடன்
அம்புலீ ஆடவாவே
அருளுருத் தேசுபொலி அருள்மொழித் தேவனுடன்
அம்புலீ ஆடவாவே

*[அ. சொ.] செறி-நிறைந்த, அடைந்த, முதன்மையோன்- முழுமுதற் பரமனாகிய இறைவன், அன்பின் ஐந்திணை-இறையனார் அகப்பொருளாகிய ஐந்திணை இலக்கணம், நவின்ற-சிறப்பித்து ஓதப்பட்ட, செப்பிய-கூறிய, முறிவு-மனவருத்தம், நகை-பற்களையுடைய, நலார்-நல்ல மாதர், மொய்ம்பு - பலம், எநாளும் - எந்த நாளும், மொய்த்த - நெருங்க, மறிவரிய - மறித்துஅறிதற்கரிய பிரதி செய்யல் ஆற்றாத, மறிவு-திரும்புதல், உள்-உள்ளத்துள்ளே, இருப்பைகொல்லோ-இருப்பாயோ, குறிப்புருமல்-தனக்குப் பெயராக வைத்துக் கொள்ளாமல், குறி-பெயர், கவி-ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகையில் கவி பாட வல்லோன், கமகன்-அரிய பொருளையும் செம்பொருள் நடையில் காட்டிப் பாடுபவன், வாதி-காரணத்துடனும், மேற்கோளுடனும் எடுத்துக் காட்டி அளவை நூல்-வழிப்படி பிறன் கொள்கையினை மறுத்துத் தன் கொள்*

கையினை நிறுத்திப் பாடுபவன், வாக்கி-அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருள் பயன்களை அமைத்துப் பாடுபவன், கழகம்-கூட்டம், சபை, பரவு-போற்றும்.

**விளக்கம்:** செறிதமிழ் என்றது நிறைந்த தமிழ் என்ற பொருளைத் தரும். தமிழுக்குச் செறிவாவது எல்லாக் கலைகளும் நிறைந்திருத்தலாம்.

தமிழில் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணம் உண்டு. பொருள் இலக்கணம் என்பது ஏனைய மொழிகளுக்கு இல்லை. மேலும் இம்மொழி, இலக்கண வரம்பில் ஒழுகவல்லது. ஏனைய மொழிகள் அத்தகையன அல்ல. பொருள் இலக்கணமே தமிழுக்குச் சிறப்புத் தருவது என்பதை "தள்ளாப் பொருளியல்பில் தண்டமிழாய் வந்திலார், கொள்ளார் இக்குன்று பயன்" என்று பரிபாடல் கூறுதல் காண்க.

இவற்றை உட்கொண்டே பரஞ்சோதியார்,

கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்த இப்பசுந் தமிழ்ஏனை
மண்ணிடைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணிடப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ

என்று அறைகூவி அறிவிப்பாராயினர்.

பொருள் இலக்கணம் இரு பிரிவினையுடையது, ஒன்று அகம்; மற்றொன்று புறம். அகம் என்பது இக்கால விஞ்ஞான முறையில் (Science of Love) என்றும், புறம் என்பது (Science of War) என்றும் உணரப்படும்.

இவ்வரும்பெரும் பிரிவினை ஹோமர் என்பாரும்,

"Two things greater than all things are
One is Love and the other is War."

என்று புகழ்ந்துள்ளனர்.

தமிழில் முத்தமிழ் உண்டு. அவையே இயற்றமிழ், இசைத் தமிழ் நாடகத் தமிழ் என்பன. இவை விரிக்கில் பெருகும். ஆனால், இசைத் தமிழ் பற்றிய சிறு குறிப்பை மட்டும் ஈண்டுக் குறிப்பிடுவோமாக. தமிழின் இசைப் பெயர்கள் மாறி வேற்றுப் பெயரால் இக்காலத்தில் வழங்கப் படுகின்றன. செம்பாலைப் பண் தீரசங்கராபரணம் என்றும், படுமலைப் பாலைப் பண் கரகரப்பிரியா என்றும், செவ்வழிப் பாலைப் பண் தோடி என்றும், அரும்பாலைப் பண் கல்யாணி என்றும், கோடிப் பாலைப் பண் அரிகாம்போதி என்றும், விளரிப்பண் பைரவி என்றும், மேற் செம்பாலைப் பண் சுத்த தோடி என்றும் வழங்குவதைக் காணவும். தேவாரத்தில் வரும் தமிழ்ப் பண்களை ஈண்டு நினைவு கொள்க.

மறைநூல்கள் தமிழில் இருந்தன என்பதை "மறை மொழி கிளந்த மந்திரத்தானே" "மறைமொழிதானே மந்திரம் என்ப" என்று தொல்காப்பியம் கூறுதல் காண்க. வள்ளுவருக்கும் இஃது உடன்பாடு என்பதை.

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்

என்று அவர் கூறியிருப்பதால் அறிக.

திருஞான சம்பந்தரும் இக்குறிப்பினை "மலரடி ஒன்றடியவர் பராவத் தமிழ்ச் சொலும் வடசொலும் தாணிழல்சேர" என்றருளியுள்ளனர். தாள் நிழல்சேர என்றதன் கருத்து, தமிழ் மந்திரங்களாலும், வடமொழி மந்திரங்களாலும் வழிபாடு செய்ய என்பதாம். மந்திரம் என்னும் சொல்லே தமிழ்ச் சொல்லாகும். மனம்+திரம் மந்திரம். மனத்தின் உறுதி என்பது இத்தொடர் பொருள். திரம் திறம் என்பன போலி மொழிகள். இதுபோது தமிழ் வேதமாக இருப்பன இன்ன என்பதை,

தேவர் குறளும் திருநான்மறை முடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகம்என் றுணர்

என்னும் ஔவையார் பாடலால் அறிக. தவமுறையினைப் பற்றித் தொல்காப்பியர்,

காமஞ் சான்ற கடைக்கோள் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே

என்று கூறுதல் காண்க.

பட்டாங்கு நூல் (Philosophy) உணர்ச்சியினை இலக்கணத்தில் அமைந்த பெயர்களால் தெரிந்து கொள்ளலாம். உயிர், மெய், வினை போன்ற சொற்களைக் காண்க. "மெய்யின் வழியே உயிர் தோன்று நிலையே" என்ற நூற்பாவில் தத்துவ சாத்திரக் கருத்து இருத்தலை ஓர்க.

ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு கண்ணே
நான்கறி வதுவே அவற்றொடு மூக்கே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே

என்னும் தொல்காப்பிய நூற்பா உயிர்நூல் (Zoology) உடல் நூல் (Physiology) கருத்துக்களுக்கு அரண் செய்வதைக் காண்க.

நிலம்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கமே உலகம் ஆதலின்

என்னும் தொல்காப்பிய நூற்பா, பௌதிக சாத்திரத்திற்கு (Physics) இடம் தருதலை உணரவும்.

ஒழுக்க நூற்கள் (Ethics) தமிழில் இருந்தமையினைப் பதினெண்கீழ்க் கணக்கு நூற்களைக் கொண்டே அறியலாம். உளநூல் (Psychology) உண்மைக்குத் தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் போதிய சான்றாகும். கணிதநூல் (Arithmetic)

உண்மையினை அரை, கலம், பதக்கு, உரி, நாழி, சாடி, தூதை, உழக்கு, கழஞ்சு, சீரகம், தொடி, பலம், மாவரை, அந்தை, முதலான அளவைப் பெயர்களாலும், நெய்தலும், குவளையும் ஆம்பலும் சங்கமும் என்று பரிபாடல் குறிப்பிடும் எண் பெயர்களாலும். முந்திரி, காணி, மா, என்ற பின்ன எண் பெயர்களாலும் மற்றும் பல சொற்களாலும் உணரலாம்.

இரண்டுமுதல் ஒன்பான் இறுதி முன்னர்
வழங்கியல் மாஎன் கிளவி தோன்றின்

என்ற தொல்காப்பிய நூற்பாவினையும் நினைவுபடுத்திக் கொள்வோமாக.

தமிழர்கள் கணக்கில் இம்மியும் தவறாது இருந்தனர் என்பதைக் குலோத்துங்க சோழன் காலத்து நிலம் அளக்கப் பட்டு, அதன் அளவைக் குறிப்பிட்டதை, ''இறை இலி நீங்கும் நிலம் முக்காலே இரண்டு மாகாணி அரைக் காணி முந்திரி கைக்கீழ் அரையே இரண்டு மா முக்காணிக் கீழ் முக்காலே நான்குமா அரைக்காணி முந்திரிகைக்கீழ் நான்கு மாவினால் இறை கட்டின காணிக் கடன்'' என்ற அடிகளில் காணவும். இந்த அளவு 1/52000 என்பதைக் குறிக்கும்.

வானநூல் (Astronomy) நூல் கலையும் தமிழில் உண்டு. இக்காலத்தில் அஸ்வனி, பரணி முதலாக நட்சத்திரப்பெயர் கள் காணப்படுகின்றன. அவற்றை அக்காலத்தில் புரவி, அடுப்பு, ஆரல் முதலிய தமிழ் மொழியால் சுட்டி வந்தனர். மேஷராசி முதலானவற்றைக் குறிக்கவந்த நெடுநல் வாடை ''ஆடுதலையாக'' என்று கூறுதல் காண்க.

தருக்க நூல் (Logic) கருத்தும் தமிழில் இருந்தது. தருக்கமாவது, தன்னை மிகுத்துக் காட்டுதல் என்க. இப்பொருட்டாதலை ''தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்ந்து'' என்று தொல்காப்பியத்திலேயே வருதல் காணவும். மேலும், இக் கருத்தை,

தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்தல்

என்று வாகைப் பொது இலக்கணம் வகுத்து அத்தொல் காப்பியமே கூறுதல் காண்க.

"ஓசை பண்பிற் ருகாயம்மே" "கிழக்கு முதல் வடக்கிற்கு ஏதுத் திசையே" என்னும் அகத்தியச் சூத்திரங்கள் தருக்க நூல் அறிவிற்குச் சான்ருகும்.

சிற்பம், உழவு, நெசவு, வாணிபம், முதலான கலைகள் தமிழில் இருந்தமை காண்க. ஓவியம், கரவடம், கஜ, பரி, நிமித்தம், யானை, முதலியன பற்றிய நூற்களும், சமையற் கலை பற்றிய மடை நூலும், Geology நூல் அறிவு பற்றிய புதையல் நூலும் தமிழில் இருந்தன. இவை அனைத்தையும் உள்ளடக்கியே "செறிதமிழ்" என்றனர்.

சங்கத்து முதன்மையோன் இறைவனும். ஆலவாய் அவிர்ச் சடையன். இது "கண்ணுதல் பெருங்கடவுளும் கழக மோடமர்ந்து" என்ற தொடரால் விளங்கும். இறைவன் நவின்ற நூல் அன்பின் ஐந்திணை என்னும் இறையனுர் அகப் பொருள் நூலாகும். இதனை இறையனுர் களவியல் என்றும் கழறுவர். பாண்டிய நாட்டில் ஒரு முறை பஞ்சம் வந்துற்றது. அதனுல் புலவர்கள் வேற்றிடம் புகலாயினர். பஞ்சம் நீங்கியதும் புலவர்கள் வந்துற்றனர். அவர்கள் எழுத்து இலக்கணம் சொல்ல இலக்கணம் அறிந்திருந்தனர். பொருள் இலக்கணம் அறிந்தவர் இல்லையே என்று பாண்டியன் வருந்தினன். அவனது வருத்தம் தீர இறைவன் அறுபது நூற்பா அடங்கிய இந்நூலைச் செய்து தந்தனன். இதனைக் கல்லாடம்,

"மாறனும் புலவரும் மயங்குறு காலை
கடல்அமு தெடுத்துக் கரையில்வைத் ததுபோல்
அன்பின் ஐந்திணைஎன் றறுபது சூத்திரம்
பரப்பின் தமிழ்ச்சுவை திரட்டி மற்றவர்க்குத்
தெளிதரக் கொடுத்த தென்தமிழ்க் கடவுள்"

என்று கூறுதல் காண்க.

இந்நூலின் முதல்நூல் பா,

> அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது
> அந்தணர் அருமறை மன்றல் எட்டனுள்
> கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்

என்பதாகும்.

"கரிகுழைத்து எழுதுகண் செய்ய வாய் வெண்ணகை நலார்" என்பது முரண்தொடையாம், கருமையும், செம்மையும், வெண்மையும் முரண்பட்டமை காண்க.

கம்பர் இத்தகைய இடங்களை இன்னமும் இனிதாகப் பாடுவர்.

"சோதிநுதல் கருநெடுங்கண் துவர்இதழ்வாய்
தரளநகைத் துணைமென் கொங்கைமாதர்" என்றும்,

"பனிப்பிறையைப் பழித்தநுதல் பணைத்தவேய்த்தோள்"

"ஏங்கும்இடை தடித்தமுலை இருண்டகுழல் மருண்டவிழி இலவச் செவ்வாய்ப் பூங்கொடியீர்"

என்றும் பாடிக் காட்டிய வரிகளைக் காண்க.

சந்திரனைக் கன்னிப் பெண்கள் வணங்குதல் மரபு. இதற்குக் காரணம் அவனை வணங்குதலால் விரைவில் திருமணம் ஆகும் என்ற நம்பிக்கை என்க. இதனை அகப்பொருளில் பிறைதொழுகென்றல் என்ற ஒரு துறையாகக் கூறுவர். அதாவது தோழி தன் தலைவியின் மேனி வேறுபாட்டை அறிந்து, அவள் ஒரு தலைவனால் காதலிக்கப்பட்டதைக் குறிப்பால் உணர்ந்து, அதனை நேர்வழியில் கேட்டறிதல் நாகரிகம் அன்று என்று, பிறையினைக் காட்டி அதனைத் தொழுமாறு தலைவியிடம் கூறுவள். தலைவி கன்னியாகவே இருந்தால் உடனே தொழுவள். ஒரு காதலனைக் கொண்டனள் ஆயின், பிறையினைத் தொழாள். தனக்குக் கணவன் ஒருவன் அமைந்தபின் அவனைத்தவிர்த்துப் பிறரைத் தொழுதல் தமிழ்ப் பெண்களின் பண்பு அன்று அன்றோ? "தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழு

வாள்" என்று அன்றோ திருவள்ளுவரும் கூறியுள்ளனர்? கண்ணகியைக் காமக்கோட்டம் வணங்குமாறு, அவள் தோழி கூறியபோது, "பீடு அன்று" என்று அன்றோ கூறினள்?

தோழி "பிறை தொழுக" என்றபோது தலைவி தொழா திருந்த நிலையினைத் திருவாவடுதுறைக் கோவை,

தக்கோர் பணிகழல் செம்பொன்
 தியாகர் தடந்துறைசை
முக்கோ உடையர் சடில
 வட்டத்தின் மூளைமதிபோல்
சொக்கோடு சொக்கரச் சுடர்வானில்
 வெண்பிறைத் தோற்றம்கண்டால்
கைக்கோ கனக மலரே
 குவியும்நம் காரிகைக்கே

என்று கூறுகிறது.

இதில்; "சந்திரனைக் கண்டதும் கைககள் குவியுமே ஏன் குவியவில்லை" என்ற கருத்து இருத்தல்காண்க. திரு பிள்ளை அவர்களும் இதனை விளக்கமுறத் தமது சீர்காழிக் கோவையில்,

ஆலங் குடிகொள் மிடற்றூர்
 கழுமலத் தையர்செய்ய
சீலம் குடிகொள் செழும்பொன்னி
 நாட்டில் சிறுபிறைகண்
டேலம் குடிகொள் குழலாய்
 குவியும்எத் தாமரையும்
கோலம் குடிகொள்நின் கைத்தா
 மரைகுவி யாமைஎன்னே

என்று பாடியுள்ளனர்.

இவ்வாறெல்லாம் அகப்பொருள் இலக்கணம் கூறு தலின், "அன்பின் ஐந்திணை என நவின்ற நூலில் செப்பிய விதிப்படி" எனப்பட்டது.

கன்னிப்பெண்கள் தமக்குவிரைவில் திருமணம் நடக்கப் பிறை தொழுது நிலாச்சோறு படைத்தலை எரு விட்டுச் சந்திரனை வளர்ப்பதாகக் கவி கூறினர். சேக்கிழார் சிறப்புடைய உழவுத்தொழிலையே எவர்க்கும் காட்டுதலின், உழவு தொழில் இவன் காட்டுத் தொழில் என்றனர். சந்திரன் தன்னிடத்து முயலைக் காட்டினால், உழவர்கள் முயற்சியாகிய தொழிலைக் காட்டுவர் என்பதை "முயல் இவன் காட்டு தொழில்" என்றனர்.

முயல் என்னும் சொல், ஈண்டு முயலையும் முயற்சியையும் விளக்கும் சொல்லாக அமைந்துள்ளது. சந்திரனது களங்கத்தை முயல் எனக் கூறுதல் கவிகள் மரபு. இதனை நாலடியாரில் வரும்,

ஒண்கதிர் வான்மதியம் சேர்தலால் ஓங்கிய
அங்கண் விசும்பின் முயலும் தொழப்படூஉம்

என்ற அடிகளால் உணராலாம்.

எருவால் வளர்ச்சியுண்டு என்று காட்டியவர் சேக்கிழார் என்பதையும், சந்திரா நீ முயலைக் (களங்கமாகிய முயலைக்) காட்டினால், இவர் முயற்சியாகிய முயலைக் காட்டுவர் என்பதையும், திரு. பிள்ளை அவர்கள்,

"மொய்த்த எருஇடுதல் அதனால் வளர்தல்
உழவு தொழில் முயல்இவன் காட்டுதொழில்"

என்ற வரிகளில் சுட்டிக்காட்டினர். இங்ஙனம் காட்டியதுடன்,

"இந்நன்றி உள்உணர்ந் தனைஎன்னில்
வாரா திருப்பை கொல்லோ"

என்று எடுத்து மொழிந்து, இதன் வழி தான உபாயத்தை அமைத்துப் பாடியதையும் காண்க.

உழவுத் தொழிலைச் சேக்கிழார் கைம்மாறு கருதாது செய்பவர் என்பதை "மறிவரிய இந்நன்றி" என்றனர். சந்திரன் மதியோன் (அதாவது அறிஞன்) என்ற பெயர்

பெற்றும், தேய்கிறான். இவர் தேயாது கலையால், கவியால் வளர்க்கிறார் என்பது குறிப்பு.

சேக்கிழாரைக் கவி, கமகன், வாதி, வாக்கி ஆகிய அறிஞர் கூட்டம் போற்றிப் புகழும். கவி ஆவான் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் ஆகிய வகையில் கவிபாடும் கவிஞன்.

ஆசு கவியாவது எதிரி விரும்பும் வகையில் விரைவில் கவி பாடுதலாகும். ஒரு முறை காளமேகத்தை "மன்னு என்று தொடங்கி மலுக்கென்று முடியுமாறு ஒரு வெண்பாவைப் பாடுக" என்று கேட்டபோது உடனே,

மன்னுதிரு அண்ணா மலைச்சம்பந் தாண்டாற்குத்
பன்னும் தலைச்சவரம் பண்ணுவதேன்—மின்னின்
இளைத்த இடைமாதர் இவன்குடுமி பற்றி
வளைத்திழுத்துக் குட்டா மலுக்கு

என்று பாடினர். இதனை இரட்டையர் பாடியது என்றும் கூறுவர்.

இதுபோலப் பாடும் கவிஞன் ஆசுகவி ஆவான்.

மதுரகவி ஆவான் இன்பக் கவிகளைப் பாடுபவன். அம்பிகாபதி,

சற்றே பருத்த தனமே குலுங்கத் தரளவடம்
துற்றே அசையக் குழைஊசல் ஆடத் துவர்கொள்
செவ்வாய்
நற்றேன் ஒழுக நடன சிங்கார நடைஅழகின்
பொற்றேர் இருக்கத் தலைஅலங் காரம் புறப்பட்டதே

என்று பாடிய பாட்டில் இன்பம் (மதுரம்) இருத்தலைக் காண்க.

சித்திரக் கவி என்பது ரதபந்தம், கமல பந்தம் முதலானவை. அதாவது தேர் உருவில், எழுத்துக்கள் அமைய வும், தாமரை வடிவில், எழுத்துக்கள் அமையவும் பாடப் படுவது. அவற்றுள் மாலை மாற்றும் ஒருவகைச் சித்திரக்கவி. நமதுதிருஞானசம்பந்தர் ஒரு சித்திரக் கவிஞர். அவர் பாடிய சித்திரக் கவிகள் பலவற்றுள் மாலைமாற்றும் ஒன்று. மாலை

மாற்றுவது ஒரு செய்யுளை ஈற்றிலிருந்து எழுத்துக்களைச் சேர்த்து வாசிப்பினும், அச்செய்யுளாகவே அமைந்திருப்பது. திருஞானசம்பந்தரது மாலை மாற்றுப் பாடலாகிய.

காலேமேலே காணீகாழீ காலே மாலே மேபூ
பூமேலே மாலே காழீ காணீ காலே மேலேகா

என்ற பாடலை ஈற்றிலிருந்து எழுத்தைக் கூட்டி வாசித்து இன்னது என்பதை அறிக.

இத்தகைய சித்திரக் கவிகளை முதல் முதல் திருஞான சம்பந்தர் பாடிய காரணத்தினால்தான் சேக்கிழார் இவரது சித்திரக் கவிகளை "மூல இலக்கியங்கள்" என்று மொழிந்தனர்.

வித்தாரகவி என்பது காவியமாக, புராணமாக ஒரு நூலைப் பாடுதலாம். நமது சேக்கிழார். கச்சியப்பர், கம்பர் போன்றவர்கள் வித்தாரகவிகள். கவி, கமகன் வாதி வாக்கி யாகியவர்களைப் பற்றிய விளக்கத்தினை இலக்கண விளக்கம்,

ஆசு மதுரம் சித்திரம் அகலம்
பாவகை பாடுவோன் கவிஎனப் பாடுமே

நிறைந்த கல்வியான் நிறைந்த அறிவான்
அறைந்த ஒருபொருள் அதனை விரிக்க
வல்லவன் கமகன் சொல்லுங் காலை

ஏதுவும் மேற்கோளும் எடுத்துக் காட்டித்
தன்கோள் நிறீஇப் பிறர்கோள் மறுக்கும்
வன்புடை யோனே வாதி ஆவான்

அறம்பொருள் இன்பம் வீடென நான்கும்
திறம்பா திவரச் செஞ்சொல் கொண்டருள்
நோக்கி உரைப்போன் வாக்கி ஆவான்

என்று விளக்கியுள்ளது.

இத்தகைய கவிஞர் பெருமக்களால் சேக்கிழார் போற்றப் படுவர் எனில், அவர்தம் புலமையினை எங்ஙனம் புலப்படுத்துவது? மேலும் இவ்வரும் கவி, கமகன் வாதி வாக்கியும் ஆவார் என்பது பெறப்படுகின்றதன்றோ?

"உலகெலாம்" என்று இறைவர் அடி எடுத்துக் கொடுத்ததும், சேக்கிழார் பெருமானார் உடனே,

உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்

என்று பாடியதனால் ஆசுகவி ஆயினர்.

செய்வ தொன்றும் அறியாது
சிந்தை மகிழ்ந்து களிகூர்ந் தென்
ஐயன் அணைந்தான் எனைஆளும்
அண்ணல் அணைந்தான் ஆரூரின்
சைவன் அணைந்தான் என்துணையாம்
தலைவன் அணைந்தான் தரணிஎலாம்
உய்ய அணைந்தான் அணைந்தான்என்
றுரைகை முரசம் சாற்றுவித்தார்

என்று பாடியுள்ள பாடல் சேக்கிழார் மதுரகவி பாடும் மதுர கவி என்பதைத் தெரிவிக்கிறது. சேக்கிழார் பெருமானாருக்குச் சித்திரகவி பாடவேண்டிய வாய்ப்பு நேர்ந்திலது. நேர்ந்து இருக்குமாயின் அதனையும் பாடி இருப்பார். மேலே கூறிய ஆசு மதுரம் பாடும் அவர்க்குச் சித்திரக் கவி பாடுதல் கடின ஆகுமோ?

சித்திரம் என்னும் சொல்லுக்கு அழகு என்னும் பொருள் இருத்தலின், சித்திரக் கவி என்னும் தொடர் அழகிய கவியும் ஆகும். இக் காரணத்தினால் சேக்கிழார், சித்திரக் கவிபாட வல்லவர் என்றும் கொள்ளலாம். அத்தகைய சித்திர (அழகிய) கவிகளை அங்கம் பூம்பாவையின் வளர்ச்சியினைக் கூறுமிடத்துக் காணலாம்.

தளரும் மின்னின்அங் குரம்எனத் தமனியக் கொடியின்
வளர்இ ளம்தளிர்க் கிளைஎன மணிகிளர் ஒளியின்
அளவில் அம்சுடர்க் கொழுந்தென அணைவுறும் பருவத்
திளவ னப்பிணை அனையவர்க் கேழியர்ண் டெய்த

அழகின் முன்இளம் பதம்என அணிவிளக் கென்ன
விழவு கொண்டெழும் பேதையர் உடன்விளை யாட்டில்
கழலொா டம்மனை கந்துகம் என்றுமற் றினைய
மழலை மென்கிளிக் குலம்என மனையிடை ஆடி

பொற்றொ டிச்சிறு மகளிர்ஆ யத்தொடும் புணர்ந்து
சிற்றில் முற்றவும் இழைத்துடன் அடும்தொழில் சிறுசோ

றுற்ற உண்டிகள் பயின்றொளி மணிஊசல் ஆடி
மற்றும் இன்புறு வண்டல்ஆட் டயர்வுடன் வளர

என்பன சித்திரக் கவிகள் எனலாம்.

ஆகவே, சேக்கிழார் சித்திரக் கவிஞரும் ஆவார். அவர் வித்தரக் கவி என்பதற்கு அவர்தம் பெரிய புராணமே தக்க சான்று.

தொண்டர்களைப் பற்றிச் சுந்தரர் பாடிய பாடல்கள் பதினொன்று, நம்பியாண்டார் நம்பிகள் பாடியுள்ள பாடல்கள் எண்பத்தைந்து. சேக்கிழார் பாடியுள்ள பாடல்கள் நாலாயிரத்து இருநூற்று இருபத்தாறு. இவ்வாறு விரித்துச் சேக்கிழார் பாடி இருத்தலின், அவர் வித்தாரக் கவிஞர் ஆவார்.

வீதிகள் விழவின் ஆர்ப்பும் விரும்பினர்
விருந்தின் ஆர்ப்பும்
சாதிகள் நெறியில் தப்பா
தனையரும் அனையில் தப்பார்
நீதிய புள்ளும் மாவும்
நிலத்திருப் புள்ளும் மாவும்
ஓதிய எழுத்தாம் ஐஞ்சும்
உறுபிணி வரத்தாம் அஞ்சும்

என்ற பாடலில், வீதிகள் விழவின் ஆர்ப்பு என்றதால் மக்கள் செழித்து, திருவிழாக்களை நடத்தினர் என நாட்டு வளத்தையும், விரும்பினர் விருந்தின் ஆர்ப்பு என்றதனுல், நாட்டில் உள்ளவர்கள் வந்த விருந்தினரை உபசரித்து இனிவரும் விருந்தனரை எதிர் நோக்கி இருப்பர் என்ற நாட்டு மக்களின் விருந்தோம்பும் பண்பினையும், அந்தணர், அரசர் வணிகர்

வேளாளர் முதலான மரபினர் சாதிகள் நெறியில் தப்பார் என்பதனுல், அவர் அவர் தம் கடமைகளை ஒழுங்காகச் செய்து ஒருவர்க் கொருவர் அன்புடன் ஒழுகினர் என்ற அன்பு ஒழுக்கத்தினையும், தனையரும் ஆணையில் தப்பார் என்றதனுல் பெற்ருேர் கட்கு அடங்கிப் பிள்ளைகள் இருந்தனர் என்பதையும், நீதியும் புள்ளும் மாவும் என்றதனுல் பறவைகளும் விலங்குகளும் ஒன்றுக்கு ஒன்று பகையின்றி வாழும் நிலையில் அரசநீதி நிலவியது என்பதையும், நிலத்திருப்பு உள்ளும்மாவும் என்றதனுல் இலக்குமி குடிகொண்டு செல்வ முட்டுப்பாடு இன்றி நாடு இருந்தது என்பதையும், ஈற்றடியினுல் மக்கள் "சிவாயநம" என்னும் ஐந்தெழுத்தை ஓதியதனுல் நோய்கள் அணுக அஞ்சி நின்றன என்பதையும் நமது சேக்கிழார் அறிவுறுத்தி இருத்தலால், அரும் பொருளைச் செம்பொருளாகப் பாடும் கமகன் என்னும் கவிஞராய் விளங்குவதையும் காணலாம்.

தண்டி அடிகள் புராணத்தில் தண்டி அடிகட்கும் சமணர் கட்கும் நடந்த வாதத்தினைச் சேக்கிழார் செம்மையுறப் பாடியுள்ளனர்.

மாசு சேர்த்த முடை யுடலார்
மாற்றம் கேட்டு மறுமாற்றம்
தேசு பெருகும் திருத்தொண்டர்
செப்பு கின்ருர் "திருவிலிகாள்
பூசு நீறு சாந்தமெனப்
புனைந்து பிரானுக்கு ஆனபணி
ஆசி லாநல் லறமாவ
தறிய வருமோ உமக்கென்ருர்

அந்த மில்லா அறிவுடையார்
உரைப்பக் கேட்ட அறிவில்லார்
சிந்தித் திந்த அறம்கேளாய்
செவியும் இழந்தா யோஎன்ன
மந்த உணர்வும் விழிக்குருடும்
கேளாச் செவியும் மற்றுமக்கே
இந்த உலகத் துள்ளனஎன்
றன்பர் பின்னும் இயம்புவார்

என்று பல பாக்களைப் பாடி வாத முறையில் கவிபாடும் திறனும் பெற்றதனால், இவர் வாதி என்ற புலமைக்கும் நிலைக் களனாய் இருத்தலை உணர்க.

பெரிய புராணத்தில் நூற் பயனாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் பொருள்கள் அமையப் பாடி இருப்ப தையும் பல இடங்களிலும் காண்கிறோம். அப்பூதி அடிகளார் புராணத்தில் அவரது அறத்தைப் பற்றிய குறிப்பை,

படிநிகழ் மடங்கள் தண்ணீர்ப்
    பந்தர்கள் முதலாய் உள்ள
முடிவிலா அறங்கள் செய்து
    முறைமையால் வாழும் நாளில்

என்றும், பொருள் குவிந்த நிலையை,

அரிதரு செந்நூல் சூட்டின்
    அடுக்கிய அடுக்கல் சேர்ப்பார்
பரிவுறத் தடிந்த பன்மீன்
    படர்நெடும் குன்று செய்வார்
சுரிவளை சொரிந்த முத்தின்
    சுடர்ப்பெரும் பொருப்பு யாப்பார்
விரிமலர்க் கற்றை வேரி
    பொழிந்திழிவெற்பு வைப்பார்

என்றும், இன்ப நிலையினைக் குறித்து,

தோடலர்மென் குழல்மடவாள்
    துணைக்கலச வெம்முலையுள்
ஆடவர்தம் பணைத்தோளும்
    அணிமார்பும் அடங்குவன

என்றும், வீட்டின்பத்தினைக் குறித்து,

துன்றும்புலன் ஐந்துடன் ஆறு
    தொகுத்த குற்றம்
வென்றுஇங்கிது நன்னெறி சேரும்
    விளக்கம் என்றே

வன்தொண்டர் பாதம் தொழுதான
சிறப்பு வாய்ப்ப
என்றும்நில வும்சிவ லோகத்தில்
இன்பம் உற்ருர்

என்றும் பாடித் தாம் அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கை விரித்துப் பாடும் வாக்கியாகவும் துளங்கினர், நம் பேரறிஞர் சேக்கிழார் பெருமாஞர். ஒவ்வொரு புலவரும் ஒவ்வொரு துறையில் புலமை மிக்கிருக்க, நம்புலவர் பெருமாஞர் எல்லாத் துறையிலும் புலமை மிக்கிருந்தமையின் "அறிவர் கழகம் பரவு குன்றை நகர் ஆளி" என்றது எல்லாப் படியாலும் மிக மிகப் பொருத்தம் அன்ருே? (68)

8. பெருநாவ லோஎனும் முழக்கரு மென்பால்'
பிறங்குபயிர் கொடிசெடிஎலாம்
பேணும் கருக்கொள்ள நீஉப கரித்தல்உள்
பேணு திருந்தான்அலன்
திருநாவ லூரர்சீ காழியார் கூன்அறத்
திருவாய் மலர்ந்ததொப்பச்
செயிர்கொள்நின் கூன்ஒழிப் பான்வாய் மலர்ந்துகூன்
செய்யுளினும் உறவைத்திலான்
ஒருநாவ லொடுபெயர் பெறும்பொலத் தினும்அருமை
உறநவில் புராணத்தினேர்
ஒப்பிலா எங்கள்பெரு மான்நட்பு மதிநிற்
குயிர்க்குறுதி செய்வதாகும்
அருநாவ லோர்பரவு குன்றைநகர் ஆளியுடன்
அம்புலீ ஆட்வாவே
அருளுருத் தேசுபொலி அருண்மொழித் தேவனுடன்
அம்புலீ ஆட்வாவே

[அ. சொ.] நாவலோஎன-நாவலோ என்று உழவர் செய்யும் ஓசை. மென்பால்-மருத நிலம், உபகரித்தல்-

சந்திரன் தன் ஒளியால் பைங் கூழ்களை வளர்த்தல், தனுள்-தன்னுள் பிறங்கு-விளங்கு பேணும்-மதிக்கும், பாராட்டும், திருநாவலூர்-சுந்தரர், சீகாழியார்-சீர்காழிப்பதியில் அவதரித்த திருஞானசம்பந்தர் செயிர்-குற்றம், கூன்-வளைவு, கூன்-செய்யுள் உறுப்புக்களில் ஒன்று, ஒரு-ஒப்பற்ற நாவல்-பொன், (அதாவது சம்புநதம்) என்னும் பொன், பொலத்தினும்-பொன்னைவிட, நவில்-சொல் மதி-மதித்துக்கொள், போற்று, பரவு-போற்றும், நாவலோர்-நாவன்மையால் பேசும் திறமுடைய சொற் பொழிவாளர்கள்.

**விளக்கம்:** நாவலோ என்பது, நெல்போர் தெழிக்கும் எருதுகளைத் துரப்பதற்கு உழவர் செய்யும் ஓசை. இதனை முத்தொள்ளாயிரம்

> "காவல் உழவர் கடுங்களத்துப் போர்ஏறி
> நாவலோஓ என்றிசைக்கும் நாள்ஓதை—காவலன்
> கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தால் போலுமே
> கல்யானைக் கோக்கிள்ளி நாடு"

இவ் ஓசை நீங்காத மருதவிடம் என்றதனால் நெல்வளம் இனிது புலப்படும். சந்திரனது ஒளி பயிர் வளர்ச்சிக்கு மிகவும் தேவைப்படுவதாகும். அதனால்தான் "பயிர் செடி கொடியெலாம் கருக்கொள்ள நீ உபகரித்த" என்றனர். சேக்கிழார் செய்ந்நன்றி அறியும் பண்பினர் என்பதைச் சந்திரன் பயிர்கள் வளரத் தன் ஒளியினைப் பரப்பினைக்கு நன்றி செலுத்தி அதனைப் பாராட்டுபவர் ஆதலை "பேணுதிருந்தான் அலன்" என்றனர்.

திருநாவலூர் என்பார் சுந்தரர். சுந்தரர் திருநாவலூரில் பிறந்தமையின் இப்பெயர்க்கு உரியர் ஆயினர். இவரது பெற்றோர் பதி "திருமறையவர்கள் நீடும் திருநாவலூராம் அன்றே" என்பதால் அறிகிறோம். இவரது பெற்றோர் இவர்க்கு இட்ட பெயர் "நம்பி ஆரூரர் என்றே நாமமும் சாத்தி" என்பதனால் உணரலாம். என்றாலும் சுந்தரர் தம் திருப்பெயரைத் திருநாவலூரர் என்றும் தமது பதிகங்களின் ஈற்றுப்பாடலில் குறிப்பிட்டுள்ளனர். நல்லவர் தாம்பரவும்

திருநாவலலூரன் அவன்" என்றும் "நாவலர் கோன் ஆரூரன் உரைத்த தமிழ்" என்றும் குறிப்பிட்டதைக் காண்க.

திருநாவலூர் திருத்தலம் விழுப்புரம் திருச்சிராப்பள்ளி இரயில் மார்க்கத்தில் பரிக்கால் ரயில்வே ஸ்டேஷனுக்கு இரண்டு கல் தொலைவில் உளது. இத்தலத்தில் சுக்கிரன் பூசித்துப் பேறு பெற்றனன். சுந்தரர் திருஅவதாரம் செய்த தலம். இத்தலத்தைத் திருநாம நல்லூர் என்றும் கூறுவர். இங்கு வரதராசப் பெருமாள் கோயிலும் உண்டு. பலவகைப் பல்லவச் சிற்பங்களை இங்குக் காணலாம். இங்குள்ள சுந்தரர் திருவுருவத்தைக் காண்பது கண்ணுக்குப் பெரு விருந்தாகும். இவரை வளர்த்த நரசிங்கமுனையரையர் உருவமும் அழகுடையது. இறைவன் திருப்பெயர் திருநாவலேஸ்வரர். இறைவியின் திருப்பெயர் சுந்தரநாயகி அம்மையார்.

சுந்தரர் செய்த அற்புதங்கள் பல. அவற்றுள் கூனையும் குருடையும் ஒழித்தமையுமாகும். இதனைச் சேக்கிழார்,

தேனும் குழலும் பிழைத்ததிரு
மொழியாள் புலவி தீர்க்கமதி
தானும் பணியும் பகைதீர்க்கும்
சடையார் தூது தரும்திருநாள்
கூனும் குருடும் தீர்த்தேவல்
கொள்வார் குலவும் மலர்ப்பாதம்
யானும் பரவித் தீர்க்கின்றேன்
ஏழு பிறப்பின் முடங்குகூன்

என்று பாடிச் சுந்தரரை வணங்கியுள்ளனர். நம்பியாண்டார் நம்பிகளும்,

கூற்றுக் கெவனோ புகல்திரு
ஆரூரன் பொன்முடிமேல்
ஏற்றுத் தொடையலும் இன்அடைக்
காயும் இடுதரும்அக்

கோற்றொத்துக் கூனனும் கூன்போய்க்
குருடனும் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி
யாம்இத் தரணியிலே

என்று பாடிப் பரவியுள்ளனர். அதாவது சுந்தரர் பரவையார் மாளிகையில் வாழ்கையில், தமக்குத் திருமாலே கட்டித்தரும் தொண்டும், அடைக்காய் அளிக்கும் தொண்டும் செய்த பிறவிக் குருடனாகியும், கூனாகியும் இருந்தவர்கன் குருட்டையும், கூனையும் நீக்கி அருள் செய்தார் என்பதாம்.

சீகாழியார் என்பார் திருஞானசம்பந்தர். அவர் சீர்காழி யில் பிறந்தமையின் சீகாழியார் எனப்பட்டனர். சீர்காழிக் குரிய பன்னிரண்டு திருப்பெயர்களுள் சண்பை என்பதும் ஒன்று. ஆகவே இவரது அவதாரத்தைக் குறிப்பிடும்போது "தவம் பெருக்கும் சண்பையிலே தாவில் சரா சரங்கள் எல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தார்" என்று சேக்கிழார் மொழியால் உணர்கிறோம். திருஞானசம்பந்தர் காழிநகரினர் என்பதை மேலும், "காழியர் தவமே" என்று போற்றியதனாலும் அறியலாம். திருஞான சம்பந்தர், தாம் காழி நகரினர் என்பதைத் தமது திருக்கடைக் காப்புச் செய்யுள்களில் குறிப்பிட்டுள்ளனர். "காழியுள் ஞான சம்பந்தன்" "காழிப்பூசுரன் ஞானசம்பந் தன்" என்று வருவன காண்க.

சீகாழித் தலம் திருஞானசம்பந்தர் பிறந்தருளிய தல மாகும். இது சீகாழி இரயில்வே ஸ்டேஷனுக்கு இரண்டு கல் தொலைவில் உளது. இறைவன் பிரம்மபுரிசுரர் என்றும், இறைவி திருநீல நாயகி என்றும் கூறப்படுவர். இத்தலத்தின் கோயில் அடுக்குமலைபோல் அமைந்துளது. உச்சியில் ஒரு தோணியில் பெரிய நாயகர் பெரிய நாயகி வீற்றிருக்கும் திரு உருவங்களைக் காணலாம். தோணியப்பர் சிகரத்திற்குத் தெற்குப் பக்கத்தில் சட்டைநாதர் கோவில் உளது. இப் பெருமானார்க்கு வெள்ளிக்கிழமை தோறும் இரவு பதினோரு மணிக்குப் புனுகு சட்டம் சாத்தி விஷேட வழிபாடு நடப்

பதை இன்றும் காணலாம். திருஞானசம்பந்தருக்குத் தனிக் கோயில்உண்டு. சித்திரைமாதப் பெருவிழாவின் இரண்டாம் நாள் விழா, ஞானப்பால் விழா என மிகச் சிறப்பாக நடை பெறுகிறது.

திருஞானசம்பந்தரும் கூன் பாண்டியனது கூனைப் போக்கியுள்ளனர். "வாழ்க அந்தணர்" என்னும் பாடலில் "வேந்தனும் ஓங்குக" என்று குறித்தபோது அவன் கூன் நீங்கியது. இவனது கூன் நீக்கப்பட்டதைக் குறிப்பிட வந்த சேக்கிழார்,

எம்பிரான் இவனே எல்லாப்
பொருளும்என் றெழுதும் ஏட்டில்
தம்பிரான் அருளால் வேந்தன்
தன்னைமுன் ஓங்கப்பாட.
அம்புய மலரான் மார்பன்
அனபாயன் என்னும் கீர்த்திச்
செம்பியன் செங்கோல் அன்னத்
தென்னன்கூன் நிமிர்ந்த தன்றே

என்று பாடியும் உள்ளார்.

சேக்கிழார் சந்திரனுக்குரிய வளைவை (கூனை) ஒழிப்பார் இவர் செய்யுளின் உறுப்புக்களில் ஒன்றான கூனையும் அமைக்காது பாடியவர் என்ற சிறப்பை ஈண்டுப் பிள்ளை அவர்கள் "செய்யுளினும் உறவைத்திலன் கூன்" என்றனர். கலிப் பாவில் தரவு, தாழிசை, அராகம், அப்போதரங்கம், தனிச்சொல், சாரிதகம் என்ற உறுப்புக்கள் உண்டு. தனிச் சொல் என்பது விட்டிசை, கூன், தனிநிலை என்றும் கூறப் படும். இக்கூன் பெரிதும், சுரிதக உறுப்புக்கு முன் நிற்கும். "பொருளொடு அடிமுதல் நிற்பது கூன்" என்பது யாப்பருங் கலக்காரிகை.

எனவாங்கு,

பாணியும் தூக்கும் சீரும் என்றிவை
மாணிழை அரிவை காப்ப
வாணமில் பொருள்எமக்கு அமர்ந்தனை ஆடி

என்ற கலித்தொகையின் பாடலில் "எனவாங்கு" என்பது கூனும். இவ்வாறு சேக்கிழார் பாடல்களில் யாண்டும் கூனும் தனிச் சொல் இன்மையை உணரலாம்.

"நாவலொடு பெயர் பெறும் பெரும் பொலம்" என்பது சாம்புநதம் என்னும் பொன்னும். சம்பு என்பது நாவல். பொலன் என்பது பொன். நமது இந்தியாவில் பொன்னுவல் மரம் இருந்ததாகக் கருதப் பட்டமையின், இது சம்புத்தீவு எனப்பட்டது.

பெரிய புராணம் பொன்னினும் சிறந்தது எனப் போற்றி யதைக் காண்க. சேக்கிழார் பெருமானுர்க்கு வால்மீகியார், வேதவியதர், ஆதிசேடன் ஒப்பாகார் என்பது முன்பே கூறப்பட்டது. அறிஞரால் போற்றப்படுபவர் என்பதற்கு ஏற்ப, ஈண்டு நாவலோர் பரவும் சேக்கிழார் என்றனர். மதி என்றது சந்திரனை விளித்த மொழியாம். அச் சந்திரனிடம் "நீ இவருடன் வந்து விளையாடு. உன் கூன் ஒழியும். இதுவே உறுதி" (அதாவது நன்மை) என்று கூறி அழைத்தவாறும்.

சிவஞான முனிவர், தமது காஞ்சி புராணத்தைக் காஞ்சி யில் அரங்கேற்றுகையில், ஏகாம்பரநாதர் துதிக்கு முன் சபாநாதர் துதியினைப் பாடிப் பொருள் விரிக்கையில், ஆண்டிருந்த ஓதுவார்கள், "இப் புராணம் ஏகாம்பரநாதர் பற்றிய புராணம் ஆதலால், அவர்க்குரிய துதியைமுன் கூருது, தில்லைச் சபாநாதர் துதி முன்னர்ப் பாடப்பட்டிருப்பது குற்றம்" எனக் கூறினர். அதுபோது நாவலராம் சிவஞான முனிவர், அதற்கு விடை இறுக்காது, காஞ்சிப் பதியைப் பற்றிய தேவாரம் பாடும்படி ஓதுவாரிடம் கூறினர். அவர்கள் "திருச்சிற்றம்பலம்" என்று கூறிப் பின் கச்சிப் பதியின் பதிகத்தை ஓதினர். ஓதி முடிந்தபின் சிவஞான முனிவர், "நீங்கள் திருவேகம்பன் தேவாரம் பாடத் தொடங்குமுன், இத் தலத்தின் அம்பலமாகிய பிருதுவி அம்பலம் என்று கூருது திருச்சிற்றம்பலம் எனத் தில்லை அம்பலத்தை ஏன் குறிப்பிட்டீர்கள்?" என்றபோது, அவர்கள் "இவ்வாறு திருச் சிற்றம்பலம் என்று கூறுதல்தான் சைவ மரபு" என்றனர்.

"அப்படியானால் யானும் சைவமரபு பற்றிச் சபாநாயகர் துதியை முன் வைத்ததில் தவறுண்டோ?" என்றபோது ஓது வார்களும் ஏனையோரும் பெட்டிப் பாம்புபோல் அடங்கி விட்டனர். இது சிவஞான முனிவரது நாவன்மையினைக் காட்டுதலின் அவர் நாவலர்தாமே! அத்தகைய நாவலர் "சேக்கிழான் அடி சென்னி இருத்துவாம்" என்று சேக்கிழா ரைப் பரவி உள்ளனர். இதனால் நாவலோர் பரவு குன்றை நகர் ஆளி என்றனர். (69)

9. தலைமயிர் பறித்தும்அரை யில்பாய் உடுத்தும்
தழைத்திரள்கை வைத்தும்உழலும்
சழக்கர்மத மாம்களங் கம்பரவல் நீக்கிஉயர்
சைவநிலை எங்கும் ஆக்கும்
நிலையுடைய தம்பிரான் நின்களங் கம்போக்கி
நிகழ்புனித மேஆக்குவான்
நீடும்இதன் மேல்உறுதி என்னைகொல் நினக்கின்னும்
நேர்அளப் பரியசான்றோர்
கலைபலவும் ஓர்உருக் கொண்டனையர் அருள்நோக்கு
காதலார் நிற்கவும்நினைக்
கடைக்கணித் தாடவா என்றழைத் ததுபெருங்
கருணையே கங்கையினும்மிக்
கலைமருவு புனல்வளக் குன்றைநகர் ஆளியுடன்
அம்புலீ ஆடவாவே
அருளுருத் தேசுபொலி அருள்மொழித் தேவனுடன்
அம்புலீ ஆடவாவே

(அ. சொ) அரை-இடுப்பு, தழைத்திரள்-அடர்ந்த மயில் பீலிக்கற்றை, சழக்கர்-கீழ்களாகிய சமணர், பொய்யர் குற்றமுடையவர்கள், களங்கம்-மாசு, தம்பிரான்-சேக் கிழார்பெருமானார், புனிதமே-பரிசுத்த நிலையே, உறுதி- நன்மை, என்னைகொல் - என்ன இருக்கிறது? அளப்பரிய- அளந்து சொல்லுதற்கு அருமையான, சான்றோர்-அறிவால்

நிறைந்தவர், அனையர் - அத்தகையவர், கடைக்கணித்து-கடைக்கண்பார்வை பார்த்து, மருவு-பொருந்திய, புனல் வளம்-நீர்வளம்.

**விளக்கம்:** முதல் இரண்டடிகள் சமணர்களைப்பற்றிய குறிப்புக்களை அறிவிக்கின்றனர் அவர்கள் தம் தலை மயிரைக் கத்தியால் மழுக்காமல், தம்கையால் பறித்துக்கொள்வர் அரையில் பஞ்சாடையோ பட்டாடையோ உடுத்தாமல், பாய் ஆடையினை உடுப்பர். இவர்களது இந்நிலைகளை, "தடுக்கால் உடல் மறைப்பார். "தலைஎலாம்பறிக்கும் சமண்" "தலைபறிக்கச் சுகம் என்னும் குண்டர்" "பறிதலைக்கையர் பாய் உடுப்பார்கள்' "இளமயில் இறகுகள் தழையொடு செயல்மருவிய" "பீலியை இடுக்கிநாளும்" என்று திருமுறை இயம்பும் ஆற்றை அறியவும்.

உழலுதல் திரிதலாம், இச்சொல்லாட்சியினைத் திரு பிள்ளை அவர்கள் "வேத வேள்வியை நிந்தனை செய்துழல்" என்று ஆளுடைய பிள்ளையின் வாக்கினின்று பெற்றார்.

சமணர்கள் சழக்கர்கள் என்று கூறக் காரணமுண்டு, அவர்கள் பிற உயிர்களைக் கொல்வதில்லை என்ற கொள்கையர். சீவகாருண்யம் உடையவர்கள் என்று கூறிக் கொள்வர். அத்தகையவர்கள் மீன் பிடித்தனர் என்று திருஞான சம்பந்தர் கூறுவாரானால், அவர்கள் பொய்யர்; குற்ற முடையவர்கள்; கீழ்மக்கள்தாமே! அவர்கள் மீன் பிடித்ததை "கழிக்கரைப்படு மீன் கவர்வர்" "அமண் கழி அருகு பள்ளி இடமாக அடுமீன்கள் கவர்வர்" என்று கூறியிருப்பதைக் காண்க. அவர்களது ஒழுக்கத்தினைக் கூறிக் கண்டித்துக் சம்பந்தர் "பல்அறம் காட்டியே வரும்மாடெலாம் கவர் கையர்" என்றும் கூறியுள்ளனர். சம்பந்தர் திருமடத்துத் தீயிட்டதும் குற்றம் அன்றோ? இவர்களது சழக்கினைச் சேக்கிழார்,

மந்திரச் செயல் வாய்த்தில மற்றினிச் செய்யும்
புந்தி யாவதிங் கிதுஎனப் பொதிதழல் கொடுபுக்
கந்தண் மாதவர் திருமடப் புறத்தயல் இருள்போல
வந்து தம்தொழில் புரிந்தனர் வஞ்சனை மனத்தோர்

என்று உணர்த்தியுள்ளார். ஆகவே சமணர், சழக்கரே,

சேக்கிழார் பெருமானார் சமணம் பரவாது சைவம் பரவச் செய்தனர் என்பதை அநபாயச் சோழன் சமண நூலாம் சிந்தாமணியில் சிந்தை செலுத்தி இருந்ததை மாற்றிச் சைவசமய நூலில் ஈடுபடச் செய்தது கொண்டு அறிகிறோம்.

சைவம் ஓங்கச் சமணசமயம் ஒடுங்க உளங்கொண்டவர் சேக்கிழார் என்பதை "வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்கப பூத பரம்பரை பொலிய" என்றும், "பரசமயம் நிராகரித்து நீறுக்கும் புனைமணிப்பூண் காதலன்" என்றும், "பரசமயத்தருக் கொழியச் சைவமுதல் வைதிகமும் தழைத்தோங்க, எங்கும் அவம் பெருக்கும் புல் அறிவின் அமண்முதலாம் பரசமயப் பவம் பெருக்கும் புரைநெறிகள் பாழ்பட *** சிவம் பெருக்கும் பிள்ளையார்" என்று அமயம் வரும்போதெல்லாம் உணர்த்தி இருப்பது காண்க. ஆக இவர், "சழக்கர்மதமாம் களங்கம் பரவல் நீக்கி உயர் சைவ நிலை எங்கும் ஆக்கும்" என்றது தக்கதே. களங்கம் போக்குதலில் கை வந்த சேக்கிழார் சந்திரனது களங்கத்தையும் போக்குவார் என்று அவனிடம் கூறி அழைக்கின்றனர் ஆசிரியர். சந்திரனுக்குக் களங்கம் இருத்தல் ஒரு மாசு. அது நீங்கப்பெறும் நிலையுற்றால் அவன் நிலை மேலும் உயரும். ஆகவே, "இதனினும் உறுதி என்ன?" என்று அவனிடம் கூறினர்.

சான்றோர் என்பார் எல்லாப் பண்பும் நிறைந்தார் ஆவார். சால், நிறைவு. அவர்கள் பண்பு அளத்தற்கரியது. "ஆன்று அவிந்து அடங்கிய சான்றோர்" என்பர் பிசிராந்தையார். அத்தகைய சான்றோர் பலர், பல கலைகளும் ஒன்று சேர்ந்தாற்போல் உருக்கொண்டு சேக்கிழாரது திருவருள்

நோக்கிற்கு எதிர்பார்த்து நிற்பர். அவர்களையும் பாராது விடுத்துச் சந்திரனைக் கடைக்கண்ணால் கண்டு ஆடவா என்றது சேக்கிழார் மாட்டு இயற்கையில் அமைந்த கருணை யாகும் என்று பிள்ளை அவர்கள் சேக்கிழாரது குணப் பண்பைச் சந்திரனுக்குக் கூறுகின்றனர். இறுதியில் குன்றை நகர் நீர்வளத்தை உயர்வு நவிற்சி அணி அமையப் பாடி யுள்ளனர்.

கங்கை நதி புண்ணிய நதியே. என்றாலும், பிணங்கள் மிதக்கும் ஆறாதலின் அதனது புனிதம் கெடுகிறது. ஆகவே, "கங்கையினும்" என்று உம்மை கொடுத்து பாடினர். "கங்கையின் புனிதமாய காவிரி" என்றார் ஆழ்வார்.

ஏழு, எட்டு, ஒன்பது எண்ணுள்ள பாடல்கள் தான உபாயத்தால் சந்திரனை அழைத்ததை அறிவிப்பன. தான உபாயமாவது உதவி தந்து அழைத்தலாகும். (70)

10 காதலொடு வாஎன் றழைத்தவுடன் வந்திலன்
கருதியதென் என்றுசற்றே
கறுக்கச் சிவத்தல்கூ டாதுநாண் பூண்டான்
களங்கத் திறத்தின்என்று
போதலுற யாம்புகன் றேம்இனி முனிந்திடில்
போக்குவே றில்லையாகும்
புன்மையான் இவன்என்றோர் கவிகூறின் முக்கண்
புராதனனும் உனைவெறுப்பன்
வீதலுற லேஅன்றி வேறொன்றும் உள்ளதுகொல்
விளைகுவ தனைத்தும்ஓர்ந்தும்
மேயினேன் மேயினேன் என்றடையின் நலம்உண்டு
மேல்உலக வாழ்க்கையோர்மிக
காதலுற விழைதரும் குன்றைநகர் ஆளியுடன்
அம்புலீ ஆடவாவே
அருளுருந் தேசுபொலி அருள்மொழித் தேவனுடன்
அம்புலீ ஆடவாவே.

[அ. சொ] கறுக்கச்சிவத்தல்-கோபித்தல், பூண்டான்-மேற்கொண்டான், திறம்-உள்ளவகை, போதலுற-செவியில் நுழையுமாறு புகன்றோம்-கூறினேம், முனிந்திடில்-கோபித்தால், புன்மையான்-அற்பன், தாழ்ந்தவன், கவி-பாடல், புராதனன்-முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளான இறைவர், வீதல்உறல்-சாதல், உள்ளதுகொல்-இருக்கிறதா, ஓர்ந்து - அறிந்து, மேயினேன் - வந்தேன், மிக்காதல்-மேன்மை, விழைதரும்-விரும்பும்.

**விளக்கம் :** சந்திரன் அழைத்தும் வாராததுபற்றிச் சேக்கிழார் சினம் கொண்டார் என்பது முதல் மூன்றடிகளின் கருத்து. சேக்கிழார் முற்றிலும் முனியாது சற்றே முனிந்தனர் என்பதால், அவரது குண மேம்பாடு தெரிய வருகிறது. அவரது வெகுளி, குணமெனும் குன்றேறி இருந்தார் வெகுளி. வெகுளி கொண்டு முற்றிலும் முனிந்திருந்தால் அவன் உய்யான். இவ்வாறு பேரறிஞர்கள் தமது சினத்தைச் சிறிதே காட்டுவர் என்பதற்குத் திருஞானசம்பந்தர் ஒரு சான்றல்லரோ? அவர் தமது மடத்தில் சமணர் வைத்த தீயை மன்னன்பால் ஏகுமாறு சாற்றியபோதும் "பையவே சென்று பாண்டியற்காகவே" என்றனர் அல்லரோ? அங்ஙனம் பையவே என்றதன் கருத்து இன்னது என்பதை விளக்கவந்த ஆசிரியராம் சேக்கிழார்,

"பாண்டிமாதேவியார் தமது பொற்பில் பயிலும்நெடு மங்கலநாண் பாதுகாத்தும் ஆண்டகையார் குலச்சிறையார் அன்பினாலும், அரசன்பால் அபராதம் உறுதலாலும், மீண்டு சிவநெறி அடையும் விதியினாலும் வெண்ணீறு வெப்பகலப் புகலிவேந்தர் தீண்டியிடப் பேறுடையன் ஆதலாலும், தீப்பிணியைப் பையவே செல்க என்றார்" என்று விளக்கினார். சிவனார் யமனை உதைத்தபோதும் உரப்பாக உதையாது சிறிதே உதைத்தான் எனஇறைவன் கருணையினைக் கச்சியப்ப சிவாசாரியார்,

மதத்தால் மிக்கான் மற்றிவன்
மைந்தன் உயிர்வாங்கப்
பதைத்தான் என்று உன்னி
வெகுண்டான் மதில்மூன்றும்
சிதைத்தான் வாமச் சேவடி
தன்னால் சிறிதுந்தி
உதைத்தான் கூற்றன் விண்முகில்
போல்மண் உறவீழ்ந்தான்

என்று "சிறிதுந்தி" என்ற தொடரில் காட்டியுள்ளனர். இக் கருத்தைக்கொண்டே ஈண்டும் பிள்ளை அவர்கள், "சற்றே" என்றனர், "கறுப்பும் சிவப்பும் வெகுளி பொருள" என்பது தொல்காப்பியம். ஆதலின் "கறுக்கச் சிவத்தல்" என்ற தொடரால் வெகுளி குறிப்பிடப்பட்டது.

சந்திரன் சேக்கிழாரை அடைதற்கு நாணம் உற்றான் என்றது அவனிடம் உள்ள களங்கம்பற்றி என்க. களங்கமாவது வஞ்சகம் என்றும் பொருள்படும் அன்றோ? வஞ்சகர் வருதற்கு அஞ்சித் தம்மை மறைத்துக்கொள்வது இயல்பு.

நஞ்சுடைமை தான்அறிந்து நாகம் கரந்துறைவும்
அஞ்சா புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர்"

என்ற நீதிப்பாடலை ஈண்டு நினைவு கொள்க.

சான்றோர் முனிவுஉறார். அவர்கட்குமுனிவு வரின் பெரிதாகும். அதனைத் தடுத்தல் அரிது. இதனைத்தான் வள்ளுவர்,

"குணம்என்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது"

என்று அறிவுறுத்தினர். இதனால்தான் ஆசிரியர், "இனி முனிந்திடில் போக்கு வேறில்லை" என்றனர்.

பெரியோர்களால் பழிக்கப்பட்டவர், அற்பர் என்று வெறுக்கப்பட்டவர் ஆகியவர்கட்குப் புகழ் இல்லை. ஆகவே,

சேக்கிழார் சந்திரனைக் கீழ்மகன் அற்பன் எனக் கவிபாடின் அவனை யாரும் விரும்பார் என்றனர் பிள்ளை அவர்கள்.

சந்திரன் தட்சனால் சாபம் ஏற்று உடல் குறைவுற்று அதனை ஒழிக்கப் பிரமவிஷ்ணுக்களைக் சரண் புகுந்தபோது, அவனை ஏற்காது ஒதுக்கிவிட, அந்நிலையில் தளர்ந்த சந்திரன் சிவபெருமானைச் சரண்புக, அவனுக்கு அடைக்கலம் தந்து அவனை ஆதரித்தனன். அத்தகையவன் கூடத் தன் அன்பரால் இழித்துக் கூறப்பட்டானாயின், அவனை ஏற்கமாட்டான் என்ற குறிப்பில், "முக்கட் புராதனனும் உனை வெறுப்பன்" என்றனர். இறைவனுக்கு இன்னான் இனியன் என்பது இல்லை. இது குறுத்தே, "வேண்டுதல் வேண்டாமை இலான்" என்று இவனது பெருமை தெரிந்து வள்ளுவர் விதந்து கூறினார்.

இதனை மணிமொழியார் விளக்குவார்போன்று,

பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதும் திருவாயால் மறைபோலும் காணேடி
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டென்னை
ஈசன்அவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ

என்று இறைவனது வெறுப்பின்மையினை விளக்கினர். இங்ஙனம் விஷமுடைய பாம்பையும் ஏற்கும் பரமனும், "உன்னைச் சேக்கிழார் வெறுக்கும் காரணத்தால் வெறுப்பான்," என்பார், "முக்கட்புராதனனும் உனை வெறுப்பன்" என்று கூறினர்" என்று கூறினும் அமையும். இறைவன் ஒருவனே புராதனன் ஏனைய யாவரும் புதியர்கள். இதனை மணிமொழியார், "பரமன் காண்க பழையோன் காண்க" என்றும், "முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருளே" என்றும் கூறியுள்ளார். அப்பர் பெருமானும், "மூலநோய் தீர்க்கும் முதல்வன் கண்டாய்" என்றும், "முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி" என்றும் அறிந்து கூறியதைக் காண்க.

'மேயினேன் மேயினேன்' என்றது அடுக்குத் தொடர். இவ்வாறு அடுக்கிவரும் உண்மையினைத் தொல்காப்பியர்,

''இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தல்என்
றவைமூன் றென்ப ஒருசொல் அடுக்கே''

என்பர். ஈண்டுப் பொருளொடு புணர்தல் பற்றி இவ்வடுக்கு வந்துளது, மேவுவேன் மேவுவேன் என்று எதிர்காலத்தில் இருக்க வேண்டியது மேயினேன் மேயினேன் என்றது கால வழு அமைதிபற்றி ஆகும். இவ்வாறு வரப்பெறும் என்ப தற்கும் தொல்காப்பியர்,

வாராக் காலத்தும் நிகழும் காலத்தும்
ஓராங்கு வரூஉம் வினைச்சொல் கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனார் புலவர்

என்று விதிவகுத்துக் கூறினர்.

சேக்கிழார் அவதரித்த தலம் ஆதலின், ''விண்ணவர் விழையும் குன்றை'' என்றனர். இப் பாடல் தண்ட உபா யத்தால் சந்திரனை அழைத்தலைக் கூறுகிறது. (71)

# 8. சிற்றில் பருவம்

1. வாரும் திருவீ தியின்ஒருசார்
வண்ணித்த திலங்கள் கொடுமுயன்றில்
வகுக்கும் திறத்தே அறிவுசெலும்
மாண்பால் நினது வரவுணரா
தாரும் இருக்கை எழாதிருந்தோம்
அறிந்து தருக்கி இருந்திலமால்
அண்ணல் அஃதுள் கொண்டுபகை
அமையப் பாராட் டுதல்அழகோ
ஓரும் புகழ்க்கற் பகத்தளிகள்
ஒருங்கு மொய்ப்ப தெவன்என்றே
உம்பர் நடுங்கி நிலைகுலைய
ஒருவேற் றுமையும் உணர்வரிதாச்
சேரும் பொழில்தண் டகநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்வம் செருக்கு குன்றையருள்
செல்வா சிற்றில் சிதையேலே

*[அ. சொ.] ஓரும்-ஆராயும், அளிகள்-வண்டுகள், எவன்-என்னே, உம்பர்-தேவர்கள், பொழில்-சோலை, உம்பர்-மேல் இடம், தண்டக நாடா-தொண்டை நாடனே, வாரும்-நீண்டிருக்கும், திரு-அழகிய, சாரி-பக்கம், வண்ணித்திலங்கள்-வளமான முத்துக்கள், கொடு-கொண்டு, மாண்பால்-மாட்சிமையால், ஆரும்-யாரும், இருக்கை-இருப்பிடத்தைவிட்டு, அண்ணல்-பெருமையில் சிறந்தோனே, அமைய-பொருந்த, திறம்-செயல், செருக்குதல்-மயங்குதல்.*

**விளக்கம்:** *சிற்றில் சிதைத்தலாவது பெண்கள் மணலாலும், சிறுகற்களாலும் வீதியில் சிறுவீடு கட்டி விளையாடும்*

போது அதனைக் காலால் தள்ளிக் கலைத்துவிட்டு விளையாடும் விளையாட்டாகும், ஆண்பாற் சிறுவர்கள் இவ்வாறு காலால் சிதைத்து விளையாடிய செய்தியினைக் கலித்தொகையிலும் காண்கின்றோம். இதனை,

சுடர்த்தொடீ கேளாய்! தெருவில் நாம்ஆடும்
மணல்சிற்றில் காலில் சிதையா அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யும் சிறுபட்டி

என்று கலித்தொகை கழறுதல் காண்க. இது சிறுவனது இரண்டாம் ஆண்டில் நிகழும் நிகழ்ச்சி என்பர்.

திருவீதிகள் நீண்டு இருப்பது சிறப்பாதலின் வாரும் என்றனர். வார் நீண்ட என்ற பொருளது என்பதை "வாராரும் கடல்" என்ற இடத்துக்காண்க. விழா அறுவீதி ஆதலின் திருவீதி ஆயிற்று. நித்திலங்கட்குச் சில குறைகள் உண்டு. இதனை முன்பே கூறியுள்ளோம். அக்குற்றங்கள் அமையா நித்திலம் என்பார் 'வண்ணித்திலம்' என்றனர். சிற்றிலை மணலால் அமைப்பது வழக்கம். இங்கு அமைத்த சிற்றில் முத்தால்ஆனதாம். இதனால் நாட்டின் வளன் கூறிய தாயிற்று. இவ்வாறு சிறப்பிப்பது வீறுகோள் ஆணியின் பால்படும். இவ்வாறு பெண்கள் நித்திலத்தாலும், மணியாலும் சிற்றில் இழைத்தனர் என்பதை,

கழுவா மணியும் நிலவுவிரி
கதிர்நித் திலமும் உமைஅம்மை
கண்ணில் உறுத்த அடிகேள்நின்
காலில் உறுத்தல் கடன்அன்றால்

என முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழில் வருதல் காண்க.

சிறுபறைப் பருவத்தை முன்கூறிச் சிற்றில் சிதைத்தலைப் பின் கூறும் வழக்கமும் உண்டு. அதுபோது சிறுபறைப்

பருவச் செயல் இரண்டாம் ஆண்டுச் செயலாகவும், சிற்றில் பருவச் செயல் மூன்றும் ஆண்டுச் செயலாகவும் அமையும், இதனை "இரண்டாம் ஆண்டில் சிறுபறை கொட்டலும், மூன்றும் ஆண்டில் சிற்றில் சிதைத்தலும்" என்று பிங்கலந்தை அறிவிக்கின்றது.

சிறுமியர்கள் சிற்றில் இழைத்துச் சிறு சோறு அட்டு விளையாடியதைத் திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்,

பொன்னின் மணக்கும் புதுப்புனலில்
புடைசூழ் பணிலம் முத்தெடுத்துப்
புறக் கோட்டகம் உண்டாக்கிவலம்
புரியைத் தூதைக் கலம்அமைத்துக்
கன்னி மணக்கும் கழனியில்செங்
கமலப் பொகுட்டு முகைஉடைத்துக்
கக்கும் செழுந்தேன் உலைஏற்றிக்
கழைநித் நிலவல்சியைப்புகட்டிப்
பன்னி மணக்கும் புதுப்பொழிலில்
பலபூப் பறித்துக் கறிதிருத்திப்
பரிந்து சிறுசோ றடும்அருமை
பாராய் அயிரா வதப்பாகன்
சென்னி மணக்கும் சேவடியால்
சிறியேம் கிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியும் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே

என்று பாடியிருப்பதையும் ஈண்டுக் காண்க.

ஒன்றில் தம் கருத்தைச் செலுத்தி, அதில் ஆழ்ந்திருப்ப வர்கள் தம்மை நோக்கி மிகப் பெரியவர்கள் வரினும், கவனியாதிருத்தல் இயல்பு. அப்படி இருத்தல் தவறே ஆகும். அதனால் தீங்கே வரும். இந்த உண்மை இந்திரன் தனது குல குருவாம் வியாழபகவான் வந்தபோது எழாது, வரவேற்காது இருந்ததால் சாபம் ஏற்றான் என்பதைத் திருவிளையாடற் புராணத்தால் அறிகிறோம். இதனை,

பையரா் வணிந்த வேணிப் பகவனே அனைய தங்கள்
ஐயனும் விழாப் புத்தேள் ஆயிடை அடைந்தான் ஆகச்
செய்யதாள் வழிபாடின்றித் தேவர்கோன் இருந்தான்
அந்தோ
தையலார் மயலில்பட்டோர் தமக்கொரு மதியுண் டாமோ

என்ற அப்புராணப் பாடலால் அறிக. இது போல இருக்கை நின்று எழாதிருந்த காரணத்தால் சேக்கிழாராம் குழந்தை சிற்றில் சிதைத்தனர் என்றனர். இருந்தாலும் சிற்றில் அமைத்த சிறுமையர் தம் குற்றம் உணர்ந்து 'தருக்கி இருந்திலம்' என்பதால் அவர் தம் பணிமொழி புலனாகிறது.

திரு. பிள்ளையவர்கள் தொண்டை நாட்டுச் சோலை வளம் கூறும்போது, அச்சோலைகள் தெய்வலோகச் சோலை அளவு சென்று வண்டுகள் மொய்க்கப் பெற்று விளங்கின என மரங்களின் உயர்ச்சியினை உயர்வு நவிற்சி அணி தோன்றப் பாடியுள்ளனர்.

தெய்வலோகச் சோலைகளில் கற்பகவிருட்சத்தில் வண்டுகள் மொய்க்கமாட்டா. ஆனல், தொண்டை நாட்டுச் சோலையில் உள்ள மரங்கள் தெய்வலோகச் சோலையுடன் கற்பகத்தருவுடன் கலந்து இருந்தமையில் வண்டுகள் மொய்த்த வண்ணம் இருந்தன. இங்ஙனம் தங்கள் சோலையில் வண்டுகள் மொய்ப்பதைக் கண்டதனால்தான் தேவர்கள் நடுங்கி நிலைகுலைந்தனர்.

தண்டக நாடு என்பது தொண்டை நாடாகும். தொண்டை நாடு தண்டக நாடு என்ற பெயரும் உடையது என்பது,

முக்கணன் கணநா தர்க்கு
முதன்மைத்தூண் டீரன் ஆண்டு
மிக்கதுண் டீரன் நாடாய்த்
தண்டக வேந்தன் தாங்கித்

தக்கதண் டகன்நன் நாடாய்த்
தபனன்மா குலத்துச் சோழன்
தொக்கதார்த் தொண்ட மான்காத்
தாயது தொண்டை நாடே

என்ற செய்யுளால் தெரிய வருகிறது. தண்டகன் என்பவன் இட்சுவாகுவின்மகன். இவன் தன் பிதாவால் சபிக்கப் பட்டு விந்த மலையினை அடைந்தனன். அங்கு நாடு கண்டு ஆண்டுவந்தனன். அங்கும் அகத்தியரால் சபிக்கப்பட்டனன். அதனால் நாடு அழிந்து தண்டக வனம் ஆயிற்று. பின்பே அது தொண்ட நாடாயிற்று.

செருக்கு எனினும் பெருமிதம் எனினும் ஒன்று. இது எண்வகை மெய்ப்பாடுகளில் ஒன்று எண்வகை மெய்ப் பாடுகள் இன்ன என்பதை,

"நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகைஎன்
றப்பால் எட்டே மெய்ப்பா டென்ப"

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் தெளிக,

பெருமிதம் கல்வியாலும் அஞ்சாமையாலும், புகழாலும் கொடையாலும் தோன்றும் என்பது தொல்காப்பியர் கருத்து. இதனையும் அவர்,

கல்வி தறுகண் புகழ்மை கொடைஎனச்
சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே

என்று கூறியுள்ளனர். இதனால்தான் ஈண்டுப் பிள்ளை அவர்கள் செல்வச் செருக்கும் குன்றை என்றனர்,

இறைவன் திருவருளைப் பூரணமாகச் சேக்கிழார் பெற்றுள்ளமையின் அருட்செல்வர் எனப்பட்டனர். (72)

2. ஒழிக்கும் திறத்தில் அருகந்தன்
உறையா நின்ற பாழிகொல்அவ்
உறுவர் அமரும் பள்ளிகொல்மற்
றுள்ளார் ஆய பரசமயர்
பழிக்கும் படிவாழ் இருக்கைகொல்யாம்
பாங்கில் புரிஇச் சிறுவீடு
பதத்தில் சிதைத்தால் வருகின்ற
பயன்புண் ணியமோ புகழ்கொல்லோ
சுழிக்கும் செலவில் பாலிநதி
சுரந்து பாய மாலியானைத்
தொண்டை எடுப்பு மறையும்விதம்
துவன்றி வளர்ந்து விளைசெந்நெல்
செழிக்கும் வயல்தண் டகநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்வம் செருக்கு குன்றைஅருள்
செல்வா சிற்றில் சிதையேலே.

*(அ. சொ.) சுழிக்கும் செலல்-சுழித்துப் போகும் போக்கில், பாலிநதி-பாலாறு, மாலியானை-பெரிய யானை, தொண்டை-துதிக்கை, எடுப்பு-தூக்குதல், துவன்றி-நெருங்கி, அருகந்தர்-சமணர்கள், உறையாநின்ற-வாழ்கின்ற, பாழி கொல்-சமணப்பள்ளிகளா (இல்லையே) உறுவர் கோயில்-பௌத்த முனிவர் பள்ளிகளா (இல்லையே) பள்ளி முனிவர் வாழ் இடம், இருக்கை-இருப்பிடம், பாங்கு-அழகாக, பதத்தில்-திருவடிகளால், செலவு-செல்கை.*

**விளக்கம் :** *சேக்கிழார் பெருமானார் திருஞானசம்பந்தர் திருமடத்திற்குத் தீவைத்ததாலும், திருநாவுக்கரசர்க்குப் பல தீங்குகளை இழைத்ததாலும், சமணர்களையும் அவர் வாழ் இடங்களையும் வெறுப்பவர். சமணப்பள்ளிகளை, பாழிகளை இடித்து மகேந்திரவர்ம பல்லவன் குணபர ஈச்சுரம் கட்டினான் என்பதைச் சேக்கிழார் கூறும்போது,*

வீடறியாது சமணர்மொழி பொய்என்று மெய்யுணர்ந்த
காடவனும் திருவதிகை நகரின்கண் கண்ணுதற்குப்
பாடலிபுத் திரத்தில்அமண் பள்ளியொடு பாழிகளும்
கூடஇடித் துக்கொணர்ந்து குணபரஈச் சரம்எடுத்தான்

என்று எவ்வளவு குதுகலமாகக் கூறுகின்றார் பாருங்கள்! இப்படி எண்ணித்தான் எங்கள் சிற்றில் சிதைத்தீரோ என்று சிறுமியர் செப்பலாயினர். "ஒன்றைப் புரிவதால் புண்ணியமாவது, புருஷார்த்தமாவது உண்டாதல் வேண்டும். எங்கள் சிறு வீட்டைச்சிதைக்கின்றீரே இஃது உங்கட்குப் புண்ணியமோ புகழோ தருமா?" என்று இரந்து கூறினர் சிறுமியர்.

திரு. பிள்ளை அவர்கள் இப்பாடல் மூலம் பால் ஆற்றின் பலவகைச் சிறப்பையும், அந்நதியின் பாய்ச்சலால் நாட்டில் நெல்லின் வளர்ச்சியின் மேம்பாட்டையும், சைவ சமயத்தில் தமக்கு இருக்கும் பற்றையும், பிற சமயங்களிடத்தில் தமக்கு இருக்கும் வெறுப்பையும் உணர்த்தலுற்றனர். ஆறுகள் வெள்ளம் மிக்கு ஓடுகையில் நீரைச் சுழித்துக் கொண்டு ஓடுதலை இன்றும் காணலாம்.

முன்னொரு சமயம் காமதேனு இறைவனது ஊர்தியான விடையைக் கண்டு காமுற்றது. அதனால் கருக்கொண்டது. நந்திமலையில் வசிட்டர் தவம் செய்து கொண்டு இருந்தனர். அதுபோது தமது நித்திய வேள்விக்குப் பஞ்ச கௌவியம் கிடைக்கப் பெறுமையால் ஒரு தருப்பையை எடுத்துக் கன்றாக காமதேனுவினிடம் அனுப்ப, அதைக்கண்ட காமதேனு மடி சுரந்து அம்மலையில் பாலைப் பொழிந்தது. அஃது ஆறாகப் பெருக்கெடுத்தது அதுவே பாலாறாகும். இதனைக் காஞ்சிப் புராணம்,

பேரிசைப் புவிமேல் யார்க்கும் பெட்டன பெட்ட வாறே
சீரிதில் கொடுக்கும் தேனுத் தரவரும் செழுநீர்ப் பாலி

என்று அறிவிப்பதை அறியவும். இது பாலியின் வரலாறு.

செந்நெல் வளர்ச்சி யானை உயரும் வளரும் எனக் கூறி நெல் வளத்தை உணர்த்தியுள்ளனர். இதனை,

சேலு லாவித் திரியும் நிதிப்புனல்
மாலி யானை மறையக் கதிர்த்தலைச்
சாலின் நீடித் தழைத்து விளைவயல்
காலின் ஓடிக் கடிது விழுமரோ

என்ற பிரபுலிங்க லீலைப்பாடலாலும் தெளியவும். "தொண்டை எடுப்பு" என்பது யானை தன் துதிக்கையினைத் தூக்கும் எடுப்பை உணர்த்துவதாம். யானை மறைவதே அன்றி யானையின் தொண்டையும் (துதிக்கையும்) மறையும் அளவு நெல் வளர்ந்திருந்ததென்றால், நாட்டின் பொருள் வளத்தைப் புகலவும் வேண்டுமோ? இங்ஙனம் புகழ்ந்தது உயர்வு நவிற்சி ஆகும். (73)

3. வெய்ய அமையும் பரசமய
விருப்பம் சுமந்த திருவில்லார்
வினையைச் சிதைத்தி அவர்மாயை
வியச் சிதைத்தி ஆணவமும்
நையச் சிதைத்தி இவைசிதைத்தால்
நாடும் புகழ்புண் ணியம்இரண்டும்
நாளும் நினக்கு மேல்மேலாம்
நகையாம் எங்கள் செயல்சிதைத்தல்
வையம் வியக்கும் செங்கரும்பும்
வாழைக் குலையும் பசுங்கமுகும்
வயங்கும் இளநீர் இலாங்கலியும்
மகவான் அவைக்கோர் அலங்காரம்
செய்ய உயர்தண் டகநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்வம் செருக்கு குன்றையருள்
செல்வா சிற்றில் சிதையேலே

[அ.சொ.] வையம்-உலகம், கழுகு-பக்குமரம்- இலாங் கலி-தென்னை, மகவான்-இந்திரன், அவைக்கு-சபைக்கு, வெய்ய-கொடிய கொள்கைகளே, திரு-மோட்சத்திரு, அருள் திரு, ஞானத்திரு முதலியன, வினையை-பாவங்களை, வீய-அழிய, நைய-அழிய.

**விளக்கம் :** பரசமயம் என்பது ஈண்டுச் சமண பௌத்த சமயங்களையே ஆகும். அவர்கள்பால் சில கொடுமைகள் இருப்பனவாக நூல்களின் வாயிலாக அறிகிறோம். "நீற்று மேனியர் ஆயினர் மேல் உற்ற காற்றுக்கொள்ளவும் நில்லா அமணர்" "வேதவேள்வியை நிந்தனை செய்துழல் ஆதமில்லி அமணொடு தேரர்" "ஆகமச் செல்வனாரை அலர் தூற்றல் காரணமாகக் கூகையம் மாக்கள் குவிமுலையார் தம்முன்னே நாணமின்றி உழல்பவர்' என்று திருமுறைகளில் வருதல் கொண்டு இவர்களது சமயத்தை "வெய்ய அமையும் பரசமயம்" என்றனர்.

திருவாவது அருள்திருவாகும். திருவெண்ணீறு அணிவதும் திருவாகும். இது குறித்தே அப்பர் "திருவெண்ணீறு அணியாத திருவில் ஊர்" என்றனர். மாயை, ஆணவம் இன்ன என்பதுபற்றி முன்பே விளக்கப்பட்டது, தீயவர்களைச் சிதைப்பது அறமாகும். இதனை நாயனாரும்,

"கொலையில் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்"

என்று கூறியதும் காண்க.

நெடுமாறனும் தீயர்களை ஒறுத்துச் சினந்தனன் என்பது

'மன்னவன் மாறன் கண்டு மந்திரி யாரை நோக்கித்
துன்னிய வாதில் ஒட்டித் தோற்றஇச் சமணர் தாங்கள்
முன்னமே பிள்ளை யார்பால் அநுசிதம் முற்றச் செய்தார்
கொன்னுனைக் கழுவில் ஏற முறைசெய்க என்று கூற'

புகலியில் விந்த ஞானப் புங்கவர் அதனைக் கேட்டும்,
இகலிவர் எனினும் சைவர் இருந்துவாழ் மடத்தில் தீங்கு
தகவிலாச் சமணர் செய்த தன்மையால் சாலும் என்றே
மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த வேலே

என்று சேக்கிழாரே அறிவித்திருப்பதைக் காணும்போது புலப்படும் உண்மையாகும். ஆகவே, "நாங்கள் சிறுமியர் விளையாட்டாகக் கட்டிய வீடுகள். இவற்றைச் சிதைக்கலாமோ?" என்று பணிந்து கூறியாவாரும்.

"வையம் வியக்கும் செங்கரும்பு" என்றது அதனது, பருமையும் சுவையும் நோக்கி என்க. கரும்புத் தெய்வ லோகப் பொருளாகும். அதனைப் பூலோகத்திற்குக் கொணர்ந்தவர்கள் அதிகமான் நெடுமான் அஞ்சியின் முன்னோர்கள் ஆவர். இதனைப் புறநானூறு,

> அமரர் பேணியும் ஆகுதி அருத்தியும்
> அரும்பெறல் மரபின் கரும்பிவண் தந்து

என்று குறிப்பிடுதல் காண்க. ஆகவே, வையம் வியக்கும் கரும்பாயிற்று எனினும் ஆம். மேலும், குன்றத்தூர்க் கரும்பு, பாக்குமரப் பருமனில் வளர்ந்திருந்தமையின் "வையம் வியக்கும் செங்கரும்பு" எனப்பட்டது எனினும் ஆம். கரும்பு பாக்கு மரம்போலப் பருத்து இருந்தது என்பதை "கரும்பல்ல நெல் என்னக் கமுகல்ல கரும்பென்ன" என்று சேக்கிழார் வர்ணித்துள்ளமையாலும் உணரலாம்.

கரும்பு, வாழை, பாக்கு, தென்னை ஆகிய மரங்கள் இந்திரன் சபைக்கு ஓர் அலங்காரமாக இருந்தன என்றது, அவை அவ்வளவு உயர்ந்து வளர்ந்து ஆகாயம் அளாவச் சென்று தேவேந்திரன் சபையில் அசையத் தொடங்கின என நாட்டின் நீர்வள, நிலவளத்தைச் சிறப்பித்தவாறுகும், இவ்வாறு திரு. பிள்ளை அவர்கள் தண்டக நாட்டை வர்ணித்துள்ளனர். (74)

4. பொருந்து நிலத்தே ரால்உழுதல்
புகழாம் விதியும் அதுவாகும்
பொருந்தா நிலங்கா லால்உழுதல்
புகன்ற இரண்டுள் ஒன்றுமோ
வருந்தும் அரிய திருவடியும்
மண்டு புழுதி அடையும்நறு
மலர்தோய் பவைமற் றிதுதோய்தல்
வழக்கோ கண்டார் சகுப்பாரோ
முருந்து முறுவல் மடமாதர்
முயங்கும் பொழில்வாய்க் கருஞ்சுரும்பர்
முரலா நின்ற பண்கேட்டு
முகத்து கொடுக்கும் பொன்காசில்
செருந்து மலர்தண் டகநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்வம் செருக்கு குன்றைஅருள்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ. சொ.) முருந்து - மயில் இறகின் அடிப்பகுதி போன்ற. முறுவல் - பற்களையுடைய, மடமாதர் - இளம் பெண்கள், முயங்கும்–சேரும், பொழில்வாய்-சோலையில் சுரும்பர்-வண்டுகள், முரலாநின்ற-ஒலித்துக் கொண்டிருந்த, பண்-இசை, காசின்-காசைப்போல, செருந்தும்-செருந்தி மலர், விதி-முறை, கடமை, நூலின் கொள்கை, உழுதல்-சிதைத்தல், புகன்ற-மேலே சொல்லிய, இரண்டுள்-புகழ், விதி என்ற இரண்டினுள், அரிய-அருமையான, திரு-சிறந்த. மண்டு-மிகுந்து, புழுதி-மண், நறு-வாசனையுள்ள, இது-புழுதி, வழக்கோ–முறையோ, நீதியோ,

**விளக்கம்:** நிலத்தை ஏரால் உழுதல் புகழ்தரும் செயலாகும். புகழ்மட்டும் அன்றிப் பொருளுக்கும் இடனாகும் இதனை அறிந்தே எவரையும் சும்மா சோம்பி இருக்கவிடாது நிலத்தை உழுது பயிரிட்டு வாழ வேண்டும் என்றே

இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலம்என்னும் நல்லாள் நகும்

என்றருளினர் வள்ளுவர்.

"அலகுடை நீழலவர் பல குடை நீழலும் தம் குடைக் கீழ்க் காண்பர்" ஆதலின் உழுதல் புகழ்தரும் செயலாயிற்று. உழுவார் உலகத்தார்க்கு ஆணி. "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" "இரவார் இரப்பார்க்கு ஒன்று ஈவர்." "கரவாது கைசெய்து ஊண் மாலையவர்" "உழவினார் கைம்மடங்கின் விழைவதூஉம் விட்டோம் என்பார்க்கும் இல்லை நிலை" ஆதலின் உழுதல் உழவர்கட்குப் புகழாதல் உணர்க.

இவற்றை எல்லாம் உணர்ந்தே திரு. பிள்ளை அவர்கள் "ஏரால் உழுதல் புகழாம்" என்றனர். "விதியும் அதுவாகும்" என்றும் கூறினர்.

இரண்டில் ஒன்று என்றது புகழ் விதி என்ற இரண்டில் ஒன்று. பொருந்தா நிலம் என்றது மணலால் சிறு வீடு கட்டி ஆடிய இடம். வீடு மணலால் கட்டப்பட்டது. அதனைக் காலால் சிதைத்தால் மெல்லிய காலுக்கு ஊறு உண்டாகும், ஆகவே, "வருந்தும் அரிய திருவடி" என்றனர். அதோடு மாசும் உறும் "என்றதனால் அரிய திருவடி" என்றனர்.

சிற்றில் சிதைப்பதால் திருவடிகள் மாசுறும், மேலும் பல விதத்தில் ஊறுகள் ஏற்படும் என்பதைத் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ் அழகுற,

தையல் மடவார் இழைத்தவண்டல்
தன்னை அழிக்கும் அதுக்கல்ல
தரளம் உறுத்தி உனது பொற்பூந்
தண்டைத் திருத்தாள் தடியாதோ
துய்ய தவளப் பிறைமுடிக்கும்
சோதி எடுத்து முகந்தணைத்துத்
தோளில் இருத்தும் பொழுதுமணித்
தோளில் புழுதி தோயாதோ

வையம் அனைத்தும் ஈன்றெடுத்தும்
வயது முதிரா மடப்பாவை
மடியில் இருத்தி முலைஊட்டி
வதனத் தணைக்கில் உன்கழல்கால்
செய்ய சிறுதூள் செறியாதோ
சிறியேம் சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியும் திருச்செந்தூர்ச்
செல்வர் சிற்றில் சிதையேலே

என்று பாடிய பாடலையும் பன்முறை படிக்க.

பெரியோர்கள் திருவடிகளை வந்தித்து மலரிட்டு அர்ச்சிப்பது சைவ மரபு. இதனைப் பெரிய புராணத்துள், பரக்கக் காணலாம். இளையான் குடிமாற நாயனார் புராணத்துள் அடியாரை அர்ச்சித்தவிதம் கூறப்பட்டிருத்தல் காண்க. "கொண்டு வந்து மனைப்பு குந்து குவாவு பாதம் விளக்கியே, மண்டு காதலின் ஆசனத்திடை வைத்தருச்சனை செய்த பின்," என்று கூறப்பட்டிருத்தல் கொண்டு, பெரியோர்கள் திருவடிகளை மலரால் அர்ச்சித்த முறையைக் காண்க. ஆகவே, சேக்கிழார் திருவடி மலர் தோய்தற்குரியது என்பதும், அது மணல் தோய்தற்குரியது அன்று என்பதும் கூறப்பட்டன.

மாதர்களின் பற்கள் வெண்ணிறமானவை. அவ் வெண்ணிறத்திற்கு உவமையாக ஈன்டு மயில் இறகின் அடிப்பகுதி கூறப்பட்டது. "முருந்தேர் இளநகை" என்று சிலம்பு செப்புதல் காண்க. மடமாதர் என்றது இளம் பருவப் பெண்களையாகும். அறிவில்லா மாதர் என்பதன்று.

சோலைகளில் மாதர்கள் வந்து சேர்வர் ஆதலின்; "மடமாதர் முயங்கும் பொழில்" என்றனர். மாதர்கள் சோலையை விரும்பிப் புக்கதைப் பரஞ்சோதியார்,

கூந்தல் பிடியும் பரியும் ஊர்வார்
கொழுநர் தடம்தோள்
ஏந்தச் சயமா தென்னத் தழுவா
இழிந்து பொழில்வாய்ப்

பூந்தொத் தலர்போல் கொடிதா
துகுமா றென்னப் புனைந்த
சாந்தம் கலவை யுகப்போய்
வனமங் கையர்போல் சார்ந்தார்

என்று பாடியுள்ளதைக் காண்க.

சோலைகளில் வண்டு ஒலித்தல் இயல்பு. அவ்வொலி பண் பாடுதல் போன்றது என்பது கவிகள் கூறிவரும் மரபாகும். 'வண்டு பாட மயில் ஆல' என்ற சம்பந்தர் வாக்கையும், 'அரும்பருகே சுரும்பருவ அறுபதம் பண்பாட' என்ற சுந்தரர் மொழியையும் காண்க. இங்ஙனம் பாடுபவர்க்கும் (மயில்கள் தோகை விரித்து ஆடும்) ஆடுபவர்க்கும் அங்குள்ள கொன்றை மலர்களும், செருந்தி மலர்களும் பரிசாகக் காசை அளிப்பதுபோல மலர்களைச் சிந்தும். இவ்வாறும் புலவர் பெருமக்கள் பாடுவர்.

வரைசேரும் முகில்முழவ மயில்கள்பல
நடமாட வண்டுபாட
விரைசேர் பொன் இதழிதர மென்காந்தள்
கையேற்கும் மிழலையாமே

என்று சம்பந்தர் பாடிய பாடலால் தெளியவும்.

இங்குச் செருந்தி மலர் பொன்காசுகளாக அமைந்து, பாட்டிற்குப் பரிசளித்ததாகப் புலவர் கூறுகிறார். 'செருந்தி மலர் பொன்னிறமுடையது. இதனை நமது காழிப்பிரானார், 'செருந்தி செம்பொன் செயும் திருநெல்வேலி' என்றும், திருமங்கை ஆழ்வார், 'பொன் அலர்ந்த நறும்செருந்திப் பொழில்'' என்றும் சிறப்பித்த ஆற்றாலும் அறியலாம். (75)

5. உற்ருர் சகியார் புனல்ஆட்டல்
உரியார் பலரும் அடிக்கடிஇவ்
ஒல்லாப் புழுதி தோய்வெவன்என்
றுரைப்பார் தவம்செய் தருமருந்தில்
பெற்ருர் செவியோ ரினும்பதைப்பார்
பிறங்கக் காணில் என்படுவார்
பேசா அருமை பாராட்டிப்
பேணி எடுப்பா ரையும்சினப்பார்
கற்ருர் அரிய நூல்பலவும்
கண்டார் விளங்க நூலின்உரை
கரைந்தார் வரைந்து சிவன்அடியில்
கலந்தார் கடிந்து பரசமயம்
செற்ருர் செறிதண் டகநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்வம் செருக்கு குன்றையருள்
செல்வா சிற்றில் சிதையேலே.

*(அ. சொ.) கண்டார்-நூல் பல இயற்றுவோர், கரைந்தார்-சொன்னவர், வரைந்து-விலக்கி, செற்ருர்-கடிந்தவர், செறி-மிகுந்த, உற்ருர்-அன்புடையவர், புனல் ஆட்டல் உரியார்-நீராட்டுபவர், ஒல்லா-சேராத, பொருந்தாத, தோய்வு - படிதல், எவன் - எப்படி, அருமருந்தில்-அருவையான தேவாமிருதத்தைப் போல, ஓரினும்-கேட்டாலும், பிறங்க-மண் புழுதி படிந்து விளங்குதலை, என்படுவார்-எந்த நிலையை அடைவாரோ, பேசா-இனிய மொழிகளைப் பேசி, பேணி-பாராட்டி, சினப்பார்-கோபிப்பார்.*

**விளக்கம்:** *குழந்தை, பெண்பால் சிறுவர்கள் வீடு கட்டக்கட்ட உதைத்துத் தள்ளி விளையாடுதலின், அதனால் பாதத்தில் புழுதி படிதல் கண்டு உறவினர்களும் அன்பர்களும் தாதிமார்களும் அடிக்கடி புழுதி தோய்வதற்குக் காரணம் என்ன என்று கேட்க நேர்ந்தது.*

பிள்ளைப் பேறு எளிதில் கிடைப்பது இல்லை. அதற்குத் தவமும் புண்ணியமும் தேவை. 'மலையிட்ட செல்வத்தார்கள் மகிழ ஓர் மகவும்தாரான் அலையிட்ட முட்டாள் செய்ய அம்புயத்துறைவோன்' என்று திரு. பிள்ளை அவர்களே குசேலோபாக்கியானத்தில் பாடியுள்ளார். இந்நூலைப் திரு பிள்ளை அவர்கள் பாடினர் என்பது ஒருமரபு, தவத்தால் பிள்ளைப்பேறு பெறலாம் என்ற நம்பிக்கையினுல்தான் தனபதி செட்டியார் தவத்தை மேற்கொள்ளக் கானகம் சென்றார், என்பதைத் திருவிளையாடற் புராணம், 'பிள்ளைப் பேறு தருதவம் புரிவேன் என்றுத் தனபதி தவமேற் சென்றார்' என்று கூறுகிறது. பெரிய புராணமும் பிள்ளைப் பேற்றிற்குத் தவம் தேவை என்பதை,

மனைஅறத்தின் இன்பமுறும்
மகப்பெறுவான் விரும்புவார்
அனையநிலை தலைநின்றே
ஆடியசே வடிக்கமலம்
நினைவுறமுன் பரசமயம்
நிராகரித்து நீறுக்கும்
புனைமணிப்பூண் காதலனைப்
பெறப் போற்றும் தவம்புரிந்தார்

என்று அறிவிக்கின்றது. இவற்றை உணர்ந்தே "தவம் செய்து அருமருந்தில் பெற்றார்" என்றனர். வள்ளுவரும், மக்கட் பேற்றின் அருமையினை, "பெறும் அவற்றுள் யாம் அறிவ தில்லை, அறிவறிந்த மக்கட் பேறல்ல பிற" என்றும், "எழு பிறப்பும் தீயவை தீண்டா, பழி பிறங்காப் பண்புடை மக்கட் பெறின்" என்றும் கூறியுள்ளார்.

எந்தச் சிறு ஊறும் தம் குழந்தைகட்கு வந்ததாகக் கேட்டாலும் பெற்றோர்கள் பதைப்பர் என்பது அவர்கட்கு தம் பிள்ளைகள் மாட்டுள்ள பேர் அன்பைப் புலப்படுத்துவதாகும். கேட்டாலே துன்புறுவர் எனில், கண்டால் பெரிதும் துன்புறுவது அல்லரோ? ஆகவே, காணின் என்படுவர்? என்றனர். பெற்றோர்கட்குப் பிள்ளைகளிடத்துள்ள அன்

பால் தம் பிள்ளையை விருப்புடன் எடுத்துக் கொஞ்சவருவாரிடமும், தம் பிள்ளைகட்கு ஏதேனும் ஏதம் வருமென அவர்கள் எடுக்கையில், அவர்களையும் கோபிப்பர். ஆகவே, எடுப்பாரையும் சினப்பர் என்றனர். அன்றித் தாம் பெறாது பிறர் பிள்ளைகளை எடுத்து இனிது உரையாடுகிறவர்களும் சிற்றில் சிதைப்பதால் ஊறு உறும் ஒன்று அன்பால் கோபிப்பார் என்று கூறினும் அமையும்.

திரு. பிள்ளை அவர்கள் தொண்டை நாட்டினைப் பலபடி புகழ்ந்து, இப் பாட்டில் கற்றவர்கள் நிறைந்த தொண்டை நாடெனச் சிறப்பித்தனர். 'தொண்டை நாடு கல்வியால் நிறைந்த சான்றோர்கட்கு இருப்பிடம் என்பதை நன்கு ஓர்ந்தே ஔவையாரும் 'தெண்ணீர் வயல் தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து' என்று வரையறுத்து மொழிந்துள்ளனர். கற்றோர் என்படுபவர் இராமலிங்க சுவாமிகள், விசாகப்பெருமான் ஐயர், சரவணப்பெருமான் ஐயர், கந்தப்பையர், அந்தகக் கவி வீரராகவ முதலியார், படிக்காசுப் புலவர், இராமச்சந்திரக் கவிராயர், நல்லாப் பிள்ளை, அநதாரியப்பர், தொட்டிக் கலை சுப்பிரமணிய முனிவர். நூல் பல கண்ட சான்றோர்கள் சேக்கிழார், கச்சியப்ப சிவாசாரியார், திருவள்ளுவர், அருணகிரியார், குணவீர பண்டிதர், பவணந்தி முனிவர் முதலியோர்ள். நூலுக்கு உரை கண்டவர்கள் பரிமேலழகர், திருப்போரூர் சிதம்பர சுவாமிகள். சிவனடியில் கலந்தவர்கள் ஐயடிகள் காடவர்கோன், கண்ணப்ப நாயனார், கலிய நாயனார், மூர்க்க நாயனார், சிவநேச செட்டியார், பூம்பாவை, பூசலார், வாயிலார், திருக்குறிப்புத் தொண்டர் முதலியோர். பரசமய வாதம் புரிந்து வெற்றி கண்டவர்கள் இராமலிங்க சுவாமிகள், அப்பய்ய தீட்சிதர், சிவப்பிரகாசர், முதலியோர் ஆவர். (76)

6. தாங்கும் வளவன் அனபாயன்
தன்கண் மணியாய் அவன்அமைச்சர்
தங்கள் சூளா மணியாய்உத்
தமச்சோ ழப்பல் லவன்எனும்பேர்
ஓங்கும் படிகொள் விண்மணியாய்
உவக்கும் அடியார் சரித்திரமுற்
றுரைசெய் தருள்சிந் தாமணியாய்
உயர்வு பூணின் இளம்பருவ
வாங்கும் பிறைநல் நுதலார்செய்
வண்டல் சிதைக்க வேண்டுவதோ
வாழைக் குருத்து மதிநடுப்போய்
மாரன் குடைக்கோர் காம்பாகித்
தேங்கும் திருத்தண் டகநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்வம் செருக்கு குன்றைஅருள்
செல்வா சிற்றில் சிதையேலே

*[அ. சொ.] மதி-சந்திர மண்டலத்தின், மாரன்-மன்மதன், வளவன்-சோழ மன்னன், அனபாயன்-அனபாய சோழன், அமைச்சர்-மந்திரிமார், சூளாமணி-முடிமணி, உத்தமச் சோழப் பல்லவன்-அனபாயன் சேக்கிழார் பெருமானுர்க்கு இட்ட பட்டப்பெயர், படி-பூமி, விண்மணி, விண்ணில் விளங்கும் மணியாகிய சூரியன், உவக்கும்-மகிழும், சிந்தாமணி-தேவலோகத்தில் உள்ள மணி, பூணின்-ஆபணரங்களிஞல், நடு-வயிறு, தேங்கும்-அமையும், வாங்கும்-வளையும் பிறை-பிறைச் சந்திரனைப் போன்ற, நுதலார்-நெற்றியுடைய மாதர், வண்டல்-மகளிர் விளையாடும் சிற்றில்.*

**விளக்கம்:** தாங்கும் வளவன் என்றது கருத்து உயிர்கள் துன்புறுது செங்கோல் நடாத்தி உலகைக் காத்து வருவதாகும். "நெல்லும் உயிர் அன்று நீரும் உயர் அன்று, மன்னன் உயர்த்தே மலர்தலை உலகம்" என்று புறம் கூறுதலால்

மன்னன் உலகிற்கு உயிராகித் தாங்குதலின், "தாங்கும் வளவன்" என்றனர்.

கம்பரும் தயரதன் உலகுய்யக் கருணைத் தாங்கிக் காத்தமையினை,

வயிரவான் பூண்அணி மடங்கல் மொய்ம்பினுன்
உயிரெலாம் தன்உயிர் ஒப்ப ஓம்பலால்
செயிர்இலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிர்எலாம் உறைவதோர் உடம்பும் ஆயினுன்

என்ருர்.

அனபாயச் சோழன் சேக்கிழாரைத் தொண்டை நாட்டினின்றும் வரவழைத்துத் தன் கண்மணியினும் சிறப்பாகப் போற்றியதால், "அனபாயன் கண்மணியாய்" என்றனர். மன்னன் வரவழைத்த தோடின்றித் தனது ஆத்தானத்தில் தலைமை அமைச்சுப் பதவியினையும் ஈந்தனன். அமைச்சுப் பதவி ஈந்ததோடின்றி, உத்தமச் சோழ பல்லவன் என்ற பட்டத்தையும் ஈந்தனன். இதனை உமாபதி சிவனுர்,

அத்தகைய புகழ்வேளாண் மரபில் சேக்கி
 ழார்குடியில் வந்தஅருள் மொழித்தே வர்க்குத்
தத்துபரி வளவனும்தன் செங்கோல் ஓச்சும்
 தலைமைஅளித் தவர்தமக்குத் தனதுபேரும்
உத்தமச்சோ ழப்பல்ல வன்தான் என்றும்
 உயர்பட்டம் கொடுத்திட ஆங்கவர்நீர் நாட்டு
நித்தனுறை திருநாகேச் சுரத்தில் அன்பு
 நிறைதலினுல் மறவாத நிலைமை மிக்கார்

என்றதும் காண்க.

அனபாயனுக்குச் சேக்கிழார் சூளா மணியாய், அதாவது முடிமணியாய்த் திகழ்ந்தார் என்பது, அவரது திருவடிகளை வணங்கிப் போற்றியதனுல் அறிகிருேம். இதனையும் உமாபதியார்,

அண்ட வாணர்எதிர் தெண்டன் ஆகஅனை
வரும்வி ழுந்துபின் எழுந்துசீர்
கொண்ட சேவைகுல திலக ருக்கனைவ
ருங்கு றித்தெதிர் கொடுத்தபேர்
தொண்டர் சீர்பரவு வார்எ னப்பெயர்
சுமத்தி ஞானமுடி சூட்டிமுன்
மண்ட பத்தினில் இருத்தி மற்றவரை
வளவர் பூபதி வணங்கினான்.

என்று பாடியுள்ளமையால் அறியலாம்.

சேக்கிழார் ஒரு ஞான சூரியர் ஆதலின், "படி கொள்விண் மணியாய்" என்றனர். விண்மணி என்பது ஆகாயத்தில் ஒளிவிடும் சூரியன் ஆவான். அவன் பூமியில் வருதல் இல்லை. அப்படி அவன் வந்தால் எப்படியோ அப்படிச் சேக்கிழார் பூமியில் ஞான சூரியனாய் விளங்குதலின் "படிகோள் விண்மணியாய்" என்றனர். இஃது இல் பொருள் உவமை அணி. சேக்கிழார் அன்பர்களின் அஞ்ஞான இருளை நீக்கி மெய்ஞ்ஞான ஒளியினைத் தருபவர் என்பதை அவரே தமது நூலின் சிறப்பைக் கூறும்போது,

இங்கிதன் நாமம் கூறின்
இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டின் மாக்கள்
சிந்தையுள் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப்
புறஇருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும்
திருத்தொண்டர் புராணம் என்பாம்

என்று குறிப்பிட்டிருப்பதைக் காண்க.

நூலினைச் சூரியனாகக் குறிப்பிட்டதனால் அந்நூலை யாத்த ஆசிரியரும் கதிரவன் தானே? இங்ஙனம் புலவர்கள் தம்மையும் தம் நூலையும் புகழ்தல் மரபோ எனச் சிலர் ஐயம் கொள்ள லாம். ஐயங்கொள்ளுதற்கு இடமே இல்லை. இலக்கணத்தில் இதற்கு விதியும் உண்டு. இதனை,

மன்னுடை மன்றத்து ஓலை தூக்கினும்
தன்னுடை ஆற்றல் உணரார் இடையினும்
மன்னிய அவைஇடை வெல்லுறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
தன்னைப் புகழ்தல் தகும்புல வோர்க்கே

என்ற பவணந்தியார் கூற்றைக் காண்க.

ஈண்டுச் சேக்கிழார், "மன்னிய அவை இடை வெல்லுறு பொழுதினும்" என்ற முறையில் புகழ்ந்து கொண்டதாகக் கொள்ளலாம். இவ்வாறு புலவர்கள் தம்மைப் புகழ்ந்து கொண்ட இடங்கள் பல உண்டு. திருக்காளத்தி நாதர் உலா ஆசிரியர் சேறை கவிராஜ பிள்ளை அவர்கள்,

"செந்தமிழோர் தங்கள்இரு சீபாத தூளிபொர
வந்த புலவோர்தம் மார்பாணி—கந்தன்
அடிகையா ரப்பரவும் ஆசுகவி ராசன்
கடிகையார் கோலா கலன்" என்றும்,

என்பேர் வண்ணக் கட்சியதன்றி
எதிர்த்தவர் மார்பாணி
இந்தத் தேசப் புலவர் மனத்துக்கு
இடிஎன வந்தோன்காண்

என்றும், "ஏடாயிரம் கோடி எழுதாது தன் மனத்தே எழுதிப்படித்த விரகன் இம சேது பரியந்தம் எதிரிலாக் கவி வீரராகவன்" என்று அந்தகக்கவி வீரராகவ முதலியார் கூறியிருப்பதையும் காண்க.

மேலும் வேண்டுவார் அவ்வப்போது புலவர்கள் பாடிய சீட்டுக் கவிகளில் அறிந்து கொள்ளவும்.

சிந்தாமணி என்பது தெய்வ லோகத்தில் உள்ள ஒரு கல். அது வேண்டியதைத் தரவல்லது. அதுபோலச் சேக்கிழார் பெருமானும் தொண்டர் புராணம் பாடி, அதில் யார் யார் எதை விரும்புகின்றனரோ அவற்றையெல்லாம் தரும் முறையில் பாடி இருத்தலின், அவரைச் சிந்தாமணி என்றனர். அவர் அவர் உவக்கும் முறையில், வேண்டும் முறையில்

பெரிய புராணம் விடயங்களைத் தரும் என்பது முன்பே கூறப்பட்டது. என்றாலும், மீண்டும் நினைவு கொள்வதற்குச் சிந்தாமணி போன்ற தொண்டர் புராணம் வேண்டியதைத் தரும் என்பதற்கு ஓர் இடத்தைக் காட்டி மேலே செல்வோமாக. புராணம் என்றதும் வெறுங் கட்டுக் கதைகளைக் கூறிச் செல்லும் என்று கரைகிறவர்களும் இந்நாட்டில் உண்டு. அவர்கள் பெரிய புராணத்தை அவ்வாறு கருத முடியாது. பெரிய புராணம் ஒரு வரலாற்று நூல். ஆகவே, வரலாற்றறிவுடையார்க்கு வேண்டிய குறிப்புக்களையும் பெரிய புராணம் தன்னகத்தே கொண்டுள்ளது. இதற்குரிய சான்றுகளைப் பெரிய புராணம் கொண்டு நிலை நிறுத்துவோமாக. மூர்த்தி நாயனார் புராணத்துள்,

> கானக் கடிசூழ் வடுகக்கரு நாடர் காவல்
> மானப் படைமன்னன் வலிந்து நிலம்கொள் வானாய்
> யானைக் குதிரைக் கருவிப்படை வீரர் திரண்ட
> சேனைக் கடலும் கொடுதென்றிசை நோக்கிவந்தான்
>
> வந்துற்ற பெரும்படை மண்புதை யப்ப ரப்பிச்
> சந்தப்பொதி யில்தமிழ் நாடுடை மன்னன் வீரம்
> இந்தச்செரு வென்றுதன் ஆணை செலுத்தும் ஆற்றல்
> கந்தப்பொழில் சூழ்மது ராபுரி காவல் கொண்டான்

என்ற குறிப்பு வருகிறது.

இங்ஙனம் காவல் கொண்டவன் களப்பிரர் குலக் காவலனான அச்சுதவிக்கந்தன். இதனை வேள்விக்குடிப் பட்டயத்தாலும் அறியலாம்.

சிறுத்தொண்டர் புராணத்துள்,

> மன்னவர்க்குத் தண்டுபோய்
> வடபுலத்து வாதாவித்
> தொன்னகரம் துகளாகத்
> துணைநெடுங்கை வரைஉகைத்துப்

பன்மணியும் நிதிக்குவையும்
பகட்டினமும் பரித்தொகையும்
இன்னஎண் ணிலகவர்ந்தே
இகலரசன் முன்கொணர்ந்தார்

என்ற பாடல் உளது.

மன்னவன் ஆவான் ஈண்டு நரசிம்ம வர்ம பல்லவன். அவனுக்காகச் சிறுத்தொண்டர் (போருக்குச் சென்ற போது அவரது திருப்பெயர் பரஞ்சோதி என்பது) வாதாபி நகரத்திற்குப் படை திரட்டிச் சென்றனர். வாதாபி நகரம் அதுபோது இரண்டாம் புலிகேசியின் ஆளுகையில் இருந்தது. அவனைப் பரஞ்சோதியார் வென்றார். இக்குறிப்பே இப் பாட்டில் உள்ளது. இதனைச் சாளுக்கிய பட்டயங்களே குறித் துள்ளன.

நின்ற சீர் நெடுமாற நாயனார் புராணத்துள்,

ஆயஅர சளிப்பார்பால் அமர்வேண்டி வந்தேற்ற
சேயபுலத் தெவ்வர்எதிர் நெல்வேலிச் செருக்களத்துப்
பாயபடைக் கடல்முடுகும் பரிமாவின் பெருவெள்ளம்
காயமதக் களிற்றின்நிரை பரப்பிஅமர் கடக்கின்றார்

என்ற நெல்வேலிப் போர் குறிப்புக் காணப்படுகிறது.

இரண்டாம் புலிகேசியின் மகன் முதலாம் விக்கிர மாதித்தன் என்னும் சாளுக்கியன். இவனே நெடுமாற நாயனாருடன் போரிட்டவன். இறுதியில் நாயனாரே வென்றார். இதனைச் சேக்கிழார், "பஞ்சவனார் படைக் குடைந்து முனை அழிந்த வடபுலத்து முதல் மன்னன் படை சரியப் புனையும் நறும் தொடைவாகை பூழியர் வேம்புடன் புனைந்து" என்று குறிப்பிட்டுள்ளனர். இப்போர் நடந்தது நெல்வேலி என்னும் இடமாகும். இதற்குச் சோழ மண்ட லத்துத் தென்கரைப் பனையூர் நாட்டு நெல்வேலி என்று கல் வெட்டுக் குறிப்பிடும் சான்றும் உளது.

நெடுமாறன் நெல்வேலியில் வெற்றி கொண்டதைச் சுந்தரரும், "நிறைக்கொண்ட சிந்தையால், நெல்வேலி

வென்ற நின்றசீர் நெடுமாறன்" என்று போற்றியுள்ள தையும் காண்க. சேக்கிழார் பெருமானுர் இந்நாயனுர் புராணத்துள் நெல்வேலிப் போரைப் பற்றியும் படைகள் போர் புரிந்ததைப் பற்றியுமே பாடி இருப்பதன் கருத்து, நாயன்மார்கள் இறை அன்பு அடியார் அன்பு உடைய ராயினும், அதே சமயத்தில் வீரராகவும் இருந்தனர் என் பதையும் உணர்த்துவதற்காக என்பதையும் ஈண்டே உளம் கொள்ளுதல் வேண்டும். இது குறித்தே இவர், "வீரம் என்ஞல் விளம்பும் தகையதோ" என்றும் விளம்பியுள்ளனர்.

இந்தச் சாளுக்கியர் பாண்டியர் போரைப்பற்றிச் சாளுக்கியப் பட்டயமே ஒப்புக்கொள்கிறது.

பூசலார் நாயனுர் புராணத்துள்,

காடவர் கோமான் கச்சிக் கற்றளி எடுத்து முற்ற
மாடெலாம் சிவனுக் காகப் பெருஞ்செல்வம்
[வகுத்தல் செய்வான்

என்ற பாடல் உளது.

அக்காடவர் கோமான் என்பவன் இராஜசிங்கன் என்னும் பல்லவன். கச்சிக் கற்றளி என்பது காஞ்சிபுரம் சர்வ தீர்த்தக் குளத்தருகேயுள்ள கயிலாசநாதர் கோயி லாகும். இக்கோயிலுக்கு இவ்வரசன் பெருஞ்செல்வம் அளித்தான் என்பது கயிலாயநாதர் கோவில் கன்னடக் கல் வெட்டாலும் கேர்ந்தூர்ப் பட்டயத்தாலும், வக்கலேரிப் பட்டயத்தாலும் உணரலாம்.

இறைவர் அசரீரியாக இருந்து ராஜசிங்கனுக்கு உரைத்தார் என்பதைச் சேக்கிழார்,

நின்றஊர்ப் பூசல்அன்பன் நெடிதுநாள் நினைந்து
நன்றுநீ டாலயத்து நாளைநாம் புகுவோம் நீஇங்
கொன்றிய செயலை நாளைஒழிந்துபின் கொள்வாய் என்று
கொன்றைவார் சடையார் தொண்டர் கோயில்கொண்
[டருளப் போனுர்

என்று பாடிக் காட்டுகிருர்.

இவ்வாறு இறைவர் அசரீரியாகக் கனவில் சொன்னதைக் கயிலாயநாதர் வடமொழிக் கல்வெட்டும் அறிவிக்கின்றது.

கழற்சிங்க நாயஞர் புராணத்துள்,

காடவர் குரிசி லாராம் கழற்பெருஞ் சிங்க ஞர்தாம்
ஆடக மேருவில்லார் அருளிஞல் அமரில் சென்று
கூடலர் முனைகள்சாய வடபுலம் கவர்ந்து கொண்டு
நாடற நெறியில் ஏகநன்னெறி வளர்க்கும் நாளில்

என்ற பாடல் காணப்படுகிறது.

இதில் கழல்சிங்க நாயஞர் வடபுலம் சென்று மன்னர் களுடன் போர் புரிந்து வெற்றி கண்டார் என்ற குறிப்புக் காணப்படுகிறது. இச்செய்தி வேலூர்ப் பட்டயத்தால் அறிகிறோம். நாட்டினை அறநெறியில் வைக நன்னெறி வளர்த்தான் என்பதும் அப்பட்டயத்தால் அறியும் செய்தி யாகும்.

இம்மன்னன் இறைவன் உறைவிடங்களாகிய பல திருக் கோயில்களுக்குத் திருத்தொண்டு புரிந்தவன் என்பதைச் சேக்கிழார், "குவலயத்தரஞர் மேவும் கோயில்கள் பலவும் சென்று, தலைவரும் அன்பில் தாழ்ந்து தக்க மெய்த்தொண்டு செய்வார்" என்று குறிப்பிட்டுள்ளனர். இச்செய்தி திரு வொற்றியூர், திருவதிகை, திருவிடைமருதூர்க் கல்வெட்டுக் களாலும், வேலூர்ப் பட்டயத்தாலும் உணரலாம்.

இவனுக்கு உரிமை மாதர் சிலர் இருந்தனராகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றனர். இதனை,

விரைசெறி மலர்மென் கூந்தல்
உரிமைமெல் இயலார் தம்முள்
உரைசிறந் துயர்ந்த பட்டத் தொருதனித் தேவி

என்று பாடியுள்ள இடத்துக் காண்க.

இவன் உரிமை மாதர் சிலரை உடையவன் என்பதை இரட்ட அரசஞன அமோகவர்ஷ நிருபதுங்கன் மகளான சங்கா என்பவளை மணந்திருந்ததனுலும், மாறன் பாவை

என்பவளை ஒரு மனைவியாகக் கொண்டிருந்ததாகப் பாகூர்க் கல்வெட்டுப் பட்டயம் குறிப்பிடுவது கொண்டும் தெளியலாம்.

"உரை சிறந்து உயர்ந்த பட்டத்து ஒரு தனித் தேவி" என்றது சங்கா என்பவளை ஆகும். சேக்கிழார் உரை சிறந்து என்று ஏனைய பெண்களை எங்கும் குறிப்பிடாது ஈண்டுக் குறிப்பிட்டதன் நுண்கருத்து, பாகூர்ப் பட்டயத்துள் "திருமாலுக்கு வாழ்க்கைத் துணைவியாகப் பொருந்திய திருமகளைப்போல இராஷ்டரக்கூடர் குடும்பத்தில் தோன்றிய சங்கா என்ற மெல்லியலாள் நந்திவர்மருக்கு (கழற்சிங்கன்) வாழ்வரசியாக அமைந்தாள். அவளது பொறுமைக்கு நிலமகளை உவமை கூறலாம். குடிமக்களால் தாயாகப் பாராட்டப்பட்ட பெருமைக்குரியவள். அரசன் செய்த நல்வினையே ஓர் உரு கொண்டால் போலத் துலங்கினுள். இவள் பேர் அழகுடையவள். நுண் அறிவு வாய்ந்தவள். பல்கலையில் வல்லுநள்." என்று இவளைப்பற்றிக் கூறப்பட்டிருத்தலினுல் என்க. இவற்றையெல்லாம் நோக்கும்போது இவர் பல கல்வெட்டுக்களையும் ஊன்றிக் கவனித்துத் தம் நூலில் செய்திகளை அறிவித்துள்ளார் அன்றோ, என்பது தெரிகிறது.

இங்ஙனம் பல சான்றுகளால் சேக்கிழார் வரலாற்றுப் புலமை மிகுதியாக உடையார் என்பது புலனுகிறது.

சேக்கிழார் பெருமானுர், பரஞ்சோதியாராம் சிறுத்தொண்டர் இரண்டாம் புலிகேசியுடன் பொருது வெற்றி கொண்டார் என்றும், மகேந்திரவர்ம பல்லவன் அமண் பள்ளிகளையும் பாழிகளையும் இடித்துக் குணபர ஈச்சுரம் என்ற கோவிலைக் கட்டினுன் என்றும் கூறுதலால் அன்றோ திருஞான சம்பந்தர் அப்பர் காலங்களை அறிய முடிந்தது! ஆகவே, இன்னோரன்ன அரிய குறிப்புக்களை விழைவார்க்கு விழைந்த வண்ணம் ஈயும் புலவர் பெருமானுர் சேக்கிழார் ஆதலின், அவரைக் சிந்தாமணி என்றனர் திரு. பிள்ளை அவர்கள்.

சிறு வீடு கட்டி விளையாடிய சிறுமியர், உயர்ந்த அணி கலன்களை அணிந்திருந்தனர் என்பதையும் இளம் பருவத்தினராய் இருந்தனர் என்பதையும் வளைந்த பிறைச் சந்திரனைப்போன்ற நெற்றியினராய் இருந்தனர் என்பதையும் பிள்ளை அவர்கள் அழகுற மொழிந்திருப்பதைக் காண்க. "உயர்வு பூண்" என்றது, அளபந்தி, ஊசலாடும் குழை, முலை ஆரம், மணிக்கடகம், தோள் அணி, பாதச் சிலம்பு, மூக்கணி, காதணி, வளை முதலியன. சீதைக்கு அலங்காரம் செய்தபோது, இவற்றை அணிந்ததாகக் கம்பர்,

விதியது வகையால் வானம் மீன்இனம் பிறையை வந்து
கதுவுறு கின்ற தென்னக் கொழுந்தணி கலனுத் தூக்கி
மதியினைத் தந்த மேகம் மருங்குநா வளைப்ப தென்னப்
பொதியிருள் அளக பந்தி பூட்டிய பூட்டும் இட்டார்.

வெள்ளத்தின் சடிலத் தான்தன்
வெஞ்சிலை இறுத்த வீரன்
தள்ளத்தன் ஆவி சோரத் தனிப்பெரும்
பெண்மை தன்னை
அள்ளிக்கொண் டகன்ற காளை
அல்லன்கொல் ஆம்கொல் என்பாள்
உள்ளத்தின் ஊசல் ஆடும்
குழைநிழல் உமிழ விட்டார்

கோணிலா வான மீன்கள்
இயைவன கோத்த தென்கோ
வாணிலா வயங்கு செவ்வி
வளர்பிறை வகிர்ந்த தென்கோ
நாணிலா நகையின் நின்ற
நளிர்நிலாத் தவழ்ந்த தென்கோ
பூணிலா முலைமேல் ஆர முத்தையான்
புகல்வ தென்னே

தளைஅவிழ் கோதை ஓதிச் சானகி தளிர்க்கை என்னும்
முளரிகள் இராமன் செங்கை முறைமையில் நீண்ட நோற்ற
அளியன கங்குல் போதும் குவியல ஆகும் என்றுங்
கிளவெயில் சுற்றி அன்ன எரிமணிக் கடகம் இட்டார்

நிறம்செய் கோசிக நுண்தூசு நீவிநீ வாத அல்குல்
புறம்செய் மேகலையும் தாழத் தாரகைச்சும்மை பூட்டித்
திறம்செய் காசீன்ற சோதி பேதைசேய் ஒளியில் தீர்ந்த
கறங்குபு திரியத் தாமும் கண்விளக் கற்று நின்றார்

ஐயவாம் அனிச்சப் போதின் அதிகமும் நொய்ய ஆடல்
பையர அல்கு லாள்தன் பஞ்சின்றிப் பழுத்த பாதம்
செய்யபூங் கமலம் அன்னச் சேர்த்திய சிலம்பு சால
நொய்யவே நொய்ய என்றோ பலபட நுவல்வ தம்மா

என்று பாடியுள்ள பாடலகளால் தெளியலாம்.

பிரபுலிங்க லீலையில் கற்பனைக் களஞ்சியமாம் சிவப்பிர காசரும் மாயைக்குத் தோழிமார் அணிந்த பூண்கள் இன்ன என்பதையும் அழகுறக் கூறியுள்ளனர். அவற்றையும் ஈண்டு அறிதல் நம் அறிவுக்கு ஒரு பெரு விருந்தாகும் அன்றோ! அவர் பாடிய பாடல்கள் வழி அந்த நகை வகைகளையும் காண்க. அப்பாடல்கள்,

பின்னும் வேணிவார் குழல்எனும் கரியபேர் அரவம்
முன்னம் ஆர்தரு சுடர்களை உமிழ்ந்திடு முறைபோல்
கன்னி வாள் நுதல் மிசைக்கதிர் பிறையொடு கவினப்
பொன்ன வாம்சுணங் கவிர்முலை ஒருத்திகை புனைந்தாள்

ஓதி ஆகிய அறல்மிசைச் சுவடுற ஊர்ந்து
தீதி லாதவெண் சந்தனத் திலகவெண் மதிக்குப்
போதும் ஓர்சிறு பாம்பென மயிர்வகிர்ப் பொருந்தச்
சோதி மாமணிச் சுட்டிஒன் றொருத்தி தூக்கினாள்

அடுத்து மாதவம் அழிமின்என் றனங்கவேள் தமக்கு
விடுத்த ஓலையைக் கண்கள்தம் மேல்பழி விளம்பில்
கொடுத்த வேள்மிசை நிந்தைகூ றுதற்குவைத் திருத்தல்
கடுத்து வாழ்தர ஒருத்திபொன் ஓலைகா தணிந்தாள்

தன்னை நிந்தைசெய் வெண்ணகை மேல்பழி சார
மன்னி அங்கது நிகர்அற வாழ்மனை வாய்தன்
முன்இ றந்திடு வேன்என ஞான்றுகொள் முறைமை
என்ன வெண்மணி முக்கணி ஒருத்திநின் றிட்டாள்

கற்றை அம்குழல் நறுமலர்த் தொடையொடு கனமாய்
உற்ற ணங்குமென் றிலகுபூண் பிடித்ததை ஒப்ப

விற்ற யங்குவாள் நுதல்எழில் மாயைதன் மிடற்றில்
பொற்ற டம்தகட் டணிஒரு மடவரல் புனைந்தாள்

கன்னி அத்தம்வந் தினமணிக் கற்கட கத்தில்
மன்னி யுற்றதற் புதம்என வளைபல காக்க
வின்னு தல்கருங் கண்மட மாதுகை விளங்க
பொன்னின் நல்கட கம்புனைந்தனள் ஒருபூவை

ஆயும் இன்சுவை தரச்செலும் கையுடன்அடுத்து
வாயின் ஒண்கவின் காணிய மருவுறு மாபோல
மாயை தன்கையில் பொற்கட கத்தின்முன் வனைந்தாள்
தூய செம்பவ ளங்களைக் கோத்தொரு தோகை

மங்க லத்தொழில் ஆடவர் மனம்நடக் கிற்காக்
குங்கு மப்பெருஞ் சேற்றினைக் குறித்திடு கல்போல்
மங்கை யர்க்கொரு திலகமா கியஎழில் மாயை
கொங்கை யிப்புனைந் தனள்ஒரு பெண்மணிக்கோவை

பாயும் வெண்திரைக் கருங்கடல் நிலச்சுமை பாம்பின்
ஆயி ரம்படங் களும்திறை இட்டன அனைய
மீஇ லங்கொளி விரிமணி மேகலை வேய்ந்தாள்
மாயை மங்கைதன் அல்குலின் ஒருதிரு மடந்தை

கறைஅ டிக்களி யானையின் வரவினைக் கண்டு
மறுகின் உற்றவர் இரிதர மணிமருங் கிடல்போல்
உறுத வத்தினர் அறிந்தனர் ஓடஒண் ணுதற்கு
நறும லர்ப்பதத் தணிந்தனள் சிலம்பொரு நங்கை

என்பன. இன்னோரன்ன பூண்கள் உயர்வுபூண்கள் அல்லவோ?

வண்டல் என்பது மகளிர் சிற்றில் கட்டி ஆடுவதே ஆகும். இதனைச் சேக்கிழார் காரைக்கால் அம்மையார் புராணத்துள் சிறப்பாகக் குறிப்பிட்டும் உள்ளார். இதனை,

வண்டல்பயில் வனஎல்லாம்
வளர்மதியம் புனைந்தசடை
அண்டர்பிரான் திருவார்த்தை
அணையவரு வனபயின்று

என்ற அடிகளில் காண்க.

அம்மையாரது வண்டலாடல் இறைவனது தொடர்புடையதாக இருந்தமையின், அதனை எக்குழந்தையும்

சிதைத்திலது போலும்! இங்குள்ள சிறுமியர் அவ்விறைவன் சம்பந்தம் இன்றி ஆடினமையின், சேக்கிழாராம் குழந்தை சிதைத்தது போலும்!

ஈண்டும் உயர்வு நவிற்சி அணி அமையும்படி, திரு. பிள்ளை அவர்கள் வாழையின் வளத்தைப் புகழ்கிறார்.

வாழையின் குறுத்து நீண்டு வளர்ந்து ஆகாயம் அளாவச் சென்று, சந்திரனது நடுப்பகுதியில் நுழைந்து இருந்ததாம். அக்காட்சி மன்மதனது குடையாம் சந்திர வட்டத்திற்குக் காம்பாகப் பொலிந்ததாம். என்னே பிள்ளை அவர்களின் கற்பனைத் திறம்!

மன்மதனுக்குக் கிளிகள் குதிரை என்றும், தென்றல் தேர் என்றும், சந்திரன் குடை என்றும் புலவர் கூறுதல் மரபென்க. (77)

7. ஏதம் அகல வளவன்முனம்
ஏற்று குடிகள் ஒருநாற்பத்
தெண்ணா யிரத்துள் ஒருகுடிஎன்
றியம்பேம் அபயன் அமாத்தியருள்
போதம் மருவும் ஒருவன்எனப்
புகலேம் புராணம் செய்தாருள்
பொலியும் ஒருவன் எனநவிலேம்
புகலின் மூவ ருளும்ஒருவன்
றாதம் அகன்ற பரமன்என
நவிலின் அடைவ தடையுமென
நன்று தெரிந்தேம் எங்கள்செயல்
நயவா திருக்கும் திறம்என்னே
சீத வளத்தண் டகநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்வம் செருக்கு குன்றையருள்
செல்வா சிற்றில் சிதையேலே

[அ. சொ.] சீதவளம்-நீர்வளம், ஏதம்-துன்பம், வளவன்-கரிகாற் சோழன், முனம்-முன்னர், அபயன்-அனபாய சோழ மன்னன், அமாத்தியருள்-மந்திரிமார்களுள், போதம்-அறிவு, மருவும்-சேர்ந்திருக்கும், புகலேம்-சொல்ல மாட்டோம், பொலியும்-விளங்கும், நவிலேம்-சொல்ல மாட்டோம், புகலின்-சொன்னால், ஒரு குடி-ஒப்பற்றகுடி, மூவருளும்-அரி, அயன், அரன் என்ற மூவருள்ளும், நாதம்-நாத தத்துவம், அகன்ற-கடந்த, நவிலின்-சொன்னால், செயல்-சிற்றில் செய்து விளையாடும் செயலை, நயவாது-விரும்பாமல்.

**விளக்கம்:** வளவன் ஈண்டுக் கரிகாற்சோழன். அவன் காடுகெடுத்து நாடாக்கி நாற்பத்தெண்ணாயிரக் குடிகளைத் தான் கண்ட நாட்டில் குடியேற்றினான் என்பது வரலாறு. அதாவது கரிகால் சோழன் சிந்துமேதன் என்னும் பெயரிய வேடனால் காஞ்சி நகருக்குள்ள இடத்தைத் தேர்ந்து மதில்களைக் கட்டிக் குடி ஏற்றிப் பெருநகர் உண்டாக்கி வளம்பெற ஆண்டனன். இதனைப் பெரிய புராணம்,

என்றும் உள்ளஇந் நகர்கலி யுகத்தில் இலங்கு
　　வேல்கரி கால்பெரு வளத்தோன்
வன்தி றல்புலி இமயமால் வரைமேல் வைக்க
　　ஏகுவோன் தனக்கிதன் வளமை
சென்று வேடன் கண்டுரை செய்யத்
　　திருந்து காதம்நான் குட்பட வகுத்துக்
குன்று போலும்மா மதில்புடை போக்கிக்
　　குடிஇ ருத்தின கொள்கையின் விளங்கும்

என்று குறிப்பிடுதல் காண்க.

இவ்வாறு குடி ஏற்றப்பட்டவர் நற்குடிப் பெருமக்கள் என்றும், இக்குடியினர்போல் குடி ஏற்றப்பட்ட மற்றொரு தொகையினர் பன்னிராயிரவர் என்றும், அவர் பசுங்குடி என்றும் வரலாறு கூறும். தமிழ் நாட்டில் வடநாட்டினின்றும் கொணரப்புட்டுக் குடி ஏற்றப்பட்ட செய்தி

தொல்காப்பிய உரையாலும் புலனுகிறது. ''வடநாட்டி னின்றும் தென்னுட்டிற்கு வந்த அகத்தியர் நிலம் கடந்த நெடுமுடி அண்ணல் வழிக்கண் அரசர் பதின் எண்மரையும் பதினெண்கோடி வேளிர் உள்ளிட்டரையும் அருவா ளரையும் கொண்டுபோந்து காடு கெடுத்து நாடாக்கிப் பொதியின் கண் இருந்தார்'' என்று உச்சிமேற் புலவர்கொள் நச்சினுர்க்கினியர் எழுதி இருப்பதையும் காணவும்.

ஈண்டுக் கரிகால்வன் குடி ஏற்றிய நற்குடி நாற்பத் தெண்ணுயிரவர் வேளாளர் ஆவார். இதனை உமாபதி சிவனுர்,

நாடெங்கும் சோழன்முனம் தெரிந்தே ஏற்று
நற்குடிநாற் பத்தெண்ணு யிரத்து வந்த
கூடல்கிழான் புரிசைகிழான் குலைவு சீர்வெண்
குளப்பாக்கி ழான்வரிசை குளத்து ளான்முன்
தேடுபுக ழாரிவரும் சிறந்து வாழச்
சேக்கிழார் குடியில்இந்தத் தேசம்உய்யப்
பாடல்புரி அருண்மொழித்தே வரும்பின் நந்தம்
பாலறுவா யாரும்வந் துதித்து வாழ்ந்தார்

என்று உணர்த்தியவாற்ருல் அறியலாம்.

ஈண்டு, ''ஒரு குடி என்று இயம்பேம்'' என்று சிறுமியர் விதந்து கூறியதன் உட்பொருள், ''நாற்பத்தெண்ணுயிரக் குடிகளுள் ஒரு குடி சேக்கிழார் குடி என்று நாங்கள் இகழ்ச்சி தோன்ற இயம்பேம். அவற்றில் சிறந்த குடி சேக்கிழார் குடி என்பதே எங்கள் கருத்து,'' என்பதாகும். இதுதான் கருத்து என்பதை உமாபதியாரும், ''சிறந்து வாழச் சேக் கிழார் குடியில் இந்தத் தேசம் உய்யப் பாடல்புரி அருண் மொழித் தேவர்'' என்று சிறப்பித்திருப்பதாலும் உணரலாம்.

அபயன் ஈண்டு, அனபாய சோழன் ஆவான். அவன் அவனை அடைந்தவர்களின் பயத்தைப் போக்குவான் என்ற கருத்தில் இப்பெயரைப் பெற்றனன். அமாத்தியர் என்பார் அமைச்சர். அமாத்தியர் என்ற வடசொல்லின் பொருள் அரு

கில் இருப்பவர் என்பதாம். இதனை நந்தம் தமிழ் நூல் "உழை இருந்தான்" என்று உரைக்கும். தமிழில் தனித் தமிழ்ச் சொற்களுக்குக் குறைவு இல்லை. நினைந்து ஆளாமை நமது குறை திருவள்ளுவர், "உறுதி உழை இருந்தான் கூறல் கடன்" என்று கூறி இருப்பதைக் காண்க.

தமிழ் பிறமொழியின் துணை இன்றித் தனித்துத் திகழும் தன்மையது என்பதை நடுநிலை பிறழாது பன்மொழிகளை நன்கு ஆய்ந்து படித்தமேற்கு நாட்டவரான ரெவரண்டு கால்டுவெல் அவர்கள்,

The Tamil however, the most highly cultivated ab intra of all Dravidian idoms can dispense with its Sanskrit altogether, if need be, and not only stand alone, but flourish without its aid" என்று ஆணித்தர மாகத் தமது திராவிட மொழி, ஒப்பிலக்கண மொழி நூலில் எழுதி இருப்பதை ஈண்டு அறிதல் இன்றியமையாதது.

மந்திரிமார்களுள் ஒருவர் சேக்கிழார் என்றும் கூற மாட்டோம். அம்மந்திரிமார்களுள் தலை சிறந்த தலைமை அமைச்சர் என்றே கருதுவோம் என்பர், "ஒருவன் எனப் புகலேம்" என்றனர். "தன் செங்கோல் ஓச்சும் தலைமை அளித்து" என்று உமாபதியார் உரைத்திருப்பதையும் நினைவு கொள்வோமாக.

புராணம் செய்தவர்கள் பலர். அவர்களுள் ஒருவர் சேக்கிழார் என்றும் கூற முடியாது என்பது உண்மை. ஏனெனில் ஏனைய புலவர்கட்கு அந்தந்தப் புராண நாடு நகரங்கள் ஆதியாயவற்றைப் பாடும் வாய்ப்பு மட்டும் உண்டு. சேக்கிழார்க்குப் பல நாடு, பல நகர், பல மரபு இவற்றைப் பாடும் வன்மை அமைந்திருந்தமையின் ஏனைய புராணங்களைப் பாடிய ஆசிரியர்கள் இவருக்கு ஒப்பாகார் ஆயினர். இதனை உமாபதியார்,

ஒருலகோ ஒருதிசையோ ஒருபதியோ தம்மில்
ஒருமரபோ ஒருபெயரோ ஒருகாலம் தானோ
பேருலகில் ஒருமைநெறி தருங்கதையோ பான்மைப்
பெருங்கதையோ பேர்ஒன்றோ அல்லவே இதனை
ஏருலகெ லாம்உணர்ந்தோ தற்கரிய வன்என் [கொண்டு
றிறைவன்முதல் அடிஎடுத்துக் கொடுத்தருளக்
பாருலகில் நாமகள்நின் றெடுத்துக்கை நீட்டப்
பாடிமுடித் தனர்தொண்டர் சீர்பரவ வல்லார்

என்றதும் காண்க. இத்தகைய காரணங்களால்தான் "புராணம் செய்தாருள் பொலியும் ஒருவன் என நவிலேம்" என்று சிறுமியர் செப்பினர்.

மூவர் ஆவார் அரி, அயன், அரன் என்பவர்கள். அரன் என்பவன் முழு முதற் பரம்பொருளாம் முக்கண் மூர்த்தி அல்லன். அரன் ஆவான் உருத்திரனாவான். முக்கட்பரன் அரனில் வேறானவன் என்பதை மணிமொழியார் நன்கு விளக்கியுள்ளதைக் கீழ்வரும் திருவாசகப் பாடலில் சிந்தனை செலுத்தி உணர்தல் வேண்டும்.

பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த
நாவேறு செல்வியும் நாரணனும் நான்மறையும்
மாவேறு சோதியும் வானவரும் தாம்அறியாச்
சேவேறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ

என்ற பாடலைக் காண்க.

இங்ஙனம் இருக்கப் பரசிவப் பொருளை மூவருள் ஒருவனாகக் கருதலாமோ? கருதுகின்றவர்களைக் குறித்து இரக்கங்கொண்டே மணிமொழியார் மேற்கண்டவாறு ஒரு வாசகத்தை அருளியுள்ளனர்.

இவ்வுண்மை இங்ஙனம் இருக்க, இதனை உணராத நிலையில்,

நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்

என்று திருமழிசைஆழ்வாரும், அவர் தம் நூலுக்குத்தனியன் பாடிய சீராமப் பிள்ளை என்பவரும், இவரது கருத்தொட்டி,

"நாரா யணன்படைத்தான் நான்முகனை நான்முகனுக்கு
ஏரார்சி வன்பிறந்தான் என்னும்சொல்—சீரார்
மொழிசெப்பி வாழலாம் நெஞ்சமே மொய்பூ
மழீசைப் பரனடியே வாழ்த்து" என்றும் பாடியுள்ளனர்.

இவ்விருவர் தம் பாடலில் கண்ட உண்மைக் கருத்து. உலகில் மும்மூர்த்திகளே உயர்ந்த மூர்த்திகள் என்பதாகும், இம்மூர்த்திகளுள் திருமாலே முதல் மூர்த்தி என்பதும் ஆகும். இதனைத் திருமங்கை ஆழ்வாரும், "மூவருள் முதல்வனாய ஒருவனை" என்று திருமாலை உணர்த்தி உள்ளனர். ஆக, ஆழ்வார்களின் முடிபு இந்த மும்மூர்த்திகளுக்கு மேல் ஒரு மூர்த்தி இல்லை என்பது. உருத்திரனையே வைணவர்கள் சங்கரன் என்றும், சிவன் என்றும் கருதிவிட்டனர். ஆனால், சைவசமயம் எங்கும், மும்மூர்த்திகட்கு மேலும் ஒரு மூர்த்தியுமுண்டு என்றும், அதுவே பரம்பொருள், பெரிய பொருள், பரசிவம் என்றும் உணர்ந்து கூறியுள்ளது. இதனை அறிந்தேதான், ஈண்டுத் திரு. பிள்ளை அவர்கள் "நாதம் அகன்ற பரமன்" என்று கூறியுள்ளனர்.

நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகமும் முகிழ்த்தன முறையே

என்று ஐங்குறு நூல் என்னும் சங்க நூல் பாடலால் அம்மை அப்பனது திருவடியினின்றே மண், விண், பாதளம் என்னும் மூவுலகங்களும் தோன்றின என்று கூறியிருப்பதை நோக்குமிடத்து நான்முகன் எங்ஙனம் சங்கரனைப் படைக்க முடியும்?

மும்மூர்த்திகள் எங்ஙனம் தோன்றினர் என்பதையும், அம்மூர்த்திகளுக்கு மேலேயும் மூர்த்தி உண்டு என்பதையும் பிரபுலிங்க லீலை நன்கு விளக்கமாக எடுத்து உரைப்பதை ஈண்டுக் கூறாமல் மேலே செல்லுதற்கு இல்லை.

பரசிவம் பிரமம் என்னப் பட்டொரு திரிவும் இன்றி
உரைமனம் இறந்து நின்ற ஒருசிவ லிங்கம் தன்னில்
வருமுயர் சதாசி வன்தான் மற்றவன் தனைப்பொருந்தும்
அருமைகொள் ஞானசத்தி அவர்களால் சிவன் உதிப்பன்

சாற்றும்அச் சிவனுக் கிச்சா சத்திஅங் கிருவ ராலும்
தோற்றுவன் உருத்தி ரன் தான் சொல்லிய அவர்க்குச்சத்தி
மாற்றரும் கிரியை என்பர் மற்றவர் இருவர் பாலும்
போற்றுரும் அரியு திப்பன் பொறிஅவன் சத்தி யாமால்

அத்திரு மாலும் மாவும் அளிப்பவந் துதிப்பன் வண்டு
மொய்த்திசை முரலும் செங்கேழ் முளனவன் அவற்குச்
சத்திவெண் கமலே அன்னோர்தர வரும் உலகில் தோற்றம்
நித்தன்நம் குருகு கேசன் நினைவுமாத் திரையின் ஆமால்

என்ற பாடல்களைக் காண்க.

''மூவர் என்றே எம்பிரானொடும் எண்ணிவிண் ணுண்டு மண்மேல் தேவர் என்றே இறுமாந்தென்ன பாவம் திரிதர்வரே'' என்றுதிருவாசகம் இரக்கத்தோடு கூறியதையும் காண்க.

இரட்டையர்கள் இறைவனை மூவருள் ஒருவன் என்று கூறுதல் நரகத்திடை உய்ப்பதாகும் என்றே மொழிந்துள்ளனர். அப் பாடல்,

மூவா முதலா முதல்வனையும் மூவுலகில்
சாவார் பிறப்பார்கள் தங்களையும்—தேவாக
ஒக்க நினைவாருக் கல்லவோ ஓர்ஏழு
மிக்கநரகம் விதித்தது காண்

என்பது.

அப்பர் பெருமானூர் இவ்வாறு மக்கள் அறியாமையால் நாதம் அகன்ற பரனை மூவர்களுள் ஒருவராகக் கருதி நரகத்தில் இடர்ப்படுவரே என்று அவர்பால் இரக்கங் கொண்டு உபதேசிப்பாராயினர். அவ்வுபதேசங்கள்,

நூறு கோடி பிரமர்கள் நொங்கினூர்
ஆறு கோடி நாராயணர் அங்ஙனே
ஏறு கங்கை மணல்எண்ணில் இந்திரர்
ஈறி லாத ஈசன் ஒருவனே

வாது செய்து மயங்கு மனத்தராய்
ஏது சொல்லுவீர் ஆகிலும் ஏழைகாள்
யாதோர் தேவர்எனப் படுவார்க் கெல்லாம்
மாதே வன்அலால் தேவர்மற் றில்லையே

கூவ லாமை குரைகடல் ஆமையைக்
கூவலோ டொக்கு மோகடல் என்றல்போல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவர் தேவன் சிவன்பெருந் தன்மையே

எரிபெ ருக்குவர் அவ்எரி ஈசன
துருவ ருக்க மதாவ துணர்கிலார்
அரிஅ யற்கரி யானைஅ யர்த்துப்போய்
நரிவி ருத்தம தாகுவர் நாடரே

அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்
அருக்கன் ஆவான் அரன்உரு அல்லனோ
இருக்கு நான்மறை ஈசனை யேதொழும்
கருத்தி னைநினைப் பார்கன் மனவரே

தாயின் நல்ல சங்கர னுக்கன்பர்
ஆய உள்ளத் தமுதருந் தப்பெறூர்
பேயர் பேய்முலை உண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துப் பட்ட மனத்தரே

என்பன.

ஆகவேதான், சிறுமையர்கள் உண்மை உணர்ந்து "அப்படி மூவருள் ஒருவனெனப் பரமனைக் கூறின் அடைவது அடையும் என நன்கு தெரிந்தேம்' என்றனர். அடைவது அடைதலாவது நரகமாகும். ஈண்டு மூவருள் ஒருவன் அல்லன் இறைவன். அவன், "நாதம் அகன்ற பரமன்" என்பதை நன்கு உணர்த்தினர் திரு. பிள்ளை அவர்கள். நாதம் என்பது நாத தத்துவம். அகன்ற என்பது அதற்கும் அப்பாற்பட்ட என்பதாம். பரமன் துரிய சிவமாகும். "வேதம் கடந்த விமலன்" என்று கச்சியப்பரும் தெரிந்து கூறினர். இத்தகைய இறைவன் மூவருள் ஒருவன் என்பது சிவ நிந்தையாகும். நரகத்தையும் அடைவிக்கும்.

சிவப்பிரகாச சுவாமிகளும் இக்கருத்தைத் தமது நெஞ்சு விடு தூதில், "நஞ்சமர் கண்டனோடு நாரணனை ஒப்பாக்கும் பா நகர்" என்று கூறியுள்ளனர்.

அறிவைஎலாம் கடந்துமனம் கடந்து மற்றை
அறிவைஎலாம் கடந்துகடந் தமல யோகர்
உளவை எலாம் கடந்துபதம் கடந்து மேலை
ஒன்றுகடந் திரண்டுகடந் துரைச் சூழ்ந்த
களவைஎலாம் கடந்தண்ட பிண்ட மெல்லாம்
கடந்துநிறை வானஅக் கடலே அன்பர்
வளவையெலாம் இருள்அகற்றும் ஒளியே மோன
வாழ்வேஎன் உயிர்க்குயிராய் வதியும் தேவே

என்று வள்ளலார் இறைவன் நாதம் அகன்றவன் என்று அறிந்து கூறிய வாக்கை ஈண்டு நினைவு கூர்வோமாக.

ஆழ்வாருள் சிறந்தவரான நம்மாழ்வார் சிவபெருமானை மூவருள் ஒருவன் என்றே கூறவில்லை. அவன் மூவரில் வேறான ஒரு தனி முதல் பரம்பொருள் என்பதை நன்கு தெளிவுற, "ஒருவன் என்று ஏத்த நின்ற நளிர்மதிச் சடையன்" என்று விதந்து கூறியதைக் காண்க.

சிறுமியர்கள், சேக்கிழாரை நோக்கி, "மூவருள் ஒருவன், நாதம் அகன்ற பரமன் என்று நவிலின் அடைவது அடையும் என நன்று தெரிந்தேம்" என்றதன் கருத்து, நாத தத்துவம் கடந்த துரிய சிவத்தை மும்மூர்த்திகளில் ஒருவன் என்றால் எந்த நரகத்தை அடைவோமோ, அத்தகைய நரகத்தை நாங்கள் உம்மை நற்பத்தெண்ணாயிரக் குடிகளுள் ஒருவர் என்றும், அனபாயனது மந்திரிமார்களுள் நீரும் ஒரு மந்திரி என்றும், புராணம் செய்த பலருள் நீரும் ஒரு புராணம் செய்தவர் என்றும் கூறினால் அடைவோம்" என்று அறிவித்தவாறும். மேலும், அச்சிறுமியர்கள் சேக்கிழாரை, "நாதங் கடந்த துரிய சிவமாக எண்ணினர்", என்பது தெரிய வருகிறது. இந்த அரிய பெரிய உண்மைகளை—சைவ சித்தாந்த செம்பொருளை—சிறுமியர்கள் மூலம் திரு. பிள்ளை

அவர்கள் அறிவித்திருப்பது அவர்க்குச் சேக்கிழார்மீது இருக்கும் பற்றையும், சிவ பரம்பொருளினிடத்துக் கொண்டுள்ள அன்பையும், அவரது சித்தாந்த புலமையும் எடுத்துக் காட்டுவதாகும்.

இவ்வுண்மைகளை எல்லாம் உணர்ந்த எங்களை விரும்பாது சிற்றிலைச் சிதைத்தல் ஒண்ணுமோ என்று சிறுமியர் கூறினர் என்க. சீதவளம் என்றது குன்றத்தூர் நீர்வளத்தை என்க. (78)

8. பொன்னம் சிலம்பு புலம்படிமண்
பொருந்தித் துளையும் விழைவடையில்
பொலியும் பற்பல் உபநிடதம்
புகறல் கேட்டு நீறொருவும்
முன்னம் கொள்சிற் சிலர் நுதலின்
முயங்கிப் படிந்த மண்தோய்ந்து
முருங்கத் துளைதல் கூடிடில்அம்
மோகம் அவர்நீத் துய்வாரே
கன்னம் கரிய கடாப்பாய்ந்து
காமர் பொய்கை நீர்கலக்கல்
கழிந்தோட் டெடுக்க வரால்எழுந்து
கடுக மோதப் பலவுதிரும்
தென்னம் பழத்தண் டகநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்வம் செருக்கு குன்றைஅருள்
செல்வா சிற்றில் சிதையேலே

[அ.சொ.] கன்னம்கரிய-மிகக்கரிய, காமர்-அழகிய, ஓட்டெடுக்க-விரைந்து ஓட்டம் பிடிக்க, பல-பலாப்பழம், பொன்னம் சிலம்பு-பொற் சிலம்பு, புலம்பு-ஒலிக்கும், துளை-அழுந்திக் கிடக்கும், விழைவு-விருப்பம், பொலியும்-விளங்கும், புகறல்-கூறுதல், நீறு-திருநீற்றை, ஒருவும்-

நீக்கும், முன்னம்-எண்ணம், சிற்சிலர்-வைணவர், நுதலில்-நெற்றியில், முயங்கி-சேர்ந்து, மண்-திருமண் (நாமம்) முருங்க-உருவம் வேறுபடும்படி, துளைதல்-அழுந்தித் திளைப்பது, நீத்து-ஒழித்து, மோகம்-மயக்க ஆசை, உய்வர்-பிழைப்பர்.

**விளக்கம்:** சிலம்பு என்பது பெண்கள் காலில் அணியும் ஒருவகைக் காலணி. அவ் அணியினுள் பரல்கள் உண்டு. அதன் காரணமாக அவ்வணிஒலி செய்யும். சிலம்பில் பரல்கள் உண்டு என்பதைச் சிலப்பதிகாரம் நன்கு தெரிவிக்கிறது. அப்பரல் அவர் அவர்களின் செல்வ நிலைக்கேற்ப, முத்தாகவேனும், மாணிக்கமாகவேனும் அமையும். கண்ணகி அணிந்த சிலம்பில் மாணிக்கம் இருந்ததை, "என் கால் பொற்சிலம்பு மணியுடை அரியே" என்று அவளே கூறியதனாலும், "யாமுடைச் சிலம்பு முத்துடை அரியே" என்று பாண்டியனே கூறியதனாலும் தெரிந்து கொள்ளலாம். இச் சிலம்பு செல்வ நிலைக்கு ஏற்பப் பொன்னாலும் செய்யப்பட்டதும் உண்டு. கண்ணகி "பொற்சிலம்பு" என்று குறித்திருப்பதையும் "அரவிந்தத்தாள் அணியும் செம்பொற் சிலம்பே சிலம்பு" என்று ஔவையார் பாடி இருப்பதையும் கொண்டு அறியலாம். இவற்றைக் கொண்டே ஈண்டு "பொன்னம் சிலம்பு புலம்பு அடி" எனப்பட்டது. குழந்தைகட்கு மண் புழுதியில் படிந்து ஆடுதலில் விருப்பம் உண்டு என்பதை நாம் கண் கூடாகக் காண்கிறோம். ஆகவே "மண் பொருந்தித் துளையும் விழைவு" என்றனர்.

உபநிடதம் நூற்றெட்டு என்பர் ஒரு சிலர். ஆயிரத்து நூற்று எண்பது என்பர் மற்றும் சிலர். இவ்வாறு எண்ணிக்கை மிக்கிருத்தலின் "பற்பல" என்றனர். ஆனால், சிறந்த உபநிடதங்களாக அறிஞர்கள் கொள்வன காலாக்கினி உருத்திரம், தைத்திரியம், யோகதத்துவம், காபாலி, வாசுதேவம், பசுமசாபாலாம், பிருகச்சாபாலம், நாரதபலி விராசம், இராமரகசியம், சாண்டில்லியம், திரிபுரதாபுனி அதர்வசிரம், ஈசாவாசியம், பருகதாரண்யம், நாராயணீயம் என்பன.

மேலும், இவற்றையும் சுருக்கி, அதர்வசிகோபநிடதம், அதர்வசிரோபநிடதம், காலாக்சினி ருத்திரோபநிடதம், கைவல்லியோபநிடதம், சுவேதாச்சுவதரோடபநிடதம் என்ற இவ்வைந்தையும் சிறந்த உபநிடதங்கள் என்பர். இவ்வைந்தைப் பஞ்சருத்திரம் என்றல் மரபு. உபநிடதங்களில் திருநீற்றின் மாண்பும், அதனைத் தரித்தலினால் ஏற்படும் சிறப்பும் பெரிதும் பேசப்பட்டுள்ளன. "உண்மாசு கழுவுவது நீறு என்றே உபநிடதம் உரைப்பக் கேட்டு" என்று பரஞ்சோதியார் இந்த உண்மையை அறிந்து உரைத்திருப்பதைக் காண்க. "வேதத்தில் உள்ளது நீறு" என்பது நம் வேணுபுர வேந்தரின் அருள் வாக்கு. இது குறித்தே ஈண்டு, "உபநிடதம் புகலல் கேட்டும்" என்று கூறினர். சைவ சமயத் திருநீறு இந் நிலையில் வேத ஆகம உபநிடதங்களில் போற்றப்பட்டிருப்பதனால்தான், திருமால் முதலிய தேவர்கள் இதனை அணிந்து பேறு பெற்றனர்.

திருமால் திருநீறு அணிந்து திகழ்வதை நம்மாழ்வார் "கரியமேனிமிசை வெளிய நீறு சிறிதே இடும் பெரிய கோலத் தடங்கண்ணன் விண்ணோர் பெருமான்" என்று விளக்கமுற விளம்பியுள்ளனர். நாயக நாயகி பாவனை நிலையில் பாடிய நம்மாழ்வார், வெறி விலக்குதல் என்னும் துறையில் அமைத்துப் பாடுகையில் "கஜமுகா சூரனை அழித்த சிவபெருமானது திருநாமமாகிய நமசிவாய என்னும் ஐந்தெழுத்து மகாமந்திரம் கூறி வெண்திருநீறு இடுமாறு தெளிவுறத் தெரிவித்திருப்பதை "கவளக்கடாக்களிறு அட்ட பிரான் திருநாமத்தால் தவளப் பொடிக்கொண்டு நீர் இட்டிடுமின் தணியுமே" என்று பாடியிருப்பதைக் காண்க. தவளப்பொடி என்பது வெண்திருநீறு.

இவ்வுண்மை இங்ஙனம் இருக்க, "தன் திருநாமத்தைத் தானும் சாத்தியே" என்ற கம்பர் வாக்கை வைணவ பக்தர்கள் காட்டி, இராமன் நாமத்தை நெற்றியில் அணிந்தனன் என்று பொருள் கூறுவாராயினர். ஈண்டுக் கம்பர் நாமம் என்றது திருமண்ணை அன்று. ஓம் நமோ நாராயணா என்னும் திருப்

பெயரையே ஆகும். மேலும், சாற்றியே என்று இருக்க வேண்டியதைச் சாத்தியே என்று சொல்லை மாற்றியது வைணவப் பற்றின் காரணமாகும். திருமாலோ அன்றி, அவரது அவதாரமோ திருமண் இட்டது உண்மையாயின், ஆழ்வார்கள் தம் அருள் வாக்கில் யாண்டேனும் கூறி இருக்கவேண்டும். அங்ஙனம் அவர்கள் கூறிற்றிலர். இத்தகைய உண்மை இருத்தலினால்தான், கம்பர் பாடிய மேலே காட்டிய அடி அடங்கிய ''என்று நான்முகன்'' என்று தொடங்கும் பாடல் சில பிரதிகளில் இல்லை எனத் திரு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் தமது பதிப்பில் நன்கு குறிப்பிட்டுள்ளனர்.

மண் என்றது ஈண்டுத் திருமண்ணாகிய நாமமாகும். திருநாமத்தை திருமண் என்றே கூறுவர். ''மண் மாசு படப் பூசும் வடிவுடையார்'' என்று பரஞ்சோதியார் கூற்றைக் காண்க.

திருநீற்றைப் பூசினால்தான் மோகத்தை, அதாவது மயக்க அறிவை, உலக போகத்தை நீக்க முடியும். மண்ணைப் பூசினால் (திருமண்) மோகத்தை ஒழிக்க முடியாது என்பதே ''மண் தோய்ந்து***போகம் அவர்நீத்து உய்வாரே'' என்ற அடியின் கருத்து.

இந்த உண்மையினைக் கீழ்வரும் பாடல்களால் நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

ஆதி பகவன் ஞானவடி அழலில் பூத்து நித்தியமாய்
அணிந்தோர் தமக்கு வசிகரமாய் அருந்தி னோர்கட் காரமுதாய்
நீதி அறியும் பசுமலத்தை நீக்கும் ஒருநல் குறிகாட்டி
நிகழ்பேர் இன்பக் கடலூட்டி நின்ற புகழ்வெண் திருநீறே

என்பது திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் பாட்டு.

திவசங்கதொ றும்கொண்டிடு தீமைப்பிணி தீரும்
பவசங்கடம் அறும்இவ்இக பரமும்புகழ் பரவும்
கவசங்கள்ள னச்சூழ்ந்துறு கண்ணேறது தவிரும்
சிவசண்முக எனவேஅருள் திருநீறணிந் திடிலே

மாலேந்திய குழலார்தரு மயல்போம்இடர் அயல்போம்
கோலேந்திய அரசாட்சியும் கூடும்புகழ் நீடும்
மேலேந்திய வானுடர்கள் மெலியாவிதம் ஒருசெவ்
வேலேந்திய முருகாஎன வெண்ணீ றணிந்திடிலே

தவம்உண்மையொ டுறும்வஞ்சகர் தம்சார்வது தவிரும்
நவம்அண்மிய அடியார் இடம் நல்கும்திறன் மல்கும்
பவனன்புனல் கனல்மண்வெளி பலவாகிய பொருளாம்
சிவசண்முக எனவேஅருள் திருநீறணிந் திடிலே

துயில்ஏறிய சோர்வும்கெடும் துயரம்கெடும் நடுவன்
கையேறிய பாசம்துணி கண்டேமுறித் திடுமால்
குயிலேறிய பொழில்சூழ்திருக் குன்றேறி நடக்கும்
மயிலேறிய மணியேஎன வளர்நீ றணிந்திடிலே

தேருப்பெரு மனமானது தேறும்துயர் மாறும்
மாருப்பிணி மாயும்திரு மருவும்கரு ஒருவும்
வீருப்பொடு வருசூர்முடி வேருக்கிட வரும்ஓர்
ஆருக்கரப் பொருளேஎன அருள்நீறணிந் திடிலே

என்பன வடலூர் இராமலிங்க சுவாமிகளின் பாடல்கள்.

ஆகவே, திரு. பிள்ளை அவர்கள் வைணவர்களுக்கு நல்நெறி சேரும் அருள் உபதேசங்களைச் செய்யும் முறையில் சிறுமியர் வாயின் மூலம், சிற்சிலர் (வைணவர்கள்) தம் நெற்றியில் திருமண் இட்டிருத்தலின், அம்மண்ணைச் சேக்கிழார் தம் காலால் கலைத்து விளையாடும் விளையாட்டு நிகழுமாயின், அவர்கள் திருநீறணிந்து மோகம் நீங்கி உய்வர் என்றனர். ஈண்டுத் திரு. பிள்ளை அவர்களின் சைவ சமயப் பற்றின் உண்மை நிலையினை உணரலாம்.

சிறுமியர்கள், "பெருமானே! உமக்கு மண்ணைப் பொருந்து விளையாட விருப்பம் இருப்பின், எங்கள் மணல் வீட்டைக் காலால் சிதைக்கவேண்டா. வேண்டுமானால் வைணவர்கள் நெற்றியில் அணியும் திருமண்ணைக் கலைத்து விளையாடும்;' அஃது அவர்களைத் திருநீறணியும் விருப்பத்தை யாகிலும் உண்டுபண்ணி அவர்கள் மோகம் நீங்கி உய்யும்

வகையாகிலும் ஏற்படும்", என்று கூறுவதே, 'பொன்னம் சிலம்பு***உய்வாரே" என்ற அடிகளின் அமைந்த கருத்தாகும்.

சிலம்பு பெண்கள் அணியும் அணிகலமே என்றாலும், ஆண் மகவின் குழந்தைப் பருவத்தில் பெற்றோர்கள் சிலம்பை அணிந்து மகிழ்தலும் உண்டு. இந்த உண்மையினைப் பரஞ்சோதி முனிவர் தமது திருவிளையாடற் புராணத்துள், மாமனாக வந்து வழக்குரைத்த படலத்துள்,

ஐம்படை மார்பில் காணேன் சிறுசிலம்பு அடியில் காணேன்
மொய்ம்பிடை மதாணி காணேன் முகத்தசை
சுட்டி காணேன்
மின்படு குழைகள் காணேன் வெற்றுடல் கண்டேன் அப்பா
என்பெறும் என்று பிள்ளைப் பணிகளும் கவர்ந்தார் என்று

என்று குறிப்பிடுதல் காண்க.

பாட்டின் ஈற்றில் நீர்வளச் சிறப்பையும் வராலின் வளத்தையும் குறிப்பிட்டுள்ளார். கடா என்பது யானையின் மத நீர். அந்நீரும் குள நீரும் கலந்து வெள்ளமாக ஓட, அவ்வோட்டத்தில் வரால் துள்ளி, மேல் எழுந்து தென்னம் பழத்தை மோத, அத் தென்னம்பழம் கீழே வீழ்கையில் பலாவில் பட்டு அப்பலாப்பழம் உதிருமாம். இந்த அளவுக்குத் தொண்டைநாடு வரால் மீன்கள் அட்டகாசம் செய்யும் நிலையில் நீர் வளத்தைப் பெற்றது என்பர் திரு. பிள்ளை அவர்கள். இதுபோன்ற வர்ணனை நிறைந்த பாடல் சிவசிந்தாமணியில் காணப்படுகிறது.

காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகின நெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென்னும் இசையால் திசைபோய துண்டே

(79)

என்பது அப்பாடல்,

9. மாறு படுமன் னவர்எனினும்
வளவன் கழல்கால் தொழின்அவர்வாழ்
மணிமா ளிகைகள் மிக்குயரு
மாறு விடுப்பாய் மறையோர்முன்
கூறு படுநம் பரன்அடியார்
குறிப்புள் உணர்ந்து நெடுவானும்
குறுக நிமிர்மா டங்கள்பல
குயிற்றிக் கொடுத்துக் குடிஅமைப்பாய்
வேறு படுமா றியாம்வகுத்த
விட்டை விடுத்துச் செலின்வரல்என்
வேழக் கரும்பின் சாரேடி
விரிந்த கரம்பும் பாய்ந்துகுழை
சேறு படுதண் டகநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்வச் செருக்கு குன்றைஅருள்
செல்வா சிற்றில் சிதையேலே

*[அ. சொ.] வேழக் கரும்பு-வேழமாகிய கரும்பு, கரம்பு-கரம்பு நிலம், விளைவு செய்யாத நிலம், குழை-குழைந்து, வளவன்-சோழன், கழல்கால்-வீரத் தண்டை அணிந்த பாதங்கள், மணி-அழகிய, மறையோர்-வேதங்களை ஓதும் பிராம்மணர், குயிற்றி-அமைத்து, வரல்-வருதல், மாறுபடும்-பகைமை கொண்ட, முன்கூறுபடுதல்-முதன்மை யானவராய்க் கூறப்படும், குறிப்பு-மனக் கருத்து, என்-உனக்கு வரும் நஷ்டம் என்ன?*

**விளக்கம்:** *அரசர்கள் தம்மைத் தொழுது வழிபடும் பகை மன்னர்களுக்குத் தண்டனை நீக்கி அருளுவர் என்பது "வந்தடி பொருந்தி முந்தை நிற்பின், தண்டமும் தணிதி நீ" என்று புறநானூறு கூறுதலால் அறிகிறோம். இதுபோன்ற கருத்தே முதற்கண் காணப்படுவது. சேக்கிழார் தலைமை அமைச்சராய் இருந்தமையின், பகை மன்னர்களும் உயர்ந்த*

மாளிகைகளில் இருக்குமாறு செய்வார் என்ற அவரது அருள் அறத்தை வியந்தவாறுயிற்று.

உலகில் பூசுரர் எனப்படும் பெருமைக்குரியவர் பிராமணர்கள். அவர்கள் வேதம் ஓதும் நெறியில் ஒழுகுபவர். ஆகவே, அவர்கள் சிறந்தவர்கள் என்ற கொள்கை வைதீக உலகில் உண்டு.

இங்ஙனம் சிறந்தவர்கள் என்று கருதப்பட்டாலும், அவர்கள் ஒழுக்கத்தில் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஒழுக்கம் குறையில் அவர்கள் பெருமையும் மறையும். இதனைத் திருவள்ளுவர்,

மறந்தும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்

என்றனர். ஒத்து என்பது ஈண்டு வேதம் ஆகும்.

யார் யாரைப் பிராம்மணர் என்று கூறுதற்கு ஆகார் என்ற இடத்துத் திருமூலர்,

சத்தியம் இன்றித் தனிஞானம் தான்இன்றி
ஒத்த விடையம்விட் டோரும் உணர்வின்றிப்
பத்தியும் இன்றிப் பரன்உண்மை இன்றிப்
பித்தேறும் மூடர் பிராமணர்தாம் அன்றே

என்று கூறினர். இத்திருமூலரே யார்தாம் பிராமணர்கள்? அவர்கள்தாம் யாவர்? என்ற இடத்து,

பெருநெறி யான பிரணவம் ஓர்ந்து
குருநெறி யாலுரை கூடிநால் வேதத்
திருநெறி யான கிரியை இருந்து
சொருபம தானோர் துகளில்பார்ப் பாரே.

என்றருளினர். இத்தகைய பண்புடையாரினும் சிறந்தவர்கள் அடியார்கள் என்பதைத்தான் "மறையோர் முன் கூறுபடும் நம்பரன் அடியார்" என்றனர். "மறையோர்முன் கூறுபடு நம்பரன் அடியார்" என்னும் தொடர்க்கு, பிராம்மணர்கள் முதலாக முன் கூறப்படும் அடியார்கள் என்று

பொருள் கூறினும் பொருந்தும். காரணம் சிவனடியார்களில் பிராம்மணர்களும் இருத்தலின் என்க.

நம் என்று திரு. பிள்ளை அவர்கள் கூறியது ‘உளப் பாட்டுத் தன்மைப் பன்மை பற்றியாகும். சிவ பெருமானுக்குமேல் ஒரு பொருள் இன்மையின் "பரன்" என்றனர். இவன் பிறரால் (தேவர் மக்கள் முதலானவர் களால்) தொழப் படுபவனே அன்றித் தான் ஒரு பொருளைத் தொழாதவன் என்று நாம் அறிதலின், முக்கண் மூர்த்தியே பரமன் என்பதை நன்கு அறிதியிட்டு உறுதியாகக் கூறலாம். சிவபெருமான் எவரையும் தொழாதவன் என்பதை நமது திரு வாசகம் "செய்யானை வெண்ணீறு அணிந்தானைச் சேர்ந்தறி யாக் கையானை எங்கும் செறிந்தானை" என்று அறிவித்திருப் பதை அறிக. பிறரைத் தொழும்போதுதான் கைகள் ஒன்றோடொன்று சேரும். அவ்வாறு சேரும் வாய்ப்புச் சிவ பெருமானுக்கு இன்மையின், சேர்ந்து அறியாக் கையானை என்றனர். ஆகவே, அவன் பரமன்தானே. பரனாவான் மேலானவன்.

சிவனடியார்கள் மறையோரினும் சிறந்தவர் என்பதைப் பிராமணராம் சுந்தரர் திருத்தொண்டத்தொகைபாடி அவர் கட்குத் தாம் அடிமை என்றது கொண்டும், திருநாளைப் போவாராம் அடியாரது அன்பைக்கண்டபோது "திருவுடைய தில்லை வாழ் அந்தணர்கள் கை தொழுதார்" என்பதாலும், "அருமுனிவர் துதிசெய்தார்" என்பதாலும், "மறையோர் முன் கூறுபடும் பரன் அடியார்" என்பது உண்மை ஆதல் உணர்க.

சேக்கிழார் பெருமானார் அடியார்களின் வீடுகளை மாட மாளிகைகளாக ஆக்கி அருங் கலி புனைந்து பாடி இருத்தலின் "நெடுவானும்**குடி அமைப்பாய்" என்றனர். அவை வள முடையனவாக இருந்தன என்றும் அவர் பாடிக் காட்டியுள்ள னர். "கொம்பனார் இல்லம் எங்கும் குறைவிலா நிறைவில் காணும், அம்பொனின் குவையும் நெல்லும் அரிசியும்"

என்றும், "மலைநிகர் மாடவீதி மருங்குதம் மனையைச் சேர்ந்தார்" என்றும், குங்கிலியக் கலய நாயனார் புராணத்துள் வீட்டு வ்ளன் கூறியதைக் காணவும்.

பிராம்மணர்கட்கு வீடுகள் கட்டி அவற்றில் அவர்களை இருத்தல் ஓர் அறமாகக் கருதப்பட்டது என்பது கீழ்வரும் திருமந்திரப் பாடலால் தெரிய வருகிறது.

அகரம் ஆயிரம் அந்தணர்க் கீயில்என்
சிகரம் ஆயிரம் செய்துமுடிக் கில்என்
பகரும் ஞானி பகல்ஊண் பலத்துக்கு
நிகரில்லை என்பது நிச்சயம் தானே

சேக்கிழார் மந்திரியாராக இருந்தமையின், பிராம்மணர் கட்கு வீடு கட்டி வாழச் செய்திருக்கலாம் என்ற கருத்தில் "மறையோர் முன்***குடி அமைப்பாய்" என்று சிறுமியர் கூறினர். மேலும், அவர்கள், "நாங்கள், நீங்கள் கட்டித் தரும் வானளாவிய மாளிகைகளாகவும் குடி இருப்புடைய வீடுகளாகவும் கட்டாமல், அவற்றினும் வேறுபட கட்டிய மணல் வீட்டைச் சிதைக்கலாமா? நாங்கள் கட்டி விளையாடும் வீட்டைச் சிதைக்காமல் போனால் உங்கட்கு என்ன நஷ்டம் வரும்" என்று கூறுதல் இரக்கம் விளைவிக்கும் மொழிகளாக உள்ளது.

வேழம் எனினும் கரும்பு எனினும் ஒன்றே. ஈண்டு இவ்வாறு கூறியது இருபெயரொட்டுப் பண்புத் தொகை என்னும் இலக்கணம் பற்றி என்க. கரம்பு நிலத்தில் கருப்பஞ் சாறு பாய்ந்து அந்நிலமும் சேறாகக் குழைந்தது எனக்கூறி, நாட்டின் செழிப்பை ஆசிரியர் அறிவித்தனர். (80)

10. அலைக்கும் புனல்சூழ் அம்பலத்தில்
ஆடும் பெருமான் அருள்பெற்றால்
அவன்செய் தொழில்ஓர் ஐந்துண்டு
அமைந்த தொழிலோ மேற்கோடல்
நிலைக்கும் கடைஎன் றொழித்தனையோ
நினையா நிற்கும் அனுக்கிரகம்
நீயே அதுசெய் யாவிடின்எம்
நிரப்பு நீக்கு பவரியாரே
மலைக்கும் பிறவிப் பிணிமருந்தே
வாழ்த்து வார்சிந் தாமணியே
வயங்கும் சைவப் பெருவாழ்வே
மாறாக் கருணை மாக்கடலே
சிலைக்கும் தமிழ்த்தண் டகநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்வம் செருக்கு குன்றையருள்
செல்வர் சிற்றில் சிதையேலே

*[அ. சொ.] மலைக்கும்-ஸ்தம்பிக்கும், வருந்தும், பிணி-நோய், வயங்கும்-விளங்கும், மா-பெரிய, சிலைக்கும்-ஒலிக்கும் புனல்-நீர், அம்பலத்தில்-பொற் சபையில், அவன்-அந் நடராசப்பெருமான், தொழில் ஓர் ஐந்து-படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்கள், நிரப்பு-வறுமை, கடை-கடையாய குணம், அது-அனுக்கிரகம் செயல்.*

**விளக்கம்:** *அம்பலம் என்றது ஈண்டு இறைவன் நடனம் புரியும், சபையாகும். அச்சபைகள் ஐந்து. அவையே பொன்னம்பலம், வெள்ளியம்பலம், இரத்தின அம்பலம், சித்திர அம்பலம், தாம்பர அம்பலம், என்பன. பொன்னம் பலம் சிதம்பரத்திலும், வெள்ளியம்பலம் மதுரையிலும், இரத்தின அம்பலம் திருவாலங்காட்டிலும், சித்திர அம்பலம் திருக்குற்றாலத்திலும், தாம்பர அம்பலம் திருநெல்வேலி*

யிலும் உள்ளன. திருப்புத்தூர்ச் சபை சிற்சபை எனவும் கருதப் படுகிறது.

இறைவன் இச்சபைகளில் ஆடுகின்றனன். அவ்வாட்டங்கள் காளிகதாண்டவம், கௌரிதாண்டவம், சத்தியா தாண்டவம், சங்காரத் தாண்டவம், திரிபுரதாண்டவம், ஊர்த்துவதாண்டவம், ஆனந்தத்தாண்டவம் என்பன.

காளிகாதாண்டவம் படைத்தல் செயற்கும், கௌரி தாண்டவம், சந்தியாதாண்டவம் ஆகிய இரண்டும் காத்தல் செயற்கும், சங்காரத்தாண்டவம் அழித்தற் செயற்கும், திரிபுரதாண்டவம் மறைத்தல்செயற்கும், ஊர்த்துவதாண்டவம் அருளல் செயற்கும், ஆனந்தத் தாண்டவம் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து செயல்களும் ஒருங்கே செய்தற்கும் ஆகும்.

காளிகா தாண்டவத்தினைத் திருவாலங்காட்டுச் சபையிலும், கௌரிதாண்டவத்தைத் திருப்புத்தூர்ச் சபையிலும் சந்தியாதாண்டவத்தை மதுரை வெள்ளி அம்பலத்திலும், திரிபுரதாண்டவத்தைத் திருக்குற்றாலச் சபையிலும், ஊர்த்துவதாண்டவத்தைத் திருநெல்வேலிச் சபையிலும், சங்காரத்தாண்டவத்தை நள்ளிருளிலும் இறைவர் இயற்றுவர். ஊர்த்துவத் தண்டவம் திருவாலங் காட்டிலும் நிகழ்ந்துளது. காத்தல் தொழில் இரண்டாகும். ஒன்று இன்பக் காத்தல்; மற்றொன்று துன்பக்காத்தல்.

சடமதனில் சிருட்டி திதி சங்காரம் நிகழும்
 தரும்உயிரில் திரோபவம் அனுக்கிரகம் தக்கும்
திடமுறும் அத்திதி இரண்டாம் சுகதுன்பம் அருத்தும்
 செய்தியின் அம்முறையால் செய்தொழில் ஆறும்

என்று திருப்போரூர்ச் சிதம்பரசுவாமிகள் திதியை இரண்டாகக் கூறியதைக் காண்க. மேலே கூறப்பட்ட தாண்டவ வகைகள், இடங்கள் இன்னின்ன என்பதைக் கீழ்வரும் திருப்பத்தூர்ப் புராணப் பாடல்களால் தெளியலாம்.

பிரமகற்பங்கள் தோறும் பேணுநர் பொருட்டால் இந்தத்
திருநடம் ஏழும் செய்தும் செப்பும் அத்தானம் கேண்மோ
அரவும் அம்புலியும் போற்றும் அருள்தில்லை அம்பலத்தில்
பரவும் ஆநந்தத் தாண்டவம் செய்வோம் மைப்பொன்
[பாவாய்

இவர்மணி மாடக் கூடல் இரசித சபையில் நின்று
தவர்அடி பரவச் செய்தும் சந்தியா தாண்ட வம்செம்
பவளமெல் இதழி நின்பேர்ப் பரவு தாண்டவத்தை என்றும்
சிவமிகு திருத்தலத்தில் சிற்சபை அதனில் செய்வோம்

அத்திரி கூட வெற்பென் றறைதிருக் குற்று லத்தில்
சித்திர சபையில் செய்வோம் திரிபுர தாண்ட வம்பூம்
கத்திகைக் குழலீ ஆலம் காட்டினில் காளிதாண்ட
வத்தை நன்கியற்று கிற்போம் இரத்தின சபையில்மாதோ

தாம்பிர சபையில் தேவ தாரு வனநெல் வேலி
ஆம்பிர பலத லத்தில் ஆற்று தும்முனி நிருத்தம்
காம்பிரங் குறுதோளீ சங்கா ரத்தாண் டவத்தை யாவும்
கூம்பிர வதனில் நின்று குலவுற இயற்று கிற்போம்

இவற்றை எல்லாம் உள்ளடக்கியே பொதுப்படத் திரு. பிள்ளை அவர்கள் "அம்பலத்தில் ஆடும் பெருமான்" என்றனர். ஐந்தொழில்கள் ஒருசேர நடத்தும் தில்லையில் ஆனந்த நடம்புரியும் நடராசப் பெருமான் என்று கூறினும் அமையும். அலைக்கும் புனல் என்றது நீர்வளக்குறிப்பு.

இறைவன் தாண்டவம் ஐந்தொழில் நடத்தற்கே என்பதையும், அத்தாண்டவம் ஆன்மாக்களை ஆனந்தத்தில் அழுத்துதற்கே என்பதையும் தெளிவுற உண்மை விளக்கம் என்னும் சைவ சித்தாந்த நூல்,

"ஓங்கார மேநல் திருவாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம்—ஆங்காரம்
அற்றார் அறிவர்அணி அம்பலத்தான் ஆடல்இது
பெற்றார் பிறப்பற்றார் பின்"

என்றும்,

" தோற்றம் துடிஅதனில தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு "

என்றும்,

" மாயை தனைஉதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கி அருள்தான்எடுத்து—நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான்அழுத்தல்
தானெந்தை யார்பரதம் தான்"

என்றும்,

" மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தானந்த மானிடத்தே தங்கியிடும்—ஆனந்தம்
மொண்டருந்தி நின்றாடல் காணும்அருள் மூர்த்தி
கொண்டதிரு அம்பலத்தான் கூத்து" [யாக்

என்றும் கூறுதல் காண்க.

இறைவனது தாண்டவம் ஆனந்தத் தாண்டவம், இன்பம் ஊட்டுல் தாண்டவம் என்பதை அப்பர் பெருமானார்,

குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயில் குமிண்
சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில்பால்
வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப்
பெற்றால்
மனித்தப் பிறபியும் வேண்டு வதேஇந்த மாநிலத்தே

ஒன்றி இருந்து நினைமின்கள் உந்தமக் கூனமில்லைக்
கன்றிய காலனைக் காலால் கடந்தான் அடியவற்காச்
சென்று தொழுமின்கள் தில்லையுள் சிற்றம் பலத்து
நட்டம்
என்றுவந் தாய்எனும் எம்பெரு மான்தன் திருக்
குறிப்பே

என்று அறிவித்திருப்பதையும் அறியவும்.

சேக்கிழாராம் குழந்தை சிறுமியர் வீட்டை அழித்தது. அதுபோதுஅச்சிறுமியர், "இறைவர் செய்யும் ஐந்து தொழில் களுள் நடுவில் அமைவது அழித்தல் தொழில். அதனை நீங்கள் சிறுமியர்மாட்டும் செய்வது நீதியோ?" என்றனர். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் வரிசையில் அழித்தல் தொழில் இடையில் இருத்தல் காண்க. இதனையே "ஓர் ஐந்துள் நடு அமைந்த தொழிலோ மேற்கோடல்?" என்றனர். "நடு அமைந்த தொழிலோ" என் பதற்கு நீங்கள் செய்வது நீதியான செயலா?" எனவும் பொருள் கூறலாம்.

மேலும் அவர்கள் "ஐய! அனுக்கிரகத் தொழிலை மேற் கொள்வது, நம் நிலைக்குக் கடைப்பட்டது என்று அவ்வனுக் கிரகத்தை மேற்கொள்ளாது விட்டொழித்தீரோ? அல்லது அத்தொழிலை ஐந்து தொழில்களில் ஈற்றில் அமைந்த தொழில் அதனைப் பின்னுல் செய்வோம் என்று எண்ணி விட்டீரோ? நீங்கள் எங்கட்கு அனுக்கிரகம் செய்யாவிடில், நாங்கள் எப்படி உய்வோம்" என்று இரக்கம் தோன்ற இயம்பினர். இக்கருத்துக்களே "நிலைக்கும்***அனுக்கிரகம்" என்னும்தொடரில் அமைந்துள்ளன.

பெரியோர்கள் அநுக்கிரகம் செய்பவர்கள்; அடைந்த வரை ஆதரிப்பவர்கள். ஆகவே, அதை எண்ணியே "அநுக் கிரகம் நீயே அது செய்யாவிடின், எந் நிரப்பு நீக்குபவர் யார்?" என்று சிறுமியர் வினவினர். நிரப்பு ஈண்டு வறுமை. அனுக்கிரகம் எவராலும் வேண்டப்படுதலின், நினையா நுற்கும் அனுக்கிரகம் என்றனர்.

சேக்கிழார் பாடல்கள் பிறவி என்னும் நோயை நீக்கும் மருந்தாதலாலும் நினைத்ததைத் தரும் சிந்தாமணி ஆத லாலும், சைவசமய உண்மைகளை வாழச் செய்யும் வாழ் வாதலாலும் கருணைக்கு இடமாதலாலும் "மருந்தே, சிந்தா மணியே" பெருவாழ்வே, மாக்கடலே, என்றனர்.

தமிழ் என்னும் சொல் இனிமை என்றாலும், சிற்சில சமயங்களில் சினம்கொள்ளும் நிலைக்கும் அம்மொழி துணை

செய்கிறது. சிலைத்தலாவது ஒலித்தலாம். இதனை முழக்குதல் என்றும் கூறலாம். தமிழின் முழக்கத்திற்குக் கீழ்வரும் சான்றுகளைக் காண்க.

ஒருமுறை பெருஞ் சித்திரனார் அதிகமான் நெடுமான் அஞ்சியைக் காணச் சென்றார். அதிகமான், புலவர் பரிசிற்குத்தான் வந்திருப்பார் என்று எண்ணிப் பரிசிலை ஆள்வசம் அனுப்பிப் புலவரை வந்து காணாதிருந்தனன். அதுபோது புலவர் சினந்து, "காணாது ஈத்த இப்பொருட்கியானோர் வாணிகப் பரிசிலன் அல்லேன்" என்று பாடியுள்ளனர். இவரே ஒருமுறை இளவெளிமானிடம் பரிசில் கேட்க, அவன் சிறிது கொடுத்தனன். அதனைக் கொள்ளாது குமணனிடம் சென்று யானைப் பரிசில் பெற்று மீண்டு அவனது காவல் மரத்தில் அதனைக் கட்டி,

இரவலர் புரவலர் நீயும் அல்லை
புரவலர் இரவலர்க் கில்லையும் அல்லர்
இரவலர் உண்மையும் காண்இனி இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காண்இனி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானை எம்பரிசில்
கடுமான் தோன்றல் செல்வன் யானே

என்று அவனிடம் பாடித் தமிழ் முழக்கம் செய்தனர்.

மன்னவனும் நீயோ வளநாடும் நின்னதோ
உன்னையறிந் தோதமிழை ஓதினோம்—என்னைவிரைந்
தேற்றுக்கொள் ளாதவேந் துண்டோஉண் டோகுரங்
கேற்றுக்கொள் ளாத கொமபு"

என்று கம்பரும் தமிழ் முழக்கம் கொண்டு பாடினர்.

தமிழ்மொழி ஒலிமிக்க மொழி. திருப்புகழில் தமிழ் ஒலி செய்தலைப் பரக்கக் காணலாம் "தண்டை அணி வெண்டயம், கிண்கிணி சதங்கையும், தண்கழல் சிலம்புடன் கொஞ்சவே" என்னும் திருப்புகழில் தமிழ் ஓசையை உணர்க. தமிழ் ஓசை அற்றது என்ற பொருளில் அரவம் என்று சிலர் கூறுவராயின், அவர்கள் அறிவை என்னென்பது? (81)

# 9. சிறுபறைப் பருவம்

1. ஆயபர சமயக் கருங்கடா யானைக்
கரிக்குருளை வாய்முழக்கும்
அரும்புகழ்ச் சைவப் பசும்பயிர்க் குலகுதூழ்
ஆழியுள் புயல்முழக்கும்
பாயமிடி யாளருக் களவில்பொன் செறிசெய்த
பண்டார வாய்திறந்து
பலவும் கவர்ந்திடுமின் எனல்தெரித் திடுகொடைப்
பயன்முரசின் எழுமுழக்கும்
நேயமிகு வளவர்பெரு மாற்காக அப்பாரில்
நேர்ந்ததன் படைஎழுப்பும்
நிலாம்பணை முழக்குமா கக்குணில் மலர்க்கைகொடு
நிகழ்பாலி வளன்உணர்ந்து
தேயமுழு தும்பரவு துண்டீர வளநாட
சிறுபறை முழக்கியருளே
தென்றலங் கன்றுலவு மன்றஓங் குன்றைமுனி
சிறுபறை முழக்கியருளே

*(அ.சொ) பரசமயம்-பிற மதங்களாகிய, கடா-மதசலம் பொழியும், அரிக்குருளை-சிங்கக்குட்டி, பசும்பயிர்-அழகிய பயிர், ஆழி-கடலின் நீரை, உண்-பருகும், புயல்-மேகம், மிடியாளருக்கு-வறுமையாளருக்கு, செறி செய்த-திரட்டி வைத்த, பண்டாரம்-கருவூலம், பொக்கிஷம், முரசின்-முரசவாத்தியம் போல, எழு-எழும், வளவர்-சோழர்க்கு, ஆகவப் பார்-போர்க்களம் நேர்ந்த-பொருந்திய, படை-சேனை, நிலாம்-நிலைத்திருக்கும். பணை-முரசு, குணில்-பறையை அடிக்கும் சிறு கோல், நிகழ்-இடையறுது செல்லும்*

பாலி-பாலாற்றின், பரவு-போற்றும், துண்டீர நாட-தொண்டைநாடனே, தென்றலங்கன்று-மெல்லிய தென்றல் காற்று, மன்றம்-கழகங்களையுடைய, வெளியிடங்களையுடைய மரத்தடியாகிய பொது இடங்களையுடைய. குன்றைமுனி-சேக்கிழார் பெருமானே!

**விளக்கம்:** சிறுபறை என்பது ஒருவகை இசைக் கருவி. இது தோலால் ஆனது. இது சிறுவர்களால் அடிக்கப் படுதலின், சிறுபறை எனப்பட்டது. இது மூன்றும் ஆண்டில் குழந்தைகளால் அடிக்கப்படுவது.

யானை பெரிதாயினும் சிங்கக்குட்டிக்கு அஞ்சும் இயல்பினது. யானை தனது கனவில் சிங்கத்தைக் கண்டாலும் அஞ்சும் என்பர். சிங்கத்தின் கர்ச்சனையைக் கேட்பினும் யானை அஞ்சுமாம். இது குறித்தே "சிங்க சொற்பனம்" என்னும் பழமொழியும் எழுந்துளது. ஆகவே, ஈண்டுப் பரசமங்களாகிய யானைகளுக்குச் சேக்கிழாரது சிறுபறை முழக்கம் சிங்கக் குட்டி முழக்கமாகக் குறிப்பிடப்பட்டது. ஆகவே, சேக்கிழார் பரசமயக் கோளரி ஆயினர். ஒலியின் மூலம் பரசமயக் கோளரி என அறிவித்தலைச் சேக்கிழாரும் திருஞானசம்பந்தர் வாழ்க்கையில்,

சீர்நிலவும் திருத்தேளி சேரியினைச் சேர்ந்து
சிவபெருமான் தனைப்பரவிச் செல்லும் போது
சார்வறியாச் சாக்கியாதம் போதி மங்கை
சார்தலும்மற் றதறிந்து சைவர் எல்லாம்
ஆர்கலியின் கிளர்ச்சிஎனச் சங்கு தாரை
அளவிறந்த பல்லியங்கள் முழக்கி ஆர்த்துப்
பார்குலவும் தனிக்காளம் சின்னம் எல்லாம்
"பரசமயக் கோளரி வந்தான்" என் றூத

என்று குறிப்பிட்டுள்ளனர்.

சேக்கிழார் அநபாயனைச் சீவக சிந்தாமணி நூலைக் கேட்க வேண்டா என்று கூறியபோது, ஆண்டுச் சைன

சமயப் புலவர்கள் இருந்திருக்கக் கூடும். அங்ஙனம் இருந்தும், இவர் சைன காவியத்தைக் குறை கூறியபோது வாளா இருந்திருப்பர். ஆகவே, ஈண்டு சைனரை யானையாகவும் சேக்கிழாரைச் சிங்கமாகக் கொள்க. எனவே, சேக்கிழாரது முழக்கம் சிங்கக்குட்டி முழக்கம் எனப்பட்டது.

சைவசமயம் புகழ்க்குரிய சமயம். அதிலும் அரும் புகழ்க்குரிய சமயம்; மேலும், வேத ஆகம உபநிடதங்களால் சித்தாந்தம் செய்யப்பட்ட சமயம். மேற்குநாட்டவர்கள் பலரும் இம்மதத்தின் மேன்மையைப் புகழ்ந்துள்ளமை காணும்போது, நமது சைவசமயம் "அரும்புகழ் 'சைவம்" என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை அன்றோ?

"It is the choicest product of the Dravidian intelect and the most elabarate influential and undoubtedly the more intrincically valuable of all the religions of India" என்று டாக்டர் Rev G. U. Pope அவர்களும்,

"There is no school of thought and no system of faith of worship that comes to us with anything like the claims of Saiva Siththantha. The system possesses the merits of great antiquity. In the religious world, the Saiva System is the heir to all that is most ancient in South India; It is the religion of Tamil people, by side of which every other form is of comparatively foreign and recent origin. As a system of religious thought, as an expression of faith and life, the Saiva Siddantha is by for the best that South India possesses" என்று Rev Gowdie அவர்களும் புகழ்ந்துள்ளனர்.

இவ்வாங்கிலப் பத்திகளின் திரண்ட கருத்து, "சைவ சமயம், திராவிட மக்களின் மூதறிவின் விளைவு; இந்தியாவில் உள்ள எல்லாச் சமயங்களிலும் பரந்த நிலையுடையது.

எல்லோராலும் செல்வர்க்கும் பெருமதிப்பும் பெற்றது'' என்பதும்,

''சைவ சித்தாந்த கொள்கை போன்ற கருத்தும் உண்மையும், வழிபாட்டு ஒழுங்கும் அமைந்த சமயம் எதுவும் இல்லை. சைவ சித்தாந்தக் கொள்கை மிகப்பழம் பெருங் கொள்கை. சைவ சமயமே பிரசமயங்களுக்கு வழிகாட்டியாக உளது. தமிழர் சமயம் இதுவே, மற்றைய சமயங்கள் இதற்கு வேருனவை. மேலும், அண்மையில் தோன்றியவை; தென்னிந்தியாவில் சமய உணர்வையும் உண்மை வாழ்வையும் வெளியிடும் ஆற்றல் கொண்டு இது சிறந்து விளங்குகிறது'' என்பதும் ஆகும்,

இத்தகைய புகழ்க்குரிய சைவமாம் பயிர்வளரச் சேக்கிழார் தமது கவியாம் புயலால் வளர்த்தலின், புயல் முழக்கம் என்றனர். கடல் ஆழம் உடைத்தாதல் பற்றி ஆழி ஆயிற்று. அது மூன்று பக்கங்களிலும் உலகை வளைந்துக் கொண்டிருந்தலின், உலகு சூழ் ஆழி என்றனர். ஆழி நீரை புயல் உண்ணுதலாவது பருகுதல். இவ்வாறு பருகுதலை உண்ணுதல் என்றது மரபு. வழு அமைதி. முல்லைப்பாட்டும் ''பாடிமிழ் பனிக் கடல் பருகி'' என்றதையும் காணக. பாண்டாரம் என்பது பொக்கிஷசாலையாகும். இறைவன் எல்லா நிதிகட்கும் இருப்பிடமானவன். ஆகவே, அவன்மூல பண்டாரம் எனப் படுகிருன். இதனை மணிமொழியார்,

காலம்உண் டாகவே காதல்செய் துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப் பிரான்தன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின் ருன்வந்து முந்துமினே

என்று மொழிந்திருப்பதையும் ஈண்டு நினைவு கூர்க.

முரசம் என்பது ஒருவகைத் தோல்கருவி. இதனை யானை மேல் ஏற்றி அறைந்து ஒலி எழுப்பி நகர்க்குச் செய்தி அறிவித்து வருதல் அரசமுறை.

இதனைக் கம்பர்,

வானவர் குலத்தெமர் வரத்தி னல்வரும்
வேனில்வேள் இருந்தவம் மிதிலை நோக்கிநம்
சேனையும் அரசும் செல்க முந்தெனு
ஆனைமேல் அணிமுர சறைகென் றேவினான்

என்று குறிப்பிட்டிருப்பது காண்க. இவ்வாறு அறிவிப்பவர் வள்ளுவ மரபினர் என்பதையும் கம்பர்,

வாம்பரி விரிதிரைக் கடலை வள்ளுவன்
தேம்பொழி துழாய்முடிச் செங்கண் மாலவன்
ஆம்பரி சுலகெலாம் அளந்து கொண்டநாள்
சாம்புவன் திரிந்தெனத் திரிந்து சாற்றினான்

என்று பாடிக் காட்டியுள்ளனர்.

இம்முரசு மூன்று சிறந்தநாட்களில் அறையப்படும். மணநாளிலும், போருக்குச் செல்லும்காலும், கொடை கொடுக்கும்போதும் ஆகும். இவற்றை முறையே மணமுரசு, போர் முரசு, கொடை முரசு என்பர். ஈண்டுக் கொடை முரசும், படை முரசும் முழக்கப்பட்டதைக் குறித்திருப் பதைக் காண்க.

குமர குருபர சுவாமிகள் மும்முரசுகளையும் ஒருங்கே முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் அழகுற,

வம்மின் எனப்புல வோரை அழைத்திடு
    வண்கொடை முரசமென
வடகலை தென்கலை யொடுபயி லும்கவி
    வாணர்க ளோடிவர
அம்மென் மடப்பிடி பொன்னுல கீன்றவ
    ணங்கை மணம்புணரும்
அணிகிளர் மணமுர சென்னஎம் ஐயனொ
    டம்மை மனம்குளிரத்

தெம்முனை சாயச் சமர்விளை யாடிச்
செங்கள வேள்விசெயும்
திறள்முர செனஇமை யவர்விழ வயரச்
செழுநகர் வீதிதொறும்
மும்முர சமும்அதிர் காவிரி நாடன்
முழுக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே

என்று பாடி இருத்தலைக் காண்க.

குணில் என்பது சிறுகுறுந்தடி. இதனுல் பறை அடிக்கப்படும். குணில், அடிக்கும் கருவியாகப் பயன் பட்டதைச் சிலப்பதிகாரம்,

கன்று குணிலாக் கனிஉகுத்த மாஅயவன்
இன்றுநம் மானுள் வருமேல் அவன்வாயில்
கொன்றையம் தீங்குழல் கேளாமோ தோழீ

என்று அறிவித்தல் காண்க.

துண்டீர நாடு என்பது தொண்டை நன்ருடு. துண்டீரன் என்பவனுல் ஆளப்பட்டமையின் இது துண்டீர நாடு என்ற பெயர் பெற்றது. பின்னர் தண்டகன் என்பவனுல் ஆளப் பட்டமையின் தண்டகன் நாடாயிற்று. அதன்பின் ஆதொண்டனுல் ஆளப்பட்டமையின் தொண்ட நாடா யிற்று. இந்த முறை வைப்பினை இராமலிங்க அடிகளார்,

அல்லதூஉம் சேரன்மண்டலம்-சேரமண்டலம், சோழன் மண்டலம்-சோழ மண்டலம் என்பன போல், இம்மண்டலத் திற்கு, முன்னர் துண்டீரனுல் ஆளப்பட்டமையின் துண்டீ ரன் மண்டலம், துண்டீரமண்டலம், துண்டீரன்புரம், துண்டீர புரம் என்றும், பின்னர்த் தண்டகனுல் ஆளப்பட்ட மையின் தண்டகன் நாடு, தண்டக நாடு, தண்டகன் புரம் தண்டகபுரம் என்று பெயர் வழங்கின; அவைபோல், அதன் பின்னர் ஆதொண்டனுல் ஆளப்பட்டமையால் ஆதொண் டன் மண்டலம், ஆதொண்ட மண்டலம் தொண்டன் மண் டலம் தொண்ட மண்டலம் என்றே மரபு வழுவாமை

வழங்கல் வேண்டும்" என்றும் எழுதியுள்ளனர். இதற்குப் பிரமாணமாக,

முக்கணன் கணநா தர்க்கு
　　முதன்மைத்துண் டிரன் ஆண்டு
மிக்கதுண் டீரன் நாடாய்த்
　　தண்டக வேந்தன் தாங்கித்
தக்கதண் டகன நாடாய்த்
　　தமனன்மாக் குலத்துச் சோழன்
தொக்கதார்த் தொண்ட
　　மான்காத் தாயது தொண்டனுடே

என்ற பாடலையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

தொண்டை நாட்டின் தலைநகரம் காஞ்சி. அதனையும் துண்டீர நாடு, துண்டீரபுரம் என வழங்கியதாகத் தெரிகிறது. இதனைக் கந்த புராணத்தில் வரும்,

அரியதோர் கயிலைக் கணங்களில் ஒருவன்
　　ஆனதுண் டீரன்மா லதிபால்
பெருமயல் கொள்ளச் சிவன்இவ ளொடுநீ
　　பிறந்திருந் தின்பமுற் றென்பால்
வருகென நிலைமேல் மன்னர்பால் தோன்றி
　　மற்றவ ளோடுசேர்ந் தரசு
புரிதரு செயலால் காஞ்சிதுண் டீர
　　புரமெனப் புகலநின் றதுவே

எனும் பாடலால் தெளியலாம்.

தொண்டை நாடு பலரது ஆட்சியில் இருந்ததையும் கந்தபுராணம்,

தண்ணளி புரிதுண் டீரனும் நள்ளார்
　　சமர்த்தொழில் கடந்ததண் டகனும்
அண்ணலம் கரிகால் வளவனும் பிறரும்
　　அரசுசெய் தளித்ததந் நகரம்

என்றும் கூறுகிறது.

தொண்டைநாடு தேயமுழுதும் பரவும் பெருமைக் குரியது என்பதற்குரிய காரணங்களைச் சேக்கிழார்,

ஏயு மாறுபல் உயிர்களுக் கெல்லையில் கருணைத்
தாய ளுள்தனி ஆயின தலைவரைத் தழுவ
ஆயு நான்மறை போற்றநின் றருந்தவம் புரியத்
தூய மாதவம் செய்தது தொண்டைநன் நாடு

நன்மை நீடிய நடுநிலை ஒழுக்கத்து நயந்த
தன்மை மேலிய தலைமைசால் பெருங்குடி தழைப்ப
வன்மை ஓங்கெயில் வளம்பதி பயின்றது வரம்பின்
தொன்மைமேன்மையில்நிகழ்பெருந்தொண்டைநன்நாடு

கறைவி ளங்கிய கண்டர்பால் காதல்செய் முறைமை
சிறைபு ரிந்திட நேரிழை அறம்புரிந் ததனுல்
பிறையு றிஞ்செயில் பதிபயில் பெருந்தொண்டை நாடு
முறைமை யாம்என உலகினில் மிகுமொழி உடைத்தால்

என்ற பாடல்களில் புலப்படுத்திக் உள்ளனர்.

நாட்டுக்கு அழகு மன்றங்களைப் பெற்றிருப்பது. கம்பரும் தமது நூலில் மண்டபம் பல இருந்ததை,

மன்னவர் தருதிறை அளக்கும் மண்டபம்
அன்னமென் நடையவர் ஆடும் மண்டபம்
உன்னரும் அருமறை ஓதும் மண்டபம்
பன்னரும் கலைதெரி பட்டி மண்டபம்

எனக் குறிப்பிட்டுள்ளனர்.

''பட்டி மண்டபத்துப் பாங்கறிந்து ஏறுமின்'' என மணிமேகலையிலும் ''பகைப்புறத்துக் கொடுத்த பட்டி மண்டபமும்'' எனச் சிலம்பும் ''பட்டி மண்டபம் ஏற்றினை'' என வாசகத்தும் வருதல் காண்க. ஈண்டுப் பிள்ளை அவர்கள் மன்றத்தினைச்சுட்டினர். அம்மன்றம் நன்கு பரந்த ஒளியுடன் தென்றலங் குழவி மெல்லென உலவும் முறையில் இருந்தமையின் ''தென்றலங் கன்று உலவும் மன்றம்'' என்றனர். பரந்த மாநிழல் இடங்களும் மன்றமாகக கருதப்பட்டன. இதனை மன்று என திரு முருகாற்றுப் படையில் வரும் சொல்லுக்கு ''ஊருக்கு நடுவாய் எல்லாரும் இருக்கும் மரத்தடி'' என்று நச்சினர்க்கினியர் பொருள் கூறி இருத்தலைக் கொண்டு தெளிக. (82)

2\. ஓங்குமுனி வரர்இருவர் கைகுவித் தரமுழக்
குறளழுப் பிக்களிக்க
உலகமுழு தீன்றசிவ காமவல் லித்தாய்
உலோசனம் விடுத்துநிற்கப்
பாங்குபுனை செம்பொன்அம் பலநடனம் நவிலும்
பரஞ்சோதி மதுவொழுக்கும்
பச்சைத் துழாய்அண்ணல் மத்தள முழக்கினும்
பரவுபேர் உவகைபூப்ப
வாங்குதிரை யால்பாலி வீசுசெம் மணியும்வெள்
வயிரமும் கரைவிராவ
வண்படுகர் மேயும்வளை கோட்டெருமை அதுகண்டு
வாய்வெரீஇ ஓட்டெடுக்கும்
தேங்குதிரு வம்பரவு துண்டீர வளநாட
சிறுபறை முழக்கியருளே
தென்றலங் கன்றுலவு மன்றஒண் குன்றைமுனி
சிறுபறை முழக்கிஅருளே

*(அ.செ.) ஓங்கு-பெருமையில் ஓங்கிய, முனிவரர் இருவர்-இரண்டு முனிவர்களான வியாக்கரபாதரும், பதஞ்சலி முனிவரும், உலோசனம்-கண், விடுத்துநிற்க-விழித்துப் பார்க்க, பாங்கு-அழகுற, உற-மிகவும். புனை-அலங்கரிக்கப் பட்ட, நவிலும்-நடத்தும், பழகும், பரஞ்சோதி-பேரொளிப் பிழம்பாகிய இறைவர், மது-தேன், பச்சைத் துழாய் அண்ணல்-பசுமையான துளசிமாலை அணிந்த அண்ணலாகிய திருமால், பரவு-போற்றும், உவகை-மகிழ்ச்சி பூப்ப-உண்டாக்க, வாங்குதிரை-வளைந்து வளைந்து வரும் அலை, மடிந்து வரும் அலை, பாலி-பாலாறு, வளைகொம்பு-வளைந்த கொம்பு, வெரீஇ-பயந்து, ஓட்டெடுக்கும்-ஓட்டம் பிடிக்கும், திருவம்-செல்வம், படுகர்-மருதநிலம், தேங்குதல்-நிறைதல்.*

**விளக்கம்;** *நடராசப் பெருமானை எப்போதும் வணங்கும் பேறு பெற்ற முனிவர்கள் ஆதலின், ஓங்கு முனிவர்*

எனச் சிறப்பிக்கப்பட்டனர். இவர்கள் மதுரைக்கு மீனாட்சி அம்மையார் திருமண நிமித்தம் சென்ற காலையும், தில்லைக் கூத்தனது தரிசனம் காண்டல் இன்றி உணவு அருந்தோம் என்று கூறியதாகப்

''பொன்னவிர் கமலம் பூத்த புனிதநீர் ஆடித் தத்தம்
நன்னெறி நியமம் முற்றி நண்ணினர் புலிக்கா லோனும்
பன்னக முனியும் தாழ்ந்து பரவிஅம் பலத்துள் ஆடும்
நின்னருள் நடம்கண் டுண்ப தடியேம்கள் நியமம்''

என்று திருவிளையாடல் புராணம் கூறுதலால் இவர்கள் ஒங்கு முனிவர் ஆயினர்; கைகூப்பி அரமுழக்கம் செய்பவர் ஆயினர்.

''அகிலாண்டகோடி ஈன்ற அன்னையே பின்னையும் கன்னி என மறைபேசும் ஆனந்த ரூபமயிலே'' என்று தாயுமான வரும், ''கருதரிய கடலாடை உலகு பல அண்டம் கருப்ப மாய்ப் பெற்ற கன்னி'' என்றும் சிவப்பிரகாசரு பாடி இருத் தலால் உமை உலகம் ஈன்றவள் என்பது பெறப்படுதல் காண்க. மேலும், அம்மையாரின் சிறப்பினை,

சோதிப்பதி அன்றி வேறொரு
தெய்வம் தொழுதற் கில்லை
ஓதில் பிறர்என அச்சம்
உறுமல் உயிர்கள் எல்லாம்
நீதிப் புதல்வர்கள் ஆயின
ஆதலின் நீகொள் கற்புப்
பேதிப்ப தன்றுகண் டாய்குன்றை
வாழும் பெரியம் மையே

என்றும் சிவப்பிரகாசர் பாடியுள்ளனர்.

இறைவனையே விரும்புபவள் இறைவி ஆதலின், அவள் சிவகாமிஆயினள். இறைவன் சிவகாமிஅம்மையார் களிக்க நடம் புரிகின்றனர் என்பது அறிஞர் கொள்கை. ''மாதொரு பாகம் நோக்கி மன்னு சிற்றம்பலத்தே ஆதியும் முடியும் இல்லா அற்புதத் தனிக் கூத்து'' எனச் சேக்கிழாரும்,

"பொன்மன்றம் பொற்று மரைஒக்கும் அம்மன்றில்
செம்மல் திருமேனி தேன்ஒக்கும் அத்தேனை
உண்டு களிக்கும் களிவண்டை ஒக்குமே
எம்பெரு மாட்டி விழி"

என்று குமரகுருபரரும் கூறியதைக் காண்க.

இங்ஙனம் இறைவி ஏன் இறைவன் திருநடனத்தினைத் தன் கண்கொண்டு காண்கின்றனள் என்பதற்குரிய காரணத்தைக் குமரகுருபரர்,

" மன்னுயிர்த் தொகுதிக்கு இன்அருள் கிடைப்ப
வையம்ஈன் றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூல் கொண்ட ஐயரித் தடங்கண்
உருமாண சாயல் திருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திருநடம் புரியும்"

என்று சிதம்பர மும்மணிக் கோவையில் கூறுதல் காண்க.

தில்லை அம்பலம் பற்பல அரசர் காலத்தில் பொன்னால் அமைக்கப்பட்டது என்பது வரலாற்று உண்மை ஆகும். ஆதித்த சோழன் மகன் பராந்தகன் திருச்சிற்றம்பலத்தைப் பொன் வேய்ந்தவன். விக்ரமசோழன் மகன் இரண்டாம் குலோத்துங்கன் பேரம்பலம் பொன் வேய்ந்தான். தில்லைச் சிற்றம்பலத்தின் முகட்டைப் பொன் வேய்ந்தவனும் விஜயாலயன் ஆதித்தன். விக்ரமசோழன், தில்லைச் சிற்றம்பலம் சூழ்ந்த சுற்றுமாளிகை, கோபுரம், வாயில் இவற்றைப் பொன் வேய்ந்தான். இவ்வாறு பொன் வேய்ந்து சிவபெருமானிடத்தில் இடையறு அன்பு சோழப் பேரரசர்களிடம் இருந்தமை கண்டுதான், Vincent Smith என்பவர், "The Chola kings apparently with out exception were votaries of the God Siva' என்று புகழ்ந்து எழுதியுள்ளனர்.

ஆகவே, அம்பலம் பாங்குபுனை செம்பொன் அம்பலம் ஆயிற்று. இறைவன் ஒருவனே பரஞ்சோதி என்பதைத் தாயுமானவர், "சுத்த நிற்குணமான பர தெய்வமே பரஞ் சோதியே சுகவாரியே" என்றனர். ஆக்வே, ஈண்டும் பரஞ்

சோதி என்றனர். திருமால் இறைவன் நடம் நவிற்றும் கால் மத்தனம் முழக்கம் செய்தவன் என்று அறிஞர் கூறுவர். ஆறுகள் வெள்ளப் பெருக்கால் ஓடிவருகையில் மணிகளை அடித்துவரும் என்பதைக் கவிகள் ஆற்றுவெள்ளத்தைச் சிறப்பிக்குங்கால் பாடிய பாடல்களால் அறியலாம்.

''விழிக்கும் தழைப்பீலி யோடேல முந்தி
விளங்கு மணிமுத்தோடு பொன்வ ரன்றி
அழிக்கும் புனல்சேர் அரிசில் தென்கரை
அழகார் திருப்புத் தூர்அழ கன்நீரே''

என்று சுந்தரர் பாடுமாற்றைக் காண்க.

வளை படுகரில் மேய்தல் என்றதனல் நாட்டின் நீர் வளத்தை உணரலாம். வாய்வெருவுதல் வாய்விட்டு அரற்றி அஞ்சுதல். வளை தனது சிற்றுடலையும், எருமையின் பேர் உடலையும் கண்டு அஞ்சியே ஓடியது.

நாட்டுக்கு சிறப்புச் செல்வம். அச்செல்வம் பற்ற நிலையில் இருத்தல் கூடாது. செல்வம் மிக்கு இருக்கவேண்டும்.

''பிணிஇன்மை செல்வம் விளவுஇன்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்குஇவ் வைந்து''

என்ற குறட்பாவைக் காண்க.

நாட்டின் வளம் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை விளக்க வந்த வள்ளுவர்.

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலார்
செல்வரும் சேர்வது நாடு

உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு

நாடுஎன்ப நாடா வளத்தன நாடுஅல்ல
நாட வளம்தரும் நாடு

என்று குறிப்பிட்டிருத்தலையும் காண்க.

இவற்றை எல்லாம் உட்கொண்டே ''தேங்கு திருவம் பரவு துண்டீர வளநாடு'' என்றனர். (83)

3. புகழ்சரியை கிரியையை அனுட்டித்து வருகின்ற
புண்ணியப் பேற்றினர்க்குப்
புலரியில் சிவபிரான் தளிஎழும் சங்கமுன்
போதரு முழக்காகவும்
இகழ்வில்சிவ யோகசா தனம்மரீஇ அம்முறை
இயங்குதிற லாளருக்காங்
கெழுகின்ற சங்கபட கம்பேரி ஆதியின்
இசைப்பெரு முழக்காகவும்
அகழ்நின்ற பாலியாற் றலைஎழீஇக் கற்பகம்
அலைத்தோட அதன்அடிக்கண்
அவாய்நின்ற காமதே னுவைநோக்கி நின்னல்
அமைந்ததிப் படர்எனநனி
திகழ்நின்ற செவ்வம்உயர் துண்டீர வளநாட
சிறுபறை முழக்கியருளே
தென்றலங் கன்றுலவு மன்றஓண் குன்றைமுனி
சிறுபறை முழக்கியருளே

*(அ. சொ.) மரீஇ-ஈடுபட்டு, புலரியில்-அதிகாலையில், தளி-கோவில் சங்கம், படகம், பேரி முதலியன வாத்திய வகைகள், கற்பகம்-கற்பகநாடு, அவாய்-பொருந்தி, படர்-துன்பம், நனி-மிகவும், முன்போதரும்-முன்னால்போகும்.*

**விளக்கம்:** *சரியை கிரியை இன்ன என்பது முன்பே செங்கீரைப் பருவத்தில் விளக்கப்பட்டுளது. விளக்கம் ஆண்டுக் காணவும். சரியை கிரியை மார்க்கத்தை மேற்கொள்வது என்றால் அதற்கு முன் பிறப்பில் புண்ணியம் செய்திருத்தல் வேண்டும். இதனைத் திருஞான சம்பந்தர் தம் நெஞ்சிற்கு அறிவுறுத்தும் முறையில் உலகிற்கு உணர்த்தியுள்ளார்.*

*என்ன புண்ணியம் செய்தனை*
*நெஞ்சமே இருங்கடல் வையத்து*
*முன்னம் நீபுரி நல்வினைப்*
*பயனிடை முழுபணித்தர ளங்கள்*

மன்னுகாவிரி சூழ்திரு
வலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னிஆதரித் தேத்தியும்
பாடியும் வழிபடும் அதனுலே.

என்ற திருஞானசம்பந்தர் திருவாக்கை உணரவும்.

திருக்கோவிலில் காலையில் சங்கம் முதலிய இசைச் கருவிகள் முழங்கப்பெறும். இதனைத் திருவாசகத்தில் "ஏழில் இயம்ப இயம்பும் வெண்சங்கெங்கும்" என்றும், "கூவின பூங்குயில் கூவின கோழி, குருகு கள்இயம்பின இயம்பின சங்கம்" என்றும் கூறுமாற்றைக் காண்க. "புள்ளும் சிலம்பின காண் புள்ளரையன் கோயில் வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ" என்று ஆண்டாள் அம்மையாரும் குறிப்பிடுதல் காண்க. சங்கமே அன்றி ஏனைய இசைக் கருவிகளும் கோயில்களில் விடியற்காலையில் முழக்கப் படுவதைத் தொண்டரடிப்பொடி ஆழ்வார்.

ஏதமில் தண்ணுமை எக்கம்மத் தளியாழ்குழல்
முழவயோடு இசைதிசை யெழுப்பி
கீதங்கள் பாடினர்"

என்று பாடியுள்ளனர்.

இவ்வாறு சங்கம், முரசம் கோவில்களில் முழக்கம்பெறும் வழக்கம், தொன்மையது, மரபும் ஆகும் என்பது சிலம்பில் வரும்,

நுதல்விழி நாட்டத்து இறையோன் கோயிலும்
உவணச் சேவல் உயர்த்தோன் நியமமும்
மேழி வலன்உயர்த்த வெள்ளை நகரமும்
கோழிச் சேவல் கொடியோன் கோட்டமும்
அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்
மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்
வால்வெண் சங்கொடு வகைபெற் றோங்கிய
காலைமுரசம் கனைகுரல் இயம்ப"

என்னும் அடிகளில் காணலாம்.

சங்கு ஊதாக் கோயில்களும், விதானம், வெண்கொடி இல்லா ஊர்களும் மலர்இட்டு வழிபடா ஊர்களும், திருவில் ஊர்கள் கோவில்கள் என்பதும், அவ்வூர் அடவிக்காடு என்பதும் அப்பர் கருத்தாகும்.

விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர்பறித்திட் டுண்ணு ஊரும்
அவைஎல்லாம் ஊரல்ல அடவிக் காடே''

என்ற அப்பர் வாக்கை அறிக.

இவை அறிந்தே "புலரியில் சிவபிரான் தளி எழும் சங்க முழக்கு" என்றனர்.

சரியை, கிரியைகளை மேற்கொண்டு வருபவர்கட்டு அனுட்டான காலத்தை முற்கூட்டி அறிவிப்பது சங்கொலி. மேலும், தியான சமாதியினுலே சிவனது அருவத்திரு மேனியை எண்ணிச் செய்யும் வழிபாட்டிற்குச் சங்கம் முதலியன துணையாகும். ஆகவே, "போதரு முழக்கு இசைப் பெரு முழக்கு" என்றனர்.

யோக சாதனம் இன்னது என்பதும் முன்பே விளக்கப் பட்டது. சிவயோக சாதனத்தவர் காரணம் கருதிப் போக நிலையுறும் போதும், சிவயோக போகமாகவே கருதி இன்புறு வர் என்பதை யோகமார்க்க நிலையினை நிறுத்த வந்த சுந்தரரது செயல் முறையால் அறியலாம். இதனை நமது சேக்கிழார்,

தென்னு வலூர்மன்னர் தேவர்பிரான் திருவருளால்
மின்னும் கொடிமருங்குல் பரவைஎனும் மெல்லியல்தன்
பொன்னும் முலைஓங்கல் புணர்குவடே சார்வாகப்
பன்னும் பயில்யோகப் பரம்பரையின் விரும்பினர்.

என்று அறிந்து உணர்த்தியுள்ளதைக் காணவும்.

இத்தகைய யோகியர்களைக் குறிக்கவே "திறலாளர்" என்றனர். சங்கம், சடகம், பேரி என்பன இசைக்கருவிகள். யோகியர்கட்கு எழும் ஒலி என்றது நாத ஒலியேயாகும்.

பாலாறு ஆழமுடையது. அதற்கேற்ப நீருடையது; அதனால் அலை மிக்க எழக்கூடியது, அங்ஙனம் எழுந்த அலை கற்பக நாடு அளவு எழுந்து, அங்குள்ள கற்பகத் தருவை முட்டியதாம். அங்ஙனம் முட்டுண்ட கற்பகத் தரு தன் அடியில் இருந்த காமதேனுவை நோக்கி, "நீ நந்தி மலையில் தவம் கிடந்தபோது வசிட்டர் ஏவிய கன்றிற்குப் பால் சுரந்தமையால் அன்றோ இப்பாலாறு உண்டாகியது. அந்தப் பாலாறு இப்போது என்னை வந்து மோதுகிறது. ஆகவே, நீதான் காரணம்" என்று கூறியதாகக் கவி அழகு படப் பாலாற்றின் வளத்தினைக் கூறினர். (84)

4. ஆன்றசிவ புண்ணிய முழக்கமும் பற்பலவர்
ஆயஅடி யவர்தம்வரலா
றாகிய சரித்திர முழக்கமும் தெய்வமணம்
அகலாத தமிழ்முழக்கும்
என்றபல அரமுழக் கமும்இணை இலாதாய
இனியதிரு அருள்முழக்கும்
எய்துதற் கரிதாம் சிவானு போகப்பேர்
இருப்பெரும் முழக்கும்ஆன
மான்றபைங் கமுகம் பொழில்தலைத் தவிர்செய்ய
மதுவநிறை தேத்தடைக்கண்
வான்பிறைக் கோடுதற் கவர்இனன் எனக்கீள
வாவிகுளம் ஓடைஎங்கும்
தேன்தவழ அதுவிழும் துண்டீர வளநாட
சிறுபறை முழக்கியருளே
தென்றலங் கன்றுலவு மன்றலொண் குன்றைமுனி
சிறுபறை முழக்கியருளே.

(அ. சொ.) ஆன்ற - நிறைந்த, சிவபுண்ணியம்-சிவன் மகிழச் செய்த நற்செயல்கள், திருவருள் முழக்கு-இறைவன் கிருபை இருந்தவாறு என்னே என்று வியந்து முழக்கும். முழக்கம்-சிவானுபோகம் சிவனுடன் இரண்டறக் கலக்கும்

அனுபவம். ஏன்ற - பொருந்திய, மான்ற-மயங்குதற்கான, பொழில்தலை-சோலையில், கமுகம் - பாக்கு, தவிர்-தங்கும், மதுரம் - தேன், தேத்தடை - தேன்கூடு, தேத்தடை+தேன் அடை, வான்பிறைக்கோடு-ஆகாயத்தில் உள்ள பிறைச் சந்திரனின் முனை, இனன்-சூரியன், கீள-உடைக்க, வாவி-கிணறு, அது-அத்தேன்.

**விளக்கம்:** அடியார்கள் பற்பலர் என்பது நமது சுந்தரரது திருத்தொண்டத் தொகையால் நன்கு விளக்கம் ஆகிறது. தில்லை வாழ் அந்தணர்களும் அடியார்கள் ஆவார். அவர்கள் எண்ணிக்கையும் மூவாயிரம். பத்தராய்ப் பணிவார், பரமனையோ பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தவர், திருவாரூர் பிறந்தார்கள், முப்போதும் திருமேனி தீண்டுவோர், முழு நீறு பூசிய முனிவர்கள், அப்பாலும் அடிச் சார்ந்தார்கள் ஆகிய இவர்கட்கு ஓர் குறிப்பிட்ட எண் உண்டா? (பொய்யடிமை இல்லாதபுலவர் என்று சுந்தரரால் குறிப்பிடப்பட்டவர் தனி அடியாரே என்ற கொள்கையில் அத்தொடர் பற்றிய விளக்கமாகப் பொய்யடிமை இல்லாத புலவர் யார் என்பதை ஆராய்ந்து ஒரு நூலினை அடியேன் எழுதி இருத்தலின், மேலே குறிப்பிட்ட தொகையடியார் தொகுதியில் பொய்யடிமை இல்லாத புலவவரைச் சேர்த்திலன். அவர்களும் தொகையடியார்களே என்று கொள்கிறவர்கள் சேர்த்துக்கொள்ளவும்.) எவ்வாறாயினும், அடியார்கள் பற்பலர் என்பது உண்மை. சேக்கிழார் பெருமானார், இறைவனது அடியவர்கள் தமிழ் நாட்டிலே அன்றி, வேறு எந் நாட்டில் பிறந்திருப்பினும் எம்மரபில் பிறந்திருப்பினும், எம்மதத்தில் பிறந்திருப்பினும், எம்மொழியினராகப் பிறந் திருப்பினும் அவர்களும் இறைவனது அடியவர்களே என் பதை நன்கு தெளிவுறத் தெரிவித்திருப்பதை,

மூவேந்தர் தமிழ்வழங்கும் நாட்டுக் கப்பால்
முதல்வனார் அடிச்சார்ந்த முறைமை யோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையில் கூறும்
நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும்

பூவேய்ந்த நெடுஞ்சடைமேல் அடம்பு தும்பை
புதியமதி நதிஇதழி பொருந்த வைத்த
சேவேந்து வெல்கொடியான் அடிச்சார்ந் தாரும்
செப்பியஅப் பாலும்அடிச் சார்ந்தார் தாமே

என்ற செய்யுளில் காணவும். ஆகவே, ''பற்பலவராய அடியவர்'' என்றனர்

திருவருள் முழக்கம் எம்முழக்கத்திற்கும் ஒப்பாகாது உயர்ந்து விளங்கலின், ''இணை இலதாய இனிய திருவருள் முழக்கம்'' என்றனர். சிவானுபோகம் எய்துதற்கரியது. சிவானுபோகம் என்பது சிவபெருமானது திருவடிப் பேற்றைத் துய்த்து இன்புறும் இன்பம். இது கிடைத்தற்கு அரிதாதலின், ''இரும்பெரு முழக்கு'' என அதன் பெருமையினை உணர்த்தினர். மேலும் மும்முறை கூறுவதன் கருத்து கலத்தலாகிய சாயுச்சிய நிலை அடைதற்குச் சாலோக, சாமீப சாரூப நிலைகளாம் பதமுத்தி மூன்றைக் கடத்தலை அறிவித்தற்கு என்க. புண்ணியம் தேவை. இறைவனது திருவருள் தேவை. ''தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி'' என்னும இவ்வருமைப் பாட்டை மணிமொழியாரும் அறிவுறுத்தினர். சிவஞான சித்தியாரில்.

வாழ்வெனும் மையல்விட்டு
வறுமையாம் சிறுமை தப்பித்
தாழ்வெனும் தன்மையோடும்
சைவமாம் சமயம் சாரும்
ஊழ்பெறல் அரிது சால
உயர்சிவ ஞானத் தாலே
போழிள மதியி னானைப்
போற்றுவார் அருள்பெற் றாரே

என்று உணர்த்தியுள்ளதையும் உணரவும்.

முதல்பாதி செய்யுளின் ஆழ்ந்த கருத்து, சிவ புண்ணியங்களால் ஆன்மாவுக்கு இருவினை ஒப்புத்தோன்ற, அதனால்

மல பரிவாகம் ஏற்பட, அதனால் சத்தினிபாதம் உண்டாக, அதனால் தீவிரதர நிலையினை அடைந்தவர்க்கு இறைவன் குருவாக வந்து ஞான உபதேசம் செய்ய, அதனைக் கேட்டவர் சிந்தித்து, தெளிந்து, நிட்டை கூடிப் பாசத்தை ஒழித்துச் சிவத்துடன் அத்துவிதமாகிச் சாயுச்சி நிலையை உற்றுச் சிவானுபோகத்தில் திளைப்பர் என்பதாம். ஆகவே, எய்துதற் கரிய "சிவானுபோகம்" என்றனர்.

இப்பாட்டின் ஈற்றுப்பகுதி நிலவள மாண்மைப் புகழு கிறது. பாக்கு மரங்களில் தேன் கூடுகள் நிரம்பி இருந்தன. அப்பாக்கு மரங்கள் நீர்வளத்தால் மிக உயர்ந்து ஆகாயம் அளாவி வளர்ந்தன. அதனால் பிறைச் சந்திரனது கோடு பாக்கு மரத்தில் இருந்த தேன் கூடுகளில் பட்டு அவை உடைந்தன. உடைந்ததனால் தேன் ஊற்றெடுத்தது. ஊற்றெடுத்துக் குளம், ஓடை, கிணறு இவற்றை நிரப்பியது.

சந்திரன் தேன் கூட்டைக் கீண்டதற்குக் காரணம், சந்திரன், தேன் கூட்டைச் (அது சிவந்து காணப்பட்டதால்) சூரியன் என்று மயங்கி அச்சூரியன் தன்னைக் கவர வருகிறான் என்று எண்ணிக் கீறியதாகும். ஆகவே, ஈண்டு மயக்க அணியும், ஏதுதற்குறிப்பு ஏற்ற அணியும் அமைந்திருத்தல் காண்க. (85)

5. வில்லூரும் மணிமோலி வளவர்பெரு மான்பொன்அடி
விழாத மருவலர்க்கும்
வெண்ணீறு கண்மணி புனைந்தைந் தெழுத்தெணு
வீணராம் சமயருக்கும்
எல்லூரும் ஒண்சிவ மணம்கமழ்தல் இல்லா
தியைந்தசிந் தாமணிமுதல்
எந்நூற்கும் நெய்தலம் பறைமுழக் கேயாக
எல்ஒளிமழுக்கும்மேனிச்
சொல்லூரும் எம்பிரான் பெருமதம் பொழிமண்
துழாம்கைமா லியானைதந்த
தோல்போர்வை போர்த்ததெனத் தென்றல்வந் துலவஅழல்
தோற்றுதே மாஞ்சோலைமேல்
செல்லூரும் மேன்மையமை துண்டீர வளநாட
சிறுபறை முழக்கியருளே
தென்றலங் கன்றுலவு மன்றஓண் குன்றைமுனி
சிறுபறை முழக்கியருளே.

(அ. சொ.) வில்-ஒளி, ஊர்தல்-பரவுதல் மோலி-முடியினை யுடைய, வளவர் பெருமான்-அநபாய சோழமன்னன், பொன்-அழகிய, மருவார்க்கும் பகைவர்க்கும், கண்மணி-உருத்திராக்க மாலை, புனைந்து-தரித்து, ஐந்தெழுத்து-பஞ்சாட்சரமாகிய மகாமந்திரத்தை, எணு-எண்ணாத, எல்-ஒளி, இயைந்த-அமைந்த, சிந்தாமணி-சீவகசிந்தாமணி என்னும் நூல், நெய்தல் அம்பறை-சாப்பறை, எல்-சூரியன், மழுக்கும்-குறையச் செய்யும், மழுங்கச் செய்யும், எம்பிரான்-சிவபெருமான், துழாம்-துழாவுகின்ற, சொல்-புகழ், மாலியானை-பெரியயானை, அழல்-நெருப்பு ஒளிபோலக் கொழுந்துகளைப் பெற்று விளங்கும், தே-இனிய, செல்-மேகம்.

விளக்கம்: அநபாயன் முடி பொன்னாலும் மணியாலும் ஆனமையின் ஒளி பொருந்தியதாயிற்று. ஆதலின், ஊரும்

மோலி என்றனர். மன்னனைப் பணியாதவர் இறப்பர் என்ற குறிப்பினால் அனபாயனது வெற்றி புலப்படுகிறது.

மக்கட்கு கண்மணி, திருநீறு, ஐந்தெழுத்து மிகமிக இன்றியமையாதவை. கண்மணி உடல் போன்றது. திருநீறு உடைபோன்றது, ஐந்தெழுத்து உயிர்போன்றது. இம் மூன்றும் இல்லாமல் ஒருவன் உலகில் வாழ முடியுமா என்பதைச் சிறிது சிந்தனை செய்யவேண்டும். ஐந்தெழுத்தாவது சிவாயநம என்னும் மகா மந்திரம் ஆகும். நீற்றின் மாண்பை,

ஆதி பகவன் ஞான வடிவழலில் பூத்துநித் தியமாய்
அணிந்தோர் தமக்கு வசிகரமாய் அருந்தினோர்கட்கு
ஆர்அமுதாய்
நீதி அறியும் பசுமலத்தை நீக்கும் ஒருநற் குறிகாட்டி
நிகழ்பேர்இன்பக் கடலூட்டி நின்ற புகழவெண்
திருநீறே

என்றும், கண்மணியின் சிறப்பை,

அரியமனமும் அறிவரிதாய்
அருவாய்நிறைவாய் இருந்துமுனம்
அமரர்திரிபுரம் செய்குறை
அறையக்கேட்டு முக்கண்வழிக்
கரியகளச் செம்புயல்கருணை
பொழியப்பெருகும் கடல்பிறந்து
கருதும்அடியார் பவக்கடலைக்
கடத்தும்மணியைத் துதித்திடுவாம்

என்றும், பஞ்சாட்சரப் பேற்றினை,

கருதரிய பலஉயிர்கள் பந்தனக் கார்க்கடல்
கரையிலா வருகலனை அன்பருள் காட்சியை
அருமறையும் அறிவரிய அஞ்சுகப் பேற்றினை
அரியசிவன் உரியபெயர் ஐந்தினைப் போற்றுதும்

என்றும் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் உணர்த்தும் ஆற்றை அறிக-

திருநீற்றின் மாண்பு, ஐந்தெழுத்து மேன்மை, உருத்திராக்கக் குறிப்பு ஆகியவற்றை மேலும் காணவிழைவார் சைவத் திருமுறைகளில் காணவும். இவ்வளவு பெருமைகட்கு உரிய இப்பொருள்களின் அருமை பெருமைகளை உணராதவர்கள், பூணுதவர்கள், புகலாதவர்கள் வீணர் என்பதில் ஐயம் இல்லை அன்றோ?

சீவக சிந்தாமணியில் சிவமணம் கமழவில்லை என்று திரு பிள்ளை அவர்கள் கூறுவதன் கருத்து அவர் சைவசமயத்தின் பால்வைத்த அன்பு காரணத்தாலும், சைவநூல்களினிடத்து அவர் கொண்ட பற்றின் காரணத்தாலும் என்க.

சிந்தாமணி, சிவமணம் கமழ்தல் இல்லாத சிந்தாமணி என்று கூறுதற்கு இல்லை. சிவமணம் கமழும் நிலையிலும் சிந்தாமணி காணப்படுகிறது. சிந்தாமணியில் சிவமணம் கமழும் இடங்கள் உண்டு என்பதைக் கீழ்வரும் தொடர்களில், பாடல்களில் காணவும்.

“ ஓடுமுகில் கீறிஒளிர் திங்கள் சிகைவைத்தே
மாடமது வார்சடைய வள்ளலை ஒக்கும்” என்றும்,

(வள்ளல் எனத் திருத்தக்க தேவர் சிவபெருமானை வாயாரக் கூறி இருப்பதைக் காணவும்)

“போகம் ஈன்ற புண்ணியன்” என்றும்.

(இந்த இடத்தில் பொருள் விளக்கம் செய்த நச்சினார்க்கினியர் போகம் ஈன்ற—தான் சத்தியும் சிவனுமாய் உலகத்துக்கெல்லாம் போகத்தை உண்டாக்கின புண்ணியன் என்றார், திரிபுரத்தை அழித்தும் நஞ்சுண்டும் பல்லுயிர்களையும் காத்தலின்” என்று எழுதி விளக்கியுள்ளனர்)

“கடிமதில் மூன்றும் எய்த கடவுளில் கனன்று சொன்னான்” என்றும் கூறியிருப்பதைக் காண்க. இவ் அடியில் கடவுள் என்ற சொல்லைச் சிவபெருமானார்க்கு ஆண்டிருப்பதையும் அறியவும்

இன்பம்மற் றென்னும் பேரான்
எழுந்த புற்கற்றை தீற்றித்
துன்பத்தைச் சுரக்கும் நான்கு
கதியெனும் தொழுவில் தோன்றி
நின்றபற் ருர்வம் நீக்கி
நிருமலன் பாதம் சேரில்
அன்பு விற்றுண்டு போகிச்
சிவகதி அடைய லாமே

என்றும், (ஈண்டு இறுதியில் பெறும் முத்திப்பேறு சிவகதி என்றே உணர்த்தினமை காண்க.)

''கேவல மடத்தை என்னும் கேழ்கிளர் நெடிய வாட்கள்
பூவலர் முல்லைக் கண்ணிப் பொன்னெரு பாகமாகக்
காவலன் தான்ஓர் கூருக் கண்ணிமை யாதுபுல்லி
மூவுலகுச்சி இன்பக் கடலினுள் மூழ்கி ஞனே'' என்றும்

கூறியதைக் காண்கையில் சீவகசிந்தாமணியில் சிவமணம் இல்லை என்று கூறுதற்கு இல்லை என்பது புலப்படுகிறது. மேலே காட்டிய செய்யுளில் மோட்ச நிலை அம்மைஅப்பர் வடிவ நிலையே என்பதை எவ்வளவு தெளிவுறத் திருத்தக்க தேவர் உணர்த்தினர் என்பதைக் காணவும்.

நெய்தல் பறை ஒன்பது சாப்பறை ஆகும். இஃது ஓர் அரிய தமிழ்ச் சொல். இதனைத் திரு. பிள்ளை அவர்கள் புற நானூற்றில்,

ஓரில் நெய்தல் கறங்க ஓர்இல்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார் புறைப்பப்
படைத்தோன் மன்றப் பண்பி லாளன்
இன்ஞ தம்மஇவ் வுலகம்.

என்று பக்குடுக்கையார் பாட்டின் வாயிலாக அறிந்தனர் என்க.

சேக்கிழார் கொட்டும்பறை சோழனது பகைவர்கள் அழிந்தமையினல் கொட்டும் சாப்பறையாகவும், திருநீறு

கண்டிகை ஐந்தெழுத்தைப் பயன்படுத்தாத வீணர்க்குச் சாப்பறையாகவும், சிந்தாமணி போன்ற நூற்குச் சாப் பறையாகவும் இருக்கும்படி சிறு பறை முழக்கம் செய்ய ஆசிரியர் வேண்டுகின்றார்.

இறைவன் ஒளி சூரியன் ஒளியினும் ஒளியுடையது. "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி" என்று ஆளுடைய அடிகளும்" "கார்ஒளிய திருமேனிச் செங்கண் மாலும் கடிக்கமலத் திருந்தயனும் காணு வண்ணம் சீர் ஒளிய தழற்பிழபாய் நின்ற தில்லைத் திகழ்ஒளியை" என்று ஆளுடைய அரசரும் இறைவனது ஒளியை வியந் திருப்பதைக் காண்க. ஒரு புலவர், "உலையில் இருப்பு வண்ணத்து மேனியன்" என்றனர். இதனால்தான் "எல் ஒளி மழுக்கும் மேனி" என்றனர்.

மாஞ்சோலையின்மீது மேகம் தவழ்ந்திருக்கும் காட்சி, இறைவன் தன்மீது யானைத் தோலைப் போர்த்திருக்கும் காட்சி போன்றது என்கிறார் திரு பிள்ளை அவர்கள். மாமரம் அழல்கொழுந்து போன்ற இலைகளைப் பெற்றிருப்பதால் செந்நிறத்துடன் விளங்கற்கும், மேகம் கரு நிறத்துடன் அம் மரங்கள்மீது படிந்திருத்தற்கும் இவர், சிவனார்மேனியில் யானைத் தோல் போர்த்திருப்பது போன்றது என்று கூறும் உவமை கழிபேர் உவகை தருகிறது.

யானை கொழுத்தால் தானே மண்ணைத் தலையில் கொட்டிக்கொள்ளும் இயல்பினது. இவ்வியல்பை எண்ணியே ஈண்டுத் திரு பிள்ளை அவர்களால் "பெருமதம் மொழிமண் துழாம் கைமாலி யானை" எனப்பட்டது. "யானை தந்த தோல்" என்றதன் கருத்து, இறைவன் தானாக யானை மீது போர்க்குப் போகாமல் அதுவாக வந்து பொருது தோற்ற தனால், அதன் தோலைப் போர்த்திக் கொண்டனர் என்பதாம். அதனால்தான் "யானை தந்த தோல்" என்றனர். இறைவன் யானைத் தோலைப் போர்த்துக் கொண்ட வரலாறு: தருகா வனத்து இருடிகள் இறைவன் மீது சினம் கொண்டனர்.

அதனால் அபிசார யாக செய்தனர். அதிலிருந்து பாம்புகள், பூதங்கள், புலி, யானை முயல்கள், முதலியனவற்றை எழுப்பி, இறைவனை அழிக்க ஏவினர். அவற்றை முறையே ஆபரணங்களாகவும், கணங்களாகவும், கொண்டு மானைக் கையில் ஏந்தியும், புலி, யானை இவற்றைக் கொன்று அவற்றின் தோலை உடுத்தியும், முயலனைக் காலில் மிதித்தும் தமது பேராற்றலுடைமையை விளக்கினர்.

கஜமுகா சூரனை முனிவர் வேண்டு கோட்கிணங்கிக் கொன்று அதன் தோலைப் போர்த்துக்கொண்டனர் என்ற வரலாறும் உண்டு. இதனை,

ஒருப தத்தினைக் கவான்உற திருக்கரத் துகிரால்
வெரிந்இ டைப்பிளந் தீர்இரு தாள்புடை மேலவக்
குருதி கக்கியே ஓலிட அவுணர்தம் குலத்துக்
கரிஉ ரித்தினன் கண்டுநின் றம்மையும் கலங்க

ஐயன் மிக்கதன் கதிரினைக் குருதிநீர் அறுத
மையல் யானைவன் தோலைமேற் கொண்டனன்
மறைந்தான்

எனக் கந்த புராணம் கூறுதல் காண்க.

சேக்கிழார், மேகம் மலைமீது தவழ்ந்திருக்கும் காட்சியினை வெகு அழகுற,

அளிக்குலங்கள் சுளித்தகல அரவிந்தம் முகம்புலரப்
பளிக்குமணி மரகதவல் லியில்கோத்த பான்மைஎனத்
துளித்தலைமெல் அறுகுபனி தொடுத்தசையச் சூழ்பனியால்
குளிர்க்குடைந்து வெண்படாம் போர்த்தனையகுன்றுகளும்

என்று வர்ணித்துள்ளதைக் காண்க.

"செல்" என்னும் சொல் மேகத்தையும் உணர்த்தும் செல்க என்னும் பொருளையும் தரும். இந்த இருபொருள்களும் பொருந்தச் சிலேடைப் பொருளில் மாயூரம் வேத நாயகம்பிள்ளை அவர்கள்,

"செல்லென்றுன் நாமத்தைச் செப்பினதே அல்லாது
செல்லென் றுனைநரங்கள் செப்பினமா—அல்லென்று
மெய்யா உவமிக்க விண்மீது தோன்றியநீ
பெய்யாமல் போனதென்னே பேசும்"

என்று பாடிய பாட்டையும் படித்து இன்புறுவோமாக.

மாமரங்கள் நெருப்புக் கொழுந்துகளைப் போன்ற துளிர்களைக் காட்டும் என்பதைச் சுந்தரர்,

ஓதக் கடல்நஞ் சினைஉண் டிட்ட
பேதைப் பெருமான் பேணும் பதியாம்
சீதப் புனல்உண்டு தீயைக் காலும்
சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே

என்று பாடுதல் காண்க. (86)

6. பிதிரும் தரம்அற இன்பால் அளவிப்
பிழிசுவை மதுவிரவிப்
பிறங்கிய புல்ல கண்ட நிறீஇச்சுவை
பெறுகண் டுங்கூட்டி
எதிரும் பொருளில் பலாக்கனி மாங்கனி
இவைவா ழைக்கனிமுன்
இயையும் முழுக்கனி முந்திரி கைக்கனி
இவ்இர தமும்நாட்டி
அதிரும் கடல்அமிர் தமும்உள் உறுத்தி
அவாங்குழல் வீணைஇசை
அத்தனை யும்புக வைத்துச் சிவமணம்
அகலா தேகமழ
முதிரும் அருட்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத்தூரன்
முழக்குக சிறுபறையே

(அ. சொ.) பிதிரும்தரம் அற-திரியும் தன்மை இன்றி, மது-தேன், விரவி-கலந்து, பிறங்கிய-விளங்கிய, புல்ல

கண்டம் - சர்க்கரை, கண்டு - கற்கண்டு, நிறீஇ-நிறுத்தி. சேர்த்து, இயையும்-பொருந்தும், எதிரும்-ஒப்பாகும், இரதம்-ரசம், அவாம்-எவரும் விரும்பும், முந்திரிகைக் கனி-திராட்சைக் கனி, நாட்டி-சேர்த்து, நிறீஇ-நிறுத்தி, உறித்தி-பதித்து.

**விளக்கம்:** இப் பாடல் பெரிய புராணச் செய்யுட்களின் சுவையைக் குறிப்பதாகும். மது பிழிந்து எடுக்கப்படுதலின் பிழி சுவை மது என்றனர். கற்கண்டு, சர்க்கரையினும் இனிப்பு மிகுதியுடைமையின் "சுவைபெருங் கற்கண்டு" என்றனர். பழங்கள் பல இருப்பினும் முக்கனி என்ற தொகைக் குறிப்பால் தொன்றுதொட்டுக் குறிப்பிடப்பட்டு வருவன வாழை, மா, பலா ஆகிய இம் மூன்று பழங்களே ஆகும். "முப்பழமொடுபால் அன்னம்" என்று வரும் தொடரைக் காணவும். இவை இனிமையிலும் சுவையிலும் ஒன்றை ஒன்று மிஞ்சாமல், என்றும் பெற்றுத் திகழ்வன. இப்பழங்களைப் போன்ற சிறப்பும், இனிமையும், சுவையும் உடையவர்கள் மாதர்கள் என்ற குறிப்பினைச் சிவப்பிரகாச சுவாமி ள்,

இக்குழு மகளிருள் யார்வ னப்பினுல்
மிக்கவள் எனத்தமை வினவி ஞர்எதிர்
முக்கனி களுள்சுவை முதிர்ச்சி பெற்றது
எக்கனி அதனைநீர் இயம்புவீர் என்ருர்

என்று அறிவித்துள்ளனர். திருத்தக்க தேவரும் இம் முக்கனிகளையே "சினைத்துளிர் முழவன பலவின் தீங்கனி, கனைத்துவண்டுழல்வன வாழை மாங்கனி" என்று விதந்து கூறியுள்ளனர். இதனுல்தான் எதிரும் பொருளில் பலா, மா, வாழை என்றனர். கடல் அல்லும் பகலும் சிறிதும் ஒழிவின்றி ஒலித்துக் கொண்டிருத்தலின், அதிரும் கடல் என்றனர். இதனைக் குறுந்தொகை அழகுற,

யார்அணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடு பரந்தன்ன
மீனுர் குருகின் கானலம் பெருந்துறை

வெள்வீத் தாழை திரைஅலே
நள்என் கங்குலும் கேட்கும் நின்குரலே

என்று இயம்புகிறது.

கடலில் அமுதம் தோன்றியது என்ற புராண வரலாறு இருத்தலின், கடல் அமுதம் என்றனர். குழல் இனிது, யாழ் இனிது என்று வள்ளுவர் அறிவித்தலின் "அவாங் குழல், வீணை" என்றனர்.

ஆவின்பால், தேன், சர்க்கரை, கற்கண்டு, பலா, மா, வாழைக் கனிகள், முந்திரிப்பழம், தேவாமுதம், குழல் இசை, வீணையின் இசை ஆகிய இவற்றின் சுவைகள் எல்லாம் கலந்த போது அச்சுவை எவ்வாறு இனிக்குமோ அவ்வாறு இனிக்கும் கவிகளைப் பாடியவர் சேக்கிழார் என்பதைப் பிள்ளையவர்கள் இங்குக் குறிப்பிட்டுள்ளனர். சுவையின் மிகுதியினை மிகுதிப் படுத்த இவ்வாறு சுவைமிக்க பொருள்களைக் கூட்டி உரைத்தல் அன்பு முதிர்ந்த பெரும் புலவர்களிடத்தில் உண்டு. இராமலிங்க சுவாமிகளும் இறைவனது இன்பச் சுவையினை இயம்பும்போது,

தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்துஒன்றாக் கூட்டிச்
சர்க்கரையும் கற்கண்டின் பொடியும்மிகக் கலந்தே
தனித்தநறும் தேன்பெய்து பசும்பாலும் தெங்கின்
தனிப்பாலும் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி
இனித்தநறு நெய்அளைந்தே இளஞ்சூட்டின் இறக்கி
எடுத்தசுவைக் கட்டியினும் இனித்திடும்தெள் அமுதே
அனித்தம்அறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே
அடிமலர்க்கென் சொல்அணியாம் அலங்கல்அணிந் தருளே

என்று இனிது பாடியிருத்தலை உணரலாம்.

கனியி னும்கட்டி பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழல் பாவைநல் லாரினும்
தனிமு டிகவித் தாளும் அரசினும்
இனியன் தன்அடைந் தார்க்கிடை மருதனே"

என்ற அப்பரது அரும்பாடலையும் நினைவு கூர்தல் நலமாகும்.

அப்பர் பாட்டில் அமைந்த உவமையின் வழி அரிய கருத்துப் புலப்படுகிறது. அதாவது, இங்குக் குறிப்பிடப்பட்ட பொருள்கள் குழந்தை, இளைஞர், குமரர், முதியர் ஆகிய நால்வர்க்கும் இறைவன் தனித்தனி இன்பம் பயப்பவன் என்பது. இதுபோலச் சேக்கிழாரது கவிகள், பசுப்பால், தேன் கருக்கரை, கற்கண்டு. பலா, மா, வாழை, திராட்சை, தேவாமுதம் போல இனிக்கும் என்றதனால் வாய்க்கும், குழல், வீணை இசைபோலச் சுவைக்கும் என்றதனால் காதிற்கும், சிவமணம் கமழும் என்றதனால் மூக்கிற்கும் இன்பம் தரும் என்ற அரிய கருத்தும் அடங்கியுள்ளது. வாய், செவி, மூக்கிற்கும் இன்பம் தரும் முறையில் சேக்கிழார் கவிகள் அமைந்துள்ளனவே அன்றி, மெய்க்கும் கண்ணிற்கும் சுவை பயக்கும் முறையில் அமைந்திலவே என்று ஐயுறலாம். அங்ஙனம் ஐயுறுதற்கு இடமே இல்லை. பெரிய புராணக் கவிகளைத் தொட்டாலும் இன்பம் உண்டு. கண்ணால் பாத்தாலும் இன்பம் உண்டு. இவ்வாறு கவிகள் தொட்டாலும், கண்டாலும் சுவைக்கும் என்ற உண்மையினைத் தனிப்பாடல் திரட்டில் வரும்,

மட்டாரும் தென்களந்தைப் படிக்காசன்
உரைத்ததமிழ் வரைந்த ஏட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும்
பரிமளிக்கும் பரிந்த ஏட்டைத்
தொட்டாலும் கைம்மணக்கும் சொன்னாலும்
வாய்மணக்கும் துய்ய சேற்றில்
நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே
பாட்டினது நவினம் தானே

என்ற பாடலால் அறியலாம். மேலும், சிவஞான முனிவர் பெரிய புராணத்தைத் தம் படுக்கையில் வலப்பக்கத்தே வைத்துப் படுத்துறங்குவர் என்று ஆன்றோர் கூறும் வழக்கையும் ஈண்டு நினைவுபடுத்திக் கொள்வோமாக.

சேக்கிழாரது கவிகள் மேலே காட்டிய சுவைபோல இனிக்கும் என்பதைப் பெரிய புராணத்துத் தொட்ட தொட்ட இடங்களில் காணலாம். சில உதாரணங்களை மட்டும் ஈண்டுக் காட்டி மேலே செல்வோம்.

தூயவெண் ணீறுதுதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரும் சிந்தையும் நைந்துருகிப்
பாய்வதுபோல் அன்புநீர் பொழிகண்ணும் பதிகச்செந்
சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே

என்ற பாடலின் சுவையையும் இனிமையையும் துய்க்கவும். இதேபோல,

மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும்
திருவடிவும் மதுர வாக்கில்
சேர்வாரும் திருவாயில் தீந்தமிழின்
மாலைகளும் செம்பொன் தாளே
சார்வான திருமனமும் உழவாரத்
தனிப்படையும் தாமும் ஆகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து
பணிந்தேத்திப் பரவிச் செல்வார்

என்றபாடலில் அமைந்த இனிமையையும் படித்து இன்புறுக.

இன்னோரன்ன இனிய சுவை மிக்க பாடல்களின் சுவையை அறிந்தே காஞ்சி புராண ஆசிரியர்,

இடையறாப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவா ரத்திண்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்

என்றும், உறையூர்ப் புராண ஆசிரியர்.

கந்தைமிகை யாம்கருத்தும் கையுழவாரப்
படையும் கவின்வெண் ணீறும்
சிந்தையிடை அறாஅன்பும் சிவஞானம்
பழுத்தொழுகு செய்ய வாயும்

தந்தையொடு தாயிலான் திருவடிதை
வருமனமும் தாரைக் கண்ணும்
நிந்தைஅறு முழுத்துறவும் உடையபிரான்
அடிபணிந்து நீடு வாழ்வாம்

என்று பாடிச் சேக்கிழார் கவிச் சுவையை நுகர்ந்தனர்.

சேக்கிழார் பாடல்களில் சிவமணமே கமழும். சிற்றின்பக் காதல் வழியும் சிவமணமே கமழும் பாடல்கள் அவரால் பாடப்பட்டன எனில், சேக்கிழாரது பாடல்களின் சிவமணம் கமழும் எனக் கூறவும் வேண்டுமோ?

கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோபுயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ அறியேன்என் றதிசயித்தார்

முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ பெருகொளியால்
தன்னேரில் மாரனோ தார்மார்பில் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடைஅண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
என்னேஎன் மனம்திரித்த இவன்யாரோ எனநினைந்தார்

என்ற இடத்துச் சுந்தரர் பரவையார் சந்திப்பில் சிவமணம் கமழும்படி பாடியதைக் காண்க.

பரவையாரைத் தேடிய சுந்தரர், "அவ்வம்மையாரை, "ஈசனார் அருள் எந்நெறிச் சென்றதே" "எம்பிரான் அருள் எந்நெறிச் சென்றதே, "எந்தையார் அருள் எவ்வழிச் சென்றதே" என்று கூறி வருந்தியதாகப் பாடி இருப்பது கொண்டும், இவ்வாறே பரவையார் சுந்தரரை எண்ணி வருந்தியபோது, "அந்தண்புனலும் அரவும் விரவும் உடையான் அருள் பெற்றுடையார்" "அலரும் நிலவும் மலரும் முடியார் அருள்பெற்றுடையார்" என்று சுந்தரரைக் குறித்துப் பாடி இருப்பது கொண்டும் சிவமணம் கமழப் பாடல்கள் திகழ்வதைக் காணலாம்.

சுந்தரர் பரவையரது இன்பத்தை இனிது நுகர்ந்த போதும், இறையடி மறவாதவர் என்று பாடிக் காட்டி இருப்பதும் சிவமணம் கமழும் பாடல்தானே,

தன்னையா ளுடைய பிரான் சரணார விந்தங்கள்
சென்னியிலும் சிந்தையிலும் மலர்வித்துத் திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் பரவைஎனும்
மின்னிடையாள் உடன்கூடி விளையாடிச் செல்கின்றார்

என்ற பாடலைக் காண்க.

சுந்தரர் நரசிங்க முனைஅரையர் என்னும் மன்னரால் வளர்க்கப்பட்டு அரச போகத்தில் ஆழ்ந்திருந்தனர். அந் நிலையில் அவர்க்குத் திருமணம் கூடிற்று. மணப்பந்தர்க்குப் போகப் புறப்பட்ட நம்பியாரூரது திருக்கோலத்தைப் புகலும் நம் சேக்கிழார்,

மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க
நன்னகர் விழவுகொள்ள நம்பியாரூரர் நாதன்
தன்னடி மனத்துள் கொண்டு தகுந்திரு நீறுசாத்திப்
பொன்னணி மணியார் யோகப் புரவிமேல் கொண்டு
போந்தார்

என்று பாடுவாராயின் சிவமணம் கமழும் பாடல்கள் இவரது நூலில் உண்டு என்பதில் ஐயம் உண்டோ?

இசைக் கருவிகள் பல இருப்பினும், எடுத்துக் கூறும் பெருமைக்குரிய இசைக்கருவி குழலும் வீணையும் ஆகும். 'குழல் இனிது யாழ் இனிது என்ப" என்று வள்ளுவரும், ஏனையரும் 'குழல் கொண்டும் யாழ் கொண்டும்" என்றும் "குழல் வீணை கொடு கொட்டி" என்றும் இவ்விரண்டினையே விதந்து கூறினர். இக்காலத்தில் யாழ் என்பதையே வீணை என்று கருதியுள்ளனர். அங்ஙனம் யாழும் வீணையும் ஒன்றே என்று கருதுவதற்கு இல்லை. யாழ் வேறு, வீணை வேறு, "இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்" என்று மாணிக்கவாசகர் வீணை யாழ் ஆகிய இவ்விரண்டையும் ஈண்டுத் தனித்தனிப் பிரித்துப் பாடிக் காட்டி இருப்பதைக் காண்க.

தேவாரத் திருமுறைகளிலும் வீணை வேறு, யாழ் வேறு என்ற குறிப்பே காணப்படுகிறது. "பண்ணொடு யாழ் வீணை

பயின்முய் போற்றி'' என்ற தொடரைக் காண்க. இது நிற்க,

குழலும் வீணையும் எவராலும் விரும்பப்படும் இணைச் கருவிகள் என்ற குறிப்பினையே ஈண்டு ஆசிரியர், ''அவாம் குழல் வீணை'' என்றனர். குழல் எவராலும் விரும்பப் பட்டதை ஆனாய நாயனார் புராணத்துள் சேக்கிழார் நன்கு எடுத்து இயம்பியுள்ளனர்.

ஆனிரைகள் அறுகருந்தி
அசைவிடா தணைந்தயரப்
பானுரைவாய்த் தாய்முலையில்
பற்றும்இளங் கன்றினமும்
தானுணர்வு மறந்தொழியத்
தடமருப்பின் விடைக்குலமும்
மான்முதலாம் கான்விலங்கும்
மயிர்முகிழ்த்து வந்தணைய

ஆடுமயில் இனங்களும்அங்
கசைவயர்ந்து மருங்கணுக
ஊடுசெவி இசைநிறைந்த
உள்ளமொடு புள்ளினமும்
மாடுபடிந் துணர்வொழிய
மருங்குதொழில் புரிந்தொழுகும்
கூடியவன் கோவலரும்
குறைவினையின் துறைநின்றார்

பணிபுவனங்களில் உள்ளார்
பயில்பிலங்கள் வழிஅணைந்தார்
மணிவரைவாழ் அரமகளிர்
மருங்குமயங் கினர்மலிந்தார்
தணிவில்ஒளி விஞ்சையர்கள்
சாரணர் கின்னரர் அமரர்
அணிவிசும்பில் அயர்வெய்தி
விமானங்கள் மிசைஅணைந்தார்

சுரமகளிர் கற்பகப்பூஞ்
சோலைகளின் மருங்கிருந்து
கரமலரின் அமுதூட்டும்
கனிவாய்மென் கிள்ளையுடன்
விரவுநறும் குழல்அலைய
விமானங்கள் விரைந்தேறிப்
பரவியஏழ் இசைஅமுதம்
செவிமடுத்துப் பருகினார்

நலிவாரும் மெலிவாரும்
உணர்ஒன்றாய் நயத்தலினால்
மலிவாய்வெள் எயிற்றரவம்
மயில்மீது மருண்டுவிழும்
சலியாத நிலைஅரியும்
தடம்கரியும் உடன்சாரும்
புலிவாயின் மருங்கணையும்
புல்வாய புல்வாயும்

மருவியகால் விசைத்தலையா
மரங்கள்மலர்ச் சினைசலியா
கருவரைவீழ் அருவிகளும்
கான்யாரும் கலித்தோடா
பெருமுகிலின் குலங்கள்புடை
பெயர்ஒழியப் புனல்சோரா
இருவிசும்பின் இடைமுழங்கா
எழுகடலும் இடைதுளும்பா

இவ்வாறு நிற்பனவும் சரிப்பனவும் இசைமயமாய்
மெய்வாழும் புலன்கரணம் மேவியஒன் றாயினவால்
மொய்வாச நறுங்கொன்றை முடிச்சடையார்
அடித்தொண்டர்
செவ்வாயின் மிசைவைத்த திருக்குழல்வா சனைஉருக்க

என்ற பாடல்களின் பொருளைக் காண்க.

இவ்வாறே கண்ணன் குழல் ஊதியபோது தேவமாதர்களும், வித்தியாதரர்களும் மகிழ்ந்ததையும், அஃறிணைப்

பொருள்கள் குழல் இசையை அனுபவித்ததையும், ஆயர்கள் உற்ற நிலையினையும் அழகுற அருளாள தாசர் தமது ஸ்ரீ மகா பாகவதத்துள்,

கரும்புருவம் நெறித்தெழில்சேர் கடைக்கண் ணோக்கிக்
கண்ணபிரான் ஊதுகுழல் கானம் கேட்டே
அரம்பைஉருப் பசியொடு மேன கைஇலங்கு
அழகுசெறி திலோமைத்தயோ டனேக மாதர்
கரும்பிரத மொழியினர்கள் வளைகள் சோரக்
கலைநெகிழக் குழல்அவிழக் கடிதின் எய்தி
விரும்புறவே நோக்கிஉலை மீது வைத்த
மெழுகெனவே மெய்ம்மறந்தங் குருகி நின்றார்

இருகரங்கள் இலங்கமழை எழுலி போன்ற
இறைஊதும் குழல்அமிர்த கீதம் கேட்டே
கெருடகாந் தருவர்உயர் இயக்கர் கேழில்
கின்னரர்கிம் புருடர்எழில் மிக்க தூய
உருவுடைய தும்புருநா ரதர்கள் வித்தி
யாதரர் களும்வந் தெய்திக் கையில்
மருவியகின் னரிஇணை யில்வீணை சோர
மதிம யங்கிச்சித் தரம்போல் நின்றார்

வடிவுடைய மதனன்என வயங்கு கண்ணன்
வாயினூறு வேயின்இசை செவியின் வாய்ப்ப
அடவிதனில் அழல்வளர்த்து வருந்திச் செய்யும்
அருந்தவங்கள் ஒருவியோ கிகளும் ஒக்கக்
கடலினூறும் அமிர்தம்மக அவிசு தெல்லாம்
கைத்திடவான் அமரர்களும் கடிதின் எய்தி
உடலுருகி ஆனந்த வாரி சோர
உறல்நோக்கி மெய்மறந்தோ வியம்போல்
நின்றார்

கோகிலங்கள் பிணிமுகங்கள் கபோதம் பூவை
கொஞ்சுசுகம் ஓதிமம்நீள் குரண்டம் நாரை
போகமிகும் அன்றில்புதா இனங்கள் பார்ப்போ
டசுணப்புள் இவைக ளெல்லாம் கடிதில்

ஓகையுடன் சிறகுவிரித் துற்று நோக்கி
உருகிஇரு கண்இமையா திருந்து தூய
நாகமிசை நடித்தருள்வோன் வேயின் ஊது
நாகஇசை இருசெவிஓர்ப் புற்று நைந்த

கருமுகில் அஞ்சன நீலம் காயாம் பூவின்
கவின்நிகராம் உருஉடைய கண்ணன் வாயில்
மருவுகுழல் ஊதஎழு நாத கீதம்
மகோததியின் அமிர்தெனவே செவியின் வாய்ப்ப
அரியநறு மலரினுறு வேரி தன்னை
அருந்துதல்விட் டெய்திஅளி பாடா தாடா
திருசிறகு விரித்துயர்வான் நசையா தேகா
தெழுதியசித் திரம்போல இருந்த தன்றே

நாகரிக னவள்ளல் ஊது கின்ற
நற்குழலில் எழுநாத கீதம் கேட்டே
சூகரம்பஞ் சானனம் சார்த்தூலங் கைமாத்
துலங்கியவா விகம்மயிடம் எண்கு சீறி
மோகரத்தின் நெய்தாளி குருளை யோடு
முடு சின மொழிந்துகண்கள் இமையா தாகிச்
சாகரமாய்ச் செவிநெறித்தே உருகி நிற்பச்
சற்பங்கள் படம்விரித் டாமல் நின்ற

காதினில்குண் டலம்இலங்க நெற்றி மீதில்
கத்தூரித் திலகஒளி கவினைக் காட்டச்
சீதரன்தன் வாயின்இசை ஏழும் நாணச்
சிறந்தகுழல் ஊதஎழும் நாதம் தன்னால்
பாதவங்கள் மதுச்சொரிய மலர்கள் வீழப்
பரந்துகனி உதிர்ந்திடவே பணிவார் போலப்
பூதலத்தில் பரமன்நின்ற திரையை நோக்கிப்
பொலிந்த தாமரைக்கை வளைந்த மாதோ

கானில்எழு நிலவெறிப்பத் தண்கால் வீசக்
காவின்உறு மலர்வாசம் கமழக் கேழின்
நானவெறி உறுமேனி திகழ நின்ற
நாரணனன்ஊ தும்வேயின் நாதம் கேட்ட

மானினங்கள் மேய்ந்த புல்லும் கடைவாய் சோர
மகிழ்ந்திருகண் ணுல்அமையப் பார்த்து நிற்க
ஆனிரைகள் செவிநெறித்து முலைப்பால் சோர
அகம்குழைந்து கன்றினுடன் நோக்கிற் றம்மா

மாயவன்தன் வாயினிடை வேயைவைத்து
மகிழ்ந்தினிதின் ஊதஎழுகீதம் கேட்ட
ஆயர்மட வார்கள்எலாம் உருகி நெஞ்சம்
ஆவிதளர்ந் தேஒன்றும் அறியார் ஆகி
ஏயெனும்முன் குழல்ஓசை நெறியின் எய்தி,
இடைதுவளக் கலைநெகிழ வளைகள் சோரத்
தூயகுழல் அவிழஇமைப் போதின் முன்னர்
துலங்குபர மன்தனைத்தான் சூழ்ந்தார் அன்றே

கறந்தநிறை பால்கலசம் தரையில் வையார்
கவிழ்ந்துடைய ஏறிந்தோடிக் கடிதில் சென்றார்
சிறந்தஅனம் அருந்துகரம் நீரில் காட்டார்
தியங்கிமனம் தடுமாற விரைவில் சேர்ந்தார்
துறந்துதுயில் அனந்தலுடன் பாறி னார்கள்
சோறொருவற் கிடுவமுன்னே துளங்கித் தம்மெய்
மறந்தும்மதி மயங்கிவல்லை ஏகி னார்கள்
மாலெழுவார் தமைத்தடுக்க வல்லார் யாரே

என்று பாடி இருப்பதையும் படிக்கும்போது, குழல், “அவாங் குழல்” என்று அடை கொடுத்துச் சிறப்பித் திருப்பது பொருத்தம் அன்றோ!

இவ்வாறே வீணையின் இசையும் விரும்பப்படுதலைச் சீவகசிந்தாமணிப் பாடலால் அறிந்து கொள்ளலாம்,

அண்ணலியாழ் நரம்பை ஆய்ந்து மணிவிரல்தவழ்ந்த வாறும்
விண்ணிய இலயம் பற்றிப் பாடிய வனப்பு நோக்கி
மண்ணவர் வீணை வீழ்த்தார் விஞ்சையர் கனிந்து சோர்ந்தார்
பண்ணவர் மருளின் மாய்ந்தார் சித்தரும் மனத்துள் வைத்தார்

வீழ்மணி வண்டு பாய்ந்து மிதித்திடக் கிழிந்த மாலே
சூழ்மணிக் கோங்கு வீணைச் சுகர்புரி நரம்பு நம்பி
ஊழ்மணி மிடறும் ஒன்றுய்ப் பணிசெய்தவாறு நோக்கித்
தாழ்மணித் தாம மார்பின் கின்னரர் சாம்பி ஞரே

விண்ணவர் வியப்ப விஞ்சை வீரர்கள் விரும்பி ஏத்த
மண்ணவர் மகிழ வான்கண் பறவைமெய்ம் மறந்து சோர
அண்ணல்தான் அனங்கன் நாணப் பாடிஞன் அரசர்
எல்லாம்
பண்ணமைத் தெழுதப் பட்ட பாவைபோல் ஆயி ஞரே

என்னும் பாடல்களைப் படித்து இன்புறுவோமாக.

பண்ணூர்ந்த வீணைபயின்ருனே, "மழலே வீணயர்" "கொண்டதோர் வீணையிஞன்" என்றும், "தம் கையில் வீணை வைத்தார்" வீணை பாணிசெய் குழகர் போலும்" எம் இறைநல் வீணை வாசிக்குமே. "வீணைகள் பாடும் விகிர்தஞர்" "வீணை பயின்றவன்" கைக்கிளரும் வீணை புலவன் கண்டாய்" "வேதத்தொலிகொண்டு வீணை கேட்பார் வெண்காடு மேவிய விகிர்தஞரே" "பண்ணூர்ந்த வீணை பயின்ருன் தன்னே" வீணையோடு மிக்குபாடல் மிக்க "கையவன்" "சாமத்தின் இசை வீணை தடவிக் கொண்டார். "மிகு நல்ல வீணை தடவி" என்றெல்லாம் திருமுறைகளில் கூறப்பட்டது கொண்டும் உணரவும்.

சேக்கிழாரது கவிகள் அருட் கவிகள் என்பது முற்றிலும் உண்மை. இறைவன் அடி எடுத்துக் கொடுக்க அத்திருவருள் கொண்டு பாடியதனுல் அருட் கவி ஆயின. அருட்கவி களாகிய அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர், முதலான திருமுறை ஆசிரியர்களின் அருட்கவிகளுடன் இவரது கவிகள் அடங்கிய நூலும் திருமுறைகளில் ஒன்ருக இணைத்திருப்பதனுலும், இவரது பாடல் அருட்கவி என்று அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம்; நிறுவலாம்,

இறைவனது திருவருட் பெற்றவர்களின் அருட் கவிகளின் பொருள்களை எல்லாம் தம் நூலில் புகுத்திப் பாடல்களைப் பாடி இருத்தலினாலும், இவரது பாடல் அருட்கவி தானே!

"ஐந்து பேர் அறிவும்" என்று தொடங்கும் இவரது பாடல், குமர குருபர சுவாமிகட்கு ஞானசாரியானது திருவருள் உண்டாகத் துணையாய் நின்றது என்பதை உணரும்போது. இவரது கவிகள் அருட்கவிகள்தாமே! வேறு என்ன வேண்டும் இவர் அருட்கவி பாடிய புலவர் என்பதற்கு.?

அனபாயச் சோழன் கடலில் பெரியது எது? மலையில் பெரியது எது! உலகில் பெரியது எது? என்றுதன் அவைக்களப் புலவர்களைக் கேட்டபோது, அங்கிருந்த புலவர்கள் எவரும் அவ்வினாக்களுக்கு விடை தர இயலாது விழித்த போது, நமது சேக்கிழார் பெருமான் அல்லரோ!

"பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலில் பெரிது" என்றும்,

"நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்"
மலையின் மாணப் பெரிது" என்றும்,

"காலத்தி னால்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது"

என்றும்,

விடை இறுத்தனர்! ஆகவே, இவர் பெரும் புலவர் தாமே! எனவே, திரு பிள்ளை அவர்கள் சேக்கிழாரைப் புலவன்" என்றனர். (87)

7. அத்தி தருங்கவி என்மரும் நன்று
அறைகுதிர் அம்மட்டோ
அவாவிய புத்தி தருங்கவி என்மரும்
அதுமட் டோஇன்னும்
சித்தி தருங்கவி என்மரும் எல்லாத்
தீர்த்தங் களுர்உறுமா
செய்யாச் சுத்தி தருங்கவி என்மரும்
செப்பிய அம்மட்டோ
பத்தி தருங்கவி என்மரும் ஆகிப்
பாரிற் புலவர்எலாம்
பல்லா றேதுபு பாராட் டக்கதி
பற்றிய பல்லோர்க்கும்
முத்தி தருங்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன்
முழக்குக சிறுபறையே

*[அ.சொ.] அத்தி-உண்டு என்னும் பொருளது, அறைகுதிர்-சொன்னீர், அத்திரும் கவி-ஆஸ்திகம்தரும் கவி, உலகர் உண்டு என்று அறிவிக்கும் கவி, அதாவது-கடவுள் உண்டு, சீவான்மா உண்டு, மறுபிறவி உண்டு, நல் வினை, தீவினைப் பயன்கள் உண்டு என்று நிலை நிறுத்தும் பாடல்கள், பாரில்-உலகில், ஓதுபு-சொல்லி, புத்தி-ஞானம், அவாவிய-விரும்பிய, சித்தி-வேண்டியதை வேண்டியாங்கு பெறும் பேறு, பரலோக சித்தி, உறுமா-உறுமாறு, பல்லாறு-பல விதம், கதி-நற்கதி, பற்றிய-விரும்பிய.*

**விளக்கம்:** *இக்கவியிலும் திருபிள்ளையவர்கள் சேக்கிழாரின் செய்யுள் சிறப்பை விளக்கி உள்ளனர். சேக்கிழார் கவிகளில் எல்லார்க்கும் எவை எவை தேவை என்பது படுகிறதோ, அவை எல்லாம் உண்டு என்னும் முறையில் பெரிய புராணத்தில் கவிகள் அமைந்துள்ளன.*

இக் காலத்தில் தமது கொள்கையினை நிலைநாட்ட உண்ணாவிரதம் இருப்பதைக் காணலாம். இதனையே இக் காலத்தில் சத்தியாக்கிரகம் என்பர். பாடு கிடத்தல் என்றும், கூறுவர். இம்முறை பண்டைக் காலத்தில் உண்டு என்பதைப் பெரிய புராணத்தில் காணலாம். இதனை அப்பரது வரலாற்றில் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளனர். வாகீசர் பழையாறை வடதளி என்னும் தலத்தை வந்தடைந்தார். அங்குள்ள சிவலிங்கத்தைச் சமணர் மறைத்து வைத்திருந்தனர். அதனைக் கண்ட தாண்டக வேந்தர் "சிவலிங்கத்தைக் கண்டு தரிசியாது உண்ணேன்" என்று உறுதிகொண்டனர் என்பதை,

> வண்ணம்கண்டு நான்உம்மை
> வணங்கிஅன்றிப் போகேன்என்
> றெண்ணம் முடிக்கும் வாகீசர்
> இருந்தார் அமுது செய்யாதே

என்று பாடியுள்ளனர். இது பெரிய புராணத்துள் எதுவும் உண்டு என்பதற்குச் சான்று அன்றோ?

அத்தி உண்டு என்ற பொருள்தருதற்கேற்ப, நாத்தி என்னும் சொல் இல்லை என்ற பொருள்தரும் சொல்லாகும். நாத்தி பேசுவோர் நாத்திகர் எனப்படுவர். இவர்கள், "இறைவன் என்பவன் ஒருவன் இலன். ஆன்மா என்ற பொருள் ஒன்று இல்லை. அவ்வான்மா நுகரும் பாவ புண்ணியம், இன்ப துன்பம் இல்லை. இவற்றிற்கு ஏதுவான மறு பிறப்பு இல்லை" என்று கூறுபவர்கள். இத்தகையவர்கள் இக் கருத்துக்களைப் பலமுறை சொல்லிவருதலின் மணிமொழியார்,

> ஆத்த மானார் அயலவர் கூடி
> நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்

என்றனர்.

இவ்வாறு நாத்திகம் பேசி இல்லை என்பவர்களும் உண்டு என்று ஒவ்வும் வகையிலும் கவிகளைப் பாடியவர் சேக்கிழார்.

காணப்பட்ட உலகிற்குக் காணப்படாத இறைவன் உண்டு என்பதைச் சேக்கிழார் அரிவாள் தாய நாயனுர் புராணத்தும், திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தும் குறிப்பிட்டுள்ளனர்.

அரிவாள் தாய நாயனுர் தமது ஊட்டியினை அரிந்து கொள்ள முயன்றபோது, பூமி வெடிப்பினின்று கை ஒன்று தோன்றி, அவரை அரியாதவாறு செய்தது. இதனை,

மாசறு சிந்தை அன்பர் கழுத்தரி அரிவாள் பற்றும்
ஆசில்வண் கையை மாற்ற அம்பலத் தாடும் ஐயர்
வீசிய செய்ய கையும் மாவடு விடேல்வி டேல்என்று
ஓசையும் கமரில் நின்றும் ஒக்கவே எழுந்த தன்றே

என்று பாடிக்காட்டினர். ஈண்டு நிலப்பிளவாம் பொருள் காணப்பட்டது. ஆனல், ஊனக் கண்ணுல் காணப்படாத இறைவன் அங்குக் காணப்பட்டுக் கைகாட்டித் தடுத்ததை உணர்க. இவ்வாறே திருக்குறிப்புத் தொண்டர் புராணத்துள்,

கந்தைபுடைத் திடஎன்றும் கல்பாறை மிசைத்தலையைச்
சிந்தஎடுத் தெற்றுவன்என் றணைந்துசெழும் பாறை
[மிசைத்
தந்தலையைப் புடைத்தெற்ற அப்பாறை தன்மருங்கு
வந்தெழுந்து பிடித்ததணி வளைத்தழும்பர் மலர்ச்செங்கை

என்று காணப்படாத இறை காணப்பட்ட நிலையும் உண்டு என்று சேக்கிழார் நிலை நிறுத்தியதைக் காண்க.

இறைவனது அடிமைகளாக ஆன்மா உண்டு என்பதை அடியார்களின் தோற்றங்களே நமக்குப் புலப்படுத்து கின்றன. அங்கம் பூம்பாவை வரலாற்றில் ஆவி போதலும் ஆவி வருதலும் ஆகிய செய்திகளைச் சேக்கிழார் குறிப்பிடுகையில்,

ஆவி தங்குபல் குறிகளும் அடைவில தாக
மேவு காருட விஞ்சைவித் தகர்இது விதிஎன்று

மேவும் வேலையில் உறுபெருஞ் சுற்றமும் அலறிப்
பாவை மேல்விழுந் தனர்படர் ஒலிகடல்போல்

என்று ஆவி நீங்கியதையும்,

ஆன தன்மையின் அத்திருப்
பாட்டினின் றடைவே
போன வாயுவும் வடிவமும்
பொலிவொடு நிரம்பி

என்று ஆவி வந்துற்றதையும் சேக்கிழார் பாடிக் காட்டி இருத்தலின், ஆன்மா உண்டு என்றதை நிலை நாட்டிய வாறு காண்க.

இருவினையுண்டு என்பதையும் பெரிய புராணத்தில் காண்கிறோம். அப்பர், இறை புண்ணியம் இல்லாத காரணத்தால்தான் சமணர் சமயம் புகுந்தார் என்பதை,

நில்லாத உலகியல்பு கண்டுநிலை யாவாழ்க்கை
அல்லேன்என் றறத்துறந்து சமயங்கள் ஆன வற்றின்
நல்லாறு தெரிந்துணர நம்பர்அரு ளாமையினால்
கொல்லாமை மறைந்துறையும் சமண்சமயம் குறுகுவார்

என்றனர். நம்பர் அருளாமை என்ற குறிப்பினால் நல்வினை அதுபோது அப்பருக்கு இல்லை என்பதை உணர்க.

நல்வினையாம் புண்ணியம் ஒன்று உண்டு என்பதைக் கண்ணப்ப நாயனார் புராணத்துள்

புண்ணியப் பொருளாய்உள்ள
பொருவில்சீர் உருவி னானைக்
கண்ணினுக் கணியாத் தங்கள்
கலன்பல அணிந்தார் அன்றே

என்று சுட்டியுள்ளதையும் காண்க.

இங்ஙனம் பதி உண்மை, பசு உண்மை, வினை உண்மை உண்டு என்று கருத்துடைய கலிகளைப் பாடிய பாடல்களைப் படித்துப் பயன் உறுக.

மனுநீதிச் சோழன் மகன் வீதிவிடங்கன் கன்றைக் கொன்ற பாவத்தினைத் தீர்ப்பதற்குரிய வழியினைக் கூறிய மந்திரிகள், மறையுணர்ந்த அந்தணர்கள் விதித்த முறை வழி நிறுத்தல் அறம் என்றனர். அதுபோது மன்னன் அவ்வமைச்சர்கட்குக் கூறிய மொழிகள் அவர்கட்குப் புத்தி புகட்டும் முறையில் அமைந்திருப்பதைக் காணலாம்.

வழக்கென்று நீர்மொழிந்தால்
மற்றதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை இழந்தலறும்
கோவுறுநோய் மருந்தாமோ
இழக்கின்றேன் மைந்தனைஎன்
றெல்லீரும் சொல்லியஇச்
சழக்கின்று நான் இசைந்தால்
தருமம்தான் சலியாதோ

மாநிலம் காவலன் ஆவான் மன்னுயிர் காக்கும் காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால் தன்பரி சனத்தால்
ஊனமிகு பகைதிறத்தால் கள்வரால் உயிர்கள் தம்மால்
ஆனபயம் ஐந்தும்தீர்த் தறம்காப்பான் அல்லனோ

என்மகன்செய் பாதகத்துக்
கிருந்தவங்கள் செயஇசைந்தே
அன்னியனோர் உயிர்கொன்றால்
அவனைக்கொல் வேனானால்
தொன்மனுநூல் தொடைமனுவால்
துடைப்புண்ட தெனும்வார்த்தை
மன்னுலகில் பெறமொழிந்தீர்
மந்திரிகள் வழக்கென்றான்

என்ற பாடல்களைப் பார்க்கவும்.

பெருமிழலைக் குறும்ப நாயனார் சுந்தரர் பாதம் போற்றி எல்லாச் சித்திகளும் கைவரப் பெற்றார் எனச் சித்தி தரும் பாடலாக,

நாளும் நம்பி ஆரூரர் நாமம் நவின்ற நலத்தாலே
ஆளும் படியால் அணிமாதி சித்தியான அணைந்தற்பின்

மூளும் காதல் உடன்பெருக முதல்வர்நாமத் தைந்
தெழுத்தும்
கேளும் பொருளும் உணர்வுமாம் பரிசுவாய்ப்பக்
கெழுமினூர்

என்று பாடிக் காட்டியதைக் காண்க.

தீர்த்தமானது தூய்மை செய்வதாகும். உடல் மாசைப் போக்குவதுடன் உள் மாசையும் போக்கவல்லது. இது குறித்தே தீர்த்த யாத்திரையினை மக்கள் மேற்கொள்வர். மூர்த்தியைப் போலத் தலத்தைப் போலத் தீர்த்தமும் விசேட முடையது என்ற கருத்தில்தான் தாயுமானவர்,

மூர்த்திதலம் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே

என்று உணர்த்தியருளினூர். ஆகத் தீர்த்தம் சுத்தி தருவது போலச் சேக்கிழார் கவியும் சுத்திதரும் கவியாகும்.

திருநாளைப் போவார் நாயனூர் தமது பிறப்பு மாசுடையது என்று கருதி இருந்ததனுல், அக் கருத்தை ஒழித்து அவர் தூய உடல் பெருமாறு தீயில் மூழ்கிவர இறைவன் இட்ட கட்டளையின் பாடி, நாயனூர் தீயில் மூழ்கி மாசு போக்கி எழுந்ததைச் சேக்கிழார்,

கைதொழுது நடமாடும் கழல்உன்னி அழல்புக்கார்
எய்தியஅப் பொழுதின்கண் எரியின்கண் இம்மாயப்
பொய்தகையுப் உருஒழித்தும் புண்ணியமா முனிவடிவாம்
மெய்திகழ்வெண் நூல்விளங்கு வேணிமுடி கொண்
டெழுந்தார்

என்று பாடிய பாட்டால் சுத்திதரும் பாடல் பாட வல்லவர் என்பதை அறியலாம்.

சேக்கிழார் முத்தி தரும் பாடல்கள் பாடியவர் என்பதும் அவர்தம் புராணத்துள் நன்கு காணலாம்.

ஞானம் உண்டார் கேட்டருளி
நல்லஇசையாழ்ப் பெரும்பாணர்க்
கானபடியால் சிறப்பருளி
அமரும் நாளில் அவர்பாடும்

மேன்மைப் பதிகத் திசையாழில்
இடம்பெற் றுடனே மேவியபின்
பானற் களத்தார் பெருமணத்தி
லுடனே பரமர் தாளடைந்தார்

எனத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் முத்தி பெற்றமையினையும்,

தேவர்பிரான் திருத்தொண்டில்
கோச்செங்கட் செம்பியர்கோன்
பூவலயம் பொதுநீக்கி
ஆண்டருளிப் புவனியின்மேல்
ஏவியநல் தொண்டுபுரிந்
திமையவர்கள் அடிபோற்ற
மேவினார் திருத்தில்லை
வேந்தர்திரு வடிநிழல்கீழ்

என்று கோச்செங்கட் சோழ நாயனார் முத்தி பெற்றதையும் பாடிய பாடல்களால், முத்தி தரும் கவி பாடிய சிறப்பைக் காண்க. முத்தி என்பது அந்தமில் இன்பத்து அழிவில் வீடாகும்.

ஓதுபு என்பது செய்பு என்னும் வாய்பாட்டு வினை எச்சமாகும். இதுபோலப் பல எச்ச வாய்பாட்டுச் சொற்கள் உண்டு.

செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின் வினைஎச் சம்பிற
ஐந்தொன் றுறுமுக் காலமும் உணர்த்தும்

என்னும் நன்னூல் சூத்திரத்துள் காண்க.

திருத்தொண்டர்புராணத்துள் பத்தி தரும் பாடல்கள் உண்டு என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? "பக்திச்சுவை நனிச் சொட்டச்சொட்டக் கவி பாடிய பாவலர்" என்று முன்பே திரு பிள்ளை அவர்கள் பாடியுள்ளனர் அல்லரோ? பெரிய புராயணப் பாடல்கள் பெரும்பாலும் பத்தித் தரும் பாடல்களைக் கொண்டதுதானே! (88)

8. கனிவில் எமைப்பொரு வார்களும் நெஞ்சு
கரைந்து கரைந்துருகக்
காமரு பத்தியும் வயிராக் கியமும்
கவினக் குதிகொள்ளத்
தனிவில்பொன் மேருவெ னக்கொடு திரிபுர
தகனம் புரிபெருமான்
தயங்குபொன் அம்பலம் நின்றுபல் லோர்அஞ்
சலிசெய நட்டம்நவில
நனிவில் இடும்புகழ் மிகுசம் பந்தரும்
நாவுக் கிறையவரும்
நாவலர் கோவும் சிரம்கரம் கம்பிதம்
நன்கு புரிந்தருள
முனிவில் தமிழ்க்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன்
முழக்குக சிறுபறையே.

*[அ.சொ.] கனிவில் - மனக்கனிவில்லாத, பொருவார்களும்-போன்றவர்களும், காமரு-அழகிய, வைராக்கியம்-உலக ஆசை இல்லாமை, கவின - அழகுற, குதிகொள்ள-நடனம் செய்ய, தனி-ஒப்பற்ற, கொடு-கொண்டு, திரிபுரம்-முப்புரங்களை, தகனம் புரிபெருமான்-எரித்த சிவபெருமான், தயங்கு-விளங்கு, நடம்-நடனம், நவில-செய்ய, நனி-மிகவும், வில்இடும்-ஒளிவிடும், நாவலர்கோ-சுந்தர மூர்த்திசுவாமிகள், கம்பிதம்-அசைவு, முனிவு-வெறுப்பு, சிரகரகம்பிதம்-தலை அசைவு, கையசைவு.*

**விளக்கம்:** *திரு பிள்ளை அவர்கள் மிகவும் கனிவுடையவர் என்பது அவரது திருவாக்கான கனிவில் எமைப் பொருவார்களும் என்று கூறியிருப்பதுகண்டு உணர்கிறோம். கனிவு இல்லாத என அடக்கம் தோன்றக் கூறினர்*

எனினும் அமையும். வைராக்கியம் என்பது உலகப் பொரு ளில் வரும் வெறுப்பாகும்.

அப்பர் பெருமானார்முன் அரம்பையர் ஆடினர். பொன், மணி முதலியனவும் அவர்முன் காணப்பட்டன. அதுபோதும் அவர்,

இத்தன்மை அரம்பையர்கள் எவ்விதமும் செயல்புரிய
அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகும்
மெய்த்தன்மை உணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தம்
சித்தநிலைதிரியாது செய்பணியில் தலைநின்றார்

செம்பொன்னும் நவமணியும் சேணவிளங்க ஆங்
[கெவையும்
உம்பர்பிரான் திருமுன்றில் உருள்பருக்கை உடன்ஒக்க
எம்பெருமான் வாகீசர் உழவாரத் தினில்ஏந்தி
வம்பலர்மென் பூங்கமல வாவியினில் புகஎறிந்தார்.

இவை போன்ற செய்கைகள் வைராக்கியமாகும்.

மேருமலை பொன்னிறம் உடையது. அதனது பொன் னிறம், ஒளி ஒப்பற்றவை. ஆதலின், தனிவில் பொன்மேரு என்றனர். மேலும், கல்லாகிய மேரு வில்லாக இறைவனுக் குப் பயன்பட்டமையின், தனிவில் எனச் சிறப்பிக்கப்பட்டது எனினும் ஆம். மேரு கற்சாபம் என்பதை இரட்டையர்கள் "நாண் என்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்" என்றதைக் காண்க.

மேரு ஒப்பற்றது என்பது தன்னைச்சார்ந்த எதையும் தன்னிறம் ஆக்குவதால் என்க, இதனைத் திருமந்திரம்,

சயிலலோ கத்தினைச் சார்ந்த பொழுதே
சயிலம தாகும் சராசரம் போல

எனக் கூறுதல் காண்க.

கொடு என்பது கொண்டு என்பதன் குறையாகும். இவ்வாறு சொற்கள் இடையே குறைதல் உண்டு என்பது இலக்கணவிதி. "ஒரு மொழி மூவழி குறைதலும் அனைத்தே" என்பது நன்னூல் விதி

தில்லை அம்பலவன் திருக்கூத்துத் தேவர் மக்கள் யாவராலும் போற்றி வணங்கப்படும் நிலையினது என்பதைச் சேக்கிழார்,

நீடும் திருவுடன் நிகழும் பெருகொளி
நிறைஅம் பலம்நினை வுறநேரே
கூடும் படிவரும் அன்பால் இன்புறு
குணம்முன் பெறவரு நிலைகூடத்
தேடும் பிரமனும் மாலும் தேவரும்
முதலாம் யோனிகள் தெளிவொன்று
ஆடும் கழல்புரி அமுதத் திருநடம்
ஆரா வகைதொழு தார்கின்றார்

என்று கூறுமாற்றால் "பல்லோர் அஞ்சலிசெய் நடநவில்" என்பது உண்மையாதல் காண்க. மேலும் திருமந்திரம்,

"தேவர் உறைகின்ற சிற்றம்பல மென்று
தேவர் உறைகின்ற சிதம்பரமே என்றும்,
தேவர் உறைகின்ற திருஅம்பல மென்றும்,
தேவர் உறைகின்ற தென்பொது ஆமே"

என்று கூறுதலும் காண்க.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாவலூரர் ஆகிய மூவர் முதலிகளும் மிக்க புகழ் ஒளியுடையர் ஆதலின், "நனி வில் இடும்" என்ற அடை கொடுத்தனர். இம் மூவர் திருப்பெயர்களும் மந்திரங்கள் ஆகும்.

திருஞான சம்பந்தர் திருநாமம் மந்திரம் என்பதை,

மீனவன் செவியி னூடு மெய்யுணர் வளிப்போர் கூற
ஞானசம் பந்தர் என்னும் நாமமந் திரமும் செல்ல
ஆனபோ தயர்வு தன்னை அகன்றிட அமண ராகும்
மானமில் லவரைப் பார்த்து மாற்றம்ஒன் றுரைக்க
லுற்றார்

என்ற இடத்து, நெடுமாறனுக்குத் திருஞானசம்பந்தர் திருப்பெயர் திருமந்திரமானதையும், திருநாவுக்கரசர் திருப் பெயரையும் திருமந்திரமாக அப்பூதி அடிகளார் கொண்டி ருந்ததைச் சேக்கிழார்,

வடிவுதாம் காணு ராயும் மன்னுசீர்
வாக்கின் வேந்தர்
அடிமையும் தம்பி ரானுர் அருளும்கேட்
டவர்நா மத்தால்
படிநிகழ் மடங்கள் தண்ணீர்ப் பந்தர்கள்
முதலாய் உள்ள
முடிவிலா அறங்கள் செய்து முறைமையால்
வாழும் நாளில்

என்று பாடியுள்ளனர். இச் செய்யுட்கு விளக்கம்போல நால்வர் நான்மணிமாலை நூலாசிரியர்,

உற்ருன் அலன்தவம் தீயின்நின் ருன்அலன் ஊண்புனலா
அற்ருன் அலன்நுகர் வும்திரு நாவுக் கரசெனும்ஓர்
சொற்ருன் எழுதியும் கூறியுமே என்றும் துன்பில்பதம்
பெற்ருன் ஒருநம்பி அப்பூதி என்னும் பெருந்தகையே

என்று பாடி இருப்பதையும் காணவும்.

திருநாவலூரர் தம் பெற்ருேர்களால் நம்பி ஆரூரர் என்று பெயரிடப்பட்டவர். அங்ஙனம் பெயரிட்ட நிலையினைக் குறிக்க வந்த இடத்துச் சேக்கிழார், ''தம்பிரான் அருளினுலே தவத்தினுல் மிக்கோர் போற்றும் நம்பியாரூரர் என்ற நாமமும் சாற்றி'' என்று பாடினர். இங்ஙனம் பாடியதற்குக் காரணம், இத் திருநாமத்தையே மகா மந்திரமாகக்கொண்டு எண்வகைச் சித்திகளைப் பெருமிழலைக் குறும்பர் பெற்ருர் ஆதலின், இப்பெயரை மந்திரமாகக் கொண்டார் என்பதை,

''நாளும் நம்பி ஆரூரர் நாமம் பயின்ற நலத்தாலே
ஆளும் படியால் அணிமாதி சித்தி ஆன அணைந்ததன்பின்''

என்று குறிப்பிட்டுள்ளனர். ஆகவே, இம் மூவரும் நனி வில் இடும்புகழ் உடையார் என்பது உண்மை அன்ருே?

இம் மாண்புக்குரிய மூவர் முதலிகளும் சேக்கிழாரது கவியைக் கண்டு கரமும் தலையும் அசைக்கும் வண்ணம் கவி பாடிய பெருமைக்குரியவர் சேக்கிழார் என்றனர் திரு பிள்ளை அவர்கள்.

திருஞான சம்பந்தர் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இறுதியிலும், திருநாவுக்கரசர், கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இடையிலும், திருநாவலூரரார் கி. பி. 9-ஆம் நூற்றாண்டிலும் இருந்தவர்கள். சேக்கிழார் கி. பி. 12-ஆம் நூற்றாண்டினர். இவ்வாறு இருக்க மூவர் முதலிகள் சிரக்கம்பம் கரக்கம்பம் எவ்வாறு செய்தனர் என நினைக்கலாம். அவர்கள் பருவுடல் நீத்திருந்தாலும் நுண்ணுடல் உடையராய், என்றும் திகழ்தலின், இங்ஙனம் சிரக் கம்பம் கரக் கம்பம் செய்ததாகத் திரு பிள்ளை அவர்கள் கூறினர் என்க. மெய்யடியார்கள் மறைந்தும் மறையாதவர்களே!

சைனர்களும் பௌத்தர்களும் வடமொழிப் பற்றுடையவர்கள். அவர்கள் தமிழைப் பயின்று தமிழ் நூல் பல இயற்றினர். கிறித்தவர்களும் முஸ்லீம்களும் வேற்று நாட்டவர், வேற்று மதத்தவர் என்றாலும், தமிழ் மொழியை நன்கு விருப்புடன் பயின்று தமிழ் அன்னைக்கு நூல்கள் பல தமிழில் இயற்றி நற்றொண்டு புரிந்தனர். சிந்தாமணி சைனகாவியம், மணிமேகலை புத்த காவியம் தேம்பவாணி கிறிஸ்தவக் காவியம், சீறாப் புராணம் முஸ்லீம் காவியம். இங்ஙனம் பிற மதத்தினராலும் தமிழ் போற்றப் பட்டு, விரும்பப்பட்டு இருத்தலின் தமிழ் முனிவில் என்ற அடை கொடுத்துப் பேசப்பட்டது.

இறைவன் முப்புரங்களை எரித்த வரலாறு. வித்துயுன் மலி, விருபாட்சன், கமலாக்கன் என்னும் மூன்று அரக்கர்கள், பொன், வெள்ளி, இரும்பாலாகிய இயங்கும் கோட்டையில் பறந்து தேவர்களுக்கும் முனிவர்கட்கும் துன்பம் செய்து, வந்தமையின் இறைவர் தேவர் முனிவர்களின் வேண்டுகோட்கு இணங்கி அவர்களது கோட்டைகளை அழித்து, அவ்

வரக்கர்களேயும் தண்டித்தனர். தண்டித்து அருளும் செய்துள்ளனர். இதனைச் சுந்தரர்,

மூவெயில் செற்ற ஞான்று உய்ந்தமூ
வரில்இருவர் நின்திருக் கோயில் வாய்தல்
காவலா ளர்என் றேவிய பின்னே
ஒருவநீ கரிகா டரங்காக
மானை நோக்கி யோர் மாநடம் மகிழ
மணிமுழா முழக்கஅருள் செய்த
தேவ தேவ நின் திருவடி அடைந்தேன்
செழும்பொழில் திருப்புன்கூ ருளானே

என்று பாடி இருத்தலைக்கொண்டு தெளிக. (89)

9. நந்து புராணம்எவ் வளவா யிற்றென
நாடுறும் அனபாயன்
நகைமகிழ் பூப்ப மணிக்கால் ஆயிரம்
நண்ணிய மண்டபவாய்
வந்து விராவும் இடத்தில் அமர்ந்து
வயங்குறு கையேட்டின்
மாண்பார் கண்டம் கொண்டங் கெழுதுநர்
மாருதேஎழுதப்
பிந்து வரைந்த எழுத்தினுள் ஒன்றும்
பெயரா தக்கரமாம்
பெயர்ப்பொருள் தேற்றுபு நிலைபெற யார்க்கும்
பெட்கும் விருப்பம்எழ
முந்து தமிழ்க்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத்தூரன்
முழக்குக சிறுபறையே

[அ. சொ.] நந்து-வளரும், அனபாயன்-அனபாய சோழன், மணி-அழகிய, பூப்ப-அடைய, விராவும்-பொருந்த

மான, வயங்குறு-விளங்குறும், கண்டம்-எழுத்தாணி மாண்பு-மாட்சிமை, ஆர்-பொருந்திய, பிந்து-எழுத்தின் மேல்புள்ளி, பிந்து வரைந்த எழுத்து-மெய் எழுத்து, பெயராது - போகாதபடி, விட்டுவிடாதபடி அக்கரம் - அழியாதது, தேற்றுபு-தெளியும்படி செய்து, பெட்கும்-கற்க விரும்பும், மாறுதே-ஓய்வின்றி. வேறுபடுத்தாமல்.

**விளக்கம்:** சேக்கிழார் பெருமானார் பெரிய புராணம் இயற்றத் தில்லை வந்துற்றனர். இறைவன் திருவருளால் புராணத்தைப் பாடவும் தொடங்கிவிட்டனர். இந்நிலையில் அனபாயன்; அப்புராணம் எந்த அளவில் முடிந்துளது என் பதனை அடிக்கடி ஆளை ஏவி அறிந்து வருமாறு செய்தனன். இதன் கருத்து அப்புராணத்தைச் செய்யுள் வடிவில் காணவும், கேட்கவும் அவன் கொண்டிருந்த பேராவா எந்த அளவுக்கு இருந்தது என்பதைக் குறிப்பதாகும். அனபாயன் அடிக்கடி தூதரை ஏவிப் புராணம் எந்த அளவு என்று முடிந்துளது அறிய அவாவுற்றனன் என்பதை,

சேவை காவலர் புராண காதைதொகை
  செயநி னைந்தமை அகன்றபின்
யாவர் தாம்அரு கிருந்த பேர்கள்கதை சென்ற
  தெவ்வளவி ருந்ததெங்
காவ தென்இவைகள் அறிய வேண்டுமத
  றிந்து வாரும்என வளவர்கோன்
ஏவி னானுரிய தூதர் தூதர்அறி
  யாமல் ஒற்றரையும் ஏவினான்

என்று உமாபதியாரும் உரைத்தருளினார்.

இக்கருத்தினையே முதலடிகள் உணர்த்துகின்றன, சேக்கிழார் பெரிய புராணத்தை எழுதத் தொடங்கிய மணிக்கால் மண்டபத்தை இன்னும் தில்லையில் காணலாம். திருவாதிரை நாளில், ஆனித் திருமஞ்சன நாளில் நடராசப் பெருமானுக்குத் திருமுழுக்கு அலங்காரம் முதலியன நடைபெறும் இடம் இதுவே ஆகும். கையேடு ஈண்டுப் பனை ஓலை ஏடுகளாகும். தொண்டர் புராணத்தை எழுதும் வாய்ப்பினை

எழுத்தாணி பெற்றமையின் ''மாண்பு ஆர் கண்டம்'' என்றனர். சேக்கிழார் மொழியினை எதிர் நோக்கி ஏடும் கையுமாக அவாவுடன் எழுத்தாளர்கள் இருந்தனர் என்ற குறிப்பை, ''வயங்குறு கையேடு'' என்ற தொடரில் விளங்க வைத்தனர்.

திருமுறைகளை எழுதுவதை அவாவுடன் மேற்கொண்ட தொண்டர்கள் உண்டு என்பதைக் சேக்கிழாரே, கணநாத நாயனர் புராணத்துள்,

நல்ல நந்தன வனப்பணி செய்பவர்
    நறுந்துணர் மலர்கொய்வோர்
பல்ப ணித்தொடை புனைபவர் கொணர்திரு
    மஞ்சனப் பணிக்குள்ளோர்
அல்லு நன்பக லும்திரு அலகிட்டுத்
    திருமெழுக் கமைப்போர்கள்
எல்லை யில்விளக் கெரிப்பவர் திருமுறை
    எழுதுவோர் வாசிப்போர்

என்று குறித்துள்ளனர்.

ஈண்டு ஓர் அரிய குறிப்பை நமது திரு பிள்ளை அவர்கள் தந்துள்ளனர். அதாவது சேக்கிழார் பெருமானர் கவிகளைச் சொல்லிக்கொண்டே வர, ஏடு எழுதுவோர் எழுதிக் கொண்டே வந்தனர் என்பதாம். இதனை, ''கையேட்டின் மாண்பார் கண்டம் கொண்டங் கெழுதுநகர் மாருதே எழுத'' என்ற தொடரில் காண்க. இக்குறிப்பு உமாபதி சிவாசாரியார் பாடியுள்ள சேக்கிழார் புராணத்துள் இல்லை. ஆண்டுச் சேக்கிழாரே தம் திருக்கரத்தால் எழுதி முடித்தனர் என்ற குறிப்புக் காணப்படுகிறது. இதனை,

காண்டம்இரண் டாவகுத்துக் கதைப்பரப்பைத்
    [தொகுத்துக்
    கருதரிய சருக்கங்கள் பதின்மூன்று நிலையிட்
டீண்டுரைத்த புராணத்தில் திருவிருத்தம் நாலா
    யிரத்திருநூற் றைம்பத்து மூன்றுக அமைத்துச்

கோண்டகைய திருத்தொண்டர் புராணம்எனப் புராணத்
 திருமுறைக்குத் திருநாமம் சீர்மைபெற அமைத்திட்
டான்தகைமை பெறஎழுதி மைக்காப்புச் சாத்தி [பின்
 அழகுபெறக் கவளிகையும் அமைத்ததில்வைத் ததன்

என்ற பாட்டின் ஈற்றில் உள்ள இரண்டடிகளில் காணலாம்.

பெரிய புராணத்துள் உள்ள ஒவ்வோர் எழுத்தையும் விடாது கூட்டிச்சேர்த்து எடுத்து எழுதப்பட்டிருத்தலின், "பிந்து வரைந்த எழுத்தினுள் ஒன்றும் பெயராது," என்றனர். அவ்வெழுத்துக்களில் அமைந்த பொருள் அழிவில்லாத பொருள். எவராலும் அசைக்க முடியாத பொருள். இது குறித்தே, "அக்கரமாம் பெயர்ப் பொருள் தேற்றுபு" என்றனர். அச்கரமாம் என்பதற்கு எழுத்து என்ற மேற்பொருள் இருப்பினும், அழிவில்லாதது என்ற உட்பொருளும் இருத்தலின், பெரிய புராணப் பொருள் அழிவில்லாதது என்ற கருத்துத் தொனிக்க, "அக்கரமாம்" என்ற தொடரை அமைத்தனர் திரு. பிள்ளை அவர்கள்.

சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்
உவமைஇலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில்

காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்
தாழிய கடலே அதனிடை அமுதே அடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியாள் தன்திரு வருள்பெற் றனைஎன்பார்

என்பன போன்ற சேக்கிழாரின் பாடல்களின் பொருள் என்றேனும் அழிக்க முடியும் நிலையினை உறுமோ? உறாது. ஈண்டு ஒளவையாரின் பெருமிதப் பாடலாகிய,

நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினும் நூல்சீலை
நாற்றிங்கள் நாளுக்குள் நைந்துவிடும்—மாற்றலரைப்
பொன்றப் பொருதடக்கைப் போர்வேல் அகளங்கா
என்றும் கிழியாதென் பாட்டு

என்பதையும் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

சேக்கிழாரது பாடல்கள் எவர்க்கும்' பெட்பும் விருப்பும் தருவன என்பதைஅறியாதவர்யார்? இவரது கவியினிடத்துப் பெட்கும் விருப்பம் இருந்ததைக்கூட உமாபதி சிவஞர்.

மருவுதிரு முறைசேர்ப்பார் எழுதுவார் இருந்து
வாசிப்பார் பொருளுரைப்பார் கேட்டிருப்பார் மகிழ்ந்து
சிரமசைத்துக் கொண்டாடிக் குதுகலிப்பார் சிரிப்பார்
தேனிப்பார் குன்றைமுனி சேக்கிழார் செய்த
அரியதவத் தினைநினைப்பார் அம்பலவர் முன்னுள்
அடிஎடுத்துக் கொடுக்கஇவர் பாடினர்என் றுரைப்பார்
பெரியபுரா ணங்கேட்ட வளவர்பிரான் செவிக்குப்
பிடிக்குமோ இனிச்சிந்தா மணிப்புரட்டென் றுரைப்பார்

என்று அறிவிக்குமாற்றுல் அறியலாம்.

தமிழ் மொழியினை, "முந்து" என்று அடை கொடுத்துக் கூறிய திரு. பிள்ளை அவர்களின் நுண்ணறிவைப் பாராட்டாமல் இருக்க இயலாது. தெய்வங்கட்கு எல்லாம் முன் இருப்பது தமிழ் என்ற கருத்தில்தான் திரு பிள்ளை அவர்கள் இவ்வடைச் சிறப்பை இயைத்துள்ளனர். இதனை எடுத்துக் காட்டுடன் எடுத்துக்காட்டின், முந்து தமிழ் என்ற தொடரின் பொருட் சிறப்பு நன்கு விளங்கும்.

இடைக்காடர் என்னும் புலவரைக் குலேச பாண்டியன் தனக்கு இருந்த இலக்கண இலக்கிய அறிவுச் செருக்கால் மதித்திலன். அவன் அவரது பாடலையும் பொருட்படுத்திலன். இதனுல் மனம் உளைந்த இடைக்காடர் ஆலவாய்ச் சுந்தரேசப் பெருமானைக் கண்டு வணங்கி,

சந்நிதியில் வீழ்ந்தெழுந்து தமிழ்அறியும்
பெருமானே தன்னைச் சார்ந்தோர்
நன்னிதியே திருவால வாயுடைய
நாயகனே நகுதார் வேம்பன்
பொன்நிதிபோல் அளவிறந்த கல்வியும்மிக்
குளனென்று புகலக் கேட்டுச்
சொன்னிறையும் கவிதொடுத்தேன் அவமதித்தான்
சிறிதும்முடித் துளக்கா ஞகி

பரிவாய்இன் மொழிதொடுத்து வருணித்தோர்க்கு
அகம்மகிழ்ந்தோர் பயனும் நல்கா
விரிவாய தடங்கடலே நெடுங்கழியே
அடுங்கான விலங்கே புள்ளே
பொரிவாய பராரைமர நிரையேவான்
தொடுகுடுமிப் பொருப்பே வெம்புப்
எரிவாய கொடுஞ்சுரமே எனஇவற்றோர்
அஃறிணையொத் திருந்தான் எந்தாய்

என்னைஇகழ்ந் தனனோசொல் வடிவாய்நின்
இடம்பிரியா இமயப் பாவை
தன்னையும்சொல் பொருளான உன்னையுமே
இகழ்ந்தனனென் றனக்கியா தென்று
முன்னைமொழிந் திடைக்காடன் தணியாத
முனிவீர்ப்ப முந்திச் சென்றான்
அன்னவுரை திருச்செவியின் ஊறுபா
டெனஉறைப்ப அருளின் மூர்த்தி

இடைக்காடர் பின் சென்று வைகையின் தென்கரையில் உமையுடன் வீற்றிருக்கலானார்.

திருமழிசை ஆழ்வார் தமது மாணவன் கணிகண்ண னுடன் காஞ்சியில் இருந்தபோது, அரசாண்ட மன்னன், கணிகண்ணனிடம் தன்மீது பாட்டுப் பாடவேண்டும் என வேண்டினன். அது செய்ய மறுத்த கணிகண்ணனைத் தன்னாட்டில் இருத்தல் கூடாது எனக் கட்டளைப் பிறப்பிக்க, அதனைத் தன் ஆசிரியரிடம் கூற, அவர் நீ இங்கு இருக்கக் கூடாது என்றால் நான் மட்டும் இங்கு இருக்கலாமா? பெருமாளும் இங்கு இருக்கலாமா என்று கூறி எழுந்து பெருமாளிடம் சென்று,

"கணிகண்ணன் போகின்றான் காமரும்பூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா—துணிவுடையை
செந்நாப் புலவன்யான் செல்கின்றேன் நீயும்உன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்"

என்று பாடியதும் பெருமாளும் தன் பிராட்டியுடன் அவர் பின் சென்றார் என்றும் கூறப்படுகிறது. இதனைக் குமர

குருபரரும் "பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டலே" என்றும் பாடியுள்ளனர். இவ்விரு வரலாறு களால் முந்துகின்ற தமிழ் என்பது உண்மை ஆகும் அன்றோ? ஆகவே "முந்து தமிழ்" என்றனர். காஞ்சிபுரத்தில் வரதராசப்பெருமாளின் திருவிழாவில் தமிழ் வேதமாகிய ஆழ்வார்களின் அருளிப்பாடு முன்னர் பாடிக் கொண்டு போக, அதன் பின் பெருமாள் போவதை இன்றும் காணலாம். ஆகவே இதுவும் முந்து தமிழ்தானே. (90)

10\. தங்கு தமக்கெதிர் நின்றுளம் உருகத்
தரிசித் திடுவளவன்
தன்செவி பரிசனர் அம்செவி மறையவர்
தம்செவி யும்கேட்க
எங்கும் அளாம்புகழ் இச்சே வையர்கோன்
யாமே முதல்நல்க
எம்அடி யார்வர லாறு முழுக்க
இனிக்கப் பாடினனல்
பொங்கு விருப்பில் கேட்குக என்னுப்
பொன்அம் பலவாணர்
பொலிதிரு வாக்கடி ஞெகிழியின் ஒலியொடு
பொற்ப எழுப்பஅருள்
முங்கு தமிழ்க்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன்
முழக்குக சிறுபறையே

[அ. சொ.] வளவன்-அனபாய சோழ மன்னன், பரிசனர்-அரச சிப்பந்திகள், கடவுள் பணிபுரிவோர், அஞ்செவி—உள்செவி, அழகிய செவி, மறையவர்-தில்லைவாழ் அந்தணர், அளாம்-நிறைவும், சேவையர்கோன்-வேளாளப் பெருந்தகையாருக்கு, முதல்-உலகெலாம் என்னும் முதல்

நல்க-எடுத்துக் கொடுக்க, ஞெகிழியின் ஒலி-சிலம்பின் ஒலி, பொற்ப-அழகுற, முங்கு-முழ்கும், அஞ்செவி என்பது அகம் செவி என்று பிரிக்கப்படும் போதுதான் உள்செவி என்று பொருள்படும். "அஞ்சிறைதும்பி" என்ற தொடரையும் காண்க. "அகம் முனர் செவிவரின் இடையனகெடும்" என்பது விதி.

**விளக்கம்:** இறைவராம் நடராசப் பெருமான், மன்னன் முதல் மற்றைய யாவரும் கேட்க, "நாம் முதல் எடுத்துக் கொடுக்கச் சேக்கிழார் அடியவர் வரலாற்றைப் பாடி யுள்ளனர். "அதனைக் கேட்பீராக" என்று அசரீரியாகச் சொன்னார் என்பது தொண்டர் புராண வரலாறு கூறும் உண்மை. இதனை அப்புராணத்துள்,

சேக்கிழான் நமதுதொண்டர் சீர்பரவ
நாம்மகிழ்ந் துலகம் என்றுநம்
வாக்கி னால்அடி எடுத்து ரைத்திட
வரைந்து நூல்செய்து முடித்தனன்
காக்கும் வேல்வளவ நீஇதைக் கடிது
கேள்எனக் ககன வெளியிலே
ஊக்க மானதிரு வாக்கெ ழுந்தது
திருச்சி லம்பொலியும் உடன்எழ

என்றுவரும் பாடலால் அறியலாம். இக்குறிப்பே இப்பாட்டில் முதல் பகுதியில் காணப்படுவது. சேக்கிழார் அடியார் வரலாற்றை முழுக்கப் பாடினார் என்பதைக் காப்புப் பருவத்தில் நன்கு விளக்கப் பட்டுள்ளது. ஆண்டுக் காண்க.

இறைவனே நமது சேக்கிழாரை, "எங்கும் அளாம்புகழ் இச்சேவையர்கோன்" என்று புகழ்ந்து கூறும் பெருமை யினைப் பெற்றனர் என்றால், அவர்தம் பெருமையினை எங்ஙனம் எடுத்து இயம்புவது? இறைவன் திருவாக்குச் சிலம்பொலியுடன் கேட்டது என்பது புராணத்தும், பிள்ளைத் தமிழினுள்ளும் இருத்தலை ஓர்க. இதனால் கருத்து ஒற்றுமை கவினுறத் தெரிகிறது. "வெருளில் மெய்ம்மொழி வான்

நிழல் கூறிய, பொருளின் ஆகும் எனப்புகல்வாம்" என்பது சேக்கிழார் வாக்கு.

இறைவன் சிலம்பொலி செய்து காட்டல் சிறப்புடைய நிகழ்ச்சியின்போதே ஆகும். இந்த உண்மை கழறிற்றறிவார் நாயனார் புராணத்துள் நன்கு உணரலாம்.

சேரமான் பெருமாள் நாயனார் தில்லைக் கூத்தப் பெருமானைப் பூசித்து நிற்கையில் பூசையினை இறைவன் ஏற்றதற்கு அறிகுறியாகச் சிலம்பொலியினை எழுப்பிக் காட்டுவர். ஒரு நாள் சேரர் பெருமானார் கூத்தப்பெருமானது சிலம்போசையினைக், கேளாத நிலையில் அவர் இறைவனிடம், "இன்று பூசை முடிவில் சிலம்போசையினை அடியேன் கேளாத நிலையில் யான் செய்த தவறு என்னையோ?" என்று வினவித் தம் பூசையில் பிழை இருத்தல் வேண்டும். ஆதலின் ஓசையினைக் காட்டிலர் என்று உடைவாள் கொண்டு உயிரினை மாய்த்துக்கொள்ள முயன்றபோது, இறைவர் உடனே சிலம்போசையினை எழுப்பினர். இதனைச் சேக்கிழார்,

பூசை கடிதுமுடித்து அடியேன் என்னோ
பிழைத்தது எனப்பொருமி
ஆசை உடம்பால் மற்றினிவே றடையும்
இன்பம்யா தென்று
தேசின் விளங்கும் உடைவாளை உருவித்
திருமார் பினில்நாட்ட
ஈசர் விரைந்து திருச்சிலம்பின் ஓசை
மிகவும் இசைப்பித்தார்

என்று சிலம்போசை எழுந்ததைக் குறிப்பிட்டதைக் காணவும்.

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
உண்ட பாலனை அழைத்ததும் எலும்புபெண் உருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததும் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்

என்று பரஞ்சோதியார் அறைகூவி இப்பாடலைப் பாடி அமைத்திருப்பது, தமிழ் அருள் முங்கு தமிழ் என்ற காரணத்தால்தான்.

"பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனைஅன் றேவிக் காரம்கொண்ட—பாலன்
மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
கரணம்போல் அல்லாமை காண்"

என்று திருக்களிற்றுப் படியார் கூறுவதன் குறிப்பும்,

அணங்கமர் யாழ்முரித் தாண்பனை
பெண்பனை ஆக்கிஅமண்
கணங்கழு ஏற்றிக் கடுவிடம்
தீர்த்துக் கதவடைத்துப்
பிணங்கலை நீர்எதிர் ஓடம்
செலுத்தின வெண்பிறையோ
டிணங்கிய மாடச் சிரபுரத்
தான்தன் இருந்தமிழே

என்று நம்பியாண்டார் நம்பிகள் பாடியதன் குறிப்பும் தமிழ் அருள் முங்கு தமிழ் என்ற கருத்தில் என்க.

வானும் புகழ்புகலி மன்னன் தொடர்பொன்று
தேனுந் தீதழியோன் சீர்ஏடு—தானும்
கரியாய் மொழியும் கரியாய் விடாமல்
எரியார் அழல்வீழ்ந் தெழுந்து

என்று சிவப்பிரகாச சுவாமிகள் கூறியுள்ளதன் குறிப்பும், தமிழ் "அருள் முங்கு தமிழ்" என்பதை விளக்கவே என்க (91)

# 10. சிறுதேர்ப்பருவம்

1. மருவாய் நறுந்தா தகித்தொங்கல் வளவர்கோ
மகனுடன் இவர்ந் திருகையும்
மணிக்கவரி வாங்கிவீ சக்கற்ப கப்பூ
மகிழ்ந்துவா னுடர் தூற்றப்
பெருவாய் திறந்துபட கம்பேரி முதலாம்
பெரும்பணை எலாம் முழங்கப்
பிறங்குமூ வாயிரவர் முதலியோர் மறையொலி
பிறங்கத் தொடர்ந்து போதக்
கருவாய் உருமற்றை யாரும் தலைக்குமேல்
கைகுவித் தேத்தி மேவக்
கருதும் புராணமுடி வில்குஞ் சரத்தில
கடத்திவர்ந் தோங்கு தில்லைத்
தெருவாய் உலாப்போது சேவைஃயர் குலாதிபன்
சிறுதேர் உருட்டி அருளே
சிறுகோல் எடுத்தரசு செங்கோல் நிறுத்திஞேன்
சிறுதேர் உருட்டி யருளே

*[அ. சொ.] : மருவாய்-வாசனையுடையதாய், நறுந் தாதகி-நல்ல ஆத்தி மலர், தொங்கல்-மாலை, வளவர் கோமகன்-சோழமன்னன் அநபாயச்சோழன், இவர்ந்து-ஏறி மணி-அழகிய, கவரி-வெண்சாமரை, வானுடர்-தேவர்கள் பேரி-வாத்திய வகைகள் பணை-வாத்தியங்கள், பிறங்கு-விளங்கு, மூவாயிரவர் - மூவாயிரம் தில்லை வாழ் அந்தணர், மறை-வேதம், பிறங்க-விளங்க, போத-வர, கருவாய்-தாயின் கருப்பத்தில், உரு-சேராத, ஏத்தி-போற்றி மேவ-உடன்வர. குஞ்சரத்து யானைமீது. இலகடம்-யானை அம்பாரி, உலா-வீதி வலம், இவர்ந்து-ஏறி அமர்ந்து, சிறு*

கோல்-உழவு வெருதுகளை ஓட்டக் கையில் கொள்ளும் சிறுதாற்றுக் கோல்.

**விளக்கம்;** ஆண்பால் பிள்ளைப் பருவத்தில் பத்தாவது பருவமாக அமைவது சிறுதேர்ப் பருவமாகும். இது குழந்தையைச் சிறுதேர் உருட்டி விளையாடுமாறு வேண்டும் பருவமாகும். இது நான்காம் ஆண்டு நிகழ்ச்சி என்க. "நான் காம் ஆண்டில் சிறுதேர் உருட்டலும்" என்பது பிங்கலந்தை. தமிழ் நாட்டு மூவேந்தர்கட்கும் தனித்தனி அடையாளமலர் உண்டு. இதனை,

வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்
போந்தை வேம்பே ஆர்என வரூஉம்

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம். இம் முறைக்கு இணங்க ஈண்டுச் சோழற்குரிய அடையாளமலர் ஆத்தி ஆதலின், "மருவாய் நறுந்தாதகித் தொங்கல் வளவர் கோமகன்" என்றனர். சில மலர்கள் மணமின்றி இருத்தல் உண்டு. இதனை "இணரூழ்த்தும் நாறாமலர்" என்று வள்ளுவர் கூறுமாற்றாலும் அறியலாம். ஆனால், தாதகி மண முடையதாகவும், அம்மணமும் நல்ல மணமாகவும் இருப்பது பற்றி, நறுந் தாதகி என்றனர். வளவர் என்பது சோழர் மரபிற்கே சிறப்புடன் வழங்கப்பெறும் சொல்லாகும். ஈண்டு, அச்சோழமரபினருள் ஒருவனான அநபாயனை இச்சொல் குறிக்கிறது. இவனே சேக்கிழார் காலத்து மன்னன். அனபாயச் சக்ரவர்த்தி சேக்கிழார் பெருமானுக்கு மணிக்கவரி வீசும் மாண்புபெற்றமையினால், "கோமகன்" ஆயினான் மணிக்கவரி வீசப் பலரும் முந்தியிருக்க வேண்டும். அங்ஙனம் முந்தின வர்கள் அடையும் பேறு தனக்கு அமையவேண்டி, அவர்கள் வீசுவதைத் தவிர்த்துத் தான் வீசவேண்டும் என்ற நோக்கம் இம்மன்னன்பால் இருந்தமையினை "வாங்கி" என்னும் சொல் அறிவித்து நிற்கிறது. இதுமட்டும் இன்றி,

செறிமதயா னைச்சிரத்தில் பொற்கலத்தோ டெடுத்துத்
திருமுறையை இருத்தியபின் சேவையர்கா வலரை
முறைமைபெற ஏற்றிஅர சனும்கூட ஏறி
முறைமையினால் இணைக்கவரி துணைக்கரத்தால் வீச

மறைமுழங்க விண்ணவர்கள் கற்பகம்பூ மாரி
 மழைபொழியத் திருவீதி வலமாக வரும்போ
திறைவர்திரு அருளைநினைந் தடலரசர் கோமான்
 இதுஅன்றோ நான்செய்த தவப்பயன்என் றிசைத்தான்

என்னும் திருத்தொண்டர் புராணவரலாற்றுப் பாடலில் வரும் "இதுவன்றோ நான் செய்த தவப்பயன்" என்னும் தொடரும் மன்னனது உளக் கருத்தை அறிவித்து நிற்கும். அரசன் எடுத்து வீசும் கவரி ஆதலின், அது மணிக்கவரி ஆயிற்று.

ஈண்டுச் சேக்கிழார் பெருமானுர் யானைமீது அமர்ந்து, சோழமன்னன் கவரி வீசப் பவனிவருங்கால், தேவர்கள் பூமாரி பொழிந்தனர். இன்னியங்கள் இயம்பின. தில்லை மூவாயிரவர் வேத கீதம்பாடிப் பின் சென்றனர். ஏனையோர் உச்சியில் கூப்பிய கையினராய்ச் சென்றனர். இங்குக் கூறப் பெற்ற அரும்பெருங் காட்சிகள் அனைத்தும் நடந்தன என்பதைச் சேக்கிழார் புராணத்தில் வரும் கீழ்வரும் திருப் பாடல்களாலும் நன்கு தெளியலாம்.

மின்மழை பெய்ததுமேக ஒழுங்குகள்
 விண்ணவர் கற்பக விரைசேர்பூ
நன்மழை பெய்தனர் சேவையர்
 காவலர் நாவலர் இன்புற நாவாறச்
சொன்மழை பெய்தனர் இரவலர் மிடிகெட
 அள்ளி முகந்தெதிர் சோழேசன்
பொன்மழை பெய்தனன் உருகிய நெஞ்சொடு
 கண்மழை அன்பர் பொழிந்தார்கள்

மெய்யுள சிவசா தனமும் வெளிப்பட
 வெண்ணீ றெழுதிய கண்ணேறும்
கையும் திகழ்மணி கண்டமும் ஒளிதரு
 கவளிகை யும்புத் தகஏடும்
நையும் திருவுளம் அழியும் தொறும்அர
 கரஎனும் நாமமும் நாமெல்லாம்
உய்யும் படியருள் கருணையும் அழகிதெ
 னத்தொழு தனருல கவரெல்லாம்

இப்படி இப்படி தன்னில் விதிப்படி இம்பரும் உம்பரும் ஏனோரும், அப்படிச் சூழ்தரத் திருவீதிவலம் செய்து, கற்பகம் பூமாரி மொழிந்தனர் என்ற குறிப்பினால், தேவ லோகத்து ஐந்து தருக்களின் மலர்களாகிய அரிச்சந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்ற ஐந்து மலர்களும் "ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே" என்பதற்கு இணங்க மாரிபோலச் சிந்தப் பெற்றன என்க. சேக்கிழார் எவரும் செய்தற்கு அருமையான செயலாகிய பெரிய புராணத்தைப் பாடினமையால், வானோர் மகிழ்ந்து கற்பக பூமாரி மொழிந்தனர். மூவாயிரவர் சேக்கிழார் காலத்தில் இருந்தனர். அவர்கள் அங்ஙனம் அத்தொகையில் குறையாது விளங்கி இருந்தனர் என்பதைச் சுட்டவே, பிறங்கு மூவாயிரவர் என்றனர். அம்மூவாயிரம் என்னும் தொகை இதுபோது குறைந்திருப்பது வருந்தத் தக்கது. வேதியர்கள் வேதபாராயணம் செய்துகொண்டு பின் போதரல் இறைவன் உலாப் போகுங்கால் மட்டும் இன்றி, இறைவன் அருள்பெற்றவர்கள் உலாப் போம்போதும் போதல் வேண்டும் என்பதும், அப்படி வேத கோஷம் செய்து கொண்டு வேதியர் சென்றனர் என்பதும், "மூவாயிரவர் தொடர்ந்து போத" என்னும் அடி உணர்த்தி நிற்கிறது. இறைவன் அருள்பெற்றோர்களும் இறைவனோடு ஒப்ப வைத்து எண்ணப்படுவர் என்பது,

"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்"

"முன்னோர் நூலின் முடிபுஒருங்கு ஒத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பம் கூறி
அழியா மரபினது வழிநூல் ஆகும்"

என்று மேலேகாட்டிய நூற்பாக்களுக்கு உரை கண்ட சங்கர நமச்சிவாயர் கூறும் கூற்றுக்களைக்கொண்டு உணர்ந்து கொள்ளலாம். அவர் கூறிய உரை "முனைவன் கண்டது முதல் நூலாகும்" என ஒருமையால் கூறினார். ஈண்டு முன்னோர் நூலெனப் பன்மையால் கூறியது, இறைவன் நூலையும்

அவன் அருள் வழிப்பட்டுத் தத்தம் மரபில் வரும் குரவர் பலர் நூலையும் தழீஇக் கோடற்கு என்க'' என்பது. இக் காலத்தில் இறைவன் உலாப் போதுங்கால் வேத பாராயணம் வருவதுபோல, அடியார்களும் அன்பர்களும் உலாப் போதுங்கால் வேதியர்கள் வடமொழி வேத பாராயணம் செய்துகொண்டுவர வேண்டும் என்பது முறையாகும். ஆனால், எங்கே செய்கிறார்கள்? தமிழ் மறை ஓதப்பட்டு வருதல் உண்மை.

அன்பர்களைக் கண்டதும் அரனென எண்ணி அவர்களை வணங்கவேண்டும் என்பது நமது சைவசித்தாந்த முடிவு. இதனைத்தான் நமது சிவஞான போதப் பன்னிரண்டாம் நூற்பா,

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன்எனத் தொழுமே

என்று கூறுகிறது. இங்ஙனம் மாலறநேயம் மலிந்தவர் வேடத்தை வணங்கப்பெற்றவர் மீண்டும் தாயின் கருவில் உறார் என்பது துணிவு ஆதலின், சேக்கிழாரை வணங்கும் அன்பர்கள் கருஉறார் என்ற உறுதிப் பாட்டினை ''கருவாய் உறுமற்றையோர்'' என்றனர். தீவிர அன்புடையவர்கள் குவித்த கையினை எடுக்கவும் பெறார் என்பது பெற்றும் ஆதலின், ''தலைக்குமேல் கைகுவித்து, ஏத்தி, மேவ'' என்றனர். குவித்த கையினை எடார் என்பதை மணிமொழியாரும்,

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து
உன்விரையார் கழற்குஎன்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி
வெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்ந்து உன்னைப்போற்றி
சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழவிடேன் உடையாய்
என்னைக் கண்டுகொள்ளே'

என்றனர். "குவித்த கரம் விரித்தறியார்" என்பது தியாக ராசர் லீலே.

தில்லேயின் சிறப்பு, கூற ஒண்ணு அத்துணைச் சிறப்புடையது. அஃது எத்திசையினரும் வணங்கும் இயல்பினது. அதனுலே அது தில்லைப் பொது என்றும் கூறப்பட்டு வருகிறது. இதனை உட்கொண்டே தாயுமானவர்,

சன்மார்க்க ஞானமதில் பொருளும் வீறு
 சமயசங்கே தப்பொருளும் தானெனன் ருகப்
பன்மார்க்க நெறியினிலும் கண்ட தில்லை
 பகர்வரிய தில்லைமன்றுள் பார்த்த போதங்
கென்மார்க்கம் இருக்குதெல்லாம் வெளியே என்ன
 எச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்
கன்மார்க்க நெஞ்சமுள எனக்குந் தானே
 கண்டவுடன் ஆனந்தம் காண்டல் ஆகும்

என்று பாடியருளினர். இக்காரணத்தால்தான் ஈண்டு ஓங்கு தில்லை எனப்பட்டது. "அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம் பலம் அன்ருே!"

சிறுகோல் என்பது ஏர் அடிக்குங்கால் எருதுகளே விரட்டுவதற்கு உழவர்கள் கையில் கொண்டுள்ள தாற்றுக் கோலாகும். இக்கோல் சிறு கோலே ஆயினும், இக்கோல் தான் அரசர் செங்கோல் நிறுத்தற்குக் காரணமாவது. உழவர்கள் இச்சிறுகோல் கொண்டு, எருதுகளை அதட்டி நிலத்தை உழுதலைச் செய்யார் எனில், விதைகளை விதைக்க இயலாது. விதைகளை விதைக்கவில்லையாயின், உணவுப் பொருள்களைப் பெறமுடியாது. உணவுப்பொருள்கள் நாட்டில் விளையாவிடின் அரசர் தம் செங்கோலைச் செம்மையாக நடத்த முடியாது. இந்த உண்மையினை,

காராளர் அணிவயலில் உழுது தங்கள்
 கையார நட்டமுடி திருந்தில் இந்தப்
பாராளும் திறல்அரசர் கலித்த வெற்றிப்
 பசும்பொன்மணி முடிதிருந்தும் கலப்பை பூண்ட

ஏரால்எண் திசைவளர்க்கும் புகழுவே ளாளர்
ஏர்அடிக்குப் சிறுகோலால் தரணி ஆளச்
சீராரும் முடியரசர் இருந்து செங்கோல்
செலுத்துவர்வே ளாளர்புகழ் செப்ப லாமோ

என்று உமாபதியாரும்,

வெங்கோபக் கலிகடந்த வேளாளர் விளைவயலுள்
பைங்கோல் முடிதிருந்தப் பார்வேந்தர் முடிதிருந்தும்
பைங்கோதைக் கடல்தானைப் போர்வேந்தர் நடத்து
பெருஞ்
செங்கோலை நடத்துங்கோல் ஏர்அடிக்கும் சிறுகோலே

என்று கம்பரும் கூறுகின்றனர். ஆகவே, உழவர்களே நாட்டுக்கு அச்சாணி போன்றவர். அவ்வுழவர் மரபில் சேக்கிழார் தோன்றினமையில் அவரை, "சிறுகோல் எடுத்து அரசு செங்கோல் நிறுத்தினேன்" என்றனர். சேவையர் குலமாகிய வேளாளர்குலத்துக்கே இவர் பெருமை தந்து பிறங்கியதால் சேவையர் குலாதிபர் எனப்பட்டனர்.

அந்தணர், அரசர், வணிகர் ஆகிய மூவரையும் காக்கும் மாண்புடையவர்கள் வேளாளர் என்பதைக் காஞ்சிப்புராணம்,

முருகுயிர்த் தலர்ந்த மலரவன் தனது
முகமுதல் உறுப்பெலாம் தாங்கிச்
சரணம் என்றுரைக்கும் உறுப்பினில் தோன்றிச்
சாற்றும்அம் முகம்முதல் உறுப்பின்
வரும்ஒரு மூவர் தங்களை உழவின்
வண்மையால் நிலைபெறத் தாங்கும்
உரியவே ளாண்மை பூண்டபேர் தமக்கே
உடையவர் இடம்பல அவனை

என்கிறது. (92)

2. முறியும்மல ரும்பொருவு திருமேனி உமைஅம்மை
மூவுல குயத் தழுவுபு
மூரிப் புனல்கம்பை எம்பிரான் திருமேனி
முற்றும் குழைத்த ஞான்றில்
அறியும்வகை அறம்எலாம் பொலியஇரு நாழிநெல்
அளந்தப் பிரான் கொடுக்க
அனையமா தேவிஏற் றேற்றகை உயிர்த்தமக
ளால்உயிர்த் தோர்க ளேநல்
நெறியும்நல னும்பெருக உளர்எனல் குறித்தவர்கை
நீட்டிப் பணிந்து வாங்கி
நீடும் கொழுக்கொடுதம் மனைஉதவி யால்நனி
நிரம்பப் பெருக்கு குடியுள்
செறியும்ஒரு குடியாய சேவையர் குலாதிபன்
சிறுதேர் உருட்டி யருளே
சிறுகோல் எடுத்தரசு செங்கோல் நிறுத்தினேன்
சிறுதேர் உருட்டி யருளே.

*[அ. சொ.]: முறி-தளிர், பொருவும்-நிகர்க்கும், திருமேனி-அழகிய சரீரம், உய-உயிர் பிழைக்க, மூவுலகு-சுவர்க்க, மத்திம பாதாளங்களாகிய மூவுலகங்களும், தழுவுபு-தழுவி, மூரி-வலிமையுடைய, கம்பை-கம்பா நதி, எம்பிரான்-எம் இறைவனாகிய ஏகாம்பர நாதர், குழைத்த-இளகும்படி செய்த, ஞான்றில்-பொழுதில், அறம்-தருமம், பொலிய-விளங்க, நாழி-படி அனைய-அத்தகைய சிறப்புடைய, மாதேவி-பெருந்தேவி யாகிய உமாதேவி, உயிர்த்த-உண்டாக்கிய, மகள் - கங்காதேவி, உயிர்த்தோர்கள் - பெற்றவர்களாகிய வேளாளர்கள், தோன்றியவர்கள் எனினும், ஆம் நெறி-மார்க்கம், கொழுகாறு-கலப்பையின் முனையில் உள்ள இரும்பு, மனை-மனைவிமார், குறித்து-எண்ணி செறியும்-நிறையும், ஒரு-ஒப்பற்ற, குடி-வேளாளர் குடி.*

**விளக்கம் :** *உமாதேவியார் திருமேனி, "அம்தளிர்மேனி அரிவை" என்றும், "வருமாந்தளிர்மேனி மாது" என்றும்*

தேவாரத்தில் சிறப்பிக்கப் பட்டமையின், ஈண்டும், "முறியும் மலரும் பொருவு திருமேனி" என்றனர். உமை யம்மையார் இறைவனைத் தழுவி வழிபட்டதைச் சுந்தரர்,

"எள்கல் இன்றி இமையவர் கோனை
ஈசனை வழிபாடு செய்வாள்போல்
உள்ளத் துள்கி உகந்துமை நங்கை
வழிபடச் சென்று நின்றவா கண்டு
வெள்ளம் காட்டி வெருட்டி அஞ்சி
வெருவிஓடித் தழுவ வெளிப் பட்ட
கள்ளக் கம்பனை எங்கள் பிரானைக்
காணக்கண் அடியேன் பெற்ற வாறே

என்று பாடினர். உமை அம்மையார் இறைவனைக் காஞ்சியம் பதியில் வழிபட்டது, தாம்மட்டும் இறையருள் பெறு வதற்கு மட்டும் இன்றி, உலகமும் திருவருள் பெறப் பூசை யியற்றினர் என்பதைச் சேக்கிழார்,

" ஆன தொல்நகர் அம்பிகை தம்பெரு மானை
மான அர்ச்சனை யாலொரு காலத்து வழிபட்
டூன மில்அறம் அனேகமும் உலகுய்ய வைத்த
மேன்மை பூணட அப் பெருமையை அறிந்தவர் விளம்பில்"

என்று போற்றிப் புகழ்ந்தமையின் "உலகுய்ய" என்றனர். தழுவுபு என்பது செய்பு என்னும் வாய்பாட்டு வினைஎச்சம்,

கம்பை காஞ்சியில் உள்ள ஒரு நதி. இது வலிமை மிக்கது என்பதைக் காஞ்சிப் புராணம் தழுவக் குழைந்தப் படலப் பாடல்களால் அறியலாம்,

மிடைவானவர் திசைகாவலர் புவிமேலவர் காணூஉக்
கடைநாள்அணு கிற்ருல்என வெருவிக்கலுழ் கண்ணீர்
இடையாறென விரவக்கொடு வேகத்தொடும் எவ்வெப்
புடைநீர்களும் உடனுகிய கம்மைப்புனல் வருமால்

படலைக்கரு முகிலும்இடை இடையேபட ரொளிசேர்
தொடலைக்கதிர் உடுவும்துவ ளுறுபாசடை விரவும்
இடையில்திகழ் மலரும்என இலகக் கனமும்உட்
படமிக்கெழு பரவைப்புனல் பயமுற்றிட வருமால்

இருபாலினும் மணிதங்கிய இருகோடு படைத்து
வெருவார்களும் வெருவித்துயர் கோவத்தவ உரறி
மருவார்குழல் உமைஅஞ்சுற வரலான்உயர்கம்பை
பெருமான்எதிர் பண்டெய்திய பெருவேழமும் நிகரும்

என்று கூறப்பட்டதற்கு இணங்க "மூரிப்புனல்கம்பை" என்றனர்.

இவ்வாறு பெருகிய கம்பா நதியினைக் கண்ணுற்ற அம்மையார், இது தாம் வழிபடும் இலங்கத்தையும் அனுகி அடித்துக்கொண்டு போகும் என்று அஞ்சி உடனே இலங்கத்தைத் தழுவி வெள்ளத்தால் அடித்துக்கொண்டு போகாத வாறு செய்தனர். இதனைக் காஞ்சிப் புராணம்,

" ஒருகொடி எழுந்து செம்பொன்
உயர்வரைக் குவடு தன்னை
இருகொழுந் திருபால் போக்கித்
தழீஇஎன எழுந்து வல்லே
முருகலர் வேதி உம்பர்த்
தன்வலம் முழந்தாள் ஊன்றிக்
கருமணிப் பாவை அன்னாள்
கணவரைத் தழுவிக் கொண்டாள்" என்கிறது.

இக் காட்சியை இன்றும் ஒவ்வொரு திங்கட்கிழமை தோறும் ஏகாம்பரநாதர் கோவில் மூலட்டான இலிங்க தரிசனத்தின் போது காணலாம். இங்ஙனம் தழுவிய போதுதான் இறைவர், தாம் கல்லாக இருப்பதால் அவளது முலை உறுத்தப்படுமே என்று அருள் நினைவு கூர்ந்து, தம் திருமேனியினைக் குழைந்து கொடுத்தனர். இதனையும் அப் புராணம்,

மணிமுலைக் குவட்டி னோடு வளைக்கையால் நெருக்கிப்
துணிவரும் காதல் விம்ம காதலி தழுவ லோடும்
திணிஇருள் இறுக்கும் சோதிக் திருவுருக் குழைந்து
காட்டி
அணிவளைத் தழும்பி னோடு முலைச்சுவ டணிந்தார் ஐயர்

என்று போற்றுகிறது. திருமேனி முற்றும் குழைந்தது என்பது மேலே காட்டிய பாடலில்வரும் இக்கருத்துக்களே

"முறியும் மலரும் குழைத்த ஞான்றிலும்" என்னும் வரியில் பொதிந்துளது.

சிவஞான முனிவர் தாம் பாடிய அமுதாம்பிகைப் பிள்ளைத் தமிழில், இறைவி திருஞானசம்பந்தருக்குத் தனது திருமுலைப் பாலைப் பொன் வள்ளத்தில் கறந்து கொடுத்தமை இன்னின்ன காரணங்களாக இருக்கலாமோ என்று தோழிமார் வினவுவதுபோலப் பாடிய பாடலில் தழுவக் குழைந்த செய்தியையும் இயைத்துப் பாடியுள்ளனர். அது சுவையுடைய பாடலாக இருத்தலின், அதனையும் ஈண்டுப் பாடிப் பரவசமுறுதம் நன்றன்றோ?

தெய்வச் சுருதி தமிழ்க்கன்றித்
தீட்டா நிலைமைத் தெனஉலகில்
தெறிக்கும் காழிச் சிவஞானச்
செம்மல் குழவிக் கருள்ஞானம்
பெய்து கொடுக்க வோமுலையாம்
பெரிய மலைவாய் உறுத்தும் என்றோ
பெருமான் தனையும் குழைத்தவலிப்
பெற்றி அறிந்து தடுத்தோபூங்
கையி னிலகு நகக்குறிப்பல்
கதுவ நோம்என் றோதீம்பால்
கறந்து கொடுத்தாய் எனச்சகிமார்
கனிந்து பாட நகைமுகிழ்க்கும்
வைவைத் தமைத்த மதர்வேல்கண்
வாழ்வே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதிஅமுத
வல்லி வருக வருகவே

என்பது அப்பாடல்.

அறமெலாம் என்பது ஈண்டு முப்பத்திரண்டு அறங்களாம். இவற்றைக் காஞ்சிபுராணம் பின்வருமாறு,

தெய்வம்தென் புலத்தார் பூதம்
மானிடம் பிரமம் என்றோர்
ஐவகை எச்சம் பூர்த்தம் துறந்தவர்
மடங்கள் அன்பு

செய்யும்இல் வாழ்வார் இல்லம்
மனைக்குப கரணம் தேம்பூப்
பெய்தமை தண்ணீர்ப் பந்தல்
எங்கணும் பிறங்கு சோலை

இரப்பவர் குருடர்எவ்வம்
உற்றவர்ப்பு ரத்தல் வெந்நோய்
துரக்கும்நல் மருந்து தூவாய்
மகவினை ஓம்பல் சுண்ணம்
பரித்தபா கடையே எண்ணெய்
பைம்புனல் குளிப்ப வேண்டும்
மருக்கிளர் துவர்க ளாதி
மலரணைநிலன்ஆன் கன்னி

கடிமணம் விளக்கு மாறுக் கடன்ஒழித் திடுதல் ஈசன்
அடியவர் விழைவ ஈகை அக்கமா மணிவெண் ணீறு
படியிலாக் கடவுள் பூசை உபகர ணங்கள் பாசம்
தடிதரு வேத வாய்மைச் சைவநூல் புராணம் நல்கல்
சிவபிரான் அடிக்கீழ்ப் பத்தி செவிஅறி வுறுத்த லோடும்
உவகையின் அபயம் யார்க்கும் வழங்குதல் உள்ளிட் டோதும்
நவையிரி அறம்எண் ணான்கும் நாள்தொறும் நிகழ்ச்சி மாணப்
பவநெறி துரக்கும் ஞானப் பூந்தொடி நிறுவிய பின்னர்

என்று கூறுகிறது.

இறைவனே யாவற்றிற்கும் எவர்க்கும் படியளக்கவல்லான் என்ற குறிப்பு, "அளந்து அப்பிரான் கொடுக்க" என்னும் தொடர் விளக்கி நிற்கிறது;

இறைவன் இறைவிக்கு அறம் வளர்க்க நெல் ஈந்ததை நம் சேக்கிழார், "இடையறு அறம் வளர்க்கும் வித்தாக இகபரத்திருநாழி நெல் அளித்து" என்றும்,

எண்ண ரும்பெரு வரங்கள்முன் பெற்றங்
கெம்பி ராட்டிதம் பிரான்மகிழ்ந் தருள
மண்ணின் மேல்வழி பாடுசெய் தருளி
மனைஅ றம்பெருக் கும்கரு ணையினால்

நண்ணு மன்னுயிர் யாவையும் பல்க
நாடு காதலின் நீடிய வாழ்க்கைப்
பூண்ணி யத்திருக் காமக்கோட் டத்துப்
பொலிய முப்பதோ டிரண்டறம் புரக்கு

என்றும் குறிப்பிட்டிருப்பதைக் காண்க.

இறைவி ஒருத்தியே மாதேவி. இவளது இரு கண்களே இலக்குமியும் சரசுவதியும் எனில், வேறு கூறவேண்டா அன்றே? இதனைத் திருவிளையாடல் புராணம்,

திருமகள் வலக்கண் வாக்கின்
சேய்இழை இடக்கண் ஞானம்
பெருமகள் நுதற்கண் ஆகப்
பெற்றுவான் செல்வம் கல்வி
அருமைவீ டளிப்பாள் யாவள்
அவள்உயிர்த் துணைவன் காண
ஒருமுலை மறைந்து நாணி ஒசிந்துபூங்
கொம்பில் நின்றாள்

என்றும், சிவப்பிரகாசர்,

தண்ணார்இதழி புனைவான் விழிஇணை தம்மனைகள்
பண்ணா அழிக்கும்என் றேநின் திருமுகப் பங்கயத்தில்
கண்ணா யினருனக் கவ்வலை மாதும் கலைமகளும்
பெண்ணார் அமுதனை யாய்குன்றை வாழும் பெரியம்மையே

என்றும் போற்றியுள்ளனர். ஆக இறைவி மாதேவி என்பது சரதமாம் அன்றோ?

இறைவிக்குக் காமாட்சி என்னும் திருப்பெயர் அமைந்ததற்கு அவள் 'கா'வாகிய சுரஸ்வதியையும், 'மா' என்னும் இலக்குமியையும் அட்சிகளாகக் (கண்களாக) கொண்டிருப்பதனால்தான் என்பதைக் காஞ்சிப்புராணம்,

வேறுஒன் றுங்கண் காஎனப் படுவாள்
வெண்மல ராட்டிமா என்பாள்
ஊறுதேம் கமலப் பொகுட்டணை அணங்காம்
ஊங்குவர் இருவரும் முகிலை

மாறுகொள் ஐம்பால் உமைவிழிக் கோடி
தன்னிடை வரும்முறை யானும்
ஏறும்அத் திருப்பெயர் எம்மெரு மாட்டிக்
கென்றெடுத் தியம்புவர் உணர்ந்தோர்

என்று கூறுகிறது.

இறைவி இறைவன் திருக்கண்களை மூட, அக்கண் சந்திர சூரியர்கட்கு ஒளிதரும் ஒளியுடையன ஆதலின், அவ்வெம்மை யால் அம்மையார் கைகளில் வியர்வை தோன்ற, அவ் வியர்வை கங்கையாறுகப் பாய, அக்கங்கையினிடத்து வேளாளர்கள் உதித்தனர் என்பது புராணம். இதனுல் இறைவனது முக்கண்களும் சூரிய, சந்திர, அக்கினிகட்கு ஒளி தருவன என்பதை நால்வர் நான்மணிமாலே அழகுற,

கண்களோ ஒன்றுகாலேயில்
சாணும் மாலேயில் ஒன்று
வயங்கித் தோன்றும் பழிப்பின்
ஒன்று விழிப்பின் எரியும்

என்று கூறுகிறது.

வேளாளர்கள் நன்னெறியும் நலனும் உடையவர்கள் என்பது உண்மை. வெறும் புகழ்ச்சி அன்று. இதனைப் பரஞ்சோதியார்,

வழுக்கறு வாய்மை மாண்பும் கங்கைதன் மரபில் வந்த
விழுக்குடிப் பிறப்பும் மூவர்ஏவிய வினைகேட் டாற்றும்
ஒழுக்கமும் அமைச்சாய் வேந்தர்க் குறுதிசூழ் வினையும் குன்று
இழுக்கறு மேழிச்செல்வர் வளமறு கியம்ப லுற்றும்

வருவிருந் தெதிர்கொண் டேற்று நயனுரை வழங்கும் [ஓசை
அருகிருந் தடிசில் ஊட்டி முகமன்நன் கறையும் ஓசை
உரைபெறு தமிழ்பா ராட்டும் ஓசைகேட் டுவகை துள்ள
இருநிதி அளிக்கும் ஓசை எழுகடல் அடைக்கும் ஓசை

அருந்தினர் அருந்திச் செல்ல அருந்துகின் றுரும் ஆங்கே
இருந்தினி தருந்தா நிற்க இன்னமு தட்டுப் பின்னும்
விருந்தினர் வரவு நோக்கி வித்தெலாம் வயலில் வீசி
வருந்திவிண் ணேக்கும் ஓர்ஏழ் உழவர் போல்வாடி நிற்பர்

வானமும் திசையும் பொங்கும் புகழ்மையும் வானம் பேணும்
ஞானமும் பொறையும் குன்ரு நன்றியும் ஊக்கப் பாடும்
தானமும் கொடையும் அன்பும் வரிசையால் தகைசால் நண்பும்
மானமும் தவஞ்செய்தீன்ற மகவுபோல் வளர்க்க வல்லார்

என்று வேளாளரது மேம்பாட்டைப் புகழ்ந்து கூறியுள்ளதைக் காண்க.

இதனுல்தான் இறைவி இறைவன்பால் பெற்ற இருநாழி நெல்லை, வேளாளர்கட்குக் கொடுத்தனள் என்க. இதனைச் சேக்கிழார் புராணமும்,

இமையமலை அரையன்மகள் தழுவக் கச்சி
ஏகம்பர் திருமேனி குழைத்த ஞான்று
சமையம்அவை ஆறினுக்கும் தலைவிக் கீசர்
தந்தபடி எட்டுழக்கு ஈராழி நெல்லும்
உமைதிருக் கடகக்கையால் கொடுக்க வாங்கி
உழவுதொழி லால்பெருக்கி உலக மெல்லாம்
தமதுகொழு மிகுதிகொடு வளர்க்கும் வேளாண்
தலைவர்பெரும் புகழ்உலகில் தழைத்த தன்றே

என்று கூறுமாற்றை உணர்க.

கொழு என்பது ஏர்க்காறு. இதன் சிறப்பு எத்தகையது என்பதை ஏர் எழுபது,

வேதநூல் முதலாகி விளங்கு
கின்ற கலைஅனைத்து
ஓதுவார் எல்லாரும்
உழுவார்தம் தலைக்கடைக்கே

கோதைவேல் மன்னரைவர்தம்
குடைவளமும் கொழுவளமே
ஆதலால் இவர்பெருமை
யார்உரைக்க வல்லாரே

என்று எடுத்து இயம்புகிறது. இதனால், "நீடும் கொழு" என்றது பொருத்தம் அன்றோ?

இல்லக் கிழத்தியர்களே குடும்பத்திற்குச் சிறப்புத் தருபவர்கள்; அவர்களால்தான் குடி பெருகும். இது குறித்தே இவர்களை வாழ்க்கைத் துணைவியர் என்றனர் வள்ளுவர். இவற்றையெல்லாம் உட்கொண்டே, "மனை உதவியால் நனி நிரம்பப் பெருக்கு குடி" எனப்பட்டது. தம் அனை உதவியால் என்று பிரித்துத் தமது தேவியாம் உமை அம்மை என்று பொருள் கூறினும் பொருத்தமே. பெருக்கு குடி என்னும் தொடர்க்கு கூடல்கிழான் குடி, புரிசைகிழான் குடி, குளப்பாக்கிழான் குடி, குளத்துழான் குடி போன்ற குடிகள் எனினும் ஆம்,

இக்கருத்துக்களையே, "வ ா ங் கி***பெருக்கும் குடி" என்றனர். குடி என்றது பொதுப்பட வேளாளர் குடி ஆகும். செறியும் ஒரு குடி என்றது சேக்கிழார் குடியாகும். சேவையர் குடி என்பது பொதுவாக வேளாளர் குடியைக் குறிக்கும். தொண்டு செய்வதே தமது குறிக்கோளாகக் கொண்ட வேளாளர் குடி ஆதலின், சேவையர் குடி என்றனர். அக்குடியில் சேக்கிழார் தலைமை வகித்தமையின், "சேவையர் குலாதிபதி" என்றனர். குல† அதிபன் என்ற சொற்கள் சேர்ந்தே குலாதிபன் என்று ஆயது. (93)

3. வெருவப் பகைக்கடல் சுவற்றழல் அரும்புகண்
விரைத்தாத கித்தொ டையலான்
விசவீ சப்பெற்று வாம்பரி உகைத்துமிளிர்
வெங்கடாக் களிறு கைத்தும்
உருவக் கதிர்த்தரள மாலைகால் யாத்திட்ட
ஒள்ஒளிய ஆனம் ஊர்ந்தும்
ஒருநம்பி ஆரூர னைப்புகலி ஆண்தகையை
ஒப்பாயி னுய்அ தான்று
மருவப் பொலிந்தமண் தேர்ஊரின் முதலடி
மரீஇய இருவருள் ஒருவரும்
மனுவாய் வையகம் எடுத்தேத்த நிறைபுனல்
வயங்கும்ஊ ருணிநி கர்த்த
திருவப் பெருக்கினமை சேவையர் குலாதிபன்
சிறுதேர் உருட்டி யருளே
சிறுகோல் எடுத்தரசு செங்கோல் நிறுத்தினேன்
சிறுதேர் உருட்டி யருளே.

*[அ. சொ.] வெருவ-அஞ்ச, சுவற்று-வற்றும்படி செய்யும், அழல்-கோபத்தீ, அரும்பு-தோற்றுவிக்கும், விரை-வாசனை நிறைந்த, தாதகித்தொடையலான்-ஆத்திமாலை அணிந்த சோழன், அனபாயச் சக்ரவர்த்தி, வாம்பரி-தாவி ஓடும் குதிரை, உகைத்து-ஏறி, ஊர்ந்து, மிளிர்-விளங்கும், கடாக்களிறு-மதசலம் பொழியும் யானை, கதிர்-ஒளி, தரளம்-முத்து, கால்யாத்திட்ட-மறைத்த, யானம்-பல்லாக்கு, ஒரு நம்பி-ஒப்பற்ற நம்பியாகிய, ஆரூரனை-சுந்தரரை, புகலி ஆண்தகையை-சீர்காழிப் பதியில் அவதரித்த திருஞான சம்பந்தரை, அதான்று-அதுவும் அல்லாமலும், மரீஇய-கலந்த, இருவருள்-இறைவர் சோழர் ஆய இருவர், ஒருவரும்-ஒப்பற்ற சிவனும், மானுவாய்-ஒப்பாய், வையகம்-உலகம், ஏத்த-போற்ற, புனல்-நீர், வயங்கும்-விளங்கும், ஊருணி-பொதுக்குளம், திருவம்-செல்வச் சிறப்பு.*

**விளக்கம்:** அனபாயனது ஆட்சிக் காலத்தில் போர் நிகழ்ச்சியினைப்பற்றிப் பெரிதும் அறியப்படவில்லை. நாடு அமைதி நிலவியதாகத் தெரிகிறது. இதற்குக் காரணம் இவனிடத்துள்ள போர் வன்மை என்பது புலனாகிறது. இதனால் பகை அரசர்கள் அஞ்சி இவனுக்கு அடங்கி இருந்திருக்க வேண்டும். இவனது சினத்தை "அழல் அரும்புகண்" என்ற தொடரில் ஆசிரியர் புலப்படுத்தியுள்ளனர். இவன் சினம் கொண்டால் பகைக் கடல் சுவறிவிடும்; அஃது அஞ்சி நடுங்கிவிடும். ஆகவே, பகைவர் அஞ்சி ஒடுங்கி இருந்தனர். இதனால் இவனது ஆட்சி அமைதியான ஆட்சி என்பதை உணர்கிறோம். என்றாலும், அரசர்கட்கு இருக்க வேண்டிய ஆண்மைச் சினம் உடையவன் இம்மன்னன் என்பதை நினைவூட்டவே முதலடியினை அமைத்தனர் திரு. பிள்ளை அவர்கள். சோழர்கட்கு ஆத்திமாலை உண்டு என்பதைத் தொல்காப்பிய இலக்கண வாயிலாக முன்பே கூறப்பட்டது.

இறைவனுக்கும் இம்மாலை உரியது. இதனை, "ஆத்திசூடி அமர்ந்த தேவனை ஏத்தி ஏத்தித் தொழுவோம் யாமே" என்றதனால் அறியலாம்.

சோழர்கள் பகைவர்களை எதிர்க்கையில் ஆத்தி மாலை அணிந்துகொள்வர் என்பதைப் புறப்பொருள் வெண்பா மாலையும்,

"விரல்படை மறவர் வெஞ்சமம் காணின்,
மறப்போர்ச் செம்பியன் மலைபூ உரைத்தன்று"

என்றனர். மேலும்,

கொல்களிறு ஊர்வர் கொலைமலி வாள்மறவர்
வெல்கழல் வீக்குவர் வேல்இளையர்—மல்கும்
கலங்கல் ஒலிபுனல் காவிரி நாடன்
அலங்கல் அமர்அழுவத்து ஆர்

என்று, சோழ மன்னர்களும், அவர்கள் தம் வீரர்களும் ஆத்தி புனைதலைக் கூறினர். ஆகச் சோழ மன்னர் அடையாள

மலர் ஆத்தி ஆயிற்று. இதனையே, "தாதகித் தொடையலான்" என்று ஈண்டுக் கூறப்பட்டது.

சேக்கிழார் அனபாயச் சோழன் கவரி வீசப்பெற்ற நிலை உற்றனர் என்பது அவரது வரலாற்றில் அறிகிறோம். "அரசனும்கூட ஏறி முறைமையினால் இணைக் கவரி துணைக் கரத்தால் வீச" என்று சேக்கிழார் புராணத்து வருதல் காண்க.

புலவர்கட்கு மன்னர்கள் கவரியோ சிவிறியோ வீசிக் காற்றை எழுப்பி அவர்களைக் குளிர்வித்தல் தொன்று தொட்ட வழக்கமே ஆகும். இதனை நமது புறநாற்றைக் கொண்டும் நிறுவலாம்.

மோசிகீரனார் என்பவர் ஒரு புலவர். சேரமான், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைக் காணச் சென்றார். அப்போது அவன் அரண்மனையில் இல்லை. புலவர் நெடுந் தொலைவிலிருந்து வந்த இளைப்பால், முரசு என்னும் அரசாங்க வாத்தியம் வைக்கப்படும் கட்டிலில் ஏறிப் படுத்து உறங்கிவிட்டார். அப்போது முரசம் நீராடிப் பூசை பெற்று வர வெளியே சென்றுளது. அம்முரசு கட்டில் தெய்வம்போல் கருதப்படும் முரசு வைக்கப்படும் சீரிய இருக்கையாகும். மெத்தென்று அமைக்கப்பட்டதாகும். அதன்மீது எவர் ஏறினும் கொலைக் குற்றத்திற்கு ஆளாவார். இவ்வளவு சட்ட திட்டங்களோடு கூடிய முரசு கட்டிலில் புலவர் ஏறி நன்கு உறங்குவாராயினர். வெளியே சென்ற அரசன் அரண் மனைக்குள் வந்தனன். முரசு கட்டிலில் படுத்துறங்கும் புலவரைக் கண்டனன். வேறு எவரேனும் அங்குப் படுத் திருந்திருப்பரேல், அவரை தனது வாளால் இரு கூறு படுத்தி இருப்பன். ஆனால், யாது செய்தனன்? புலவர் உறங்கி எழுந்துணையும் சிவிறி கொண்டு வீசலானான். துயில் உணர்ந்து எழுந்த புலவர் இதனைப் பாராட்டி ஒரு செய்யுளைப் பாடினர். அதுவே,

மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்சை
ஒலிநெடும் பீலி ஒண்பொறி மணித்தார்
பொலங்குழை உழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை உருகெழு முரசம்
மண்ணி வாரா அளவை எண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய என்னைத் தெறுவர
இருபால் படுக்கும்நின் வாள்வாய் ஒழித்ததை
அதூஉம் சாலும்நல் தமிழ்முழு தறிதல்
அதனொடும் அமையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோள் ஓச்சித் தண்ணென
வீசி யோயே வியல்இடம் கமழ
இவண்நசை உடையோர்க் கல்ல தவண
உயர்நிலை உலகத் துறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குரிசில்நீ ஈங்கிது செயலே

என்பது அப்பாட்டு.

சேக்கிழார் யானைமீது அமர்த்தப் பட்டு வீதிஉலாச் செய்விக்கப் பெற்றனர் என்பதையும் அப்புராணத்தில் காண்கின்றோம், இதனைச் "செறிமத யானைச்சிரத்தில் பொற் கலத்தோடு எடுத்துத் திருமுறையை இருத்தியபின் சேவையர் காவலரை, முறைமை பெற ஏற்றி" என்பதாலும், "வாரணத்தில் இவரைக் கண்ட திருவீதி" என்பதாலும் அறியலாம். ஆனால், குதிரைமீது இவர் வந்ததாகவோ, அரசன் அதுபோது கவரி வீசியதாகவோ சேக்கிழார் புராணத்துள் குறிப்பு இல்லை. என்றாலும், அரசனிடமிருந்து விடை பெற்றுச் சென்று தில்லையை அடைந்தார் என்று கூறும் போது, இவர் தலைமை அமைச்சர் ஆதலின், ஒருவேளை குதிரைமீது வந்திருக்கலாம். அந்த எண்ணத்தில் இவர் குதிரைமீது வந்ததாகத் திரு பிள்ளை அவர்கள் குறித்தனர் போலும்! இவ்வாறே பல்லக்கில் சேக்கிழார் சென்றதாகவும் உமாபதியார் வாக்காம் சேக்கிழார்

புராணத்துள் இல்லை. இதுவும் சேக்கிழார் தலைமை அமைச்சர் ஆதலின், பல்லக்கில் செல்லும் வாய்ப்பினைப் பெற்றுத் திகழும் பெருமைக்குரியவராய், இருந்திருப்பர் போலும். ஆதலின் இவர், சிவிகையில் சென்றதாக உளம் கொண்டு ஈண்டு, அக்குறிப்பைக் குறிப்பிட்டனர். இவ்வாறே சேக்கிழார் தேர் ஊர்ந்ததும் முதல் அமைச்சர் பதவியில் இருந்த போதெனக் கொள்க.

திரு. பிள்ளை அவர்கள் குதிரையினை வாம்பரி என்றும் (தாவும் குதிரை) யானையினை வெங்கடாக் களிறு (விரும்பும் மதநீர் ஒழுகும் யானை) என்றும் சிறப்பித்ததற்கு இணங்கப் பல்லக்கினை, "ஒளிய முத்துமாலை தொங்கவிடப்பட்டதனால் மறைந்த ஒளிபொருந்திய பல்லாக்கு" என்று சிறப்பித்தனர். வெம்மை என்பது கொடுமை என்ற பொருளுடன் விருப்பம் என்ற பொருளையும் உடையது. "வெம்முலை" என்பதற்கு விருப்பமான முலை என்பதே பொருள். யானையின் மதநீரை ஈக்கள் விரும்பி மொய்த்தலின் அது வெங்கடாம் ஆயிற்று.

ஈண்டுத் திரு. பிள்ளை அவர்கள் சேக்கிழார் சுவாமிகள் குதிரைமீதும் யானைமீதும் இவர்ந்து வந்ததால் நம்பி ஆரூரரையும், சிவிகையில் ஊர்ந்து வந்ததால் திருஞான சம்பந்தரையும் தேரில் ஊர்ந்து வந்ததால் இறைவரையும் ஒப்பாவார் என்று அன்புடன் கூறிய கற்பனை, மிகவும் பொருத்தமான கற்பனையாகும்.

சுந்தரர் யானைமீது ஊர்ந்து சென்றார் என்பதற்கு அவர் தம் திருவாக்கே சான்றாகும். இதனைத் தம்பிரான் தோழர், "வானை மதித்தமர்வலம் செய்து எனை ஏற வைக்க ஆனை அருள் புகுந்தான்" என்றே தமது வாக்கால் குறிப்பிட்டுள்ளனர். சேக்கிழாரும், "வீர வெண்களிறு கைத்து விண் மேல் செலும் மெய்த்தொண்டர்" என்று குறிப்பிட்டுள்ளனர். இவர் குதிரைமீது இவர்ந்து சென்ற காட்சியினைச் சேக்கிழார், சுந்தரர் திருமணக் கோலத்துடன் சென்ற நிலையினை அறிவிக்கும்போது, "பொன்னணி மணியார் வேகப் புரவிமேல் கொண்டு போந்தார்" என்று

அறிவிக்கிருர். இவ்வாறு குதிரைமேல் இவர்ந்து சென்ற சுந்தரர் தமக்கு நிரந்தரமாகக் குதிரை ஒன்று இருக்க வேண்டும் என்ற கருத்தில் குதிரை வேண்டுமென்று திரு நாகைக் காரோணப் பெருமானை வேண்டியும் உள்ளனர். இதனை, "காற்றனைய கடும் பரிமா ஏறுவதும் வேண்டும்" என்று வேண்டிய வேண்டுகோள் மூலம் அறிகிருேம். வேண்டிய வேண்டியாங்கு ஈயும் இறைவர் சுந்தரர் வேண்டிய குதிரையினையும் கொடுத்திருப்பர் அல்லரோ? அங்ஙனம் பெற்ற குதிரையில் சுந்தரர் சென்றனர் போலும்!

இப்பதிகத்தில் சுந்தரர் தமக்குக் கறிவிரவும் நெய் சோறு, பொறிவிரவு நற்புகர்கொள் பொற்சுரிகை மேலோர் பொற்பூ என்ற இவற்றைக் கேட்டதிலும் வியப்பில்லை. ஆனல் இக்கால நாகரிக முறைமைக்கேற்ப, கழுத்து மாலை (Minor chain) வாசனைப் பொருள்கள் (Scent and Perfumes) குளிர்ச்சிதரும் மூக்குக் கண்ணுடி (Cooling Glass) கேட்டதுதான் வியத்தற்குரியதாகும். இவற்றையும் கேட்டார் என்பதை "முத்தாரம் இலங்குமிளிர் மணிவயிரக் கோவை, அவை பூணத் தந்தருளி மெய்க்கு இனிதா நாறும், கத்தூரி கமழ் சாந்து பணித்தருள வேண்டும். "காம்பினெடு நேத்திரங்கள் பணித்தருள வேண்டும்" என்ற அடிகளில் காணலாம். விசிறிமடிப்பு மேல்குட்டை கேட்டதை, "பட்டிகையும் புரிந்தருள வேண்டும் என்ற தொடரால் புலனுகிறது. இறைவனே இவரை இன்பமாக விளையாடுமாறு திருவருள் புரிந்தனர் என்பது.

வாழிய மாமறைப் புற்றி டங்கொள்
மன்னவன் ஆரரு ளால்ஓர் வாக்குத்
தோழமை ஆக உனக்கு நம்மைத்
தந்தனம் நாம்முன்பு தொண்டு கொண்ட
வேள்வியில் அன்றுநீ கொண்ட கோலம்
என்றும் புனைந்துநின் வேட்கை தீர
வாழிமண் மேல்விளை யாடு வாய்என்
றுரூரர் கேட்க எழுந்த தன்றே"

என்ற சேக்கிழார் வாக்கால் உணர்கிருேம்.

திருஞான சம்பந்தர் சிறு குழந்தைப் பருவத்தினர். அவர் இறைவன் உறைவிடங்கட்கு நடந்து சென்று பதிகம் பாடுதல் சிரமம் என்று அறிந்த அவரது தந்தையார், அவரைத் தோள்மேல் சுமந்து செல்வர். சம்பந்தர் தோள் மீது இருந்துகொண்டே பதிகம் பாடுவர். இதனை, 'ஆளுடைய பிள்ளையாரே, "அத்தர்பியல்மேல் இன்இசையால் உரைத்த பனுவல்" எனத் திருநனிப் பள்ளிப் பதிகத் திருக்கடைக் காப்பில் குறிப்பிட்டுள்ளனர். இதன்பின், நடக்கும் பருவம் உற்றபோது நடந்து சென்று பதிகம் பாடினர். இதனால் குழந்தை இளைப்பும் களைப்பும் உறுவதைக் கண்ட திரு அரத்துறை இறைவர், அப்பதியுள்ளார்க்கு முத்துப் பல்லக்கு மணிக்குடை முதலியன தந்தருளுமாறு கட்டளை இட்டனர். அவ்வாறே அவர்கள் கொண்டு வந்து கொடுக்கத் திருஞான சம்பந்தர் இறைவர் திருவருளை வியந்து பல்லக்கில் ஏறினர். இதனைச் சேக்கிழார்,

சோதி மூத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
றோதி யார்அருள் ஆதலின் அஞ்செழுத்து
ஓதி ஏறினர் உய்ய உலகெலாம்

என்று பாடியும் காட்டியுள்ளனர்.

இறைவர் தமக்கு முத்துச் சிவிகை அளித்தபோது திருஞானசம்பந்தர் பாடிய பதிகம், "எந்தை ஈசன்" என்று தொடங்கும் பதிகம் ஆகும். அப்பதிகத்தில் இறைவர் தமக்கு முத்துச் சிவிகை கொடுத்த குறிப்பு எதுவும் காணப் பட்டிலது. ஆனால் நம்பி ஆண்டார் நம்பிகள்,

வருந்தும் கொலாம்கழல் மண்மிசை ஏகிடின் என்றும்
திருந்தும் புகழ்ச்சண்பை ஞான சம்பந்தர்க்குச் சீர்மணிகள்
பொருந்தும் சிவிகை கொடுத்தனன் காண்புணரித்
திகழ்நஞ்சு
அருந்தும் பிரான்நம் அரத்துறை மேவிய அரும்
பொருளே

என்றும், "அத்தியும் மாவும் தவிர அரத்துறை, முத்தின் சிவிகை முன்னாள் பெற்றே" என்றும், "ஞாலத்து முத்தின் சிவிகை அரன் கொடுப்ப" என்றும், நிகழ் "நெல்வாயில் முத்தின் சிவிகை முதல் கொண்டும்" என்றும் பாடியிருப் பனவே சேக்கிழார் கூறுதற்குத் துணையாவன.

இவர்கட்குப் பின் அருணகிரிநாதர், "கொச்சையில் சதுர்வேதச் சிறுவ நிற்கருள் கவிகை நித்திலச் சிவிகையைக் கொடுத்தருள் ஈசன்" என்றும், கற்பனைக் களஞ்சியம் நம் சிவப்பிரகாச சுவாமிகள்,

தேனே றலர்சூடி சில் பலிக்கென் றூர் திரியும்
ஆனேறி யாண்டுபெற் றான்கொல்நீ—தான்ஏறும்
வெள்ளைமணி என்று வினவுவோம் வாங்கியஅப்
பிள்ளையையாம் காணப் பெறின்

என்று பாடிப் போற்றியுள்ளனர்.

மேலே காட்டிய வரலாற்று உண்மைகளால் நம்பி ஆரூரரும், புகலிக்காவலரும் முறையே குதிரை, யானை, பல்லக்கு ஏறினமையை உணர்ந்தோம். அவர்களைப்போல நமது சேக்கிழாரும் பரி, கரி, சிவிகை ஏறியதால் அவ் விருவரையும் ஒப்பாகும் பேற்றினர் என்பது சரதம் அன்றோ?

அதான்று என்பதன் பொருள் அதுவேயும் அல்லாமல் என்பதாம். அது+அன்று என்னும் இரு சொற்கள் புணர்ந்தே அதான்றாயிற்று. இதற்குரிய நன்னூர் விதி, "அதுமுன் வரும்அன்று ஆன்றாம் தூக்கின்" என்பது.

சேக்கிழார் பெருமானார் பரி, கரி, யானம் இவற்றை ஊர்ந்ததே அன்றித் தேரிலும் ஊர்ந்து சென்றதால் இறைவரைப்போல் விளங்குவாய் என்றனர். இறைவர் மண்தேர் ஊர்ந்தது திரிபுர தகனக் காலத்தில் என்க. மண் தேராவது பூமியாகிய தேர். மண் தேர் என்பது மட்டேர் என ஆயது "ணளமுன, டணவும் ஆகும், தநக்கள் ஆயும் காலே" என்னும் நன்னூல் விதிபற்றி என்க. அடியார்கள்

இறைவனைப் போன்றவர் என்பதைச் சிவஞான போதம் "மாலற நேயம் மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே" என்று கூறுதலால் அறியலாம். "சிவஞான சித்தியாரும், அங்கு அவர் திருவேடம் ஆலயங்கள் எல்லாம் அரன் எனவே தொழுது இறைஞ்சி" என்று அறிவிக்கிறது. சிவப்பிரகாசமும்,

தொண்டர்கள் இடத்தும் வானோர் தொழுந்திரு மேனி தானும்
அண்டரும் கண்டிலாத அண்ணலே எனவ ணங்கி
வெண்தர ளங்கள் சிந்த விழிமொழி குழறி மெய்யே
கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னோரே

என்று கூறுகிறது.

ஆகவே, சேக்கிழார் இறைவர்க்கு ஒப்பாவர் என்று பிள்ளை அவர்கள் கூறியது எல்லாப்படியாலும் ஏற்றதே. ஒருவர் என்றது இறைவரையாகும். மண்தேர் பூமியில் ஊரும் தேராம். செய்யுளில் முதலடியில் மருவியவன் அனபாயச் சோழனே. மன்னனும் தேர் ஊர்பவன், இறைவனும் தேர் ஊர்பவன், ஆதலின் இருவர் என்றனர்.

ஆனால், ஈண்டு அரசனும் தேர் ஊர்பவனாயினும், அவனோடு சேக்கிழாரை ஒப்பாகக் கூறாமைக்குக் காரணம் துறவிக்கு வேந்தன் துரும்பு ஆதலின் என்க.

ஊருணி என்பது கிணறு, குளம் என்ற இவற்றைக் குறிப்பிடும் சொல்லாகும். இக்குளம், இக்கிணறு ஒரு சமூகத்தார்க்கே உரியதானால் அதுபோது ஊருணி எனக் கூறப் பெறாது. இவை பொதுநீர் நிலையாக இருந்து ஊரார் யாவர்க்கும் பயன்படக் கூடியதாக இருந்தால்தான் ஊருணி என்னும் பெயரைப்பெறும். இக் கருத்தில்தான் நாயனாரும் இச்சொல்லை எடுத்து ஆண்டுள்ளனர்.

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு

என்ற குறட்பாவைக் காண்க.

*நீர் வளத்தால் நிலவளத்தையும், நிலவளத்தால் குடிவளத்தையும், குடிவளத்தால் கோன் வளத்தையும் பெருக்கும் செல்வச் சிறப்பு சேவையராம் வேளாளப் பெருந்தகையார்கட்கு இருத்தலின், "ஊருணி நிகர்த்த திருவப் பெருக்கினமை சேவையர்" என்றனர்.* (94)

4. வசைதவிர் வினைத்திட்பம் வாய்ந்தாக வப்பாரின்
மாற்றலர் எதிர்ந்த காலை
மழைமதக் களியானை வாம்பரி சயந்தனம்முன்
மற்றுள வருதி னியெலாம்
அசைவில்பல் படைக்கலம் கொடுநூழில் ஆட்டுபுபல்
ஆரு எழுந்த நெய்த்தோர்
அவ்வனிக ழுமன்இழுத் தோடிஉவர் ஆழிபுக்
களவில்திடர் செய்ய நோக்கி
இசைமலர் அலங்கலொடு வாகையும் சூடியார்
எய்தப் புனைந்த பெருமான்
இரும்புலியை மேருமுடி ஏற்றிப் பெருந்தேர்
இணங்குற உருட்டி நேமி
திசைதிசை உருட்டச் சேவையர் குலாதிபன்
சிறுதேர் உருட்டி யருளே
சிறுகோல் எடுத்தரசு செங்கோல் நிறுத்தினேன்
சிறுதேர் உருட்டி யருளே

*[அ.சௌ.] வசை-குற்றம், தவிர்-நீங்கிய, வினைத் திட்பம்-மன உறுதி, ஆகவப்பார்-போர்க்களம், ஆகவம்-போர், மாற்றலர்-எதிரிகள், காலை-பொழுது, வாம்பரி-தாவும் குதிரை, சயந்தனம்-தேர், வருதினி-சேனை, அசைவு-சோர்வு, தப்புதல்-மடிதல், கெடுதல், படைக்கலம்-ஆயுதம், நூழில்ஆட்டுபு-கொன்று குவித்தபோது. அனிக அழன்-சேனையாகிய பிணம், அனிகம்-சேனை, நெய்த்தோர்-இரத்தம், உவர் ஆழி-உப்புக்கடல், திடர்-மேடு, இசை-புகழ், அலங்கல்-*

மாலே, வர்கை-வெற்றிமாலே, ஆர்-ஆத்திமாலே, எய்த-பொருந்த, புனைந்த-தரித்த, பெருமான்-சோழ மன்னன்' இரும்புலி-பெரிய புலிக்கொடியை, முடி-உச்சி, இணங்குற-பொருந்த, நேமி-ஆக்ஞா சக்கரம், பல்லாறு—பல ஆறு,

**விளக்கம்:** அமைச்சனுக்கு இருக்கவேண்டிய பண்புகளான சொல் வன்மை, வினைத்தூய்மை, வினை செயல்வகை முதலானவற்றுள் வினைத்திட்பம் என்பதும் ஒன்று. பரிமேலழகர் வினைத் திட்பத்தை விளக்கும்போது "தூயவினை முடிப்பானுக்கு வேண்டுவதாய மனத்திண்மை" என்றனர். மணக்குடவர், "வினையின்கண் திண்ணியர் ஆதல்" என்றனர். பரிதியார், "காரியத்திஞல் திடம் பெற்று நிற்றல்" என்றனர். இப்பண்பைப்பற்றி வள்ளுவர் கூறும்போது, "வினைத் திட்டம் என்பது ஒருவனது மனத்திட்பம்" என்றே கூறினர். இந்த வினைத் திட்பத்தினை எல்லாரும் மதிப்பர் என்றே வள்ளுவர் கூறுவர். "வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் உள்ளப்படும்" என்று அவர் கூறியதைக் காண்க.

அமைச்சனிடம் வினைத்திட்பம் இல்லாமல் ஏனைய திட்பங்கள் இருப்பினும், அவற்றை ஒரு பொருட்டாக உலகம் மதியாது என்றும் வள்ளுவர் மொழிந்துள்ளனர். இதனை அவர்,

எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு

என்று குறித்துள்ளார்.

இஃது இத்தகைய பண்பு ஆதலினுல், இதனை வசைதவிர் வினைத்திட்பம் என்றனர் திரு. பிள்ளை அவர்கள். இப்பண்பினைச் சேக்கிழார் பெற்றிருந்தனர் என்பதை இப்பாட்டு நமக்கு அறிவிக்கும் குறிப்பாகும். யானையின் மத மிகுதியினைக் காட்ட மழையினை அடை ஆக்கினர். ஈண்டு, யானை, குதிரை, தேர்ச் சேனைகளைக் குறிப்பிட்டுக் காலாட்படையினைக் குறிப்பிடாத காரணம் மற்றுள வருதினி என்

பதை காலாட் படையாகக் கருதவேண்டும் என்றற்காம். வீரர் ஏந்தும் ஆயுதங்கள் போரிடும்போது கெட்டொழிதல் இல்லாமல் இருக்கவேண்டும், ஆதலின் அசைவில் என்ற அடை கொடுத்துக் கூறினர். கொடு என்பது கொண்டு என்பதாகும்.

தமிழ் இலக்கணத்தில் பொருள் இலக்கணம், இரு கூறு உடையது. ஒன்று அகப்பொருள், மற்றொன்று புறப் பொருள். புறப்பொருளில் போர் முறைகள் கூறப்படுதல் உண்டு. அங்ஙனம் கூறுங்கால் குறிப்பிடப்படும் துறைகள் பல. அவற்றுள் ஒன்று, நூழில் ஆட்டு என்பது. இந் நூழிலாட்டுத் தும்பைத் திணையின் ஒரு கூறு. தும்பையாவது "அதிரப் பொருதல்" தொல்காப்பியர்,

மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை அழிக்கும் சிறப்பிற் றென்ப

என்பர்.

இத் தும்பை பன்னிரு துறைகளை உடையது. அவற்றுள் ஒன்று நூழில் ஆட்டு. இதனைத் தொல்காப்பியர், "ஒள்வாள் வீசிய நூழிலும்" என்று குறித்துள்ளனர். இதற்கு உரை கண்டபோது "வாளால் தடிந்து கொன்று குவித்தல்" என்று உரை எழுதினர் நச்சினார்க்கினியர். நூழில் என்னும் சொல் கொன்று குவித்தல் என்ற பொருளில்,

வள்ளை நீக்கி வயமீன் முகந்து
கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்
வேழப் பழனத்து நூழில் ஆட்டு

என்று மதுரைக் காஞ்சியில் வருதல் காண்க.

இங்ஙனம் பகைவரைக் கொன்று குவித்தபோது செந்நீர் பல ஆறாகச் செல்லும். இவ்வாறு கூறியது உயர்வு நவிற்சி அணி கருதி என்க. அச் செந்நீர் ஆற்றில் சேனையில் இறந்த பிணங்கள் அடித்துச்செல்லப்பட்டபோது சென்ற பிணங்கள்

கடலில் சேரும் நிலையில் திட்டுத் திட்டாக நின்றுவிடும். இந் நிலைகள் நிகழவேண்டுமாயின், போரில் வெற்றி காண வேண்டும். அங்ஙனம் கண்டபோது வாகை என்னும் மலரை அணிவர் வெற்றி கண்ட அரசர்.

வெற்றிக்கு அறிகுறியாக அமைந்ததே வாகை மாலை. இதனைப் புறப்பொருள் வெண்பா மாலை,

இலைபுனை வாகை சூடி இகல்மலைந்து
அலைகடல் தானை அரசுஅட்டு ஆர்த்தன்று

என்றும்,

சூடினான் வாகைச் சுடர்த்தெரியல் சூடுதலும்
பாடினார் வெல்புகழைப் பல்புலவர்—கூடார்
உடல்வேல் அழுவத் தொளிதிகழும் பைம்பூண்
ஆடல்வேந்தன் அட்டார்த் தரசு"

என்றும் சுட்டிக்காட்டிக் குறிப்பிட்டிருப்பதைக் காணவும்.

இவ்வாறு வாகை மாலை சூடியபோதும், தம் தம் மரபுக் குரிய மாலையினையும் உடன் சூடிக்கொள்வர். ஈண்டுச் சோழ மன்னனது வெற்றிச் செயலைக் கூறுதலின், ஆத்தியினைச் சூடுதலையும் குறிப்பிட்டனர்.

நமது தமிழ் நாட்டு முடியுடை மூவேந்தர்களும் இமயம் வரைச் சென்று அம்மலைமீது தம் தம் கொடியினை ஏற்றி வந்துள்ளனர். இது குறித்தே சோழ மன்னன் ஒருவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்றே பெயர் வழங்கப்பெறும் பெருமையைப் பெற்றவனாயினான்.

ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவில் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்

என்று அகத்துள் இச்சேரன் இமயத்துள் வில் பொறி பொறித்தது குறிப்பிடப்பட்டுள்ளது.

சோழன் தனது புலிக் கொடியை நிறுத்தியவன் என்பதைக் கலிங்கத்துப் பரணி, "பண்டு நின்றபடி நிற்க இது என்று முதுகில், பாய் புலிப் பொறி பொறித்ததும் மறித்த பொழுதே" என்று குறிப்பிடுகிறது. பாண்டிய மன்னனும் இமயத்தில் தனது கயல் பொறியைப் பொறித்ததைப் பெரியாழ்வார் "பருப்பதத்துக்கயல் பொறித்த பாண்டியர் குலபதிபோல்" என்று பாடியுள்ளனர்.

மூவேந்தர்களும் இமயத்தின் உச்சியில் தமது மரபுக் கொடிகளை ஏற்றினர் என்பதைச் சிலப்பதிகாரம் வற்புறுத்திக் கூறுகிறது. "தென் தமிழ் நாடாளும் வேந்தர் செரு வேட்டுப் புகன்றெழுந்து மின்தவழும் இமய நெற்றியில் விளங்குவில் புலி கயல் பொறித்த நாள்" என்று கூறுவதைக் காண்க.

இன்னோர் அன்ன காரணங்களால் தென்னாட்டு மன்னர்கள் வடநாட்டு மன்னர்களை வென்று வெற்றி கண்டு வாகை சூடினர் என்பதைத் திட்டவட்டமாக அறிகிறோம். இதனை அகத்துள்,

ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்
தென்னம் குமரியோ டாயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே

என்ற அடிகளில் காணலாம்.

இங்ஙனம் சென்று வெற்றிகண்டு திரும்புகையில் வட அரசர்கள் காணிக்கை கொடுத்தனர் என்பதும், கரிகாலனது இமயப் படைஎடுப்பால் புலனாகிறது.

செருவெங் காதலில் திருமா வளவன்
புண்ணியத் திசைமுகம் போகிய அந்நாள்
அசைவில் ஊக்கத்து நசைபிறக் கொழியப்
பகைவிலக் கியதிவ் பயங்கெழு மலைஎனக்
கொடுவரி ஏற்றிக் கொள்கையில் பெயர்வோற்கு

மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
கோனிறை கொடுத்த பட்டிமண் டபமும்
மகதநன் னாட்டு வாள்வாய் வேந்தன்
பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும்
அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபில் தொரண வாயிலும்

என்று சிலப்பதிகாரம் புலப்படுத்தும் ஆற்றை உணர்க.

அசோக சக்ரவர்த்தி பாரதப் பகுதியில் பெரும்பாலான வற்றை ஆண்டவன். தனக்குப் பணியாத கலிங்க மன்னனை யும் அவன் பணிய வைத்தான் என்பதைப் படிக்கிறோம். ஆனால், தமிழ் நாட்டில் அவன் கால் எடுத்து வைத்ததாக அவனது வரலாற்றில் இல்லை. அதனைச் சுதந்தர நாடாகவே விட்டு விட்டனன். இஃது ஆணித்தரமான வரலாற்று உண்மை. இங்ஙனம் விட்டமைக்குக் காரணம், மூவேந்தர் களின் ஆற்றலை அவன் உணர்ந்தமையால் என்று கூறின் வியப்பில்லை அன்றோ?

கரிகாற் சோழன் தனது வடநாட்டுச் செலவில் இமயத் தில் கணவாய் எடுத்து அதன் வழிச் சென்றனன் என்ற குறிப்பு, அங்கு வ்ழங்கப்பெறும் "சோழர் கணவாய்" என்ற பெயர்கொண்டு தெளியலாம். அக்கணவாய் அமைந்த மலைப் பகுதியினை சோழ மலைத் தொடர் "Chola range" என்று இன்னும் வழங்கப்படுகிறதாம். இவ்வாறு உள்ளதாக திரு. மு. இராகவையங்கார் தமிழ் வேந்தர்களின் இமயப் படை எடுப்பு என்ற கட்டுரையில் வரலாற்று ஆசிரியர்கள் ஒப்புக்கொள்ளும் அளவுக்கு ஆணித்தரச் சான்றுடன் எழுதி யுள்ளனர்.

கரிகால் சோழன் இமயத்தில் புலிப்பொறி நாட்டிய தைத் தனிச் சிறப்புடன் இளங்கோ அடிகள்,

இப்பால் இமயத் திருந்திய வாள்வேங்கை
உப்பாலைக் பொற்கொட் டுழையாதா எப்பாலும்
செருமிகு சினவேல் செம்பியன்
ஒருதனி ஆழி உருட்டுவோன் எனவே

என்று சாற்றுகிறுர்.

நமது வரலாற்றுப் புலமையில் வல்லுநரான சேக்கிழார் பெருமானுரும் நாட்டுவளத்தைக் கூற வந்தபோது முதற் செய்யுளிலேயே,

''பாட்டியல் தமிழ்உரை பயின்ற எல்லையுள்
கோட்டுயர் பனிவரைக் குன்றின் உச்சியில்
சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி
நாட்டியல் பதனையான் நவிலல் உற்றனன்''

என்று பாடிச் சோழர் தம் இமயப் படை எடுப்பையும் அங்குப் புலிப் பொறி பொறித்தமையையும் பாடுகிறுர்.

இத்தகைய குறிப்புக்களையே ஈண்டுப் பிள்ளை அவர்கள் ''இரும்புலியை மேருமுடி ஏற்றி'' என்ற தொடரில் குறிப்பிட்டுள்ளளார். கரிகாற் சோழன் செயலை அவன் மரபில் வந்த ஏனையோர்க்கும் ஏற்றிச் சொல்லுதல் புலவர் மரபு.

இப்பாடலில் பிள்ளையவர்கள் குறிப்பிடும் பொருள், சோழமன்னன் அநபாயன், நால்வகைப் படை கொண்டு நாட்டில் பகைவரைக் கொன்று குவித்து வெற்றி கண்டு, இமயத்தும் தன் மூதாதையர் போலப் புலிக்கொடி பொறித்து எல்லாத் திசைகளிலும் தனது ஆணையே செல்லத் தேர் ஊர்ந்து சிறக்க, நீ சிறுதேர் உருட்டுவாயாக என்று சேக்கிழாரை வேண்டுவதாகும், (95)

5. சாதகப் பறவைக் கிரும்புயல் துளியும்
சகோரத்தி னுக்கு திக்கும்
சந்திரன் விடும்கரமும் அம்புயத் திற்கேழு
தாம்பரித் தேர்இ ரவியும்
மேதக உறுந்தவத் திற்கருளும் அவ்வருள்
விளக்கத் தினுக்கு ழுவலும்
மேவரும் கல்விக்கு நுண்அறிவும் நுண்அறிவு
விக்கத்தி னுக்கொ ழுக்கும்
நோதக இலாதமைந் தாங்கருள் வழிச்செலீஇ
நோய்ப்பிறவி போக்கு வார்க்கு
நோற்றவர் புராணம்இல் லாதமை தராதாம்
நுவன்றெம்மை ஆண்ட பெம்மான்
தீதகம் மதித்திட்டாச் சேவையர் குலாதிபன்
சிறுதேர் உருட்டி யருளே
சிறுகோல் எடுத்தரசு செங்கோல் நிறுத்தினேன்
சிறுதேர் உருட்டி யருளே

**[அ. சொ.]** *சாதகப் பறவை-இஃது ஒருவகைப்பறவை, புயல்-மேகம், சகோரம்-இதுவும் ஒருவகைப் பறவை, இதனை நிலா முகிப்புள் என்பர், உதிக்கும்-தோன்றும், கரம்-கதிர் ஒளி, அம்புயத்திற்கு-தாமரைக்கு, தாம்பரி-தாவும் குதிரை, இரவி-சூரியன், மேதகஉறும்-மேன்மைத்தன்மை பொருந்திய உழுவலன்பும்-பேரன்பும், எழுபிறப்பும்தொடர்ந்த அன்பும், மேவரும் - பொருந்துதற்கு அரிய, வீக்கம் - பெருக்கம், நோதகவு-துன்பம், கேடு, அமைந்தாங்கு-அமைந்ததுபோல, செலீஇ-சென்று, நோற்றவர்-தவம்புரிந்தவர், நுவன்று-பாடி, தீது, அகம்-உள்ளத்தின் தீமைக்குணம், இல்லாது அமை, தராது-இன்றி அமையாது, நோற்றவர்-சரியை, கிரியை, யோகம் ஞானங்களில் ஈடுபட்ட தொண்டர்கள், நுண்ணறிவு-கூர்மையான அறிவு.*

**விளக்கம்:** *சாதகப்பறவை மழைத் துளியை உண்டு வாழும் இயல்பினது, இதனை வானப்பாடிப் பறவை*

என்பர். இது மழைத்துளியை உண்டு பாடவல்லதாம். "துளி நசைவேட்கையான் மிசை பாடும்புள்" என்று கலியினுள்ளும், "துளி நசைப்புள்" என்று புறநானூற்றுள்ளும், "தன்பாடிய தளி உணவின்புள்" என்று பட்டினப்பாலையுள்ளும் வருதல் காண்க. சீவகசிந்தாமணியில் "வானம்பாடி மேகத்துப் பிறந்த துளியையே நச்சிப் பாடுமாறு போல" என்று உரை எழுதியுள்ளார் நச்சினார்க்கினியர். தட்சயாக பரணியில் "வானம்பாடியே கூடிமடுப்பவே" என்று வரும் தொடரில் வரும் வானம்பாடி என்பதற்குச் சாதகப் புள் என்று உரைகூறியதைக் காணவும்.

சகோரப் பறவை, நிலவு ஒளியினை உண்ணும் தன்மையது. இதனை முத்துக் குமாரசாமிப் பிள்ளைத் தமிழில், சகோரப் பறவை, புன்னகையை நிலவொளி எனக் கருதி அருந்த விழைந்தது" என்பதை, "அரும்பு நகையைச் சகோரப் புள் அருந்த" என்றும், "நிலவொடு இளவெயிலும் அளவளாய் உண்ணச் சகோரம் வெஃகும்" என்றும் கூறுதலை அறியவும்.

சூரியனைத் தாமரையின் கணவன் எனக் கூறுதல் மரபு. இதற்குக் காரணம் அவனது வருகையினைக் கண்டதும், தாமரை மலர்வதால் என்க. "செங்கமல முகமலரச் செய்ய வெய்யோன் உதயம் செய்தான்" எனக் கம்பராமாயணத்தில் வருதல் காண்க. சந்திரனைக் குமுத மலரின் கணவன் என்பதால் சூரியன் தாமரை நாயகன் எனப்படுகிறான். இதனைக் கந்தபுராணம்,

திங்கள் தன்குறை உணர்த்தவாய் திறந்தெனச் செய்ய
பங்க யங்கள்போ தவிழ்ந்தன குமுதங்கள் பலவும்
தங்கள் நாயகன் உடைந்தது நோக்கியே தபனற்
கங்கை கூப்பிய திறனென ஒடுங்கிய அன்றே

என்று கூறுதல் காண்க.

சூரியன் வரும் தேர் ஏழு குதிரைகள் பூட்டப்பட்டது என்பது கவிமரபாதலின் "ஏழுதாம் பரித்தேர்" என்றனர்.

"பச்சைமா ஏழும் ஏறப்போய் ஆறும் ஏறினர்" என்று கம்பரும், "ஏழு வயப்புரவி ஊரும் இரதத்து இரவி" என்று வில்லிபுத்தூராரும் கூறுதலால் அறியலாம்.

தவம் என்பது காவி உடுத்தும் தாழ் சண்ட வைத்தும் காடுகள்புக்கும் வாழ்தல் என்பது மட்டும் அன்று. தவமாவது யாது என்பதை விளக்க வந்த இடத்துப் பரிமேலழகர், "மனம் பொறிவழி போகாது நிற்றல் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்குதலும், கோடைக்கண் வெயிலில் நிற்றலும், மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்து, பிற உயிர்களை ஓம்புதல், புலால் மறுத்து உயிர்கள்மேல் அருள் முதிர்ந்துழிச் செய்யப்படுவது" என்று எழுதியுள்ளனர். தவத்திற்குச் சிறந்த பண்பு அருளே ஆகும். இதனைத் திருவள்ளுவர்,

உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு

என்றனர். இதனை மேலும் வற்புறத்த, "மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்தது ஒழித்து விடின்" என்றும் கூறித் தவத்திற்கு வெளிவேடம் வேண்டா என்றும் கூறுதல் காண்க. தவத்தினை "அருளுடைய அருந்தவம்" என அடை கொடுத்துப் பேசி இருப்பதையும் காண்க. அருள் பண்பு இருந்தால்தான் தவம் இனிதாகும் என்பதைச் சிறுபஞ்சமூலம்,

உயிர்நோய் செய்யாமை உறுநோய் மறத்தல்
செயிர்நோய் பிறர்கண் செய்யாமை—செயிர்நோய்
விழைவு வெகுளி இவைவிடுவா ளுயின்
இழிவன் றினிது தவம்

என்று கூறுகிறது. இத்தகைய தவம் எவர்க்கும் கிட்டாது. இதன் அருமையினை உணர்ந்தே திருவள்ளுவர்.

தவமும் தவமுடை யார்க்குஆகும் அவம்அதனை
அஃதிலார் மேற்கொள் வது

என்றும், "நோற்பார் சிலர், பலர் நோலாதார்' என்றும் கூறியுள்ளனர். மேலும், தவத்தின் பெருமை இத்தன்மைத்து என்பதையும் திருவள்ளுவர்,

ஒன்னார்த் தெறலும் உவந்தார் ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்

என்றும்,

வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்
ஈண்டும் முயலப் படும்

என்றும்,

கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு

என்றும் கூறுதல் காண்க. இவற்றை எல்லாம் உளங் கொண்டே, "மேதகவுறுந்தவம்" என்று கூறினார் ஆசிரியர்.

அருளின் விளக்கத்திற்கு அன்பின் தொடர்பு இன்றியமையாததாகும். அருள் இன்னது என்பதைப் பரிமேலழகர் விளக்கும்போது, "தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை" என்றனர். மணக்குடவர், "அருளுடைமை யாவது யாதானும் ஓர் உயிர் இடர்ப்படின், அதற்குத் தன் உயிர்க்கு உற்ற துன்பத்தினால் வருந்து மாறு போல வருந்தும் ஈரமுடைமை ஆகும்" என்று விளக்கினர். காளிங்கர் விளக்கம் தரும்போது, "அனைத்துயிர்க்கும் ஒப்ப நிகழ்வதாகிய அருளில்வழி, மற்றவர் செய்யும் தவம் வஞ்சனை உடைத்தாய் அஞ்சத்தக்கதாகலானும் துறவறம் பூண்பார்க்கு நிறை அருள் வேண்டும்" என்றனர்.

அன்பினைப் பற்றி விளக்கம் தரவந்த பரிமேலழகர், "வாழ்க்கைத் துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கண் காதல் உடையளா ஆதல், இல்லறம் இனிது நடத்தலும், பிற உயிர்கள்மேல் அருள் பிறத்தலும் அன்பின் பயன்

ஆதலின் இது வேண்டப்பட்டது'' என்றனர். மணக்குடவர் அன்புடைமையாவது, ''தன்னைச் சார்ந்தார் மாட்டுக் காதலுடையவன் ஆதல்'' என்றனர். பழைய உரைகாரர், 'தன் புதல்வரிடத்து அன்புடைமை, உயிர்களிடந்தோறும் உண்டாக வேண்டும் ஆதலின் அன்புடைமை ஆயிற்று'' என்றனர். பரிதியார், ''அன்புடைமை ஆவது புதல்வரிடத்திலே, ஆத்மாக்களிடம் தோறும் உண்டாக வேணும். ஆதலால் அன்புடைமை ஆயிற்று'' என்றனர். ''அன்பின்றேல் எவை இருந்தும் பயன் இல்லை என்பதை வள்ளுவர் நன்கு உணர்த்தி யுள்ளனர். அன்புடையவர்கள் தம் என்பையும் ஈவர் என்றும், ஆருயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு அன்போடியைந்த வழக்காகும் என்றும், அவ்வன்பு ஆர்வம் உடைமையையும், அவ்வார்வமுடைமை நண்பென்னும் நாடாச்சிறப்பையும் தரும் என்றும், உலகில் இன்புற்றார் எய்தும் சிறப்பெல்லாம் அன்புற்று அமர்ந்த பயன்'' என்றும், இவ்வன்பு அறத்திற்குமட்டும் அன்றி, மறத்திற்கும் துணையாகும் என்றும், அன்பில்லாத உயிரை அறக்கடவுள் அழிக்கும் என்றும், உள்ளதில் அன்பில்லாதவர் வாழ்க்கையில் வளர்ச்சி அடைய முடியாது என்றும், அகத்துறுப்பாகிய அன்புதான் உறுப்பே ஒழிய, இடம் பொருள் ஏவல் முதலிய புறத்துறுப்புக்களால் பயன் இல்லை என்றும், அன்பின் வழி நின்ற உடம்பே உயிர் நின்ற உடம்பு, அவ்வன்பு இல்லாத உடம்பு எலும்பின்மீது தோல் போர்த்த உடம்புதான்' என்றும் கூறித் தெளிவுபடுத்தி யுள்ளனர். கம்பரும் அன்பின் மாட்சியினை,

என்பெனப் படுவ தியாக்கை என்ப துயிர்என்பது இவைகள் எல்லாம்
பின்பெனப் படுவ அல்ல வேனும் தம்முடை நிலையில் பேரா
முன்பென உளதென் றாலும் முழுவதும் தெரிந்த ஆற்றால்
அன்பெனப் படுவ தொன்றின் தன்மை அமரரும் அறிந்த தன்றால்

என்று பாடி இருத்தல் காண்க. விநாயகபுராணம் இவ்வன்பை மறக்கல் பாற்று என்பதற்குரிய காரணத்தை ''நொதுமலரும்

படர் செய்பகையும் உறவாக்கும் பற்றும் அளிக்கும் மனை மைந்தர் தொடர்பின் வளர்க்கும் அன்பதனுல் சோர்ந்தும் அன்பின் வழுவற்க" என்று கூறுகிறது. இவ்வன்பு இன்றேல் எதனுலும் பயனின்று என்பதையும் அப்புராணம், "இடனும் பொருளும் ஏவலரும் இருந்து பயன் என்னே வந்த உடலின் பயனுகிய அன்பை உருத இடத்து" என்றும் கூறுகிறது. இத்தகைய பெருமைகட்கு நிலைக்களனும் அன்பு, அருள் என்னும் அன்பு ஈன் குழவி என்பது திருவள்ளுவர் கருத்தாதலின், ஈண்டுப் பிள்ளை அவர்கள் அருள் விளக்கத்தினுக்கு உழுவலும் என்றனர். உழுவல் என்பது எழுபிறப்பும் தொடரும் பேரன்பாகும். அருளுக்கும் அன்பிற்கும் அமைந்த தொடர்பின் மாட்சியினை நமது சேக்கிழார் பெருமானுர்,

"முட்டில் அன்பாதம் அன்பிடும்
தட்டுக்கும் முதல்வர்
மட்டும் நின்றதட் டருளொடும்
தாழ்வுறும் வழக்கால்
பட்டொ டுந்துகில் அநேககோ
டிகள்இடும் பத்தர்
தட்டு மேற்படத் தாழ்ந்தது
கோவணத் தட்டு"

என்று பாடிக் காட்டி இருத்தல் காண்க. இப்பாட்டில் அடியார் அன்பின் முன் அரனுர் அருள் தாழ்ந்தே நிற்கும் என்னும் அரிய குறிப்பு அமைந்திருத்தல் காண்க.

கல்வியினைக் கற்றுவிட்டால் மட்டு பயன் இல்லை. நுண்ணறிவுடன் கற்றலே பெரும் பெயன் தருவதாகும். கல்வி இன்னது என்பதைப் பரிமேலழகர் குறிப்பிடும்போது "தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல்" என்கின்றனர். மணக்குடவர் "கல்வியாவது கல்வியாலும் அதனினுகிய பயனும் கூறுதல்" என்றனர். கல்வியின் பயனை அறநெறிச்சாரம்.

"எப்பிறப் பாயினும் ஏமாப் பொருவற்கு
மக்கட் பிறப்பில் பிறிதில்லை—அப்பிறப்பில்
கற்றலும் கற்றவை கேட்டலும் கேட்டதற்கண்
நிற்றலும் கூடப் பெறின்"

என்கிறது. மோட்சநிலைக்கும் கல்வி இன்றி அமையாத நிலையினை,

> ''எழுத்தறிய தீரும் இழிதகமை தீர்ந்தால்
> பொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும்—மொழித் திறத்தின்
> முட்டறுத்த நல்லோன் முதல்நூல் பொருளுணர்ந்து
> கட்டறுத்து வீடு பெறும்''

என்னும் பாடல் கூறுதல் காண்க.

''கைப்பொருள் கொடுத்தும் கற்றல், கற்றபின் கண்ணும் ஆகும்'' என்று சீவகசிந்தாமணியிலும், திருவெங்கைக் கோவையில்,

> விண்ணுடை யார்புகழ் நூபுரப் பாதர்வெல் வேல்நெடும் கண்
> பெண்ணுடை யார்மகிழ் தென்வெங்கை மாநகர்ப் பெண்ணணங்கே
> கண்ணுடை யார்கற் றவரேகல் லார்கள் முகத்திரண்டு
> புண்ணுடை யார்எனக் கூறிநம் காதலர் போயினரே

என்றும், கீழ்நிலையினரும் மேல் நிலையினைக் கல்வியால் பெற்று உயர்வர் என்பதைப் புறம்,

> வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்
> கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
> மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே

என்றும், நாலடியார்

> களர்நிலத் தும்பிறந்த உப்பினைச் சான்றோர்
> விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
> கடைநிலத்தோர் ஆயினும் கற்றறிந் தோரை
> தலைநிலத்து வைக்கப் படும்

என்றும், கல்வியே எப்பொருளினும் சிறந்தது என்பதைத் திருவள்ளுவர்,

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை

என்றும்,

வைப்புழிக் கோட்படா வாய்த்தீயின் கேடில்லை
மிக்க சிறப்பின் அரசர்செறின் வவ்வார்
எச்சம் எனஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற

என்று நாலடியாரும்,

''மால்படு புந்தியின் மறுவில் சேதனம்
பால்படும் உயிர்க்கெலாம் பவத்தின் மாண்பயன்
நூல்படு கல்வியின் நுவல்வ ளத்தினின்
மேல்படு கின்றதில் விழுமி தில்லையே'' என்றும்,

திருமைகொள் வளனொடு தீதில் கல்வியாம்
இருமையின் ஒன்றினை எய்தி டாதெனின்
அருமைகொள் அவ்வுயிர் அதனின் ஆற்றவும்
பெருமைய துடையது பேயின் தோற்றமே,

என்றும் கந்த புராணமும் கழறுதல் காண்க. ''கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி''என்பது கொன்றைவேந்தன் ''கல்வி தாழ்தலின்றியே கற்றூல் வரும் அறிவு, செல்வத்தால் ஆகுமோ'' என்று வினவுகிறது திருமலை வெண்பா.

மேலும் புறநானூறு,

உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை திரியாது கற்றல் நன்றே
பிறப்போர் அன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும்மனம் திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னா தவருள்
அறிவுடை யோன்ஆறு அரசும் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே

என்கிறது.

இத்தகைய கல்வியின் பயன் இன்னது என்பதைத் திருவள்ளுவர் கூறவந்தபோது,

"யாதானும் நாடாமால் ஊராமால் என்ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு"

என்று கூறி, ஏன் கற்கவில்லை எனவும் வினவலானார். இவ்வாறு கற்றவர்க்கு எங்கும் சிறப்புண்டு என்பதே, "எத்திசைச் செலினும் அத்திசை சோறே" என்றும், "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்றும் புறத்து வருதலாலும்,

ஆற்றவும் கற்றார் அறிவுடையார் அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை அந்நாடு
வேற்றுநா டாகா தமவேயாம் ஆதலினால்
ஆற்றுணா வேண்டுவ தில்

என்று பழமொழி நானூறும், "மன்னற்குத் தன்தேசம் அல்லால் சிறப்பில் கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு" என்று வாக்குண்டாமும் கூறுதலால் அறியலாம். இத்தகைய சிறப்பு வாய்ந்த கல்வியினை ஒரு பிறவியில் கற்றால், அஃது ஏழு பிறப்பிலும் தொடர்ந்து பயன்தரும் என்பது வள்ளுவர் கருத்து. இக் கல்வியின் பயனை அறியவே அனுமான் சூரியனிடம் சென்றான் என்பதை இரங்கேச வெண்பா,

மல்லல் வியாகரணம் மாருதிகற் கக்கருதி
எல்லவன்பின் போந்தான் இரங்கேசா

என்று குறிப்பிடுகிறது.

இங்ஙனம் கற்றற்குரிய பயன் கற்றபடி நிற்றலே ஆகும்,

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக

என்று குறளும், 'தெள்ளிதின் ஆராய்ந்து அமைவுடைய கற்பவே', என்று நாலடியும், 'கற்றுங்கறிந்து அடங்கி' என்று நீதி நெறி விளக்கமும்.

பையவே கற்றுக் கற்ற பண்பின ரோடு நாளும்
உய்யவே அளவளாவி உரைத்தவா நிற்றல்வேண்டும்

என்று விநாயக புராணமும் கூறுதல் காண்க. கற்றலின் பயன் நிற்றல். அவ்வாறு நிற்கவில்லை எனில் இழிவு என்பதைப் பிரபு லிங்கலீலை, "சொல்லிய சொற்கள் கற்றீர் சொற்ற அந் நெறியில் நிற்கும் நல்லியல் இல்லை" என்று இடித்துரைக்கிறது. இவ்வாறு நிற்கும் பண்பே நுண் அறிவுடைமை ஆகும். அறிவுடைமையைப்பற்றி விளக்க வந்த பரிமேலழகர், "கல்வி கேள்விகளினாய அறிவோடு உண்மை அறிவுடையன் ஆதல்" என்பர். மணக்குடவர், "அறிவுடைமையாவது அறிவாவது இன்னது என்பதும், அதனால் ஆகிய பயனும் கூறுதல். இது கல்வியும் கேள்வியும் உடையராயினும் கேட்ட பொருளை உள்ளவாறு உணர்ந் தறிதல் வேண்டும்" என்றனர்.

நாலடியார் நுண்ணறிவுடைமையினைத்தான் செல்வம் என்கிறது. "நுண்ணுணர்வின்மை வறுமை, அஃதுடைமை பண்ணப்படைத்த பெருஞ் செல்வம்" என்ற அடிகளில் இக் கருத்தைக் காண்க. பழமொழி நானூற்றிலும் நுண்ணறிவின் மாட்சியினை,

அறிவினால் மாட்சிஒன் றில்லா ஒருவன்
பிறிதினால் மாண்ட தெவனும்—பொறியின்
மணிபொன்னும் சாந்தமும் மாலையும் இன்ன
அணியெல்லாம் ஆடையின் பின்

என்று பேசுகிறது.

நுண்ணறிவுதான் இறுதிவரையில் காக்கும் கருவியாகும். மனத்தைச் சென்ற சென்ற இடங்கள் எல்லாம் செல்ல

விடாமல், நன்றின் இடத்தே சொல்லும்படி செய்வதும் ஆகும். எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப் பொருளின் மெய்ப்பொருள் காண்பதே நுண்ணறிவாகும். வில்லிபுத்தூராரும் நுண்ணறிவைப்பற்றி,

எவ்வுரை எவர்சொற் ருலும்
தன்னறி வேற நோக்கி
அவ்வுரை உண்மை அன்மை
அறிபவர் அறிவுளோராம்

என்கிருர்.

பிறர் வாய்ச் சொல்லின் நுண்பொருளைக் காண்பதும் நுண்ணறிவு என்றும், உலகத்தோடு ஒட்டி வாழ்வதே நுண்ணறிவு என்றும்,

எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு

என்னும் குறள் கூறுதலையும், உலகத்தோடு ஒட்ட ஒழுகல் கல்லாரைப் பலகற்றும் கல்லாத அறிவினர் என்றும் கூறுதல் காண்க. அஞ்சுவனவற்றிற்கு அஞ்சுவதே அறிவுடைமை யாகும். நுண்ணறிவுடையவர்தாம் எல்லாம் உடையர். அஃது இல்லாதவர் எவற்றை உடையவராயினும் உடைய வர் ஆகார் என்பர் வள்ளுவர். இத்தகைய நுண்ணறிவு மிகுதியாக இருத்தல் வேண்டும் என்ற கருத்தில்தான் "நுண்ணறிவுவீக்கம்" என்றனர் திரு. பிள்ளை அவர்கள்.

கல்வியிருந்தாலும் அக் கல்வியினுல் நுண்ணறிவும் இருந்தாலும் போதாது. அந்நுண்ணறிவிற்கு ஏற்ற ஒழுக்கம் இருத்தல் மிக மிக இன்றியமையாதது. இதனுல் தான் அதனை இறுதியில் வைத்துக் காட்டியுள்ளார் ஆசிரியர்.

ஒழுக்கமாவது யாது என்பதைப் பரிமேலழகர் உணர்த்தும்போது, "தத்தம் வருணத்தார்க்கும் நிலைக்கும் ஓதப்பட்ட ஒழுக்கத்தினை உடையவர் ஆதல்" என்றனர்.

மணக்குடவர் "தத்தம் குலத்திற்கும் இல்லறத்திற்கும் ஏற்ற ஒழுக்கமுடையராதல்" என்றனர். பாரதியார், "ஒழுக்க முடைமையாவது தான் படித்த நன்னெறியை மறவாமல் மரஞைந்த மட்டும் கொண்டு ஒழுகுதல் என்றவாறு" என்றனர்.

இவ்வாறு கூறப்படும் ஒழுக்கம் மக்கட்குச் சிறப்பினையே தரும். இஃது இம்மை மறுமையாகிய ஈர் இடத்திற்கும் துணையாய் நிற்பது. இதனால்தான் இவ்வொழுக்கத்தை மக்கள் தம் தம் உயிரினும் சிறந்ததாகக் கருதி, அது நீங்கா வண்ணம் பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்பர் வள்ளுவர். இக் கருத்தையே விநாயக புராணம், "சூழ்ந்து துணையால் சிற்றின்பம் சுரக்கும். அதனால் உயிர்தனினும் வாழ்ந்த ஒழுக்கம் ஓம்பிடுக, வழுக்கின் இடும்பையே தருமே" என்கிறது. ஒழுக்கம்தான் குலனுடைமை இப்பண்பில் தவறினால் இழிபிறப்பே ஆகும். குடிப்பிறப்பினாலும் பெருமை இல்லை. பிறப்பொழுக்கம் தவறின் உயர்பிறப்பும் இழி பிறப்பாகும் என்றும் வள்ளுவர் வரைந்துள்ளனர். "மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான் பிறப் பொழுக்கம் குன்றக் கெடும்" என்பது வள்ளுவர் வாக்கு ஒத்து என்பது வேதம். ஒழுக்கம் பற்றி விநாயக புராணம் தாழ்ந்த வருணத் துதித்தோரும் தக்கோர் ஆவர் ஒழுக்கத் தால் வீழ்ந்த ஒழுக்கத்தார் இழிவர் மேலோம் வருணத் துரித்திடினும்' என்று செப்புகிறது. ஒழுக்கம் அல்லாதவன் உயர்நிலை அடைய முடியாது. ஒழுக்கத்தால் மேன்மை அடையலாம். ஒழுக்கத்தினின்று இழிந்தால் பெரும்பழியே எய்தும். இதனைப் பழமொழி நானூறு,

கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்கதோர்
போல்லாத தில்லை ஒருவர்க்கு—நல்லாய்
இழுக்கத்தின் மிக்க இழிவில்லை இல்லை
ஒழுக்கத்தின் மிக்க உயர்வு

என்று உணர்த்துகிறது. நல் ஒழுக்கமே அறத்திற்குக் காரண மாகும் ஒழுக்கப்பண்பு இருக்குமாயின், தீயமொழிகளை

வாயால் கூறுதற்கும் அச்சம் உண்டாகும். ஆகவே, ஒழுக்கம் சிறப்புக்குரியது என்ற நிலையினை அறுதியிட்டு உறுதியாகக் காட்டவே இறுதியில் கூறினர் என்க.

ஈண்டுத் திரு. பிள்ளை அவர்கள் ஒன்றிற்கு ஒன்று இன்றியமையாதனவற்றை எடுத்துக் காட்டியதன் கருத்து, பிறவி நோய் நீங்கவிழைவார்க்குத் திருத்தொண்டர் புராணம் மிகமிக இன்றியமையாதது என்பதைக் காட்டுதற்காகவே என்க. அத்தகைய இன்றியமையாத புராணத்தைப் பாடிய பெருந்தகையாரே சிறுதேர் உருட்டுக என்று வேண்டுவாராயினர்.

பிறவி நோய் போக வேண்டுவதாயின், அருள்வழி ஒழுகினால் அன்றி, அதனை ஒழிக்க முடியாது. அருள்வழி ஒழுகுதலாவது இறைவன் திருவருளைப்பற்றி நிற்றலாகும். இதனைத் திருவள்ளுவர்,

"அறவாழி அந்தணன்தாள் சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது"

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்"

என்றும் கூறித் தெளிவு படுத்தியுள்ளனர். இறைவனது திருவடிகளைப் பற்றிப் பிறவிநோய் தீர்ப்பதைச் சீவக சிந்தாமணி "நவைசெய் பிறவிக் கடலகத்துள் பாதகமலம் தொழுவேங்கள்" என்றும் "ஆழ்கடல் புணையின் அன்ன அறிவரண் சரண் அடைந்தான்" என்றும், மணிமேகலை,

அறஇயல் கிழவோன் அடிஇணை ஆகிய
பிறவி என்னும் பெருங்கடல் விடூஉம்
அறவி நாவாய்

என்றும், பெரிய புராணம்

இணையில் பவம்கிளர் கடல்கள்
இகந்திட இருதாளின்
புணைஅருள் அங்கணர்

என்றும் திருவிளையாடல்புராணம்,

"பாதமலர் எழுபிறவிக் கடல்நீந்தும்
புணைஎன்பர் பற்றிலாதோர்"

என்றும் கூறுதலால் உணரலாம். இவற்றை உட்கொண்டே, "அருள்வழிச் செலீஇ நோய்ப் பிறவி போக்குவார்" என்றனர். நோய்ப்பிறவி என்பதைப் பிறவிநோய் என மாற்றிக் கொள்ளவும்.

இறைவனது திருவடியே பிறவிக் கடலை நீந்தி முத்திக் கரை அடைதற்குரிய வழி என்பதை அநுபவத்துடன் மணிமொழியார்,

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடம்திரையால் எற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னும் காலால்
கலக்குண்டு காமவான்சுறவின் வாய்ப்பட்டு
இனிஎன்னே உய்யுமாறு என்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதலந்தம் இல்லா மல்லல்
கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே

என்றதும் காண்க.

நோற்றவர் புராணமாவது சரியை கிரியை முதலான' நால்நெறி நின்று முத்திபெற்ற அடியவர்களின் வரலாறு. இத்திருத்தொண்டர் புராணம் பிறவி நோயினைப் போக்கச் விழைவார்க்கு மிகமிக இன்றியமையாதது என்று கூறி இப் புராணத்தின் ஏற்றத்தை உணர்த்தியுள்ளனர் ஆசிரியர்.

பெரிய புராணம் பிறவிநோய் தீர்க்கத்துணையாகும் என்பதைப் பல இடத்தும் சேக்கிழார் வாக்கால் உணரலாம். இயற்பகை நாயனார் புராணத்துள்,

வானவர் பூவின் மாரி பொழியமா மறைகள் ஆர்ப்ப
ஞானமா முனிவர் போற்ற நலமிகு சிவலோ கத்தில்
ஊனமில் தொண்டர் கும்பிட் டுடன்உறை பெருமை
பெற்றார்
ஏனைய சுற்றத் தாரும் வானிடை இன்பம் பெற்றார்

என்றும், சண்டேசுர நாயனார் புராணத்துள்,

ஞாலம் அறிய பிழைபுரிந்து
நம்பர் அருளால் நான்மறையின்
சீலம் திகழும் சேய்ஞலூர்ப்
பிள்ளை யார்தம் திருக்கையிலே
கோல மழுவால் ஏறுண்டு
குற்றம் நீங்கிச் சுற்றமுடன்
மூல முதல்வர் சிவலோகம்
எய்தப் பெற்றான் முதுமறையோன்

என்றும் கூறப்பட்டிருத்தல் காண்க. இங்ஙனம் எல்லாம் அரிய பொருள்களைத் தெரிய வைத்து ஆண்ட பெருமை சேக்கிழார்க்கு இருத்தலின், 'எமை ஆண்ட பெம்மான்' என்றனர்.

சேக்கிழார் பெருமானார் சீவக சிந்தாமணி இடத்தில் வெறுப்புடைய மனத்தர் என்று ஒரு சிலர் கருதக்கூடும் ஆதலின், அத்தகைய தீங்கினையும் மனத்தாலும் கொள்ளாதவர் என்பதை நன்கு உணர்த்தவே "தீது அகம் மதித்திடாச் சேவையர் குலாதிபன்" என்றனர். சேக்கிழார் பெருமானார் சீவகசிந்தமணி இடத்தில் தீங்கான உள்ளம் கொண்டிருப்பாராயின், அந்நூற் பொருள்களில் சிலவற்றைத்தம் நூலில் இயைத்தும்பாடி இருக்கமாட்டார். சிந்தாமணியை அவர் நன்கு பயின்றிருந்தனர் என்பதற்குப் பெரிய புராணத்துள் பல சான்றுகள் உண்டு.

பத்தியின் பாலர் ஆகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமிற் கூடி னார்கள் தலையினால் வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மைபோல விளைந்தன சாலி எல்லாம்

என்னும் சேக்கிழார் வாக்கு,

சொல்லருஞ் சூல்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே

என்னும் திருத்தக்க தேவர் பாடலைத் தழுவியதாகும்.

விடாப்பிடிக்கு உடும்பு உவமையினைக் காட்டிய முதல் புலவர் திருத்தக்கதேவர். இது சீவக சிந்தாமணியில்,

தணக்கிறப் படுத்தபோதும் தான்அளை விடுத்தல்செல்லா
நிணப்புடை உடும்பு அன்னார்

என்றுவருதலைக் காணலாம். இதே உவமையினைச் சேக்கிழார், கண்ணப்ப நாயனார் புராணத்துள் "வங்கினைப் பற்றிப் போகாவல்லுடும்பென்ன நீங்கான்" என்று எடுத்து ஆண்டுள்ளனர். இதுவும் சிந்தாமணியினைத் தழுவியதுதானே. இவ்வாறு உவமை காட்டியவர் திருத்தக்கதேவரைத் தவிர்த்து வேறு எப்புலவர் இலர். ஆகவே, சேக்கிழார் பெருமானார் தம் உள்ளத்தில் தீதுடையரானால் சிந்தாமணியின் கருத்தைத் தழுவிப்பாடி இருப்பரோ? இரார். "தீது அகம் மதித்திடா' என்னும் அடைச் சிறப்பைப் பொதுவாக வேளாளர் குலத்துக்கு ஏற்றிக் கூறினும் பொருத்தமே.

நற்றி றம்புரி பழையனூர்ச் சிவத்தொண்டர் நவைவந்
துற்ற போதுதம் உயிரையும் வணிகனுக் கொருகால்
சொற்ற மெய்ம்மையும் தூக்கிஅச் சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மையில் நிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு

என்று வரும்பாடலில் வேளாளர், தாம் சொன்ன சொல் தவறாது உயிர் கொடுத்தனர் என்பதைப் பார்க்கிறோம்.

உள்ளத்தில் தீமை இருக்குமாயின் சொன்ன சொல்லினைத் தவறி இருப்பர் அல்லரோ. அடுத்தாற்போல,

ஆணை யாம்என நீறுகண் டடிச்சேரன் என்னும்
சேனு வாவுசீர்ச் சேரனார் திருமலை நாட்டு
வாணி லாவுபூண் வயவர்கள் மைத்துனக் கேண்மை
பேண நீடிய முறையது பெருந்தொண்டை நாடு

என்ற பாட்டில், ஒரு பெண்ணைச் சேர நாட்டார் வளர்த்து அதனைத் தொண்டை நாட்டுவேளார்கட்கு மணம் முடித்து கொடுக்கச் சேர நாட்டிற்கும் தொண்டை நாட்டிற்கும் உறவு முறை கொள்ளப்பட்டது. மைத்துனக் கேண்மை நிலைநாட்

டினர் வேளாளர். தம் உள்ளத்தில் தீது இருக்குமானால் நாடோடியாகச் சென்ற பெண்ணை ஏற்றுக் கொண்டு, சேர நாட்டினரோடு மணமுடித்து மைத்துனக் கேண்மையினைக் கொண்டிருப்பாரரோ? இரார். ஆகவே வேளாளர் தீது அகம் மதித்திடாச் சேவையர் குலம் என்பது பொருத்தமே. (96)

6. எய்குன்ற வார்சிலைப் பெருமான் உளத்துவகை
எய்த மறையோர்கள் குழுமி
இயையஉப கரணம்எல் லாம்தகச் சேர்த்தினிய
தென்னும்ஒரு தேத்த மர்ந்து
பொய்குன்ற யாககுண் டத்தழல் எழுப்பமேல்
போயபூம் புகைவா னுடு
பொலியும்உச் சைச்சிரவம் அயிராவ தம்தான்
பொறுத்த நிறம்மே வச்செயா
மெய்குன்ற வந்தவா றென்னெனக் கற்பகம்
வெதும்பப் புரிந்து பின்னும்
விண்ணு ட்டங்கவும் நண்ணு அரம்பையர்
விழித்துணை ஒருங்கி மைப்பச்
செய்குன்றை அம்பதிச் சேவையர் குலாதிபன்
சிறுதேர் உருட்டி யருளே
சிறுகோல் எடுத்தரசு செங்கோல் நிறுத்திடுேன்
சிறுதேர் உருட்டி யருளே

[அ. சொ.] எய்-அம்பைச் செலுத்தும், குன்றவார்ச் சிலைப் பெருமான்-மேருமலையையே நீண்ட வில்லாகக் கொண்ட சிவனார், உள்ளத்து-மனத்தில், உவகை-மகிழ்வு, எய்த-வர, குழுமி-கூடி, இயைய பொருந்த, உபகரணம்-யாகத்திற்கு வேண்டிய துணைக் கருவிகள், தக-பொருந்த, தேத்து-இடத்து, குன்ற-நீங்க, வானுடு-தேவலோகத்தில், பொலியும்-விளங்கும், உச்சைச் சிரவம்-தேவ லோகக் குதிரை, அயிராவதம்-தேவலோக யானை, மெய்-உடல்,

செயா-செய்து, வெதும்ப-வருந்த, நண்ணு-கூடி, அரம்பையர்-தேவமாதர், அடங்கவும்-முழுவதும்.

**விளக்கம்:** இறைவன் மேருவினை வில்லாகக் கொண்டவன் ஆதலின், குன்றவார் சிலைப் பெருமான் என்றனர். பொருப்பு வில்லார் கையினர், "குன்றம் வில்லா" என்று திருமுறைகளில் வரும் தொடரைக் காண்க.

இறைவர் மேருவினை வில்லாகவளைத்துக்கொண்டது குறித்துப் பல விதக் கற்பனைகள் புலவர்கள் உள்ளத்தில் உதித்தன.

அப்பர் இறைவர் மேருவினை வில்லாக, வளைத்த நிகசிழ்ச்சியினை உளத்தில் கொண்டும், இறைவர் இடப்பாகத்தில் உமை இருப்பதையும் மனத்தில் கொண்டும், 'இறைவா நீமலையாம் வில்லை வளைத்து இடக்கையில் பிடித்து, அக் கையை முன் நீட்டி நிறுத்தி, வலக்கையில் அம்பைப்பிடித்து நாணை இழுக்கும் போது பின் நிறுத்தி, முப்புரம் எரிக்கச் சென்றனை இடக்கை உமா தேவின் கையன்றோ? வலக்கை உன்னுடைய தன்றோ? இந்நிலையில் முன் நிற்பது உமா தேவியின் கையாதலின் முப்புரம் எரித்தது உனது வீரத்தால் நிகழ்ந்து என்று எப்படிச் சொல்லக் கூடும்? நன்று நன்று உனது சேவகம் என, எள்ளி நகையாடுவார் போல,

> கற்றூர் பயில்கடல் நாகைக்கா
> ரோணத்தெம் கண்ணுதலே
> விற்றூங் கியகரம் வேல்நெடுங்
> கண்ணி வியன்கரமேல்
> நற்றூள் நெடுஞ்சிலை
> நாண்வலித் தகரம் நின்கரமே
> செற்றூர் புரம்செற்ற சேவகம்
> என்னைகொல் செப்புமினே

என்று பாடியுள்ளார். தகரம் என்னும் சீரின் தகரத்தை விட்டிசைக்க. இன்றேல் வெண்டளை கெடும்.

குமரகுருபரர் மேருவாகிய மலை ஏன் வளைந்தது என்பதனைத் தம் கற்பனை நயம் தோன்றக் கூறவந்த இடத்தில்,

வெண்ணிலவு கொழித்தெறிக்கும் செஞ்சடைமோ
 லியர்வீதி விடங்கர் ஆரூர்க்
கண்ணுதல்பொன் புயவரைசேர் தனவரைகள்
 இரண்டவற்றுள் கனக மேரு
அண்ணல்புய வரைக்குடைந்து குழைந்துதலை
 வணங்கிடுநம் அன்னை பார
வண்ணமுலைத் தடவரைஅவ் வரைகுழையப்
 பொருவதல்லால் வணங்கி டாதே

என்றனர். அதாவது இறைவரது தோளுக்கு நிகராகாத காரணத்தால் நாணத்தால் தலைவணங்கியதுபோல் மேரு வளைந்தது என்பதாம்

இறைவன் எரிஓம்பலை விரும்புதற்குக் காரணம், அவ் வெரி இறைவனாகியதன் உரு என்பதனால் என்க. "எரி பெருக்குவர் அவ்வெரி ஈசனது உரு" என்னும் அப்பர் வாக்கை அறிக.

யாகாதி காரியங்களை மறையவர் செய்வதற்குப் பல காரணங்கள் உண்டு. நாட்டில் வறுமை நீங்க யாகம் புரிவர். இதனைத் திருஞானசம்பந்தர்,

கற்றாங்கு எரிஓம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பலம்

என்று குறிப்பிட்டுள்ளதைக் காணவும். எனவே, ஈண்டு "பொய் குன்றயாகம் புரிந்தனர்" என்றனர்.

யாக குண்டம் தக்க இடத்தில், திசை அமைப்புக்கள் பொருந்த அமைக்க வேண்டியது முறை ஆதலின், "இனிய தொன்றும் ஒரு தேத்து" என்றனர். யாகத்திற்கு வேண்டிய உபகாரணங்கள் தருப்பை, சமித்து, நெய், அகப்பை, ஓம திரவியங்கள் முதலானவை. இவ்வாறு யாகப் பொருள்களைச் சேர்த்து யாகாதிகாரியங்களை வேதியர்கள் செய்வது இறைவன் மகிழவே ஆகும் என்பது, "பொருமான் உளத்து உவகை எய்த" என்ற தொடரால் விளங்குகிறது. உச்சைச் சிரவம்,

என்பது இந்திரலோகத்தில் உள்ள குதிரை. அயிராவதம் என்பதும் இந்திர லோகத்தில் உள்ள யானை. இவ்விரண்டும் திருப்பாற் கடலில் தோன்றியவை. இரண்டும் வெண்ணிறமுடையவை. ஐயிராவதம் இரண்டாயிரம் தந்தங்களையுடையது. இதன்மேல் இந்திரன் ஊர்ந்து செல்வன். இறைவனுக்கு உரிய யானை ஐராவணம் எனப்படும். இதனை அப்பர் "ஐராவணம் ஏறாது ஆன் ஏறு ஏறி" என்று குறிப்பிட்டிருப்பது கொண்டு உணர்கின்றோம். இதற்கு நாலாயிரம் தந்தங்கள் உண்டு.

ஈண்டுத் திரு பிள்ளை அவர்கள், வேதிய செய்யும் வேள்வியில் எழும் புகை வெண்ணிறமுடைய உச்சைச் சிரவம் என்னும் வெள்ளைக் குதிரையின் நிறத்தையும், ஐராவதம் என்னும் வெள்ளை யானையின் நிறத்தையும் கருமை ஆக்கியதாகவும், அவ்வாறே அப்புகை கற்பக விருட்சத்தின் இயற்கைத் தன்மையினை மாற்றியதாகவும் கூறிப் புகையின் மிகுதிப் பாட்டை விளக்கியுள்ளனர். புகையின் மென்மைத் தன்மையினைப் பூம்புகை எனப் புகைக்கு அடை கொடுத்துப் பேசினர். மெல்லிய ஆடைக்குப் பூம்புகையினை உவமை கொடுத்துப் பேசுவர் நம் முன்னோர். இப்புகை தேவலோக விலங்குகளையும், மரத்தையும் மட்டும் வேறு படுத்தியதோடு நில்லாமல், தேவலோகம் முழுவதும் பரவி இமை கொட்டாத அரம்பை மாதர் கண்களிலும் புகுந்து, அவர்கள் கண்களையும் இமைக்கும்படி செய்ததாம்.

ஈண்டுத் திரு பிள்ளை அவர்கள் யாகப் புகை வானோடு அளவு சென்றதை "மேல் போய பூம் புகை' என்றனர். இக் கருத்துக் கந்த புராணத்தில் வரும்,

> பூசு காந்தமும் நானமும் பொய்கையில்
> வாச நீர்எங்கும் ஆகி மணம்கமழ்ந்
> தாசை எங்கும் உலாவிஅவ் வானவர்
> நாசி யூடு மடுத்து நடந்தவே

என்னும் பாட்டைப் போன்றது என்க. ஈண்டு நீரின் மணம் தேவர்களின் மூக்கைத் துளைத்தது எனப்பட்டது. திரு பிள்ளை

அவர்கள் பாட்டில் புகை தேவர் உலகு சென்று சில மாற்றங்களைச் செய்தது. என்பதாம்.

இப்பாட்டில் குன்றத்தூர் மறையவர்கள் இறையவன் உவப்ப, யாகாதி காரியங்கள் செய்யும் பண்பாளர் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

பிராம்மணர்கட்குரிய தொழில் ஆறு: அவை ஓதல், ஓதுவித்தல், ஈதல், ஏற்றல், வேட்டல், வேட்பித்தல் என்பன. இவற்றுள் வேட்டல் என்பது யாகாதி காரியச் செய்தலாகும். இந்த யாகாதி காரியங்கள் செய்வதே தமது சீரிய கடமை என்பதைச் சுந்தரர், ''கலிவலம் கெட ஆர் அழல் ஓம்பும்'' ''கற்ற நான்மறை முற்றனல் ஓம்பும்'' என்று புகழ்ந்து கூறியுள்ளார். திருஞான சம்பந்தர் ''நெய் தவழ் மூவெரி காவல் ஓம்பும் நேர்புரி நூல் மறையாளர்'' என்றும், 'மூன்று கனலும் ஓம்பி எழுமையும் விழுமியரால்'' என்றும், பிராமணர்கள் தீ மூன்று ஓம்பும்'' என்றும் பாடி அறிவித்துள்ளனர்,

பிராம்மணர்கள் இன்னின்ன அறிந்திருக்க வேண்டும் என்பதையும் திருஞான சம்பந்தர்,

மணந்திகழ் திசைகள் எட்டும் ஏழ்இசையும்
மலியும்ஆ றங்கம் ஐவேள்வி
இணைந்தநால் வேதம்மூன் றெரியிரண்டு
பிறப்பென ஒருமையால் உணரும்
குணங்களும் அவற்றின் கொள்பொருள்
குற்றமற்ற வையுற்றதுட் எல்லாம்
உணர்ந்தவர் வாழும்ஓம மாம்புலி
ஊருடை யவர்வட தளிஅதுவே

என்று கூறியுள்ளனர்.

நகரில் பிராம்மணர்கள் வாழ்வது ஒரு சிறப்பு என்பதை நமது வைதிக உலகம் எடுத்து இயம்பும். இதனைச் சேக்கிழார், ''ஏய்ந்த சீர் மறையோர் வாழும் எயில்பதி கடவூர் ஆகும்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

வேதியர்சள் யாகாதி காரியங்கள் செய்கிறபோது ஓம தூமம் மிகுதியாக ஏழும் என்பதைச் சேக்கிழார் "உளங் கொள் மறை வேதியர் தம் ஓம தூமத் திரவும்" என்று குறிப்பிட்டுள்ளனர். தூமத் திரவும் என்றதனுல் புகையின் கருமையினையும் மிகுதியையும் அறியலாம்.

வேதியர்கள் எவ்வாறு வேள்வி செய்வர் என்பதைச் சேக்கிழார் இயற்கை வளத்தைக் கூறும்போது அழகுறப் பாடிக் காட்டி உள்ளனர்.

பரந்தவிளை வயல்செய்ய
பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில்வளர் தேமாவின்
கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரநீள் இலைக்கடையால்
ஒழுகுதலால் நெடிதவ்வூர்
மரங்களும்ஆ குதிவேட்கும்
தகைஎன மயணந்துளதால்

என்னும் பாடலைப் படித்துணரவும்.

இன்னேரன்ன வேள்விக் கருத்துக்களை உளம் கோண்டே, திரு. பிள்ளை அவர்கள் "எய்குறை***பூம்புகை வானுடு பொலியும்" என்றனர். (97)

7. புழுங்கும் கதிர்ப்பருதி எழமுறுக் குடைமுகப்
புண்டரீ கத்த டத்துப்
பொலிதரச் சூழ்ந்துநிற் கின்றதரு விடபமலர்
பொழிமது முழுக்க வீழ்ந்தே
எழுங்குங் குமத்தோள் இணைந்தமுலை யார்கள்கன
இரதம்அன் றென்று நீங்க
எறிதிரை கொளும்காலை அளவில்ஓ திமம்ஆங்கண்
எய்திப் படிந்து துளையா
வழங்கும் தரத்தவாய் மேல்எழமுன் நீங்கிஓர்
ஆகம்முழு வதும்ந னைந்தே
அருமைவெண் முகில்செய்ய தேன்பொழிதல் எனவியந்
தாகாயம் நோக்கி நிற்கும்
செழுங்குன்றை அம்பதிச் சேவையர் குலாதிபன்
சிறுதேர் உருட்டி யருளே
சிறுகோல் எடுத்தரசு செங்கோல் நிறுத்திஞேன்
சிறுதேர் உருட்டி யருளே

*[அ.சொ.] புழுங்கும்-வெப்பம் செய்யும். கதிர்-ஒளி பரிதி-சூரியன், முறுக்குடை-முறுக்கு அவிழும், புண்டரீகத் தடம்-தாமரைக் குளம், பொலிதர-விளங்க. தரு-மரங்கள், விடபம்-கொம்பு, கிளை, மது-தேன், குங்குமம்-செஞ்சாந்து, கனவிரதம்-நீர், (கனம்-மேகம், ரதம்-ரசம்) திரை-அலை, ஓதிமம்-அன்னம், எய்தி, அடைந்து, துளையா-குடைந்து நீராடி, தரத்தவாய்-தன்மையுடையதாய், ஆகம்-உடல், முகில்-மேகம் அழுங்கும்-ஆரவாரம் செய்யும்.*

**விளக்கம்:** *தாமரையை முகத்திற்கு உவமை கூறுதல் கவி மரபு ஆதலின், முகப்புண்டரீகம் என்றனர். முகம் போன்றது புண்டரீகம் என்பதை நளவெண்பாவில் அழகுற,*

*"பொன்னுடைய வாசப் பொகுட்டு மவர்அலைய*
*தன்னுடனே மூழ்கித் தனித்தெழுந்த—மின்னுடைய*
*பூணுள் திருமுகத்தைப் புண்டரீகம் என்றயிர்த்துக்*
*காணு தயர்வானைக் காண்"*

என்று பாடப்பட்டிருப்பது காண்க. சூரியன் வரத் தாமரை மலரும் என்பது பலமுறை கூறப்பட்டதை ஈண்டு நினைவு கூர்க.

தாமரை போன்ற முகம், முகம்போன்ற தாமரை என்ற குறிப்பை மிக்க அழுகு பொருந்த கம்பர்,

செய்யதா மரைகள் எல்லாம்
தெரிவையர் முகங்கள் பூத்த
தையலார் முகங்கள் எல்லாம்
செய்ய தாமரை பூத்த அன்றே

என்று பாடினர்.

தாமரைக் குளத்தில் மாதர்கள் நீராடத் தம் முகங்களை மட்டும் மேலே காட்டித் தம் உடம்பு நீரில் மறையக் காட்சி தந்த குறிப்பே இவ்விரு அடிகளின் கருத்தாகும்.''

நீர் தன்னிடம் கலக்கும் பொருள்களால் தன்னிலை கெடும் என்பதையும் கம்பர்,

ஆன தூயவ ரோடுடன் ஆடினர்
ஞான நீரவர் ஆகுவர் நன்றரோ
தேனும் நாவியும் தேக்ககில் ஆவியும்
மீனும் நாறின வேறினி வேண்டுமோ

என்று பாடியுள்ளனர். நீரின் மாற்றத்தை வேறு முறையிலும் கம்பர்,

கதம்ப நாள்விரை கள்ளவிழ் தாதொடும்
ததும்பு பூந்திரைத் தண்புனல் சுட்டதால்
நிதம்ப பாரத்தோர் நேரிழை காமத்தால்
வெதும்பு வாள்உடல் வெப்பம் வெதுப்பவே

என்று பாடி இருத்தலையும் காண்க.

மாதர்கள் நீராடிக் கொண்டிருக்கையில் ஏதேனும் காரணம் காட்டிக் கரை ஏறுதல் இயல்பு. கந்தபுராண ஆசிரியராம் கச்சியப்ப சிவாசாரியார் மாதர் கரையேறியதற்குக் கூறுங் காரணம்,

தத்தையை அனைய சொல்லாள்
  ஒருத்திதன் நிழல் தன்னை
அத்தடம் தன்னில் நோக்கி
  அளியனை அறியா நீண்டோர்
மைத்தடம் கண்ணி ஞானை
  மருவினை என்று கேள்வன்
கைத்தலம் தன்னை விட்டு
  வெகுண்டனள் கரையில் போனாள்.

என்பதாம்.

இத்தகைய காவியச் சுவை ததும்பும் நிலையை உட் கொண்டுதான் திரு. பிள்ளை அவர்கள், ''மது முழுக்க, வீழ்ந்தே எழுங்குங்குமத் தோள் இணைந்த முலையார்கள் கன இரதம் அன்று என்று நீங்க'' என்றனர்.

இப்பாடலில் திரு. பிள்ளையவர்கள் மலர்த்தேனின் மிகுதியினைப் புலப்படுத்துகின்றனர். மாதர்கள் குளத்தில் நீராடுகின்றனர். அந்நீர் நீராக இன்றித் தேனாக இருந்தது. இதற்குக் காரணம் குளக்கரையில் இருந்த மரம் தன்னகத் துள்ள மலர்வழி தேனைக் குளத்தில் பொழிந்ததால் என்க. இதனை உணர்ந்து மாதர்கள் குளத்தில் நீராடுதலை விடுத்துக் கரை ஏறினர். மாதர்கள் நீர் நிலைகளில் நீராடும் சிறப்பினைச் சுந்தரனார் ''தையல் மடவார்கள் உடையவிழக் குழல் அவிழக் கோதை குடைந்தாடக் குங்குமங்கள் உந்தி வரும் கொள்ளிடத்தின் கரைமேல்'' என்று பாடியுள்ளது கொண்டு உணரலாம். நீரில் அன்னங்கள் திளைத்தலையும் சுந்தரர், ''அரும்புயர்ந்த அரவிந்தத் தனிமலர்கள் ஏறி, அன்னங்கள் விளையாடும் அகன்றுறையின் அருகே'' எனப் பாடியிருக்கும் அழகைக் காண்க. இதனைத்தான் ''ஓதிமம் ஆங்கண் எய்திப் படிந்துதுளையா'' என்றனர்.

மாதர்கள் கரை ஏறியதோடு இன்றி, அன்னங்களும் குளத்தில் படிந்து தம் உடல் முழுதும் தேன்மயமாக நனைந்து இருக்கக் கண்டு, ''என்னே வெண்ணிற மேகம் நீர் மழை

யினைப் பொழியாது, தேன் மழையினைப் பொழிகிறதே" என்று வியந்து ஆகாயத்தை நோக்கின என்னும் கற்பனை திரு பிள்ளை அவர்களின் நுண்ணறிவுத் திறனைக் காட்டுகின்றது. இவ்வாறு அஃறிணைப் பொருள்கள் ஒன்றை ஒன்றாக மயங்கி ஆகாயத்தை நோக்குதலைத் திருஞான சம்பந்தர்,

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட் டைம்மேல் உந்தி
அலமந்த போதாக அஞ்சேல்என்
றருள்செய்வான் அமரும் கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழைஎன் றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரம்ஏறி
முகில்பார்க்கும் திருவை யாறே

என்று பாடியுள்ளார். இப்பாடல் நினைவே, பிள்ளை அவர்களை இவ்வாறு பாடச் செய்தது என்பதில் ஐயம் உண்டோ?

நீர் நிலையில் அன்னங்கள் மிகுதியும் இருக்கும் என்பதைத் திருஞான சம்பந்தர் படம் எழுதிக் காட்டுவார்போல,

செறிஇதழ்த்தா மரைத்தவிசில் திகழ்ந்தோங்கும்
இலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்
தெறிகதிர்ச் சாமரை இரட்டஇள அன்னம்
வீற்றிருக்கும் மிழலை ஆமே

என்று பாடிக் காட்டினர்.

கம்பரும் நீர் நிலையில் அன்னத்தின் மிகுதியினை, "சேலு கண்ட ஒண்கணாரில் திரிகின்ற செங்கால் அன்னம் மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப்பிள்ளை காலுண்ட சேற்று மேதி, கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த பாலுண்டு துயிலப் பச்சைத் தேரை தாலாட்டும், பண்ணை" என்ற பாடலால் விளக்கினர்.

இப்பாடல் வழி குன்றத்தூரின் நீர் வளத்தைக் குறித்துள்ளார் ஆசிரியர். (98)

8. வெங்கடிய ஆணவ மலக்குருட் டிருள்உளம்
வெரீஇப் பதறிஓட் டெடுக்கும்
வெண்ணீறு சாதனம் விழைந்தவர்தம் முககமலம்
மேவுற் றெருங்கு மலரும்
பங்கமுற மேவுபர சமயர்வாய் ஆம்பல்பல
வும்துயர்அ மைந்து குவியும்
பரவுவே தாகம புராணம்எனும் மங்கலப்
பணிமிக் கெழுந்தொ லிக்கும்
அங்கலுழும் மாதரார் ஊடலின் எறிந்தகுழை
அன்றித் தடுப்பார் இலர்
அவைகளையும் அகலுற அகற்றினேம் மண்ணகத்
தமைய எழுகின்ற தாய
செங்கதிர் எனச்சொலச் சேவையர் குலாதிபன்
சிறுதேர் உருட்டி யருளே
சிறுகோல் எடுத்தரசு செங்கோல் நிறுத்தினேன்
சிறுதேர் உருட்டி யருளே.

*[அ.சொ.] வெங்கடிய-மிகக் கடிய, உளம்-மனம், வெரீஇ-அஞ்சி, பயந்து, ஓட்டெடுக்கும்—விரைந்தோடும் சாதனம்-அடையாளம், விழைந்தவர்-விரும்பியவர், பங்கம் இழிவு, சேறு, ஆம்பல் - ஆம்பல் மலர், சைவர்கட்குச் சாதனம் விபூதி உருத்திராக்கம், பரவு-போற்றும், ஆகமம்-சைவர்கட்குரிய சைவ ஆகமம், பணி-வாத்தியம், ஊடலில்-கணவனுடன் சிறு பிணக்கம் கொண்டபோது, குழை - காதணி, மண்ணகத்து-பூலோகத்தில், செங்கதிர்-சூரியன்.*

*விளக்கம்: ஆணவ மலத்தின் தன்மை இன்னது என் பதை, "அறிவு தொழில் இச்சையினைத் தடுக்கும் ஆணவம் ஒன்று" என்று சிவநெறிவிளக்கமும், "ஏகமாய்த் தம் கால எல்லைகளின் மீளும் எண்ணரிய சத்தியதாய் இருள் ஒளிர இருண்ட மோகமாய்ச் செம்பின் உறுகளிம் பேய்ந்து நித்த மூலமலமாய அறிவு முழுதினையும் மறைக்கும்" என்று சிவப் பிரகாசமும்,*

ஒன்றதாய் அநேக சத்தி
  உடையதாய் உடனாய் ஆதி
அன்றதாய் ஆன்மா வின்தன்
  அறிவொடு தொழிலை ஆர்த்து
நின்றபோத் திருத்துவத்தை
  நிகழ்த்திச்செம்பி னில்க ளிம்புபேய்ந்து
என்றும்அஞ் ஞானம் காட்டும்
  ஆணவம் இயைந்து நின்றே

என்று சிவஞான சித்தியாரும் கூறுதல் காண்க. இப் பாசம் இருள் வடிவினதாதலின், "வெங்கடிய ஆணவ மலக் குருட்டு இருள்" என்றனர். பாசம் இருள் என்றதனால், பதி ஒளி உடையது என்பது பெறப்படுகின்றதன்றோ? திருவெண்ணீற்றுச் சாதனமும் மலத்தை ஓடும்படி செய்யும் என்ற குறிப்பே மூன்று வரிகளினில் அறியப்படுவதாகும்.

மும்மலங்களை நீறு செய்வதனால் நீறு என்ற பெயர் பெற்றதாக "நீறு புனைவார் வினையை நீறு செய்வதாலே, வீறுதனி நாமமது நீறெனவிளம்பும்" என்று கூறப்படுதலால் அறியலாம். மேலும் வள்ளலார்,

துயில்ஏறிய சோர்வும்கெடும் துயரம்கெடும் நடுவன்
கையிலேறிய பாசம்துணி கண்டேமுறித் திடுமால்
குயிலேறிய பொழில்சூழ் திருக்குன்றே றிநடக்கும்
மயிலேறிய மணியேஎன வளர்நீறணிந் திடிலே

என்றும் கூறுதலால் வெண்ணீற்றுச் சாதனத்தால் மலம் இரிந்தோடும் என்பது பெற்றாம்.

உலகில் தாமரை மலரும்போது ஆம்பல் குவியும் என்பதை நாம் பார்க்கிறோம். தாமரை பகலில் சூரியனைக் கண்டதும் மலரும். ஆம்பல் சூரியனைக் கண்டதும் குவியும். இதுபோல ஞானசூரியனும் சேக்கிழார் பெருமானாரைக் கண்டதும் பரசமங்களாகிய ஆம்பல்கள் குவிந்தன எனச் சேக்கிழாரது மாண்பினைக் குறித்தனர் ஆசிரியர்.

சைவ சமயப் பெரியவர்கள் தோன்றும் காலத்து அகச் சமயத்தவர்கட்கு ஆனந்தமும், புறச் சமயத்தவர்கட்குத் துன்பமும் ஏற்படுதல் இயல்பு. இதனை நமது சேக்கிழார் திருஞான சம்பந்தர் புராணத்துள் நன்கு எடுத்து விளக்கி யுள்ளனர்.

அருக்கன்முதல் கோள்அனைத்தும்
அழகிய உச்சங்களிலே
பெருக்கவலி யுடன்நிற்கப்
பேணியநல் ஓரைஎழத்
திருக்கிளரும் ஆதிரைநாள்
திசைவிளங்கப் பரசமயத்
தருக்கொழியச் சைவமுதல்
வைதிகமும் தழைத்தோங்க

தொண்டர்மனம் களிசிறப்பத்
தூயதிரு நீற்றுநெறி
எண்திசையும் தனிநடப்ப
ஏழுலகும் குளிர்தூங்க
அண்டர்குலம் அதிசயிப்ப
அந்தணர்ஆ குதிபெருக
வண்தமிழ்செய் தவம்நிரம்ப
மாதவத்தோர் செயல்வாய்ப்ப,

திசைஅனைத்தின் பெருமைஎலாம்
தென்திசையே வென்றேற
மிசைஉலகும் பிறஉலகும்
மேதினியே தனிவெல்ல
அசைவில்செழும் தமிழ்வழக்கே
அயல்வழக்கின் துறைவெல்ல
இசைமுழுதும் மெய்அறிவும்
இடங்கொள்ளும் நிலைபெருக

அவம்பெருக்கும் புல்அறிவின்
அமண்முதலாம் பரசமயம்
பவம்பெருக்கும் புரைநெறிகள்
பாழ்படநல் ஊழிதொறும்

தவம்பெருக்கும் சண்மையிலே
தாவில்சரா சரங்கள்எலாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார்
திருவவதா ரம்செய்தார்

என்னும் பாடல்களைப் படிக்க. இக் கருத்தினை மனத்தில் கொண்டே திரு பிள்ளை அவர்கள், "வெண்ணீறு சாதனம் விழைந்தவர் தம் முக கமலம்மே வுற்று ஒருங்குமலரும் பங்க முற மேவு பரசமயர்வாய் ஆம்பல்பலவும் துயர் அமைந்து குவியும்'' என்று கூறியுள்ளனர்.

ஈண்டு வேதம், ஆகமம், புராணம் என்பன மங்கள வாத்தியங்களாகக் குறுப்பிடப்பட்டன. வேதம் பொது நூல். ஆகமம் சிறப்பு நூல். இந்த உண்மையினை,

வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன் நூல்
ஓதும் பொதுவும் சிறப்பும்என் றுள்ளன
நாதன் உரைஅவை நாடில் இரண்டந்தம்
பேதமே தென்பர் பெரியோர்க் கபேதமே

என்ற திருமூலர் வாக்கைக் கொண்டு உணரலாம்.

வேதங்கள் அறத்தைப்பற்றி ஓதுபவை. இதனை,

வேதத்தை விட்ட அறம்இல்லை வேதத்தின்
ஓதத் தகும்அறம் எல்லாம் உளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற் றார்களே

என்றும்,

ஆகமம் இறைவன் திறம் பேசவல்லது என்பதை,

அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண் கோடிநூ றாயிரம்
விண்ணவர் ஈசன் விருப்பம் உரைத்தனர்
எண்ணிநின் றப்பொருள் ஏத்துவன் நானே

என்றும் திருமந்திரம் வேதாகம உண்மைப் பொருளை விளக்குதல் காண்க.

புராணம் என்பது பழைய வரலாறு. அது வேதஆகமப் பொருள்களை வரலாற்று வழி எடுத்துக்காட்டும் நூலாகும்.

மாதர் என்னும் சொல் மாது+அர் என்று பிரியும். மாது என்னும் சொல்லிற்கு அழகு என்பதே பொருளாதலின், அவ் வழகுடையாரை மாதர் என்றனர். சில குற்றியலுகரம் அர் என்பது சேர்ந்து ஈற்றுப் போலிக்கு உதாரணமாக அமையும். அங்ஙனம் அமைந்த மொழியே மாதர் என்பது. ஆகவே, அம்கலுழும் மாதரார் என்றனர். மாதர்கள் குழைகளைக் கழற்றி எறிவர் என்பதைப் புலவர் கூறும் கற்பனை மரபாகும். இதனை "நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும் கோழி எறிந்த கொடுங்கால் கனம்குழை" என்று பட்டினப் பாலையில் வருதலைக் காணவும். இக்குழைகளே வீதியில் செல்வாரைத் தடுக்கும் என்பதும் புலவர் கூறும் வழக்கமாகும். இதனையும் அப்பட்டினப்பாலை "கனம்குழை பொன்கால் புதல்வர் புரவியின் றுருட்டும் முக்கால் சிறுதேர் முன்வழி விலக்கும்" என்று குறிப்பிடுகிறது. இதை உளத்தில் கொண்டே, "குழை அன்றித்தடுப்பார் இலர்" என்றனர்.

சேக்கிழாராம் குழந்தை சிறுதேர் உருட்டற்கு மாதர் எறிந்த குழைதடை செய்யும் ஆதலின், அதனையும் அகற்றி னோம்; இனித் தடையின்றி உமது தேரை உருட்டலாம்; ஆக உருட்டி அருள்க என்று வேண்டுவராயினர். ஈண்டுச் சேக்கிழார் மண்ணகத்துச்சூரியனாகக் கூறப்பட்டிருப்பதைக் காண்க. (99)

9. சுவைஅமையும் மோதகம் கனிபலவும் மற்றவும்
துப்பிமுக வற்கு நல்கித்
தொழுஅமுது செய்தலால் ஊறென்ப திந்தநகர்
சூழ்நக ரினும்பு காது
நவையதடை யாதென்னின் அச்சுமுதல் வலியவே
நவிலவேண் டுவதி னிஎவன்
நன்னுதல் திருநீறு நிலவெறிக் கக்குழை
நலம்கொண் மணி வெயில்எ றிக்க
அவைஅகம் வியக்கும்முப் புலவர்அருள் முக்கனி
அருந்தமிழ்ச் சுவைஅ ளைத்தும்
ஆராய்ந் தெடுத்துப்பல் செய்யுள்முக மாஅறிய
அறிவித்த பெருநா வலன்
சிவைஉதவு சொல்கொண்ட சேவையர் குலாதிபன்
சிறுதேர் உருட்டி யருளே
சிறுகோல்எடுத்தரசு செங்கோல் நிறுத்தினோன்
சிறுதேர் உருட்டி யருளே.

*[அ. சொ.] மோதகம்-கொழுக்கட்டை, தும்பி முகவன்-யானை முகம்கொண்ட விநாயகர், நல்கி-தந்து, ஊறு-துன்பம், நவை-குற்றம், அச்சு-உருள்கோத்தமரம் நுதல்-நெற்றி, நிலவு-ஒளி, எறிக்க-வீச, அவையகம்-கற்றோர் கழகம், முப்புலவர்-அப்பர், சுந்தரர், சம்பந்தர், முக்கனி-மா, பலா, வாழை, என்னும் மூன்று பழங்கள், செய்யுள் முகமா-பாடல் வழியாக, சிவை-பராசத்தி, சூழ்நகர்-புறநகர், எவன்-என்னை என்னும் பொருள் தரும் வினா இடைச்சொல், சொல்-நெல்.*

**விளக்கம்:** *மோதகம் கொழுக்கட்டை. இதில் இனிப்புடைய பூரணம் உள் வைத்துச் செய்யப்படுதலின், சுவை அமையும் மோதகம் என்றனர். மோதகம் விநாயகப் பெருமானுக்கு உரிய உகந்த பொருள்களுள் ஒன்று. விநாயகப் பெருமான் உகக்கும் பொருள்கள் இன்ன என்பதை*

அருணகிரியார் குறிப்பிடும்போது, "நிறைகனி அப்பமொ டவல்பொரி" என்றும்,

இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப்ப ருப்புடன்நெய்
எட்பொரிய வல்துவரை இளநீர்வண்
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழம்இ டிப்பல்வகை தனிமூலம்
மிக்கஅடி சில்கடலை பட்சணம் எனக்கொள்

என்றும் கூறுதல் காண்க. இதனால்தான் "மோதகம் கனி பலவும் மற்றவும்" என்றனர்.

கிருஷ்ணன் விநாயகரை 'மகிழ்விக்க எந்தெந்தப் பொருள்களைப் படைத்து இறைஞ்சினான் என்பதைச் காஞ்சிப்புராணம்,

கண்ணனும்மற் றினிஎன்னே செயல்என்று கடுகச்சென்
றுண்ணமைந்த பாலடிசில் கனிவருக்கம் உறுசுவைய
பண்ணியங்கள் எனைப்பலவும் அழுதுசெயப் படைத்
திறைஞ்ச
அண்ணல்வயப் பகட்டேந்தல் அத்தொழிலின்
மகிழ்ந்திருந்தான்

என்று கூறுகிறது.

குன்றத்தூர் வாசிகள் விநாயகப் பெருமான் மகிழும் வண்ணம் அவர்க்கு வேண்டியவற்றை ஈந்து வழிபடுதலின், அவ்வூர்க்குத் துன்பமும் குற்றமும் அடையா. இவ்வூர்க்கு மட்டும் அன்று. இவவூரைச் சூழ்ந்த புறநகர்க்கும் மேலே கூறிய தீங்குகள் வரா என்ற உறுதிப்பாட்டை முதற்கண் அறிவித்துள்ளனர். ஆகவே, சேக்கிழார் தமது சிறு தேரைத் தடையின்றி உருட்டலாம். ஊறுபாடோ, நவையோ வந்துறா. இவ்விரண்டையும் தம்மை வழி படாதவர்க்கு வருவிக்கும் விநாயகப் பெருமானுக்கு வழிபாடு ஆற்றிவிட்டனர் என்பதைத் தெளிவுறக் கூறியுள்ளனர்.

அச்சுமுதல் வலியவே என்றதன் குறிப்புச் சேக்கிழாரது தேரின் அச்சு, விநாயகரைக் குன்றத்தூர் வாசிகள் வழிபட்ட

காரணத்தால் முறிவுறுது வன்மையுடன் திகழும் என்பதாம். பிள்ளையாரைத் தேவர்கள் நினைந்து வழிபடாத காரணத்தால்தான் அவர்கள் பொருட்டு முப்புராதிகளை அழிக்கச் சிவபெருமான் ஏறிச்சென்ற தேரின் அச்சு முறியுமாறு விநாயகர் செய்தனர் என்ற குறிப்பினையும் உள்ளத்தில் கொண்டே, "அச்சு முதல் வலியவே" என்று குறிப்பிட்டனர் என்க.

விநாயகர் சிவபெருமான் ஏறியிருந்த தேரின் அச்சு முறியச் செய்ததை அருணகிரியார், "முப்புரம் எரி செய்த அச்சிவன் உரை ரதம் அச்சது பொடி செய்த அதிதீரா" என்றனர்.

"நீறு இல்லா நெற்றி பாழ்" என்று ஔவையார் கூறி இருத்தலின், நீறு நெற்றிக்கு இன்றியமையாதது ஆயிற்று அத்தகைய நீற்றை அணியும் பேற்றினை "நெற்றி பெற்றமையின், அதனை நல்நுதல்" என்றனர். திருநீறு ஒளியுடையது என்பது முன்பே விளக்கப்பட்டது. குழை என்பது காதணி. மணி என்பது உருத்திராக்க மாலை. நலம் கொள்மாமணி. என்றதன் காரணம், அக்க மணியின் சிறப்பினைக் காட்ட ஆகும். அக்க மாலையின் சிறப்பும் முன்பு விளக்கப்பட்டது. இதுவும் ஒளி வீசியது என்றனர்.

முப்புலவர் ஆவார் ஆளுடைய அரசர், ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய நம்பிகள். இவர்கள் வையகம் வியக்கும்நிலையில் உள்ளவர் என்பதைக் கூறவேண்டியதே இல்லை. இதனை உலகம் நன்கு அறியும். மாணிக்கவாசகரும் உலகத்தாரால் வியத்தற்குரியர்.

வையகத்தார் இவர்களை வியந்துள்ளனர் என்பதற்குப் பல சான்றுகளை எடுத்துக் காட்டலாம்.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறுஎங்கே மாமறைநூல் தான்எங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே

என்று ஒரு புலவர் வியந்து கூறியதைக் காண்க. சிவப் பிரகாச சுவாமிகள் இந் நால்வர் மீது நால்வர் நாண்மணி மாலை என்னும் நூலையே பாடியுள்ளனர். இராமலிங்க சுவாமிகள் இந்நால்வர் மீது, தனித்தனியாக ஆளுடைப் பிள்ளையார் அருள்மாலை, ஆளுடைய அரசுகள் அருள்மாலை, ஆளுடைய நம்பிகள் அருள் மாலை, ஆளுடைய அடிகள் அருள் மாலை என்று பாடி இருப்பதையும் காண்க. நம்பி ஆண்டார் நம்பிகள் இந்நால்வர்களைப் போற்றியுள்ளதைப் பதினோராம் திருமுறையில் பரக்கக் காணலாம்.

இங்ஙனம் புலவர்கள் இவர்களைப் புகழ்ந்துள்ளதை அவர் அவர்கள் இவர்கள்மீது பாடியுள்ள தோத்திரங்களால் அறியலாம். இந்நால்வர் செய்துள்ள அற்புதங்களால் உலக மக்கள் யாவரும் வியந்துள்ளனர். ஆகவே, வையகம் வியக்கும் புலவர் என்றனர். இந்நால்வரும் பெரும் புலவர்கள் என்பது திருஞான சம்பந்தர் மாலை மாற்று, திருஎழுக் கூற்றிருக்கை, ஏகபாதம், திருவியமகம், முதலான கவி வகைகளைப் பாடி இருப்பதாலும், அப்பர் திருக்குறுந் தொகையாம் கலி விருத்தம், திருவிருத்தமாம் கட்டளைக் கலித்துறை, திருநேரிசை, தாண்டகம் முதலியவற்றைப் பாடி இருப்பதாலும், சுந்தரர் திருநாட்டுத் தொகையில் இந்த ஊர் இந்த ஊரைச் சார்ந்தது என்று குறிபிட்டிருப்பதாலும், திருத்தொண்டத் தொகையில் அடியார்களைத் தக்க முறையில் அடை கொடுத்துப் பாடி இருப்பதாலும், மாணிக்கவாசகர் பல்வகைப் பாடல்கள் அமைந்த திருவாசகத்தைப் பாடி இருப்பதாலும், தொல்காப்பியம் திருக்குறளோடு ஒருங்கு வைத்து மதிக்கப்படும் திருக்கோவையார் என்னும் நூலைப் பாடி இருப்பதாலும் என்க (ஈண்டுத் திருக்குறளுடன், தொல் காப்பியத்துடன் ஒருங்குவைத்துப் போற்றப்படும் சிறப் புடைய தெனச் செப்பியதன் கருத்து, "பல்கால் பழகினும் தெரியா உளவேல், தொல்காப்பியம், திருவள்ளுவர் கோவையார் இம்மூன்றினும் முழங்கும்" என்று இலக்கணக் கொத்துக் குறிப்பிடுதலால் என்க.) மூவரது அருந்தமிழ்ச் சுவையினை ஆராய்ந்து சேக்கிழார் தமது நூலைப் பாடி

இருக்கின்றனர். மாணிக்கவாசகர் நூற்களையும் ஆய்ந்து தமது நூலைப் பாடியிருக்கின்றனர். திரு. பிள்ளை அவர்கள் முப்புலவர் என்று குறிப்பிட்டதனால் மாணிக்க வாசகரைப் பிரித்துத் தனித்து இங்குக் குறிக்கப்பட்டது.

திருஞான சம்பந்தர் தமது ஒவ்வோர் பதிகங்களின் எட்டாம் பாட்டில் இராவணனுக்கு அருள் செய்ததையும், ஒன்பதாவது பாடலில் மாலயன் தேடியதையும், பத்தாம் பாட்டில் சமண பவுத்தர்கள் பற்றியும் குறிப்பிட்டிருத்தற் குரிய காரணம் இன்னது என்பதைச் சேக்கிழார்,

மண்ணுலகில் வாழ்வார்கள்
பிழைத்தாலும் வந்தடையின்
கண்ணுதலான் பெருங்கருணை
கைக்கொள்ளும் எனக்காட்ட
எண்ணமிலா வல்லரக்கன்
எடுத்துமுறித் திசைபாட
அண்ணவற் கருள்புரிந்த
ஆக்கப்பா டருள்செய்தார்

தொழுவார்க்கே அருளுவது
சிவபெருமான் எனத்தொழார்
வழுவான மானத்தாலே
மாலாய மாலயனும்
இழிவாகும் கருவிலங்கும்
பறவையுமாய் எய்தாமை
விடுவார்கள் அஞ்செழுத்தும்
துதித்துய்ந்த படிவிரித்தார்

வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதன்நெறி அறிந்துய்யார் தம்மிலே நலங்கொள்ளும்
போதமிலாச் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும்
ஏதமே எனமொழிந்தார் எங்கள்பிரான் சம்பந்தர்

என்று, கவின் உறப் பாடியுள்ளனர்.

திருநாவுக்கரசர் தாம் பாடிய பதிகங்களில் ஒவ்வொரு பதிகத்தின் பத்தாம் பாட்டில் இராவணனுக்கு இறைவன் அருள் புரிந்ததைக் குறித்துப் பாடியுள்ளனர்.

இதன் கருத்து, அறியாமையால் அடாது செய்து, பின் தன் குற்றம் அறிந்து போற்றியவர்கட்கு இறைவன் அருள் செய்வன் என்பதாகும் என்பதை நன்கு உணர்ந்து சேக்கிழார்,

இத்தன்மை நிகழ்ந்துழி நாவின்மொழிக்கு
இறையாகிய அன்பரும் இந்நெடுநாள்
சித்தம்திகழ் தீவினை யேன்அடையும்
திருவோஇது'' என்று தெருண்டறியா
அத்தன்மையன் ஆய இராவணனுக்
கருளும் கருணைத்திறம் ஆனஅதன்
மெய்த்தன்மை அறிந்து துதிப்பதுவே
மேல்கொண்டு வணங்கினர் மெய்யுறவே.

என்று பாடியுள்ளனர்.

சுந்தரர் திருப்பாச்சிலாச் சிராமத்தில் பாடிய பதிகத்தினை,

வைத்தனன் தனக்கே தலையும்என் நாவும்
நெஞ்சமும் வஞ்சம் ஒன்றின்றி
உய்த்தனன் தனக்கே திருவடிக் கடிமை
உரைத்தக்கால் உவமனே ஒக்கும்
பைத்தபாம் பார்த்தோர் கோவணத்
தோடு பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பித்தரே ஒத்தோர் நச்சில ராகில்
இவரலா தில்லையோ பிரானுர்.

என்று தொடங்கித் திருக்கடைக் காப்பினை,

ஏசின அல்ல இகழ்ந்தன அல்ல எம்பெரு
மான்என் றெப்போதும்
பாயின புகழான் பாச்சிலாச் சிராமத்
தடிகளை அடிதொழப் பன்னாள்
வாயினுல் கூறி மனத்தினுல் நினைவான்
வளவயல் நாவலா ரூரன்
பேசின பேச்சைப் பொறுத்தி லராகில்
இவரலா தில்லையோ பிரானுர்.

என்று பாடியுள்ளனர்.

இங்ஙனம் ஏன் பாடினர் என்ற குறிப்பினைச் சேக்கிழார்,

அன்பு நீங்கா அச்சமுடன்
அடுத்த திருத்தோ ழமைப்பணியால்
பொன்பெ ருத் திருவுள்ளம்
புழுங்க அழுங்கிப் புறம்பொருபால்
முன்பு நின்ற திருத்தொண்டர்
முகப்பே முறைப்பா டுடையார்போல்
என்பு கரைந்து பிரானார்மற்
றிலையோ என்ன எடுக்கின்றார்

நித்தமும் நீங்கா நிலைமையின் நீங்கி
நிலத்திடைப் புலங்கெழும் பிறப்பால்
உய்த்தகா ரணத்தை உணர்ந்துநொந் தடிமை
ஒருமையாம் எழுமையும் உணர்த்தி
எத்தனை அருளா தொழியினும் பிரானார்
இவரலா திலையோ என்பார்
வைத்தனன் தனக்கே தலையும்என் நாவும்
எனவழுத் தினர்வழித் தொண்டர்

இவ்வகைப் பரவித் திருக்கடைக் காப்பும்
ஏசின அல்லஎன் றிசைப்ப
மெய்வகை விரும்பு தம்பெரு மானார்
விழுநிதிக் குவைஅளித் தருள
மைவளர் கண்டர் கருணையே பரவி
வணங்கிஅப் பதியிடை வைகி
எவ்வகை மருங்கும் இறைவர்தம் பதிகள்
இறைஞ்சிஅங் கிருந்தனர் சிலநாள்

என்றும் பாடி இருத்தலால், ''முப்புலவர் அருள் முக்கனி அருந்தமிழ்ச் சுவை அனைத்தும் ஆராய்ந்து எடுத்துப் பல் செய்யுள் முகம் அறிய அறிவித்த பெருநாவலன்'' என்பது பொருத்தமாதல் காண்க. ''முப்புலவர் அருள் முக்கனி'' என்பதில் ஒரு நயம் உளது. மூவர் யாவர் என்பதும், முக்கனி இன்ன என்பதும் நாம் அறிந்தவை. முக்கனி என்ற உவமையால் மூவர் பாடிய பாடல்கள் தனித்தனிச் சிறப்புடையன என்பது பெறப்படுதலை உய்த்து உணரவும். அப்பர்

பாடல் தேவாரம் எனவும், சம்பந்தர் பாடல் திருக்கடைக் காப்பு எனவும், சுந்தரர் பாடல் திருப்பாட்டு எனவும் அறிஞர் பெருமக்களால் கருதப்பட்டு வருதலின் இவ்வாறு கூறினர் என்க. சாந்தலிங்க சுவாமிகள் பாடிய நூல்களுக்கு உரை கண்ட திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் முப் புலவர்கள் பாடிய பாடல்களை மேற்கோளாக எடுத்து ஆளு கையில் இவ்வாறே மூவர்களின் பாடல்களை மேலே கூறிய வாறு தனித் தனிப் பெயர்களைக் கூறிக் குறிப்பிட்டுள்ளனர்.

தமிழ் என்பது மூவர் பாடிய பாடல்களையே குறிக்கும் என்ற குறிப்பு "மொழிக்கு மொழி தித்திப்பாகும் மூவர் சொலும் தமிழ்" என்று தவராச சிங்கமாம் தாயுமான சுவாமிகள் பாடுதலால் அறியலாம்.

ஈண்டுத் திரு பிள்ளை அவர்கள் மூவர் பாடல்களின் பொருளை நன்கு ஆராய்ந்து பல பாடல்களைப் பாடி னர் என்று கூறியதன் கருத்துப் பெரிய புராணத்துள் இம் மூவர்களின் வரலாறு சிறப்பாக எடுத்துப் பேசப் பட்ட தனுல் என்க. என்றாலும், சேக்கிழார் சைவ சமய குரவர் களுள் நால்வர்களுள் ஒருவரான மாணிக்க வாசகர் பாடி யுள்ள திருவாசகம் என்னும் நூலையும் நன்கு ஆய்ந்து பாடியுள்ளார் என்பதையும் நாம் மறத்தல் கூடாது. இக் கருத்தை நிலைநாட்டச் சில எடுத்துக்காட்டுக்களை ஈண்டுக் காண்போமாக.

புத்தன் முதலாய புல்அறிவில் பல்சமயம்
தத்தம் மதங்களில் தட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன் கருணையினுல் தோணுக்கம் ஆடாமோ

என்பது திருவாசகம். இத்தொடரைச் சேக்கிழார்,

வந்து மிகைசெய் தாதைதாள்
மழுவால் துணித்த மறைச்சிறுவர்
அந்த உடம்பு தன்னுடனே
அரனுர் மகனுர் ஆயினுர்

இந்த நிலைமை அறிந்தார்ஆர்
ஈறிலாதார் தமக்கன்பு
தந்த அடியார் செய்தனவே தவமாம்
அன்றே சாற்றுங்கால்

என்று பாடி அமைத்துள்ளார்.

முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர்மற் றறிவார்
பந்தணை விரலியும் நீயும்நின் அடியார்
பழங்குடில் தோறும்எழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியும் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலும் காட்டி
அந்தணன் ஆவதும் காட்டிவந் தாண்டாய்
ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே

என்பது திருவாசகம்.

மன்றுளே திருக்கூத் தாடி
அடியவர் மனைகள் தோறும்
சென்றவர் நிலைமை காட்டும்
தேவர்கள் தேவர் தாமும்
வென்றஐம் புலனால் மிக்கீர்
விருப்புடன் இருக்க நம்பால்
என்றும்இவ் இளமை நீங்காது
என்றெழுந் தருளி னாரே

என்பது பெரிய புராணம்.

ஆங்கவர் மனத்தின் செய்கை
அரனடிப் போதுக் காக்கி
ஓங்கிய வாக்கின் செய்கை
உயர்ந்தஐந் தெழுத்துக் காக்கித்
தாங்குகைத் தொழிலின் செய்கை
தம்பிரான் அடியார்க் காகப்
பாங்குடை உடையும் கீளும்
பழுதில்கோ வணமும் நெய்வார்

என்னும் இப்பெரிய புராணப் பாடல்;

சிந்தனைநின் தனக்காக்கி நாயி னேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்கள் ஆர
வந்தெனை ஆட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே இரண்டுமிலித் தனிய னேற்கே

என்னும் திருவாசகப் பொருளை ஒட்டியது என்பதை எவரேனும் மறுக்க ஒண்ணுமோ?

நீடும் உரிமைப் பேரரசால் நிகழும்
பயனும் நிலைதவமும்
தேடும் பொருளும் பெருந்துணையும்
தில்லைத் திருச்சிற் றம்பலத்துள்
ஆடும் கழலே எனத் தெளிந்த
அறிவால் எடுத்த திருப்பதிகம்
கூடும் அன்பில் அர்ச்சனைமேல்
கொண்டார் சேரர்குலப் பெருமான்

என்று சேக்கிழார் பாடும் பாட்டு,

ஓடும் கவந்தியுமே உறவென்றிட் டுள்கசிந்து
தேடும் பொருளும் சிவன்கழலே எனத்தெளிந்து
கூடும் உயிரும் குமண்டைஇடக் குனித்தடியேன்
ஆடும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே

என்று மாணிக்கவாசகர் தம் மணிமொழியைத் தழுவியதன்றோ! ஆகவே, சேக்கிழார் திருவாசகத்தினையும் ஆழ்ந்து கற்று அவற்றின் பொருளைத் தம் பாடலில் இணைத்துப் பல பாடல்களைப் பாடியுள்ளார் என்று நாம் உணரவேண்டியவர்களாய் உள்ளோம்.

சிவை என்பது பரமேஸ்வரியை உணர்த்தும். சொல் என்பது நெல்லை உணர்த்தும். உமாதேவியார் நெல்லை வேளாளர்கட்கு உதவினள் என்பதை முன்பே கண்டோம். அக்குறிப்பே ''ஈண்டுச் சிவை உதவு சொல்கொண்ட சேவையர்'' என்ற அடியில் காணப்படுவதாகும். அன்றிச்

சிவை என்பதற்குத் திருவருள் சத்தி என்ற பொருளும் உண்டு "அருளது சத்தியாகும்" என்று வருதல் காண்க. அத் திருவருள் சத்தி "உலகெலாம்" என்ற சொல்லைக் கொடுக்கப் பெற்ற சேவையர் குலாதிபன் எனச் சேக்கிழார்மீது ஏற்றிக் கூறினும் அமையும். (100)

10. பண்புகெழு நின்சரித் திரம்இனிய பாவால்
பரப்பிய திருக்கை லாய
பரம்பரை உமாபதி சிவன்புகழும், அவன்முனோர்
பைப்புகழும் அவன் வழிவரும்
நண்புபுனை தவர்புகழும் இனிமேலும் வருபவர்
நயப்புகழும் நீடு வாழ
நாடுவித நீசெய்த மாபுரா ணத்தமரும்
நாயன்மார் பெருமை வாழ
விண்புகழும் நால்வர்திரு வாய்மலர்ந் தருள்திரா
விட்வேதம் என்றும் வாழ
மெய்யன்பின் நின்ஆ லயப்பணி முதல்புரி
விருப்பம்மிக் கார்கள் வாழத்
திண்புவி எடுத்தேத்து சேவையர் குலாதிபன்
சிறுதேர் உருட்டி யருளே
சிறுகோல் எடுத்தரசு செங்கோல் நிறுத்தினோன்
சிறுதேர் உருட்டி யருளே.

(அ. சொ.) பண்பு-நற்குண நற்செய்கை, கெழு-மிக்கு, முனோர்-முன்னோர்கள், பைம்புகழ்-என்றும் அழியாத புகழ், நால்வர்-அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்க வாசகர், திராவிட வேதம்-தமிழ் வேதமாகிய தேவாரம் திருவாசகம், பணி - தொண்டு, புவி - பூமியில் உள்ள மக்கள், ஏத்தும் - போற்றும், மா புராணம் - பெரிய புராணம், நாயன்மார்-அறுபான்,மும்மை நாயன்மார்களும் தொகையடியார்களும்.

**விளக்கம்:** *நின்சரித்திரம் என்றது திருத்தொண்டர் புராண வரலாறு என்னும் சேக்கிழாரைப் பற்றிய புராண மாகும். இதனைப் பாடியவர் உமாபதி சிவாசாரியார், இவர் தில்லைவாழ் அந்தணமரபினர்; சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் பலவற்றைப் பாடியவர்; மேலும், இவர் திருக்கயிலாய பரம்பரையினைச் சார்ந்தவர்; மெய்கண்ட சந்தானுசாரியாகளுள் ஒருவர். இத்தகைய பெருமை சான்ற பெரியார் வேளாள குல திலகராம் சேக்கிழாரது வரலாற்றைப் பாடியுள்ளனர். இதனையே, "பண்புகெழு நின் சரித்திரம் இனிய பாவால் பரப்பிய திருக்கைலாய பரம்பரை உமாபதி சிவம்" என்றனர். திருக்கயிலாய் பரம்பரையின் விளக்கம் முன்பே விளக்கப்பட்டது. முன்னோர் ஆவார் மெய்கண்டதேவர், அருண் நந்திசிவாசாரியார், மறை ஞான சம்பந்தர் ஆவார். இவர்கள் புறச்சந்தான முன்னோர். அகச்சந்தான முன்னோர்கள், நந்தியம் பெருமான் சனற் குமாரர், சத்தியஞான தரிசினிகள், பரஞ்சோதியார் ஆவர்.*

*இவ்விரு சந்தான வழிவந்த நண்பு புனைத்தவர்கள் அருள் நமச்சிவாயர், சிவப்பிரகாசர், ஸ்ரீ பஞ்சாட்சா தேசிகர். ஸ்ரீ பஞ்சாட்சரத் தேசிகரே நமச்சிவாயமூர்த்திகள். இவர்களே திருவாவடுதுறை ஆதீனத்தை நிலைநிறுத்தியவர்கள். இதனை தட்சணாமூர்த்தி தேசிகர் திருவாக்கான,*

*திருந்துவட கயிலைதனில் பரமசிவன் அளித்த*
*சிவஞான போதமுணர் நந்திமுதல் சிறந்தே*
*வழங்குரவர் வெண்ணெய்நல்லூர் மெய்கண்ட தேவன்*
*வழங்கருட்சந் ததியின்நமச் சிவாயதே சிகனும்*
*இருங்குரவன் அளித்தசிவப் பிரகாச தேசன்*
*இயங்குமறை வனத்தருகோர் வனக்குகையில்*
*உறைநாள்*
*பொருந்தியவன் திருவடிக்கீழ் அவன் அருளே வலினால்*
*போந்தருளா வடுதுறைவாழ் நமச்சிவா யனைப்புகழ்*
*வாம்*

*என்ற பாடலால் உணரலாம்.*

தவத்திரு நமசிவாயமூர்த்திகட்குப்பின் தவத்திரு உமறைஞான தேசிகர் 3. தவத்திரு அம்பவாண தேசிகர், 4. தவத்திரு உருத்திரகோடி தேசிகர் 5. தவத்திரு வேலப்ப தேசிகர் 6. தவத்திரு குமாரசாமி தேசிகர் 7. தவத்திரு பிற்குமார தேசிகர், 8. தவத்திரு மாசிலாமணி தேசிகர் 9. தவத்திரு ராமலிங்க தேசிகர், 10. தவத்திரு வேலப்ப தேசிகர் 11. தவத்திரு பின் வேலப்பதேசிகர் 12. தவத்திரு திருச்சிற்றம்பல தேசிகர் 13. தவத்திரு அம்பலவாண தேசிகர் 14. தவத்திரு வேளூர் சுப்பிரமணிய தேசிகர் 15. தவத்திரு அம்பலவாண தேசிகர், (இவர்கள் காலத்தில் தான் மகாவித்துவாஞகத் திரு. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் அமர்த்தப்பட்டார்.) 16. மேலகரம் தவத்திரு சுப்பிரமணிய தேசிகர், (16-வது குரு மகா சந்நிதானம் வரையில் மகாவித்வான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் நேரில் கண்டவர்கள் ஆதலின் அவர்களையே-"வழிவரும் நண் புனைதவர்" என்ற தொடரால் குறிப்பிட்டனர். அவர்கட்கு பின் வந்தவர்களை திரு. பிள்ளை அவர்கள் "இனி மேலும் வருபவர்" என்றனர்.) 17. தவத்திரு அம்பலவாண தேசிகர் 18. தவத்திரு சுப்பிரமணிய தேசிகர், 19. தவத்திரு வைத்திய லிங்க தேசிகர். 20. தவத்திரு அம்பலவாண தேசிகர்.

இருபத்தோரவது குருமகா சந்நிதானமாக விளங்கு பவரே இதுபோது சைவப் பயிர்தழையச் சைவ முகிலாய்த் திகழ்ந்து கொண்டு சிவராஜ தானியினை அருள் செங்கோல் கொண்டு, அருளாட்சி நடத்திக்கொண்டு திருமந்திர மாநாட்டினை ஆண்டுதோறும் நடத்தித் திருமந்திர உட் பொருளைப் பண்டிதர் முதல் பாமரர்வரை பேச்சாலும் எழுத் தாலும் உணரச்செய்து மெய்கண்டார் மாநாட்டைக் கூட்டிச் சிவஞான போதச் செல்வத்தை வழங்கி, புலவர் பெருமக் கட்குப் பெரும் பொருள்களை வாரிவழங்கி மூலபண்டார மாகத் திகழ்பவராம் ஸ்ரீ ல ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமா சாரிய சுவாமிகள் ஆவார்.

இத்திருக்கயிலாய பரம்பரையினைச் சார்ந்தவர்கள் சைவ சித்தாந்த சாத்திரங்களை ஒட்டிப் பலநூல்களைச் செய்துள்ளனர்; புராணங்களையும் இயற்றியுள்ளனர்.

ஸ்ரீ மெய்ஞ்ஞான முனிவர் திருவிழிமிழலை புராணம் இயற்றினர். இவர்க்குப் பிறகு ஸ்ரீதட்சணாமூர்த்தி தேசிகர், தசகாரியமா உபதேசப் பஃறொடை என்னும் நூலை யாத்தனர். இவருக்குப்பின் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் தச காரியம், சன்மார்க்கசித்தியார் சிவாச்சிரமதெளிவு, சித்தாந்த சிகாமணி, உபாய நிட்டை வெண்பா, நிட்டை விளக்கம் அதிசயமாலை, நமச்சிவாய மாலை உபதேச வெண்பா என்னும் நூல்களை இயற்றினர், சிவஞான போத சிந்தனை என்னும் உரை நூலையும், பூப்பிள்ளை அட்டவணை என்னும் சிறு நூலையும் இயற்றியுள்ளனர்.

ஸ்ரீமாசிலாமணி தேசிகர் திருஞான சம்பந்தர் பிள்ளைத் தமிழ் நூலைச் செய்தருளினர். ஸ்ரீவேலப்பதேசிகர் காலத்தில் ஸ்ரீசாமிநாத முனிவர் திருவாவடுதுறை புராணத்தையும் திருப்பெருந்துறைப்புராணத்தையும் செய்தனர். பேரூர் ஸ்ரீ வேலப்ப தேசிகர் பஞ்சாக்கரப் பஃறொடை என்னும் நூலையும் இயற்றினர். திருச்சிற்றம்பல தேசிகரின் சீடர் ஸ்ரீசுந்தரலிங்க முனிவர் ஆதின கைலாய மான்மியமாம் திருபெருந்துறைப் புராணம் என்னும் நூலைப் பாடியுள்ளனர்

மெய்கண்ட சாத்திரம் சிவஞானபோத முதலான பதினான்கு. இவற்றிற்குத் துணையாக இருப்பவை பண்டார யார் சத்திரங்கள் பதினான்கு.' அளவதாம் ஸ்ரீதட்சணாமூர்த்தி தேசிதர் எழுதிய திருநூல்கள், ஸ்ரீஈசான தேசிகர் செய்தருளிய தசகாரியமும் பின்வேலப்ப தேசிகர் செய்தருளிய பஞ்சாக்கரப்பஃறொடையும், ஸ்ரீஅம்பலவ்ாண தேசிகர் இயற்றிய பத்து நூல்களும் ஆகும். இவையும், இந்நூலைச் செய்களும் வாழவேண்டுமென்ற கருத்தில்தான் திரு. பிள்ளை அவர்கள் "திருக்கயிலாயபரம்பரை உமாபதியின் புகழும் அவன் முன்னோர் பைம் புகழும் அவன், வழிவரும் நண்பு புனை

தவர் புகழும், இனிமேல வருவபவர் நலம் புகழும் நீடு வழா" என்று வாழ்த்துக் கூறினர்.

இத்திருவாடுதுறையினைச் சார்ந்த பெரியோர்களான பேரூர். ஸ்ரீ வேலப்ப தேசிகர், (இவர் சிவஞான முனிவரின் ஞானசிரியர்) ஸ்ரீ சிவஞான முனிவர், ஸ்ரீ கச்சியப்ப முனிவர்-மதுரகவி ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர் தண்டவராயத் தம்பிரான் சுவாமிகள் முதலியோரும் வாழவேண்டும் என்னும் கருத்திலும் இவ்வீற்றுவாழ்த்துப் பாவினைப்பாடி யுள்ளனர்.

நந்தியம்பெருமான், சனற்குமாரமுனிவர், சத்தியஞான தரிசினிகள் இவ்விருசந்தான வழியில் பின்வருபவரும் முன்னோர் புகழ் பெற்றது போலப் பெறக்கூடியவர் ஆதலின் "நண்பு புனைதவர் புகழும் இனிமேலும் வருபவர் நயப் புகழும் நீடு வாழ" என்றனர்.

சேக்கிழார் பெருமானார் புராணமே மாபுராணம் எனத் தகும். திருத்தொண்டர் புராணத்துள் ஒருவர் புராணம் மட்டும் இல்லை. தனி யடியார்கள் புராணமும், தொகை அடியார்கள் புராணமும் உள. ஒவ்வொருவர் வரலாறு புராணம் என்றே குறிப்பிடப் பட்டுள்ளது. ஒவ்வொரு புராணத்தை யும் சேக்கிழார் பாடும்போது அவ்வரலாற்றிற்குரிய நாடு, நகர், ஆறு, மக்கள் வாழ்வு இவற்றை யெல்லாம் விடாது பாடியுள்ளனர். ஆகவே, அவர் நூல், மாபுராணம் தானே! சேக்கிழாரே தமது புராணத்தை "எடுக்கும் மாக்கதை" என்றே குறிப்பிட்டுள்ளனர். மாக்கதை எனினும், மாபுராணம் எனினும் பெரிய புராணம் என்ற பொருளைத் தருவதே ஆகும். பெரிய புராணம் என்ற பெயர்க்குக் காரணம், செயற்கரிய செயல்களைச் செய்த பெரியவர்களைப் பற்றிய புராணம் என்பதாம். பெருமையுடைய, பெரிய என்ற பொருள்களும் தருதலின் மாபுராணம் என்பதும் பொருத்தமே.

நால்வர் ஆவார் அப்பர், சம்பந்தர் சுந்தரர், மாணிக்க வாசகர் என்போர். அப்பர் சித்திரைத்திங்கள் சதயத்தில் முத்தி பெற்றபோது,

''வானவர்கள் மலர்மாறி மண்ணிறைய விண்ணுலகின்
மேனிறைந்த ஐந்துபேர் இயலொலியும் விரிஞ்சன்முதல்
யோனிகளா யினவெல்லாம் உள்நிறைந்த பெருமகிழ்ச்சி
தானிறைந்த சித்திரையில் சதயமாம் திருநாளில்''

என்றும்,

சுந்தரர் கைலை சென்றபோது, தேவர்களும் ஏனையோரும் வந்து வரவேற்றுப் போற்றிய நிலையினை,

ஏற்ற தொண்டரை அண்டர்வெள்
ஆனையின் எதிர்வலம் கொண்டேற்று
நாற் றடங்கடல் முழக்கென
ஐவகை நாதம்மீ தெழுந்தார்ப்பப்
போற்றி வானவர் பூமழை
பொழிந்திடப் போதுவார் உயிர்எல்லாம்
சாற்றும் மாற்றங்கள் உணர்பெரும்
துணைவரை மனத்தினில் கொடுசார்ந்தார்

என்றும், திருஞானசம்பந்தர் முத்தி பெற்ற நிலையினை,

கண்ணுதலான் திருமேனி உடன்கூடக் கவுணியனார்
நண்ணியது தூரத்தே கண்டுநனுகப் பெறு
விண்ணவரும் முனிவர்களும் விரிஞ்ஞனே முதலோரும்
எண்ணியவர் ஏசறவு தீரஎடுத் தேத்தினார்

என்றும் சேக்கிழார் பாடிக்காட்டி இருத்தலானும், திருவாத ஊரார் கூத்தப் பெருமானது குஞ்சிதபாதத்தில் குளிர்ந்திருக்கும் பேறுபெற்ற நிலையினைக் கடவுள் மாமுனிவர்,

பூத நடங்கள் தொடங்கின
போதம் மகிழ்ந்தனு குங்கண
நாதர் புகழ்ந்தனர் தும்புரு
நாரதர் அங்கிசை கொண்டனர்

வேத மோடந்தர துந்துபி
மீது முழங்கி எழுந்தன
மாதவர் இந்திரர் ஐயந்தரு
மாமலர் சிந்தி வணங்கினர்.

என்றும் பாடி இருத்தலின் விண்புகழும் நால்வர் என்றனர்,

நால்வர்கள் பாடிய பாடல்கள் வேதமே ஆகும். வேதம் மந்திரங்களால் அமைந்தவை. மந்திரமாவது இன்னது என்பதைத் தொல்காப்பியர் குறிப்பிடும்போது,

நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப

என்று கூறியிருக்கின்றனர். நால்வரும் நிறை மொழி மாந்தர்கள் ஆதலினால்தான், அப்பர் தம் வாக்கால் பாம்பு கடித்திறந்த அப்பூதியார் மகனை எழுப்பினர். சம்பந்தர் தம் திருவாக்கால் எலும்பைப் பெண்ணாக்கினர். சுந்தரர் தம் திருவாக்கால் முதலை யுண்டபாலனைவரவழைத்தனர். மணிமொழியார் தம் திருவாக்கால் ஊமைப் பெண்ணைப் பேசவைத்தனர். இவர்கள் வாக்கு மகா மந்திரங்களாக இல்லை என்றால், இவ்வாறான செயற்கரிய செயல்களைச் செய் திருக்க ஒண்ணுமோ? இதனால்தான், நாவலர் திருவாய் மலர்ந்தருள் திராவிட வேதம் என்றனர்.

திருஞான சம்பந்தர் வாக்கு இறைவன் வாக்கு என்பதைத் துறைமங்கல சிவப்பிரகாச சுவாமிகள், பெரியநாயகி அம்மை நெடு விருத்தத்தில்,

சுட்டுதற்கரிய உன்னை மெய்ஞ்ஞான
சொரூபி என்று அருமறை அனைத்தும்
சொல்லுவ துண்மை என்னநன் குணர்ந்தேன்
சுரந்தநின் திருமுலைச் செழும்பால்
வட்டிலில் கொச்சைப் பிள்ளைமுன் உண்டு
வண்புகழ் ஞானசம்பந்த வள்ளல்
என்றிடப் பேர் பெற்றரன் மொழிபோல்
மையலில் செய்யுள் செய்தமையால்

எட்டிநல்திகிரி பறித்தெறிந் துரல்கால்
லியானையை உருட்டிவாம் குதிரை
எறிந்துசங் கதிர்த்துக் கொடுமரம் முறித்திட்
டெதிர்ந்திடார் தலைவிடுத் தோடிக்
கிட்டினர்ப் புரட்டி முருகவேள் பூதக்
கிளைப்பெரு வெள்ளம்ஒத்து எழுந்து
கிளர்மணி முத்த நதியுடை விருத்த
கிரியமர் பெரிய நாயகியே

என்று அறிவித்திருப்பதைக் காண்க.

இறைவன் திருமொழி வேதம் என்பதை எவரும் ஒவ்வுவர். அரன்போல் "மையல்இல் செய்யுள் செய்தமை யால்" என்று குறிப்பிட்டிருப்பதனால் திருஞான சம்பந்தர் வாக்கு வேதம் என்பதை உணர்த்தியவாறு காண்க.

வடமொழியாளர் தமிழரைத் திராவிடர் என்றும் தமிழ் மொழியைத் திராவிடம் என்றும் தங்களுக்குள் வழங்குவாராயினர். சங்கராச்சாரியரும் சௌந்தரியலகரியில் திராவிட சிசு என்று திருஞான சம்பந்தரைப் போற்றிப் புகழ்ந்துள்ளனர். ஆகவே திரு. பிள்ளை அவர்களும் தமிழைத் திரவிடம் என்றனர்.

ஆலயப் பணியோ ஏனைய திருத் தொண்டோ செய்தற்கு முதலில் வேண்டப்படுவது விருப்பம் ஆதலின், ஆலயப்பணி முதல் புரிவிருப்பம் மிக்கார்கள் என்றனர். இது கருதியே ஔவையாரும், அறம் செயவிரும்பு என்றனர்.

இப்பாடல் சைவசமயத்தவர் யாவரும் வாழ வாழ்த்துக் கூறும் முறையில் அமைந்துளது. திரு. பிள்ளை அவர்கள் வணக்கத்தில் தொடங்கி வாழ்த்தில் முடித்துள்ள திறனை என்னென்று பாராட்டுவது! வாழ்க அவர் தம் திருப்பெயர்! வாழ்க அவர் தம் நூல்கள்!

செந்தமிழ்ச் செல்வர் சைவசமய சிரோன்மணி பேராசிரியர்
வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார் எழுதிய
**சேக்கிழார் பிள்ளைத் தமிழ்ப் பெருவிளக்க உரை முற்றிற்று.**

# இவ்வுரையில் உள்ள விசேடக் குறிப்புக்கள்

**எண்—பக்க எண்**

# இவ்வுரையில் எடுத்தாண்ட நூல்கள்

எண்—பக்க எண்

## இலக்கண நூற்கள்

எண்—பக்க எண்

## உரையாசிரியர்கள்

எண்—பக்க எண்



## புராணக் கதைகள்

எண்—பக்க எண்

## திருத்தலங்கள்

எண் —பக்க எண்



---

## ஆங்கில மேற்கோள்கள்

எண் — பக்க எண்

# செய்யுள் முதற் குறிப்பு அகராதி